ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## கு₃ருபரம்பராப்ரபா₄வ ஸாரமான

# ப்ரபந்நாம்ருதம்

[இரண்டாம் பாகம்
ஆழ்வார்கள் ஆசாரியர்கள் சரித்திரம்)

[ப்ரபந்நாம்ருத த₃ர்ப்பணம் எனும்
எளிய தமிழ் விவரணத்துடன் கூடியது]

கிடைக்குமிடம் & பதிப்பாசிரியர்:—
ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
அட்வகேட், M.A., B.L.,
'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்,
3 B புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017.

Published with the financial assistance from the Rashtriya Sanskrit Sansthan, New Delhi.

விலை ரூ. 90-00 PRICE RS. 90-00

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

ஸ்ரீராமாநுஜரின் சரித்திரத்தை
விரிவாக விளக்கும்

இந்த ப்ரபந்நாம்ருதம் முதல் பாகம்

ப்ரபந்நாம்ருத தர்ப்பணம் என்றும் நம்முடைய தமிழுரையோடு கூடியது, நம்மிடம் ரூபாய் நாற்பது (Rs 40/-) விலைக்குக் கிடைக்கும், 1983 ல் வெளியிடப்பெற்றது—பக்கங்கள் 800.

# முதல்பாகத்தின் முன்னுரை

## [பதிப்பாசிரியர்]

'ஸ ச ஆசார்யவம்ஶோ ஜ்ஞேயோ ப₄வதி ஆசார்யாணாமஸாவஸாவித்யா ப₄க₃வத்த:" [ப₄க₃வானிடமிருந்து தொடங்கித் தன் ஆசார்யன் வரையில் (அல்லது தன ஆசார்யனிடமிருந்து தொடங்கி பகவான் வரையில்) ஒவ்வொரு ஆசார்யரையும் 'இவர்' 'இவர்' என்று கு₃ருபரம்பரை முழுவதும் அநுஸந்தி₄க்கத்தக்கது] என்று வேதம் ஓதிற்று. அதனாலேயே ஆறாயிரப்படி கு₃ருபரம்பராப்ரபா₄வக்₃ரந்த₂த்தில் ப்ரத₂மாசார்யனான எம்பெருமானிடமிருந்து தொடங்கி எல்லா ஆசார்யர்களுடையவும் வைப₄வம் விரிவாக அநுஸந்தி₄க்கப்பட்டது. தமிழ் அறியாத வடநாட்டவர்களும் அறிந்துகொள்வதற்காக இந்த கு₃ருபரம்பரை நூலையே பெரும்பாலும் அடியொற்றி ஸ்ரீமத₃நந்தாசார்யரால் வடமொழி ஶ்லோகரூபமாக இயற்றப் பெற்றது 'ப்ரபந்நாம்ருதம்' எனும் இந்நூல்.

இந்நூலின் தொடக்கத்தில் இந்நூலை இயற்றியவரான அநந்தாசார்யர் தமது ஆசார்யர் 'வாதூ₄ல ஸ்ரீநிவாஸாசார்யர்' என்று குறிப்பிட்டிருக்கிறார். அதோடு அந்த ஸ்ரீநிவாஸாசார்யர் 'ஜந்ய புங்க₃வ ஸத்₃ப₄க்தர்' என்றும் குறிப்பிட்டிருக்கிறார். 'ஜந்யபுங்க₃வன்' என்னும் சொல்லில் ஜந்யமென்பது₃ ஸமரத்தை (போரை)க் குறிக்கும். 'ஸமரபுங்கவன்' என்றது போரில் வெற்றியல்லதறியாத ஸ்ரீராமபிரானைக் குறிக்கும். இதன் நேர் தமிழ் மொழிபெயர்ப்பு 'போரேறு' என்பது. நம்முடைய பூர்வாசார்யர்களில் மணவாளமாமுனிகளின் ஶிஷ்யர்களான நவரத்னங்களில் 'ஸமரபுங்க₃வர்' என்றும், 'போரேற்றுநாயனார்' என்றும் பெயர் பெற்றவர் ஒருவர் இருக்கிறார். அவரைக்குறித்தே ஸ்ரீநிவாஸாசார்யர் 'ஜந்யபுங்க₃வ ஸத்₃ப₄க்தர்' என்று குறிக்கப்பட்டுள்ளதாகவும் கொள்ளலாம். ஆக, இந்த ஸ்ரீநிவாஸாசார்யர் மாமுனிகளின் ப்ரஶிஷ்யராயிருக்கவேண்டும். அப்படிப் பார்க்கும்போது கோயிலண்ணனுடைய குமாரராய், 'பெரியதிருமுடியடைவு' என்னும் ஆஶ்சர்யமான கு₃ருபரம்பரை நூலை அருளிச்செய்தவராய், கந்தாடைநாயன் என்று பெயர் பெற்றவரான வாதூ₄ல ஸ்ரீநிவாஸாசார்யரே இவர் என்று நிர்ணயிப்பதில் ஔசித்யமுண்டு. ஆக, கோயிலண்ணனின் குமாரரும் ஶிஷ்யரும், போரேற்றுநாயனாரின் ஶிஷ்யருமான கந்தாடை நாயன் என்னும் வாதூ₄ல ஸ்ரீநிவாஸாசார்யரின் ஶிஷ்யராகவே ப்ரபந்நாம்ருத கர்த்தாவான அநந்தாசார்யர் இருக்கக்கூடும். ஆக, இந்த க்₃ரந்த₂ம் சுமார் ஐந்நூறு வருஷங்களுக்கு முந்தியதாக இருக்கக்கூடும்.

இந்த ப்ரபந்நாம்ருதத்தில் ஆங்காங்கு பல பத3ங்கள் வட மொழி இலக்கண முறைக்கு மாறுபட்டதாகக் காணப்படு கின்றன. பிரதி எடுத்து எழுதுபவர்களால் ஏற்பட்ட பிழைகளாக இவை இருக்கலாம். எப்படியும், வடமொழியில் நமது கு3ரு பரம்பரையை வடநாட்டினரும் அறிந்துகொள்ளலாம்படி எளிய நடையில் ஶ்லோகரூபமாக ஆக்கித்தந்திருப்பது இந்நூல் என் பதை மறுப்பதற்கில்லை. வங்காளம் முதலிய வடமாநிலங்களில் இந்நூல் மிகுந்த பிரசாரத்திலுள்ளது.

இந்நூலைத் தமிழ்நாட்டினரும் அறிந்துகொள்ளலாம்படி எளிய தமிழ்நடையில் 'ப்ரபந்நாம்ருத த3ர்ப்பணம்' என்னும் பெயரில் மொழிபெயர்த்து, கடந்த பல வருஷங்களாக 'ஸ்ரீவைஷ் ணவ ஸுதர்சனம்' மாத இதழில் மூலத்தோடு வெளியிட்டு வந் தேன் எம்பெருமானார் சரித்திரமாக விளங்கும் முதல் 68 அத்தி யாயங்கள் இப்போது முதல் பா4க3மாக வெளியிடப்படுகிறது. ப4ட்டர் நஞ்சீயர் வைப4வங்களும், ப4ட்டர் நஞ்சீயருக்குச் சொல் லதாக அமைந்த ஆழ்வார்கள் வைப4வமும், ஆளவந்தார் ஈருக வுள்ள ஆசார்யர்கள் வைப4வமும் அடங்கிய இரண்டாம் பா4க3மும் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனத்தில் நிறைவடைந்தவுடன் தனிப் புத்தகமாக வெளியிடப்படும்.

இப்பதிப்பு பம்பாய் வேங்கடேச்வரா பிரஸ்ஸில் கி. பி. 1888 ம் வருடம் அச்சிடப்பெற்ற பதிப்பை ஆதா4ரமாகக்கொண்டு அச் சிடப்பட்டது. பிறகு வெளியிடப்பட்ட பதிப்புகளில் மாமுனிகள் ஈருகவுள்ள ஆசார்யர்கள் வைப4வமும் சேர்ந்திருப் பதாகக் கூறுகிறார்கள் அப்பதிப்புகளைப்பெற்று அப்பகுதியை யும் இரண்டாம் பா4க3த்தில் வெளியிடுவோம்.*

ருத்ரோத்காரி
வைகாசி விசாகம்
25—5—1983

அடியார்க்கடியேன்
**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்

---

* அப்பகுதிப்ரக்ஷிப்தமென்று தேறுவதால் வெளியிடப்படவில்லை. அடுத்துள்ள இரண்டாம்பாக முன்னுரை காண்க.

# ப்ரபந்நாம்ருதம்—இரண்டாம் பாகத்தின்

# முன்னுரை

ஆழ்வார்கள வைபவமும நஞ்சீயர் வரையிலுள்ள ஆசார் யர்கள் வைபவமும அடங்கிய ப்ரபந்நாம்ருதத்தின் இரண்டாம் பாகம ஸுதர்சனததில் தொடர்ச்சியாக வெளியிடப்பெறறு இப்போது நிறைவு பெறுகிறது. முதல் பாகத்தின்தொடர்ச்சியாய், இந்த பாகம் பட்டர் நஞ்சீயருக்கு ஆழ்வார்கள் ஆசார்யர்கள் வரலாற்றைச் சொல்லுவதாக அமைந்திருக்கிறது. அறுபத் தொன்பதாம் அத்தியாயம் தொடங்கி நூற்றுப்பதினேழாம் அததியாயத்துடன இந்நூல் நிறைவடைகிறது. கி பி 1883ம் வருடம பம்பாய் வேங்கடேச்வரா பிரஸ்ஸில் அச்சிடப்பெற்ற பதிப்பில் ப்ரபந்நாம்ருதம் நூல இத்துடன் முடிவடைகிறது. கடைசி அத்தியாயததில பரபந்நாமருததவதை பட்டரிடமிருந்து நஞ்சீயர் கேட்டதாகவும் அதற்குப் பின் ததீயாராதனம செய்த தாகவும் ஸ்ரீவைஷ்ணவர்களுடையவும் ஆசார்யர்களுடையவும் ஸ்ரீபாததீர்த்தத்தைப் பெற்றுப் பரிசுத்தி அடைந்ததாகவும் கூறி, இந்த ப்ரபந்நாம்ருதத்தைப் படிப்பவர்களுக்குக் கிடைக்கும் பலனும் (பலச்ருதியும்) சொல்லப்பட்டது. ஸ்ரீபராசரபட்டருக்கு வணக்கம் தெரிவிக்கும் ஶ்லோகத்துடன் ப்ரபந்நாம்ருதம் முறகூறிய பதிப்பில் முடிவடைகிறது. இதிலிருந்து ப்ரபந்நாம்ருதம இததுடன் நிறைவடைகிறது என்பது மிகத் தெளிவாக விளங்குகிறது.

இப்படியிருக்கும்போது பல வருடங்களுக்குப் பிறகு ஸோமானி டிரஸ்ட் மூலம் காசியில ஹிதைஷி பிரிண்டிங் ஒர்க்ஸில அச்சிடப்பட்ட பதிப்பிலும் மற்றும் சிலபதிப்புகளிலும் பத்து அத்தியாயங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. அதில் நம்பிள்ளை தொடங்கி, கோடி கன்னிகாதானம் தாதாசாரியர் வரையிலுள்ள ஆசார்யர்களின் வரலாறுகள் கூறப்படுகின்றன. இதிலுள்ள சில விஷயங்கள் உபதேசரத்தினமாலை முதலான பூர்வாசார்ய கிரந்தங்களுக்கு முரணாகவும் உள்ளன. உதாரணமாக இந்தப் பிற்சேர்க்கையில் மூன்றுவது அத்தியாயத்தில், திருவாய்மொழிக்கு இருபத்து நாலாயிரப்படி வியாக்கியானம் பெரியவாச்சான் பிள்ளை அருளியதாயிருக்க, அது நம்பிள்ளை அருளியதாகக்குறிப்பிடப்படுகிறது. திருவாய்மொழிக்குப்பன்னி

ராயிரப்படி உரையை அருளியவர் பெரியவாச்சான் பிள்ளையின் சீடரான வாதி கேசரி அழகியமணவாளச் சீயராயிருக்க, அதை அருளியவர் பின்பழகிய பெருமாள் சீயர் என்று சொல்லப் பட்டுள்ளது.

பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான்பிள்ளை
தெள்ளார் வடக்குத்திருவீதிப்—பிள்ளை
மணவாளயோகி திருவாய்மொழியைக்காத்த
குணவாள ரென்று நெஞ்சே கூறு. [உப-ரத் 39]

என்று மணவாளமாமுனிகள் 1) திருக்குருகைப்பிரான பிள்ளான் (ஆறாயிரப்படி) 2) நஞ்சீயர் (ஒன்பதினாயிரப்படி) 3) பெரியவாச்சான்பிள்ளை (இருபத்துநாலாயிரப்படி) 4) வடக்குத்திருவீதிப்பிள்ளை (ஈடு முப்பத்தாறாயிரப்படி) 5) வாதி கேஸரி அழகியமணவாளச்சீயர் (பன்னிராயிரப்படி) என்று திருவாய்மொழிக்கு வியாக்கியானமிட்ட ஐவரையும் கூறி, நாற்பத்தைந்தாம் பாட்டு வரையில் அவர்கள் ஒவ்வொருவருடைய பெருமையையும் தனித்தனியாக விவரித்தார். நாற்பத்தாறும் பாட்டில் பெரியவாச்சான்பிள்ளை மற்ற மூவாயிரத்துக்கும் வியாக்கியானம் செய்தார் என்றுகாட்டியருளினார். இப்படியிருக்க, இப் பிற் சேர்க்கை மூன்றும் அத்தியாயத்தில் 1) பிள்ளான் 2) நஞ்சீயர் 3) பின்பழகிய பெருமாள் சீயர் 4) கலிகன்றியாம் நம்பிள்ளை 5) (முப்பத்தாறாயிரம் அருளிய) வடக்குத்திருவீதிப்பிள்ளை ஆகிய ஐவரே திருவாய்மொழிக்கு வியாக்கியானமிட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானங்களைப் பற்றிப் பிரஸ்தாபமேயில்லாததோடு வாதிகேசரி ஜீயரைப் பின்பழகியபெருமாள் ஜீயர் என்று மருண்டு எழுதியிருப்பது வெளிப்படையாகத் தெரிகிறது. ஆகையால் இந்தப்பிற்சேர்க்கையான அத்தியாயங்கள் சுமார் முன்னூறு வருடங்களுக்குள் இருந்த தாதாசாரியர் வம்சஸ்தர்களாலே தங்களுடைய வம்சஸ்தர்களைப் பற்றிய பெருமையும் ப்ரபந்நாம்ருதத்தில் வரவேண்டுமென்ற விருப்பத்தாலே சேர்க்கப்பட்டவை என்று விளங்குகிறது. ஆகையால் இவற்றை நம்முடைய இப்பதிப்பில் நாம் அச்சடிக்கவில்லை. இருந்தபோதிலும் இந்தப் பிற்சேர்க்கை அத்தியாயங்களிலுள்ள சில விஷயங்கள் உலகுக்குத் தெரிந்திருக்கவேண்டும் என்னும்

எண்ணத்தாலே அவற்றின் சுருக்கம் அநுபந்தத்தில் தரப்பட்டுள்ளது.

இந்தப் பிற்சேர்க்கை அத்தியாயங்களில் பிள்ளைலோகாசாரியர் தேசிகன் காலத்தில மாலிக்காபூரின் படையெடுப்புப் பற்றியும், ஸ்ரீரங்கநாதன் கலாபகாலத்தில் பிள்ளைலோகாசாரியரால எழுந்தருள்விக்கப் பெற்று அழகர்கோயில் மலைநாட்டுத் திருப்பதிகள் வழியாக மேலக்கோட்டை திருநாராயணபுரத்தில தங்கி, இறுதியாகத் திருமலையில தங்கியிருந்த விஷயமும், கோபணார்யன் மீண்டும் துலுக்கப் படையை அழித்து நாச்சிமார்களோடு கூடிய ஸ்ரீரங்கநாதனை (நமபெருமாளை) ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளச் செய்த விஷயமும் விவரிக்கப்படுகின்றன. இவை வரலாறு உண்மைகளாகும். நம்பிள்ளை தொடக்கமாக மணவாளமாமுனிகள் ஈறாக உள்ள ஆசாரியர்களைப் பற்றிய செய்திகளும் இவ்வத்தியாயங்களில் உள்ளன. சில தவறான செய்திகளும் உள்ளன. மணவாள மாமுனிகளின் சிஷ்யர்களான நவரத்தினங்களில் ஒருவரான ஏட்டூர் சிங்கராச்சாரியரைப் பற்றிய சில செய்திகளும இவற்றில உள்ளன. அந்த சிங்கராசாரியருக்குப் பிறகு அவருடைய வம்சவரலாறு பத்துத் தலைமுறைகளுக்குப் பிற்சேர்க்கை அத்தியாயம் பத்தில கொடுக்கப்பட்டுள்ளது. அப்பைய தீக்ஷிதரைப்பற்றியும் அவருடைய நூலான அத்வைத தீபிகைக்குக் கண்டனமான சண்டமாருதம் பற்றியும் இதில குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தச் சண்டமாருதத்தை எழுதிய மஹாசாரியரே திருச்சித்ர கூடத்தில் மறுபடியும கோவிந்தராஜனைப் பிரதிஷ்டை செய்வித்தார் என்னும வரலாற்று உண்மையும் இதில் கூறப்பட்டுள்ளது. இந்த மஹாசாரியாரின் காலத்திலிருந்தவராய், 'பஞ்சமதபஞ்ஜநம' என்னும் நூலை எழுதிய தாதாசாரியரைப் பற்றியும, அவருடைய பிள்ளையான லக்ஷ்மி குமார தாதாசாரியரைப் பற்றியும் இந்தப் பிற்சேர்க்கைக் கடைசி அத்தியாயத்தில சொலலப்பட்டுள்ளது. இந்த லக்ஷ்மி குமார தாதாசாரியர் வைஷ்ணவர்களுக்குக் கோடி கன்னிகா தானம செய்ததாகவும், அதில் குறையிருந்ததை அவருடைய

குமாரரான வேங்கடவரதாசாரியர் பூர்த்தி செய்ததாகவும் இவ்வத்தியாயத்தில் குறிப்பிடப்படுகிறது. அவருடைய புதல்வரான ரங்கநாதாசாரியரின் சீடரான அநந்தாசாரியார் என்பவரே இந்த ப்ரபந்நாம்ருதத்தை எழுதினார் என்றும், அவர் வடுகநம்பி யின் வம்சத்தைச் சேர்ந்தவர் என்றும் இந்தப் பிற்சேர்க்கை அத்தியாயத்தின் இறுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது நம் பத்தகுந்ததாய் இல்லை. ப்ரபந்நாம்ருதத்தின் தொடக்கத்தில் அநந்தாசாரியர் தம்முடைய ஆசார்யர் ஸ்ரீநிவாஸாசாரியர் என்று குறிப்பிட்டிருக்கும்போது இந்தப் பிற்சேர்க்கையில் அநந்தாசாரியரின் ஆசாரியர் ரங்கநாதாசாரியர் என்று எழுதி யுள்ளது வெளிப்படையாகவே முரண்படுகிறது. சுமார் இரு நூறு வருடங்களுக்கு முன் இவ்வத்தியாயங்கள் சேர்க்கப் பட்டிருக்கவேண்டுமென்று விளங்குகிறது.

ப்ரபந்நாம்ருதம் முதல் பாகத்தின் முன்னுரையில் நாம் எடுத்துக் காட்டியதுபோல இந்த ப்ரபந்நாம்ருதத்தை எழுதிய வர் கோயிலண்ணனின் குமாரராய், பெரிய திருமுடியடைவை எழுதியவரான கந்தாடை நாயன் என்னும் வாதூல ஸ்ரீநிவாஸா சாரியரின் ப்ரசிஷ்யரான அநந்தாசாரியர் என்பதே உண்மை. (முதல் பாகத்தின் முன்னுரையில் இவர் கந்தாடை நாயனின் சிஷ்யர் என்றிருப்பது ப்ரசிஷ்யர் என்று இருக்கவேண்டும். "அநந்தாசாரியர் தமது ஆசார்யர் வாதூல ஸ்ரீநிவாஸா சாரியர்" என்றிருப்பது "......... தமது ப்ராசார்யர் வாதூல ........." என்று இருக்கவேண்டும்.)

ஆழ்வார்கள் ஆசாரியர்களைப் பற்றிய சரித்திரங்களை வடமொழி ஸ்லோகங்களில் விரிவாக விளக்கும் இந்த ப்ரபந்நாம்ருதத்தின் இரண்டு பாகங்களும் நமது தமிழ் மொழி பெயர்ப்புடன் இவ்வண்ணமாக நிறைவேறின.

பவஷு
பங்குனி உத்தரம்
13—4—95

அடியார்க்கடியேன்
ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்
[ஸுதர்சனர்]
ஆசிரியர், ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்
3—B புத்தூர் அக்ரஹாரம்—திருச்சி—
620017

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# ப்ரபந்நாம்ருத தா₃ர்ப்பணம்

## (இரண்டாம் பாகம்)

## விஷய ஸூசிகை

விஷயம் — பக்கம்

### அத்தியாயம்—69

### பட்டரும், வேதாந்தியும்



### அத்தியாயம்—70

### பட்டர் விஜயம்



### அத்தியாயம்—71

### வேதா₃ந்தி நஞ்ஜீயருக்கு உபதே₃ஶம்

## அத்தியாயம்—72

## ஆழ்வார்கள் வைபவத் தொடக்கம்

### அகஸ்த்ய விஶ்வகர்ம ஶாபம்



## அத்தியாயம்—73

## தமிழ் வேதப் பெருமை



## அத்தியாயம்—74

## ஆழ்வார் ஆசார்யர்களின் வர்ணனம்



## அத்தியாயம்—75

## ஸ்ரீ வைகுண்ட வர்ணனம்

## அத்தியாயம்—76

## பரமபதநாத லக்ஷ்மீ ஸம்வாதம்



## அத்தியாயம்—77

## முதலாழ்வார்கள் சரித்திரம்



## அத்தியாயம்—78

## திருமழிசையாழ்வார் அவதாரம்

## அத்தியாயம்—79

### கணிகண்ணனின் அவதாரம்



## அத்தியாயம்—80

### பேயாழ்வார் மழிசைப்பிரானை உபதேசித்துத் திருத்துதல்



## அத்தியாயம்—81

### உருத்திரனின் தோல்வி

## அத்தியாயம்—82

### ஸித்₃த₄ விஜயமும் முதலாழ்வார்களின் பரமபத₃ப்ராப்தியும்



## அத்தியாயம்—83

### ப₄க்திஸார மஹா வைபவம்



## அத்தியாயம்—84

### ப₄க்திஸார ப்ரபா₄வ நிரூபணம்

## அத்தியாயம்—85

## ஸ்ரீ குலசேகரரின் அவதார வர்ணனம்



## அத்தியாயம்—86

## குலசேகரரின் ராம ப்ரத்யக்ஷம்

## அத்தியாயம்—87

## குலசேகர வைபவ பூர்த்தி



## அத்தியாயம்—88

## ஸ்ரீ விஷ்ணுசித்தரின் அவதாரம்

## அத்தியாயம்—89

## பரதத்த்வ நிர்ணயம்



## அத்தியாயம்—90

## கோதா ஸ்வயம்வரம்

அத்தியாயம்—91
அரங்கனின் காட்சி



அத்தியாயம்—92
ஆண்டாள் அரங்கனின் சேர்த்தி



அத்தியாயம்—93
ஆண்டாள் திருக்கல்யாணம்

அத்தியாயம்—94

## தொண்டரடிப்பொடியாழ்வார் அவதாரம்



அத்தியாயம்—95

## விப்ரநாராயண தேவதேவி விவாஹம்

அத்தியாயம் —96

தொண்டரடிப்பொடியாழ்வார் சரித்திர நிறைவு

## அத்தியாயம்—97

## திருப்பாணாழ்வார் சரித்திரம்



## அத்தியாயம்—98

## பரகாலரின் அவதாரம்



## அத்தியாயம்—99

## பரகாலனுக்கும் சோழராஜாவுக்கும் யுத்தம்

அத்தியாயம்—100

ரங்கேச்வர ப்ரத்யக்ஷம்



அத்தியாயம்—101

புத்த விக்ரஹத்தை அபஹரித்தல்

## அத்தியாயம்—102

## சிற்பிகளுக்கு மோக்ஷம்



## அத்தியாயம்—103

## சமந்தரரை வெற்றி கொண்டது

## அத்தியாயம்—104

## சடகோபாவதாரம்

அத்தியாயம்—105

திருவரங்கன் முதலானோர் காட்சியளித்தல்

## அத்தியாயம்—106

### திருவாய்மொழி சங்கப்பலகையேறுதல்



## அத்தியாயம்—107

### நாதமுனி தீர்த்தயாத்திரை



## அத்தியாயம்—108

### பவிஷ்யதாசார்ய விக்ரஹலாபம்

## அத்தியாயம்—109

### நாதமுனிகளின் சரமதசை



## அத்தியாயம்—110

### திருக்கண்ணமங்கையாண்டான் வைபவம்



## அத்தியாயம்—111

### உய்யக்கொண்டார் வைபவம்

## அத்தியாயம்—112

## யாமுநாசார்ய விஜயம்



## அத்தியாயம்—113

## யாமுநர்க்கு கீ₃தோபதே₃ஶம்



## அத்தியாயம்—114

## பெரியநம்பி முதலானோர் வைபவம்

அத்தியாயம்—115

திருவனந்தபுர யாத்திரை



அத்தியாயம்—116

ஸ்ரீராமானுஜ அவதாரம்



அத்தியாயம்—117

ராமானுஜரின் திவ்ய சரிதம்

श्रीः
श्रीमते रामानुजाय नमः ॥





श्रीमदनन्तार्यविरचितं

# प्रपन्नामृतम्

(द्वितीयो भागः)

## एकोनसप्ततितमोऽध्यायः

१. आश्रिताखिलमन्दारो भाष्यकारो महायशाः ।
अस्यां भूम्यां शिक्षितव्यानर्थान् साधनरूपकान् ॥

२. तेषां विरोधिभागांश्च लोकोज्जीवनहेतुना ।
सम्यक् निरूप्य सुस्पष्टं तदर्थप्रतिपादकान् ॥

---

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ப்ரபந்நாம்ருத தர்ப்பணம்

[இரண்டாம் பாகம்]

['ஸுதர்ஸநம்' ஆசிரியன்
ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி தாஸன் (ஸுதர்சனர்) இயற்றிய
ப்ரபந்நாம்ருதத் தமிழ் மொழி பெயர்ப்பு]

## அறுபத்தொன்பதாம் அத்தியாயம்

## பட்டரும், வேதாந்தியும்.

## யதிராஜரின் சாதனைகள்

1-6. தமது சீடர்கள் அனைவர்க்கும் நிழல்தரும் மரமாய், பெருங் கீர்த்தியுள்ளவராய்த் திகழ்ந்த யதிராஜரான ஸ்ரீபாஷ்யகாரர் இவ்வுலகில் ஸாதன விஷயமாகவும், தடைகள் விஷயமாகவும் அவரவர்க்குக் கற்பிக்க வேண்டிய எல்லா அர்த்தங்களையும் உலகம் உய்யும்பொருட்டு நன்றாகவும் தெளிவாகவும் விளக்கி, அவ்வர்த்தங்களை அவரவர் தகுதிக்குத் தக்கபடி விளக்கும் வேதாந்தஸாரம், வேதாந்ததீபம், வேதார்த்த ஸங்க்ரஹம் என்னும

३. अधिकारानुगुण्येन त्रीन् ग्रन्थान् व्याजहार सः ।
वेदान्तसारवेदान्तदीपवेदार्थसंग्रहान् ॥

४. तेषां विवरणं चक्रे श्रीभाष्यं यतिपुङ्गवः ।
श्रीशाङ्घ्रिभक्तिस्तत्रोक्ता तद्दुर्लभतरं त्विति ॥

५. ततो गद्यत्रयं चक्रे प्रपत्तिप्रतिपादकम् ।
तेषामनधिकाराणां प्रपत्त्यां स्वाङ्घ्रिपङ्कजम् ॥

६. हितं सम्यक् प्रदर्श्याऽथ कृतकृत्यो यतीश्वरः ।
लीलाविभूतिं संत्यक्त्वा नित्यां संप्राप सत्वरम् ॥

७. अथ कूरेशजः श्रीमान् श्रीरङ्गेशपुरोहितः ।
रङ्गेशकृपया तस्य गोविन्दार्यस्य धीमतः ॥

८. वेदान्तद्वयमभ्यस्य सन्निधौ निखिलं जवात् ।
दर्शनस्थितिनिर्वाहं स धीरो विदधे तथा ॥

---

மூன்று க்3ரந்த2ங்களையும், அவற்றுக்கு விவரணமான ஸ்ரீ பா4ஷ்யத்தையும் அருளிச்செய்தார். இவற்றில் ஸ்ரீமந் நாராயணனின் திருவடிகளில் ப4க்தியானது ஸாத4னமாகக் கூறப்பட்டது. அது அநுஷ்டி2க்க அரியது என்னும் காரணத்தால், ப்ரபத்தியைச் சொல்லும் க3த்3யத்ரயத்தை அவற்றுக்குப்பின் அருளிச்செய்தார். ப்ரபத்தியிலும் தகுதியில்லாதவர்களுக்குத் தம் திருவடித் தாமரையிணையையே ஸாத4னமாக நன்கு காட்டி, யதிராஜர் தமது கடமையை நிறைவேற்றியவராய், இந்த லீலாவிபூ4தியைவிட்டு விரைவிலேயே நித்ய விபூ4தியை அடைந்துவிட்டார்.

## ப4ட்டரின் த3ர்ஶன நிர்வாஹம்

7-8. யதிராஜருக்குப்பின் கூரத்தாழவான் குமாரராய், அறிவாளிகளில் சிறந்தவராய், ஸ்ரீரங்க3நாத2னுக்குப் புரோஹிதரான ஸ்ரீபராஶரப4ட்டர், ஸ்ரீரங்க3நாத2னின் கருணையால் பேரறிவாளரான எம்பார் என்னும் கோ3விந்த3ரிடம் உப4ய

९. दिव्यदेशचरः कश्चित् ब्राह्मणो विबुधप्रियः ।
दिव्यदेशांश्चरित्वाथ यादवाचलमाविशत् ॥
१०. तत्र सम्पत्सुतं नत्वा तस्मात् श्रीरङ्गमभ्यगात् ।
श्रीरङ्गे प्राप्य रङ्गेशं भक्त्या नत्वा श्रियःपतिम् ॥
११. स तत्र भोजनं चक्रे कूरेशात्मजसद्मनि ।
तं भुक्तवन्तं विश्रान्तं दृष्ट्वा ब्राह्मणपुङ्गवम् ॥
१२. श्रीपराशरभट्टार्यः प्रोवाचेदं वचस्तदा ।
द्विजाद्य किंनिमित्तं त्वं कस्माद्देशात्समागतः ॥
१३. के के देशास्त्वया दृष्टाः तेषु तेषु विपश्चितः ।
ये ये निखिलतत्त्वार्थपारगा विश्रुता भुवि ॥

---

வேதா₃ந்தங்களையும் விரைவில் கற்று, அதிதீ₄ரராய் த₃ர்ஶன ரக்ஷண நிர்வாஹத்தைச் செய்துவந்தார்.

## வேதா₃ந்திபற்றிய செய்தி

9-27. அக்காலத்திலே, எம்பெருமான் உகந்தருளிய நிலங்களுக்கு யாத்திரை செய்வதையே போதுபோக்காகக் கொண்டவனுய், ஆங்காங்குள்ள அறிவாளிகளையும் கண்டு உகப்பவனை ஒரு ப்₃ராஹ்மணன் பல தி₃வ்ய தே₃ஶங்களுக்குச் சென்றுவிட்டு யாத₃வகி₃ரியாகிற (மேலக் கோட்டை) திருநாராயணபுரத்தை அடைந்தான். அங்கு செல்வப்பிள்ளையாகிற பெருமாளை வணங்கிவிட்டு அங்கிருந்து ஸ்ரீரங்க₃த்திற்கு வந்தான். ஸ்ரீரங்க₃த்தில் ஸ்ரீரங்க₃நாத₂னையடைந்து ப₄க்தியோடு ஸ்ரிய:பதியான அவனை வணங்கி, கூரத்தாழ்வான் குமாரரான ப₄ட்டர் திருமாளிகையில் உணவுண்டான். உணவுண்டு களைப்பாறிக் கொண்டிருந்த அந்த ப்₃ராஹ்மண ஶ்ரேஷ்ட₂னைப் பார்த்து ஸ்ரீபராஶரப₄ட்டர் பின்வருமாறு கூறினர்:—"அந்தணரே! நீர் இன்று எந்த தே₃ஶத்திலிருந்து எதற்காக வந்திருக்கிறீர்? எந்த எந்த தே₃ஶங்கள் உம்மால் காணப்பட்டன?

१४. तांस्तांस्त्वं ब्रूहि याथार्थ्यं मह्यं शुश्रूषवे द्विज।
एवमुक्तः स गुरुणा ब्राह्मणः शास्त्रवेदिना॥

१५. प्रोवाच वचनं धीमान् भट्टार्यं भगवत्प्रियम्।
देशाः सर्वे मया दृष्टाः विद्वांसस्तत्र तत्र च॥

१६. विद्वान् पश्चिमदिग्भागे कश्चिच्छ्रीरङ्गपट्टणे।
वेदान्तिनामा विख्यातः सर्वज्ञो वर्तते महान्॥

१७. निर्जित्य षण्मतान् शास्त्रवादेन विबुधाग्रणीः।
जयत्यव्याहतैश्वर्यः लोकेऽप्रतिमवैभवः॥

१८. तं दृष्ट्वा तेन संभाष्य मायावादिविपश्चिता।
भवन्तं द्रष्टुकामोऽहं तस्माद्देशात्समागतः॥

---

அந்தந்த தேஶங்களில் எல்லாத் தத்துவங்களையும் கரை கண்டவர்களாக உலகில் புகழ்பெற்றவர்கள் யார் யார் உள்ளனர் என்பதை அதைக் கேட்க விரும்பும் எனக்கு நீர் உள்ளபடி சொல்லுவீர்” என்று இவ்வார்த்தையை ஶாஸ்த்ரங்களில் வல்லவரான பட்டரால் கேட்கப் பட்ட அறிவாளியான அந்த ப்ராஹ்மணன் எம்பெருமானுக்கு இனியவரான பட்டரைப் பார்த்துப் பின்வருமாறு கூறினன்:— “என்னால் எல்லா தேஶங்களும், ஆங்காங்குள்ள வித்வான்களும் காணப்பட்டனர். மேல்நாட்டில் ஸ்ரீரங்கபட்டணத்தில் வித்வான் ஒருவரிருக்கிறார். வேதாந்தி என்று புகழ்பெற்ற அவர் எல்லாமறிந்த பெரியவராயிருக்கிறார். அப்பேரறிவாளர் வேதத்துக்குப் புறம்பான பௌத்தம், ஜைனம், நையாயிகம முதலான ஆறு மதங்களையும ஶாஸ்த்ரவாதம் செய்து ஜயித்து, குறைவற்ற செல்வத்தையும், உலகில் ஒப்பற்ற புகழையும் உடையவராக வீறுபெற்று விளங்குகிறார். மாயாவாத மதத்தைப் பின்பற்றும் அந்த வித்வானைக் கண்டு அவரோடு பேசிவிட்டு, உம்மமைக் காண்பதற்காக அங்கிருந்து

१९. पुनस्तत्रैव गच्छामि संपत्पुत्रदिदृक्षया।
इत्युक्त्वा विबुधश्रेष्ठं भट्टार्यं स द्विजोत्तमः॥

२०. पुनः पश्चिमदिग्भागे गत्वा श्रीरङ्गपट्टणम्।
वेदान्तिनं समाभाष्य भट्टार्यस्य विपश्चितः॥

२१. वृत्तान्तं सन्निवेद्याशु श्रीरङ्गं पुनरागतः।
श्रीवत्सचिह्नतनयं नत्वेदं वाक्यमब्रवीत्॥

२२. श्रीपराशरभट्टार्य! श्रीरङ्गात्पश्चिमां दिशम्।
संप्रेषितस्त्वया पूर्वं गतवान् रङ्गपट्टणम्॥

२३. वेदान्तिनमिदं वाक्यं मयोक्तं गतसाध्वसम्।
वेदान्तिन् रङ्गनगरे भट्टार्य इति विश्रुतः॥

२४. श्रीवत्सचिह्नतनयः श्रीरङ्गेशपुरोहितः।
सर्वशास्त्रार्थतत्त्वज्ञः वर्तते वैष्णवाग्रणीः॥

---

இங்கு வந்துள்ளேன்; மறுபடியும் செல்வப்பிள்ளையை ஸேவிக்க அங்கு போவேன்" என்று பேரறிவாளர் தலைவரான அந்த ப₄ட்டரிடம் கூறிவிட்டு அந்த ப்₃ராஹ்மணர் தலைவர் மறுபடியும் மேல்நாட்டிலுள்ள ஸ்ரீரங்கப்பட்டணத்திற்குச் சென்று வேதா₃ந்தியோடு பேசி, பேரறிவாளரான ப₄ட்டரைப் பற்றிய செய்தியை அவரிடம் சொல்லிவிட்டு விரைவில் ஸ்ரீரங்க₃ம் வந்து கூரத்தாழ்வான் திருக்குமாரரை வணங்கிப் பின்வருமாறு வார்த்தை சொன்னார்— "ஸ்ரீபராஶர ப₄ட்டரே! ஸ்ரீரங்க₃த்திலிருந்து முன்னொரு நாள் மேல்நாட்டுக்கு உம்மால் அனுப்பப்பெற்ற நான் ஸ்ரீரங்க₃ப்பட்டணத்திற்குச் சென்றேன். வேதா₃ந்தியைப் பார்த்துப் பரபரப்பில்லாமல் 'வேதா₃ந்தியே! ஸ்ரீரங்க₃த்தில் கூரத்தாழ்வான் திருக்குமாரராய், ஸ்ரீரங்க₃நாத₂னுக்குப் புரோஹிதராய், எல்லா சாஸ்திரங்களுக்கும் உண்மையான பொருளை அறிபவராய், வைஷ்ணவர் தலைவராய்,

२५. कश्चिद्द्विपश्चितां श्रेष्ठः वादिमत्तेभकेसरी ।
सदृशस्तस्य विबुधो न कश्चित् भुवि वर्तते ॥

२६. तस्य भीतिं समुत्पाद्य वाक्येनानेन मायिनः ।
तद्वक्तुं भवतोऽद्याशु त्वत्समीपं गतोऽस्म्यहम् ॥

२७. प्रतिगृह्याशु तद्वाक्यं द्विजस्य विबुधाग्रणीः ।
इयेष जेतुं भट्टार्यः तदा वेदान्तिनं जवात् ॥

२८. हरिप्रभावानुभवरूपो दिव्यप्रबन्धकः ।
परकालेन गीतो यो दिव्यद्राविडभाषया ॥

२९. वेदान्ती स मया विद्वान् जेतव्यस्तेन सांप्रतम् ।
इत्यालोच्य स भट्टार्यो रङ्गनायकसन्निधौ ॥

---

பேரறிவாளர்களில் சிறந்தவராய், வாதி₃களாகிற மதங்கொண்ட யானைகளுக்குச் சிங்கம் போன்றவராய், ஸ்ரீபராஶர ப₄ட்டர் என்று புகழ்பெற்றவரான ஒருவர் இருக்கிறார்; அவரையொத்த வித்₃வான இவ்வுலகிலேயே இல்லை!' என்று இவ்வார்த்தையால் மாயாவாதி₃யான அவருக்கு உம்மிடம் ப₄யத்தை உண்டுபண்ணி, இவ்விஷயத்தை உம்மிடம் விண்ணப்பிப்பதற்காக இன்று உம் மருகில் வந்திருக்கிறேன்" என்று கூறிய ப்₃ராஹ்மணனின் இவ்வார்த்தையை உடனே ஏற்றுக்கொண்டு பேரறிவாளரான ப₄ட்டர், வேதா₃ந்தியை வாத₃த்தில் விரைவில் வெற்றிகொள்ளவேண்டும் என்று அப்போதே விருப்பங்கொண்டார்.

## அரங்கனின் அனுமதியோடு வேதா₃ந்தியை வெற்றிகொள்ள ப₄ட்டர் புறப்படுதல்

28-35. "பரகாலரான திருமங்கைமன்னன் எம்பெருமானது பெருமையைத் தமிழில் அனுப₄வித்துப் பாடிய தி₃வ்யப்ரப₃ந்த₄மான திருநெடுந்தாண்டகத்தைக்கொண்டு அந்த வேதா₃ந்தி என்னால் இப்போது வெல்லப்பட

३०. संप्राप्य तस्मै तत्सर्वं चक्रे विज्ञापनं तदा।
विद्वान् पश्चिमदिग्भागे कश्चिदस्त्यधुना हरे॥

३१. जित्वा तं स्ववशीकृत्य भूयोऽहं समुपागतः।
अङ्गीकृत्य ततस्तस्य तद्विज्ञापनमादरात्॥

३२. रङ्गराजः प्रहृष्टात्मा भट्टार्याय विपश्चिते।
रम्यामान्दोलिकां छत्रं पताकाध्वजचामरान्॥

३३. शंखं भेर्यादिवाद्यांश्च वेत्रहस्तधरान् भटान्।
दत्वा प्रस्थापयामास कृपया जगदीश्वरः॥

३४. संप्रेषितस्तदा तेन भट्टार्यो रङ्गिणा जवात्।
महता वैभवेनैव प्रतस्थे पश्चिमां दिशम्॥

३५. तं जेतुकामोऽखिलभक्तसङ्घैः वेदान्तिनं मायिमताग्रगण्यम्।
भट्टारको लक्ष्मणदेशिकेन्द्रदिव्याज्ञया धीरतया प्रतस्थे॥

इति श्रीप्रपन्नामृते रामानुजचरित्रे भट्टार्यविजये वेदान्तिवृत्तिकथनं नामैकोनसप्ततितमोऽध्यायः॥

---

வேண்டும்" என்று எண்ணி, அந்த பட்டர் அரங்கனின சன்னிதியில் அவரை அடைந்து அந்தத் திருநெடுந் தாண்டகம் முழுவதையும் அப்போதே விண்ணப்பித்து, "பிரானே! இப்போது மேல்நாட்டில் ஒரு வித்வானிருக் கிறுன். அவனை ஜயித்து வசப்படுத்திக்கொண்டு மறுபடி யும் இங்கு வருகிறேன்" எனக் கூறினர். மிகவுகந்த லோகேஶ்வரனை ரங்கராஜனும் அறிவாளியான அந்த பட்டருக்கு அழகிய பல்லக்கு, குடை, கொடி, சாமரம், சங்கம், பேரி முதலிய வாத்யங்கள், பிரம்பேந்தி வழிசெய் பவர்களான வேலைக்காரர்கள் முதலிய பரிகரங்களை அளித்து அப்போதே விரைவில் வழியனுப்பினன். அரங்கனல் விரை வில் விடைகொடுக்கப்பெற்ற பட்டரும் பெருத்த வைபவத் தோடு மேல்நாட்டுக்குப் புறப்பட்டார். அனைத்து அடியார்

सप्ततितमोऽध्याय ः

१. श्रीरङ्गात् शिष्यसङ्घेन भट्टार्यो रङ्गिशासनात्।
वेदान्तिग्रहणार्थाय प्रतस्थे यादवाचलम् ॥

२. वेदान्तिनगरोपान्ते यदा संप्राप सत्वरम्।
तदा जवात् द्विजः कश्चित् निर्गत्य नगराद्बहिः ॥

३. ज्ञात्वा भट्टार्यवृत्तान्तं भट्टार्यमिदमब्रवीत्।
न स दृश्यस्त्वयाऽनेन वैभवेन महोच्छ्रय ॥

४. संन्यासिभिर्द्विजैस्साधं गतश्चेत् तद्गृहं प्रति।
सह संभाषितुं तेन समयो नान्यथा तव ॥

---

கூட்டங்களாலும் சூழப்பெற்ற ப₄ட்டர் மாயாவாதிகளின் தலைவரான அந்த வேத₃ாந்தியை வெல்ல, எம்பெருமானுரின் திருவாணையைப் பின்பற்றி மஹாதை₄ர்யத்துடன் புறப்பட்டார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ராமாநுஜ சரித்திரத்தில்
ப₄ட்டர் விஜயத்தில் வேத₃ாந்தியைப் பற்றிச் செய்தி சொல்லும்
அறுபத்தொன்பதாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## எழுபதாவது அத்தியாயம்
## ப₃ட்டர் விஜயம்
## வேத₃ாந்தியைக் காணும் உபாயம்

1-4. அரங்கனின் ஆணையால் ப₄ட்டர் வேத₃ாந்தியை வெல்ல, தம் சிஷ்யர்களோடு ஸ்ரீரங்க₃த்திலிருந்து யது₃கி₃ரிக்குப் புறப்பட்டார். வேத₃ாந்தி வாழும் நக₃ரத்தின் எல்லையை விரைவில் அடைந்தவுடன் ஓர் அந்தணன் ப₄ட்டர் வருவதை அறிந்து அந்நகருக்கு வெளியில் வேகமாக வந்து, "பெரியவரே! இத்தகைய பரிகரங்களோடு சென்றால் நீர் வேத₃ாந்தியைக் காணமுடியாது; ஸந்யாஸிகளோடும் அந்தணர்களோடும் அவர் வீட்டுக்கு பி₄க்ஷைக்குச் சென்றால் நீர் அவரோடு பேசமுடியும்; இல்லாவிடில் பேசமுடியாது" என்று ப₄ட்டரைப் பார்த்துச் சொன்னான்.

५. तथेति प्रतिगृह्याशु भट्टार्यस्तद्वचः शुभम् ।
गतः सत्राशिवेषेण तैर्द्विजैस्तद्गृहं प्रति ॥

६. वेदान्तिनं समालोक्य वादभिक्षामयाचत ।
वेदान्तिन् ! भवता सार्धं वादभिक्षार्थमागतः ॥

७. श्रीमत्त्वात् भवतस्तस्य वेषेणानेन सांप्रतम् ।
निशम्य तद्वचस्तस्य धीमान् मायिमताग्रणीः ॥

८. भट्टार्योऽयमिति ज्ञात्वा नान्यो भवितुमर्हति ।
तं प्राह वचनं धीमान् भट्टार्यं भगवत्प्रियम् ॥

९. भट्टार्यो वा भवानार्य ! नान्यः स्थातुं मदन्तिके ।
शक्तः कुत्रापि लोकेऽस्मिन् विबुधस्त्वदृते ततः ॥

---

## வாத₃ பி₄க்ஷையை யாசித்தல்

5-*7. ப₄ட்டரும் அந்த அந்தணனின் மங்க₃ளமான வார்த்தையை அப்படியே சடக்கென ஏற்று அவ்வந்தணர்களோடுகூட சத்திரத்தில் சாப்பிடும் அந்தணர்களின் வேஷத்துடன் வேதா₃ந்தியின் வீட்டுக்குச் சென்றார். வேதா₃ந்தியைப்பார்த்து "வேதா₃ந்தியே! நீர் செல்வச் செழிப்புடையவராகையாலே உம்மோடு கூட வாத₃ம் செய்வதாகிற பி₄க்ஷையை விரும்பியே இந்த வேஷத்துடன் இப்போது வந்திருக்கிறேன்" என்று வாத₃பி₄க்ஷையை யாசித்தார்.

## வேதா₃ந்தியின் பதில்

7*-*10. மாயாவாதி₃களின் தலைவராய், அறிவாளியான அந்த வேதா₃ந்தி ப₄ட்டருடைய வார்த்தையைக் கேட்டு "இவர் ப₄ட்டராகவே இருக்க வேண்டும்; வேறெவருமாயிருக்க முடியாது" என்று அறிந்து எம்பெருமானுக்கினியவரான ப₄ட்டரைப் பார்த்து "ஐயா! நீர்தான் ப₄ட்டரோ? இவ்வுலகில் உம்மைத்தவிர வேறு எந்த வித்₃வானும் என்

६७. रङ्गेशाङ्घ्रिसरोरुहामृतरसास्वादैकसंजीवनं
तत्कैङ्कर्यपरायणं प्रतिदिनं चाज्ञातकामादिकम् ।
स्वप्ने किञ्चिदपि प्रमादवशतोऽप्यज्ञातयोषित्सुखम्
तं मौनव्रतमद्भुतार्यचरितं श्रीविप्रनारायणम् ॥

६८. तरुगुल्मलतानां च ह्यालवालं विधाय च ।
आलवालेष्वविरतं पूरयन्तं पयः स्वयम् ॥

६९. विप्रनारायणं सम्यक् देवदेवी विलोक्य तम् ।
विस्मयाविष्टहृदया सालिवेण्या समेत्य च ॥

७०. विनयेन प्रणम्यार्यं प्राञ्जलिः समुपस्थिता ।
दृष्ट्वाप्यदृष्ट्वा वेदान्तिन्! देवदेवीं दृढव्रतः ॥

---

தூக்கியெடுத்த குட நீராலே துளசிப்பாத்திகளுக்கு நீர் விடுகிறவராய், திருவரங்கனின் திருவடித் தாமரையில் பெருகும் தேனைப் பருகுவதையே த₄ாரகமாகக் கொண்டவராய், அவனுக்கு தினந்தோறும் கைங்கர்யம் செய்வதையே பரமப்ராப்யமாகக் கொண்டவராய், காமம், கோபம் முதலானவற்றை அறியாதவராய், கனவிலும் தம்மையறியாமலும் பெண்களோடு கலவியின்பத்தைச் சிறிதும் அநுபவிக்காதவராய், மௌனவ்ரதத்துடன் கூடியவராய், ஆச்சரியமான நல்லொழுக்கத்தை உடையவரான விப்ரநாராயணரைக் கண்டாள். மரங்களுக்கும், புதர்களுக்கும், கொடிகளுக்கும் பாத்தி கட்டி, அப்பாத்திகளில் இடைவிடாமல் தாமே தண்ணீர் விடுபவரான அந்த விப்ரநாராயணரை நன்கு பார்த்து, வியப்புற்ற நெஞ்சினளாய், தமக்கையான அலிவேணி(வண்டார்குழலி)யோடு அப்பெரியவரை அடைந்து, கைகூப்பி நின்று பணிவோடு வணங்கி பக்கத்தில் நின்றாள்.

## விப்ரநாராயணரின் அலட்சியமும், தேவதேவியின் கேள்வியும்

70*-*73 — வேதாந்தியே! உறுதியான ப்₃ரஹ்மசர்ய விரதமுடையவராய் தேவதேவியைக்கண்டும் காணாதவர்

१५. तत्त्वांशं सम्यगार्याऽद्य ब्रूहि नः करुणाकर ! ।
इत्युक्तस्तेन भट्टार्यः संतुष्टः कृपया हरेः ॥

१६. श्रीभाष्यार्थमुपन्यस्य सम्यग्वेदान्तिने मुदा ।
तत्त्वार्थं सम्यगेवात्र प्रोवाच कृपया गुरुः ॥

१७. भट्टाचार्योक्तवाक्येन तेन विच्छिन्नसंशयः ।
अगमत्तस्य वेदान्ती शिष्यत्वं बुधसन्निधौ ॥

१८. विलोक्य विस्मयं गत्वा भट्टार्यस्तमथाब्रवीत् ।
वेदान्तिन् ! रङ्गराजस्य करुणा विद्यते त्वयि ॥

१९. कदाचिदपि ते नास्ति न्यूनतेह परत्र च ।
रङ्गराजदयापात्रं भवान् भवति सांप्रतम् ॥

---

கருணைக் கடலான பெரியவரே! இவ்வுலகிலுள்ள தத்த்வாம்ஶத்தை நன்றாக இப்போது எனக்குக் கூறுவீர்'' என்று கேட்டார் வேதா₃ந்தி.

## வேதா₃ந்தியை ஆட்கொள்ளல்

15*-17. இவ்வண்ணமாக வேதா₃ந்தியால் பிரார்த்தி₂க்கப்பட்ட ஆசார்யரான ப₄ட்டர் மிக உகந்தவராய், எம்பெருமானது கருணையாலே வேதா₃ந்திக்கு உகப்புடன் ஶ்ரீப₄ாஷ்யப் பொருளை நன்கு உபந்யஸித்து அப்போதே தத்த்வார்த்த₂த்தை அவருக்குக் கருணையோடு நன்கு உபதே₃ஶித்தார். ப₄ட்டர் உபதே₃ஶத்தால் ஐயம் நீங்கப் பெற்ற வேதா₃ந்தி அங்கிருந்த அறிவாளிகள் முன்னிலையிலேயே ப₄ட்டருக்கு சிஷ்யரானார்.

## வேதா₃ந்திக்கு அருளல்

18-*25 அந்த வேதா₃ந்தியைக் கடாக்ஷித்துப் பெருவியப்புற்று, ப₄ட்டர் "வேதா₃ந்தியே! ரங்க₃நாத₂னுடைய கருணை உம்மிடமுள்ளது. உமக்கு இம்மை மறுமைகளில்

२०. श्रीवैष्णवोत्तमो भूत्वा लोके ख्यातिं गमिष्यति।
वसिष्यति चिरं वत्स! विशिष्टाद्वैतपालकः॥

२१. ततो वेदान्तिनः सम्यक् कृत्वा संस्कारपञ्चकम्।
चिदचिद्विग्रहं ब्रह्म जगतः कारणं परम्॥

२२. सर्ववेदान्तशास्त्रेषु तदेव प्रतिपादितम्।
स एव भगवान् विष्णुर्हरिर्नारायणोऽव्ययः।

२३. लक्ष्मीशः पुण्डरीकाक्षः ब्रह्मरुद्रादिदैवतम्।
अनीश्वरो जगत्कर्ता चतुर्वर्गफलप्रदः॥

२४. यत्तत् भगवतो दास्यं आत्मोज्जीवनकारणम्।
इत्येवमुपदिश्याथ तस्मै वेदान्तिने तदा॥

---

எப்போதும் தாழ்வில்லை. ரங்க3ராஜனின கருணைக்கு நீர் இப்போது பாத்திரமாகிவிட்டீர். ஸ்ரீவைஷ்ணவ ஶ்ரேஷ்ட2ராய் நீர் இவ்வுலகில் புகழ்பெறப் போகிறீர். அன்பரே! விஶிஷ்டாத்3வைத மதததை ரக்ஷித்துக்கொண்டு நீர் நெடுங்காலம் வாழப்போகிறீர்'' என்று கூறினார். அதற்குப்பின் வேதா3ந்திக்கு நன்கு பஞ்சஸம்ஸ்காரம் செய்து ''சேதனா சேதனங்களை ஶரீரமாகக்கொண்ட ப்3ரஹ்மமே உலகுக்கு மேலான காரணமாக எல்லா வேதா3ந்த ஶாஸ்த்ரங்களிலும் சொல்லப்பட்டுள்ளது. அப்பரமபொருளே ப4க3வான், விஷ்ணு, ஹரி, அழிவற்ற நாராயணன், லக்ஷ்மீநாத2ன் தாமரைக்கண்ணன், பிரமன் உருத்திரன் முதலானவர்களுக்குத் தெய்வம், தனக்கொரு ஈஶ்வரனற்றவன், உலகங்களைப் படைத்தவன், அறம் பொருள் இன்பம் வீடுகளை அளிப்பவன் என்று சொல்லப்படுகிறான். அந்த எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதே ஆத்மாவை உய்விப்பது'' என்று உபதே3ஶித்து, அந்த வேதா3ந்திக்குக் கருணைக் கடலான ப4ட்டர் அப்போதே ''மாத4வதா3ஸர்'' என்ற தா3ஸ்யநாமத்தை அளித்தார்.

२५. तस्य माधवदासेति नाम चक्रे दयानिधिः ।
भट्टार्यस्तेन शिष्येन गुरुः सम्यक् कृतार्हणः ॥

२६. सन्तुष्टः प्रेषितो रङ्गं पुनरायान्महायशाः ।
स रङ्गं प्राप्य रङ्गेशचरणाम्बुरुहद्वयम् ॥

२७. सम्यक् प्रणम्य भट्टार्यः यत्तत् श्रीरङ्गशायिने ।
हरये सर्ववृत्तान्तं तस्मै विज्ञाप्य सादरम् ॥
संप्रहृष्टः परिजनैः प्रविवेश स्वमालयम् ॥

२८. निर्जित्य रङ्गेशकृपाबलेन
वेदान्तिनं मायिमताग्रगण्यम् ।
स्वशिष्यभूतं सहसा विधाय
भूयोऽभ्यगात् रङ्गमथाध्युवास ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यविजयो नाम सप्ततितमोऽध्यायः ॥

---

## ஸ்ரீரங்கம் எழுந்தருளி அரங்கனிடம் விண்ணப்பித்தல்

*25*-28.* ஶிஷ்யரான அந்த வேதா₃ந்தியால் நன்கு சம்மானம்செய்யப்பட்டு விடைகொடுக்கப்பெற்ற ஆசார்யரான அந்த ப₄ட்டர் மிக உகந்தவராய், பெரும் புகழுடையவராய் ஸ்ரீரங்க₃த்துக்கு மறுபடியும் வந்து சேர்ந்தார். ஸ்ரீரங்க₃த்தை அடைந்தவுடன் ரங்க₃நாத₂னுடைய திருவடித்தாமரையிணையை அடைந்து நன்கு வணங்கி, பள்ளிகொண்ட பெரியபெருமாளுக்கு நடந்ததனைத்தையும் அன்போடு விண்ணப்பித்து மிக உகந்தவராய், தமது சீடர்களுடன் தம் திருமாளிகைக்குச் சென்றார். ரங்க₃நாத₂னுடைய கருணை ப₃லத்தாலே மாயாவாதி₃ மதத் தலைவரான வேதா₃ந்தியை ஜயித்துத் தமது ஶிஷ்யராக்கி மறுபடியும் ஸ்ரீரங்க₃த்துக்கு வந்து வாழ்ந்தார் ப₄ட்டர்.

ப்ரபன்னாம்ருதத்தில் ப₄ட்டார்ய விஜயம் என்னும் எழுபதாம் அத்தியாயம் நிறைவுற்றது.

एकसप्ततितमोऽध्यायः

१. तथा माधवदासाख्यो हरिभक्तिपरायणः ।
सञ्जातज्ञानवैराग्यो मनस्येवमचिन्तयत् ॥

२. सोऽहं मायिमते चास्मिन् तादृग्भूतजनैर्वृतः ।
कथं वत्स्यामि मद्भट्टार्यचरणाम्बुरुहाश्रयः ॥

३. इति मत्वा धनं सर्वं त्रिभागं संविभज्य तत् ।
द्वौ भागौ स्वजने दत्वा त्यक्तसंसारबन्धनः ॥

४. भागावशेषमादाय वेदान्ती सुमहद्धनम् ।
सहसा रङ्गमासाद्य निवेद्य गुरवे धनम् ॥

५. तुर्याश्रमं समासाद्य गुरुणानुमतस्तदा ।
प्रणम्य बहुधा भक्त्या पार्श्वे तस्थौ कृताञ्जलिः ॥

---

## எழுபத்தோராம் அத்தியாயம்
## வேத₃ாந்திநஞ்ஜீயருக்கு உபதே₃ஶம்
## வேத₃ாந்தி ஸ்ரீரங்க₃ம் வந்து ஜீயராதல்

1-5. ப₄ட்டர் திருத்தியபடியே 'மாத₄வதா₃ஸர்' என்னும் தா₃ஸ்யநாமத்தை உடைய வேதா₃ந்தி ஹரிப₄க்தியிலேயே ஈடுபட்டவராய், ஜ்ஞானவைராக்₃யங்கள் விளையப்பெற்றவ ராய், தம் திருவுள்ளத்தில் பின்வருமாறு நினைக்கலானார்— "இந்த மாயாவாதி₃ மதத்திலிருந்த நான் இப்போதும் அம்மதத்திலிருக்கும் ஜனங்களால் சூழப்பட்டிருக்கிறேன்; அத்தகைய நான் ப₄ட்டருடைய திருவடித்தாமரையைப் பற்றி நிற்கும் சீடனாய் எப்படி வாழ முடியும்?" என்று நினைத்து, தமது செல்வமனைத்தையும் மூன்று பகுதியாகப் பிரித்து இரண்டு பகுதிகளைத் தம் மனைவி மக்கள் முதலான உற்றார்க்குக் கொடுத்து ஸம்ஸாரப் பற்றிலிருந்து விடுபட்ட வராய், தம் செல்வத்தில் எஞ்சிய பகுதியான பெருந் தனத்தை எடுத்துக்கொண்டு விரைவில் ஸ்ரீரங்க₃த்தை

६. मन्ततेवासिनं दृष्ट्वा भट्टार्यः छिन्नसंशयः।
करुणापूर्णहृदयः श्रीरङ्गेश्वरशासनात् ॥

७. असद्यतिरिति प्रोच्य तं तदा परिषस्वजे ॥
तदस्मद्यतिनामाऽभूत् तेन वेदान्तिनो महत् ॥

८. विद्वान्माधवदासाख्यः भट्टार्यं गुरुपुङ्गवम् ।
भूयः प्रणम्य बहुधा चक्रे विज्ञापनं तदा ॥

९. शरीरमर्थं प्राणं च सद्गुरुभ्यो निवेदयेत् ।
इत्युक्तेन प्रकारेण भट्टार्य ! गुरुसत्तम ! ॥

१०. मम सर्वमिदं स्वामिन् ! त्वदधीनं कृतं मया।
रक्ष मां कृपया दीनं त्वत्पादाम्बुजषट्पदम् ॥

---

அடைந்து ஆசார்யரான ப₄ட்டரிடம் அச்செல்வத்தை ஸமர்ப்பித்து ஆசார்யரால் அனுமதிக்கப்பட்டவராய், அப்போதே ஸந்யாஸாஶ்ரமத்தை ஏற்றுக்கொண்டு அவரை ப₄க்தியுடன் பலகால் வணங்கிக் கைகூப்பியவராய் அவர் அருகில் நின்றார்.

## நஞ்ஜீயர் என்று அபி₄மானித்து உபதே₃ஶித்தல்

6 13. ஐயமற்றவராய், கருணைநிறைந்த நெஞ்சினரான ப₄ட்டர் சீடரான அவரைப் பார்த்து ரங்க₃நாத₂னுடைய நிய மனத்தாலே "நம ஜீயரோ" என்று அழைத்து, அப்போது ஆரத்தழுவிக்கொண்டார். அக்காரணத்தாலேயே வேத₃ாந் திக்கு "நஞ்ஜீயர்" என்ற அப்பெரிய திருநாமம் ஏற்பட்டது. "மாத₄வதா₃ஸர்" என்னும் தா₃ஸ்யநாமத்தைப் பெற்ற அறி வாளியான நஞ்ஜீயர் ஆசார்யஶ்ரேஷ்ட₂ரான ப₄ட்டரை அப்போது மறுபடியும் பலகால் வணங்கி, "ஆசார்ய ஶ்ரேஷ் ட₂ராய், ஸ்வாமியான ப₄ட்டரே! 'ஶரீரத்தையும், பொருளை யும், உயிரையும் நல்ல ஆசார்யனுக்கு (சீடன்) ஸமர்ப்பிக்க வேண்டும" என்று ஶாஸ்த்ரம் சொன்ன ரீதியில் என்னு

११. तेन वाक्येन सन्तुष्टः स भट्टः शिष्यवत्सलः ।
तामसद्यतये सर्वद्राविडाम्नायसम्पदम् ॥
१२. रहस्यसंप्रदायार्थान् शास्त्रमार्गाविरोधतः ।
चरमार्थं चोपदिश्य चक्रे श्रीवैष्णवोत्तमम् ॥
१३. लब्धसर्वार्थतत्त्वज्ञः श्रीमान्माधवदासकः ।
श्रीवैष्णववरो रेजे शरच्चन्द्र इवामलः ॥
१४. स भट्टदेशिको धीमान् सर्वशास्त्रविशारदः ।
संसारे त्यक्तसाराणां मुमुक्षूणां महात्मनाम् ॥
१५. कालक्षेपार्थसिद्ध्यर्थं चकार ग्रन्थपञ्चकम् ।
सहस्रनामभाष்யं च विष्णुपूजाक्रमं महत् ॥

---

டைய இவையனைத்தும் அடியேனால் உமக்கு அதீ₄னமாக ஆக்கப்பட்டது.' உமது திருவடித்தாமரையில் வண்டாயிருக்கும் இந்த எளியேனைக் கருணையோடு ரக்ஷிக்க வேண்டும'' என்று விண்ணப்பித்தார். அந்த வார்த்தையால் உகந்த ஶிஷ்யவத்ஸலரான ப₄ட்டர் த்₃ராவிட₃ வேத₃ச் செல்வமனைத்தையும், ரஹஸ்யார்த்த₂ங்களையும், ஸம்ப்ரதா₃யார்த்த₂ங்களையும், சரமோபாயத்தையும் ஶாஸ்த்ர முறை மீறாமல் நஞ்ஜீயருக்கு உபதே₃ஶித்து அவரை ஸ்ரீவைஷ்ணவஶ்ரேஷ்ட₂ராக ஆக்கினார். எல்லா அர்த்த₂ங்களையும் உள்ளபடி அறிந்தவராய், கைங்கர்யச் செல்வம் நிறைந்தவரான மாத₄வதா₃ஸரான நஞ்ஜீயர் ஶரத்கால சந்த்₃ரன் போலே குற்றமற்றவராய் ஸ்ரீவைஷ்ணவ ஶ்ரேஷ்ட₂ராக விளங்கினார்.

## ப₄ட்டர் க்₃ரந்த₂ங்கள் அருளல்

14-16. எல்லா ஶாஸ்த்ரங்களிலும் வல்லவராய், பேரறிவாளரான அந்த ப₄ட்டர் ஸம்ஸாரத்தில் பற்றற்றவர்களாய் மஹாத்மாக்களான முமுக்ஷுக்களுக்குக் காலக்ஷேபத்தின் பொருட்டு ஐந்து க்₃ரந்த₂ங்களை இயற்றியருளினார்.

१६. अष्टश्लोकीं तथा श्रीशस्तवं चानुत्तमं महत् ।
महान्तं रत्नकोशाख्यं स्तवं श्रीगुणपूर्वकम् ॥

१७. ततो भट्टारको धीमान् कृतकृत्यो महायशाः ।
वेदान्तिनं समालोक्य गुरुभक्तिपरायणम् ॥

१८. यातुकामोऽथ वैकुण्ठं रहस्येवमभाषत ।
वेदान्तिन्! शृणु मद्वाक्यं समाहितमनाः परम् ॥

१९. सर्वशास्त्राण्यधीतानि वेदान्तान्यखिलानि च ।
मया दत्ता बहुद्रव्यं गुरवे गुरुदक्षिणा ॥

२०. श्रीवत्सचिह्नतनयं श्रीरङ्गेशपुरोहितम् ।
सर्वशास्त्रार्थतत्त्वज्ञं भट्टार्यं मां समाश्रितः ॥

---

1. ஸஹஸ்ரநாமபா₄ஷ்யம், 2. பெரியதான திருவாராத₄னக்ரமம், 3. ரஹஸ்யத்ரயவிவரணமான அஷ்டஶ்லோகீ, 4. ஒப்பற்றதாய், பெரியதான ஸ்ரீரங்கராஜஸ்தவம், 5. பெரிதான ஸ்ரீகு₃ணரத்னகோஶஸ்தோத்ரம் ஆகியவை அந்த ஐந்து க்₃ரந்த₂ங்கள்.

## ப₄ட்டரின் உபதே₃ஶமும் நியமனமும்

17-29. அதற்குப் பிறகு பேரறிவாளரும், கடமையைச் செய்தவரும், பெரும்புகழாளருமான ப₄ட்டர் வைகுண்ட₂ம் செல்ல விரும்பியவராய், கு₃ருப₄க்தி மிக்கவரான வேதா₃ந்தி நஞ்ஜீயரைக் கடாக்ஷித்துத் தனிமையில் பின்வருமாறு கூறினார்— "வேதா₃ந்தி நஞ்ஜீயரே! என் வாக்கியத்தைக் கவனமாகக் கேட்பீராக. 'நாம் எல்லா ஶாஸ்த்ரங்களையும் வேதா₃ந்தமனைத்தையும் கற்றுவிட்டோம். நம் ஆசார்யருக்கு கு₃ருத₃க்ஷிணையாகப் பெருந்தனத்தைக் கொடுத்துள்ளோம். கூரத்தாழ்வான் குமாரராய், ஸ்ரீரங்கநாத₂னுக்குப் புரோஹிதராய், எல்லா ஶாஸ்த்ரங்களின் உண்மை

२१. इति मत्वार्य! गर्वेण मा वर्तस्व कदाचन।
तदेव रक्षकं मत्वा मन्नाथपदपङ्कजम् ॥

२२. वर्तस्व सततं विद्वन्! सत्यं सत्यं मयोदितम्।
प्रीत्यर्थं लोकरक्षार्थं शठजिद्यतिराजयोः॥

२३. सहस्रगीतेर्व्याख्यानं कुरु द्राविडभाषया।
यतीन्द्रशासनात्पूर्वं कुरुकेशो महायशाः॥

२४. सहस्रगीतेर्व्याख्यानं लोकरक्षार्थमादरात्।
षड्भिस्सहस्रैर्वेदान्तिन्! ग्रन्थैराद्यमनुत्तमम्॥

२५. विधायास्मत्कुलगुरुं भाष्यकारमतोषयत्।
त्वमद्य नवसाहस्रग्रन्थसंख्याविराजितम्॥

२६. सहस्रगीतेर्व्याख्यानं विधेहि मम शासनात्।
तद्द्राविडप्रवचनं कुरु लोकेषु सन्ततम्॥

---

யையும் அறிபவரான ப4ட்டரை ஆஶ்ரயித்திருக்கிறோம்' என்று எண்ணி ஒருபோதும் கர்வப்படாதீர். அறிவாளியே! எம்பெருமானார் திருவடித் தாமரையையே தஞ்சமாகக் கொண்டு வாழ்வீராக. இதை நான் பலகால் ஶபத2மிட்டுச் சொல்லுகிறேன். நம்மாழ்வாருக்கும் எம்பெருமானாருக்கும் உகப்பு உண்டாவதற்காகவும், உலகங்களை ரக்ஷிப்பதன் பொருட்டும் திருவாய்மொழிக்குத் தமிழில் ஒரு வ்யாக்2யானம் செய்வீராக. வேதா3ந்தி நஞ்ஜீயரே! எதிராஜரின் நியமனத்தாலே அவர் காலத்திலே பெரும்புகழாளரான திருக்குருகைப்பிரான்பிள்ளான் உலகங்களை ரக்ஷிப்பதன் பொருட்டு ஆறாயிரம் க்3ரந்த2ங்கள் (முப்பத்திரண்டு எழுத்துக்கள்) கொண்டதாய், திருவாய்மொழிக்கு ஒப்பற்றதான முதல் வ்யாக்2யானத்தை அருளி நமது குலகு3ருவான ஸ்ரீபா4ஷ்யகாரரை உகப்பித்தார். நீர் இப்போது எனது நியமனத்தால் ஒன்பதினாயிரம் க்3ரந்த2ங்கள்

२७. अस्मद्रामानुजाचार्यमतसिद्धान्तवर्धकः ।
वसिष्यति भवान् रङ्गे बहुकालं न संशयः ॥

२८. निशम्य तद्वाक्यमतिप्रहृष्टः,
सत्यं प्रियं मोक्षपदैकहेतुम् ।
ओमित्यलं माधवदासनामा,
ननाम भट्टारकमार्यवर्यम् ॥

२९. भट्टारको विष्णुमवाधिराज्ये,
वेदान्तिनं तं प्रणिधाय धीरम् ।
आचार्यसेवैकरतो महात्मा,
चकार वैकुण्ठगतां स्वबुद्धिम् ॥

इति प्रपन्नामृते वेदान्तिने निखिलार्थोपदेशो नाम
एकसप्ततितमोऽध्यायः ॥

---

கொண்டதான திருவாய்மொழி வ்யாக்₂யானத்தைச் செய்வீராக. இந்த தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களின் பொருள் விளக்கத்தை இவ்வுலகில் எப்போதும் செய்துகொண்டிருப்பீராக. நம்முடைய எம்பெருமானுர் த₃ர்ஶனத்தை வளர்ப்பவராய், ஸ்ரீரங்க₃த்தில் நீண்டநாள் வாழ்வீரென்பதில் ஐயமில்லை" என்று (கூறினுர்). உண்மையானதும், இனிமையானதும், மோக்ஷத்துக்குத் தனிக்காரணமானதுமான ப₄ட்டருடைய வாக்யத்தைக் கேட்டு மிகவும உகந்த மாத₄வதா₃ஸரான நஞ்ஜீயர் ஓம் என்றே கூறி அதற்கு இசைந்து, ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரான ப₄ட்டரை வணங்கினுர். ஆசார்ய கைங்கர்யத்திலேயே ஈடுபட்டவராய், மஹாபுருஷரான ப₄ட்டரும் வைஷ்ணவ த₃ர்ஶனஸ்த₂ாபனப் பொறுப்பைப் பேரறிவாளரான வேதாந்தி நஞ்ஜீயரிடம் ஒப்படைத்துத் தாம் வைகுண்ட₂ம் செல்வதற்குத திருவுள்ளம் கொண்டார்.

ப்ரபன்னும்ருதத்தில் வேதா₃ந்திக்கு எல்லா அர்த்த₂ங்களையும் உபதே₃ஶித்ததாகிற எழுபத்தோராம் அத்தியாயம் நிறைவுற்றது.

द्विसप्ततितमोऽध्यायः

१. श्रीपराशरभट्टार्यात् वेदान्ती गुरुपुङ्गवात् ।
विदित्वाऽखिलतत्त्वार्थं प्रणिपत्येदमब्रवीत् ॥

२. भवतः कृपया स्वामिन्! मया तत्त्वार्थसंपदः ।
संप्राप्तास्तेन चाद्याहं कृतार्थोऽस्मि न संशयः ॥

३. इदानीं श्रोतुमिच्छामि प्रभावं दिव्यसूरिणाम् ।
एषां प्रभावश्रवणात् मानसं निश्चलं भवेत् ॥

४. देशान्समस्तान् संत्यज्य शठकोपादयश्च ते ।
किमर्थं द्राविडे देशे ह्यवतीर्णा महात्मकाः ॥

५. देवभाषां परित्यज्य कथं द्राविडभाषया ।
चक्रुः प्रबन्धान् सकलान् किमर्थं दिव्यसूरयः ॥

---

## எழுபத்திரண்டாம் அத்₄யாயம்

## ஆழ்வார்கள் வைப₄வத் தொடக்கம்

### (அகஸ்த்ய விஶ்வகர்ம ஶாபம்)

### நஞ்ஜீயரின் விருப்பம்

1-7. ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரான பராஶரப₄ட்டரிட மிருந்து எல்லா அர்த்த₂ங்களையும் கேட்டபின் நஞ்ஜீயர் அவரை வணங்கிப் பின்வருமாறு கூறினர்— "ஆசார்யரே! தேவரீருடைய கருணையால் எனக்கு எல்லா அர்த்த₂ங்க ளாகிற செல்வங்களும கிடைத்தன. அதனல் அடியேன் ப₄ாக்₃யஶாலியானேன் என்பதில் ஐயமில்லை. இப்போது ஆழ்வார்களுடைய வைப₄வங்களைக் கேட்க விரும்புகிறேன். அவர்களுடைய வைப₄வத்தைக் கேட்பதால் மனம் ஸ்த₂ய மற்றதாகும். மஹாத்மாக்களான ஶட₂கோபர் முதலான அந்த ஆழ்வார்கள் மற்ற தே₃ஶங்களைவிட்டுத் தமிழ் நாட்டில் அவதரித்ததற்குக் காரணமென்ன? அந்த தி₃வ்யஸூரிகள்

६. संस्कृतादपि लोकेस्मिन् द्राविडस्य गुरूत्तमा।
उद्देश्यता कथमभूत् कारणं ब्रूहि मे गुरो॥

७. अधिकारोऽस्ति मे स्वामिन्! एतेषां श्रवणे यदि।
शिष्याय ब्रूहि विशदं कृपा मम तवास्ति चेत्॥

८. अङ्गीकृत्य वचस्तस्य कृपया भट्टदेशिकः।
यद्दिव्यसूरिचरितं प्रवक्तुमुपचक्रमे॥

९. वेदान्तिन्! शृणु वक्ष्यामि चरितं दिव्ययोगिनाम्।
एषां श्रवणमात्रेण महापातकनाशनम्॥

१०. पुरा कैलासशिखरे पार्वत्याः शङ्करस्य च।
सर्वलोकोत्सवः श्रीमान् विवाहः सुमहानभूत्॥

---

தே3வபா4ஷையான வடமொழியை விட்டுத் தங்களுடைய ப்ரப3ந்த4ங்கள் அனைத்தையும் ஏன் தமிழில அருளிச் செய்தனர்? ஆசார்ய ஶ்ரேஷ்ட2ரே! இவ்வுலகில் வடமொழியைக் காட்டிலும் தமிழுக்கு அவர்கள் கைக்கொண்ட பெருமை எப்படி வந்தது? இதற்குக் காரணத்தைச் சொல்லும். அடியேனுக்கு இதைக் கேட்பதற்குத் தகுதியுண்டாகில், உமக்கு என்னிடம் கருணையுண்டாகில் ஶிஷ்யனான எனக்கு இதைத் தெளிவாகச் சொல்லும்” என்று.

## உமாஶங்கர கல்யாணம்

8.*15 நஞ்ஜீயருடைய அந்தப் பிரார்த்தனையை ஏற்று ப4ட்டர் ஆழ்வார்களுடைய சரித்ரத்தைச் சொல்லத் தொடங்கினார் — நஞ்ஜீயரே! ஆழ்வார்களுடைய சரித்ரத்தைச் சொல்லுகிறேன். இதைக் கேட்பதாலேயே மஹா பாபங்களெல்லாம் அழியும். முன்னொரு காலத்தில் கைலாஸ ஶிக2ரத்தில் எல்லாவுலகமும் விழாவாகக் கொண்டாடியதும் சிறப்புற்றதுமான ஶிவபார்வதீ பரிணயம் பெரிதாக

११. त्रिलोकवासिनस्सर्वे ब्रह्माद्याश्चाखिलास्सुराः ।
तद्विवाहोत्सवं द्रष्टुं कैलासं युगपद्गताः ॥

१२. त्रिलोकवासिभिस्सर्वैर्मुनिभिर्देवतागणैः ।
कैलासपर्वतश्चान्यैः निबिडं समपूर्यत ॥

१३. नौरिवावस्थिता भूमिर्याऽधस्तात्सुमहाजले ।
सा भूमिरुत्पपातोर्ध्वं भाराभावाच्च दक्षिणे ॥

१४. उत्तरे सुमहाभारात् साधस्तात्पतनोद्यता ।
तां दृष्ट्वा निखिला देवाः भयार्ता मुनयस्तदा ॥

१५. संभ्रान्तहृदयास्तत्र सर्वे मूढा इव स्थिताः ।
विश्वकर्माऽब्रवीद्वाक्यं देवानिन्द्रपुरोगमान् ॥

१६. भयं त्यजत भद्रं वः भो देवा मुनयस्सुराः ।
उपायं संप्रवक्ष्यामि सांप्रतं शृणुतादरात् ॥

---

நடந்தது. மூவுலகங்களிலும் வாழும் பிரமன் முதலான எல்லா தேவர்களும் அந்த விவாஹ மஹோத்ஸவத்தைக் காண ஒரே சமயத்தில் அங்கு வந்தனர். மூவுலகத்தில் வாழும் முனிவர்களாலும் தேவஸமூஹங்களாலும் மற்றவர்களாலும் அந்தக் கைலாஸ பர்வதம் நிறைந்ததாயிற்று. கடலிலே கப்பல் போல் மிதக்கும் பூமி தெற்குப்பக்கத்தில் பாரமில்லாமையால் உயரக்கிளம்பிற்று. வடக்குபாகத்தில் அதிக பாரத்தால் தாழ்ந்து இறங்கிற்று. அதைப்பார்த்து அங்குள்ள எல்லா தேவர்களும் முனிவர்களும் பயத்தால் வருந்தி மனம் மயங்கியவர்களாய் அறிவிழந்தவர்போல் நின்றனர்.

## விஶ்வகர்மாவின் ஆலோசனை

15*-19. அப்போது விஶ்வகர்மா இந்த்ரன் முதலான தேவர்களைப் பார்த்து "தேவர்களே! முனிவர்களே!

१७. अगस्त्यो भगवानत्र वर्तते किल योगिराट् ।
त्रयो लोकार्श्वैकभागे एकभागे स एव हि ॥

१८. अद्य दक्षिणदिग्भागे सोऽगस्त्यो वर्तते यदि ।
पूर्ववत्पृथिवी तत्र समानस्था न संशयः ॥

१९. विश्वकर्मवचः श्रुत्वा सन्तुष्टाः सर्वदेवताः ।
अगस्त्यं प्रार्थयामासुः लोकरक्षार्थमादरात् ॥

२०. अगस्त्यः कुपितो वीक्ष्य विश्वकर्माणमब्रवीत् ।
चिरात्संद्रष्टुकामोऽहं उमाकल्याणमुत्तमम् ॥

२१. तस्य विघ्नस्त्वया मूढ पापिनाऽवसरे कृतः ।
निकृष्टस्तेन दोषेण भविष्यति भवान् ध्रुवम् ॥

---

நீங்கள இந்த ஆபத்தைத் தீர்க்க உபாயத்தை இப்போது கூறுகிறேன்; ஆர்வத்துடன் கேளுங்கள். யோகிகள் தலைவரான பகவான் அகஸ்த்யர் இங்கிருக்கிருர். மூவுலகும் ஒருபங்கு எடை என்ருல் அவர் அதுக்கு ஸமமான எடையுள்ளவரன்ரு. இப்போது அந்த அகஸ்தயர் தென்பகுதியில் வாழவாராளுல் பூமி முன்போல் சரியாய்விடும் என்பதில் ஐயமில்லை" என்று கூறிஞன். இவ்வார்த்தையைக் கேட்டு எல்லா தேவர்களும் உலகத்தைக் காக்கும் பொருட்டு அவ்வண்ணமே செய்யும்படி அகஸ்த்யரைப் பிரார்த்தித்தார்கள்.

## அகஸ்த்யசாபம்

20-*24. அகஸ்த்யர் கோபத்துடன் விஸ்வகர்மாவைப் பார்த்துப் பின்வருமாறு கூறிஞர்—"முட்டாளே! நீண்ட நாளாக நான் மிகச்சிறந்த உமாகல்யாணத்தைக் காண இருந்தேன். பாபியான உன்ஞல் சரியான சமயத்தில அதற்கு இடையூறு இழைக்கப்பட்டுவிட்டது. அந்த தோஷத்தால் நீ தாழ்ந்தவஞவாய் என்பது உறுதி. இவ்

२२. युष्मदीयाश्च ये लोके युष्मत्कर्मरता नराः।
ते निकृष्टा भविष्यन्ति मच्छापान्नात्र संशयः॥

२३. ते चैवाधर्मकर्माणो भविष्यन्त्यल्पचेतनाः।
रोषाभिवेशताम्राक्षः प्रलयाग्निरिव ज्वलन्॥

२४. शशाप तं बहुविधं त्वष्टारं कुम्भसंभवः।
तच्छ्रुत्वा वचनं तस्य रुष्टस्त्वष्टा शशाप तम्॥

२५. पश्यतां सर्वदेवानामगस्त्यममितौजसम्।
अद्य प्रभृति लोकेषु द्राविडी या त्वया कृता॥

२६. पैशाचतुल्या सा भाषा भविष्यति न संशयः।
युष्मत्कृतं व्याकरणं भविष्यत्यतिगर्हितम्॥

---

வுலகில் உன் தொழிலைச் செய்யும் உன்னைச் சேர்ந்தவர்களும என் ஶாபத்தாலே தாழ்ந்தவராவார்கள் என்பதில் ஐயமில்லை. அவர்களும் அறிவற்றவர்களாய், அதர்மம் செய்பவர்களாக ஆகிவிடுவார்கள்" என்று கோபாவேஶத்தால் கண்கள் சிவந்தவராய், ஊழிகாலத் தீ போல் ஒளிவிடுபவரான கும்பமுனியாகிற அகஸ்த்யர் விஶ்வகர்மாவை இவ்வண்ணமாகப் பலவிதமாக ஶபித்தார்.

## விஶ்வகர்மஶாபம்

24*—*30. அந்த அகஸ்த்ய வசனத்தைக் கேட்ட தேவதச்சனான விஶ்வகர்மா எல்லா தேவர்களும் பார்த்துக் கொண்டிருக்கையில் அளவற்ற சக்தியுடைய அகஸ்த்யரைப் பின்வருமாறு சபித்தான்:— "நீர்செய்த தமிழ் மொழி இன்றுமுதல் பிஶாசங்களின் மொழிபோல் தாழ்ந்ததாகிவிடும். இதில் ஐயமில்லை. நீர் அம்மொழிக்குச் செய்த இலக்கணமும் மிகத்தாழ்ந்ததாகிவிடும்.

२७. ब्रह्मक्षत्रविशां लोके म्लेच्छभाषादिवत् ध्रुवम्।
शूद्रजातिव्याकरणं भविष्यत्यतिगर्हितम् ॥

२८. सत्यं द्राविडदेशस्तु चोरदेशो भविष्यति।
अतस्त्व देशो मच्छापात् अब्रह्मण्यकृतालयः ॥

२९. युष्मदीयाःखिले लोके द्राविडा मन्दबुद्धयः।
मायाविनश्च पिशुना भविष्यन्ति कलिप्रियाः ॥

३०. एवं बहुविधं त्वष्टा तमगस्त्यं शशाप ह।
तेनासीत्कलहस्तत्र तयोश्शैले महत्तरः ॥

३१. तं निवार्याखिला देवाः तयोः कलहमाशु ते।
अगस्त्यं प्रार्थयामासुः याम्याशागमनं प्रति ॥

---

ப்₃ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்யர்களாகிற இருபிறப்பாளர் களுக்கு ம்லேச்ச₂பா₄ஷை இலக்கணத்தைப்போலே இவ்வுலகில் ஶூத்₃ரஜாதி இலக்கணமாய் மிகத்தாழ்ந்ததாகி விடப்போகிறது. இது நிஶ்சயம். த்₃ராவிட₃தே₃ஶம் திருடர்கள் வாழும் தே₃ஶமாகப்போகிறது என்பது திண்ணம். ஆகையால் அந்த தே₃ஶம என் சாபத்தாலே ப்₃ரஹ்மஜ்ஞானம் இல்லாதவர்கள் வாழும் தே₃ஶமாக ஆகப் போகிறது. உம்மைச் சேர்ந்தவர்களான த்₃ராவிட₃ர்கள் எல்லாவுலகிலும் மந்த₃பு₃த்₃தி₄களாகவும, வஞ்சகர்களாகவும், தீயகுணங்களுடையவர்களாகவும், கலிபுருஷனுக்கு இனியவர்களாகவும ஆகப்போகிறார்கள்" என்று இவ்வண்ணமாக விஶ்வகர்மா அந்த அக₃ஸ்த்யரைப் பலவாறு ஶபித்தான்.

### அக₃ஸ்த்யரின் தபம்

30*-34. இப்படி ஒருவர்க்கொருவர் ஶாபம் கொடுத்துக் கொண்டதாலே அந்த இமயமலையில் பெரிய சண்டை ஏற்பட்டது. எல்லா தே₃வர்களும அவர்களுடைய அந்தச்

३२. अलङ्घनीयं देवानां अङ्गीकृत्य वचः शुभम् ।
अगस्त्यो न्यवसत्तत्र दिशि व्याकुलमानसः ॥

३३. भूमिः स्थिता यथापूर्वं तत्कल्याणमवर्तत ।
स खिन्नहृदयस्तत्र तेन शापेन दुष्करम् ॥

३४. अगस्त्यो विष्णुमुद्दिश्य तताप परमं तपः ।
वर्षाणां दशसाहस्रं निराहारो महामनाः ॥

३५. सन्तुष्टस्तेन तपसा भगवान्विष्णुरव्ययः ।
प्रसन्नस्तमृषिं प्राह वरदो भक्तवत्सलः ॥

३६. वरदोऽस्मि वरं दातुं तवाहमधुनाऽऽगतः ।
यदिष्टं वृणु निश्शङ्कं कलशोद्भव! सांप्रतम् ॥

---

சண்டையை விரைவில் தடுத்துத் தெற்குத் திக்குக்குப் போகும்படி அக₃ஸ்த்யரைப் பிரார்த்தித்துக்கொண்டார்கள். தே₃வர்களுடைய அந்த மறுக்கவொண்ணாத மங்க₃ளமான வார்த்தையை ஏற்று மிகக்கலங்கிய மனத்தையுடையவராய் அக₃ஸத்யர் தெற்குத் தி₃க்குக்குச் சென்று தங்கினார். பூ₄மி முன்மாதிரியே ஸமமாக ஆயிற்று. ஶிவபார்வதீ கல்யாணம் நடந்தேறியது. விஶ்வகர்மாவின் ஶாபத்தால் வருந்திய மனததையுடைய அக₃ஸ்த்யர் விஷ்ணுவைக் குறித்து செயற்கரிதான மிகப் பெரிய தவத்தை மிகுந்த பாரிப்பை யுடையவராய், பதினாயிரம் வருஷங்கள் உணவு கொள்ளா மலிருந்து அனுஷ்டி₂த்தார்.

## விஷ்ணுவின் அருள்

35-36. அந்தத் தவத்தினால் உகந்த அழிவற்ற ப₄க₃வான் விஷ்ணு ப₄க்தர்களிடம் வாத்ஸல்யமுடைய வரந்தரும் பெருமாளாகையாலே நேரில் தோன்றி அந்த ரிஷியைக் குறித்து "குடத்தில் தோன்றிய முனிவரே! நான் வரம் தரும் பேரருளாளனாயிருப்பவன்; உமக்கு வரம்தருவதற்கா

३७. श्रीहरेर्वाक्यमाकर्ण्य कुम्भयोनिः प्रणम्य तम् ।
बद्धाञ्जलिपुटो भूत्वा स्तोत्रयामास केशवम् ॥

३८. नमो नमः कारणकारणाय
निष्कारणायाद्भुतकारणाय ।
नमो नमस्तेऽखिलसत्त्वधामन् !
नमो नमस्ते जलजातनेत्र ! ॥

३९. वेदान्तवेद्याय महाविपश्चिते
जगज्जनित्रे निखिलान्तरात्मने ।
अणोरणीयःश्रुतिवेदितात्मने
गुहाशयायाखिललोकसाक्षिणे ॥

கவே நான் இப்போது வந்திருக்கிறேன். இப்போது நீர் விரும்பியது எதுவோ அதை 'கிடைக்குமோ கிடைக்காதோ என்னும் ஐயமில்லாமல் கேட்பீராக" என்று அருளினன்.

## அக₃ஸ்த்யரின் துதி

37-53. எம்பெருமானுடைய அந்த வாக்யத்தைக் கேட்டு, குடமுனிவர் அவனை வணங்கி, கைகூப்பிநின்றவராய் அக்கேசவனைத் துதிக்கத் தொடங்கினர்—"காரணங்களுக்கும் காரணனுன உனக்குப் பலகால் வணக்கம். எல்லாப் பொருள்களையும் இருப்பிடமாகக்கொண்டவனே! தனக்கொரு காரணமில்லாதவனுய், நிமித்தம் உபாத₃ானம் ஸஹகாரி எனும் மூவகைக் காரணமும் தானேயாயிருக்கும் அத்₃பு₄த காரணனுன உனக்கு வணக்கம். தாமரைக் கண்ணனே! வேத₃ங்களால் அறியப்படுபவனுய், அனைத்தையும் அறிந்தவர்களில் மிகப்பெரியவனுய், ஜக₃த்காரணனுய், அனைத்துக்கும் அந்தர்யாமியாய் அணுவுக்கும் அணுவாக வேத₃த்தில் அறியப்படும் ஸ்வரூபத்தையுடையவனுய், ஹ்ருத₃ய கு₃ஹையில் வாழ்பவனுய், எல்லாவுலகங்களையும் எப்போதும கண்டுகொண்டிருக்கும் ஸாக்ஷியாயிருப்பவ

४०. विज्ञानतत्त्वविदुषे विविधागमान्त-
वेद्याय वेदपुरुषाय विधीशपाय ।
विद्याधरप्रियधराय विहङ्गराजा-
रूढाय गूढचरणाय नमः परस्मै ॥

४१. नन्दात्मजाद्यपुरुषाखिललोकनाथ !
नालीकसज्जनकार्यमनोऽब्जभृङ्ग ! ।
नव्याम्बुजाक्ष ! नवनीतहराप्रमेय !
नारायणाखिलगुरो ! भगवन्नमस्ते ॥

४२. श्रीकेशवाद्यपुरुषोत्तम ! पूर्णकाम !
मत्स्यावतार ! निगमोद्धर ! भो मुरारे ! ।
लोकेशसन्नुत ! हयास्य ! जगन्निवास !
नारायणाखिलगुरो ! भगवन्नमस்தे ॥

---

ஞன உனக்கு வணக்கம். அறிவின் உண்மையை அறிந்தவனாய், பலவிதமான வேதாந்தங்களால் அறியப்படுபவனாய், வேத₃புருஷனாய், பிரமனையும் ஶிவனையும் ரக்ஷிப்பவனாய், ப்₃ரஹ்மஜ்ஞானிகளை அன்புடன் த₄ரிப்பவனாய், பக்ஷிராஜனமேல் ஏறியிருப்பவனாய், பாதுகையால் மறைக்கப்பட்ட திருவடிகளையுடையவனான பரமாத்மாவான உனக்கு வணக்கம். நந்த₃குமாரனே! ஆதி₃புருஷனே! அனைத்துலகுக்கும் நாத₂னே! உண்மைக்கிருப்பிடமான ஜனஸமூஹத்தின் நெஞ்சத்தாமரையில் வண்டுபோல் வாழ்பவனே! அன்றலர்ந்த தாமரைபோன்ற திருக்கண்களையுடையவனே! வெண்ணெய் திருடிய கள்வனே! அளத்தற்கரியவனே! அனைவரிலும் பெரிய ப₄க₃வந்நாராயணனே! உனக்கு வணக்கம். ஸ்ரீகேஶவனே! ஆதி₃யிலிருக்கும் புருஷோத்தமனே! எப்போதும் விருப்பங்கள் நிறைவேறப் பெற்றவனே! மீனாய் அவதரித்து வேத₃ங்களை மீட்டவனே! முரனையழித்தவனே! உலகபாலர்களால் துதிக்கப்படுப

४३. नारायणाच्युत ! मुकुन्द ! सुरेश ! विष्णो !
श्रीमन्दराद्रिवहनाद्भुतकूर्मरूप ! ।
श्रीसिन्धुजारमण ! देव ! जगद्धिताद्य ! ।
नारायणाखिलगुरो ! भगवन्नमस्ते ॥

४४. श्रीमाधवेशनुत ! मन्मथतात ! विष्णो !
वाराहरूप ! वसुधोद्धरणाप्रमेय ! ।
हैरण्यनेत्रदमनोज्ज्वल ! यज्ञमूर्ते !
नारायणाखिलगुरो ! भगवन्नमस्ते ॥

४५. गोविन्द ! चिन्मय ! मनोमय ! गोपरूप
प्रह्लादरक्षक ! महाद्भुतनारसिंह ! ।
सम्यङ्नखाग्रदलितासुरराजवक्षः !
नारायणाखिलगुरो भगवन्नमस्ते ॥

---

வனே ! ஹயக்$_{3}$ரீவனே ! உலகெங்கும் வஸிப்பவனே ! அனைவரிலும் பெரிய ப$_{4}$க$_{3}$வந்நாராயணனே! உனக்கு வணக்கம். நாராயணனே ! அடியவர்களை நழுவ விடாத அச்யுதனே ! மோக்ஷமளிக்கும் முகுந்தனே ! தேவர் தலைவனே ! விஷ்ணுவே ! ஸ்ரீமந்தரமலையைத் தாங்கிய அத்$_{3}$பு$_{4}$தமான கூர்மாவதாரத்தைச் செய்தவனே ! திருப்பாற்கடற் செல்வியின் காதலனே ! தேவனே ! லோகஹிதமாயிருக்கும் ஆதி$_{3}$புருஷனே! அனைவரிலும் பெரிய ப$_{4}$க$_{3}$வந்நாராயணனே! உனக்கு வணக்கம் ஸ்ரீமாத$_{4}$வனே ! ஶிவனால் துதிக்கப் பட்டவனே ! காமன் தந்தையே ! விஷ்ணுவே ! வராஹ ரூபத்தை எடுத்து பூ$_{4}$மியைத்தூக்கி எடுத்தவனே ! அளத் தற்கரியவனே! ஹிரண்யாக்ஷனை அழித்து விளங்கி நிற்ப வனே! யஜ்ஞஸ்வரூபனாயிருப்பவனே! அனைவரிலும் பெரிய வனான ப$_{4}$க$_{3}$வந்நாராயணனே ! உனக்கு வணக்கம். ஜ்ஞானமயனாய் மனோமயனாய் இடைச்சாதியில் அவதரித்த கோ$_{3}$விந்த$_{3}$னே ! ப்ரஹ்லாதனை ரக்ஷித்த மஹாத்$_{3}$பு$_{4}$த நர

५२. इत्येवं बहुशः स्तुत्वा कुम्भयोनिः श्रियः पतिम् ।
प्रणम्योत्थाय सन्तुष्टः कृताञ्जलिरुपस्थितः ॥

५३. अगस्त्येन कृतं स्तोत्रं पठत्यनुदिनं नरः ।
स सर्वपापनिर्मुक्तः ब्रह्मलोके महीयते ॥

इति श्रीप्रपन्नामृते अगस्त्यविश्वकर्मणोरन्योन्यशापावाप्तिर्नाम
द्विसप्ततितमोऽध्यायः ।

त्रिसप्ततितमोऽध्यायः

१. सन्तुष्टस्तेन तपसा भगवान् विष्णुरव्ययः ।
मन्दस्मितमुखः श्रीमान् इदं वचनमब्रवीत् ॥

---

க்ருதயுக₃ த₄ர்மத்தில் ஈடுபட்டவர்களுக்குத் தஞ்சமானவனே! அனைவரிலும் பெரிய ப₄க₃வந்நாராயணனே! உனக்கு வணக்கம்" என்று இவ்வண்ணமாக ஸ்ரீமந்நாராயணனைத் துதித்து, அக₃ஸ்தயர் வணங்கி எழுந்து உகந்தவராய், கைகூப்பி நின்றார். அக₃ஸ்த்யரால் செய்யப்பட்ட இந்தத் துதியைத் தினந்தோறும் படிக்கும் மனிதன் எல்லாப் பாபங்களினின்றும விடுபட்டவனாய் வீட்டுலகில் பெருமை பெறுகிறான்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் அக₃ஸ்த்ய விஸ்வகர்மாக்கள் ஒருவர்க்கொருவர் ஶாபம் கொடுத்துக்கொண்டதை விளக்கும் எழுபத்திரண்டாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## எழுபத்துமூன்றும் அத்தியாயம்
## தமிழ்வேதப் பெருமை
## திருமால் அளித்த வரம்

1-*33. அத்தவத்தால் உகந்தவராய், அழிவற்றவராய், திருவின் நாயகனான ப₄க₃வான் விஷ்ணு புன்முறுவல் பூத்த முகத்தினராகிப் பின்வரும் வார்த்தையைக் கூறினார்:—

२. तपसा तव तुष्टोऽस्मि स्तोत्रेणानेन सत्तम! ।
नाशयाम्याशु ते दुःखं त्वष्टृशापसमुद्भवम् ॥
३. अहं द्राविडदेशेऽस्मिन् अवतारान् करोमि तान् ।
येनावतारेण मया लोके शिष्टपरिग्रहा ॥
४. सर्वत्र द्राविडी भाषा भविष्यति न संशयः ।
शङ्खचक्राद्यायुधानि विष्वक्सेनादिकान् सुरान् ॥
५. लोकेऽवतारयिष्यामि द्राविडे कलशोद्भव ।
ताम्रपर्णीनदीतीरे कुरुकानगरीवरे ॥
६. मद्भक्तोऽहं भविष्यामि नेतुं द्राविडतां श्रुतिम् ।
मया मदंशजैस्सर्वैर्दशभिर्द्राविडोत्तमैः ॥

---

"நல்லவரே! உமது தவத்தினாலும் இந்தத் துதியினாலும் நான் உகப்படைந்தேன். விஶ்வகர்மாவின் ஶாபத்தினால் உமக்கு உண்டான வருத்தத்தை விரைவில் போக்குகிறேன். இந்தத் தமிழ் தேசத்தில் நான் சில அவதாரங்களைச் செய்யப் போகிறேன். எனது அந்த அவதாரங்களாலே இந்தத் தமிழ் பாஷையானது நல்லோர்கள் அனைவராலும் உலகெங்கும் கைக்கொள்ளத் தக்கதாக ஆகப் போகிறது. இதில் ஐயமில்லை. நித்யஸூரிகளான என்னுடைய சங்கம், சக்கரம் முதலான ஆயுத₄ங்களையும் விஷ்வக்ஸேனர் முதலானோரையும் இந்தத் தமிழ் தேசத்தில் அவதரிக்கச் செய்யப் போகிறேன். குடமுனிவரே! தாம்ரபர்ணி நதிக்கரையில் திருக்குருகூர் நகரிலே வேதத்தைத் தமிழாக்குவதற்காக எனது ப₄க்தராக நான் அவதரிக்கப்போகிறேன். என்னுடைய அம்ஶாவதாரமான பத்து தமிழ்ப் பெரியவர்களைக்கொண்டு எல்லா வேதா₃ர்த்த₂ங்களும் மிகச் சிறந்த தமிழ் பாஷையாலே நாலாயிரம் பாட்டுக்களாக என்னால் இயற்றப்படவிருக்கிறது. இந்தத் தமிழ் தி₃வ்ய

७. चतुष्टयसहस्राणि प्रबन्धास्तैर्महात्मकैः ।
क्रियन्तेऽखिलवेदार्था दिव्यद्राविडभाषया ॥

८. तेषु दिव्यप्रबन्धेषु द्राविडेषु घटोद्भव ! ।
यस्य कस्य भवेद्भक्तिः स मुक्तो नात्र संशयः ॥

९. सहस्रगीतिस्तत्रापि शठकोपेन या कृता ।
तस्याः श्रवणमात्रेण ब्रह्मलोके महीयते ॥

१०. सहस्रगीतिर्या दिव्या द्राविडी ब्रह्मसंहिता ।
यस्य कस्य मुने ! सम्यक् शरीरे धार्यतेऽनघ ! ॥

११. तस्य तद्दर्शनादेव पापात्मा स्याच्च मुक्तिभाक् ।
सहस्रगीतिपठनात् सन्तुष्टोऽस्मि न संशयः ॥

१२. अतः कलियुगे ब्रह्मन् ! सा गीतिः प्रचरिष्यति ।
तेन सर्वे च मनुजाः प्रबन्धाध्ययनेन ते ॥

---

ப்ரப₃ந்த₄ங்களில் ப₄க்தி எவனுக்கேனும் ஏற்பட்டதாகில், அவன் முக்தி அடைவான் என்பதில் ஐயமில்லை. அந்த நாலாயிர திவ்யப்ரபந்தங்களிலும் ஶட₂கோபரால் இயற்றப் பட்ட ஆயிரம் பாடல்களான திருவாய்மொழியைக் கேட்ப தாலேயே பரமபதத்தில் அனைவராலும் கொண்டாடப் படுபவனாகிறான். பாபமற்றவரான முனிவரே! த்₃ராவிட₃ வேத₃மாகிற மிகச் சிறந்த இத் திருவாய்மொழி எவனொருவனாலே யாவது தன் ஶரீரத்தில் த₄ரிக்கப்பட்டதாகில் அவனுடைய அந்த ஶரீரத்தைக் காண்பதாலேயே பெரும் பாவம் செய் தவனும் முக்தியடைவான். இத் திருவாய்மொழியைப் படிப்பதால் நான் உகப்படைவேன் என்பதில் ஐயமில்லை. அக₃ஸ்த்ய முனிவரே! இக் காரணத்தால் கலியுக₃த்தில் இந்தத் திருவாய்மொழி மிகவும் பிரசாரத்தை அடையப் போகிறது. அந்த் தி₃வ்யப்ரப₃ந்த₄த்தைக் கற்பதாலே எல்லா மனிதர்களும் விரைவில் என் உலகத்தை அடையப்

१३. अगस्त्याशु गमिष्यन्ति मल्लोकं नात्र संशयः।
चराचराभ्यां रूपाभ्यां मुक्त्यर्थं सर्वदेहिनाम्॥

१४. प्रसन्नो द्राविडे देशे सर्वत्र निवसाम्यहम्।
सर्वभाषाधिका भाषा द्राविडी सा भविष्यति॥

१५. प्रचरिष्यन्ति लोकेषु वेदार्थाः सर्व एव हि।
गूढार्थाश्च कलौ सम्यक् तथा द्राविडभाषया॥

१६. चतुर्वेदधरो विप्रः सर्वशास्त्रविशारदः।
द्वयार्थैकरतो वापि मन्त्रराजार्थकोविदः॥

१७. अमानित्वादिगुणकः चरमोपायवेद्यपि।
दिव्यप्रबन्धहीनश्चेत् मद्भक्तो न भविष्यति॥

---

போகிறார்கள். இதில ஐயமில்லை. எல்லா மனிதர்களும் முக்தியடைவதற்காக அசையாத மூல விக்₃ரஹமாகவும், புறப்பாடு முதலானவை கண்டருளும் உத்ஸவ விக்₃ரஹமாகவும் ஆவிர்ப₄வித்து இந்தத் தமிழ் தேசமெங்கும் உள்ள கோயில்களில் நான் வாழப் போகிறேன். இந்தத் தமிழ் பாஷையானது எல்லா பாஷைகளைக் காட்டிலும் சிறப்புற்றதாக ஆகப் போகிறது. தமிழ் பாஷையிலுள்ள இந்த நூல்களால் எல்லா வேதா₃ர்த்த₂ங்களும் ரஹஸ்யார்த்த₂ங்களும் இக்கலியுக₃த்திலும் உலகமெங்கும் நன்கு பிரசாரமடையப் போகின்றன. ஓர் அந்தணன் நாலு வேத₃ங்களையும் கற்றவனாயினும், எல்லா ஶாஸ்த்ரங்களிலும் வல்லவனாயினும், த்₃வயமந்த்ரத்தின் பொருளிலேயே ஈடுபட்டவனாயினும், திருவஷ்டாக்ஷரப் பொருளில் வல்லவனாயினும், அமாநித்வம் (க₃ர்வமின்மை) முதலான ஆத்மகு₃ணங்களையுடையவனாயினும், ஆசார்யனாகிற சரமோபாயத்தை அறிந்தவனாயினும் தி₃வ்யப்ரப₃ந்த₄ம் ஓதாதவனானால் அவன் என் ப₄க்தனாகமாட்டான். வேத₃ வேதா₃ந்த ஶாஸ்த்ரார்த்த₂ங்களின் ஸாரத்தை அறிந்த

१८. वेदवेदान्तशास्त्रार्थसारज्ञस्यापि तस्य हि।
दिव्यप्रबन्धहीनस्य वैष्णवत्वं न लभ्यते॥

१९. जातकर्मादिसंस्कारैः ब्राह्मण्यं चाग्रजन्मनः।
यथा भवति लोकेऽस्मिन् यद्वेदाध्ययनेन च॥

२०. द्राविडाम्नायपठनैः संस्कारैः पञ्चभिर्मुने।
आचार्यसेवया तस्य वैष्णवत्वं भविष्यति॥

२१. अतो द्राविडवेदान्तरहितस्य कदाचन।
नास्ति निःश्रेयसं वत्स! सत्यं सत्यं मयोदितम्॥

२२. इत्येवं कारयित्वाशु स्वमतस्थापनं भुवि।
अहं व्यपनयिष्यामि त्वद्दुःखं नात्र संशयः॥

२३. ययातिशापदग्धस्य पालितं यद्यदोः कुलम्।
गङ्गाधिका च कावेरी यथाऽभून्मत्प्रसादतः॥

---

போதிலும் தி3வ்யப்ரப3ந்த4மில்லாத அவனுக்கு வைஷ்ணவத்வம் கிடையாது. முதல் வர்ணத்தில் பிறந்தவனுக்கு ஜாதகர்மம் முதலான ஸம்ஸ்காரங்களாலும், வேதா3த்4யயனத்தாலும் இவ்வுலகில் ப்3ராஹ்மண்யம் ஏற்படுவது போலே, த்3ராவிட3 வேத3த்தைக் கற்பதாலும், தாபம் புண்ட்3ரம முதலான ஐந்து ஸம்ஸ்காரங்களாலும், ஆசார்ய கைங்கர்யம் செய்வதாலும ஒருவனுக்கு வைஷ்ணவத்வம் ஏற்படுகிறது ஆகையால் த்3ராவிட3 வேதா3ந்தமில்லாதவனுக்கு ஒருபோதும் மோக்ஷம் இல்லை. ஐயா! நான் இதைப் பலமுறை ஸத்யம் செய்து கூறுகிறேன். இவ்வண்ணமாகத் (தமிழ் வேத3ங்களைக்கொண்டு) வைஷ்ணவ மதததை இவ்வுலகில் நிலைநிறுத்தி உனது துன்பத்தை நான் போக்கடிப்பேன். இதில் ஐயமில்லை. யயாதி ஶாபத்தினலை (அரசுரிமையில்லாமல்) அழிந்துபோன யதுவின் குலம் கண்ணனுகிற என்னுல் காப்பாற்றப்பட்டது போலவும்,

२४. तथैव द्राविडी भाषा लोके ख्यातिं गमिष्यति ।
वैकुण्ठवासिनः सर्वे सूरयस्ते मदाज्ञया ॥

२५. द्राविडेषु समुत्पन्नाः सर्वशास्त्रविशारदाः ।
द्राविडाम्नायनिरताः तथा द्राविडभाषया ॥

२६. प्रपत्तिमार्गं सर्वेभ्यः उपदिश्य दयालवः ।
परोपकारनिरताः भविष्यन्ति कलौ युगे ॥

२७. दृष्टपूर्वोऽयमर्थो हि पुराणेष्वखिलेषु च ।
तस्मादगस्त्य ! मा शोकं कुरु ब्रह्मविदांवर ! ॥

२८. ब्रह्माण्डनामके तस्मिन् पुराणे मुनिसत्तम ! ।
ब्राह्मे पुराणे कुरुकामाहात्म्ये कलशोद्भव ! ॥

२९. श्रीमद्भागवते चैव बृहद्पाद्मे तथैव च ।
अन्येष्वपि पुराणेषु भविष्यद्भागवादिषु ॥

---

என்னருளால் காவேரி க₃ங்கை₃யைக் காட்டிலும் சிறப்புற்றதுபோலவும், (என்னருளால்) தமிழ் பாஷை இவ்வுலகில் புகழடையப் போகிறது. வைகுண்ட₂த்தில் வாழும் க₃ஜமுக₂ர், ஸிம்ஹமுக₂ர் முதலான எல்லா நித்யஸூரிகளும் என் ஆணையாலே தமிழ் தேசத்தில் பிறந்து, எல்லா ஶாஸ்த்ரங்களிலும் வல்லவர்களாய், தமிழ் வேத₃த்தில் மிகவும் ஈடுபட்டவர்களாய், இந்தத் தமிழ் மொழியிலேயே ப்ரபத்தி மார்க்க₃த்தை அனைவர்க்கும் உபதே₃ஶித்து இக்கலியுக₃த்தில் கருணை நிரம்பியவர்களாகவும் பரோபகாரத்தில் ஈடுபட்டவர்களாகவும் வாழப் போகிறார்கள். இவ்வர்த்த₂ம் எல்லாப் புராணங்களிலும் முன்பே சொல்லப்பட்டிருக்கிறது, ப்₃ரஹ்மஜ்ஞானிகளில் தலைசிறந்த அக₃ஸ்த்யரே! இக் காரணத்தால் நீர் வருத்தமுறத்தேவையில்லை. ப்₃ரஹ்மாண்ட₃ புராணத்திலும், ப்ராஹ்ம புராணத்தில் குருகா மாஹாத்ம்யத்திலும், ஸ்ரீமத்₃ பா₄க₃வதத்திலும், வ்ருத்₃த₄பாத்₃

३०. ततोऽस्मिन् भारते वर्षे घटोद्भव! कलौ युगे।
कृतादिमनुजास्सर्वे भविष्यन्ति च भूरिशः॥

३१. मच्छास्त्रनिरतास्सर्वे ते मदेकपरायणाः।
प्रपत्तिधर्मनिरताः मामुपैष्यन्ति निश्चयम्॥

३२. एवमुक्त्वा तदाऽगस्त्यं लक्ष्मीशः करुणानिधिः।
अगस्त्याय वरं दत्वा दुर्घटं जगदीश्वरः॥

३३. तोषयित्वा मुनिश्रेष्ठं तत्रैवान्तर्दधे हरिः।
अगस्त्यः स्वाश्रमं प्राप्य संतुष्टः कृपया हरेः॥

३४. कृतकृत्यो महातेजाः तस्थौ हरिपरायणः।
ततोऽव्याहतसङ्कल्पः भगवान् जगदीश्वरः॥

---

மத்திலும் ப₄விஷ்யத் புராணம், பா₄ர்க₃வ புராணம் முதலான மற்ற புராணங்களிலும் இவ்விஷயம் சொல்லப் பட்டுள்ளது. குடமுனிவரே! இக்காரணத்தால் க்ருதயுக₃ம் முதலான எல்லா யுக₃ங்களிலும இருந்த மனிதர்களும் இக்கலியுக₃த்தில் இந்த பா₄ரத தேசத்தில் ஏராளமாகப் பிறப் பார்கள். அவர்கள் அனைவரும் எனது ஶாஸ்த்ரங்களில் ஈடுபட்டவர்களாய், என்னையே ப்ராப்யப்ராபகங்களாகக் கொண்டவர்களாய், ப்ரபத்திது₄ர்மத்தில் ஊன்றியவர்களாய் என்னை அடைவார்கள் என்பது நிஶ்சயம்" என்று இவ் வண்ணமாகக் கருணைக் கடலாய், லோக நாத₂னை லக்ஷ்மீநாத₂ன் அக₃ஸ்த்யரிடம் கூறி அவருக்குக் கிடைத்தற் கரிய வரத்தைக்கொடுத்து அவரை உகப்பித்து அப்போதே அங்கேயே மறைந்தான்.

## ஆழ்வார்களின் அவதாரம்

33*-*40. அக₃ஸ்த்யர் தமது ஆஶ்ரமத்தை அடைந்து எம்பெருமான் கருணையைக்கண்டு மிக உகந்தவராய், தமது கடமையைச் செய்து முடித்தவராய், பெரிய தேஜஸ்ஸை

३५. लक्ष्मीशः पुण्डरीकाक्षः भक्ताधीनो दयार्णवः ।
लोकेऽवतारयामास दिव्यसूरीन् महौजसः ॥

३६. विष्वक्सेनादिकान्सर्वान् जगत्संरक्षणाय च ।
आज्ञापितास्ततस्तेन हरिणा नित्यसूरयः ॥

३७. वैकुण्ठाद्भुवमासाद्य नानावर्णेषु वैष्णवाः ।
सुपुण्ये द्राविडे देशे ह्यवतीर्य महौजसः ॥

३८. सर्वे वेदान्तसारार्थान् गूढान् द्राविडभाषया ।
चतुस्सहस्रगाथाभिः वितत्य पृथिवीतले ॥

३९. सर्वाधिकारं कृत्वाऽऽशु कृतकृत्या हरिं गताः ।
तन्मध्ये सुमहातेजाः शठकोपो महामुनिः ॥

---

யுடையவராய, எமபெருமானையே அனைத்துமாகக்கொண்டு வாழ்ந்தார். அதறகுப்பின் தடையற்ற ஸங்கல்பத்தை யுடையவனாய், ஜ்ஞானம் முதலான கு₃ணங்களால் நிறைந்தவனாய், லோகநாத₂னாய், தாமரைக்கண்ணனாய், அன்பர்களுக்கு அடிமைப்பட்டிருப்பவனாய், கருணைக் கடலான எம்பெருமான் பெரிய மக்தியுடைய விஷ்வக்ஸேனர் முதலான நித்யஸூரிகளை உலகைக்காக்கும் பொருட்டு இவ்வுலகில் அவதரிக்கச் செய்தான். அந்த எம்பெருமானாலே நியமிக்கப்பட்ட நிதயஸூரிகள் வைகுண்ட₂த்திலிருந்து பூ₄மிக்கு வந்து மிகவும் புண்யமான தமிழ் தே₃மத்தில் பேரொளியுடைய வைஷ்ணவர்களாகப் பல வர்ணங்களில் அவதரித்து, வேதா₃ந்தங்களின் ஸாரப் பொருள்களையும் ரஹஸ்யார்த்த₂ங்களையும் அனைவருமாகச் சேர்ந்து தமிழ பாஷையில் நாலாயிரதி₃வ்யப்ரப₃ந்த₄ங்களாக வெளியிட்டு, அதை அனைவர்க்கும் கற்கத்தக்கதாக்கி, செய்யவேண்டியதைச் செய்து முடித்தவர்களாய் விரைவில் எம்பெருமானை அடைந்தார்கள். அவர்களுக்கிடையே மிகப் பேரொளி

४०. प्रपन्नजनकूटस्थस्तेनेदं रक्षितं मतम् ।
नाथादिदेशिकाः केचिदवतीर्णास्ततो भुवि ॥

४१. तैरयं विष्णुसिद्धान्तः वेदान्तिन् ! परिपालितः ।
ततश्शेषावतारेण यतीन्द्रेण महात्मना ॥

४२. रामानुजार्यवर्येण जगतां गुरुणाऽनघ ! ।
एतद्वैष्णवसिद्धान्तं दिव्यमव्याहतं महत् ॥

४३. सेतुशीताद्रिपर्यन्तं भूम्यां सम्यक् प्रकाशितम् ।
युष्मत्प्रभृतिविद्वद्भिः विबुधैर्वैष्णवोत्तमैः ॥

४४. रामानुजार्यसिद्धान्तो लोके ख्यातिं गमिष्यति ।
अतोऽनुशासनाद्विष्णोः शठकोपादियोगिनाम् ॥

---

பெற்றவரான ஶட₂கோபர் என்னும் மாமுனிவர் ப்ரபன்ன ஜனங்களுக்கெல்லாம் தலைவராயிருந்தார். அவராலே இந்த மதம் காப்பாற்றப்பட்டது.

## ஆசார்யர்களின் அவதாரம்

40*-*44. அதற்குப்பின் இவ்வுலகில் நாத₃முனிகள் முதலான சில ஆசார்யர்கள் அவதரித்தார்கள். குற்றமற்ற வேதா₃ந்தியே! அவர்களால் இவ்வைஷ்ணவ ஸித்₃தா₄ந்தம் காப்பாற்றப்பட்டது. அதற்குப்பின் ஆதி₃ஶேஷனின் அவதாரமாய், மஹாத்மாவாய், யதிராஜராய். ஜக₃த்₃ஆசார்யரான ராமாநுஜாசார்யரால் சிறப்புற்றதாய், தடையற்றதாய், பெரியதான இவ்வைஷ்ணவ ஸித்₃தா₄ந்தம் ஸேதுவிலிருந்து இமயமலை வரையில் இவ்வுலகில் நன்கு பரப்பப்பட்டது. உங்களைப் போன்ற வைஷ்ணவோத்தமர்களான பேரறிவாளர்களால் இந்த ராமாநுஜாசார்ய ஸித்₃தா₄ந்தம் புகழடையப் போகிறது.

४५. द्राविडाम्नायपठनं कर्तव्यं वैष्णवेन हि।
चतुष्टयसहस्रस्य प्रबन्धस्य बुधोत्तम!॥
४६. पारायणं मुख्यतमं वैष्णवेनार्यसम्मतम्।
अशक्तस्य शृणुष्वात्र सुकरोपाय उच्यते॥
४७. सहस्रगीतेः पठनं कर्तव्यं यावदायुषम्।
मोक्षेच्छुना वैष्णवेन वेदान्तिन्नात्र संशयः॥
४८. ब्राह्मणाः क्षत्रिया वैश्याः स्त्रियश्शूद्रास्तथेतरे।
सर्वेऽधिकारिणस्तत्र विष्णुभक्तास्तु ते यदि॥
४९. व्यवहारः संस्कृतेन यथा वैदिककर्मसु।
स्मृत्यादिषु विनिर्णीतो ब्राह्मणस्य ध्रुवं यते॥

---

## தி₃வ்யப்ரப₃ந்த₄வைப₄வம்

44*-65. ஆகையாலே, எம்பெருமானுடைய ஆணையாலே ஶட₂கோபர் முதலான ஆழ்வார்களின் தமிழ் வேத₃ பாராயணம் வைஷ்ணவனால் செய்யத்தக்கதாகிறது. அறிவாளிகளில் சிறந்தவரே! நாலாயிரதி₃வ்யப்ரப₃ந்த₄த்தின் பாராயணம் வைஷ்ணவனுக்கு மிக முக்₂யமானதாகவும், பூர்வாசார்யர்களுக்கு மிகவும் உகந்ததாகவும் ஆகிறது. வேதா₃ந்தியே! நாலாயிர பாராயணம் செய்ய இயலாதவனுக்கு எளிய உபாயத்தைக் கூறுகிறேன், கேட்பீராக! அத்தகைய வைஷ்ணவன் மோக்ஷமடைய விரும்பினானாகில் திருவாய்மொழி ஆயிரத்தையும் ஆயுள் உள்ளவரை பாராயணம் செய்யவேண்டும். இதில் ஐயமில்லை. விஷ்ணு ப₄க்தர்களாயிருந்தார்களாகில ப்₃ராஹ்மணர், க்ஷத்திரியர், வைஶ்யர், பெண்கள், ஶூத்₃ரர்கள், மற்றவர்கள் ஆகிய அனைவருமே இப்பாராயணத்தில் தகுதியுடையவர்கள். வேதா₃ந்தியே! ப்₃ராஹ்மணனுக்கு வைதி₃க த₄ர்மங்கள்

५०. विष्ण्वर्चनादिकार्येषु वैष्णवस्य विशेषतः ।
व्यवहारस्तु कर्तव्यः दिव्यद्राविडभाषया ॥

५१. विष्ण्वर्चने तत्र तत्र वेदमन्त्रैस्सहादरात् ।
दिव्यद्राविडगाथाश्च पठितव्या हि वैष्णवैः ॥

५२. आदिमध्यावसानेषु विष्णुपूजामहोत्सवे ।
गाथास्तत्रानुसन्धेयास्तत्तत्कालोचिताः पराः ॥

५३. अस्मिन् श्रीवैष्णवमते यो विशेत्प्रयतो यते ।
स दिव्यां द्राविडीं भाषामभ्यसेत्प्रथमं ध्रुवम् ॥

५४. ततस्तापादिसंस्कारैः संस्कृतो गुरुणा यते ।
प्रबन्धमभ्यसेद्धीमान्दिव्यद्राविडरूपकम् ॥

---

செய்யும்போது வடமொழியில் மந்த்ரோச்சாரணம் செய்ய வேண்டும் என்று ஸ்ம்ருதி முதலானவைகளில் எப்படி உறுதியாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறதோ, அப்படியே எம்பெருமானுடைய திருவாராத$_4$னம் முதலான கார்யங்களில் குறிப்பாக வைஷ்ணவன் தி$_3$வ்யமான (அருளிச்செயல் கலந்த) த்$_3$ராவிட$_3$ பா$_4$ஷையிலேயே பேச்சு வழக்குகளை வைத்துக்கொள்ளவேண்டும். எம்பெருமான் திருவாராத$_4$னத்தின்போது ஆங்காங்கு வேத$_3$மந்த்ரங்களைச் சொல்லுவதோடுகூட அருளிச்செயல்களும் வைஷ்ணவர்களால் அன்போடு பாராயணம் செய்யப்படவேண்டும் எம்பெருமானுக்குத் திருவாராத$_4$னமான மஹோத்ஸவங்களின்போது முதலிலும், நடுவிலும், கடைசியிலும் அந்தந்த ஸமயத்துக்குத் தக்க சிறந்த அருளிச்செயல் பாட்டுக்கள் அனுஸந்தி$_4$க்கத்தக்கவை, யதியே! அடக்கத்துடன் இந்த ஸ்ரீவைஷ்ணவ மதத்தில் இடம்பெற விரும்புகிறவன் முதன் முதலில் தி$_3$வ்யமான தமிழ்மொழியை உறுதியாகக் கற்க வேண்டும். அதற்குப் பிறகு ஓர் ஆசாரியன் மூலமாக, தாபம் முதலான பஞ்சஸம்ஸ்காரங்களையும் பெறவேண்டும்.

५५. पूर्वं नित्यानुसन्धानं षष्टिगाथासमन्वितम् ।
प्राबोधकीस्तवं पश्चाद्दशगाथाविराजितम् ॥

५६. गोदास्तुतिं ततो विद्वांस्त्रिंशद्गाथाविराजितम् ।
ततः प्रपन्नगायत्रीं यतीन्द्रविषयां शुभाम् ॥

५७. सहस्रगीतिं प्रयतो ह्यभ्यसेद्गुरुसन्निधौ ।
सहस्रगीतिसारं वा यत्नेन महताभ्यसेत् ॥

५८. तेषामभ्यसनाद्विप्र ! वैष्णवः संभविष्यति ।
ततः परं तेन साकं भोजनं प्रतिभोजनम् ॥

५९. युज्यते वैष्णवस्यार्य! कर्तुं नास्त्यत्र संशयः ।
बहुनोक्तेन किं विद्वन् ! संक्षेपादिदमुच्यते ॥

---

தமிழ் வேத₃மான தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களையும் கற்கவேண்டும். திருப்பல்லாண்டு, நீராட்டம், பூச்சூட்டல், காப்பிடல், சென்னி யோங்கு ஆகிய பெரியாழ்வார் அருளிய ஐம்பது பாட்டுக் களும், நம்மாழ்வார் அருளிய 'ஆழியெழ' என்னும் வெற்றிதரும் பத்துப்பாட்டும் ஆக அறுபது பாட்டுக்கள் அடங்கிய நித்யாநுஸந்த₄ானம் முதலில் அனுஸந்தி₄க்கப் படவேண்டும். அதற்குப்பின் திருப்பள்ளியெழுச்சி பத்துப் பாட்டுக்கள், முப்பது பாட்டுக்கள்கொண்ட திருப்பாவை, இராமாநுசர் விஷயமான மங்க₃ளமான "ப்ரபன்னகா₃யத்ரி" என்னும் நூற்றந்தாதி ஆகியவை அனுஸந்தி₄க்கத் தக்கவை. திருவாய்மொழி ஆயிரத்தையும் ஓர் ஆசார்ய னிடம் புலனடக்கத்துடன் கற்கவேண்டும். மிக முயன்று திருவாய்மொழி ஆயிரத்தின் ஸாரப்பொருளையும் கற்க வேண்டும். அந்தணரே ! இவற்றைக் கற்பதாலேயே ஒருவன் வைஷ்ணவனாவான். அதற்குப் பிறகே வைஷ்ண வன் அவனோடு சேர்ந்து உணவளிப்பதையும் உணவு கொள்வதையும் செய்யலாம். இதில் ஐயமில்லை, அறிவாளி யான நஞ்சீயரே ! பல சொல்லியென் ? சுருக்கமாகக் கூறு

६०. दिव्यद्राविडवेदान्तश्रवणेन विना यते!।
कलौ युगे मनुष्याणां सम्यग्ज्ञानं न जायते ॥

६१. अतो द्राविडवेदान्तश्रवणं मोक्षकामिनाम्।
सर्वथावश्यकतमं सत्यं सत्यं मयोदितम् ॥

६२. वेदान्तिन्नयमेवार्थः पूर्वाचार्यैः प्रकाशितः।
पराङ्कुशादिमुनिभिर्मन्नाथेन च विष्णुना ॥

६३. त्वया चैव भविष्यद्भिर्गुरुभिः प्रचरिष्यति।
एतेनैवाखिला लोके मनुजा वीतकल्मषाः ॥

६४. गमिष्यन्त्याशु वेदान्तिंस्तद्विष्णोः परमं पदम्।
एतत्ते सर्वमाख्यातं यन्मां त्वं परिपृच्छसि ॥

६५. मत्तो माधवदासाद्य किमन्यच्छ्रोतुमिच्छसि ॥

६६. आख्यानमेतच्छुभदं शुभार्थं भट्टार्यवर्येण पुराणसिद्धम्।
श्रुत्वाखिलं माधवदासनामा प्रकृष्टतोषं स जगाम धीरः ॥

---

கிறேன். தி3வ்யப்ரப3ந்த4ங்களைக் கற்காமல் கலியுக3த்தில் மனிதர்களுக்கு நல்லறிவு ஏற்படாது. ஆகையால் தி3வ்ய ப்ரப3ந்த4ங்களைக் கற்பது மோக்ஷத்தை விரும்புமவர்களுக்கு மிகவும் அவசியமானது. இதைப் பலகால் ஸத்யம்செய்து கூறுகிறேன். வேதா3ந்தியே! இவ்வர்த்த2மே பூர்வாசார்யர்களாலும் நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களாலும் நம பெருமாளாகிற எம்பெருமானாலும் சொல்லப்பட்டது. இவ்வர்த்த2மே உம்மைப்போன்ற வரப்போகிற ஆசார்யர்களாலும் பரப்பப்படப் போகிறது. வேதா3ந்தியே! இந்த அருளிச்செயலாலேயே எல்லா மனிதர்களும் குற்றம் நீங்கி விஷ்ணுவின் பரமபத3த்தை விரைவில் அடைவார்கள். நீர் கேட்ட அனைத்தையும் நான் விளக்கிவிட்டேன். மாத4வதா3ஸரே! என்னிடமிருந்து நீர் இன்று மற்றும் எதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறீர்?

६७. निवृत्तसंदिग्धपरः स तस्मान्मत्वा वचस्तत्परमं हि सत्यम् ।
भट्टारकं तं प्रणिपत्य मूर्ध्ना श्रोतुं मनः सच्चरितं तु चक्रे ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे द्राविडाम्नायवैभवकथनं नाम त्रिसप्ततितमोऽध्यायः ॥

॥ चतुःसप्ततितमोऽध्यायः ॥

१. ततो महान्वैष्णवधर्मनिष्ठो
भट्टार्यमार्यं प्रणिपत्य भूयः ।
अस्मद्यतिर्दिव्यकथां सुपुण्यां
पप्रच्छ मोक्षैकफलप्रसूतिम् ॥

---

## நஞ்சீயர் திருவுள்ளம்

66-67. மங்க₃ளத்தை அளிப்பதாய், மங்க₃ளமான அர்த்த₂த்தை உடையதாய், புராணஸித்₃த₄மானதான இந்த வரலாறு முழுவதையும் ஸ்ரீபராஶரப₄ட்டரிடமிருந்து கேட்ட அறிவாளியான மாத₄வதா₃ஸர் மிகவும் உகப்படைந்தார். அதனால் எல்லா ஐயங்களும் நீங்கப்பெற்றவராய், அவருடைய வார்த்தையை மேலான உண்மையாக உறுதிகொண்டு அந்த ப₄ட்டரைத் தலையாலே வணங்கி ஆழ்வார்களின் சரித்ரத்தைக் கேட்கத் திருவுள்ளம் கொண்டார்.

ப்ரபன்னாம்ருதத்தில் ப₄ட்டார்ய வேதா₃ந்தி ஸம்வாத₃த்தில் தி₃வ்யப்ரப₃ந்த₄ வைப₄வத்தைக் கூறும் எழுபத்துமூன்றாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## எழுபத்துநாலாவது அத்தியாயம்
## ஆழ்வார் ஆசார்யர்களின் வர்ணனம்
## நஞ்சீயரின் கேள்வி

1-*7. அதற்குப்பிறகு பெரியவரும் வைஷ்ணவ த₄ர்மத்தில் ஊன்றியவருமான நஞ்சீயர் மஹானான ப₄ட்டரை

२. भट्टार्य ! देशिकवरोऽसि समस्तशास्त्र-
वक्तासि वारिजविलोचनसंभवोऽसि ।
तस्मात्त्वयैव विदिताः सकलप्रबन्धाः
शिष्याय मे वद परं सकलं चरित्रम् ॥

३. कस्मिन्कालेऽवतीर्णास्ते वैकुण्ठान्नित्यसूरयः ।
श्रीहरेराज्ञया स्वामिन् ! कीदृशाः पृथिवीतले ॥

४. तेषां के गुरवः स्वामिन् ! शिष्याः के दिव्ययोगिनाम् ।
स्थितास्ते कति वर्षाणि भूतले दिव्यसूरयः ॥

५. के के प्रबन्धास्तैः प्रोक्ताः किंस्वामिविषया गुरो ! ।
के दिव्याः सूरयः स्वामिंस्तेषां सङ्ख्या कियत्यभूत् ॥

---

மறுபடியும் வணங்கி மோக்ஷமொன்றையே கொடுக்கக் கூடியதாய், மிகப்புண்யமானதான ஆழ்வார் ஆசார்யர்களின் மிகச்சிறந்த சரித்ரத்தைப் பின்வருமாறு கேட்டார்:— "ப₄ட்டார்யரே! நீர் ஆசார்யர்களில் தலைவராயிருக்கிறீர்; எல்லா ஶாஸ்த்ரங்களையும் உபதே₃சிக்கவல்லவராகவும், தாமரைக்கண்ணனான எம்பெருமானின் குமாரராகவும் இருக்கிறீர். ஆகையால் நீர் ஒருவரே அறிந்த எல்லாப் பிரப₃ந்த₄ங்களையும ஆழ்வார் ஆசார்யர்கள் அனைவரின் சரித்ரங்களையும் ஶிஷ்யனை எனக்குக் கூறுவீராக. ஸ்வாமிந்! வைகுண்ட₂த்திலிருந்து அந்த நித்யஸூரிகள் எந்தககாலத்தில் எம்பெருமானுடைய ஆணையாலே இவ்வுலகில் அவதரித்தார்கள்? அவர்கள் எத்தகையவர்கள்? அவர்களுக்கு ஆசார்யர்கள யார்? தி₃வ்யயோகி₃களான அவர்களுககு ஶிஷ்யர்கள் யார்? அந்த ஆழ்வார்கள் இவ்வுலகில் எவ்வளவு வருஷங்கள் வாழ்ந்தனர். ஆசார்யரே! அவர்களால் எந்த எந்த ப்ரப₃ந்த₄ங்கள் எந்த ஸ்வாமி விஷயமாக அருளிச்செய்யப்பட்டன? கருணாநிதி₄யான பேரறிவாளரே! அந்த ஆழ்வார்கள் எவர்? அவர்களு

६. पूर्वाचार्यास्तु के लोके तेषां नामानि कानि च।
कृतानि तानि सर्वाणि चरित्राण्यद्भुतानि च॥
७. विशदं ब्रूहि मे विद्वन्! भक्ताय करुणानिधे!।
इति पृष्टस्तदा तेन शिष्येण गुरुपुङ्गवः॥
८. तद्दिव्यसूरिचरितं वक्तुकामः समाहितः।
तान् दिव्यसूरीन् ध्यात्वार्यश्चकार गुरुवन्दनम्॥
९. कासारभूतमहदाह्वयभक्तिसारान्
सेवे शठारिकुलशेखरविष्णुचित्तान्।
भक्तांघ्रिरेणुमुनिवाहचतुःकवीन्द्रान्
माधुर्यगानतुलसीवनजायतीन्द्रान्॥

---

டைய எண்ணிக்கை எவ்வளவு? இவ்வுலகில் பூர்வாசார்யர்கள் என்று சொல்லப்படுபவர்கள் எவர்? அவர்களுடைய பெயர்கள் யாவை? அவர்களுடைய க்₃ரந்த₂ங்களையும் அத்₃பு₄தமான சரித்ரங்களையும் ப₄க்தனை எனக்குத் தெளிவாகக் கூறுவீராக".

## ஆழ்வார் ஆசார்யர்களின் சிறப்பு

7*-14 இவ்வண்ணமாக அந்த ஶிஷ்யரால் கேட்கப்பட்ட ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரான ப₄ட்டர் அந்த ஆழ்வார்களின் சரித்ரத்தைச் சொல்ல விரும்பியவராய், ஶாந்தியுடன் நலலோர்களான அந்த ஆழ்வார்களைத் தியானித்து, அவர்களை வணங்கினார். "1. பொய்கையார், 2. பூதத்தார், 3. பேயார், 4. திருமழிசையாழ்வார், 5. நமமாழ்வார், 6. குலஶேக₂ராழ்வார், 7. பெரியாழ்வார், 8 தொண்டரடிப்பொடிகள், 9. முனிவாஹனரான திருப்பாணாழ்வார், 10. நாலுகவிப் பெருமாளான திருமங்கையாழ்வார், 11. மது₄ரகவி ஆழ்வார் 12. துளஸீவனத்தில் அவதரித்த ஆண்டாள் 13 யதிராஜர் ஆகியவர்களை வணங்குகிறேன" என்று ஆசார்யவந்தனம் செய்து ப₄ட்டர் பின்வருமாறு சொன்னார்:— "நான் உமக்கு ஆழ்வார்களின் ப்ரப₄ாவததைக் கூறுகிறேன். அவர்களுடைய

१०. इतीव वन्दनं कृत्वा भट्टाचार्यस्तदाब्रवीत् ।
अहं ते कथयिष्यामि प्रभावं दिव्ययोगिनाम् ॥
११. एषां प्रभावश्रवणात्कृतकृत्यो भविष्यसि ।
दशावतारश्रवणे यथा तुष्यति केशवः ॥
ततोधिकतरां प्रीतिं भगवानेष्यति ध्रुवम् ॥
१२. तथा दशावतारास्ते प्रसिद्धा हि जगत्त्रये ।
धर्मसंस्थापनार्थाय तथा ते दिव्ययोगिनाम् ॥
१३. नाथार्यः पङ्कजाक्षश्च राममिश्रश्च यामुनः ।
गोष्ठीपूर्णो महापूर्णो मालाधरगुरुस्तथा ॥
१४. भूरिश्रीशैलपूर्णश्च वररङ्गस्तथैव च ।
काञ्चीपूर्णादयश्चैते पूर्वाचार्याः प्रकीर्तिताः ॥
रामानुजादयः पूर्वे ते पूर्वगुरवः स्फुटम् ॥

---

ப்ரபாவத்தைக் கேட்டவன் செய்ய வேண்டியதைச் செய்தவனாகிறான். எம்பெருமான் தனது பத்து அவதாரங்களைக் கேட்பதால எவ்வளவு உகக்கிறானோ அதைக் காட்டிலும் அதிகமான உகப்பை இவ்வாழ்வார்களின் சரித்ரத்தைக் கேட்பதால் அடைகிறான் என்பது உறுதி. இந்தப் பத்து அவதாரங்கள் உலகில் தர்மத்தை நிலை நாட்ட ஏற்பட்டவை என்று மூவுலகிலும் எப்படிப் புகழ்பெற்றவையோ அப்படியே இவ்வாழ்வார்களின் அவதாரங்களும் புகழ்பெற்றவை. 1. நாதமுனி 2. புண்டரீகாக்ஷராகிற உய்யக்கொண்டார் 3. ராமமிச்ரராகிற மணக்கால் நம்பி 4. யாமுனாசார்யராகிய ஆளவந்தார் 5. திருக்கோட்டியூர் நம்பி 6. பெரியநம்பி 7. திருமாலையாண்டான 8. பெரிய திருமலை நம்பி 9. திருவரங்கப்பெருமாள் அரையர் *10. திருக்கச்சிநம்பி முதலானவர்கள் பூர்வாசார்யர்கள் என்று கூறபபடுகிறார்கள். ராமானுஜர், கூரத்தாழ்வான், எமபார் முதலானவர்கள் நாமறிந்த பூர்வாசார்யர்கள். முற்கூறியவர்கள் அவர்களுக்கும் பூர்வாசார்யர்களாகப் புகழ் பெற்றவர்கள்.

१५. कासारभूतमहदाह्वयभक्तिसाराः
श्रीमच्छठारिकुलशेखरविष्णुचित्ताः।
भक्ताङ्घ्रिरेणुमुनिवाहचतुष्कवीन्द्राः
ते दिव्यसूरय इति प्रथिता दशोर्व्याम् ॥

१६. गोदायतीन्द्रमिश्राभ्यां द्वादशैतान्विदुर्बुधाः।
विसृज्य गोदां मधुरकविना सह सत्तम! ॥

१७. केचित् द्वादशसंख्यातान् वदन्ति विबुधोत्तमाः।
आराध्यभूता चैतेषां गोदा देवी हरिप्रिया ॥

१८. लक्ष्मीपुरुषकारेण जगत्संरक्षको हरिः।
जगत्कारणकर्तृत्वं श्रिय एव हरेर्नहि ॥

---

## ஆழ்வார்களின் வர்ணனம்

15-*17. 1. பொய்கையார் 2. பூதத்தார் 3. பேயார் 4. திருமழிசையாழ்வார் (புகழ்மழிசைஐயன்) 5. நம்மாழ்வார் (அருள்மாறன்) 6 குலசேகராழ்வார் (சேரலர்கோன்) 7. பெரியாழ்வார் (துய்யபட்டநாதன்) 8. தொண்டரடிப்பொடியாழ்வார் (அன்பர்தாள்தூளி) 9. திருப்பாணாழ்வார் (நற்பாணன்) 10. திருமங்கையாழ்வார் (நற்கலியன்) ஆகியவர்கள் அவதரித்த வரிசைப்படி பத்து ஆழ்வார்களாக இவ்வுலகில் புகழ்பெற்றிருக்கிறார்கள். ஆண்டாளையும் யதிராஜரையும் சேர்த்து அறிவாளிகள் இவர்களைப் பன்னிருவராகக் கூறுவதுமுண்டு. ஆண்டாளைவிட்டு மதுரகவியாழ்வாரைச் சேர்த்து, சில பேரறிவாளர்கள் இவர்களைப் பன்னிருவராகக் கூறுவதுமுண்டு.

## ஆண்டாள் வைபவம்

17*-28. எம்பெருமானுக்கு இனிய பத்னியான ஆண்டாள் இந்தப் பன்னிருவருக்கும் ஆராதிக்கத்தக்கவளாகிறாள்.

१९. लक्ष्म्यधीनो जगत्सृष्टिं करोत्यस्मद्यते! ततः ।
तां विना भगवान् सृष्टिं न स्वतन्त्रः करोति हि ॥

२०. अतो हि जगतः कर्ता लक्ष्मीर्विष्णवनपायिनी ।
अस्येशाना हि जगतो विष्णुपत्नी सनातनी ॥

२१. जगत्कारणकर्तृत्वं श्रुतिसिद्धं श्रियस्ततः ।
भट्टार्यस्य वचः श्रुत्वा वेदान्त्येनमथाब्रवीत् ॥

२२. जगत्कारणकर्तृत्वं श्रियश्चोक्तं श्रुतेर्बलात् ।
कासारयोगिप्रमुखसूरिभ्यो यतिपुङ्गवात् ॥

२३. श्रीविष्णुचित्तदुहितुर्गोदाया देशिकोत्तम! ।
आधिक्यं सुमहत्प्राप्तं योषितः केन हेतुना ॥

---

லக்ஷ்மீதேவியின் புருஷகாரத்தை எதிர்பார்த்தே எம்பெருமான் இவ்வுலகை ரக்ஷிக்கிருன். ஜக₃த்காரணனுக எம பெருமானை ஆக்குகிறவள் லக்ஷ்மீதேவியேயாவாள். எம் பெருமான் தானே ஜக₃த்காரணனுக ஆவதில்லை. நஞ் ஜீயரே! இக்காரணத்தால் லக்ஷ்மீதே₃விக்கு வசப்பட்டே எம்பெருமான் உலகைப் படைக்கிருன். அவளைவிட்டு எம்பெருமான் ஸ்வதந்த்ரமாக உலகைப் படைப்பதிலலை. ஆகையால் விஷ்ணுவைவிட்டுப் பிரியாதவளான லக்ஷ்மீ தே₃வியும் ஜக₃த்காரணமாக ஆகிருள். அநாதி₃தத்வமான இவள் "விஷ்ணுவுக்குப் பத்னியாய் இவ்வுலகுக்கு ஈஶ்வரியாயிருப்பவள்" என்று வேத₃த்தில் முழங்கப்படுகிருள். ஆகையால் பெரியபிராட்டியாரே எமபெருமானை ஜக₃த் காரணனுக ஆக்குகிருள் என்பது வேத₃த்திலிருந்தே விளங்குகிறது" என்று (ப₄ட்டர் கூறிஞர்.) ப₄ட்டருடைய இந்த வார்த்தையைக் கேட்டு வேதா₃ந்தி நஞ்சீயர் அவரைப் பின்வருமாறு விஞவிஞர்:—"ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரே! எம்பெருமானை ஜக₃த்காரணனுக ஆக்குவது பிராட்டியே என்று தேவரீரால் வேத₃த்தை ஆத₄ாரமாகக் காட்டிக்

२४. अस्मिन्नर्थे बुधश्रेष्ठ! संशयो वर्तते महान्।
संशयच्छेदकरणे त्वदृते विबुधः परः॥

२५. न दृश्यते ततो मह्यं ब्रूहि निःसंशयं हि तत्।
अङ्गीकृत्य वचस्तस्य कृपया भट्टदेशिकः॥

२६. व्याजहार शुभं वाक्यं शिष्यं वेदान्तिनं प्रति।
साक्षाल्लक्ष्मीः समुत्पन्ना गोदारूपेण भूतले॥

२७. नित्यसूरीन्समादाय जगत्संरक्षणाय तान्।
गोदाशठारियोगीन्द्राः श्रीसैन्यकफणीश्वराः॥

२८. लोकानुग्रहकर्तारस्ततस्ते प्रथितास्त्रयः।
तयोश्च तेषां सर्वेषां गोदादेवी जगत्प्रसूः॥
साक्षाल्लक्ष्मीस्वरूपेयमधिका नात्र संशयः॥

---

கூறப்பட்டது. பொய்கையாழ்வார் முதலான ஆழ்வார்களைக் காட்டிலும், யதிராஜரைக் காட்டிலும், பெரியாழ்வார் பெற்றெடுத்த ஆண்டாளான ஒரு பெண்ணுக்கு இவ்வளவு பெரிய பெருமை எக்காரணத்தால் ஏற்பட்டது? அறிவாளிகள் தலைவரே! இவ்விஷயத்தில் எனக்குப் பெரிய ஐயமுள்ளது. இந்த ஐயத்தைப் போக்குவதற்கு உம்மைத் தவிர எந்த அறிவாளியும் என்னால் காணப்படவில்லை. ஆகையால் எனக்கு இவ்விஷயத்தில் ஐயமேற்படாதபடி விடை கூறுவீராக" என்று. அவருடைய கேள்வியை ஏற்றுக்கொண்டு ஸ்ரீபராஶரப₄ட்டர் ஶிஷ்யரான வேதா₃ந்தியைக் குறித்துப் பின்வரும் மங்க₃ளமான வாகயத்தைக் கூறினார்:—"இவ்வுலகை ரக்ஷிப்பதற்காக நித்யஸூரிகளைக் கூட்டிக்கொண்டு பெரியபிராட்டியாரே இங்கு ஆண்டாளாக அவதரித்தாள், அதனாலேயே ஸ்ரீதே₃வியும், ஸேனை முதலியாரும். திருவனந்தாழ்வானுமாகிய மூவரும் உலகுக்கு அருள்புரிவதற்காக முறையே ஆண்டாளாகவும், நம்மாழ்வாராகவும், யதிராஜராகவும் அவதரித்தனர் என்று

१९. लक्ष्म्यधीनो जगत्सृष्टिं करोत्यस्मद्यते! ततः ।
तां विना भगवान् सृष्टिं न स्वतन्त्रः करोति हि ॥

२०. अतो हि जगतः कर्ता लक्ष्मीर्विष्ण्वनपायिनी ।
अस्येशाना हि जगतो विष्णुपत्नी सनातनी ॥

२१. जगत्कारणकर्तृत्वं श्रुतिसिद्धं श्रियस्ततः ।
भट्टार्यस्य वचः श्रुत्वा वेदान्त्येनमथाब्रवीत् ॥

२२. जगत्कारणकर्तृत्वं श्रियश्चोक्तं श्रुतेर्बलात् ।
कासारयोगिप्रमुखसूरिभ्यो यतिपुङ्गवात् ॥

२३. श्रीविष्णुचित्तदुहितुर्गोदाया देशिकोत्तम! ।
आधिक्यं सुमहत्प्राप्तं योषितः केन हेतुना ॥

---

லக்ஷ்மீதேவியின் புருஷகாரத்தை எதிர்பார்த்தே எம்பெருமான் இவ்வுலகை ரக்ஷிக்கிறான். ஜக$_3$த்காரணனாக எமபெருமானை ஆக்குகிறவள் லக்ஷ்மீதேவியேயாவாள். எம்பெருமான் தானே ஜக$_3$த்காரணனாக ஆவதில்லை. நஞ்ஜீயரே! இக்காரணத்தால் லக்ஷ்மீதே$_3$விக்கு வசப்பட்டே எம்பெருமான் உலகைப் படைக்கிறான். அவளைவிட்டு எம்பெருமான் ஸ்வதந்த்ரமாக உலகைப் படைப்பதில்லை. ஆகையால் விஷ்ணுவைவிட்டுப் பிரியாதவளான லக்ஷ்மீதே$_3$வியும் ஜக$_3$த்காரணமாக ஆகிறாள். அநாதி$_3$தத்வமான இவள் "விஷ்ணுவுக்குப் பத்னியாய் இவ்வுலகுக்கு ஈஶ்வரியாயிருப்பவள்" என்று வேத$_3$த்தில் முழங்கப்படுகிறாள். ஆகையால் பெரியபிராட்டியாரே எமபெருமானை ஜக$_3$த்காரணனாக ஆக்குகிறாள் என்பது வேத$_3$த்திலிருந்தே விளங்குகிறது" என்று (ப$_4$ட்டர் கூறினார்.) ப$_4$ட்டருடைய இந்த வார்த்தையைக் கேட்டு வேதா$_3$ந்தி நஞ்சீயர் அவரைப் பின்வருமாறு வினவினார்:—"ஆசார்ய ஶ்ரேஷ்ட$_2$ரே! எம்பெருமானை ஜக$_3$த்காரணனாக ஆக்குவது பிராட்டியே என்று தேவரீரால் வேத$_3$த்தை ஆதா$_4$ரமாகக் காட்டிக்

३. अवतीर्णा कथं भूम्यां यतः सा हेयसंपदि ।
तत्सर्वं विशदं ब्रूहि कृपा यद्यस्ति ते मयि ॥

४. अथाङ्गीकृत्य भट्टार्यस्तद्वचः परमादरात् ।
हेतुं गोदावतारस्य तत्रान्येषां ततोऽब्रवीत् ॥

५. सर्वेषामवतारस्य लोकरक्षा प्रयोजनम् ।
गोदाया यतिराजस्य शठकोपादियोगिनाम् ॥

६. अत्र गोदाहरन्तीममितिहासं पुरातनम् ।
शृणु वक्ष्यामि तत्सर्वं वृद्धपाद्मे च भार्गवे ॥

७. आदौ वैकुण्ठलोकस्य महिमा प्रतिपाद्यते ।
श्रुतिस्मृतिपुराणादिप्रसिद्धो भवतो मया ॥

---

"என்றும் எம்பெருமானை விட்டுப்பிரியாத பெரியபிராட்டியார் தனது நாயகனையும் அப்ராக்ருதமான வைகுண்ட₂த்தையும், மேலான ப்₃ரஹ்மாநுப₄வத்தையும் விட்டு, தாழ்ந்த விபூ₄தியான இவ்வுலகில் எப்படி எதற்காக அவதரித்தாள் என்பதனைத்தையும் என்னிடம் கருணை உண்டாகில தெளிவாக அருளிச்செய்யவேண்டும்" என்று.

## பட்டரின் பதில் தொடக்கம்.

4-7. அதற்குப்பின் ப₄ட்டர் அந்த நஞ்சீயரின் வார்த்தையை மிகக ஆர்வத்துடன் ஏற்றுக்கொண்டு, ஆண்டாளின் அவதாரத்துக்குப் மற்ற ஆழ்வார்களின் அவதாரத்துக்கும் காரணத்தைக் கூறினார். ஆண்டாள், யதிராஜர், நம்மாழ்வார் முதலான ஆழ்வார்கள் ஆகிய அனைவரது அவதாரத்துக்குமே லோகரக்ஷணமே பயனாகும். வ்ருத்₃த₄ பாத்₃மபுராணத்திலும், ப₄ார்கவ₃புராணத்திலும் இந்தப் பழமையான சரித்திரம் உள்ளதாகக் கூறுகிறார்கள். நான் அது அனைத்தையும் உமக்குச் சொல்லுகிறேன். கேட்பீராக. முதலில் ஸ்ருதி, ஸ்ம்ருதி, புராணங்கள் முத

८. श्रुत्यां स्मृतौ पुराणे च पूर्वाचार्योक्तसत्कृतौ ।
तेषु द्राविडवेदेषु योऽर्थः सम्यक् समाहितः ॥

९. तस्यैककण्ठ्यमेवेति दृढं हृदि विभावय ।
पादोस्य विश्वा भूतानि त्रिपादस्यामृतं दिवि ॥

१०. तद्विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः ।
अक्षरं परमं व्योम तस्याध्यक्षः परः पुमान् ॥

११. वैकुण्ठे तु परे लोके श्रिया सार्धं जगत्पतिः ।
आस्ते विष्णुरचिन्त्यात्मा भक्तैर्भागवतैः सह ॥

१२. वैकुण्ठे तु परे लोके श्रीसहायो जनार्दनः ।
उभाभ्यां भूमिनीलाभ्यां सेवितः परमेश्वरः ॥

---

லானவற்றில் ப்ரஸித்3தி4பெற்ற வைகுண்ட2லோகத்தின் பெருமை உமக்கு என்னால் விளக்கப்படுகிறது.

## வைகுண்ட2விஷயத்தில் ப்ரமாணங்கள்.

8-24. வேத3ங்களிலும், ஸ்ம்ருதிகளிலும், புராணங்களிலும், பூர்வாசார்யர்கள் அருளிச்செய்த நல்ல நூல்களிலும், த்3ராவிட3 வேத3ங்களிலும் சொல்லப்பட்ட அர்த்த2ம் ஒருபடிப்பட்டதே என்று நெஞ்சில் உறுதிகொள்வீராக. "இங்குள்ள எல்லா ஜீவராசிகளும் இப்பரமாத்மாவின் செல்வத்தில் கால்பகுதியேயாகும். இவனுடைய அழியாத செல்வமான முக்கால்பகுதி பரமபத3த்தில் உள்ளது." "விஷ்ணுவினுடைய அந்தப் பரமபத3த்தை நித்யஸூரிகள் எப்போதும் காண்கிறார்கள்" (என்று வேத3ங்களிலும்) "பரமாகாஶம் அழியாதது. அதன் தலைவன் பரமபுருஷன்" "வைகுண்ட2மாகிற மேலான உலகத்தில் லோகநாத2னாய், நினைத்தற்கரியவனான விஷ்ணு ப4க்தர்களோடும் பா4க3வதர்களோடும் ஸ்ரீதே3வியோடுங்கூட எழுந்தருளியிருக்கிறான்." "வைகுண்ட2மாகிற மேலான உலகத்தில் பரமேஶ்வர

१३. अत्यर्कानलदीप्तं तत् स्थानं विष्णोर्महात्मनः।
स्वयैव प्रभया राजन् दुष्प्रेक्ष्यं देवदानवैः॥

१४. आक्रीडा विविधा राजन् पद्मिन्यश्चामलोदकाः।
एते वै निरयास्तात! स्थानस्य परमात्मनः॥

१५. कालं स पचते यत्र न कालस्तत्र वै प्रभुः।
अत्रैव कालो लीलायाः परिणामादिहेतुकः॥

१६. कलामुहूर्तादिमयश्च कालो न यद्विभूतेः परिणामहेतुः।
अत्रैव कालः परिणामहेतुः कालः स नित्यः परमे पदे हि।

१७. अण्डकोशात्सावरणादमुष्मात्परतः प्रभुः।
स्थितोऽसौ परमे व्योम्नि ह्यप्राकृतशरीरवान्॥

---

ஞன ஜநார்த்த₃னன் ஸ்ரீதே₃வியோடுகூடியவனாய் பூ₄மி நீளா தே₃விகள் இருவரால் ஸேவிக்கப்பெற்றவனாய் எழுந்தருளியிருக்கிறான்.'' "அந்த மஹாத்மாவான விஷ்ணுவினுடைய ஸ்த₂ானம் ஸூர்யன் அக்₃னி முதலான சோதிகளின் ஒளியை விஞ்சிப் பிரகாசிப்பது. அது தன் ஒளியினாலேயே தே₃வர்களாலும் அஸுரர்களாலும் காணவொண்ணாததாய் விளங்குகிறது. இவ்வுலகத்திலுள்ள பல வகைப்பட்ட விளையாடுமிடங்களும், தெளிந்த நீர்கொண்ட தாமரைத்தடாகங்களுமாகிய இவை பரமாத்மாவின் ஸ்த₂ானத்துக்கு ஒப்பிடும்போது நரகங்களாகின்றன'' 'அந்தப் பரமாத்மா எங்கிருந்துகொண்டு காலத்தை நியமிக்கிறானோ அந்தப் பரமபத₃த்தில காலம் ஆட்சிபுரியமாட்டாது, இந்த லீலாவிபூ₄தியிலேயே காலம் பரிணாமம் முதலானவற்றைச் செய்கிறது.'' "கலை, முஹூர்த்தம் முதலான பிரிவுகளையுடைய காலம் எம்பெருமானுடைய நித்யவிபூ₄திக்குப் பரிணாமத்தை விளைக்கமாட்டாது. இந்த லீலாவிபூ₄தியிலேயே காலம் பரிணாமத்தை விளைக்கும். பரமபத₃த்தில் காலம் நித்யமாய் (எந்த வேறுபாட்டையும் விளைக்கமுடி

१८. यत्तत्पुराणमाकाशं सर्वस्मात्परमं ध्रुवम् ।
यत्पदं प्राप्य तत्त्वज्ञाः मुच्यन्ते सर्वकिल्बिषैः ॥
१९. अण्डेभ्यः परतो नित्यं त्रिपादे यद्विराजते ।
इतरेण तु पादेन प्राकृतं राजते यते ! ॥
२०. यदण्डमण्डान्तरगो इत्यादिर्नित्यसूरिणाम् ।
कालातीतगतिस्तस्य विष्णोर्भगवतः परा ॥
महाविभूतिर्ब्रह्मादिदेवानामप्यगोचरा ॥
२१. अपरिच्छेद्यरूपेयं तेषां परमयोगिनाम् ।
वेदान्तवेद्यं यद्गूढं सत्यं वाचामगोचरम् ॥

---

யாததாய்) இருக்கிறதன்றோ" ஆவரணங்களோடு கூடிய ப்₃ரஹ்மாண்ட₃கோஶமாகிய இதற்குமேலே இந்த ஸர்வேஶ்வரன் அப்ராக்ருத ஶரீரத்தையுமுடையவனாய், பரமபத₃த்தில் எழுந்தருளியிருக்கிறானன்றோ" "ஆதியில்லாமையாலே மிகப் பழையதாய், அனைத்திலும் மேற்பட்ட பரமாகாஶம் எனப்படுவதாய், நிலையாயிருப்பதான எம்பெருமானுடைய பரமபத₃த்தையடைந்து, தத்வஜ்ஞானிகள் எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள்." 'இந்த அண்ட₃ங்களுக்குமேலே இதைக்காட்டிலும் மும்மடங்கு பெரிய த்ரிபாத்₃விபூ₄தியில் பரம்பொருள் ப்ரகாஶிக்கின்றது. ப்ராக்ருதமான இந்த அண்ட₃ங்களாகிற கால் பகுதி ப்ரக்ருதியிலிருந்து தோன்றியதாய் விளங்குகிறது" (என்று ஆக₃ம ஸ்ம்ருதிபுராணங்களிலும்) 'யத₃ண்ட₃மண்ட₃ாந்தரகோ₃சரம்' (ஸ்தோத்ரரத்னம்) (என்று ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ர ரத்னத்திலும்) சொன்னபடி நித்யஸூரிகளுக்கும் எம்பெருமானுக்கும் காலம் கடந்த செயல்பாடு உண்டு. எம்பெருமானுடைய நித்யவிபூ₄தி மிகப் பெரியதாய், பரமயோகி₃களுக்கும் பிரமன் முதலான தே₃வர்களுக்கும காணவொண்ணாததாய், அளவிட்டு அறியமுடியாததாய், வேத₃ாந்தங்களைக்கொண்டே அறியத்தக்கதாய், அவற்றிலும் மறைத்துச் சொல்லப்பட்டதாய், விகாரமற்றதாய், வாக்குகளுக்கு நிலமல்லாததாய் உள்ளது."

२२. यद्दूरे वचसो यदेव तमसः पारे यदत्यद्भुतं
यत्कालादपचेलिमं सुरपुरी यद्गच्छतो दुर्गतिः ।
सायुज्यस्य यदेव सूतिरथवा यद्दुर्ग्रहं मद्गिरां
तद्विष्णोः परमं पदं तव कृते मातः समाम्नासिषुः ॥

२३. एवं वेदान्तवाक्यैश्च तथा श्रीभारतेन च ।
विष्णोः पुराणेन तथा पञ्चरात्रागमेषु च ॥

२४. अन्यैः पुराणैः स्मृतिभिः पूर्वाचार्यस्तवैर्यते ! ।
द्राविडाम्नायवचनैरैककण्ठ्येन बोधितम् ॥

२५. यत्तद्वैकुण्ठनगरं सर्वमण्डनमण्डितम् ।
प्राकारैश्च विमानैश्च सौधै रत्नमयैर्वृतम् ॥

---

"இந்தப் பரமபத₃மானது வாக்குகளுக்கு வெகுதூரத்தில் இருப்பது; மூலப்ரக்ருதிக்கு அக்கரையிலிருப்பது; அத்யாஶ்சர்யமாயிருப்பது; காலத்தைக் கடந்தது; அதை அடைபவனுக்கு தே₃வேந்திரனின் நகரமும் நரகம் போன்றதாகும். ஸாயுஜ்யம் எனும் மேலான மோக்ஷத்தை அது அளிக்கிறது. என்னுடைய வார்த்தைகளால் அது அளவிடவொண்ணாதது. அந்த விஷ்ணுவின் பரமபத₃ம் தாயான உன்னுடைய (ஸ்ரீரங்கநாச்சியாருடைய) ஆனந்த₃த்துக்காகவே ஏற்பட்டது என்று வேத₃ங்கள் ஓதுகின்றன." (ஸ்ரீகு₃ண 21) இவ்வண்ணமாக வேதா₃ந்த வாக்யங்களாலும், ஸ்ரீமஹாப₄ாரதத்தாலும், விஷ்ணுபுராணத்தாலும், பாஞ்சராத்ராக₃மத்தாலும், மற்ற புராணங்களாலும், ஸ்ம்ருதிகளாலும், பூர்வாசார்ய ஸ்தோத்ரங்களாலும், தமிழ் வேதப் பாட்டுக்களாலும் ஒருமிடறாக அறிவிக்கப்படுகிறது.

## ஸ்ரீவைகுண்ட₂ப்பெருமை

25-43. அந்த வைகுண்ட₂ நக₃ரம் எல்லா அலங்காரங்களாலும் அலங்கரிக்கப்பெற்றது. மதிள்களாலும்,

२६. मणितोरणचित्राढ्या विचित्रध्वजमालिनी ।
कोटिवैश्वानरप्रख्यैर्गृहपङ्क्तिभिरावृता ॥

२७. सहस्रस्थूणविमले दृढोदग्रे महौजसि ।
देवानामधिपो यत्र समास्ते पुरुषोत्तमः ॥

२८. मध्ये तु मण्डपं दिव्यं राजस्थानं महोच्छ्रयम् ।
माणिक्यस्तंभसाहस्रजुष्टं रत्नमयं शुभम् ॥

२९. नित्यमुक्तैः समाकीर्णं सामगानोपशोभितम् ।
आनन्दैकार्णवीभूते तत्र श्रीमणिमण्डपे ॥

३०. अनन्तभोगिपर्यङ्के रराज भगवान् हरिः ।
हिरण्मये परे लोके विरजं ब्रह्म निष्कलम् ॥
तच्छुभ्रं ज्योतिषां ज्योतिस्तदध्यात्मविदो विदुः ॥

---

விமானங்களாலும, மணிமாடங்களாலும் சூழப்பெற்றது; விசித்திரமான மணிதோரணங்கள் நிறைந்தது; ஆஶ்சர்யமான வரிசை வரிசையான கொடிகள் நிறைந்தது; கோடி நெருப்புத்துண்டங்கள் போல் பிரகாசிக்கும் வரிசையான மாளிகைகளால் சூழப்பெற்றது; "கணக்கற்ற தூண்களை உடையதாய், குற்றமற்றதாய், உறுதியானதாய், கண்ணைக் கூசவைப்பதாய், பேரொளியுடையதாய் உள்ள திருமாமணி மண்டபத்தில அயர்வறுமமரர்கள அதிபதியான புருஷோத்தமன் எழுந்தருளியிருக்கிறன்" (தலவகாரஶ்ருதி) அந்த வைகுண்ட நகரததின் நடுவில் அப்ராக்ருதமானதாய், மிகஉயர்ந்ததாய், ஆயிரக்கணக்கான மணித்தூண்கள் நிறைந்ததாய், மங்களமானதாய், ரத்னமயமானதாய் எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடமான திருமாமணி மண்டபமுள்ளது. அது நித்யமுக்தர்களால் நிறையப்பெற்றதாய், ஸாமகான முழக்கத்தையுடையதாய் விளங்குவது. ஆனந்தக் கடலாயிருக்கும் அந்தத் திருமாமணி மண்டபத்தில் திருவனந்தாழ்வானுகிற படுக்கையில் ஸ்ரீவை

३१. न तत्र सूर्यो न च भाति चन्द्रमाः
न विद्युतो भान्ति कुतोऽयमग्निः ।
तमेव भान्तमनुभाति सर्वं
तस्य भासा सर्वमिदं विभाति ॥

३२. दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता ।
यदि भाः सदृशी सा स्याद्भासस्तस्य महात्मनः ॥

३३. स्रग्वस्त्राभरणैर्युक्तं स्वानुरूपैरनूपमैः ।
चिन्मयैः स्वप्रकाशैश्च ह्यन्योन्यरुचिरञ्जितैः ॥

३४. अनेकरूपास्ते नित्याः पञ्चोपनिषदात्मकाः ।
उत्कृष्टतेजसः सर्वे नित्यमुक्ता महौजसः ॥

---

குண்ட₂நாத₂ன் எழுந்தருளியிருக்கிறுன். "பொன்மயமான மேலான உலகில் குற்றமற்றதாய் ரஜஸ்தமோ கு₃ணங்கள் இல்லாததான அந்த ப்₃ரஹ்மம் பரமஸத்வமயமாய், சோதி களுக்கெல்லாம் சோதியாய், ஆத்மஜ்ஞானிகளால் காணப் படுவதாய் எழுந்தருளியிருக்கிறது." "அந்தப் பரம்பொரு ளுக்கு முன்னுல் ஸூர்யனே, சந்திரனே, மின்னலோ பிரகாஶிக்கமுடியாது; இந்த அக்₃னி எப்படிப் பிரகாஶிக்க முடியும்? ஒளிவீசும் அந்தப் பரமாத்மாவைப் பின்பற்றியே இவையெல்லாம் ஒளிவிடுகின்றன. அவனுடைய ஒளியா லேயே இவையனைத்தும ஒளிர்கின்றது" என்று உபநிஷத் துக்களிலும், "ஆகாயத்தில் ஆயிரம் ஸூர்யர்கள் ஒரே சம யத்தில உதித்தால் எத்தனை ஒளியுண்டாகுமோ, அத்தனை ஒளியும் மஹாத்மாவான அந்தக் கண்ணனின் ஒளிக்கு ஒப்பாகாது" என்று கீ₃தையிலும், "தனக்குத் தக்கவை யாய், ஒப்பற்றவையாய், ஜ்ஞானமயமாயிருப்பவையாய், தானே பிரகாசிப்பவையாய், ஒன்றேடொன்று சேர்த்தி யழகையுடையவையான மாலை, பீதாம்ப₃ரம், ஆப₄ர ணங்கள் ஆகியவற்றேடு கூடியிருப்பவன் எம்பெருமான்"

३५. दिव्यवस्त्रा दिव्यगन्धा नूपुरान्तादिभूषणाः ।
तथाभरणकोटीनां कोटीनामायुधस्य च ॥
तया दीप्त्या दीप्यमानमनिशं राजते पदम् ॥

३६. बृहच्छरीरोऽप्यतिमानदेहो युवाकुमारत्वमुपेयिवान् हरिः ।
रेमे श्रियासौ जगतां जनन्या स्वज्योत्स्नया चन्द्र इवामृतांशुः ॥

३७. नित्या ह्यस्पृष्टसंसारगन्धा ईश्वरतत्पदे ।
निरञ्जना विराजन्ते शेषशेषाशनादयः ॥

---

"அந்த நித்யஸூரிகள் அனைவரும பல உருவங்களையுடைய வர்களாய், பஞ்சோபநிஷத்துக்களாலான திருமேனியை யுடையவர்களாய், பேரொளியுடையவர்களாய், என்றும முக்திபெற்றவர்களாய், மிக்க பெருமைபெற்றவர்களாயிருப்ப வர்கள். அப்ராக்ருதமான வஸ்தரததையுடையவர்களாய், அப்ராக்ருதமான நறுமணத்தையுடையவர்களாய், சதங்கை யீருன சிறந்த ஆப₄ரணஙகளையுடையவர்களாய் இருப்பவர் கள. அவர்கள் எம்பெருமானுடைய ஆப₄ரண கோடியில சேர்ந்தவர்களாகவும், ஆயுத₄கோடியில் சேர்ந்தவர்களாகவும் இருப்பவர்கள். இப்படிப்பட்ட ஒளியாலே எப்போதும்விளங்கா நிற்பது அப்பரமபதம பெருத்த (உப₄ய விபூ₄தியாகிற) ஶரீரத்தையுடையவனாய், அளவிறந்த திருமேனிகளை யுடையவனாய், யௌவனப் பருவத்தின் தொடக்க நிலையிலும் குமாரப் பருவத்தின் இறுதி நிலையிலுமுள்ளவனான எம் பெருமான் லோகமாதாவான ஸ்ரீதே₃வியோடு கூடியவனாய், அமுதகிரணனான சந்த்₃ரன் தனது நிலவினாலே பிரகாஶிப் பதுபோல் இன்புறுகின்றான். எம்பெருமானுடைய அந்தப் பரமபத₃த்தில் ஸம்ஸாரத்தின் வாஸனையுமற்றவர்களாய், குற்றமற்றவர்களான ஆதி₃ஶேஷன், விஷ்வக்ஸேனர் முத லான நித்யஸூரிகள் எம்பெருமானுக்கு நெருங்கியவர்களா யுள்ளனர். இந்தத் திருவனந்தாழ்வான் விஷ்வக்ஸேனர் முதலான நித்யஸூரிகளைப்போலவே இங்கிருந்து மோக்ஷ

३८. अन्तरङ्गा हरेर्मुक्ताः शेषशेषाशनादिवत् ।
नित्यकैङ्कर्यनिरता मोदन्ते वैष्णवे पुरे ॥

३९. कोटिसूर्यप्रतीकाशाः पूर्णेन्दुसदृशप्रभाः ।
यस्मिन्पदे विराजन्ते मुक्ताः संसारवर्जिताः ॥

४०. राजाधिराजस्सर्वेषां विष्णुर्ब्रह्ममयो महान् ।
ईश्वरं तं विजानीमः स शंभुः स प्रजापतिः ॥

४१. नित्यैर्मुक्तैः परं साम्यं स्वेन सार्धं समागतैः ।
विभूतिद्वयनिर्वाहः श्रिया रेमे जगत्पतिः ॥

४२. वेदान्तैश्च पुराणैश्च स्मृतिभिः श्रुतिभिस्स्फुटम् ।
एवं वैकुण्ठमहिमा वेदान्तिन् ! प्रतिपादितः ॥
लक्ष्मीवैकुण्ठसंवादं वक्ष्यामि श्रूयतां मुने ॥

---

மடைந்து சென்ற முக்தர்களும் அப்பரமபத₃த்தில் எம் பெருமானுக்கு எப்போதும் கைங்கர்யம் செய்துகொண்டு இன்புறுகிறார்கள். கோடி ஸூர்யர்களைப்போல் பிரகாசிப் பவர்களாய், பூர்ண சந்திரனைப்போலே குளிர்ந்த ஒளியை யுடையவர்களாய், ஸம்ஸார ஸம்ப₃ந்த₄ம் நீங்கப் பெற்றவர் களாய் முக்தர்கள் அந்தப் பரமபத₃த்தில் விளங்குகிறார்கள். அனைவர்க்கும் ராஜாதி₄ராஜனாய் மிகப் பெரிய ஸ்வரூபத்தை யுடைய பெரியவனாயிருப்பவன் விஷ்ணு; அவனையே ஈச்வரன் என்று அறிகிறோம். சிவனுக்கும் பிரமனுக்கும் அந்தர்யாமியாயிருப்பவன் அவனே தன்னோடு கூடியிருக்கும் நித்யமுக்தர்களைத் தன்னோடு மிகவும் ஒற்றுமையுடையவர் களாக்கிக்கொண்டு லோகநாத₂னை எம்பெருமான் ஸ்ரீதே₃வியோடு கூடியிருந்து இரண்டு விபூ₄திகளையும் நிர்வஹிப்பவனாய் இன்புறுகிறான்" என்று மற்றும் பல வேத₃வேதா₃ந்த வாக்யங்களிலும், புராண வாகயங்களிலும், ஸ்ம்ருதிகளிலும் இவ்வண்ணமாக ஸ்ரீவைகுண்ட₂த்தின்

४३. असद्यतिः सर्वपुराणवाक्यैः
वैकुण्ठमाम्नायवचोभिरीड्यम् ।
तमीदृशं भट्टगुरोर्विदित्वा
दृढान्तरङ्गो हरिमेव दध्यौ ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे वैकुण्ठपुरवर्णनं नाम पञ्चसप्ततितमोऽध्यायः ॥

॥ षट्सप्ततितमोध्यायः ॥

१. वेदान्ती स तदा ध्यात्वा मनसा परमं पदम् ।
माणिक्यमण्डपं चैव श्रीलक्ष्म्या सहितं हरिम् ॥

---

பெருமை பேசப்படுகிறது. நஞ்ஜீயரே! பெருமாளுக்கும் பிராட்டிக்கும் நடந்ததொரு ஸம்வாத₃த்தை இனிக் கூறு கிறேன் கேளும்—என்று ப₄ட்டர் உரைத்தார். எல்லாப் புராண வாக்யங்களாலும் வேத₃வாக்யங்களாலும் துதிக்கப் படும் வைகுண்ட₂த்தை இவ்வண்ணமாக ஸ்ரீபராஶர ப₄ட்ட ரிடமிருந்து அறிந்து, நஞ்ஜீயர் உறுதிகொண்ட நெஞ்சின ராய் எமபெருமானைத் தியானித்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீபராஶரப₄ட்டருக்கும் நஞ்ஜீயருக்கும் நடந்த ஸம்வாத₃த்தில் வைகுண்ட₂நக₃ர வர்ணனமாகிற எழுபத்தைந்தாமத்தியாயம் நிறைவுற்றது.

## எழுபத்தாறும் அத்தியாயம்
## பரமபதநாத லக்ஷ்மீ ஸம்வாதம்
## நஞ்சீயரின் ஶ்ரவண குதூஹலம்

1.*3. அப்போது அந்த வேத₃ாந்தி நஞ்சீயர் பரம பத₃த்தையும், திருமாமணி மண்டபத்தையும், ஸ்ரீலக்ஷ்மீ தே₃வியோடு கூடிய பரமபத₃நாத₂னையும், அநந்தன், க₃ருட₃ன், விஷ்வக்ஸேநர் முதலான நித்யஸூரிகளையும்

२. अनन्तविहगेशादिनित्यसूरींश्च भक्तितः ।
भट्टार्यं तं प्रणम्यार्यं तत्कथायां कृतादरः ॥
३. समाहितमनाः तस्थौ पश्यन् गुरुमुखाम्बुजम् ।
स भट्टदेशिको धीमान् वेदान्तिनमथाऽब्रवीत् ॥
४. एवं वैकुण्ठनगरे वेदान्तिन्! परमः पुमान् ।
आस्ते लक्ष्म्या च भूम्या च भक्तैर्भागवतैस्सह ॥
५. अस्येशाना हि जगतः विष्णुपत्नी सनातनी ।
सा कदाचिज्जगन्माता वेदान्तिन्! विष्णुवल्लभा ॥
६. निर्हेतुकदयावेशात् अपश्यदखिलं जगत् ।
तदेकानुभवानन्दनिरन्तरसुखोचितान् ॥

---

ப₄க்தியோடு தம் நெஞ்சால் தியானித்து, தம் ஆசார்யரான ஸ்ரீபராஶரப₄ட்டரை வணங்கி, அவர் கூறுவதாகச்சொன்ன ஸ்ரீவைகுண்ட₂நாத₂ லக்ஷ்மீஸம்வாத₃த்தைக் கேட்பதில் விருப்பமுற்றவராய், மன ஒருமைப்பாட்டுடன் ஆசார்யரின் திருமுகத்தாமரையைப் பார்த்துக்கொண்டு நின்றார்.

## பிராட்டியின் கருணைமிகும் கேள்வி

3*-14. அந்த அறிவாளியான ஸ்ரீபராஶரப₄ட்டர் வேதா₃ந்தி நஞ்சீயரைப் பார்த்துப் பின்வருமாறு கூறலுற்றார் — நஞ்ஜீயரே! முற்கூறியவண்ணம் ஸ்ரீவைகுண்ட₂நக₂ரத்தில் பரமபுருஷன், ஸ்ரீபூ₄மிதே₃விகளோடும், கு₃ணாநுப₄வம் செய்யும் ப₄க்தர்களோடும், கைங்கர்யம் செய்யும் பா₄க₃வதர்களோடும் எழுந்தருளியிருக்கிறான். அப்பெருமானுக்கு த₄ர்மபத்னியாய், அவனுக்கு மிக இனியவளாய், (அதனாலேயே) இவ்வுலகுக்கு அநாதி₃காலமாக ஈஶ்வரியாய், உலகனைத்துக்கும் தாயாயிருக்கும் லக்ஷ்மீதே₃வி நிர்ஹேதுக கருணையாலே ஆட்கொள்ளப்பட்டு உப₄ய விபூ₄தியையும் காணலுற்றாள். நஞ்சீயரே! அவ்விரு விபூ₄தி

७. तत्र भोगविभूत्यां तु नित्यमुक्तान् समास्थितान् ।
तान्विलोक्य जगन्माता मुमोद सुतरां मुने ॥

८. अपारभववाराशिनिमग्नान् भृशदुःखितान् ।
बद्धान् भगवदश्लिष्टान् लीलायामास्थितानिमान् ॥

९. विलोक्य दुःखिताऽत्यन्तं भर्तारमिदमब्रवीत् ।
अपारकरुणासिन्धो ! देवदेव ! जगत्पते ! ॥

१०. बद्धजीवानिमान् पश्य लीलायां समदर्शन ! ।
समः सर्वेषु भूतेषु कल्याणगुणसागरः ॥

११. निर्व्याजबन्धुर्भगवान् जगन्माता जगत्पिता ।
इत्येवं बहुधा शास्त्रे स भवान् प्रतिपाद्यते ॥

---

களுள் போ4க3விபூ4தியான பரமபத3த்தில் உள்ள நித்ய முக்தர்கள் எம்பெருமானையே அநுப4விப்பதால் விளையும் ப்3ரஹ்மாநந்த3த்தால் எப்போதும் இன்புற்றிருப்பதைக் கண்டு லோகமாதாவான அப்பிராட்டி மிகவும் உகப்படைந்தாள். இந்த லீலாவிபூ4தியிலிருக்கும் ப3த்3த4 ஜீவர்கள் (இதற்கு நேர்மாறாக) எல்லையற்ற ஸம்ஸாரக்கடலிலே மூழ்கிக்கிடப்பவர்களாய், அதனாலேயே மிகவருந்தி நிற்பவர்களாய், எம்பெருமானோடு தொடர்பு அற்றவர்களாய் இருப்பதைக்கண்டு மிகவும் வருந்தியவளாய், தன் நாயகனைப் பார்த்துப் பின்வருமாறு கூறலுற்றாள். "எல்லையற்ற கருணைக்கடலே! தே3வதே3வனே; லோகநாத2னே! லீலாவிபூ4தியில் அனைவரையும் ஒக்கநோக்கும் பெருமானே! இந்த ப3த்3த4ஜீவர்களைக் கடாக்ஷிப்பீராக. நீர் எல்லா ஜீவராசிகளிடமும் ஸமமாயிருப்பவர்; கல்யாணகு3ணக் கடலாயிருப்பவர்; சேதனர் அனைவர்க்கும் இயற்கையுறவினராயிருப்பவர்; ஜ்ஞானம் ஶக்தி முதலான ஆறுகு3ணங்களையுடைய ப4க3வானாயிருப்பவர்; உலகனைத்துக்கும் தாயாகவும், தந்தையாகவும், இருப்பவர்" என்றெல்லாம் தேவரீர் ஶாஸ்த்ரத்தில் பலவாறாகக் கூறப்படுகிறீர்.

१२. यतो वैषम्यनैर्घृण्ये संप्राप्ते तव साम्प्रतम् ।
केचिच्च दुःखिता जीवाः केचिच्च सुखिनः कृताः ॥

१३. एतेन किं फलं स्वामिन् ! संप्राप्तं तद्वदाशु मे ।
त्वदधीना ह्यविद्या वा तदधीनो भवान्नु किम् ? ॥

१४. युष्मत्कटाक्षविषया यदि बद्धजीवाः
मुक्तादिभिस्सह परे परमे पदेऽस्मिन् ।
नित्यानवद्यरसभोगसुखैकनिष्ठाः
का हानिरत्र भगवन् ! करुणामृताब्धे ! ॥

---

அப்படிப்பட்ட தேவரீருக்கு இப்போது பக்ஷபாதம், கருணை யின்மை எனனும இரண்டு குற்றங்களும் ஏற்பட்டுவிட்டனவே. (எப்படியெனில்) உன் குழந்தைகளில் லீலாவிபூ₄தியில் இருக்கும சிலர் துன்புற்றிருக்கிறார்கள்; நித்யவிபூ₄தியிலிருக்கும் சிலர் இன்புற்றிருக்கிறார்கள். இவர்களை இப்படி வைத்தவர் நீர்தாமே ஐயா! இதனால் இப்போது உமக்கு என்ன பயன் விளைந்தது என்பதை என்னிடம் சொல்லும். (என்னையறியாமையாலேயே ப₃த்₃த₄ஜீவர்கள் துன்புறுகிறார்களென்று கூறுவீராகில்,) அந்த அறியாமை உமக்கு வசப்பட்டதா ? அல்லது நீர் அதற்கு வசப்பட்டவரா எனபது தெரியவேண்டும். இந்த ப₃த்₃த₄ஜீவர்கள் உமது திருக்கண்ணோக்குக்கு இலககாகி இந்தப் பரமபத₃த்தில் நித்யமுகதர்களுக்கு ஸமமாக நித்யமாய், குற்றமற்றதான ப்₃ரஹ்மாநுப₄வத்தில் ஆழ்நதிருக்கும்படி உம்மால் செய்யப்பட்டால் அதனால் உமக்கு வரும் குறையென்ன? ஜ்ஞாநம ஶக்தி முதலானவற்றையுடைய ப₄க₃வானுகையாலே, 'என்னால் இவர்களை அப்படி ஆக்க முடியாது' என்று நீர் சொல்ல இயலாது. கருணைக்கடல் என்று நீர் பெற்றிருக்கும் பெயரும் அப்படி ஆக்கினால்தான் நிலைக்கும்.

१५. इत्युदीरितमाकर्ण्य जगन्मात्रा जगत्पतिः ।
मन्दस्मितमुखः श्रीमान् वेदान्तिन्! सोऽब्रवीच्छ्रियम् ॥

१६. निश्चेष्टाः पूर्वमेवासन् विहीनाः करणादिभिः ।
आत्मानः सर्व एवैते लूनपक्षा इवाण्डजाः ॥

१७. तेभ्योऽखिलेभ्यो जीवेभ्यः करणं च कलेबरम् ।
निर्हेतुककृपावेशात् देवि! दत्तं मया किल ॥

१८. "पूर्वमेव मया ब्रह्मन् हस्तपादादिसंयुता ।
विचित्रा देहसंपत्तिरीश्वराय निवेदितुम् ॥"

१९. शास्त्रप्रसिद्धिरेवैषा विद्यते किल वल्लभे! ।
मत्पादपद्मकैङ्कर्यहेतुभूतं कलेबरम् ॥

---

## எம்பெருமானின் பதில்

15-34. வேதா₃ந்தியே! இவ்வண்ணமாக அனைத்துலகுக்கும் தாயான பிராட்டி கூறியதைக் கேட்டு, லோகஸ்வாமியான ஸ்ரீமந்நாராயணன் புன்முறுவல்பூத்த முகத்தினனாகப் பிராட்டியை நோக்கிப் பின்வருமாறு பேசலுற்றான்— "பிரளயகாலத்தில் இந்த ஜீவர்கள் அனைவரும் சிறகொடிந்த பறவைகள்போலே தேஹேந்திரியங்களற்றவர்களாயிருந்தனர். இனியவளான பிராட்டி! அவர்கள் அனைவர்க்கும் தே₃ஹங்களையும், இந்திரியங்களையும் நான் எனது நிர்ஹேதுக கிருபைக்கு வசப்பட்டுக் கொடுத்தேனன்றோ. "அந்தணரே! 'கைகால் முதலான அவயவங்களோடு கூடிய விசித்திரமான தே₃ஹமாகிற செல்வம் ஈஶ்வரனுக்கே ஆக்குவதற்காக ப்ரளயகாலத்திலேயே (ஈஶ்வரனால்) கொடுக்கப்பட்டது' என்று சாஸ்திரங்களில் இதற்குக் காரணமும் பிரஸித்₃த₄மாயுள்ளதன்றோ. ஆனால், எனது திருவடித் தாமரையில் கைங்கர்யம் செய்வதற்கு உறுப்பாகக் கொடுக்கப்பட்ட இந்த சரீரேந்திரியங்களை, என்னை ஆராதி₄ப்

२०. तदन्यविषयं चक्रुः मत्पूजाविमुखा नराः।
समिदाहरणार्थाय प्रदत्तेनासिना रमे!॥

२१. गोवालच्छेदनं देवि! तज्ञगत्यां यथाऽभवत्।
नदीसंतरणार्थाय प्रदत्तं दयया प्लवम्॥

२२. तमादाय महागर्ते यथा निक्षेपणं ह्यभूत्।
तथा शब्दादिविषयप्रवणास्तेऽखिला जनाः॥

२३. कर्मप्रवाहपतिताः निमग्ना भवसागरे।
अपथा गच्छतां तेषां विषयार्णवपातिनाम्॥

२४. मत्प्राप्तिहेतुभूतं तु संसारार्णवतारकम्।
करावलम्बनं शास्त्रं मया दत्तं हितेच्छया॥

---

பதில் விருப்பமற்ற இந்த ஜீவர்கள் ஶப்₃த₃ம் முதலான விஷயங்களை அநுப₄விப்பதற்கே பயன்படுத்தினர்கள். லக்ஷ்மீதே₃வி! இவ்வுலகில் சிலர் ஸமித்தை வெட்டுவதற்காகக் கொடுக்கப்பட்ட கத்தியைக்கொண்டு பசுவின் வாலை வெட்டுவதுபோலவும், ஆற்றைக் கடப்பதற்காகக் கருணையோடு கொடுக்கப்பட்ட ஓடத்தைக்கொண்டு ஆற்றோடுபோய்க் கடலில் விழுந்து மடிவதுபோலவும் இந்த ஜீவர்கள் அனைவரும் ஶப்₃த₃ம் முதலான விஷயங்களிலேயே ஈடுபட்டு, கர்மப் பெருவெள்ளத்தில் இழுக்கப்பட்டவர்களாய் இந்த ஸம்ஸாரக்கடலில் மூழ்கிவிட்டனர். (அதைக் கண்டு இரங்கி) விஷயக்கடலில் வீழ்ந்து தகாத வழியில் செல்லும் இவர்கள் உய்வதற்காக, என்னை அடைவிப்பதாய், ஸம்ஸாரக்கடலிலிருந்து தாண்டுவிக்கும் ஓடமாய், கீழே விழாமல் (ஞானக்) கைகொடுப்பதான ஶாஸ்த்ரங்கள் இவர்களது நன்மையை விரும்பி என்னல் கொடுக்கப்பட்டன. அந்த ஶாஸ்த்ரங்களையும் மேலெழுந்தவாரியாகப் பார்த்துவிட்டு, தம் நெஞ்சில் தோன்றியவழியிலே சென்று "நானே ஈஶ்வரன்; நானே போ₄க₃ங்களை அநுப₄விப்பவன்;

२५. शास्त्राण्यापाततो दृष्ट्वा तन्मार्गेण विधाय ते।
'ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान् सुखी ॥

२६. आढ्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया।'
इत्येवं गर्वसंयुक्ताः केऽपि मां नेक्षते किल ॥

२७. योऽन्यथा सन्तमात्मानमन्यथा प्रतिपद्यते।
किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा ॥

२८. समस्तपापबीजेन स्वातन्त्र्येणैव तेन ते।
आत्मापहारनिरताः कर्मदूषितमानसाः ॥

२९. संसारवर्धकास्सर्वे ते ह्यासन् शुभदर्शने!।
उल्लङ्घिताज्ञास्थानेषु यथा राजा स्वयं गतः ॥

---

நான ஸித்₃தி₄பெற்றவன்; ப₃லமுடையவன; ஸுக₂முடையவன்; நிறைவுற்றவன்; உற்ருருறவினரோடு கூடியவன்; எனக்கு இணையார்?'' என்று க₃ர்வங்கொண்டவர்களாகச் சிலர் என்னை சாஸ்திரங்கொண்டு காணமாட்டாதவர்களாயினரன்ருே; எனக்கு அடிமைப்பட்டிருக்கும் ஆத்மாவை ஸ்வதந்த்ரமானதாகவும, பிறர்க்கு அடிமைப்பட்டதாகவும் நினைத்து ஆத்மாவையே திருடும பாவியால் செய்யப்படாத பாபம் ஏதுளளது? நன்னோக்கை உடையவளே! எலலாப் பாபங்களுக்கும் காரணமான ஸ்வாதந்த்ர்ய பு₃த்₃தி₄யால் ஆத்மாவை அபஹரிப்பதிலேயே மண்டி நிற்பவர்களாய், தாம் செய்த வினைகளால் கெட்டுப்போன நெஞ்சுடையவர்களாய், ஸம்ஸாரத்தை வளர்ப்பவர்களாகவே அவர்கள் அனைவரும ஆனர்கள். தனது ஆணை மீறப்படும் இடங்களுக்கு அரசன் நேரே சென்று திருத்துவதுபோலே, நானும் இந்த ஜனங்களை எனது ஆணையில் உறுதியாக நிற்பவர்களாகச் செய்ய விரும்பி ராமன், கிருஷ்ணன் முதலான அவதாரங்களை எடுத்து இவ்வுலகிற்கு வந்தேன். அப்போதும், 'அர்ஜுனு! அஸுர யோனிகளில் பிறந்தவர்

३०. तथैव रामकृष्णादिरूपेणाहं गतोऽभवम् ।
मच्छासने स्थिरधियः कर्तुकामः स तान् जनान् ॥

३१. आसुरीं योनिमापन्ना मूढा जन्मनि जन्मनि ।
मामप्राप्यैव कौन्तेय! ततो यान्त्यधमां गतिम् ॥

३२. अवजानन्ति मां मूढाः मानुषीं तनुमाश्रितम् ।
परं भावमजानन्तो ममाव्ययमहेश्वरम् ॥

३३. त्रिभिः प्रकारैरेतैर्मां न गच्छन्ति किलेश्वरम् ।
अनाद्यविद्यासम्बन्धदूषितास्तेऽखिला जनाः ॥

३४. देहादिदानं प्रथमं च तेभ्यः
शास्त्राणि दत्तानि ततोऽखिलानि ।
दशावताराश्च कृता मयाद्य
करिष्यमाणं वद वारिजाक्षि! ॥

---

களாய், பிறவிதோறும் மூட4ர்களாய், என்னை அடையாமலே அவர்கள் கீழான க3திக்குச் சென்றனர். மூட4ர்கள் எனது ஸர்வலோகேஶ்வரத்தன்மையை உணராமல், மனிதவுருவெடுத்த என்னை அவமதிக்கின்றனர்' என்று நான் கீ3தையில் மனம் நொந்து பேசும்படியே இவர்கள் நடந்துகொண்டனர். இச்சேதனர் அனைவரும் அநாதி3யான ப்ரக்ருதி ஸம்ப3ந்த4த்தினால் மயங்கி இவ்வண்ணம் நான் செய்த மூன்று முயற்சிகளிலும் ஈஶ்வரனை என்னை அடையாமலே போயினர். (1) முதலில் அவர்களுக்கு தே3ஹேந்திரியங்களைக் கொடுத்தது, (2) பிறகு எல்லா சாஸ்திரங்களையும் அளித்தது, (3) பிறகு பத்து அவதாரங்களை எடுத்தது ஆகிய மூன்று முயற்சிகளையும் இவர்களைக்கரையேற்ற இப்போது செய்துவிட்டேன். தாமரைத்தடங் கண்ணியே! இனியும் இவர்களை உய்விக்க ஏதாவது செய்யவேண்டுமென்றால் கூறுவாயாக" (என்று எம்பெருமான் கூறினான்).

३५. लक्ष्मीर्निशम्य वचनं भगवत्प्रणीतं
सौहार्दकारणवशात् जगदेकमाता।
त्यक्तात्मनां तनुभवां यदसह्यदुःखं
संवीक्ष्य शोकनिभृता क्षणमास तूष्णीम् ॥

३६. तच्छ्रुत्वा भगवच्चित्तं दृष्ट्वा बद्धात्मनां व्यथाम्।
अमृष्यमाणा भर्तारं भगवन्तं वचोऽब्रवीत् ॥

३७. यदि दत्ता त्वयाऽनुज्ञा लोकसंरक्षणे मम।
लीलायामवतीर्याऽहं नित्यैरेतैस्सहेश्वर! ॥

३८. त्वदङ्घ्रिपद्माभिमुखान् करिष्ये त्वत्कटाक्षतः।
बद्धजीवानिमान् सर्वान् त्वदाज्ञापरिपालिनी ॥

---

## பிராட்டி அவதரிக்க அநுமதிபெறுதல்

35-39. எம்பெருமான் அருளிய இவ்வார்த்தையைக் கேட்டு, உலகனைத்துக்கும் அன்னையான லக்ஷ்மீதே₃வி ப₃த்₃த₄ஜீவர்களின் பொறுக்கவொண்ணாத துன்பத்தைக் கண்டு மிகவருந்தி அவர்களுக்கு நன்மைசெய்ய விரும்பி, ஒரு கணம் பேசாமலிருந்தாள். எம்பெருமானுடைய அந்தத் திருவுள்ளத்தைக் கேட்டறிந்து, ப₃த்₃த₄ஜீவர்களின் துன்பத்தையும் கண்டு பொறுக்கவொண்ணாதவளாய், நாயகனான எம்பெருமானைப் பார்த்துப் பின்வருமாறு கூறினாள்:— "எம்பெருமானே! இவ்வுலகினரை ரக்ஷிக்க தேவரீர் எனக்கு அனுமதி அளிப்பீராகில், இந்த நித்ய ஸூரிகளோடுகூட யான் லீலாவிபூ₄தியில் அவதரித்து, உமது ஆணையைப் பின்சென்று, இந்த ப₃த்₃த₄ஜீவர்கள் அனைவரையும் உமது கடாக்ஷத்தாலே உமது திருவடித் தாமரையில் ஈடுபட்டவர்களாம்படி செய்கிறேன்" என்று. லக்ஷ்மீதே₃வியின் இந்த நல்வார்த்தையைக்கேட்ட எம்பெருமான் அப்போது சிறிது சிந்தை செய்து, அக₃ஸ்த்ய

३९. वाक्यं निशम्य निपुणं हरिरिन्दिरायाः
संचिन्त्य तत्र समये घटसंभवाय ।
दत्तं वरं हृदि निधाय जगज्जनन्यै
लोकावनाय महतीं प्रददावनुज्ञाम् ॥

४०. वनमालां वैजयन्तीं तथा पञ्चायुधानि च ।
श्रीवत्सं कौस्तुभं चैव सेनेशविहगेश्वरौ ॥

४१. अनन्तप्रमुखान् सर्वान् समादायाज्ञया हरेः ।
लोकसंरक्षणार्थाय लक्ष्मीर्भूम्यां मनो दधौ ॥

४२. "कृतादिषु प्रजा राजन् ! कलाविच्छन्ति संभवम् ।
कलौ खलु भविष्यन्ति नारायणपरायणाः ॥

---

ருக்குத் தான்கொடுத்த வரத்தை நினைவிற்கொண்டு லோக மாதாவுக்கு அவள் விரும்பியபடியே அவதரித்து உலகை உய்விப்பதற்கு அனுமதியளித்தான்.

## ஆண்டாள் ஆழ்வார்களின் அவதாரம்

40-45. வைஜயந்தி எனும் வனமாலையையும், ஶங்க₂ம் சக்ரம் முதலான ஐந்து ஆயுத₄ங்களையும், ஸ்ரீவத்ஸம் எனும் மறுவையும், ஸ்ரீகௌஸ்துப₄மணியையும், விஷ்வக்ஸேன ரையும், க₃ருட₃னையும், திருவநந்தாழ்வான் முதலான எல்லா நித்யஸூரிகளையும் எம்பெருமானுடைய ஆஜ்ஞையுடன் அழைத்துக்கொண்டு, உலகை உய்விப்ப தற்காக பூ₄மியில் அவதரிக்கத் திருவுள்ளங்கொண்டாள் பிராட்டி. "அரசனே! க்ருதயுக₃ம் முதலானவற்றில் இருப்பவர்களும் கலியுக₃த்தில் பிறக்க விரும்புகிறார்கள். (ஏனெனில்:) கலியுக₃த்திலன்றோ நாராயணனையே பரம ப்ராப்ய ப்ராபகங்களாகக் கொண்ட மஹாபுருஷர்கள்

४३. क्वचित्क्वचिन्महाराज ! द्राविडेषु च भूरिशः ।
तामूपर्णी नदी यत्र कृतमाला पयस्विनी ॥
४४. कावेरी च महापुण्या प्रतीची च महानदी ।"
एवं भागवताख्येन पुराणेनोक्तवर्त्मना ॥
चक्रुस्ते ह्यवतारान् हि द्राविडे नित्यसूरयः ॥
४५. एतत्ते सर्वमाख्यातं यन्मां त्वं परिपृच्छसि ।
किमन्यत् श्रोतुकामस्त्वं तद्वदाशु ब्रवीमि ते ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे श्रीवैकुण्ठनाथलक्ष्मी संवादकथनं नाम षट्सप्ततितमोऽध्यायः ॥

---

ஆங்காங்கு சிலரும், தமிழ்நாட்டில் பலரும் அவதரிக்கப் போகிறார்கள். * தாம்ரபர்ணி, க்ருதமாலை (வையையின் கிளை நதி), பாலாறு, மிகப் புனிதமான காவிரி, மேற்கு நோக்கிப் பாயும் பேராறு ஆகியவற்றின் கரையில் அவர்கள் அவதரிப்பார்கள்" என்று ஸ்ரீப₄ாக₃வதபுராணத் திற் சொல்லப்பட்ட ரீதியில் அந்த நித்யஸூரிகள் தமிழ் நாட்டில் அவதாரத்தைச் செய்தனரன்றோ. நீர் கேட்ட கேள்வியனைத்துக்கும் நான் பதிலைச் சொல்லிவிட்டேன். இன்னமும் நீர் கேட்க விரும்பியதுண்டாகில் சொல்லும்; உடனே உமக்கு விளக்குகிறேன் — (என்று ப₄ட்டர் கூறினார்.)

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ப₄ட்டார்ய வேதா₃ந்தி ஸம்வாத₃த்தில் ஸ்ரீவைகுண்ட₂நாத₂ லக்ஷ்மீஸம்வாத₃மாகிற எழுபத்தாறும் அத்தியாயம் நிறைவுற்றது.

---

* தாம்ரபர்ணிக்கரையில் நம்மாழ்வார் மதுரகவியாழ்வார்களும், க்ருதமாலைக்கரையில் பெரியாழ்வாரும், ஆண்டாளும், பாலாற்றங்கரையில் முதல் நான்கு ஆழ்வார்களும், காவேரிக்கரையில் தொண்டரடிப் பொடியாழ்வாரும், திருப்பாணாழ்வாரும், திருமங்கையாழ்வாரும், கேரளத்தில் பேராற்றங்கரையில் குலசேகராழ்வாரும் இந்நதிக்கரைகளில் எல்லா ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களும் அவதரித்தது அநுஸந்திக்கத்தக்கது.

सप्तसप्ततितमोऽध्यायः

१. अस्मद्यतिः प्रणम्याथ भट्टार्यं भगवत्प्रियम्।
कृताञ्जलिपुटो भूत्वा वचनं चेदमब्रवीत्॥

२. अवतारस्थलादीनि यानि कासारयोगिनः।
ब्रूहि चैतानि सर्वाणि यद्भूतमहदाख्ययोः॥

३. तस्य तद्वचनं श्रुत्वा कूरेशतनुजो महान्।
तद्दिव्यसूरिचरितं प्रवक्तुमुपचक्रमे॥

४. अयोध्या मथुरा माया काशी काञ्ची ह्यवन्तिका।
पुरी द्वारवती चैव सप्तैता मुक्तिदायिकाः॥

---

## எழுபத்தேழாம் அத்தியாயம்

## முதலாழ்வார்கள் சரித்திரம்

### நஞ்சீயரின் கேள்வி

1-2. எம்பெருமானுக்கு இனியவரான ஸ்ரீபராஶர ப₄ட்டரை வணங்கி, கைகூப்பி நின்று, "பொய்கை பூதம் பேயாழ்வார்களின் அவதார ஸ்த₂லம், சரித்திரம் முதலானவை அனைத்தையும எனக்குக் கூறுவீராக" என்று கூறினர் நஞ்ஜீயர்.

### காஞ்சீ மகிமை

3-*8. நஞ்ஜீயருடைய இந்த வார்த்தையைக் கேட்ட கூரத்தாழ்வான் குமாரரான மஹாசார்யர் ஆழ்வார்களின் சரித்திரத்தைச் சொல்லத் தொடங்கினர். 1. அயோத்₄யை 2. மதுரை 3. மாயா (ஹரித்₃வாரம்) 4. காசீ 5. காஞ்சீ 6. அவந்தி (உஜ்ஜயினி) 7. த்₃வாரகை ஆகிய ஏழு நகரங்களும் முக்தியளிக்கக்கூடியவை. அவற்றுக்குள்ளே காஞ்சீயானது மிகவும் புனிதமானது என்று உலகில் புகழ பெற்றது. ப்₃ரஹ்மாவினுல் செய்யப்பட்ட அஶ்வமேத₄யா

५. तन्मध्ये सुमहापुण्या काञ्ची लोके सुविश्रुता।
ब्रह्माऽश्वमेधयागेन स यत्राऽऽराधितो हरिः॥

६. क इति ब्रह्मणो नाम तेन यत्राश्चितो हरिः।
तस्मात् काञ्चीति विख्याता पुरी पुण्यविवर्धिनी॥

७. अष्टादशस्थलैः काञ्ची जगत्यां समुदञ्चति॥
काञ्च्यामष्टभुजं नाम स्थलं यद्व्यस्ति विश्रुतम्॥

८. यथोक्तकारी भगवान् तस्योदीच्यां विराजते।
यथोक्तकारिणस्तस्य कौबेर्यां दिशि सत्तम!॥

९. सरः प्रकाशतेऽत्यन्तं दिव्यहेमाम्बुजावृतम्।
द्वापरे चाष्टलक्षेषु सहस्रेषु च षष्टिषु॥

---

க்ருத்தினால் அவ்விடத்தில் நாராயணன ஆராதி₄க்கப்பட்டான். 'க:' என்பது பிரமனின் பெயர். அவனாலேயே ஹரி எங்கு ஆராதி₄க்கபபட்டானோ, புண்யத்தை வளர்ககக்கூடிய அந்த நகரம் அக்காரணத்தாலேயே 'காஞ்சீ' என்று கூறப்பட்டது. காஞ்சீ நகரம் 18 தி₃வ்யதே₃ஶங்களோடுகூடி இவ்வுலகில புகழபெற்று விளங்குகிறது. காஞ்சியில் புகழபெற்றதான 'அஷ்டபு₄ஜம்' என்னும் தி₃வ்யதே₃ஶம் விளங்குகிறது. அநத தி₃வ்யதே₃ஶத்துக்கு வடக்கே யதோ₂க்தகாரி (சொன்னவண்ணம் செய்த பெருமாள்) என்னும் எம்பெருமான் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கிறான்.

## பொய்கையாழ்வார் அவதாரம்

8*-16 அநதக் கோயிலுக்கு வடக்கு தி₃க்கில் பொற்றாமரைக் குளம் ஒன்று மிக விளங்கி நிற்கினறது. துவாபரயுகத்தில் எட்டுலக்ஷத்து அறுபதினாயிரத்து நூறு (தொள்ளாயிரம்) வருஷங்கள் கழிந்தபின் ஸித்தார்த்தி வருஷத்தில் துலா மாஸத்தின் சுகலபக்ஷ அஷ்டமியில் செவ்வாய்க் கிழமையில் அந்தப் பொற்றாமரைக்குளத்தில் பொற்றாமரையில் பாஞ்சஜன்யம் என்னும் சங்கத்தின்

१०. संवत्सरेष्वतीतेषु तथा वर्ष(नव)शतेषु च।
धर्मसंस्थापनार्थाय ततः सिद्धार्थिवत्सरे॥

११. तुलामासे शुक्लपक्षे ह्यष्टम्यां कुजवासरे।
कासारयोगी संजज्ञे शङ्खांशेन महाद्युतिः॥

१२. नक्षत्रे श्रवणे तस्मिन् तटाके स्वर्णपङ्कजे।
अस्यावतारश्लोकाश्च गीयन्ते प्रथिता भुवि॥

१३. काञ्च्यां सरसि हेमाब्जे जातं कासारयोगिनम्।
कलये यः श्रियःपत्यू रविं दीपमकल्पयत्॥

१४. मुकुन्देन्दुमुखोल्लासमूलवाग्जालमूर्च्छितम्।
मुनिमुख्यं सरोजातं मुक्तिमूलमुपास्महे॥

१५. हेमाब्जनीहेमसरोजगर्भात् श्रीपाञ्चजन्योऽजनि दिव्ययोगी।
तारे हरेराश्वयुजाख्यमासे समस्तजीवावनकर्महेतुः॥

---

அம்ஶமாக, பேரொளியுள்ள பொய்கையாழ்வார் வைஷ்ணவ த₄ர்மத்தை நிலைநிறுத்துவதன் பொருட்டுத் திருவோண நக்ஷத்ரத்தில் அவதரித்தார். அவருடைய அவதார ஶ்லோகங்கள் பலவும் உலகில் புகழ்பெற்று விளங்குகின்றன. (அவற்றின் பொருள்வருமாறு) (1) திருமகள் கேள்வனுக்கு ஸூர்யனை விளக்காக ஏற்றியவராய், காஞ்சியில் பொற்றாமரைக்குளத்தில் அவதரித்தவரான பொய்கையாழ்வாரைத் துதிக்கிறேன். (2) முகுந்தனுடைய சந்த்₃ரன் போன்ற முகத்தை மலரவைக்கும் திவ்யப்ரபந்தத்தை அருளிச்செய்தவராய், மோக்ஷத்துக்கு மூலகாரணமாயிருப்பவராய், பொய்கையில் அவதரித்தவரான முனிவர் தலைவரை உபாஸிக்கிறேன். (3) பொற்றாமரைக் குளத்திலுள்ள பொற்றாமரையிலிருந்து ஐப்பசி மாதம் திருவோண நக்ஷத்ரத்தில் எல்லா ஜீவர்களையும் உய்விப்பதற்காக ஸ்ரீபாஞ்சஜன்யத்தின் அம்ஶமாகப் பொய்கையாழ்வார் அவதரித்தார். (4) (பொய்கைபோலே) அலை

१६. सञ्जीवनत्वात् बहुसत्त्वयोगात्
संसारदावाग्निविनाशकत्वात् ।
शैत्योदयात् सूक्त्यमृतप्रवाहात्
सरोभिधानं यमुदाहरन्ति ॥

१७. ततो भूताह्वयो धीमान् वेदान्तिन्! तत्परेऽहनि ।
समुद्रतीरे विख्याते मल्लापुरवरे शुभे ॥

१८. दिव्यगन्धयुते तस्मिन् माधवीकुसुमोत्तमे ।
संजज्ञे लोकरक्षार्थं गदांशेन महाद्युतिः ॥

१९. अस्यावतारश्लोकाश्च गीयन्ते प्रथिता भुवि ।
मल्लापुरवराधीशं माधवीकुसुमोद्भवम् ॥

---

வருக்கும் உயிரளிப்பதாலும், அதிகமான ஸத்வம் (1. ஸத்வ குணம் 2. ஜந்துக்கள்) கூடியிருப்பதாலும், ஸம்ஸாரமாகிற காட்டுத்தீயை அழிப்பதாலும், குளிர்ச்சியை உண்டாக்குவதாலும, அருளிச்செயலாகிற அமுதவெள்ளத்தை உடைத்தாயிருக்கையாலும் அவ்வாழ்வாரைப் பொய்கையாழ்வார் என்று கூறுகின்றனர்.

## பூதத்தாழ்வார் அவதாரம்

17-21. வேதாந்தி நஞ்ஜீயரே! அதற்கடுத்தநாள் கடற்கரையிலிருக்கும் மங்களமான மல்லைமாநகரிலே திவ்யமான மணம் வீசும சிறந்த குருக்கத்தி மலரிலே உலகங்களை ரக்ஷிப்பதற்காகப் பேரொளியுள்ளவராய், பேரறிவாளரான பூதத்தாழ்வார் எமபெருமானுடைய கதையின் அம்ஸமாக அவதரித்தார். அவருடைய அவதார ஶ்லோகங்கள் உலகில் புகழ்பெற்று விளங்குகின்றன. (அவற்றின் பொருள் பின்வருமாறு)—(1) கடன்மல்லைக்குத் தலைவராய், குருக்கத்திமலரில் அவதரித்தவராய், எம்பெருமானுக்கு ஞானச்சுடர் விளக்கேற்றியவரான பூதத்தாழ்வாரை

२०. भूतं नमामि यो विष्णोः ज्ञानदीपमकल्पयत् ।
वन्दे भूताख्ययोगीन्द्रं वरेण्यं गुणसम्पदम् ॥
लक्ष्मीसहायकरुणापात्रमप्रतिवैभवम् ॥

२१. मासेऽथ तस्मिन् वसुभेऽजनिष्ट
पारे समुद्रं पुरि मल्लनाम्न्याम् ।
लतागृहाद्भूतभूतनामा
कौमोदकीशक्तिमयो मुनीन्द्रः ॥

२२. ततोदीच्यां पुरस्तस्याः काष्ठायां तत्परेऽहनि ।
महोदधितटे तस्मिन् मयूरनगरीवरे ॥

२३. मयिलादिकेशवस्याग्रे कूपे च लतिकाह्वये ।
रक्तोत्पले नन्दकांशात् संजज्ञे महदाह्वयः ॥

---

வணங்குகிறேன். (2) அனைவராலும் ஆஶ்ரயிக்கப்பட்டவராய், நற்குணங்களாகிற செல்வத்தையுடையவராய், ஸ்ரீமந்நாராயணனுடைய கருணைக்குப் பாத்திரமானவராய், ஒப்பற்ற பெருமையையுடையவரான பூதத்தாழ்வாரை வணங்குகிறேன். (3) அதே மாஸத்தில் அவிட்ட நக்ஷத்ரத்தில் கடற்கரையிலுள்ள மல்லைமாநகரிலே ஒரு தோட்டத்திலே 'கௌமோதகி' என்னும் கதையின் அம்ஶமாக பூதத்தாழ்வார் அவதரித்தார்.

## பேயாழ்வார் அவதாரம்

22-26 அந்த மல்லைமாநகர்க்கு வடக்கிலே கடற்கரையிலுள்ள 'மயிலை' என்னும் மாநகரிலே அந்நகரின் ஆதிகேசவப்பெருமாள் ஸந்நிதியின் அருகில் தோட்டத்திலுள்ள கிணற்றில் செவ்வல்லிப்பூவில் 'நந்தகம்' என்னும் வாளின் அம்ஶமாகப் பேயாழ்வார் அவதரித்தார். அவருடைய அவதார ஶ்லோகங்களும் உலகில் புகழ்பெற்று விளங்குகின்றன. (அவற்றின் பொருள் பின்வருமாறு)—

२४. अस्यावतारश्लोकाश्च गीयन्ते प्रथिता भुवि ।
दृष्टवानिति होवाच रमया मयिलाधिपः ॥

२५. कूपे रक्तोत्पले जातं महदाह्वयमाश्रये ।
पद्मारमणपादाब्जप्रेमभ्रान्त्या मनोज्ञया ॥
भ्रान्तयोगीति विख्यातं मुनिं वन्दे गुणाम्बुधिम् ॥

२६. तन्मास एवाविरभूत् विपश्चित् प्राचेतसर्क्षेऽत्र मयूरपुर्याम् ।
महाभिधानो मणिकैरवान्तात् श्रीनन्दकात्मा श्रितभक्तिरूपः ॥

२७. विष्वक्सेनस्तु भगवान् वैकुण्ठात् भुवमागतः ।
तेषां त्रयाणां महतां निर्हेतुककृपावशात् ॥

२८. विधाय पञ्चसंस्कारान् यावत्तत्त्वार्थसंपदः ।
सर्वार्थांश्चोपदिश्याशु स्वधाम प्रत्यपद्यत ॥

---

(1) மயிலைக்கு இறைவராய், 'திருவுடன் எம்பெருமானைக் கண்டேன்' என்று கூறியவராய், கிணற்றில் செவ்வல்லிப் பூவில் அவதரித்தவரான பேயாழ்வாரை ஆஶ்ரயிக்கிறேன். (2) நெஞ்சுக்கினியதான திருமகள் கேள்வனின் திருவடித் தாமரையன்புமயக்கத்தாலே ப்$_4$ராந்தயோகி$_3$ (பேயாழ்வார்) என்று புகழ்பெற்ற குணக்கடலான முனிவரை வணங்குகிறேன் (3) அதே மாதத்தில் சதயநக்ஷத்திரத்தில் மயிலை மாநகரிலே அழகிய கிணற்றினுள்ளிருந்து 'ஸ்ரீநந்த$_3$கம்' என்னும் வாளின் அம்ஶமாய், பரமப$_4$க்தியே வடிவெடுத்தவரான பேயாழ்வார் என்னும் பேரறிவாளர் அவதரித்தார்.

## முதலாழ்வார்களுக்குப் பஞ்சஸம்ஸ்காரம்

27-28. ஸ்ரீவைகுண்டத்திலிருந்து ஸேனைத்தலைவரான விஷ்வக்ஸேனர் இந்நிலவுலகிற்கு வந்து நிர்ஹேதுக க்ருபையினாலே அப்பெரியவர்கள் மூவருக்கும் பஞ்சஸம்ஸ்காரங்களைச் செய்து எல்லாத் தத்துவப்பொருள்களையும்

२९. नियतपुलकिताङ्गी निर्भरानन्दबाष्पा
गलितनिखिलसङ्गा गद्गदस्तोत्रगीतिः ।
अमृतलहरिवर्णा हर्षवृत्तोपपन्ना
विगतनरकभीतिर्विष्णुभक्तिर्विभाति ॥

३०. एवंरूपोक्तभगवद्भक्तिमान् महदाह्वयः ।
हृद्याविष्टहरिः श्रीशानुभवेनैव सन्ततम् ॥

३१. भ्रान्तवद्वर्तते यस्मात् भ्रान्तयोगीति कथ्यते ।
तेषां त्रयाणां भगवद्भक्तिस्तस्य विशेषतः ॥

३२. भ्रान्तनाम्नः सुमहती संजाता योगिनो यतः ।
महदाह्वयनामास्य बभूव प्रथितं भुवि ॥

---

ரஹஸ்யார்த்த₂ங்களையும் விரைவில் உபதே₃சித்துத் தமது இருப்பிடம் சேர்ந்தார்.

## பேயாழ்வாரின் பெருமை

29-33. "எப்போதும் மயிர்க்கூச்செறியும் அவயவங்களையுடையதாய், ஆனந்தக் கண்ணீர் பெருகப்பெற்றதாய், ப்ராக்ருத ஸம்ப₃ந்த₄ங்கள் அனைத்தும் நழுவப்பெற்றதாய், தழுதழுத்த குரலில் துதிகளைப் பாடுவதாய், அமுத வெள்ளம் போன்ற சொற்பெருக்கையுடையதாய், இன்புறுவதையே ஒழுக்கமாகக் கொண்டதாய், நரகபயமற்றதாய், விஷ்ணுபக்தியானது விளங்காநிற்கிறது." என்று சொல்லப்பட்ட ப₄க₃வத்₃ப₄க்தியையுடைய பேயாழ்வார் நெஞ்சில் இடம் பெற்ற ஹரியையுடையவராய், ஸ்ரீய:பதியின் அனுப₄வத்தாலேயே எப்போதும் மயக்கம்கொண்ட பேய்போலே விளங்குகையாலே "பேயாழ்வார்" என்று வழங்கப்படுகிறார். முதலாழ்வார் மூவருக்குமே ப₄க₃வத்₃ப₄க்தி இருந்தபோதிலும் இவ்வாழ்வாருக்கு மற்ற இருவரைக் காட்டிலும் ப₄க்தி மிக்கிருந்தபடியால் 'பேயாழ்வார்'

३३. नारायणपदाम्भोजे भ्रमद्भ्रमरवत्सदा।
स भ्रान्तयोगी तत्रैको वेदान्तिन्! गीयते महान्॥

३४. अयोनिसंभवाश्चैते महान्तः पुष्पसंभवाः।
निरस्ततामसरजोगुणा हरिकटाक्षतः॥

३५. सत्त्वनिष्ठाः प्राथमिकाः वेदान्तिन्! ते त्रयोऽभवन्।
प्रवृत्तिं च निवृत्तिं च कार्याकार्ये भयाभये॥

३६. बन्धं मोक्षं च या वेत्ति बुद्धिस्सा पार्थ सात्त्विकी।
एवमुक्तप्रकारेण शुद्धसत्त्वगुणा हि ते॥

---

என்று இவருக்கு உலகில் பெருமை ஏற்பட்டது. (பேய் என்னும் சொல்லுக்கு 'பெரிய' என்னும் பொருளுமுண்டு.) நாராயணனுடைய திருவடித் தாமரையில் சுற்றிச் சுழலும் வண்டுபோலவே பெரியவரான பேயாழ்வாரொருவரே புகழப்படுகிறார்.

## முதலாழ்வார்கள் மகிமை

34-44. மலரிலிருந்து தோன்றின மஹாபுருஷர்களான இம்மூவரும அயோநிஜர்கள் (ஒரு பெண்ணின் வயிற்றிலிருந்து தோன்றாதவர்கள்). எம்பெருமானுடைய கடாக்ஷத்தாலே ரஜஸ்தமோகுணங்களற்றவர்கள். நஞ்ஜீயரே! முதலாழ்வார்களான இம்மூவரும் ஸத்வகுணமொன்றிலேயே ஊன்றியவர்களாயிருந்தார்கள். "இவ்வுலகப் பலன்களை விளைக்கும தர்மம், மோக்ஷபலனை விளைக்கும தர்மம், இந்த தர்மநிஷ்டர்களுக்குச் செய்யத்தக்கவையும் செய்யத்தகாதவையுமான செயல்கள், இவர்களுக்கு பயப்பட வேண்டியதான ஶாஸ்த்ரவரமபுமீறல், பயமின்மையை விளைக்கும் ஶாஸ்த்ராநுஷ்டானம், ஸம்ஸாரத்தைப்பற்றியும், மோக்ஷத்தைப் பற்றியும் உண்மையறிவு ஆகியவற்றை எது அறிகிறதோ அதுவே ஸாத்விகமான அறிவாகும்" என்று கீதையில் [18-30] கூறியபடி பரிஶுத்தமான ஸத்வகுணத்தை உடையவர்களன்றோ அவர்கள்.

३७. दासभूताः स्वतस्सर्वे ह्यात्मानः परमात्मनः ।
नान्यथा लक्षणं तेषां बन्धे मोक्षे तथैव च ॥

३८. स्वत्वमात्मनि सञ्जातं स्वामित्वं ब्रह्मणि स्थितम् ।
आत्मदास्यं हरेः स्वाम्यं स्वभावं च सदा स्मर ॥

३९. ज्ञानानन्दमयो ह्यात्मा शेषो हि परमात्मनः ।
तत्स्वतस्सिद्धभगवद्दास्यैकरसभोगिनः ॥

४०. तद्वैराग्यज्ञानभक्तिसहिताः सर्वदाऽभवन् ।
बाल्यात्प्रभृति ते स्निग्धाः ह्यन्नपानादिवर्जिताः ॥

४१. गुणानुभवकैङ्कर्यरसभोगैकतत्पराः ।
हरेरज्ञातशब्दादिविषयास्ते त्रयोऽभवन् ॥

---

"எல்லா ஆத்மாக்களும் பரமாத்மாவுக்கு இயற்கையிலேயே அடியவர்களாயிருப்பவர்கள். ஸம்ஸாரத்திலிருக்கும்போதும் மோக்ஷத்திலிருக்கும்போதும் அவர்களுக்கு வேறுவிதமான லக்ஷணம் கிடையாது" "ஜீவாத்மாவிடம் உடைமையாயிருக்கும் தன்மையுள்ளது. ப்₃ரஹ்மத்திடம் உடையவனுயிருக்கும் தன்மை உள்ளது" "ஆத்மாவின் அடிமைத்தன்மையையும், ஹரியின் உடையவனுயிருக்கும் தன்மையையும், இவை இரண்டுமே இயல்பாயிருப்பவை என்பதையும எப்போதும் நினைப்பாயாக." "ஜ்ஞானுநந்தமயமான ஜீவாதமா பரமாத்மாவுக்கு அடிமைப் பட்டதன்றே" (என்னும் ப்ரமாணங்களின்படி உள்ள) இயல்பான ப₄க₃வத் கைங்கர்யரஸத்தையே அனுப₄விப்பவர்களாய், ஜ்ஞான ப₄க்திவைராக்₃யங்களோடு கூடியவர்களாய் அம்மூவரும் எப்போதும் இருந்தனர். இளமையிலிருந்தே அவர்கள் ஒருவரோடொருவர் அன்பு பூண்டிருந்தனர். அன்னம் பானம் முதலானவற்றை விலக்கியிருந்தனர். ப₄க₃வத்₃கு₃ணுநுப₄வத்திலும் கைங்கர்யரஸத்திலுமே

४२. अतस्संसारिभिस्साधं शब्दादिविषयातुरैः ।
मत्वातिदुस्सहोऽस्माकं सहवासश्च ते त्रयः ॥

४३. अज्ञातगतयोऽन्योन्यं पृथगेवं व्यवस्थिताः ।
ग्रामैकरात्रं ते भूम्यां सञ्चरन्तो व्यवस्थिताः ॥

४४. लक्ष्मीपतेः पूर्णकटाक्षलब्ध-
ज्ञानातिरेकार्जितसद्गुणौघाः ।
अयोनिजाताः प्रथमास्त्रयस्ते
विचेरुरुर्व्यां विदिताखिलार्थाः ॥

४५. स तदा भगवान्विष्णुः महाकारुणिको हरिः ।
एभिस्त्रिभिस्स्वात्मभूतैः भगवद्भक्तिपारगैः ॥

---

ஈடுபட்டிருந்தனர். ஶப்₃த₃ாதி₃ விஷயங்களையே அறியாதவர்களாய் அம்மூவரும் இருந்தனர். ஆகையாலே "ஶப்₃த₃ாதி₃ விஷயங்களிலேயே ஈடுபட்டிருக்கும ஸம்ஸாரிகளோடு ஸஹவாஸம் செய்வது நமக்குப் பொறுக்கவொண்ணாதது" என்று எண்ணி அம்மூவரும் ஒருவரது ஸஞ்சாரத்தைப்பற்றி மற்றொருவர் அறியாதவர்களாய் ஒவ்வொரு ஊரிலே ஒரு நாளே தங்கிக்கொண்டு இவ்வுலகில் தனித்தனியாக ஸஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள். ஒரு பெண் வயிற்றில் பிறவாத இம்முதலாழ்வார்கள் மூவரும் ஸ்ரீமந் நாராயணனுடைய பரிபூர்ண கடாக்ஷத்தாலே பெற்ற மயர்வற்ற மதிநலத்தாலே விளைந்த நற்குணங்களையுடையவர்களாய் எல்லா ஶாஸ்த்ரார்த்த₂ங்களையும் அறிந்தவர்களாய் இவ்வுலகில் ஸஞ்சரித்தார்கள்.

## ப₄க₃வத்ஸங்கல்பம்

45-48. பெருங்கருணையுள்ள எம்பெருமானை விஷ்ணு தனக்கு த₄ாரகர்களாய், ப₄க₃வத்₃ப₄க்திக்கடலின் கரையைக் கண்டவர்களான இம்மூவரைக்கொண்டு

४६. अनाद्यविद्यासम्बन्धवासनाक्रान्तचेतसाम् ।
संसारिणां निराकृत्य यदज्ञानं महत्तमम् ॥
४७. स्वभक्तिज्ञानवैराग्यगुणान् दापयितुं तदा ।
संकल्प्य पृथगेवोर्व्यां चरतां महतां महान् ॥
देहलीनगरे तेषां त्रयाणां सङ्गतिं व्यधात् ॥

४८. श्रीवामनक्षेत्रपुरे कदाचित्
संयोज्य शौरिः भगवानकस्मात् ।
अदभ्रवृष्टिं निशि कल्पयित्वा
प्रावेशयत् सङ्कटदेहलीं तान् ॥
४९. ततः कदाचित्कासारयोगीन्द्रः स्वेच्छयाऽनघ ! ।
देहलीनगरं प्राप वर्षेण रजनीमुखे ॥

---

அநாதி3யான ப்ரக்ருதிஸம்ப3ந்த4 வாஸனையாலே நிறைந்துள்ள நெஞ்சையுடைய ஸம்ஸாரிகளது அஜ்ஞானமாகிற பேரிருளைப்போக்கி, தன் விஷயமான ஜ்ஞான ப4க்திவைராக்3ய கு3ணங்களை அளிக்கச் செய்ய வேண்டுமென்று அப்போது ஸங்கல்பித்து, தனித்தனியாக இந்நிலவுலகில் திரிந்துகொண்டிருந்த இம்மூன்று பெரியவர்களையும் திருக்கோவலூரிலே (ஓர் இடைகழியிலே) சேரும்படியாகச் செய்தான். ஸ்ரீவாமனன் திரிவிக்ரமனாக ஸேவை ஸாதிக்கும் திருக்கோவலூரிலே எழுந்தருளியிருக்கும் ஆயனார் ஒருநாள் தற்செயலாக அவர்களை ஒன்று சேர்த்து அன்றிரவு பெருமழையைப் பொழியச் செய்து அவ்வூரிலுள்ள நெருக்கடியான ஓர் இடை கழியில் நுழையச் செய்தார்.

## ஒருவர் படுத்தார், இருவர் இருந்தனர், மூவர் நின்றனர்

49-*54 குற்றமற்ற நஞ்சீயரே! நெடுங்காலம் தனித் தனியாகத் திரிந்துகொண்டிருந்தபின் ஒருநாள் பொய்கை

५०. स तदा विप्रदेहल्यां स्थलं संप्राप्य सत्वरम् ।
एकस्यैवात्र शयितुं पर्याप्तमशयिष्ट तत् ॥

५१. भूताख्योऽपि तदा तत्र गत्वा स्थलमयाचत ।
स तस्यार्धं स्थलं तस्मै महाकारुणिको ददौ ॥

५२. निषण्णौ तावुभौ तत्र ततो दृष्ट्वा बुधोत्तमौ ।
भ्रान्तयोगी ततोऽप्येवं स्थलं तावदयाचत ॥

५३. सम्यग्दत्वा स्थलं तस्मै मुदमापतुरुत्तमाम् ।
शयनायोपवेशाय स्थलराहित्यकारणात् ॥

५४. उत्थितास्ते त्रयोऽतिष्ठन् वैष्णवागमहर्षिताः ।
वैष्णवो वैष्णवं दृष्ट्वा दण्डवत्प्रणमेत् भुवि ॥

---

யாழ்வார் பெருமழைபெய்து கொண்டிருந்த திருக்கோவலூருக்கு ஸூர்யாஸ்தமன ஸமயத்திலே தன் போக்கில் வந்து சேர்ந்தார். (மழைக்கு ஒதுங்க இடம்தேடி) விரைந்த அவர் அப்போது ஓர் ரிஷியின் வீட்டின் இடைகழியிலே இடம்பெற்றார். இவ்விடம் ஒருவருக்கே படுக்கப்போதுமானது (என்று எண்ணி), அவ்விடத்தில் படுத்துக்கொண்டார். பூதத்தாழ்வாரும் அப்போது அவ்விடத்துக்குச் சென்று மழைக்கு ஒதுங்க இடம் கேட்டார். பெருங்கருணையுடைய பொய்கையாழ்வார் அந்த இடத்தில் பாதியை அவருக்குக் கொடுத்தார். அவ்விருவரும் அவ்விடத்தில் வீற்றிருந்தனர். அவ்விருவரையும் பார்த்து (அங்குவந்த) பேயாழ்வார் மழைக்கு ஒதுங்க இடம் கேட்டார். அவருக்கும் நன்றாக நிற்க இடம் கொடுத்து அவ்விருவரும் பேருகப்பையடைந்தனர். படுப்பதற்கோ உட்காருவதற்கோ இடமில்லாமையால் (அவ்விடத்தில்) அம்மூவரும் நின்றனர். வைஷ்ணவர்கள் வந்தனரே என்று உகப்பையுமடைந்தனர்.

५५. तयोर्मध्यगतो विष्णुः शङ्खचक्रगदाधरः ।
५६. तुलसीकाननं यत्र यत्र पद्मवनानि च ॥
वसन्ति वैष्णवा यत्र तत्र सन्निहितो हरिः ।
५७. इत्युक्तरीत्या भगवान् स चैवं दिव्ययोगिनाम् ॥
तेषामनुग्रहार्थाय शंखचक्रगदाधरः ।
आविर्बभूव तन्मध्ये बृहद्रूपधरो हरिः ॥
५८. तत्र संकुचितस्थाने निर्बन्धोऽभूद्यतो महान् ।
आसारवर्षसंयुक्ते निशीथसमये तदा ॥
५९. अलक्षितान्योन्यतनुः कोऽयमित्येव तेऽब्रुवन् ।
इदं बद्धकपाटायां देहल्यामत्र ते वयम् ।

---

## ஆயனரின் ஆவிர்ப₄ாவம்

54*-*60 "வைஷ்ணவன் வைஷ்ணவனைக் கண்டால் தடிபோலே கீழே விழுந்து வணங்கவேணும். அவர்களுக்கிடையே ஶங்க₂சக்ரக₃தை₃களை த₄ரித்தவனை விஷ்ணு எழுந்தருளியிருக்கிறான்." "எவ்விடத்தில் துளசிககாடு இருக்கிறதோ, எங்கு தாமரைக் காடுகள் பூத்திருக்கின்றனவோ, எவ்விடத்தில் வைஷ்ணவர்கள் வாழ்கின்றனரோ, அங்கு எம்பெருமான் எழுந்தருளியிருக்கிறான்." என்று ப்ரமாணங்களில் கூறிய வகையில் ஶங்க₂சக்ரக₃தைகளை த₄ரித்தவனை எம்பெருமான் அந்த திவ்யயோகி₃களுக்கு அருள் புரிவதற்காக அவர்களுக்கிடையே பெரிய உருவத்துடன் தோன்றினன். நெருக்கடியான அந்த இடத்தில் அது காரணமாகப் பெரிய இடநெருக்கடி ஏற்பட்டது. "இரவு நேரத்தில் பெருமழை பொழியும்போது ஒருவரை ஒருவர் காண முடியாத இங்கு நெருக்குகிறவன் எவன்?" என்று அம்மூவரும் கூறினர்கள். "நன்றாகத் தாளிடப்பட்டிருக்கும் இவ்விடை கழியில் நாம் மூவரே நின்று கொண்டிருந்தோம். அப்படியிருக்க நாலாமவனை எவன் எப்படி இங்கு வந்தான்?" (என்று ஆராய்ந்தனர்.)

६०. अथ एव स्थिताः कोऽयं कथं तुर्यः समागतः ।
तदा संद्रष्टुकामास्ते भगवन्तमधोक्षजम् ॥

६१. निरस्तमायातमसः संपूर्णज्ञानदृष्टयः ।
कृत्वा पात्रमिमां भूमिं विधायाज्यं महोदधीन् ॥

६२. ज्वालां कृत्वा तथाऽऽदित्यं योगिनो गतकल्मषाः ।
प्रज्वाल्य तु ज्ञानदीपं ददृशुस्तं महौजसम् ॥

६३. तार्क्ष्याधिरूढं तटिदम्बुदाभं लक्ष्मीधरं वक्षसि पङ्कजाक्षम् ।
हस्तद्वये शोभितशङ्खचक्रं विष्णुं ददर्शुर्भगवन्तमाद्यम् ॥

---

## விளக்கேற்றி மூவரும் கண்ட காட்சி

*60*-*70* (ஆராய்ந்த வளவில் அங்கு வந்தவன் எம்பெருமானாகவே இருக்கவேண்டும் என்று நிச்சயித்து) நெஞ்சென்னும் உட்கண்ணால் யோகிகளால் காணப்படும் எம்பெருமானை அப்போதே காணவிரும்பியவர்களாய், ப்ரக்ருதி ஸம்பந்தத்தால் உண்டாகும் அஜ்ஞானமாகிற இருள் நீங்கப் பெற்றவர்களாய், குற்றமற்றவர்களாய், நிறைந்த அறிவுடையவர்களான அவர்கள் இந்த பூமிமுழுவதையும் அகலாகவும், சடல்களை அவ்வகலிலுள்ள நெய்யாகவும், ஸூர்யனை அவ்விளக்கில் எரியும் ஜ்வாலையாகவும் அமைத்து ஞானச்சுடர் விளக்கையேற்றி, பேரொளியையுடைய எமபெருமானைக் கண்டனர். கருடன் மேல் ஏறியிருப்பவனாய், மின்னலுடன் கூடிய மேகம் போன்றவனாய், திருமார்பில் லக்ஷ்மீதேவியை தரித்திருப்பவனாய், தாமரைக் கண்ணனாய், இருதிருக்கைகளிலும் ஶங்கசக்ரங்கள் விளங்கப்பெற்றவனாய், ஆதிபுருஷனாய், முழந்தாள்வரை தொங்கும் திருக்கைகளையுடையவனாய், அழகிய திருமேனியையுடையவனாய், இருபுறத்திலும் விளங்காநிற்கும் பூமி நீளாதேவிகளையுடையவனாய், பீதகவாடையுடையானாய், திருவாபர

६४. आजानुबाहुं कमनीयगात्रं
पार्श्वद्वये शोभितभूमिनीलम् ।
पीताम्बरं भूषणभूषिताङ्गं
चतुर्भुजं चन्दनरूषिताङ्गम् ॥

६५. बिम्बाधरं कुन्दसमानदन्तं
शरन्निशानाथसमानवक्त्रम् ।
नीलालकं दिव्यकिरीटजुष्टं
कर्णद्वये शोभितकुण்डलाढ्यम् ॥

६६. रत्नाङ्गदं मौक्तिकदिव्यहारं कटीतटे लम्बितहेमसूत्रम् ।
रत्नाङ्गुलीयं मणिकङ्कणाढ्यम् माणिक्यमञ्जीरसुमृष्टपादम् ॥

---

ணங்களால் அலங்கரிக்கப்பெற்ற அவயவங்களையுடையவனாய், நான்கு திருக்கைகளையுடையவனாய், சந்தனம் பூசப்பெற்ற அங்கங்களையுடையவனாய், கோவைக்கனி போன்ற அழகிய அதரங்களையுடையவனாய், முல்லைப்பூப் போன்ற பற்களையுடையவனாய், ஶரத்காலசந்திரன் போன்ற திருமுகமண்டலத்தையுடையவனாய், கறுத்த திருக்குழல்களையுடையவனாய், அப்ராக்ருதமான கிரீடத்தையுடையவனாய், திருக்காதுகளில் ஒளிவிடும் குண்டலங்களையுடையவனாய். மணிகள் பதித்த தோள்வளைகளையுடையவனாய், முத்துக்களாலான அப்ராக்ருதமான ஹாரங்களையுடையவனாய், திருவரையில் விளங்கும் திருவரைநாணையுடையவனாய், மணிகள் பதித்த மோதிரங்களையுடையவனாய், மணிகள் பதித்த கைவளைகளையுடையவனாய், மணிகளோடு கூடிய சதங்கைகளோடு விளங்கும் திருவடிகளையுடையவனாய், மந்தார மாலைகளால் அலங்கரிக்கப் பெற்ற திருக்குழற்கற்றையையுடையவனாய், ஸ்ரீ கௌஸ்துபத்தாலே பிரகாஶிக்கும் திருக்கழுத்தையுடையவனாய், ஸ்ரீ வத்ஸத்தால் விளங்கும் திருமார்பையுடையனாய், அழகிய அலங்காரத்தை

௬௭. मन्दारमालाञ्चितकेशबन्धं
श्रीकौस्तुभोद्भासितकण्ठदेशम् ।
श्रीवत्सवक्षं कमनीयवेषं
वेदान्तवेद्यं मनसोऽप्यगम्यम् ॥

௬௮. अप्राकृतं दिव्यमनन्तरूपं
यद्योगिगम्यं गुणसंवियोगम् ।
अत्यद्भुतं कोटिरविप्रकाशं
अनूपमं तं सनकाद्यगम्यं ॥

௬௯. ज्ञानदृष्ट्या विलोक्यैवं अनुभूयाऽसकृद्धरिम् ।
निमग्नास्ते त्रयः सम्यक् ब्रह्मानन्दमहाह्रदे ॥

௭௦. तज्जातातिशयानन्दाः न ममुस्तत्तनूषु ते ।
ततो जगद्धितार्थाय कासारप्रमुखास्त्रयः ॥

---

யுடையவனாய், வேதாந்தத்தால் அறியப்படுபவனாய், மனத்தாலும் அறியவொண்ணாதவனாய், அப்ராக்ருதமானவனாய், பரமபத₃த்திலிருப்பவனாய், அளவற்ற அவதார ரூபங்களை யுடையவனாய், யோகிகளால் அறியத்தக்கவனாய், நற்குணங்கள் அனைத்தும் நன்கு சேரப் பெற்றவனாய், மிகவும் ஆஶ்சர்யமானவனாய், கோடிஸூர்யப்ரகாஶனாய், ஒப்பற்றவனாய், ஸனகர் முதலானவர்களாலும அளவிட்டறியவொண்ணாதவனாய், ப₄க₃வானான விஷ்ணுவை அம்மூவரும் கண்டனர். ஞானக் கண்ணாலே இவ்வண்ணமாகக்கண்டு பலகாலும் எம்பெருமானை அனுப₄வித்து ப்₃ரஹ்மாநந்த₃மாகிற பெருங்குளத்தில் அம்மூவரும் ஆழ்ந்தவர்களாய், அவ்வனுப₄வத்தால் உண்டான மிகுதியான ஆனந்த₃த்தையுடையவர்களாய் எம்பெருமானுடைய ஸ்வரூபம், ரூபம் முதலானவற்றை அளவிட்டறியவொண்ணாதவர்களானார்கள்.

७१. तमेवार्थं समुद्धृत्य यद्ब्रह्मानुभवोद्भवम् ।
प्रबन्धान् द्राविडान् दिव्यान् चक्रुरन्तादिनामकान् ॥
७२. मोक्षैकहेतून् त्रीन् सम्यक् शतगाथाविराजितान् ।
अष्टोत्तरशतं विष्णोः मुख्यस्थानानि भूतले ॥
७३. स्थलानि तत्र चत्वारि तेन कासारयोगिना ।
अभिष्टुतानि वेदान्तिन्! प्रथमं प्रेमपूर्वकम् ॥
७४. श्रीरङ्गं वेङ्कटाद्रिश्च श्रीकाञ्ची देहलीपुरी ।
स्थलानि तत्र चत्वारि भूताख्येन स्तुतानि च ॥

---

## மூன்று திருவந்தாதிகளின் அவதாரம்

70*-*77. அதற்குப்பிறகு பொய்கையாழ்வார் முதலான மூவரும் தங்களுடைய ப்3ரஹ்மாநுப4வத்தின் போக்கு வீடாக ஏற்பட்ட, அந்த விளக்கேற்றித் திருமாலைக்கண்ட விஷயத்தையே பொருளாகக்கொண்டு அந்தாதி என்னும் பெயருடைய மூன்று தமிழ் தி3வ்யப்ரப3ந்த4ங்களை உலக நன்மையின் பொருட்டு அருளிச்செய்தனர். அந்த மூன்று திருவந்தாதிகளில் ஒவ்வொன்றும் நூறு பாடல்களைக் கொண்டவையாய், மோக்ஷத்தையே அளிக்கக்கூடியவையாய் நன்கு அமைந்தது. இந்நிலவுலகில் ஸ்ரீமந்நாராயணன் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் இடங்கள் நூற்றெட்டாகும். நஞ்சீயரே! அந்தப் பொய்கையாழ்வாரால் அந்த நூற்றெட்டுத் திருப்பதிகளில், முக்கியமாக ஸ்ரீரங்கம், திருவேங்கடமலை, திருக்கோவலூர், (தம்முடைய அவதார ஸ்த2லமான) ஸ்ரீ காஞ்சீ (திருவெஃகா) ஆகிய நாலு தி3வ்ய தே3ஶங்களும அன்போடு பாடப்பட்டன. பூதத்தாழ்வாரால் அத்திருப்பதிகளில் ஸ்ரீரங்கம், திருவேங்கடமலை, திருக்கோவலூர், தம்முடைய அவதார ஸ்த2லமான திருக்கடன்மல்லை என்னும் நாலு தி3வ்ய தே3ஶங்

७५. श्रीरङ्गं वेङ्कटाद्रिश्च देहलीनगरं तथा ।
स्वावतारस्थलं चैव यन्मल्लानगरं वरम् ॥

७६. महदाख्येन चत्वारि संस्तुतानि स्थलानि च ।
श्रीरङ्गं वेङ्कटाद्रिश्च देहलीपुरमुत्तमम् ॥

७७. मयूरनगरोदीच्यां श्रीमत्कैरविणीतटम् ।
संसारिणः पठन्त्येतान् प्रबन्धान् भगवत्परान् ॥

७८. अविद्याकर्मसंजातमपोह्याज्ञानमञ्जसा ।
गच्छन्ति वैष्णवा भूत्वा तद्विष्णोः परमं पदम् ॥

७९. एवं माधवदासार्य ! सरोयोग्याद्यस्त्रयः ।
गाथाशतत्रयं कृत्वा सर्वं जगदपालयन् ॥

---

களும் அவ்வண்ணமே பாடப்பட்டன. பேயாழ்வாரால ஸ்ரீரங்கம், திருவேங்கடமலை, சிறப்புடைய திருக்கோவலூர், (தமமுடைய அவதார ஸ்த₂லமாகிற) திருமயிலையின் வடக்கிலுள்ள திருவல்லிக்கேணி என்னும் நான்கு தி₃வ்ய தே₃ஶங்களும் அவ்வண்ணமே பாடப்பட்டன.

## திருவந்தாதிகளின் பெருமை

77*-83. எம்பெருமானைப்பற்றியவையான இந்த ப்ரப₃ந்த₄ங்களை ஸம்ஸாரிகள் படிக்கின்றனர். அவர்கள் வைஷ்ணவர்களாகி அவித்₃யை எனப்படும காமத்தினுலுண்டான அஜ்ஞானத்தை நன்கு நீக்கி, விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைகிருர்கள். மாத₄வதா₃ஸரே! இவ்வண்ணமாக, பொய்கையாழ்வார் முதலான மூவருமமூன்று நூற்றந்தாதிகளையும் அருளிச்செயது உலகனைத்தையும் ரக்ஷித்தார்கள். இவ்வாழ்வார்களால் அருளிச்செய்யப்பட்ட மூன்று தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களையும் நியமத்தோடும் ப₄க்தியோடும் எவனெருவன் படிக்கிருனே அவன் எல்லாப் பாபங்களினின்றும் விடுபட்டவனய்,

८०. यः पठेत्प्रयतो भक्त्या प्रबन्धं योगिभिः कृतम् ।
सर्वपापविनिर्मुक्तो विष्णुलोके महीयते ॥

८१. तैरेवं भगवान् यत्तत्साधयित्वा स्ववाञ्छितम् ।
अभिष्टुतोऽमरैस्साधं स्वधाम प्रत्यपद्यत ॥

८२. कासारभूतभ्रान्तार्याः ततस्ते मिलितास्त्रयः ।
लोकानुग्रहकर्तारो ह्यटन्तः पूर्ववत्स्थिताः ॥

८३. य इदं शृणुयान्नित्यं भक्त्याख्यानमतन्द्रितः ।
स सर्वपापनिर्मुक्तः सत्यं विष्णुपदं व्रजेत् ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे देहलीनगरे कासारभूत-भ्रान्तार्याणां भगवद्दर्शनप्राप्तिकथनं नाम सप्तसप्ततितमोऽध्यायः ॥

---

விஷ்ணுலோகத்தில் (நித்யமுக்தர்களால்) கொண்டாடப் படுகிறான். இவ்வண்ணமாக எம்பெருமான் தன் விருப் பத்தை நிறைவேற்றிக்கொண்டு அனைவராலும் கொண் டாடப்பட்டவனாய், ஶங்க₂சக்ரங்கள் முதலான நித்யஸூரிக ளோடுகூடத் தனது பரமபத₃த்தை அடைந்தான். பொய்கை பூதம் பேயாழ்வார்களாகிற மூவரும் அதற்குப் பின் கூடியே இருந்தவர்களாய் உலகுக்கு அருள்புரிந்து கொண்டு முன்போலவே ப₄கவத₃னுப₄வத்தில் ஈடுபட்டுக் கொண்டு நாடெங்கும் திரிந்துவந்தனர். எவனொருவன் எப்போதும் சோம்பலில்லாமல் ப₄க்தியோடு இந்தச் சரித்திரத்தைக் கேட்கிறானோ, அவன் எல்லாப் பாபங்களி னின்றும் நீங்கினவனாய், விஷ்ணுவின் பரமபத₃த்தை அடை வான் என்பதில் ஐயமில்லை.

**ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ப₄ட்டார்ய வேதா₃ந்தி ஸம்வாத₃த்தில் திருக்கோவலூரில் பொய்கை பூதம் பேயாழ்வார்கள் எம்பெருமானைக் கண்டதைக் கூறும் எழுபத்தேழாம் அத்தியாயம் நிறைவுற்றது.**

अष्टसप्ततितमोऽध्यायः ॥

१. तच्चरित्रं महत्पुण्यं श्रुत्वाऽस्मद्यतिरादरात् ।
भट्टार्यं प्रणिपत्योर्व्यां प्रहृष्टः प्रत्यभाषत ॥

२. सरोयोग्यादिचरितं भवतः कृपया श्रुतम् ।
इदानीं श्रोतुमिच्छामि भक्तिसारस्य वैभवम् ॥

३. सच्चरित्रामृतं पुण्यं त्वन्मुखाम्भोजनिःसृतम् ।
पिबतः श्रोत्रचुलकैः तृप्तिर्नाभूत् गुरो! मम ॥

४. भट्टार्यस्तद्वचः श्रुत्वा सन्तुष्टस्तं प्रशस्य च ।
प्रभावं भक्तिसारस्य प्रवक्तुमुपचक्रमे ॥

---

# எழுபத்தெட்டாவது அத்தியாயம்

## திருமழிசையாழ்வார் அவதாரம்

### அவதாரிகை

1-4. முதலாழ்வார்களின் பரமபாவனமான சரிதத்தைக்கேட்டு. நஞ்சீயர் ஆர்வத்துடன் ப₄ட்டரை வணங்கி மிக உகந்தவராயப் பின்வருமாறு கூறினர்—"ஆசார்யரே! பொய்கையார் முதலான முதலாழவார்களின் சரிதம் தேவரீருடைய கருணையால் அடியேனல் கேட்கப்பட்டது. இப்போது (நான்காமாழவாரான) ப₄க்திஸாரரெனும் திருமழிசையாழ்வாரின் வைப₄வத்தைக் கேட்க விரும்புகிறேன். தேவரீருடைய திருமுகத்தாமரையிலிருந்து பெருகும் நல்லோர்களின் சரிதமாகிற அதிபாவனமான அமுதத்தை, காதுகளாகிற கைப்பிடிகளாலே பருகும அடியேனுக்குப் போதுமென்னும் திருப்தி ஏற்படவில்லை" என்று. நஞ்சீயர் வார்த்தையைக்கேட்டு, ஸ்ரீ பராஶரப₄ட்டர் மிக உகந்து அதைக் கொண்டாடி, திருமழிசையாழ்வாரின் வைப₄வத்தைச் சொல்லத் தொடங்கினர்:—

௫. शक्तिपञ्चमयविग्रहात्मने
शुक्तिहारजितचित्तहारिणे ।
मुक्तिदायकमुरारिपादयोः
भक्तिसारमुनये नमो नमः ॥

௬. इत्येवं वन्दनं कृत्वा भट्टार्यस्तमथाब्रवीत् ।
लोकसंरक्षणार्थाय जातः कृष्णो यथा भुवि ॥

௭. एकत्र जातो ह्यन्यत्र विष्णुः संवर्धितो महान् ।
तथैवायं भक्तिसारो जातः सम्यगवर्धत ॥

௮. ततोऽखिलजगत्पद्मबोधायाच्युतभानुना ।
देवकीपूर्वसन्ध्यायामाविर्भूतं महात्मना ॥
एवं यदुकुले कृष्णः संजज्ञे किल सुव्रत ! ॥

---

## கண்ணனும் திருமழிசைப் பிரானும்

"5-*12. அப்ராக்ருதமான ஐந்து ஶக்திகளை உடைய தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தையுடைய எம்பெருமானைத் தன்னுள்கொண்டவராய், ஶுக்திஹாரன் எனும் ஸித்₃த₄னை ஜயித்து அவன் மார்பிலணிந்த ஹாரத்தை வென்றவராய், மோக்ஷமளிக்கும் முராரியின் திருவடிகளில் ப₄க்தியின் ஸாரபூ₄தராயிருக்கையால் 'ப₄க்திஸாரர்' என்னும பெயர் பெற்றவரான திருமழிசையாழ்வாருக்கு வணக்கம" என்று வணக்கத்தைச் செய்து ஸ்ரீபராஶரப₄ட்டர் ப₄க்திஸார வைப₄வத்தைக் கூறலுற்ருர். லோகத்தை ரக்ஷிப்பதற்காக எப்படி மஹாவிஷ்ணுவான கிருஷ்ணன் இவ்வுலகில் அவதரிக்கும்போது ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளர்ந்தானே அப்படியே இவரும் ஒருவருக்குப பிறந்து மற்ருெருவரால் நன்கு வளர்க்கப் பெற்ருர். "அதற்குப்பின் பரமாத்மாவாய், அச்யுதனாகிற ஸூர்யன் தே₃வகியாகிற விடியற்காலையில் அகில உலக

९. अनार्द्रमार्द्रं विरसं रसाढ्यं
अपल्लवं पल्लवितं तदाऽऽसीत् ।
गावो बहुक्षीरदुघा बभूवुः
नारायणे नन्दकुलं प्रविष्टे ॥

१०. एवं नन्दकुले कृष्णो वेदान्तिन्! समवर्धत ।
कनकाङ्ग्यां भार्गवस्य सोऽयं जज्ञे तथा महान् ॥

११. अवर्धत ततो योगी वेत्रसंपुटकृद्गृहे ।
भक्तिसारः तथा पूर्वं जनित्वैकत्र योगिराट् ॥

१२. अन्यत्रावर्धतावन्यां कृष्णवल्लोकरक्षकः ।
पूर्वमत्रिर्वसिष्ठश्च भृगुर्भार्गव एव च ॥

---

மாகிற தாமரை மலர்வதற்காகத் தோன்றினன்'' (வி. பு. 5-3-2) என்று சொல்லப்பட்டபடி கண்ணன் யது₃குலத்திலே தோன்றினனன்றோ. ''நாராயணனாகிற கண்ணன் நந்த₃குலத்தை அடைந்தவுடன், ஈரமில்லாததெல்லாம் ஈரமுள்ளதாயிற்று. சுவையற்றதெலலாம் சுவை நிறைந்ததாயிற்று. தளிர்க்காததெல்லாம் தளிர்க்கத்தொடங்கிற்று. கறவாத மாடுகள் நிறைந்த பால் கறந்தன'' என்று சொல்லப்பட்டபடியே அந்தக் கண்ணன் நந்த₃குலத்திலேயன்றோ வளர்ந்தான். அவ்வண்ணமே ப்₄ருகு₃குலத்தில் உதித்த பா₄ர்க₃வரிஷிக்குக் கனகாங்கி₃ என்னும் தே₃வஸ்த்ரீயிடம் மஹாபுருஷரான இந்த ப₄க்திஸாரர் அவதரித்தார். அதற்குப்பின் இவ்வாழ்வார் ஒரு பிரம்பறுப்பானுடைய வீட்டில் வளர்ந்தார். ஆக. லோகரக்ஷகரான இவரும் லோகரக்ஷகனான கண்ணனைப்போலே ஓரிடத்தில் பிறந்து ஓரிடத்தில் வளர்ந்தார்.

१३. पुलस्त्यश्चाङ्गिराश्चान्ये सर्वे ब्रह्मर्षयस्तथा ।
ब्रह्मलोकं समासाद्य ब्रह्माणममितौजसम् ॥

१४. प्रणम्याञ्जलिहस्तास्ते वचनं चेदमब्रुवन् ।
वयं तु भूम्यामुत्कृष्टक्षेत्रे कर्तुं महत्तपः ॥

१५. यत्नेन महता ब्रह्मन्! सांप्रतं समवस्थिताः ।
विचार्यालोच्य निश्चित्य ब्रह्मन्! यत्नेन भूयसा ॥

१६. क्षेत्राणामुत्तमं क्षेत्रं ब्रूहि नः करुणाकर! ।
प्रतिगृह्य वचस्तेषां ब्रह्मा त्रिभुवनेश्वरः ॥

१७. विश्वकर्माणमाहूय व्याजहार वचः शुभम् ।
पञ्चाशत्कोटिविस्तीर्णां सशैलार्णवकाननाम् ॥

---

## திருமழிசை மஹிமை

12*-*23. முன்னொரு காலத்தில் அத்ரி, வஸிஷ்ட$_2$ர், ப்$_4$ருகு$_3$, அவருடைய பிள்ளையான பா$_4$ர்க$_3$வர், புலஸ்த்யர், அங்கி$_3$ரஸ் முதலான எல்லா ப்$_3$ரஹ்மரிஷிகளும் ப்$_3$ரஹ்ம லோகத்தையடைந்து அளவற்ற தேஜஸ்ஸையுடைய ப்$_3$ரஹ்மாவை வணங்கி, கைகூப்பியவர்களாய் "ப்$_3$ரஹ்ம தே$_3$வரே! நாங்கள் உயர்ந்ததொரு க்ஷேத்ரத்தில் மேலான தவத்தைப் பெருமுயற்சி செய்து அனுஷ்டி$_2$ப்பதற்கு இப்போது முற்பட்டுள்ளோம். கருணைக்கடலே! நீர் மிகவும் முயன்று விசாரித்து ஆலோசித்து நிர்ணயம் செய்து க்ஷேத்ரங்களுக்குள்ளே மிகவுயர்ந்த க்ஷேத்ரம் எது என்று எங்களுக்குக் கூறவீராக" என்னும் வார்த்தையைக் கூறினார்கள். அவர்களுடைய வார்த்தையை ஏற்றுக்கொண்டு மூவுலகுக்கும் நாயகரான ப்$_3$ரஹ்மா தேவதச்சனை விஶ்வ கர்மாவை அழைத்து "ஐம்பதுகோடி யோஜனை பரப்பளவு உள்ளதும், மலை, கடல், காடுகள் அடங்கியதுமான

१८. महीमिमां महीसारक्षेत्रं च तुलयाधुना ।
प्रदर्शय त्वमेतेषां विशेषं ज्ञातुमिच्छताम् ॥
१९. एतयोरधुना त्वष्टः! ब्रह्मर्षीणां महात्मनाम् ।
तत्तथैव कृतं तेन शासनात् ब्रह्मणस्तदा ॥
२०. त्वष्टा जगद्धितार्थाय ब्रह्मर्षीणां च सन्निधौ ।
पृथिव्याधिष्ठिततुला तूर्ध्वं चोत्पपात सा ॥
२१. महीसारक्षेत्रतुला भारावत्या बभूव सा ।
क्षेत्रस्यास्य तदा धाता नामधेयं ददौ स्वयम् ॥
२२. महीसारक्षेत्रमिति तेनान्वर्थं चतुर्मुखः ।
अनुज्ञातास्ततस्सर्वे ब्रह्मणा ऋषयस्तदा ॥
२३. क्षेत्रे तपो महीसारे कुर्वन्तः सुखमास्थिताः ।
पश्चिमे योजनार्धे तु विदेहाधिष्ठिते वने ॥

---

பூ₄மியின் மற்ற பகுதிகளேயும் இந்தத் திருமழிசை க்ஷேத்ரத்தையும் தராசில் வைத்து நிறுத்து, எது சிறந்த க்ஷேத்ரம் என்று அறிய விரும்பும் மஹாத்மாககளான இந்த ப்₃ரஹ்மரிஷிகளுக்கு இவ்விரண்டின் ஏற்றத்தாழவைக் காட்டுவாயாக" என்று மங்க₃ளமான வார்த்தையைக் கூறினர். பிரமனின் ஆணையை ஏற்று, தேவதச்சனை விஶ்வகர்மாவும் ப்₃ரஹ்மரிஷிகளின் முன்னிலையிலேயே அப்போதே உலக நன்மையின்பொருட்டு அவ்வண்ணமே காட்டினன். பூ₄மியைத் தாங்கியிருந்த தட்டு அப்போதே உயரக் கிளம்பிற்று. திருமழிசைத் திருப்பதியைத் தாங்கியிருந்த தட்டு பாரத்தினல் கீழே தாழ்ந்தது. நான்முகனும் இந்த க்ஷேத்ரத்துக்கு அப்போதே "மஹீஸார க்ஷேத்ரம்" என்னும் பொருத்தமான பெயரைத் தானே சூட்டினன். அப்போதே பிரமனல் அந்த ரிஷிகள் அனைவரும் விடை கொடுக்கப்பெற்று, அந்தத் திருமழிசை வளம்பதியில் தவம் புரிந்துகொண்டு இனிது வாழ்ந்துவந்தனர்.

२४. भार्गवो दीर्घसत्रेण वासुदेवं सनातनम् ।
अभिपूज्य यथान्यायमिति नित्यं प्रकल्पयत् ॥

२५. अर्थोयमत्र ब्रह्माण्डपुराणेषु प्रतिष्ठितः ।
एवं महीसारपुरे भार्गवो मुनिसत्तमः ॥

२६. भगवन्तं समुद्दिश्य चचार सुमहत्तपः ।
भीताश्चोग्रेण तपसा भार्गवस्याखिलाः सुराः ॥

२७. तत्तपोहरणार्थाय प्रेषयामासुरञ्जसा ।
सुराङ्गना महाप्रौढाः रूपलावण्यपेशलाः ॥

२८. वसन्ते मन्मथोपेताः महीं तां समुपागताः ।
महीसारक्षेत्रवने तपन्तं तप उत्तमम् ॥

---

## திருமழிசையாழ்வார் அவதாரம்

23*-43. இந்தத் திருமழிசைக்கு அரையோஜனை தூரம் மேற்கே தே₃ஹத்தில் பற்றற்ற பல ரிஷிகள் வாழும் காட்டில் ப்₄ருகு₃குலத்தில் உதித்த ப₄ார்க்க₃வரிஷி தீ₃ர்க்க₄ ஸத்ரயாக₃த்தாலே ஆதிபுருஷனை வாஸுதே₃வனை முறைப்படி ஆராத₄னம் செய்து, தினமதோறும் தவம் புரிந்துவந்தார். இவ்விஷயம் ப்₃ரஹ்மாண்ட₃ புராணத்தில் சொல்லப்பட்டுள்ளது. இவ்வண்ணமாக, திருமழிசை வளம்பதியில் முனிவர்தலைவரான ப₄ார்க்க₃வர் ப₄க₃வானைக் குறித்துக் கடுந்தவம்புரிந்து வந்தார். ப₄ார்க்க₃வருடைய இந்தக் கடுந்தவத்தைக்கண்டு பயந்த தே₃வர்கள் அனைவரும் அவருடைய தவத்தைக் கெடுப்பதற்காக மிக வல்லவர்களும், வடிவழகு நிறைந்தவர்களுமான தே₃வஸ்த்ரீகளை விரைவில் அனுப்பினார்கள். வஸந்தகாலத்தில் மன்மதனோடுகூட இந்நிலவுலகுக்கு வந்த அந்த தே₃வஸ்த்ரீகளும் திருமழிசைக் காட்டில் கடுந்தவம் புரியும்

२९. तं भार्गवमुनिं वीक्ष्य बिभ्युस्सर्वाः सुराङ्गनाः ।
तन्मध्ये चातिनिपुणा कनकाङ्गीति विश्रुता ॥

३०. सुराङ्गनारत्नभूता सा साक्षाद्विश्वमोहिनी ।
मन्मथस्य वसन्तस्य सहायेन सुराङ्गना ॥

३१. नृत्यगीतादिनैपुण्यैः मोहयामास भार्गवम् ।
विचित्रं विष्णुमायाया यत्तत् शृणु समाहितः ॥

३२. अजय्या वैष्णवी माया योषिद्रूपा न संशयः ।
वेदान्तिन्! भार्गवस्याग्रे स्थाणुभूतस्य योगिनः ॥

३३. अगायत महद्गीतं श्रवणानन्ददायकम् ।
कनकाङ्गी महच्चित्रं कृष्णगीतमिदं परम् ॥

३४. विस्मितस्तेन गीतेन सम्यगुन्मील्य लोचने ।
आलोक्यास्या रसं किञ्चित् मोहमाप मुनीश्वरः ॥

---

பா₄ர்க்க₃வமுனிவரைப் பார்த்து பயந்தனர். அவர்களுக்கிடையே மிகவல்லவளாய், தே₃வஸ்த்ரீகளுக்குத் தலைவியாய், நேரே உலகம் முழுவதையும் மயக்கக்கூடியவளாய், கனகாங்கி என்று பெயர்பெற்ற ஒருத்தி மன்மதவஸந்தர்களின் துணையோடு நாட்டியம், கீ₃தம் முதலான ஸாஹஸங்களாலே பா₄ர்க்க₃வமுனிவரை மயக்கினாள். நஞ்ஜீயரே! விஷ்ணுமாயையின் ஆஶ்சர்யத்தைக் கவனமாகக் கேட்பீர். பெண்ணுருக்கொண்டிருக்கும் விஷ்ணுமாயை எவராலும் வெல்லமுடியாது என்பதில் ஐயமில்லை. மரம்போல நின்று தவம்புரியும் பா₄ர்கக₃வமுனிவருக்கு முன்னால செவிக்கினியதாய், கிருஷ்ணனைப்பற்றியதான மேலானதான பெரும்பாட்டொன்றைக் குறிப்பாகப் பாடினாள் அக்கனகாங்கி. அந்தப் பாட்டினால் வியப்புற்றுக் கண்களைத் திறந்து பார்த்த அந்த முனிவர்தலைவர் அவளுடைய அழகைக்கண்டு சிறிது மோஹமடைந்தார். அப்போது

३५. तदा ननर्त बहुधा कनकाङ्गी सविभ्रमम् ।
साभिप्रायं स्तनप्रान्तं प्रदर्शितवती मुनेः ॥
३६. गीतेन नृत्यमानायाः कनकाङ्ग्याः सुवर्चसः ।
लावण्यविभ्रमं चास्याः विलोक्यातिमनोहरम् ॥
३७. भार्गवोऽपि महायोगी स मन्मथवशं गतः ।
रमयामास तन्वङ्गी मुनिना भार्गवेण सा ॥
३८. संयग्विचित्रसुरतैः वसन्ते चित्रकानने ।
कनकाङ्ग्या तया सार्धं सञ्चरन् वनराजिषु ॥
३९. भ्रष्टयोगस्तदा रेमे कञ्चित्कालं महातपाः ।
सा चाप्सरोललामैषा रञ्जयन्ती मुनेर्मनः ॥
४०. यत्तत्स्वर्गसुखं तस्य प्रददौ यज्ञसाधितम् ।
भार्गवस्य मुनेः पत्नी गर्भमाधत्त सुन्दरी ॥

---

கனகாங்கி மிக அழகாக நாட்டியமாடினாள். தன் காமக் கருத்து வெளிப்படும்படி முனிவருக்குத் தன்னுடைய கொங்கைத்தலத்தைக் காட்டினாள். பாடிக்கொண்டு ஆடும் பேரொளியுள்ள கனகாங்கியின் காண்பார் கருத்தை ஈர்க்கும் வடிவழகைக்கண்டு மஹா யோகி₃யான ப₄ார்க்க₃வரும் காமவசப்பட்டுவிட்டார். மெல்லியலாளான அக்கனகாங்கி ப₄ார்க்க₃வமுனிவரோடு அந்த ஆஶ்சர்யமான காட்டில் வஸந்த காலத்தில் ஆஶ்சர்யமான காமபே₄ாக₃ முறைகளாலே நன்கு இன்பம் துய்த்தாள். கனகாங்கியான அவளோடுகூடத் திரிந்துகொண்டிருந்த மஹாதபஸ்வியான ப₄ார்க்க₃வர் யோக₃த்தைக்கைவிட்டவராய், அப்போது அவளோடு சிலகாலம் சிற்றின்பத்தை அனுப₄வித்தார். அந்த தே₃வஸ்த்ரீகளின் தலைவி முனிவரின் மனத்தை உகப்பித்துக்கொண்டு அவரது யஜ்ஞப₂லமான ஸ்வர்க்க₃ ஸுக₂த்தை அவருக்குக் கொடுத்தாள். ப₄ார்க்க₃வ முனிவரின் பத்னியாகிவிட்ட அவ்வழகி கருத்தரித்தாள். அவள்

४१. तं भक्तिसारं योगीशं कनकाङ्गी सुवर्चसम् ।
विभवाब्दे पुष्यमासे चतुर्थ्यां कृष्णपक्षके ॥

४२. तुलालग्ने भक्तिसारो मघायां गुरुवासरे ।
कनकाङ्ग्यां भार्गवस्य जज्ञे चक्रांशतो महान् ॥
श्रीदिव्यसूरिचरिते ह्यवतारोऽस्य गीयते ॥

४३. सा गर्भमाधत्त मुनेश्च पत्नी
सुदर्शनांशेन तदानुविष्टः ।
पपात गर्भो भुवि पौष्यमासे
मघाभिधाने महनीयतारे ॥

४४. रहितावयवं दृष्ट्वा तत्पिण्डाकृतिमद्भुतम् ।
कनकाङ्गी वने तत्र वेत्रवेण्वादिसंकुले ॥

---

மஹாதேஜஸ்வியான திருமழிசையாழ்வாரை விப₄வ வருஷம் தைமாதம் க்ருஷ்ணபக்ஷசதுர்த்தி₂யில் மகநக்ஷத்ரத்தில் வியாழக்கிழமையன்று துலாலக்₃னத்தில் ஈன்றெடுத்தாள். இந்த மஹாபுருஷரான ப₄க்திஸாரர் ப₄ார்க்க₃வ முனிவருக்குக் கனகாங்கியிடம் ஸுதர்சன சக்ரத்தின் அம்சத்தையுடைய குமாரராக அவதரித்தார். ஸ்ரீ தி₃வ்யஸூரி சரிதத்தில் அவருடைய அவதாரம் பின்வருமாறு பாடப்படுகிறது.- "முனிவருடைய பத்னியானவள் கருத்தரித்தாள். ஸுத₃ர்ஶநாழ்வானின் அம்ஶமாக அவருடைய கருப்பையில் புகுந்திருந்த க₃ர்ப்ப₄ம் தைமாதத்தில் சிறப்பு மிக்க மக நக்ஷத்ரத்தில் நிலத்தில் விழுந்தது."

## பெற்றார் பெற்றொழிந்தார்

44-45. ஆஶ்சர்யமான அந்த க₃ர்ப்ப₄ம் அவயவங்கள் இல்லாமல் ஒரே பிண்ட₃ உருவாயிருப்பதைப் பார்த்து, தே₃வஸ்த்ரீயான அக்கனகாங்கி அக்காட்டில், பிரம்பு மூங்கில்

४५. निकुञ्जे सहसोत्सृज्य ययौ स्वर्गं सुराङ्गना ।
ततः स लज्जितः खिन्नः तपस्संक्षयकारणात् ।
भार्गवोऽपि मुनिश्रेष्ठः तत्रान्यद्वनमाविशत् ॥

४६. गर्भः स कालेन विभिद्य वंशी-
गर्ते गरुत्मानिव डिम्भरूपः ।
स्तन्याभिलाषेण ततः क्षुधार्तः
स्वरैर्विरोदीद्विजने प्रदेशे ॥

४७. लक्ष्मीकटाक्षवशतो भूदेवी तमवर्धयत् ।
तस्यावयवसंपत्तिः पिण्डस्यासीत्ततः शनैः ॥

४८. जीवप्रवेशोऽपि तदा रुरोद च शिशुर्महान् ।
रुदन्तं स्तन्यपानार्थं निकुञ्जे वनगह्वरे ॥

---

முதலானவை நிறைந்ததோர் புதரில் அதைச் சடக்கென எறிந்துவிட்டு ஸ்வர்க்க₃த்துக்குச் சென்றுள். அதற்குப்பின் பா₄ர்க்க₃வமுனிவரும் தம் தவம் அழிந்துவிட்டகாரணத்தாலே வருத்தத்தையும் லஜ்ஜையையும் அடைந்தவராய், அங்கே மற்றொரு காட்டிற்குத் தவம்செய்யப் போய்விட்டார்.

## ஸ்ரீமந் நாராயண கடாக்ஷம்

46-53 சிறிது காலத்தில் அந்தப் பிரம்புப்புதரில் இருந்த க₃ர்ப்ப₄ம் பிளந்து (முட்டையிலிருந்து) கருடக்குஞ்சு வெளிவருவதுபோல் குழந்தையாக வெளிவந்தது. அதற்குப்பின் பசியினால் வருந்தி ஆள் நடமாட்டமில்லாத அவ்விடத்தில் தாய்ப்பாலுக்காக உரத்த குரலில் அது அழுதது. பெரிய பிராட்டியின் கடாக்ஷத்தாலே பூ₄மிதே₃வி அக்குழந்தையை வளரச் செய்தாள். அதனால் சிறிது சிறிதாக அப்பிண்ட₃ரூபமான குழந்தைக்கு அவயவங்கள் உண்டாயின. ஜீவனற்றிருந்த அக்குழந்தைக்கு ஜீவனும் உண்டாயிற்று. மஹாபுருஷராகப்போகும் அக்குழந்தை

४९. भक्तिसारं विलोक्यैवं निर्हेतुककटाक्षतः ।
महीसारपुराधीशो भगवान् भक्तवत्सलः ॥

५०. वेदान्तिन्! श्रीजगन्नाथो मङ्गवल्लीमनोहरः ।
तत्रागत्यार्द्रकृपया क्षुत्पिपासे निवार्य च ॥

५१. अपर्याप्तामृतं तस्य भक्तिसारस्य दुर्लभम् ।
अत्यन्तसुकुमाराङ्गं दर्शयित्वा स्वविग्रहम् ॥

५२. आश्वास्य तं भक्तिसारं स्वधाम प्रत्यपद्यत ।
एवं संवर्धितस्तेन भार्गवीयो ह्यवर्धत ॥

५३. यदसह्यः सदा विष्णोः विश्लेषो ज्ञानिनां परम् ।
तद्विश्लेषासहिष्णुस्सन् तस्थौ तत्र रुदन् भृशम् ॥

---

அழுதது. வேதாந்தியே! அக்காட்டின் நடுவிலுள்ள புதரில் பாலுக்காக அழும் அந்த பக்திஸாரராகிற குழந்தையைப் பார்த்து நிர்ஹேதுககடாக்ஷம் செய்தவராய், மங்கைவல்லி மணவாளராய், பக்தவத்ஸலராய், திருமழிசைக்கு இறைவரான ஸ்ரீ ஜகந்நாதப்பெருமாள் அங்கு எழுந்தருளி, தனது கருணைப்பெருக்காலே அவரது பசி தாகங்களைப்போக்கி, கிடைத்தற்கரியதாய், ஆராவமுதமாய், அதிகோமளமான அவயவங்களையுடையதான தன் திருமேனியை அவருக்குக்காட்டி, அவருடைய தாபத்தைப்போக்கித் தமது இருப்பிடம் சேர்ந்தார். இவ்வண்ணமாக பகவத்கடாக்ஷத்தால் போஷிக்கப்பட்டு பார்க்கவ புத்ரரான அவர் வளர்ந்தார். ஞானிகளுக்கு எம்பெருமானைப்பிரிவது எப்போதும் பொறுக்கவொண்ணாததாகையாலே, எம்பெருமானுடைய பிரிவைப் பொறுக்கமாட்டாமல் அந்தப் புதரிலேயே உரத்த குரலில் அழுதுகொண்டிருந்தார் பக்திஸாரர்.

५४. श्रीखड्गनामकः कश्चित् वेत्रसंपुटकारकः ।
उपानद्गूढपादश्च लवित्रलगुडन्धरः ॥
५५. वेत्रादिहरणार्थाय तद्वनं समुपाविशत् ।
वेत्रवेण्वादिसंकीर्णे वने तत्र चचार सः ॥
५६. तद्बालरोदनं श्रुत्वा तत्र गत्वाञ्जसा तदा ।
उद्यद्भानुनिभं दृष्ट्वा तं बालं संप्रहर्षितः ॥
५७. अतिहर्षात्समादाय भक्तिसारं महौजसम् ।
पत्न्याः पङ्कजवल्ल्याश्च वेत्रसंपुटकारकः ॥
५८. अनपत्यतया तस्याः ददौ हस्ते समाहितः ।
श्रीदिव्यसूरिचरिते श्लोकोऽयं गीयते महान् ॥

---

## திருவாளனிடம் வளர்தல்.

54-65. அப்போது காலில் செருப்பணிந்தவனாய், சிற்றரிவாளையும் தடியையும் ஏந்தினவனாய் 'திருவாளன்' என்னும் பெயருடையவனான ஓர் பிரம்புக்கூடை முடைபவன் பிரம்பறுத்துச் செல்வதற்காக அக்காட்டினுள் நுழைந்தான். பிரம்பும மூங்கிலும் நிறைந்த அக்காடுமுழுவதும் அலைந்தான். அக்குழந்தையின் அழுகுரலைக்கேட்டு அப்போதே அங்கு சென்று சூரியன்போல் பிரகாசிக்கும் அக்குழந்தையைக் கண்டு உகந்தவனாய், பேரானந்தத்தோடு பேரொளி பொருந்திய அந்த ப₄க்திஸாரக்குழந்தையை எடுத்து, அந்தப் பிரம்பறுப்பான் குழந்தையில்லாமல் வருந்தும் தன் மனைவியான பங்கஜவல்லியின் கையில் வருத்தம் தீரப் பெற்றவனாய் அளித்தான். இவ்விஷயமாக தி₃வ்யஸூரி சரித்திரத்தில் சிறந்ததான இந்த ஶ்லோகம் பாடப்படுகிறது,—
"அந்த ப்₄ருகு₃வம்சத்தில் உதித்த குழந்தையை அப்பிரம்பறுப்பான் தன் வீட்டுக்கு உடனே எடுத்துச்சென்று தன் மனைவியிடம வளர்ப்பதற்காகக் கொடுத்தான். இது வஸு

௫௯. नीत्वा गृहं भार्गवमाशु तावत्
प्रादात्स पत्न्यै परिपोषणाय
आवर्तयन्नानकदुन्दुभिस्तं
गोपीपुरे नन्दकुले यथैव ॥

௬௦. साऽनपत्या ह्यपत्यस्य लाभादत्यन्तसंभ्रमा ।
पुपोष पुत्रवात्सल्यं तस्मिन्विन्यस्य तं तदा ॥

௬௧. सा चाब्जवल्ली वेदान्तिन्! स्नेहस्नुतपयोधरा ।
प्रददौ भक्तिसाराय स्तन्यं तत्पुत्रवत्सला ॥

௬௨. यथा यशोदा कृष्णाय वेदान्तिन् ! नन्दगोकुले ।
अविज्ञातस्तन्यपानरुचिश्चानुभवाद्धरेः ॥

௬௩. न भार्गवो मनश्चक्रे स्तन्यपाने कदाचन ।
ब्रह्मानुभवसंजातरसानन்दादितृप्तिमान् ॥

---

தே₃வர் கண்ணனைத் திருவாய்ப்பாடியிலுள்ள நந்த₃ன் வீட்டில் வளர்ப்பதற்காக அளித்ததுபோலிருந்தது. "குழந்தையற்ற அந்தப் பங்கஜவல்லியும குழந்தை கிடைத்ததால் மிகவும் பரபரப்படைந்து அக்குழந்தையிடம் புத்ர வாத்ஸல்யத்தைச் சொரிந்து அப்போதே அதை வளர்க்கத் தொடங்கினள். அக்குழந்தையிடம் பேரன்புகொண்ட அப்பங்கஜவல்லி அவ்வன்பினுலே பெருகப்பெற்ற தாய்ப் பாலை உடையவளாய், நந்த₃ன் வீட்டில் யசோதை கண்ணனுக்குப் பாலூட்டியதுபோலே பாலூட்டினள். எம்பெருமானை அனுப₄வித்ததால் தாய்ப்பாலில் விருப்பமற்ற அந்த பா₄ர்க்க₃வக்குழந்தை அப்பாலைக் குடிக்க மறுத்து விட்டது. ஆயினும் ப்₃ரஹ்மாநுப₄வத்தினுலுண்டான ப₄க்திச்சுவை, ஆனந்த₃ம் முதலானவற்றிலேயே திருப்தியடைந்த அக்குழந்தை சூரியன் உதித்தவுடன் படிப்படியாக வளர்வதுபோலே தினந்தோறும் நன்கு வளர்ந்து வந்தது.

६४. उदितादित्यवत्सम्यगवर्धत दिने दिने ।
सदा भगवतस्तस्य गुणानुभवधारकः ॥

६५. मलमूत्रादिरहितस्तथा संत्यक्तरोदनः ।
त्यक्तवाग्व्यवहारश्च निवृत्ताध्यात्मिकादिकः ।
प्रवर्धमानसर्वाङ्गः परिपूर्णोऽभवन्मुनिः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे
भक्तिसारावतारकथनं नाम
अष्टसप्ततितमोऽध्यायः ॥

---

அந்த ஞானக்குழந்தை தான் கண்ட எம்பெருமானுடைய கு₃ணங்களை அனுப₄விப்பதைக்கொண்டே த₄ரித்து நிற்பவராய், மலம், மூத்திரம் முதலானவை அற்றவராய், மற்ற குழந்தைகளுக்கு இயல்பான அழுகையுமில்லாதவராய், எவரிடமும் வாய்திறந்து பேசாதவராய், **ஆத்₄யாத்மிகம்** (சரீரத்தினால் உண்டாகும் பிணி முதலான துன்பங்கள்) **ஆதி₄பௌ₄திகம்** (மற்ற ஜீவராசிகளால் உண்டாகும் துன்பங்கள்) **ஆதி₄தை₃விகம்** (தெய்வச் செயலாக விளையும் இடி முதலானவற்றால் உண்டாகும் துன்பங்கள்) என்னும் மூன்று வகையான தாபங்களும் இல்லாதவராய், அவயவங்கள் உரிய காலத்தில் வளரப்பெற்றவராய் நிறைவுடையவராக ஆனார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ப₄ட்டார்யவேதா₃ந்தி ஸம்வாத₃த்தில்
திருமழிசையாழ்வாரின் அவதாரத்தைக்கூறும்
எழுபத்தெட்டாம் அத்தியாயம் நிறைவுற்றது.

एकोनाशीतितमोऽध्यायः ।

१. ततो महीसारपुराधिवासी
प्राज्ञो महान् कश्चन शूद्रवृद्धः ।
श्रुत्वाद्भुतं तस्य शिशोः प्रभावं
द्रष्टुं समायात्तनयेन रिक्तः ॥
[श्रीदिव्यसूरिचरिते श्लोकोऽयं गीयते महान् ॥]

२. प्राप्यालयं शूर्पकृतस्स वृद्धः
सुक्काथितक्षीरमयोपहारः ।
दृष्ट्वा शिशुं तत्र चतुर्थवंश्यः
विसिस्मिये दिव्यमहोनिधानम् ॥

३. श्रीदिव्यसूरिचरिते श्लोकद्वयमुदाहृतम् ।
चतुर्थवर्णस्तत्रस्थः कश्चित्प्राज्ञाभिधानकः ॥

---

## எழுபத்தொன்பதாவது அத்தியாயம்

### கணிகண்ணனின் அவதாரம்
### போனகம்செய்த சேடத்தின் பெருமை

1-*14*. ஸ்ரீ திவ்யஸூரிசரிதத்தில் இரண்டு ஶ்லோகங்கள் பின்வரும் விஷயத்தைக் கூறுகின்றன. "திருமழிசையில் வாழுபவராய், பக்தி முதலானவற்றில் பெரியவராய் நான்காம் வர்ணத்தைச்சேர்ந்த முதியவரான 'ப்ராஜ்ஞன்' (அறிவாளி) என்பவர் இந்த ஞானக்குழந்தையின் ஆஶ்சர்யமான பெருமையைக்கேட்டு, தாம் பிள்ளையில்லாமல் இருந்தமையாலே அக்குறை தீர்வதற்காக அவரைக் காணவந்தார்" [ஸர்க்கம்-*2* ஶ்லோகம் 44] "பிரம்பறுப்பானுடைய வீட்டிற்குவந்த அந்த முதியவரான நான்காம் வருணத்தவர் நன்கு காய்ச்சிய பாலை உபஹாரமாகக் கொண்டுவந்தவராய், அப்ராக்ருதமான ஒளிக்கு

४. श्रुत्वातिमानुषं तस्य भार्गवीयस्य वैभवम् ।
अत्यन्तविस्मयो वृद्धः भार्यया सहितस्तदा ॥

५. क्वथितं सत्पयः सम्यक् तत्समादाय भक्तितः ।
तत्र गत्वाञ्जसा बालमपश्यदमितौजसम् ॥

६. पञ्चशक्त्यात्मनस्तस्य शिशोरप्राकृतं महः ।
विलोक्य विस्मितोऽत्यन्तं तत् क्षीरं च समर्प्य सः ॥

७. बहुशः प्रार्थयामास पयःपानाय तं शिशुम् ।
एवं संप्रार्थितस्तेन भक्तिसारः कृपावशात् ॥

८. अपिबत् तत्पयः सम्यक् भक्तिसारो हि माधव! ।
एवं संप्रार्थितस्तेन कञ्चित्कालं दिने दिने ॥

---

இருப்பிடமாயிருந்த குழந்தையைப் பார்த்து வியப்புற்றார்" [2-45]. இதில் கூறியபடியே திருமழிசையில் வாழ்பவராய், நான்காம் வருணத்தவராய், "ப்ராஜ்ஞர்" என்னும் பெயரை உடையவரான ஒரு முதியவர் பா₄ர்க்க₃வ குமாரருடைய தெய்விகமான அந்தப் பெருமையைக் கேள்வியுற்று மிகவும் வியப்புற்றவராய், தனது மனைவியோடுகூடியவராய், நன்கு காய்ச்சிய நல்லபாலை பக்தியோடு எடுத்துக்கொண்டு அங்கு சென்று அளவற்ற ஒளியையுடைய அக்குழந்தையைக் கண்களாலாரக் கண்டார். அப்ராக்ருதமான ஐந்து ஶக்திகளோடுகூடிய அக்குழந்தையின் தேஜஸ்ஸைக் கண்டு மிகவும் வியப்புற்றவராய், அந்தப்பாலை அவருக்கு ஸமர்ப்பித்து அதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று பலவாறு வேண்டிக்கொண்டார். மாத₄வரே! அந்த ப₄க்திஸாரர் அவரால் பிரார்த்திக்கப்பட்டவராய், கருணையாலே பாலை ஏற்றுக்கொண்டு பருகினார். இவ்வண்ணமே சிலகாலம் தினந்தோறும் அவரால் வேண்டிக் கொள்ளப்பட்ட அந்த ப₄க்திஸாரக் குழந்தை அவருடைய

९. तत् क्षीरमपिबत् भक्त्या तस्यानुग्रहकारकः ।
स तयोर्वृद्धदम्पत्योः तन्मनोभावमञ्जसा ॥

१०. ज्ञात्वा तथा समाहूय व्याजहार वचः शुभम् ।
मत्पीतशेषं यत् क्षीरं तदिदं पिबतं युवाम् ॥

११. अपत्यलाभो भवतोर्भविष्यति न संशयः ।
इत्युक्त्वा वृद्धदम्पत्योः प्रददौ तत्पयस्तदा ॥

१२. तत्क्षीरपानमात्रेण तौ तदा वृद्धदम्पती ।
संप्राप्तयौवनौ स्निग्धौ बभूवतुरिवामरौ ॥

१३. ततो गर्भवती साध्वी दशमे मासि सुन्दरी ।
सा तेन सुषुवे पुत्रं भगवद्भक्तिपारगम् ॥

१४. भक्तिसारकटाक्षेण धीमन्तं विदुरोपमम् ।
विलोक्य पुत्रं सन्तुष्टः स तं प्राज्ञो महौजसम् ॥
कणिकृष्ण इति ख्यातं नाम चक्रेऽस्य मङ्गलम् ॥

---

ப4க்தியைக்கண்டு அவருக்கு அருள் செய்வதற்காக அவரளித்த பாலை பருகினார். முதியவர்களான அந்த தம்பதிகளின் கருத்தை நன்குணர்ந்து அவர்களை அழைத்து "நான் பருகி மிகுந்திருக்கும் இந்தப் பாலை நீங்கள் பருகுங்கள். அதனால் உங்களுக்குக் குழந்தை உண்டாகும். இதில் ஐயமில்லை" என்னும் மங்க3ளமான வார்த்தையை அருளினார். அருளியவுடன் அந்த முதிய தம்பதிகளுக்கு அந்தப் பாலை அப்போதே கொடுத்தார். பாலைக்குடித்தவுடனேயே அந்த் வயதுமுதிர்ந்த தம்பதிகள் யௌவனப் பிராயத்தை யடைந்தவர்களாய், தேவர்கள்போல அழகியவர்களானார்கள். அதற்குப்பின் கருத்தரித்தவளான அழகிய அப்பெண்பிள்ளை பத்தாவது மாதத்தில் ப4க3வத்3ப4க்தியை எல்லை கண்டவனான குழந்தையைப் பெற்றெடுத்தாள். பக்திஸாரக் குழந்தையின் கடாக்ஷத்தால் அறிவுமிகுந்தவனாய் விது3ரர்

१५. कणिकृष्णः स बालोऽथ भक्तिसाराद्वीक्षणात् ।
जग्राह सकला विद्याः ततोऽभूत् भगवत्कविः ॥

१६. चकार नाम्ना कणिकृष्णमेनं
अशिक्षयत् सर्वकलाश्च तात! ।
सोऽप्याचरन् भार्गवपादसेवां
मुकुन्दभक्तिप्रवणो बभूव ॥

१७. स भार्गवीयो भगवत्कटाक्ष-
दयासुधास्वादनतृप्तचेताः ।
समुत्थिताहारपयोभिलाषः
कुले मुदाऽवर्धत वेत्रिकाणाम् ॥

---

போன்றவனை பேரொளிமிக்க பிள்ளையைக்கண்டு உகந்து 'ப்ராஜ்ஞன்' என்னும் பெயருள்ள அவர் 'கணிகண்ணன்' என்னும் பிரஸித்திபெற்ற மங்க₃ளமான பெயரைத் தம் குழந்தைக்கு இட்டார்.

## பக்திஸார கடாக்ஷ மஹிமை

15-16. கணிகண்ணனென்னும் அக்குழந்தை பக்திஸாரரின் குளிர்ந்த கடாக்ஷத்தினால் எல்லாக் கலைகளிலும் வல்லவரானான், எம்பெருமானைப்பற்றிப் பாடும் கவியாகவும் ஆனான். கணிகண்ணனென்னும் பெயரையுடைய இச்சிறுவனைத் தம சிஷ்யராக ஏற்றுக்கொண்டு அவனுக்கு எல்லாக் கலைகளையும் கற்பித்தார் திருமழிசைப்பிரான். அக்கணிகண்ணனும் அந்த ப₄ார்க்க₃வருக்குத் திருவடிக் குற்றேவல் செய்பவனாய் எம்பெருமானிடம் ப₄கதி கொண்டவராக ஆனான்.

## திருமழிசைப்பிரானின் இளமை

17 - *23. அந்த ப₄ார்க்₃கவபுத்ரரான திருமழிசைப்பிரான் (குழந்தையாயிருக்கும்போது) ப₄க₃வத் கடாக்ஷமும் கருணையுமாகிற அமுதத்தைப் பருகுவதிலேயே திருப்தி

१८. विचक्षणो विश्वविमोहहेतोः कुलोचिताचारकलानुषक्तः ।
पुण्ये महीसारपुरे विधाय विक्रीय शूर्पं विजहार योगी ॥
१९. आसप्तवर्षं स्थित्वात्र वेत्रसंपुटकृद्गृहे ।
ऋषिपुत्रो भक्तिसारो बाल्येन चतुरस्तदा ॥
२०. अवर्तताऽन्नपानादिवर्जितः कृपया हरेः ।
ततः स्वतोऽन्नपानादिजाताभिलषितो महान् ॥
२१. तस्माद्गृहाद्विनिर्गत्य सञ्चरन् तत्र तत्र च ।
तीर्थयात्रापरो नित्यं कञ्चित्कालमवर्तत ॥
२२. अष्टाङ्गयोगे संजज्ञे मनस्तस्य महात्मनः ।
यज्जगत्कारणं वस्तु तद्ध्यानविषयं विदुः ॥

---

பெற்ற மனத்தினராயிருந்தார். (குழந்தைப் பருவம் தாண்டியபின்) உணவு பால் முதலானவற்றில் விருப்பமுடையவராய் பிரம்பறுப்பவர்களின் குலத்தில உகப்புடன் வளர்ந்து வந்தார். ப₄க₃வத்₃ ப₄க்தியில் வல்லவராயிருந்த போதிலும இவ்வுலகம் ஜ்ஞானிகளேயும் மயங்கவைப்பதாயிருக்கையாலே பிரம்பறுக்கும் குலத்திற்குரிய ஒழுக்கத்திலும் தொழிலிலும் ஈடுபட்டவராய், பரமபாவனமான திருமழிசையம்பதியிலே முறம் முடைந்து விற்றுக்கொண்டு திரிந்தார். ஏழு வயது வரையில் பிரம்பறுப்பவர்களுடைய வீட்டிலே வாழ்ந்துவநத ரிஷிபுத்ரரான ப₃கதிஸாரா குழந்தையாயிருக்கும்போதே மிக வல்லவராய், எம்பெருமானுடைய கருணையாலே அன்னம் பானம் முதலானவை அற்றவராக வாழநது வந்தாா. அதற்குப்பின் அன்னம் பானம் முதலானவற்றில் விருப்பத்தை இயல்பாக அடைந்த அப்பெரியவர் அவ்வீட்டிலிருந்து வெளிக்கிளம்பி தினந்தோறும தீர்த்தயாத்ரையில் ஈடுபட்டவராய் ஆங்காங்கு ஸஞ்சரித்துக்கொண்டு சிறிதுகாலம் வாழ்ந்து வந்தார். அப்போது அந்த மஹாத்மாவின் மனம் அஷ்டாங்க₃யோக₃த்தில் ஈடுபட்டது. "இவ்வுலகுக்குக் காரணமான பரம்பொருளே தியானிக்கத்

२३. तद्वस्तु कीदृशमिति तस्यचिन्ताऽभवत्तदा ।
बहवः समयास्सन्ति लोके दृढतराः शुभाः ॥
२४. सम्यक् प्रविश्य तेष्वाशु यज्जगत्कारणं परम् ।
अन्वेष्टव्यं प्रयत्नेन सांप्रतं सुदृढं मया ॥
२५. भक्तिसारो विनिश्चित्य स एवं मनसा तदा ।
मतेषु तेषु सर्वेषु प्रविवेश महामतिः ॥
२६. शाक्योलूक्याक्षपादाश्च कापिलश्च पतञ्जलिः ।
एते बाह्यमताः प्रोक्ताः तान् सर्वान् स व्यशोधयत् ॥
२७. मायावादं च शैवं च न्यायवैशेषिकौ तथा ।
एते कुदृष्टिसमयाः भाट्टप्राभाकरादयः ॥

---

தக்கது என்று ஜ்ஞானிகள் கூறுகிறார்கள். அப்பொருள் எத்தகையது?" என்று ஆராயும் விருப்பம் அவருககு அப்போது உண்டாயிற்று.

## பல மதங்களில் நுழைந்து புறப்படுதல்

*23*-*29* "உலகில் உறுதியாக நிற்பவையாகவும் ஒவ்வொரு வகையில் பெருமைபெற்றவைகளாகவும் உள்ள பல மதங்கள் உள்ளன. அவைகளில் நன்றாக நுழைந்து விரைவில் ஜக₃த்காரணமான பரம்பொருளை இப்போது உறுதியாக முயன்று நான் தேடவேண்டும்" என்று ப₄க்தி ஸாரர் நெஞ்சில் நிச்சயம்கொண்டு பேரறிவாளராகையாலே அந்த மதங்கள் அனைத்திலும் புகுந்து ஆராய்ந்தார். பு₃த்₃த₄ர் பரப்பிய சாக்கியமதம, கணாதரென்னும உலூக்யரும அக்ஷபாத₃ரும் பரப்பிய நையாயிகவைஶேஷிக மதங்கள், கபிலர் பரபபிய ஸாங்க்₂யமதம, பதஞ்ஜலி பரப்பிய யோக₃மதம் ஆகிய இவை வேத₃த்திற்குப் புறம்பான மதங்கள் எனக் கூறப்படுகின்றன. இவையனைத்தையும் ஆராய்ந்தார் அவர். மாயாவாத₃ம், சைவம், ந்யாய வைஶேஷிகமதங்கள், பா₄ட்டமதம், ப்ரப₄ாகரமதம் ஆகியவை வேத₃த்திறகு அவப்பொருள் கூறும் குத்₃ருஷ்டிமதங்க

२८. मतेष्वेतादृशेष्वेवं सर्वेष्वन्येषु भक्तितः ।
आलोड्यालोड्य बहुशः तत् ज्ञात्वा तुच्छमित्यतः ॥
२९. परिबभ्राम वेदान्तिन्! सहस्राब्दानमञ्जसा ।
असारभूतान् तान् ज्ञात्वा समयानखिलान् तदा ॥
३०. ततः शैवमते धीमान् भक्तिसारो विवेश सः ।
शिववाक्याभिधानस्सन् तन्मते बहुभक्तिमान् ॥
३१. ग्रन्थान् शिवपरांश्चक्रे बहून् द्राविडभाषया ।
शिव एव परं तत्त्वं इति मत्वा मनः स्थिरम् ॥
३२. निधाय तत्र वेदान्तिन्! चचार विगतज्वरः ।
शिववाक्योऽन्यसमयान् तृणीकृत्य महामनाः ॥
३३. तेषां संभाषणस्पर्शदर्शनादिविवर्जितः ।
मौनव्रतपरो भूत्वा तद्भक्ताग்रेसरो महान् ॥

---

ளாகும். இத்தகைய எல்லா மதங்களிலும் மற்றுமுள்ள எல்லா மதங்களிலும் அந்தந்த மதங்களில் ஈடுபாட்டுடன் மறுபடியும் மறுபடியும் பலகால் ஆராய்ச்சிசெய்து ஒவ்வொரு மதமும் பயனற்றது என அறிந்து ஆயிரம் வருஷங்கள் வரையில் இவ்வண்ணமே மயங்கித் திரிந்தார்.

## சைவமத ப்ரவேசம்

*29**-33. (சைவமதம் தவிர்ந்த) இந்த எல்லா மதங்களேயும ஸாரமற்றவை எளறு அறிந்து அறிவாளியான அந்த ப₄க்திஸாரர் சைவமதத்தில் நுழைந்தார். சிவவாக்யர் என்னும் பெயர்கொண்டவராய், சைவமதத்தில மிகவும ஈடுபட்டவராய், சிவபரமான பல நூல்களைத் தமிழிலே இயற்றினர். வேத₃ாந்தியே! சிவனே பரம்பொருள் என்று நினைத்து மனத்தை உறுதியாக அவனிடம் செலுத்தி மற்ற மதங்களைக் காற்கடைக்கொண்டு மற்ற மதங்களில் இருப்பவர்களோடு பேசுவது, தொடுவது, காண்பது முதலானவையில்லாதவராய் மௌன வ்ரதத்தை அனுஷ்டி₂ப்பவராய், சிவப₄க்தர்களில் தலைசிறந்த பெரியவராய்க் கவலையற்றுத் திரிந்துவந்தார் பேரறிவாளரான சிவவாக்யர்.

३४. भक्तिसारस्य वृत्तान्तं निशम्य महदाह्वयः ।
तं शिक्षितुमियेषार्यो भगवत्कृपया तदा ॥
३५. शिववाक्यो महान् यत्र वर्तते शिवभक्तिमान् ।
आजगामाञ्जसा तत्र भगवान् महदाह्वयः ॥
३६. धृतोर्ध्वपुण्ड्रः स महान् ललाटे भुजद्वये लक्षितशङ्खचक्रः ।
पद्माक्षमालादिविशोभिकण्ठो ह्यलक्ष्यतादित्यसमानकान्तिः ॥
३७. स तं विलोक्यैव महाभिधानमग्रेसरं ब्रह्मविदां महान्तम् ।
अपक्वचित्तो विमुखस्तदानीं शिवैकनिष्ठो भगवत्परस्य ॥
इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे कणिकृष्णावतारकथनं
नाम एकोनाशीतितमोऽध्यायः ॥

---

## பேயாழ்வாரின் வருகை

34-37. ப₄க்திஸாரர் இவ்வண்ணம் சைவராயிருப்பதைக் கேள்விப்பட்ட பெரியவரான பேயாழ்வார் எம்பெருமானுடைய அருளாலே அவரை அப்போதே திருத்த விரும்பினார். பெரிய சிவபக்தியுடையவரான சிவவாக்கியர் இருந்தவிடத்துக்குப் பேரறிவாளரான பேயாழ்வார் விரைவில் எழுந்தருளினார். அந்தப் பெரியவரான பேயாழ்வார் நெற்றியில் ஊர்த்₄வபுண்ட்₃ரத்தை த₄ரித்தவராய், இரண்டு தோள்களிலும் ஶங்க₂சக்ரங்களால் அடையாளமிடப்பட்டவராய், தாமரைமணிமாலை துளசிமணிமாலை முதலானவற்றால் அழகுசெய்யப்பெற்ற கழுத்தையுடையவராய், ஸூர்யன் போல் ஒளிவீசுபவராகக காணப்பட்டார். ப்₃ரஹ்ம ஜ்ஞானிகளுக்கு முன்னிற்பவராய், ப₄க₃வத்₃ப₄க்தியுடையவராய் பெரியவரான பேயாழ்வாரை அப்போது கண்டு சிவனையே பற்றி நிற்கும் அந்த சிவவாக்கியர் மனம் முதிர்ச்சியுறாமையாலே பாராமுகமாயிருந்தார்.

ப்ரபந்நாம்ருதத்தில் ப₄ட்டார்ய வேத₃ாந்தி ஸம்வாத₃த்தில் கணிகண்ணன் பிறப்பைக்கூறும் எழுபத்தொன்பதாவது அத்தியாயம் நிறைவுற்றது.

॥ अशीतितमोऽध्यायः ॥

१. ततस्संचिन्त्य भगवान् महदाख्यो महामतिः ।
तेन संभाषणं कर्तुं कश्चित् यत्नं चकार सः ॥

२. तस्यारामस्य निकटे कश्चिदाराममञ्जसा ।
विधाय वृक्षानारोप्य तानधश्शिरसस्तथा ॥

३. तेन च्छिद्रघटेनाम्भः समुद्धृत्याम्भसां निधौ ।
सिञ्चन्कृतालवालेषु दृढमौनो ऽव्यतिष्ठत ॥

४. शिववाक्यः स तं दृष्ट्वा प्रहसंस्तस्य चान्तिकम् ।
आगम्य मतिमान् शीघ्रं तमवोचद्वचः शुभम् ॥

५. किं त्वं भ्रान्तो विष्णुदास! किं कार्यं कृतवानसि ।
तदन्तरं समालम्ब्य महदाख्यस्तमब्रवीत् ॥

---

## எண்பதாவது அத்தியாயம்

### பேயாழ்வார் மழிசைப்பிரானை உபதேசித்துத் திருத்துதல்

### நான் பேயனு? நீர் பேயரா?

1-*11. பேரறிவாளரான அந்தப் பேயாழ்வார் அப்போது ஒரு சிந்தைசெய்து அந்த சிவவாக்கியரோடு பேசுவதற்கு ஓர் முயற்சியை மேற்கொண்டார். சிவவாக்கியரின் தோட்டத்துக்கருகில் ஓர் தோட்டத்தை விரைவில் அமைத்து, அதில் செடிகளைத் தலைகீழாக நட்டு, ஓர் கிணற்றிலிருந்து அச்செடிகளின் பாத்திகளில் ஓட்டைக் குடத்தாலே நீர் வார்த்துக்கொண்டு வாய்பேசாமல் இருந்தார். அவரைக்கண்டு அறிவாளியான சிவவாக்கியர் சிரித்துக்கொண்டே விரைவில அவரது அருகே வந்து "விஷ்ணு பக்தரே! நீர் என்ன காரியம் செய்கிறீர்? நீர் பேயரோ?" என்னும் மங்களமான வார்த்தையைச் சொன்னர். அவ

६. न भ्रान्तोऽहं भवान् भ्रान्तः सम्यक् हृदि विचारय ।
शिववाक्यो महाख्यस्य प्रतिगृह्य वचस्तथा ॥
७. शिवभक्तो विष्णुभक्तं भूयो वचनमब्रवीत् ।
अनेन भ्रान्तकार्येण भ्रान्तः प्रत्यक्षतो भवान् ॥
८. अहं भ्रान्तः कथमिति मृषावाक्यं प्रभाषसे ।
निशम्य तद्वचः सम्यक् तमभाषत सत्तमः ॥
९. यज्जगत्कारणं वस्तु तदज्ञानाद्विमोहितः ।
अजानानो भ्रान्तवत्त्वं परिभ्रमसि वै किल ॥
१०. अतो ह्यज्ञाततत्त्वार्थो भवान् नास्त्यत्र संशयः ।
अहं तु ज्ञाततत्त्वार्थः स्थिरधीरेकधर्मवान् ॥
११. त्वं वा भ्रान्तो ह्यहं भ्रान्तः सम्यगत्र विचार्यताम् ।
आकर्ण्य तद्वचस्तस्य शिववाक्यो महामतिः ॥

---

ரோடு பேசுவதற்கு இவவண்ணம் இடம்பெற்ற பேயாழ்வார், "நான் பேயனல்லேன். நீரே பேயர். நெஞ்சில் நன்கு ஆராய்வீராக" என்று கூறினர். சிவபக்தரான சிவவாக்கியரும் பேயாழ்வாருடைய அவ்வார்த்தையைக் கேட்டு, விஷ்ணுபக்தரான அவரைக் குறித்து "இந்தப் பைத்தியக்காரத்தனமான செயலாலே நீரே பேயராகக் காணப்படுகிறீர். என்னைப் பைத்தியக்காரன் என்று நீர் பொய் கூறுவது எப்படிப் பொருந்தும?" என்று மறுபடியும் வார்த்தை சொன்னர், பெரியவரான பேயாழ்வார் அவ்வார்த்தையை நன்கு கேட்டு, "ஜக₃த்காரணப் பொருளை அறியாமல் மயங்கி அறிவற்றவராய், ஒவ்வொரு மதத்திலும் பைத்தியக்காரன்போல் மாறி மாறித் திரிகினறீரன்றே நீர். ஆகையால் உண்மைப்பொருளை அறியாத நீரே பேயர் என்பதில் ஐயமில்லை. நானே உண்மைப் பொருளை அறிந்தவனுய், அதில் உறுதிகொண்டவனுய் வைஷ்ணவத₄ர்மமொனறிலேயே நிற்கிறேன. நீர் பேயரோ? நான் பேயனே? என்பதை நன்கு ஆராய்வீராக" எனறு பதில் கூறினர்.

१२. तत्त्वप्रियो महाविद्वान् महदाख्यमभाषत ।
कथं त्वं ज्ञाततत्त्वार्थो नाहं अज्ञाततत्त्वकः ॥

१३. अहमेव हि तत्त्वार्थज्ञानवान् नात्र संशयः ।
तदेव ते प्रवक्ष्यामि सांप्रतं शृणु तत्त्वतः ॥

१४. यज्जगत्कारणं वस्तु वेदान्तप्रतिपादितम् ।
व्यासादिमुनिनिर्णीतं हरिब्रह्मादिवन्दितम् ॥

१५. परात्परतरं वस्तु स एव परमः शिवः ।
शिवादन्यत्परं नास्तीत्येवं हृदि निबोध हि ॥

---

## சிவவாக்கியரின் பதில்

11*-15. பேயாழ்வாருடைய அவ்வார்த்தையைக்கேட்டு உண்மையை அறிந்துகொள்வதில ஆசையுடையவராய், பேரறிவாளராய், மிகவும் படித்தவரான சிவவாக்கியர் பேயாழ்வாரைப்பார்த்து, "நீர் உண்மைப் பொருளை அறிந்தவரென்பதும், நான் அதை அறியாதவனென்பதும எப்படி? நானே உண்மைப்பொருளை அறிந்தவன எனப தில் ஐயமில்லை. அதை இப்போது உமக்கு உள்ளபடி கூறுகிறேன் கேட்பீராக. வேதாந்தங்களில் தெரிவிக்கப் பட்டதான ஜகத்காரணப்பொருள் வ்யாஸர் முதலான முனிவர்களால் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அரி அயன் முதலான தேவர்களால் வணங்கப்பட்டதாய், மேலானவற்றைக்காட்டிலும மேலானதான அப்பொருள பரமசிவனே யாவான். இக்காரணத்தால் சிவனைக்காட்டிலும் மேலானது தொன்றில்லை என்பதை நெஞ்சில் கொள்வீராக" எனறு பதில் கூறினார்.

१६ प्रतिगृह्य वचस्तस्य प्रहृष्टो महदाह्वयः ।
भक्तिसारं विलोक्यैवं जगाद वचनं हितम् ॥
१७. यत्त्वयोक्तमिदं वाक्यं तत्सत्यं साधुसंमतम् ।
न विद्यतेऽत्र विशयो भक्तिसार! महामते! ॥
१८. यत्तत्परात्परं वस्तु सूक्ष्मबुद्ध्या विचार्यताम् ।
अरक्ष्यं यदनुत्पन्नमन्येषामपि रक्षकम् ॥
१९. तज्जगत्कारणं वस्तु तच्च वेदान्तसंमतम् ।
परात्परतरं वस्तु तदेवेत्यवधारय ॥

---

## பேயாழ்வாரின் பரதத்துவ நிர்ணயம்

16-38 அந்த சிவவாக்கியரின் வார்த்தையைக்கேட்டு (அவரைத் திருத்துவதற்கு இடம் கிடைத்ததனால்) மிக வுகந்த பேயாழ்வார் அந்த மழிசைப்பிரானைப்பார்த்துப் பின்வருமாறு ஹிதமான வார்த்தையைக் கூறினர்:- "ஜக₃த் காரணப்பொருளே வணங்கததக்கது என்று நீர் கூறிய இந்த வாக்கியம் உண்மையானதே. நல்லோர்கள் இசையத்தக்கதே பேரறிவாளரான ப₄க்திஸாரரே! இவ்விஷயத்தில் ஐயமில்லை. ஆயினும் மேலானவற்றுக்கெல்லாம் மேலான அப்பரமபொருள் எது என்பதை மேலெழ ஆராயாமல் நுண்ணிய அறிவுகொண்டு ஆராய வேண்டும். எந்தப் பொருளானது பிறரால் உண்டாக்கப் படாததாய், பிறரால் ரக்ஷிககப்படாததாய், பிறரையும் (உண்டாக்கி) ரக்ஷிப்பதாய் உள்ளதோ அந்தப்பொருளேமேலானவற்றைக்காட்டிலும் மேலானபொருள் என்று அறிவீராக. கலவியில் சிறநதவரே! நீர் கூறும் சிவன் எனனும் தேவதைககு ஶதபத₂ப்₃ராஹ்மணம் முதலான பல வேத₃ பா₄க₃ங்களில் உத்பத்தி கூறப்படுகிறது. ஸுபா₃லோபநிஷத, நாராயணோபநிஷத், மஹோபநிஷத் முதலானவற்றில், அண்டத்துக்குள்ளிருக்கும் பிரமன், உருத்திரன் முதலான

२०. उत्पत्तिः श्रूयते तस्य शिवस्य विदुषां वर! ।
सर्वे देवास्सपितरो ब्रह्माद्याश्चाण्डमध्यगाः ॥

२१. विष्णोस्सकाशादुत्पन्ना इतीयं वैदिकी श्रुतिः ।
पुराणे भारते वेदे वेदान्ते च स्मृतावपि ॥

२२. स च संरक्षितस्तेन विष्णुना बहुधा किल ।
त्रिप्रकारवचांस्यार्य! त्रीण्येव भवतो हितम् ॥

२३. शिववाक्य! प्रवक्ष्यामि सांप्रतं शृणु तत्त्वतः ।
प्रसिद्धास्त्रय एवैते विष्णुब्रह्मशिवाः किल ॥

---

எல்லா தே₃வர்களும், பித்ருக்களும் விஷ்ணுவிடமிருந்தே உண்டானுர்கள் என்று முழங்கப்படுகிறது. விஷ்ணு புராணம் முதலான ஸாத்விக புராணங்களிலும், ப₄ாரதம், ஸ்ரீ ராமாயணம் என்னும் இதிஹாஸங்களிலும், வேத₃த்தின் பூர்வப₄ாக₃ங்களிலும், உத்தரப₄ாக₃மான உபநிஷத்துக்கள், மனு, ஹாரீதர், விஷ்ணு முதலான ஸம்ருதிகளிலும் அந்த சிவன் விஷ்ணுவாலே ரக்ஷிககப்பட்டான் என்று பலவிதமாகக கூறப்படுகிறதன்றே. சிவவாக்கியரே! மூன்றுவகைப்பட்டவையான மூன்று வாக்கியங்களை இப்போது உமக்கு உள்ளபடி ஹிதமாகச் சொல்லுகிறேன், கேட்பீராக. விஷ்ணு, பிரமன், சிவன் என்று மூன்று தே₃வதைகளே உலகில் பிரஸித்₃தி₄பெற்றுள்ளனர். (இவர்களுக்கு மேற்பட்ட நான்காவது தே₃வதை எங்கும் காணப்படவில்லை). ஸ்ருஷ்டி ஸ்தி₂தி ஸம்ஹாரங்களாகிற முத்தொழில்களில் ஒவ்வொன்றைச் செய்பவர்களாகப் பிரஸித்₃தி₄பெற்ற அந்த மூன்று தேவதைகளும் ஸத்வ ரஜஸ் தமோ கு₃ணங்களில் ஒவ்வொன்றையுடைய

२४. ते त्रयस्त्रिविधा देवाः सत्त्वराजसतामसाः ।
शुद्धसत्त्वमयो विष्णुः ब्रह्मा राजससंभवः ॥

२५ तमोगुणमयो रुद्रः इत्येषा शास्त्रपद्धतिः ।
को वा मोक्षप्रदस्तेषां त्वयैवात्र विचार्यताम् ॥

२६. एकेन पादकमलं शिववाक्य! प्रसारितम् ।
एकेन क्षालितं भक्त्या तत्पादकमलं किल ॥

२७. तत्पादतोयमेकेन मूर्ध्नि सद्भक्तितो धृतम् ।
तेषां त्रयाणां को विद्वन्! महानिति विचार्यताम् ॥

---

வர்கள். ஶாஸ்த்ரங்கள் அனைத்தையும் பார்க்கும்போது ஶுத்₃த₄ ஸத்வகு₃ணத்தையுடையவன் விஷ்ணுவென்றும், ரஜோகு₃ணத்தாலுண்டானவன் பிரமன் என்றும், தமோ கு₃ணம் நிறைந்தவன் உருத்திரன் என்றும் விளங்குகிறது. இம் மூவரில் எவன மோக்ஷமளிக்கக்கூடியவன் என் பதை நீரே ஆராய்வீராக. சிவவாக்கியரே! (திரிவிக்ரமாவ தாரத்தின்போது விஷ்ணுவாகிற) ஒருவனால் திருவடித் தாமரை உயர நீட்டப்பட்டது. (பிரமனாகிற) ஒருவனால் அது ப₄க்தியுடன் (க₃ங்கா₃ ஜலத்தால்) விளக்கப்பட்டது. அந்த ஸ்ரீபாத₃தீர்த்த₂ம் (உருத்திரனாகிற) மற்றொருவனால் மேலான ப₄க்தியுடன் தலையிலே த₄ரிக்கப்பட்டது. அறி வாளியே! இம்மூவரில் எவன் பரமாத்மா என்பதை நீரே ஆராயவேண்டும இப்போது நான் சொன்னதை நுண்ணிய அறிவுகொண்டு நன்கு விசாரிப்பீராக. மேலும் இந்த மூன்று தே₃வர்களில் ஒவ்வொரு வகைப்பட்ட சரீரம் அவரவர்க ளுடைய ப₄க்தர்களால் பரதத்துவமாகக் கூறப்படுகிறது.

२८. यन्मयोक्तमिदं सम्यक् सूक्ष्मबुद्ध्या विचार्यताम् ।
तस्य तस्याकृतिः सम्यक् परतत्त्वं प्रवक्ष्यते ॥
भविताऽयं न भविता यत्तत्त्वमिति स्फुटम् ॥

२९. शिवाकृतिर्भस्मसुदिग्धगात्रा
चर्माम्बरा ब्रह्मकपालमाला ।
धृताक्षमाला पितृकाननस्था
जटाधरा दिग्वसना किलेयम् ॥

३०. ब्रह्माकृतिः स्रुक्स्रुवदर्भहस्ता
सुतीर्थसंपूर्णकमण्डलुश्च ।
धृताक्षमाला कृतवेदपाठा
सदा समाराधितरङ्गधामा ॥

---

இவற்றில் எந்த சரீரம் பரதத்துவமாக முடியும், எவை யிரண்டும் அப்படியாகமுடியாது என்பது மிகத் தெளி வாகவேயுள்ளது. சிவனுடைய உடம்பு முழுவதும் சாம்ப லால் பூசப்பட்டது. புலித்தோல் யானைத் தோல் ஆகிய வற்றை உடையாகக்கொண்டது. பிரமனின் மண்டை யோட்டை மாலையாகக்கொண்டது. ருத்₃ராக்ஷ மாலையை த₄ரித்திருப்பது. சுடுகாட்டில் வாழ்வது. ஜடையை த₄ரித்துக்கொண்டு தி₃க₃ம்பரமாக (அம்மணமாக) கூத்தாடு வதன்றே இது. பிரமனின் உடம்பு ஸ்ருக், ஸ்ருவம், த₃ர்ப்ப₄ம் முதலிய யாகோ₃பகரணங்களைக் கையிற்கொண்டது. க₃ங்கா₃ஜலம் நிறைந்த கமண்ட₃லத்தையுடையது. தாமரை மணிமாலையை த₄ரித்தது. வேத₃ாத்₄யயனம் செய்வது. எப்போதும் ஸ்ரீரங்க₃நாத₂னை ஆராதி₄ப்பது.

३१. अस्तीति किञ्चिन्महनीयतत्त्वं
तत् ध्यायतो वेषमितो विभाति ।
अप्राप्तकामार्थपरादिकेच्छा
यस्याकृतिं तां विधिरुद्रयोश्च ॥

३२. विष्ण्वाकृतिश्चन्दनभूषिताङ्गा
पार्श्वद्वये शोभितदिव्यनारी ।
भुजान्तरस्था महनीयलक्ष्मीः
किरीटमञ्जीरमुखादिभूषा ॥

३३. मन्दारमालाञ्चितकेशबन्धा
पीताम्बरालङ्कृतनीलगात्रा ।
अवाप्तकामेव विभाति सैषा
विष्ण्वाकृतिस्तां विबुधार्य पश्य ॥

---

பரப்₃ரஹ்மத்தை த்₄யானிப்பவர்களுக்கு முற்கூறிய (தாழ்வுகள்நிறைந்த) இரண்டு ரூபங்களைக்காட்டிலும் சிறப்புற்ற வேறொரு ரூபமொன்றே த்₄யானிக்கத்தக்கதாய் உள்ளதென்று விளங்குகிறது. அந்தத்திருமேனி த₄ர்மார்த்த₂ காம (கைவல்ய) மோக்ஷங்களில் விருப்பத்தையும் தகாததாக்குகிறது. அத்திருமேனி முற்கூறிய ப்₃ரஹ்ம ருத்₃ரர்களுக்கும் தியானிக்கத்தக்கதாக அறியத்தக்கது. (அத்திருமேனியாவது):- விஷ்ணுவினுடைய திருமேனி சந்தனத்தால் அலங்கரிக்கப்பட்ட அவயவங்களையுடையது. இருபுறமும் ஸ்ரீபூ₄மிதே₃விகளால் விளங்காநிற்பது. அனைவரும் கொண்டாடும் திருமகளைத் திருமார்பிலே கொண்டது. கிரீடம்தொடங்கிச் சதங்கை ஈருகப் பலபல சிறந்த ஆபரணங்களையுடையது. திருக்குழல் கற்றையில் மந்தாரமாலையைச்சூடியிருப்பது. நீலத்திருமேனியில் மஞ்சள்நிறப் பட்டாடையால் அலங்கரிக்கப்பெற்றது. (காணும்போதே)

३४. विरिञ्चिरुद्रयोः स्वामी भगवान् विष्णुरव्ययः ।
यदा यदा च संप्राप्तमनिष्टमसुरैस्तयोः ॥

३५. अञ्जसाऽपोह्य तत्सर्वं इष्टप्राप्तिं ददौ किल ।
सर्वलोकप्रसिद्धं हि यदेतत् शास्त्रसंमतम् ॥

३६. आलोड्य सर्वशास्त्राणि विचार्य च पुनः पुनः ।
इदमेकं सुनिष्पन्नं ध्येयो नारायणस्सदा ॥

३७. एवं शतसहस्राणि प्रमाणानि यथाविधि ।
सत्तर्कसहितान्येव सर्वज्ञत्वान्महामतिः ॥

---

எல்லாவிருப்பங்களேயும் பெற்றிருப்பது என்று இந்த விஷ்ணுவின் திருமேனி விளங்குகிறது. பேரறிவாளரான சிவவாக்கியரே! இத்திருமேனியின் சிறப்பைக் காண்பீராக! அழிவற்றவனான விஷ்ணுவே பிரமனுக்கும் உருத்திரனுக்கும் தலைவனாய், ஜ்ஞானம்முதலான குணங்களால் நிறைந்திருப்பவன், அஸுரர்களால் அவ்விருவருக்கும் எப்பொழுதெல்லாம் இடர் நேருகிறதோ, அப்போதெல்லாம் அவ்விடர்கள் அனைத்தையும் நன்கு நீக்கி அவர்கள் விரும்பியதனைத்தையும் கொடுப்பவன் விஷ்ணுவேயன்றோ. இவ்விஷயம் ஶாஸ்த்ரங்கள் அனைத்தாலும் அங்கீ₃கரிக்கப்பட்டதாய், எல்லாவுலகிலும் ப்ரஸித்₃த₄மாயிருப்பதன்றோ. "எல்லா ஶாஸ்த்ரங்களையும் நன்கு பார்த்து மறுபடியும் மறுபடியும் ஆராய்ச்சி செய்தாலும் 'நாராயணனொருவனே எப்போதும் த்₄யானிக்கத்தக்கவன்' என்னும் ஒரு முடிவுக்கே வரமுடியும்" என்பதுபோன்ற நூறாயிரக்கணக்கான முறையான ப்ரமாணங்களையும் நல்ல யுக்திகளையும் எல்லாமறிந்த பேரறிவாளராகையாலே தம் வாத₃த்தின் மூலம் நிலைநாட்டி, பராஶரமுனிவர் முதலானவர்களைப் போலே நல்லோர்கள் இசைந்த பரதத்துவ நிர்ணயத்தை நன்கு செய்தார் பேயாழ்வார்.

३८. तानि वाद्मुखेनैव प्रतिपाद्यार्यसंमतम् ।
पराशरादिवत्सम्यगकरोत्तत्त्वनिर्णयम् ॥

३९. संतुष्टस्तेन वाक्येन स सम्यक् छिन्नसंशयः ।
भक्तिसारो महाह्वयस्य शिष्यत्वमकरोत्तदा ॥

४०. स तस्मै भक्तिसाराय विष्वक्सेनकृपावशात् ।
तापादिपञ्चसंस्कारान् चकार महदाह्वयः ॥

४१. सम्यगष्टाङ्गयोगं च तद्ध्यानविषयं महत् ।
यज्जगत्कारणं वस्तु तत्सर्वमुपदिश्य सः ॥

४२. कृतकृत्यो महायोगी मुदं चक्रे महात्मने ।
यद्दिव्यात्मस्वरूपं च ज्ञानशक्त्यादिका गुणाः ॥

---

## ஶிஷ்யரான மழிசைப்பிரானுக்கு உபதேஶம்

39-47 இந்தப் பரதத்துவ நிர்ணய வாக்யங்களாலே நன்கு உகந்த மழிசைக்கிறைவர் பேயாழ்வாருக்கு ஶிஷ்யரானர், அப்பேயாழ்வாரும் ப₄க்திஸாரரான அவருக்கு விஷ்வக்ஸேனரின் அருளை முன்னிட்டுக்கொண்டு தாபம், புண்ட்₃ரம், நாமம், மந்த்ரம், யாக₃ம் என்னும் ஐந்து ஸம்ஸ்காரங்களையும் செய்வித்தார். அஷ்டாங்க₃ யோக₃த்தையும் நன்கு உபதேஶித்து அந்த யோக₃த்தைக்கொண்டு த்₄யானிக்கவேண்டிய விஷயமாய், மிகப்பெரியதாய், ஜக₃த்காரணமான பரமாத்ம ஸ்வரூபத்தையும் உபதே₃ஶித்து, பேயாழ்வார் தம் கடமையைச் செய்தவராய் மஹா புருஷரான மழிசைப்பிரானுக்குப் பேரானந்தத்தை விளைத்தார். எம்பெருமானுடைய தி₃வ்யாத்ம ஸ்வரூபம், ஜ்ஞானம் ஶக்தி முதலான தி₃வ்யாத்ம கு₃ணங்

४३. तयोः प्रकाशकं यत्तत् दिव्यमङ्गलविग्रहम् ।
किरीटनूपुरान्तादिदिव्यभूषणकानि च ॥

४४. शङ्खचक्राद्यायुधानि लक्ष्मीभूम्यादिकाः स्त्रियः ।
एतैर्विराजमानं च भगवन्तं तमच्युतम् ॥

४५. नित्यकैङ्कर्यनिरतैः नित्यैर्मुक्तैश्च सेवितम् ।
तस्य भोगविभूत्याख्यं यन्महत्परमं पदम् ॥

४६. प्रकाशयित्वा शास्त्रेण भक्तिसाराय भक्तितः ।
स तेनाष्टाङ्गयोगेन साक्षात्कारमकल्पयत् ॥

४७. जीवप्रधानकालात्मलीलासृष्ट्यादिकांश्च तान् ।
सद्वारकाद्वारकाभ्यां सर्वं सम्यगबोधयत् ॥

---

கள், அந்த கு$_3$ணங்களை வெளிப்படுத்தும் தி$_3$வ்யமங்க$_3$ள விக்$_3$ரஹம், கிரீடம் தொடக்கமாக சதங்கை ஈருகச் சிறப்புற்ற தி$_3$வ்யாப$_4$ரணங்கள், ஶங்க$_2$ம் சக்ரம் முதலான தி$_3$வ்யாயுத$_4$ங்கள், லக்ஷ்மீ பூ$_4$மி முதலான தேவிமார் ஆகியவற்றாலே விளங்கா நிற்பவனாய் எப்போதும் கைங்கர்யத்தில் ஈடுபட்டிருக்கும் நித்யமுக்தர்களாலே ஸேவிக்கப்பட்டவனாயுள்ள ப$_4$க$_3$வானான அச்சுதனையும் அவனுடைய போ$_4$க$_3$ விபூ$_4$தியாய் மிகப் பெரியதான பரமபதத்தையும் ஶாஸ்த்ரங்களைக்கொண்டு ப$_4$க்திஸாரருக்கு உபதேசித்து, அந்த அஷ்டாங்க$_3$ யோக$_3$த்தாலுண்டான பரப$_4$க்தியாலே அந்த ப$_4$க்திஸாரருக்கு ப்$_3$ரஹ்ம ஸாக்ஷாத்காரத்தையும் உண்டாக்கினார். ஜீவன், ப்ரக்ருதி, காலம் ஆகிய தத்த்வங்களைத் தன் லீலையின் பொருட்டுத்தானே நேரே படைக்கும ஸமஷ்டி ஸ்ருஷ்டி, பிரமன் முதலானாரைக்கொணடு படைக்கும் வ்யஷ்டிஸ்ருஷ்டி ஆகிய இவையனைத்தையும் அவருக்கு ஶ்ருதிஸ்ம்ருதிகளைக்கொண்டு நன்கு உபதேஶித்தார் பேயாழ்வார்.

४८. तयोर्विभूत्योर्यः कर्ता स एव भगवान् हरिः ।
विभूतिद्वयनाथस्य तस्य विष्णोर्जगत्पते ॥
४९. विधाता विश्वसृड्ब्रह्मा नाभीपद्मादजायत ।
ज्येष्ठपुत्रो महान् जज्ञे विधातुस्तस्य शङ्करः ॥
५०. इत्येवं लोकशिक्षार्थं भक्तिसारो महायशाः ॥
नारायणपरान् ग्रन्थान् चक्रे द्राविडभाषया ॥
५१. भक्तिसारेण सुमहान् महदाख्यः सुपूजितः ।
तीर्थयात्रापरो धीमान् प्रतस्थे दिशमुत्तराम् ॥
५२. भक்திसारोऽपि वेदान्तिन् ! एवं यत्नेन भूयसा ।
विपर्ययात्मकं ज्ञानं यच्च तत् संशयात्मकम् ॥

---

## திருமழிசையாழ்வாரின் க்₃ரந்த₂ங்கள்

48—50. உப₄யவிபூ₄திக்கும் காரணமாயிருப்பவன் எம்பெருமானை ஹரியே. இரு விபூ₄திகளுக்கும் தலைவனாய் ஜக₃ந்நாத₂னை அந்த விஷ்ணுவினுடைய திருநாபீ₄ கமலத்திலிருந்து அனைத்துலகையும் படைத்து நியமிக்கும் பெரியோனை நான்முகன் உண்டானான். அவனிடமிருநது ஶங்கரன் ஜ்யேஷ்ட₂புத்ரனாக உண்டானான் என்று உலகம் அறிந்து கொள்வதற்காக, பெரும்புகழாளரான ப₄க்திஸாரர் தமிழமொழியாலே நாராயணனைப் பரமாத்மாவாககாட்டும் தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களை அருளினார்.

## திருவல்லிக்கேணியில் யோக₃ம்

51—59. அறிவாளியாய் மிகப் பெரியவரான பேயாழ்வார் ப₄க்திஸாரராலே மிகவும் ஆராதி₄க்கபபட்டு, தீர்த்த₂ யாத்திரை செய்வதற்காக வடதிசை நோக்கிப் புறப்பட்டார். நஞ்ஜீயரே! திருமழிசையாழ்வாரும் இப்படிப் பேயாழ்வாருடைய பெருமுயற்சியாலே ஐயம் திரிபு என்று இருவகைப்பட்ட அஜ்ஞானங்களை, தத்துவத்தை உள்ளபடி

५३. उत्सृज्य दूरतः सम्यगुभयं तत्त्वदर्शनात् ।
तस्मादितरसिद्धान्तनिराकरणपूर्वकम् ॥

५४. स्वमतस्थापनं चक्रे महदाख्योपदेशतः ।
आलोड्य सर्वशास्त्राणि विचार्य च पुनः पुनः ॥

५५. इदमेकं सुनिष्पन्नं ध्येयो नारायणस्सदा ।
योगीश्वरं जगन्नाथं विष्णुं जिष्णुं जगत्पतिम् ॥

५६. पद्मनाभं विशालाक्षं चिन्तयामि जगत्पतिम् ।
इत्येवं पुण्डरीकाक्षं जगतः कारणं परम् ॥

५७. श्रियःपतिं जगन्नाथं सर्वान्तर्बहिरास्थितम् ।
हृत्पुण्डरीके योगेन तेनाष्टाङ्गेन सन्ततम् ॥

---

நன்கு காண்கையாலே வெகுதூரத்தில் விலக்கி, அது காரணமாகப் பேயாழ்வாரின் உபதே₃ஶத்தை அனுஸரித்து மற்ற மதங்களைத் தள்ளி தமது மதத்தை நிலைநாட்டினார். "எல்லா ஶாஸ்த்ரங்களையும் நன்கு பார்த்து மறுபடியும மறுபடியும் ஆராய்ந்தாலும் 'நாராயணனொருவனே த்₄யானிக்கத்தக்கவன்' என்னும் இவ்விஷயமே உறுதியாகத்தேறும்" "யோகிகளுக்குத் தலைவனும் உலகிற்குத் தலைவ்னும், ஸ்வாமியாய், எங்கும் வியாபிப்பவனும், எதிலும் வெற்றியே காண்பவனும், தாமரையுந்தித் தனிப்பெருநாயகனை தாமரைத்தடங் கண்ணனை த்₄யானிக்கிறேன்" என்று ப்ரமாணங்களில் சொல்லப்பட்டவனும், தாமரைக் கண்ணனும், உலகுக்கு மேலான காரணமாய், திருமகள் கேள்வனும், அனைத்திலும் உள்ளும்புறமும் வ்யாபித்திருப்பவனை ஜக₃ந்நாத₂னை அஷ்டாங்க₃ யோக₃த்தாலே இதயக் கமலத்தில் தியானித்துக்கொண்டு பிறவிப்பயன்பெற்றவராய், புனிதமான திருவல்லிக்கேணியில் எழுநூறு

५८. ध्यायन् कृतार्थो वेदान्तिन्! पुण्ये कैरविणीतटे ।
उवास तत्र योगीन्द्रः यः सप्तशतवत्सरान् ॥

५९. एवं महान् सर्वमतान्विशोध्य
ज्ञात्वाऽथ तत्त्वार्थमचञ्चलात्मा ।
महाख्यपादाम्बुजभृङ्गराजः
परं विरेजे भगवत्पराऽयः ॥

६०. तत्त्वार्थसारं निगमान्तशास्त्र-
निर्णीतमर्थं तमिमं महान्तम् ।
श्रुत्वाऽनिशं यो हृदये दधाति
नोपैति मृत्युं स भवेन्मुमुक्षुः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे महदाख्यतत्त्वोपदेशकथनं नामाशीतितमोऽध्यायः ॥

---

வருடங்கள் வாழ்ந்துவந்தார் திருமழிசையாழ்வார். இவ்வண்ணமாக எல்லா மதங்களையும் ஆராய்ந்து உண்மையை உணரப்பெற்று, சஞ்சலமற்ற மனத்தையுடையவராய், பேயாழ்வாரின் திருவடித்தாமரைகளில் வண்டு போலிருக்கும் திருமழிசையாழ்வார் அச்சுதனடியார்களில் தலைவராய் விளங்கினார்,

### பரதத்துவநிர்ணய ஜ்ஞானப₂லம்

60. வேத₃ாந்த ஶாஸ்த்ரங்களில் நிர்ணயிக்கப்பட்டதாய், பேயாழ்வாரால் திருமழிசைப்பிரானுக்கு உபதே₂ஶிக்கப்பட்டதான மிகச் சிறந்த பரதத்துவ நிர்ணய ஸாரத்தைக் கேட்டு எவன் அதை எப்போதும் நெஞ்சிலே த₄ரிக்கிறானோ அவன் மோக்ஷத்தில் விருப்பமுடையனாய் மறுபிறவியை அடையமாட்டான்.

ப்ரபன்னாம்ருதத்தில் ப₄ட்டார்யவேத₃ாந்தி ஸம்வாத₃த்தில் பேயாழ்வார் திருமழிசையாழ்வாருக்குப் பரம்பொருளை உபதேசித்ததைக் கூறும் எண்பதாம் அத்தியாயம் நிறைவுற்றது.

॥ एकाशीतितमोऽध्यायः ॥

१. असद्गतिः प्रणम्याथ भट्टार्यं भगवत्प्रियम् ।
भूयः पप्रच्छ वै धीमान् भक्तिसारस्य वैभवम् ॥

२. कति वर्षाणि भूलोके स्थितवान् योगिराडयम् ।
यद्यच्चरितं सुमहत् विचित्रं ब्रूहि मे गुरो! ॥

३. तस्य तद्वचनं श्रुत्वा श्रीरङ्गेशपुरोहितः ।
प्रणम्य भक्तिसारं तं वेदान्तिनमथाब्रवीत् ॥

४. श्रूयतामभिधास्यामि भक्तिसारस्य वैभवम् ।
अत्यद्भुतमिदं पुण्यं श्रोतॄणामघनाशनम् ॥

---

# எண்பத்தோராம் அத்தியாயம்

## உருத்திரனின் தோல்வி

## நஞ்ஜீயரின் கேள்வி

1—2. அறிவாளியான நஞ்ஜீயர் அரங்கனுக்கு இனியவரான ஸ்ரீ பராஶரப₄ட்டரை வணங்கி, திருமழிசையாழ்வாரின் பெருமையைப்பற்றி மேலும் கேட்கலுற்றூர்— "ஆசார்யரே! யோகீ₃ஶ்வரரான இத் திருமழிசையாழ்வார் நிலவுலகில் எத்தனை வருடங்கள் எழுந்தருளியிருந்தார் என்பதையும், அவருடைய ஆஶ்சர்யமான பெரிய சரித்திரமனைத்தையும் எனக்கு அருளிச்செய்வீராக" என்று,

## சிவபார்வதிகள் மழிசைக்கிறைவரைப் பார்த்தல்

3—9. நஞ்ஜீயருடைய அவ்வார்த்தையைக் கேட்டு, ஸ்ரீரங்கே₃ஶபுரோஹிதரான பட்டர் திருமழிசையாழ்வாரை வணங்கி நஞ்ஜீயரைக்குறித்துக் கூறினுர், அத்யாஶ்சர்யமாய், மிகப் புனிதமானதாய், கேட்பவர்களின் பாபத்தைப் போக்கடிப்பதான ப₄க்திஸாரருடைய வைப₄வத்தைக் கூறுகிறேன் கேட்பீராக.

५. पुण्ये महाकैरविणीतटेऽस्मिन्
सद्भक्तितोऽसौ भगवद्गुणानाम् ।
कुर्वंस्तदैवानुभवं महात्मा
न्यषीदतादित्यसमानकान्तिः ॥

६. ततस्तदा शैलसुतासमेतः
त्रिशूलपाणिर्वृषभाधिरूढः ।
अलक्ष्यत व्योमतले स्वदीप्त्या
प्रकाशयन् सर्वदिशो महात्मा ॥

७. व्योमचारिणमायान्तं तं दृष्ट्वा शङ्करं तदा ।
अस्पृश्यामेव तच्छायां ज्ञात्वा परमवैदिकः ॥

८. भक्तिसारस्तदाऽन्यत्र विटपावरणस्थले ।
तौ तदा दम्पती दृष्ट्वा भक्तिसारविचेष्टितम् ॥

---

அப்போது புனிதமான திருவல்லிக்கேணிக்கரையிலே ஸூர்யன் போன்ற ஒளியையுடைய மஹாபுருஷரான திருமழிசையாழ்வார் பேரன்புடன் எம்பெருமானுடைய குணாநுபவத்தைச் செய்துகொண்டு எழுந்தருளியிருந்தார். அப்போது மஹாத்மாவாய், த்ரிசூலத்தை தரித்தவராய், மலைமகளோடு எருதின்மேல் ஏறியிருப்பவரான சிவன் ஆகாயத்தில் தன் ஒளியாலே எல்லாதிசைகளையும் விளங்கச் செய்துகொண்டு வந்துகொண்டிருந்தார். ஆகாயத்தில் வந்துகொண்டிருந்த ஶங்கரனைப்பார்த்து, (தமோகுணம் மிகுந்த) அந்த தெய்வத்தின் நிழல் தன்மேல் படக்கூடாதென்று உணர்ந்து, பரமவைதிகரான திருமழிசையாழ்வார் தாம எழுந்தருளியிருந்த இடத்திலிருந்து வேறோர் நிழலின்கீழ் ஒதுங்கினார். திருமழிசையாழ்வாருடைய அச்செயலைப்பார்த்து அந்த தம்பதிகள் வியப்புற்றவர்க

९. निवार्य गमनं तत्र विस्मितौ तस्थतुः क्षणम् ।
विलोक्य पार्वती नाथं शङ्करं प्रत्यभाषत ॥

१०. कोऽयं कन्थाधरो रुद्र! प्रभावस्तस्य कीदृशः ।
ज्ञातुमिच्छामि भवते रोचते यदि गद्यताम् ॥

११. निशम्य वाक्यं पार्वत्याः शङ्करस्तामभाषत ।
कश्चिन्महानुभावोऽयं भगवद्भक्तिपारगः ॥

१२. न च मां गणयत्यद्धा मत्तः कार्यं न तस्य हि ।
सा तद्वचनमाकर्ण्य प्रेम्णा भर्तारमब्रवीत् ॥

---

ளாய் ஆகாயத்தில் மேலே செல்லாமல் ஒரு கணம் நின்றனர்.

## ஶிவ பார்வதிகள் அவரை அணுகுதல்

9*-14. பார்வதி அந்த மழிசைக்கிறைவரைக்கண்டு "உருத்திரரே! கந்தைத்துணியை உடுத்திருக்கும் இவர் யார்? அவருடைய பெருமை எத்தகையது? இதை உம்மிடமிருந்து அறிய விரும்புகிறேன். திருவுள்ள மிருந்தால் இதைக் கூறவேண்டும்" என்று தனது கணவனை ஶங்கரனைக் குறித்துச் சொன்னாள். பார்வதியின் அவ்வார்த்தையைக்கேட்டு ஶங்கரரும் "இவர் ஒரு பெரிய மஹாநுபாவர். விஷ்ணுபக்தியின் எல்லையைக் கண்டவர். இவர் என்னைப் பொருட்படுத்தமாட்டார். என்னிடமிருந்து கொள்ளவேண்டிய காரியம் எதுவும் அவருக்கு இல்லையன்றோ" என்று அவளிடம் உரைத்தார். அவளும் அவருடைய வார்த்தையைக்கேட்டு, "அப்படிப்பட்டவராயினும் விஷ்ணுபக்தரான அவரைக்கண்டு வார்த்தைசொல்ல விரும்புகிறேன்" என்று கணவனைப்பார்த்து அன்போடு கூறினாள். பார்வதியின் அவ்வார்த்தையை ஏற்றுக்

१३. तथाविधमपि द्रष्टुं तल्लिङ्गानि हरिप्रियम् ।
अङ्गीकृत्य वचस्तस्याः पार्वत्याः शङ्करः स्वयम् ॥

१४. आकाशाद्भूतलं प्राप्य पार्वत्या सहितोऽञ्जसा ।
भक्तिसारस्य निकटे तस्थौ सूर्याग्निवर्चसः ॥

१५. उवाच स शिवस्तं वै भक्तिसारं हरिप्रियम् ।
आगतं मां विजानीहि तवाभीष्टवरप्रदम् ॥

१६. भक्तिसारस्तु भगवान् तूष्णीं स्थित्वा किल स्वयम् ।
पुरः स्थितमदृष्ट्वैव नेत्राभ्यामपि शङ्करम् ॥

१७. सूत्राणि कृत्वा कन्थायां सम्यक् संधारयंस्थितः ।
क्षणमात्र स्थितस्तत्र पार्वत्या सह शङ्करः ॥

१८. उदासीनं स्थितं वीक्ष्य भक्तिसारं वचोऽब्रवीत् ।
पुरःस्थितमदृष्ट्वैव मामलक्ष्यं विधाय च ॥

---

கொண்டு ஶங்கரர்தாமும் பார்வதியோடுகூட விரைவில ஆகாயத்திலிருந்து பூ₄மியை அடைந்து ஸூர்யன்போலும் அக்₃னிபோலும ஒளிவிடும் ப₄க்திஸாரரின் அருகில் வந்து நின்றார்.

## ஶிவனின் வார்த்தை

15-19. விஷ்ணுப₄க்தரான ப₄க்திஸாரரைப் பார்த்து "நீர் விரும்பும் வரங்களைக் கொடுப்பதற்காக நான் வந்திருப்பதை உணர்வீராக" என்று ஶிவன் கூறினார். ஜ்ஞானம் முதலான கு₃ணங்கள் நிறைந்தவரான ப₄கதிஸாரரும் தம் முன்னிலிருககும ஶங்கரரைக் கண்ணாலும் காணமல் தாம் மௌனமாகவே இருந்துகொண்டு ஊசியிலே நூலைக்கோத்துக் கந்தைத் துணியைத் தைத்துக் கொண்டிருந்தார். சிறிது நேரம் அங்கு பார்வதியோடு நின்ற ஶங்கரரும் தன்னைக் காணமலிருக்கும் ப₄க்திஸார

१९. अपूजयित्वा पूजार्हं देवानामधिपं शिवम् ।
यद्युदासीनवद्योगिन्! वर्तसे तदिहोच्यताम् ॥
२०. भक्तिसारो महेशस्य वचः श्रुत्वा तमब्रवीत् ।
त्वत्तः प्रयोजनं नास्ति किञ्चिदप्यगजाधिप! ॥
२१. अतो युवां समालोक्य तूष्णीं भूतोऽस्मि निश्चलः ।
तदुपश्रुत्य वचनं निजगाद स शङ्करः ॥
२२. वरं प्रदातुं योगीश! तवाहं समुपागतः ।
दास्यामि दुर्लभमपि यदिष्टं वृणु सत्वरम् ॥

---

ரைப்பார்த்து "யோகியே! உமக்கு முன்னே நிற்பவனும், பூஜிக்கத்தக்கவனும், தே₃வர்தலைவனுமான ஶிவனென்கிற என்னைக் காணாமலே பூஜிக்காமல் அலட்சியப்படுத்தி உதா₃ஸீனரைப்போலே நீர் இருப்பதற்குக் காரணத்தைக் கூறுவீராக" என்று சொன்னார்.

## மழிசைக்கிறைவரின் பதில்

20-*21. ப₄க்திஸாரரும 'மஹேஶன்' என்று புகழப் படும ஶிவனின வார்த்தையைக்கேட்டு "மலையரசன் மகளின் கணவரே! உம்மிடமிருந்து நான் கொள்ள வேண்டிய எப்பயனுமில்லையே! அதனாலேயே உங்களிருவரையும் கண்டும் மௌனத்தோடு உறுதியுடன் நிற்கிறேன்" என்று பதிலுரைத்தார்.

## ஶிவப₄க்திஸாரர்களின் ஸம்வாதம்

21*-27. அவ்வார்த்தையைக்கேட்டு "யோகியர் தலைவரே! உமக்கு வரம் கொடுப்பதற்காகவே நான் வந்திருக்கிறேன். பெறற்கரிய வரங்களையும் கொடுப்பேன். விரும்பிய வரத்தை விரைவில் கேட்பீராக" என்று ஶங்கரர் பதில்

२३. सर्वार्थनिस्पृहो योगी श्रुत्वा शङ्करभाषितम् ।
सर्वार्थदानयोग्यत्वात्स चैवं प्रत्यभाषत ॥

२४. नास्ति मे वाञ्छितं रुद्र! मास्तु युष्मद्वरं ततः ।
स तदाकर्ण्य रुद्रोऽपि व्याजहार पुनर्वचः ॥

२५. मद्दर्शनं नृणां लोके न कदाचिद्वृथा भवेत् ।
तस्मान्मत्तो वरः सम्यक् संप्रार्थ्यस्ते शुभो यतः ॥

२६. एवं संप्रार्थितस्तेन भक्तिसारो महात्मना ।
ययाचेऽभीष्टदातारं अभीष्टं हास्यकारणम् ॥

२७. यथा गच्छन्त्यरुद्धेन सूचीमार्गेण तन्तवः ।
तथैव मे वरं देहि सर्वाभीष्टप्रदायक! ॥

---

கூறினார். எம்பெருமானைத் தவிர எப்பொருளிலும் பற்றில்லாத ப₄க்திஸாரர் ஶங்கரர் கூறியதைக்கேட்டு, தாமே எல்லா வரங்களையும் கொடுக்க வல்லவராகையாலே, 'உருத்திரரே! எனக்கு வேண்டியது எதுவுமில்லையே! ஆகையால உமது வரம் தேவையில்லை'' என்று பதில் கூறினார். உருத்திரரும் அதைக்கேட்டு ''மனிதர்கள் என்னைக்கண்ட பின்பு இவ்வுலகில் வரம்பெறுமல் வீணானது இதுவரை ஒருபோதுமில்லை. ஆகையால் நீர் என்னிடமிருந்து மங்களமான வரத்தை நன்கு வேண்டிப் பெறுவீராக'' என்று மறுபடியும் பதில் உரைத்தார். மஹா ஶக்திமானான அந்த உருத்திரனால் இவ்வண்ணம் வேண்டப்பட்ட ப₄க்திஸாரரும் விரும்பியதைக் கொடுக்கும் அவரைப்பார்த்து ''எல்லாவரங்களையும கொடுப்பவரே! என்னுடைய ஊசி செல்லும் வழியிலே தடையில்லாமல் நூல்களும் செல்லும்படி வரம் கொடுப்பீராக!'' என்று பரிஹாஸமாக வரம் கேட்டார்.

२८. एवं हास्यकरं वाक्यं निशम्य कुपितस्तदा ।
अनङ्गमिव तं कर्तुं इयेषाथ त्रिलोचनः ॥
२९. कुपितस्यास्य संजज्ञे निर्दहन् सर्वतो दिशः ।
ललाटलोचनादग्निर्युगान्ताग्निरिवोल्बणः ॥
३०. भूम्यन्तरिक्षे चाकाशं दिशस्सर्वास्तथाऽऽवृणोत् ।
ज्वालामालासहस्रेण स महोग्रेण तं दहन् ॥
३१. कल्पाग्निनिभमत्युग्रं रौद्रमग्निं विलोक्य सः ।
पादाङ्गुष्ठस्थितं चैकं नेत्रमुन्मीलितं व्यधात् ॥
३२. दक्षिणाङ्गुष्ठनेत्राग्निः कोटिसंवर्तकाग्निवत् ।
उद्भूत उज्ज्वलस्तस्य स शम्भुं प्रत्यपद्यत ॥

---

## நெற்றிக்கண் நெருப்பும் கால் பெருவிரல் நெருப்பும்

28-34. இந்தப் பரிஹாஸ வாக்யத்தைக் கேட்டுக் கோபங்கொண்ட முக்கண்ணர் அப்போதே அந்த பக்திஸாரரை மன்மதனைப்போலே எரித்துவிட எண்ணினர். கோபங்கொண்ட அவருடைய நெற்றிக்கண்ணிலிருந்து பிரளயகால நெருப்பைப்போலே மிகப் பெரியதாய் எல்லாத் திசைகளையும் எரிப்பதான நெருப்பு உண்டாயிற்று. மிகக் கொடிய ஆயிரம் ஜ்வாலைகளாலே அந்த பக்திஸாரரை எரித்துக்கொண்டு பூமி, அந்தரிக்ஷம், ஆகாஶம், எல்லா திக்குகள் ஆகிய அனைத்தையும் வியாபித்தது. அந்த பக்திஸாரரும் ஊழிகாலத் தீயைப்போல் மிகக் கொடியதான அந்த நெற்றிக்கண் நெருப்பைக்கண்டு தமது வலது கால் பெருவிரலில் இருக்கும் ஒரு கண்ணைத்திறந்தார். பக்திஸாரருடைய அந்த வலதுகால் பெருவிரல் நெருப்பு கோடி ஊழிகாலத் தீயைப் போன்றதாய்க்கிளம்பி எரித்துக் கொண்டு ஶிவனை வந்தடைந்தது. ஸூர்யனையும்அக்னி

३३. अत्यर्कानलदीप्तं तत् कोटिवैश्वानरप्रभम् ।
अत्यद्भुतं समालोक्य शंभुर्विस्मयमागतः ॥

३४. वेदान्तिन्! भगवद्भक्तेः प्रभावः केन वर्ण्यते ।
खद्योतप्रायमभवत् तेजस्तत् शांभवं महत् ॥

३५. भक्तिसारपदाङ्गुष्ठनेत्राग्नेर्महतस्तदा ।
उत्कृष्टतेजसा तेन दह्यमानस्त्रिलोचनः ॥

३६. पार्वत्या सहितो रुद्रः तत्तेजः सोढुमक्षमः ।
पुष्कलावर्तकान्मेघान् प्रलयाग्निनिवारकान् ॥

३७. आनयामास सहसा तदग्निशमनाय च ।
आकाशं निबिडं सम्यक् मेघसंघः समावृणोत् ॥

---

யையும் மீறிய ஒளியையுடையதாய், கோடி அக்₃னிகளின் சோதியை உடையதாய், மிக ஆஶ்சர்யமானதான அந்த நெருப்பைக்கண்டு ஶிவன் வியப்புற்றார். வேதா₃ந்தி நஞ்ஜீயரே! ஶிவனின மிகப் பெரிய நெற்றிக் கண நெருப்பு அந்த வலதுகால கட்டைவிரல் நெருப்பின் முன் மின்மினி போன்றதாயிற்று. ப₄க₃வத்₃ப₄க்தியின் பெருமையை யாரால் வர்ணிககமுடியும்?

## ஊழிகால மேகங்கள் நெருப்பை அணைத்தல்

35-*39. அப்போது ப₄க்திஸாரரின் கால் பெருவிரல் நெருப்பின் மிகப் பெரிய சோதியாலே எரிக்கப்பட்ட பார்வதியோடுகூடிய முக்கண்ணன் அந்த நெருப்பைப் பொறுக்க முடியாதவராய், பிரளயாக்₃னியை அவிக்கும் புஷ்கலாவர்த்தகம் எனப்படும் ஊழிகால மேக₄ங்களை அந்தக் கட்டைவிரல் நெருப்பை அவிப்பதற்காக உடனே வரவ

३८. महद्विद्युद्गणोपेतः सानिलोऽत्यन्तगर्जितः ।
महाकरिकरोदग्रवर्षधाराभिरञ्जसा ॥

३९. तमग्निं शमयामासुः महान्तं प्रलयाम्बुदाः ।
स ताभिर्वर्षधाराभिर्हन्यमानो न विव्यथे ॥

४०. महाभागवतस्तत्र वेदान्तिन्! अचलो यथा ।
भगवद्ध्यानसंजातसुखविस्मृतबाह्यजम् ॥

४१. तं दृष्ट्वा विस्मितोऽत्यन्तमचलं पर्वतोपमम् ।
स तस्य प्रददौ नाम भक्तिसार इति श्रुतम् ॥

---

ழைத்தார். அந்த மேக4 ஸமூஹம் ஆகாசம் முழுவதையும் நெருக்கமாக நன்கு வியாபித்தது. பெரிய மின்னல்களோடு கூடியதாய், ஊழிகாலக் காற்றோடு பெருமுழக்கம் செய்வதான அந்த ஊழிகாலமேக4ங்கள் பெரிய யானையின் துதிக்கைபோன்ற மழைத்தாரைகளாலே அந்தப்பெரிய நெருப்பை நன்கு அவித்தது.

## “ப4க்திஸாரர்” என்னும் விருதளித்தல்

39*-46. வேதா3ந்தி நஞ்ஜீயரே! மஹாபா4க3வதரான அவ்வாழ்வார் அந்த வர்ஷதா4ரைகளாலே அடிக்கப்பட்டபோதிலும் விஷ்ணு த்4யானத்தினால் உண்டான ஆனந்த3த்தினாலே வெளியில் நடப்பது எதையும் அறியாதவராய், மலைபோலே கலங்காமலிருந்தார். மலைபோல் உறுதியோடு இருக்கும் அவரைக் கண்டு வியப்புற்றவரான அந்த முனிவன் ‘ப4க்திஸாரர்’ என்னும் புகழ்பெற்ற பெயரை அவருக்கு அளித்தார்.

४२. बहुशः श्लाघयित्वाथ तदप्राकृतवैभवम् ।
विधाय स शिरःकम्पं पार्वत्या सह शङ्करः ॥

४३. दृष्टप्रभावो भगवान् सतीं वाचमुवाच ह ।
अम्बरीषेण दुर्वासाः यथा प्रागवमानितः ॥

४४. तथाऽधुनाहं गिरिजे! भक्तिसारेण निर्जितः ।
अतो भागवता देवि! त्रैलोक्येऽपि सुदुर्जयाः ॥

४५. इत्येवं वैभवं तस्य वेदान्तिन्! श्लाघयन् मुहुः ।
कैलासं पर्वतं श्रेष्ठं जगाम प्रमथाधिपः ॥

---

அவருடைய பெருமையை அறிந்த ப₄க₃வான் ஶங்கரர் அவருடைய அப்ராக்ருதமான வைப₄வத்தைப் பார்வதியோடுகூடிநின்று பலமுறை தலைகுலுக்கிப் புகழ்ந்து பார்வதியைப்பார்த்து "மலைமகளே! அம்ப₃ரீஷனாலே து₃ர்வாஸர் முன்பு எப்படித் தோல்வி அடைவிக்கப்பட்டாரோ அவ்வண்ணமே இப்போது நான் ப₄க்திஸாரராலே வெல்லப்பட்டேன். தே₃வி! இதிலிருந்து பா₄க₃வதர்கள் மூவுலகிலும் எவராலும் வெல்ல முடியாதவர்கள் என விளங்குகிறது" என்று வார்த்தை சொன்னார். வேதா₃ந்தி நஞ்ஜீயரே! இவ்வண்ணமாக ப₄க்திஸாரரின் பெருமையைப் பலகால் கொண்டாடிக்கொண்டு ப்ரமத₂க₃ணங்களுக்குத் தலைவரான ஶிவன் மிகச் சிறந்ததான கைலாஸ மலையை அடைந்தார். ஆஶ்சர்யமான பெருமையுடைய ப₄க₃வானை ப₄க்திஸாரரும் எம்பெருமானை

४६. भक्तिसारोऽपि तत्रैव योगेन भगवत्परः ।
उवास भगवान्कालं कञ्चिदाश्चर्यवैभवः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे भक्तिसारेण रुद्रापजयो नाम एकाशीतितमोऽध्यायः ॥

द्व्यशीतितमोऽध्यायः ॥

१. व्याघ्रारूढः ततः कश्चित् शुक्तिहाराभिधानकः ।
आसीत् व्योमचरः सिद्धनायको लोकविश्रुतः ॥

२. स कदाचित्समारुह्य व्याघ्रमम्बरवर्त्मनि ।
चचाराव्याहतगतिः पूजितो निखिलैः सुरैः ॥

---

தியானித்துக்கொண்டு அங்கேயே சிலகாலம் வாழ்ந்து வந்தார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ப₄ட்டார்ய வேதா₃ந்தி ஸம்வாத₃த்தில் ப₄க்திஸாரரால் உருத்திரன் தோல்வியடைந்ததைக்கூறும் எண்பத்தோராமத்தியாயம் முற்றிற்று.

# எண்பத்திரண்டாம் அத்தியாயம்
## ஸித்₃த₄விஜயமும் முதலாழ்வார்களின் பரமபத₃ப்ராப்தியும்

### ஶுக்திஹாரன் ஆகாயத்தில் தடைபட்டது

1-4. அக்காலத்தில் ஸித்₃த₄ர்களுக்கெல்லாம் தலைவனாய், புலியின்மேல் ஏறிக்கொண்டு ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவனாய், ஶுக்திஹாரன் என்னும் பெயருடைய ஒருவன் உலகில் புகழ்பெற்றவனாயிருந்தான். அவன் ஒருசமயம்

३. तस्य योगप्रभावेन व्याघ्रो रुद्धगतिर्दिवि।
न समर्थोऽभवद्गन्तुं तमुल्लंघ्यातितेजसम्॥

४. तं निश्चलगतिं दृष्ट्वा व्याघ्रं सिद्धेश्वरो महान्।
तिर्यगूर्ध्वं दिशस्सर्वाः ततोऽधो ददृशे महः॥

५. योगारूढं महात्मानं तं भूम्यां समवस्थितम्।
विलोक्य विस्मितोऽत्यन्तं व्याघ्रादुत्तीर्य भूतले॥

६. तदन्तिकं समागत्य व्याजहार वचः शुभम्।
कन्थां त्यजस्व भद्रं ते किमियं योगिपुङ्गव!॥

---

ஆகாஶமார்க்க₃த்தில் புலியின்மேல் ஏறிக்கொண்டு தடைபடாத ஸஞ்சாரத்தை உடையவனாய், எல்லா தே₃வர்களாலும் பூஜிக்கப்பட்டவனாய்த் திரிந்துகொண்டிருந்தான். திருமழிசையாழ்வாருடைய யோக₃ப்ரப₄ாவத்தாலே அவனுடைய புலியானது அதிதேஜஸ்வியான அவ்வாழ்வாரைத் தாண்டிச்செல்ல வல்லமையற்றதாய் ஸஞ்சரிக்க இயலாததாயிற்று. அப்புலி அசையாமலிருப்பதைக்கண்டு பெரிய ஸித்₃த₄ர் தலைவனான அவன் பக்கங்களிலும் மேலும் எல்லாத் திசைகளிலும் பார்த்துவிட்டுக் கீழே ஒரு சோதியைக்கண்டான்.

## ஶுக்திஹார கவசமும்—ப₄க்திஸாரகவசமும்

5-11. பூ₄மியில் யோக₃ம் செய்துகொண்டிருக்கும் மஹாபுருஷரான ப₄க்திஸாரரைப் பார்த்து வியப்புற்றுப் புலியிலிருந்து இறங்கி பூ₄மியில் அவர் அருகே வந்த ஶுக்திஹாரன் "யோகி₃யர் தலைவரே! இந்தக்கந்தையைக் கைவிடும்; உமக்கு நன்மை உண்டாகட்டும்; இந்தக்கந்தை

७. कवचं धारयाद्यदं यद्दिव्यपटनिर्मितम् !
दास्याम्याशु गृहाणार्य प्रीतस्तेऽह प्रभावतः ॥

८. इत्युक्त्वा भक्तिसाराय सिद्धोऽदात् कवचं तदा ।
निषिध्य वै तत्कवचं भक्तिसारस्तदर्पितम् ॥

९. माणिक्यरञ्जितं दिव्यं कवचं द्युमणिप्रभम् ।
विधाय सत्वरं सम्यक् स्वसङ्कल्पेन तत्क्षणम् ॥

१०. शुक्तिहाराय सिद्धाय दर्शयामास योगिराट् ।
तद्दिव्यकवचं दृष्ट्वा लज्जितः शुक्तिहारकः ॥

११. स्वकण्ठमणिमालां तां समादायाशु भक्तितः ।
अक्षमालां कुरुष्वेति भक्तिसाराय वै ददौ ॥

---

யால் எனன பயன்? தேவலோகத்திலுள்ள வஸ்த்ரத்தால் செய்யப்பட்ட இநதக் கவசத்தை இன்றுமுதல் த4ரித்துக் கொள்ளும், பெரியவரே! உமது பெருமையைப்பார்த்து இதை உமக்கு நான் கொடுக்கிறேன். விரைவில் ஏற்றுக் கொள்வீர்” என்று மங்க3ளமான வார்த்தையைச் சொன்னான். இப்படிச் சொன்னபின் அந்த ஸித்3த4ன் ப4க்திஸாரரிடம் அப்போதே அந்தக் கவசத்தைக் கொடுத்தான். அவன் கொடுத்த அக்கவசத்தை ஏற்க மறுத்த யோகி3ராஜரான ப4க்திஸாரர் மிக அழகியதாய், மாணிக்கத்தால் செய்யப்பட்டதாய், ஸூர்யன்போல் ஒளிவீசுவதான ஒரு கவசத்தை விரைவில் அக்கணத்திலேயே தன் ஸங்கல்பத்தாலே நன்கு உண்டு பண்ணி ஸித்3த4னை ஶுக்திஹாரனுக்குக் காட்டினார். அந்த தி3வ்ய கவசத்தைப் பார்த்து வெட்கமடைந்த ஶுக்திஹாரன் தன் கழுத்திலிருந்த மணிமாலையை ப4க்தியோடு விரைவில் எடுத்து “இதை உமது கழுத்தில் மணி மாலையாக த4ரிப்பீராக” என்று ப4க்திஸாரருக்குக் கொடுத்தான்.

१२. भक्तिसारः स्वकण्ठस्थतुलसीपद्ममालिकाः ।
आदाय सत्वरं तस्मै पश्य पश्येत्यदर्शयत् ॥

१३. स विलोक्याथ तास्सर्वाः ह्यनर्घ्यमणिमालिकाः ।
सविस्मयः शुक्तिहारो व्याजहार वचः शुभम् ॥

१४. महानुभावः परिपूर्णकामः
सिद्धेश्वरो निर्जितसर्वविद्यः ।
तस्मादहं जेतुमिमं समर्थो
नैवास्मि लोके कतमः समर्थः ॥

१५. श्लाघयित्वा ततः सम्यक् भक्तिसारं महौजसम् ।
यथागतं ययौ सिद्धो व्याघ्रारूढो महायशाः ॥

---

## சுக்திஹாரனின் தோல்வி

12-15 பக்திஸாரரோவெனில் தம் கழுத்திலிருந்த துளஸீமணி மாலைகளையும் தாமரை மணிமாலைகளையும் சடக்கென எடுத்து "இவற்றைப் பார் பார்" என்று அவனுக்குக் காட்டினார். அவையனைத்தையும் பார்த்து விலைமதிப்பற்ற மணிமாலைகளாய் அவையிருப்பதைக் கண்டு வியப்புற்ற சுக்திஹாரன் "மஹாநுபாவராய், விருப்பங்களனைத்தும் நிறைவேறப்பெற்றவராய், ஸித்தர்களுக்குத் தலைவராய், எல்லாக் கலைகளையும் தம் வசப்படுத்தியவராயிருக்கிறார் இவர். ஆகையால் நான் இவரை வெல்லவல்லேனல்லேன். இவ்வுலகில் வேறு எவன்தான் இவரை வெல்லவல்லவன்?" எனனும் மங்களமான வார்த்தையைச் சொன்னான். இவ்வண்ணமாகப் பெரிய தேஜஸ்ஸையுடைய பக்திஸாரரை நன்கு கொண்டாடி, பெரும்புகழுடைய அந்த ஸித்தன் புலியின்மேலேறி வந்த வழியே திரும்பிச் சென்றான்.

१६. ततः कोङ्कणसिद्धाख्यः रसवादकुतूहली ।
सम्यक् तद्वैभवं श्रुत्वा कश्चिदभ्येत्य संभ्रमात् ॥

१७. प्रददौ भक्तिसाराय गुटिकां रसनिर्मिताम् ।
विलोक्य तां भक्तिसारः तं कोङ्कणमथाब्रवीत् ॥

१८. तया गुटिकया सिद्ध! किं कार्यं संभविष्यति ।
तन्निशम्याथ सिद्धेशो भक्तिसारमभाषत ॥

१९. अस्याः संस्पर्शनादेव लोहं भवति काञ्चनम् ।
न च कस्यापि देयेयं प्राणवद्रक्षिता मया ॥

२०. भवते महते दत्ता रक्षणीया त्वया तथा ।
तत्सिद्धवचनं श्रुत्वा तां निराकृत्य योगिराट् ॥

---

## கொங்கண ஸித்3த4னின் தோல்வி

*16-25.* அதற்குப்பின் ரஸவாத3த்தில்வல்ல கொங்கண ஸித்3த4ன் என்பவன் ஒருவன் ப4க்திஸாரருடைய அப் பெருமையை நன்கு கேளவியுற்று, பரபரப்புடன் அவரிடம் வந்து பாத3ரஸத்தால் செய்யப்பட்ட ஒரு கு3ளிகையை ப4க்திஸாரரிடம் கொடுத்தான். ப4க்திஸாரரும் அதைப் பார்த்துவிட்டு "ஸித்3த4னே! இந்த கு3ளிகையால் என்ன கார்யத்தைச் செய்யலாம்?" என்று அந்தக் கொங்கண ஸித்3த4னைக்கேட்டார். ஸித்3த4ர் தலைவனும் அதைக்கேட்டு ப4க்திஸாரரைப்பார்த்து "எந்த உலோகமும் இந்த கு3ளிகையால் தொடப்பட்டால பொன்னுகிவிடும். இதை நான் உயிரைப்போல் காப்பாற்றி வைத்திருந்தேன். நீர் இதை எவருக்கும் கொடுக்கக்கூடாது. நீர் பெரியவ

२१. मर्दित्वा स्वहस्तेन स्वदेहमृदमुत्थिताम् ।
गुटिकां तां विधायाशु कोङ्कणाय प्रदाय च ॥

२२. अस्याः संस्पर्शनादेव शिला भवति काञ्चनम् ।
इत्येतत्सिद्धवर्याय महिमानं तदुक्तवान् ॥

२३ वेदान्तिन्! तत्परीक्षार्थं कोङ्कणः सहसा तदा ।
कस्मिंश्चित्पर्वते तत्र तां चिक्षेप तदर्पिताम् ॥

२४. गुटिकायास्तदा तस्याः स्पर्शमात्रेण पर्वतः ।
बभूव काञ्चनः श्रीमान् महामेरुरिवोज्ज्वलः ॥

२५. स काञ्चनगिरिं दृष्ट्वा कोङ्कणोऽत्यन्तविस्मयः ।
भक्तिसारं प्रणम्याथ कृतार्थः प्रययौ तदा ॥

---

ராகையாலே உமக்குக் கொடுத்தேன். நீரும் அவ்வண்ணமே இதைப் பாதுகாக்க வேண்டும்" என்று கூறினன். யோகி₃ராஜரான அவரும அந்த ஸித்₃த₄னின் வார்த்தையைக்கேட்டு அந்த கு₃ளிகையை உதறித்தளளித் தம உடலில் படிந்திருந்த மண்ணைத் தம கையால் திரட்டியெடுத்து அதை ஓர் கு₃ளிகையாக்கி உடனே அதைக் கொங்கணனிடம் கொடுத்து "இந்த கு₃ளிகையால் தொடப்பட்டால் கல்லும் பொன்னகும்" என்று அந்த ஸித்₃த₄ர் தலைவனுக்கு அதன் பெருமையைக் கூறினர். வேதா₃ந்தி நஞ்ஜீயரே! அப்போதே அதைச் சோதிப்பதற்காக அந்தக கொஙகணனும அவர் கொடுத்த அந்த கு₃ளிகையை (பக்கத்திலிருந்த) ஓர் மலையினமேல் எறிந்தான். அந்த கு₃ளிகை பட்டவுடனே அந்த மலை மகா மேருவைப்போல் பிரகாசிப்பதாய், சிறந்த பொன்னலான மலையாக மாறிற்று, அந்தப் பொன்மலையைப் பார்த்து

२६. ततो गुहान्तरादिष्टो भक्तिसारो महायशाः ।
अष्टाङ्गेनैव योगेन कञ्चित्कालमतिष्ठत ॥

२७. सरोभिधानो भूताख्यो महदाख्यश्च ते त्रयः ।
चरित्वा निखिलान् देशान् तद्देशं स्वेच्छयागताः ॥

२८. अव्याकृतं दिव्यतेजः तदपश्यन् महत्तरम् ।
ज्ञानदृष्ट्या ततस्तच्च विचार्य मतिवाञ्छया ॥

२९. गुहायामगमंस्तत्र भक्तिसारदिदृक्षया ।
भक्तिसारस्स तान् दृष्ट्वा योगिनो भगवत्परान् ॥

३०. यथार्हं पूजयामास प्रत्युत्थानाभिवन्दनैः ।
संपूजितास्ततस्तेन कृतासनपरिग्रहाः ॥

---

மிகவும் வியப்புற்ற கொங்கணன் ப₄க்திஸாரரை வணங்கி, பெருப்பேறு பெற்றவனாய் அப்போதே புறப்பட்டான்.

## முதலாழ்வார்களின் வரவு

26-*30. அதற்குப்பின் பெரும்புகழாளரான ப₄க்திஸாரர் ஒரு கு₃ஹையினுள் நுழைந்து அஷ்டாங்க₃யோக₃ம் செய்துகொண்டு சில காலம் வாழ்ந்தார். பொய்கையார் பூதத்தார் பேயார் என்னும் முதலாழ்வார்கள் மூவரும் எல்லா தி₃வ்யதே₃ஶங்களையும் ஸேவித்து விட்டு அந்த மலைக்குகைக்குத் தாமே விரும்பி வந்தார்கள். அங்கு மிகப் பெரிதாய் விவரிக்கவொண்ணாததான அந்த அப்ராக்ருதமான ஒளியைக் கண்டார்கள். ஜ்ஞானத்₃ருஷ்டியினாலே அந்த ஒளி ப₄க்திஸாரரே என ஆராய்ந்தறிந்து, அங்கு அவரைக் காண்பதற்காக கு₃ஹைக்குச் சென்றனர். ப₄க்திஸாரரும் எம்பெருமானிடம் ஈடுபட்ட யோகி₃களான அவர்களைக்கண்டு எதிர்கொண்டழைத்து வணங்கி முறைப்படி ஆராதித்தார்.

३१. सुखोपविष्टं तं कृत्वा भक्तिसारं वचोऽब्रुवन् ।
सुखेन वर्तते ब्रह्मन् भार्गवात्मज! किं भवान् ॥

३२. कच्चिदष्टाङ्गयोगोऽयमविच्छिन्नगतिः किल ।
तेषां तद्वचनं श्रुत्वा भक्तिसारोऽभ्यभाषत ॥

३३. महात्मनां हि भवतां कृपया देशिकोत्तमाः ।
कदापि न्यूनता नास्ति दासभूतस्य सर्वथा ॥

३४. एवं कुशलसंप्रश्ना ह्यन्योन्यं भगवत्पराः ।
कृतान्योन्यपरिष्वङ्गाः पुलकाङ्कितविग्रहाः ॥

३५. आनन्दबाष्पनयनाः कृतान्योन्याभिवादनाः ।
क्षीरवत्क्षीरसंमिश्रं मधुवन्मधुमिश्रितम् ॥

---

## முதலாழ்வார்களின் பரமபத ப்ராப்தி

30*-40. அந்தத் திருமழிசையாழ்வாரால் ஆராதிக்கப் பட்டவர்களாய், தாங்கள் ஆஸனத்தில் வீற்றிருந்து, மழிசைப் பிரானையும இனிதாக வீற்றிருக்கச் செய்து "பார்க்கவ புத்ர ரான அந்தணரே! தேவரீர் இனிதாக வாழ்கின்றீரா? தேவரீரது அஷ்டாங்கயோகம் தடைபடாமலிருக்கிறதா?" என்று கேட்டனர். அவர்களுடைய அவ்வார்த்தையைக் கேட்டு பக்திஸாரரும் "ஆசார்யஶ்ரேஷ்டர்களே! மஹாத் மாக்களாகிற தேவரீர்களின் அருளாலே அடியேனுக்கு எப்போதும் எவ்வகையிலும் எக்குறையுமில்லை" என்று பதில் உரைத்தார். வேதாந்தியே! இவ்வண்ணமாக ஒருவர்க கொருவர் குஶலப்ரஶ்னம செய்தபின்பு பகவத்பக்தர்க ளான அந்நால்வரும் ஒருவரையொருவர் ஆரத்தழுவிக் கொண்டு மயிர்க்கூச்செறியும் திருமேனிகளையுடையவர் களாய், ஆனந்தக் கண்ணீர் பெருகப்பெற்றவர்களாய்

३६. चत्वारस्सहिताश्चैते भगवद्ध्यानतत्पराः ।
अष्टाङ्गेनैव योगेन कञ्चित्कालं महौजसः ॥

३७. गुहायां न्यवसंस्तत्र वेदान्तिस्ते यथासुखम् ।
निवृत्तयोगास्ते सर्वे चत्वारो योगिपुङ्गवाः ॥

३८. गुणानुभवकैङ्कर्यनिरता ह्यभवंस्ततः ।
अनुज्ञातास्ततस्तेन सरोयोग्याद्यस्त्रयः ॥

३९. पृथ्वीसञ्चरणार्थाय निर्ययुर्भगवत्पराः ।
ग्रामैकरात्रयो धीराः मौनव्रतपरायणाः ॥

---

ஒருவரையொருவர் வணங்கி, பால் பாலோடும் தேன தேனோடும கலந்ததுபோலே இநத நாலு ஆழவார்களும் கூடியவர்களாய் எம்பெருமானை அஷ்டாங்கயோகத்தினுல் தியானித்துக்கொண்டு அந்த குஹையிலேயே பேரொளி யுடையவர்களாய் சிலகாலம் வாழ்ந்தனர். யோகமும் முடிந்தபின் யோகியர் தலைவரான அந்நால்வரும் எம் பெருமானுடைய குணங்களை அனுபவிப்பதிலும அவனுக் குக் கைங்கர்யம் செய்வதிலும் ஈடுபட்டவர்களாயிருந்தனர். அதற்குப்பின் திருமழிசையாழவாரிடம் விடைபெற்ற பொய்கையாழ்வார் முதலான மூவரும திவ்ய தேசயாத் திரைககாகப் புறப்பட்டனர். எம்பெருமானிடம் ஈடுபட்டவர் களாய், ஓரூரில் ஓரிரவுக்குமேல தங்காதவர்களாய், அறிவாளி களில் சிறந்தவர்களாய், மௌன வ்ரதத்தை அனுஷ்டிப்பவர் களாய், மூவாயிரத்து முந்நூற்றிருபத்தைந்து வருஷங்கள் களைப்பில்லாமல் விரைவாக பூமியில் ஸஞ்சரித்துவிட்டு அம்

४०. सहस्रत्रितयं चैव त्रिशतं पञ्चविंशतिम् ।
वत्सराणां विधायाशु भूसञ्चारं गतक्रमाः ॥
अवापुर्विष्णुसालोक्यं देहलीनगरे त्रयः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे भक्तिसारप्रभावकथने
सरोयोग्यादीनां वैकुण्ठावाप्तिर्नाम द्व्यशीतितमोऽध्यायः ॥

त्र्यशीतितमोऽध्यायः ॥

१. स भार्गवात्मजो धीमान् भक्तिसारोऽथ योगिराट् ।
स्वावतारस्थलं प्राप महीसारपुरं महत् ॥

२. तत्र श्वेतमृदं सम्यक् धारणार्थं विचार्य सः ।
तस्याश्चालाभतो योगी चिन्तामाप दुरत्ययाम् ॥

---

மூவரும் திருக்கோவலூரில் விஷ்ணுலோகத்தை அடைந்தார்கள்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ப₄ட்டார்ய வேதா₃ந்தி ஸம்வாத₃த்தில் திருமழிசையாழ்வார் வைப₄வத்தில் பொய்கையாழ்வார் முதலான மூவரும் வைகுண்டமடைதலைக் கூறும் எண்பத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

# எண்பத்துமூன்றுவது அத்தியாயம்

## ப₄க்திஸார மஹாவைப₄வம்

### காஞ்சியில் திருமண்

1-*7. ப₄ார்க்க₃வரின் பிள்ளையாய் அறிவாளியாய் யோகி₃ராஜரான ப₄க்திஸாரர் அதற்குப்பின் திருமழிசை என்னும தம்முடைய அவதார ஸ்தலத்தை அடைந்தார். அங்கு திருமண்காப்பு அணிவதற்காக வெள்ளை மண் கிடைக்குமா? என்று தேடிப்பார்த்துக் கிடைக்காததால் மிகவும கவலையடைந்தார். அதற்குப்பின் ப₄க்தர்களுக்கு

३. ततो भक्तपराधीनो वेङ्कटेशो दयानिधिः ।
तत्रागत्याञ्जसाप्येवमवोचत् भार्गवात्मजम् ॥

४. यथोक्तकारिणः काञ्च्यां सरोयोगिसुजन्मभूः ।
मृदा तत्रत्यया कार्यमूर्ध्वपुण्ड्रस्य धारणम् ॥

५. तदङ्गीकृत्य वचनं भक्तिसारः श्रियः पतेः ।
तत्र गत्वा मृदं सम्यक् आदाय स तया तदा ॥

६. धृतोर्ध्वपुण्ड्रो भूसारक्षेत्रमागत्य योगिराट् ।
जगन्नाथं तत्र नत्वा मञ्जुवल्लीमनोहरम् ।

७. कञ्चित्कालमुवासात्र तस्मादष्टाङ्गयोगतः ।
ततस्सत्यव्रतक्षेत्रे नित्यवासपरोऽभवत् ॥

८. यच्च सत्यव्रतं नाम क्षेत्रं पापविनाशनम् ।
पुण्यक्षेत्रेषु सर्वेषु तस्यैव श्रैष्ठ्यमीरितम् ॥

---

வசப்பட்டவனாய், கருணைக்கடலான திருவேங்கடமுடை யான அங்கு விரைவில் வந்து பார்க்கவ புத்ரரைப் பார்த்து 'காஞ்சியில் திருவெஃகா ஸந்நிதியில் பொய்கையாழ்வார் அவதார ஸ்தலம உள்ளது. அங்குள்ள மண்ணாலே நீர் ஊர்த்வபுண்ட்ரம் தரிக்கவேண்டும" என்று கூறினார். ஸ்ரீமந்நாராயணனுடைய அவ்வார்த்தையை ஏற்றுக் கொண்டு யோகிராஜரான பக்திஸாரர் திருவெஃகா வுககுச் சென்று மண்ணை நன்கு எடுத்துத் திருமண்காப்பு அணிந்தவராய், திருமழிசைக்கு வந்து திருமங்கைவல்லியின் மனததுக்கினியவரான ஜகந்நாதப்பெருமாளை வணங்கி அஷ்டாங்கயோகம்செய்துகொண்டு சிலகாலம வாழ்ந்தார்.

## காஞ்சியில் கணிகண்ணன் ஆஶ்ரயித்தல்

7*-14. அதற்குப்பின்—ஸத்யவ்ரத க்ஷேத்ரமான காஞ் சியில் பக்திஸாரர் நித்யவாஸம் செய்யத்தொடங்கினர்.

९. शयानः शेषपर्यङ्के कुन्देन्दुधवलप्रभे ।
फणारत्नसहस्रांशुसहस्रफणविस्तृते ॥

१०. नीलजीमूतसङ्काशः पद्मपत्रनिभेक्षणः ।
सेव्यमानो विशालाक्ष्या श्रिया कमलहस्तया ॥

११. धरण्या च सुतन्वङ्ग्या धाता विश्वस्य विश्वभुक् ।
यथोक्तकारी यत्रास्ते भगवान् विष्णुरव्ययः ॥

१२. स तं प्रणम्य सद्भक्त्या भगवन्तं श्रियः पतिम् ।
सरोयोगिसरस्तीरे ध्यायन् हरिपदाम्बुजम् ॥

---

அந்த க்ஷேத்ரம் பாபங்களைப் போக்கக்கூடியதும் புண்ய க்ஷேத்ரங்களனைத்தைக் காட்டிலும் அதற்கே சிறப்பு சொல்லப்பட்டது. குந்தமலரும் சந்த்ரனும்போல் வெண்மையொளியுடையதாய், ப்ரணமணிகளாகிற ஸூர்யன்களாலே அலங்கரிக்கப்பெற்ற ஆயிரம் படங்களை விரித்திருப்பதான ஆதிஶேஷனாகிற படுக்கையில் ஶயனித்திருப்பவராய், நீலமேகம் போன்றவராய், தாமரை இதழ்போன்ற கண்களையுடையவராய், தாமரையைக் கையிலேந்திய தடங்கண்ணியான ஸ்ரீதேவியாலும் மெல்லியலாளான பூமி தேவியாலும் ஸேவிக்கப்பெற்றவராய், உலகனைத்தையும் படைத்தவராய், உண்டவராய், அழிவற்றவரான சொன்ன வண்ணம்செய்த பெருமாள் அங்கு பள்ளிகொண்டிருக்கிறார். திருமகள் கேள்வனான அவ்வெம்பெருமானைப் பரமபக்தியோடு வணங்கி, பொய்கையாழ்வார் அவதரித்த குளக்கரையில் அவ்வெம்பெருமானது திருவடித்தாமரையை தியானித்துக்கொண்டு பக்தவத்ஸலராய், யோகிராஜராய், பார்க்கவரின பிள்ளையான இத்திருமழிசையாழ்வார்

१३. एतेनाष्टाङ्गयोगेन यः सप्तशतवत्सरान् ।
उवास भगवद्भक्तो योगिराड् भार्गवात्मजः ॥

१४. कणिकृष्णस्तदा धीमान् भक्तिसारमशिश्रयत् ।
भगवत्प्रवणस्तेन कणिकृष्णो महानभूत् ॥

१५. तत्रत्या स्थविरा काचित् योगयुक्तस्य योगिनः ।
शुश्रूषामकरोद्भक्त्या भक्तिसारस्य नित्यशः ॥

१६. सम्यक् संमार्जयित्वा च गोमयेनोपलिप्य च ।
रङ्गवल्ल्यादिकं चक्रे योगस्थानं दिने दिने ॥

१७. तस्यास्स तेन सन्तुष्टो भगवान् भार्गवात्मजः ।
वृद्धायास्तन्मनोभीष्टं दातुकामोऽभ्यभाषत ॥

---

அஷ்டாங்க$_{3}$யோக$_{3}$ம் செய்துகொண்டு எழுநூறு வருடங்கள் வாழ்ந்தார். அப்போது அறிவாளியான கணிகண்ணன் ப$_{4}$கதிஸாரரை ஆஸ்ரயித்தான். அதனால் எம்பெருமானிடம் ப$_{4}$கதிமிகுந்து அவன் மிகப்பெரியவனானான்.

## கிழவி குமரியாகிப் பட்டமஹிஷியாதல்

15-*26. அங்கிருந்த ஒரு கிழவி யோக$_{3}$ம் செய்துகொண்டிருந்த யோகி$_{3}$யான ப$_{4}$க்திஸாரருக்கு அன்புடன் தினந்தோறும் தொண்டுசெய்துகொண்டிருந்தாள். அவள் தினந்தோறும் அவர் யோகம் செய்யுமிடத்தை நன்றாகப் பெருக்கி, பசுஞ்சாணியால் மெழுகிக் கோலமிடுவது முதலான அழகுகளைச் செய்துவந்தாள். பா$_{4}$ர்க்க$_{3}$வரின் பிள்ளையான அவர் அதனால் உகந்து அக்கிழவியின் விருப்பத்தை

१८. कैङ्कर्येणाधुना तेन सन्तुष्टो जरठे तव ।
वरदोऽहं प्रदास्यामि वरं वरय संमतम् ॥

१९. तस्य तद्वचनं श्रुत्वा भक्तिसारस्य मङ्गलम् ।
सन्तुष्टा जरठा सैवं ययाचेऽभीष्टमादरात् ॥

२०. जरया पीडिता स्वामिन्! अशक्ता गमनागमे ।
यौवनं देहि मे नित्यं यथा चाप्सरसां भवेत् ॥

२१. अङ्गीकृत्य वचस्तस्याः भगवान् भार्गवात्मजः ।
प्रेमार्द्रदृष्ट्या जरठां तामपश्यत्तथैव च ॥

---

அளிக்கவிரும்பி "கிழவியே! உன்னுடைய இக்கைங்கர்யத்திஞல் நான் உகந்தேன். வேண்டிய வரங்களைக் கொடுக்க வல்ல நான் உனக்கு வேண்டியதைக் கொடுக்கிறேன். நல்ல வரத்தைக் கேட்பாயாக" என்று கூறிஞர். பக்திஸாரருடைய அந்த மங்களமான வார்த்தையைக்கேட்டு உகந்த அக்கிழவி பின்வருமாறு தன் விருப்பத்தை ஆர்வத்தோடு வேண்டிஞள். "ஐயனே! நான் கிழத்தனத்திஞல் போவது வருவதிலும் சக்தியில்லாமல் வருந்துகிறேன். ஆகையால் எனக்கு அப்ஸரஸ்ஸுக்களுக்கு இருப்பதுபோன்ற யௌவனம் என்றுமிருக்கும்படி அருள்வீராக" என்னும் அவளுடைய வார்த்தையை ஏற்று, ஜ்ஞானசக்திகள் நிறைந்தவரான பார்க்கவ குமாரர் அக்கிழவியை அன்பு நிறைந்த கடாக்ஷத்தாலே நோக்கிஞர். எல்லா விருப்பங்

२२. भक्तिसारकटाक्षेण सर्वाभीष्टप्रदायिना ।
देवाङ्गनेव सा वृद्धा बभौ संजातयौवना ॥

२३. तदा पल्लवराजाख्यः काञ्चीदेशाधिपो महान् ।
जिताप्सरोवयोरूपां स तां भूलोकसुन्दरीम् ॥

२४. विलोक्य मन्मथाविष्टो बभूव चलितेन्द्रियः ।
स तां संप्रार्थयामास सुन्दरीं मदनातुरः ॥

२५. प्रियाभरणवस्त्रादीन् दापयित्वा प्रयत्नतः ।
बहुशः प्रार्थिता तेन सा राज्ञा लोकसुन्दरी ॥

२६. तस्याग्रमहिषी राज्ञः बभूवान्यान्विहाय सा ।
तान् भोगान्मानुषान्दिव्यान् तया सार्धं महीपतिः ॥

---

களையும் அளிக்கும் பக்திஸாரருடைய கடாக்ஷத்தாலே அக்கிழவி யௌவனம் உண்டாகப்பெற்று தேவஸ்த்ரீயைப் போலே விளங்கினாள். அப்போது பல்லவராஜன் என்பவன காஞ்சீநாட்டுப் பேரரசனாயிருந்தான். பிராயத்தாலும அழகாலும் அப்ஸரஸ்ஸையும வென்றிருப்பவளாய், உலகிலேயே அழகுமிக்கவளான அவளைக்கண்டு காமவசப்பட்டு, அவன் புலனகளையிழந்தவனானான். காமவசப்பட்ட அவ்வரசன் அவ்வழகியைத் தன்னை மணக்கும்படி வேண்டினான். இனிய அணிகலன்களையும் புடவை முதலானவற்றையும் அளித்து அவ்வரசனால் மிக முயன்று பலகால் வேண்டப்பட்ட அந்த உலகப்பேரழகி தன்னை வேண்டிய மற்றவர்களையெல்லாம் உதறி அவ்வரசனுக்கே பட்டமஹிஷியானாள்.

२७. बुभुजे दिव्यसुन्दर्या पल्लवो देवसम्पदाम् ।
विलोक्य यौवनं स्वीयं क्षीयमाणं दिने दिने ॥

२८. जरां संवर्धमानां तां स्वदेहे भृशदुःखितः ।
तां नित्ययौवनां दृष्ट्वा पल्लवो लोकसुन्दरीम् ॥

२९. स राजा विस्मितः प्राह महिषीमजितस्मरः ।
केन संपादितं सुभ्रु! तवेदं नित्ययौवनम् ॥

३०. भूम्यामनित्यं सर्वेषां यौवनं किल सुन्दरि! ।
तत्रापि तद्विशेषेण योषितां क्षणभङ्गुरम् ॥

---

## அரசனின் கேள்வி

26*-33 அந்தப் பல்லவ அரசன் தேவர்களுடையது போன்ற செல்வங்களைக்கொண்டு அனுப₄விக்கப்படும் சிறப்பான மனுஷ்ய போ₄கங்களை அவளோடுகூட அனுப₄வித்து வந்தான். தனனுடைய யௌவனம தினந்தோறும் குறைந்து வருவதையும், தன்னுடம்பில் கிழத்தனம் தினந்தோறும் அதிகரித்து வருவதையும கண்டு மிக வருந்தினான். உலகப் பேரழகியான அவள் எப்போதும் யௌவனம் உடையவளாயிருப்பதைக்கண்டு வியப்புற்ற அப்பல்லவ அரசன் பட்டமகிஷியான அவளைப்பார்த்து, காமததை வெல்ல முடியாதவனாகையாலே பின்வருமாறு கூறினான்:—"எனக்கினியவளாய, நிதய யௌவனமுடையவளாய், அழகியபுருவமும், தாமரைக்கண்ணுமுடைய பேரழகியே! உனனால் இநத நித்ய யௌவனம் எப்படி அடையப்பட்டது? பூ₄மியில யௌவனம அனைவர்க்கும் நிலை நில்லாததாயிருககிறதன்றோ அதிலும் பெண்களுக்கு யௌவனம விரைவில அழியக்கூடியது. வளர்பிறையில்

३१. शुक्लपक्षे चन्द्रमसः कला इव दिने दिने ।
नित्यमप्रतिमं दिव्यं वर्धते तव यौवनम् ॥

३२. कृष्णपक्षे चन्द्रमसः कला इव दिने दिने ।
मदीयं यौवनं बाले! विनश्यति किलाधुना ॥

३३. तवेव यौवनप्राप्तिर्मम कस्माद्भविष्यति ।
त्वत्प्रियस्याब्जनयने! ब्रूहि तत्कारणं प्रिये! ॥

३४. तदाकर्ण्य वचो राज्ञः सुन्दरी तमभाषत ।
यथोक्तकारिणस्तस्य काञ्च्यामत्रैव भूमिप! ॥

३५. विष्णोर्भगवतस्तस्य सन्निधौ योगिपुङ्गवः ।
भक्तिसाराभिधो धीरो दयालुर्भार्गवात्मजः ॥

---

சந்திரனின் கலைகள்போலே உன்னுடைய யௌவனம் எப்போதும ஒப்பற்றதாய், தினந்தோறும் சிறப்பாக வளர்கிறது. தேய்பிறையில் சந்திரன்போல் என்னுடைய யௌவனம இப்போது தினந்தோறும் குறைந்து வருகிறது. உன்னுடையது போன்ற யௌவனம் எதைச் செய்தால் எனக்குக் கிடைக்கும் என்பதை உனக்கு இனியவனுன எனக்குக் கூறுவாயாக'' என்று.

## பட்டமகிஷியின் பதில்

34 – 43. அரசனின் அவ்வார்த்தையைக் கேட்டு அவ்வழகி பின்வருமாறு அவனுக்கு பதில் உரைததாள்— ''அரசனே! இநதக் காஞ்சி நகரிலேயே சொனனவண்ணம் செய்த பெருமாளுடைய ஸந்நிதியில் அறிவாளிகளில் சிறந்தவராய், கருணைமிக்கவராய், ப₄ார்க்க₃வரின் குமார

३६. बहुकालं मया भक्त्या संयक् शुश्रूषितो महान् ।
सन्तुष्टेनैव मे दत्तं जरठायै सुयौवनम् ॥

३७. तद्यौवनं समालोक्य सुतरां मोहितो भवान् ।
भवतो यौवनप्राप्तौ तमुपायं ब्रवीम्यहम् ॥

३८. भक्तिसारः पूर्णकामः स तु सर्वार्थनिस्स्पृहः ।
भक्त्या शुश्रूषया लभ्यो न लभ्यो धनराशिभिः ॥

३९. राजसत्वात् भवान् नूनं न कैङ्कर्यपरः किल ।
कणिकृष्णाभिधस्तस्य शिष्यः कश्चिदभून्मुनेः ॥

४०. स एवागच्छति किल मम गेहे दिने दिने ।
अक्षय्यं पात्रमादाय स तैः संशोभितो महान् ॥

---

ராய், 'ப₄க்திஸாரர்' என்னும் பெயருடையவரான சிறந்த யோகி ஒருவர் இருக்கிறார். அந்தப் பெரியவர் என்னால் நெடுங்காலம் பக்தியுடன் நன்கு பணிவிடை செய்யப் பெற்றார். அதனால் உகந்த அவர் கிழவியான எனக்கு நல்ல யௌவனததை அருளினார். அந்த யௌவனத்தைப் பார்த்து நீர் மிகவும மயங்கியிருக்கிறீர். நீர் அந்த யௌவனத்தை அடைவதற்கு வழியை நான் கூறுகிறேன். அநத ப₄க்திஸாரர் விருப்பங்கள அனைத்தும் நிறைவேறப் பெறறவர். இவ்வுலகப் பொருளகள் அனைத்திலும் ஆசை யற்றவர். ப₄க்தியினாலும் கைங்கர்யத்தினாலும அவரை வசப்படுத்தலாமேயொழிய செல்வங்களால் அவரை வசப் படுத்த இயலாது. நீர் ரஜோகுணமுடையராகையால் கைங்கர்யம செய்ய முடியாது என்பது தெளிவு. (ஆயினும் ஒருவழியுண்டு.) அந்த ப₄க்திஸார முனிவருக்கு 'கணி கண்ணர்' என்னும் சீடர் ஒருவர் உண்டு. அவர் என்

४१. ऊर्ध्वपुण्ड्रैर्द्वादशभिः उचितस्थानलक्षितैः ।
कण्ठांसशोभितोदग्रतुलसीपद्ममालिकः ॥

४२. पवित्रद्वयसंशोभी महाव्यजनहस्तकः ।
तमवेहि महात्मानं कणिकृष्णं नृपोत्तम! ॥

४३. सोऽयं पुरुषकारेण कणिकृष्णस्य योगिराट् ।
भविष्यति प्रसन्नस्ते नान्यथा नृप! निश्चयम् ॥

४४. निशम्य तद्वचो राजा सन्तुष्टः कणिकृष्णकम् ।
समाहूयाथ सहसा तमवोचन्नृपस्तदा ॥

---

வீட்டுக்கு பி₄க்ஷையெடுக்கும் அக்ஷயபாத்ரத்தை எடுதது‌க் கொண்டு அந்தந்த அவயவ ஸ்தானஙகளில் காணப்படும் பன்னிரு திருமண்காட்புக்களால அலங்கரிக்கப்பெற்றவ ராய், கழுத்தில் விளங்கும் சிறந்த துளசி தாமரைமணி மாலேகளே உடையவராய், இரண்டு பவித்ரமாலேகள் த₄ரித்து விளங்குபவராய், பெரிய விசிறியைக் கையில் கொண்டவராய் தினந்தோறும் வருவார். அரசர் தலேவனே! அந்தக் கணிகண்ணரை மஹாத்மாவாக அறிவீராக. அந்த ப₄க்திஸார முனிவர் கணிகண்ணருடைய சிபார்சி ஞலே உமக்கு அருள்புரிவார். வேறு எந்த வழியும் கிடையாதெனபது உறுதி'' என‌று.

## கணிகண்ணர்கூறிய ப₄க்திஸாரரின் ப்ரப₄ாவம்

44-*48. அவ்வரசன் பட்டமகிஷியின் அந்த வார்த்தை யைக்கேட்டு உகந்தவஞய் உடனே கணிகண்ணரை அழைத்து "மஹாத்மாவான உமது குருவைக்காண

४५. संसेवितुं महात्मानं इच्छामि भवतो गुरुम् ।
इहानयस्व तं शीघ्रं तव श्रेयो भविष्यति ॥

४६. तस्य राज्ञो वचः श्रुत्वा कणिकृष्णोऽभ्यभाषत ।
कुत्रापि राजन् योगीन्द्रो नैवागच्छति मे गुरुः ॥

४७. कदाचिदपि दृष्ट्या वा त्वादृशं तु न पश्यति ।
अवाप्तकामः सर्वार्थनिस्स्पृहो जितशङ्करः ॥

४८. भक्तिसारो दुराराध्यस्त्वादृशस्य महीपते! ।
श्रुत्वा स पल्लवस्तस्य कणिकृष्णस्य तद्वचः ॥

४९. विषण्णहृदयश्चिन्तामवाप महतीं तदा ।
कणिकृष्णप्रभावज्ञाः राज्ञः प्रियचिकीर्षवः ॥

---

விரும்புகிறேன். விரைவில் அவரை இங்கு அழைத்து வாரும். அதனால் உமக்கு நன்மையுண்டு" என்று அப்போதே கூறினான். அவ்வரசனின் வார்த்தையைக்கேட்டுக் கணிகண்ணார் "அரசனே! என ஆசார்யரான முனிவர் இங்கு வரமாட்டார். உன்னைப்போன்றவனை அவர் ஒரு போதும் கண்ணால்கூடப் பார்க்கமாட்டார். அவர் விருப்பங்களெல்லாம் நிறைவேறப்பெற்றவர். இவ்வுலகச் செல்வமனைத்திலும் ஆசையற்றவர். சங்கரனையே ஜயித்தவர். உன்னைப்போன்றவனால் பக்திஸாரர் வசப்படுத்த இயலாதவர்" என்று கூறினார்.

## அரசனும் கணிகண்ணரும்

48* - *61. கணிகண்ணரின் அவ்வார்த்தையைக் கேட்ட அப்பல்லவ அரசன அப்போது மனம வருந்தியவனாய், பெரும கவலைக்கு உள்ளானான். அப்போது அங்கு

५०. विषण्णहृदयं भूपमवोचन् केचिदागताः ।
कणिकृष्णकवित्वेन शुष्का अपि च पादपाः ॥

५१. पल्लवादियुताः शीघ्रं भवन्ति च न संशयः ।
भगवद्विषया एव गाथास्तेन कृता नृप! ॥

५२. यद्यनेन कृता राजन्! भवदीयाऽधुना कृतिः ।
नित्ययौवनसंप्राप्तिर्भविष्यत्यधुनैव ते ॥

५३. तेषां तद्वचनं श्रुत्वा सन्तुष्टः पल्लवस्तदा ।
कणिकृष्णं तमानीय संयक् संपूज्य सादरम् ॥

---

வந்தவர்களாய், அவ்வரசனுக்கு இனியதைச்செய்ய விரும்பியவர்களாய், கணிகண்ணரின் பெருமையை அறிந்தவர்களான சிலர் மனம் வருந்தி நின்ற அரசனைப் பார்த்து "அரசனே! கணிகண்ணருடைய கவிகளைக் கேட்டால் பட்டுப்போன மரங்களும் உடனே துளிர்விட்டுப் பூக்கும் என்பதில் ஐயமில்லை. எம்பெருமானைப்பற்றிய கவிகளையே அவர் இதுவரை பாடியிருக்கிறார். உன்னைப் பற்றி அவர் இப்போது ஒரு கவிபாடினாரானால் உனக்கு உடனே நித்ய யௌவனம் உண்டாகிவிடும்" என்று கூறினார்கள். அவர்களுடைய அவ்வார்த்தையைக் கேட்டு உகந்த பல்லவராஜா அப்போதே அக்கணிகண்ணரை வரவழைத்து அன்போடு நன்கு உபசரித்து உகப்புடையவனாய் அவரைப் பார்த்து "கணிகண்ணரே! இன்றுதான் நீர் பெரிய மஹாகவி என்பதைக் கேள்விப்பட்டேன். அன்போடு என் விஷயமாக ஒரு கவியை நன்கு இப்போதே

௫௪. स निर्वृत्तयतिस्तत्र भूयो वचनमब्रवीत् ।
त्वं मया कणिकृष्णाद्य महाकविरिति श्रुतः ॥

௫௫. गाथा मद्विषया सम्यक् वद सांप्रतमादरात् ।
तस्य तद्वचनं श्रुत्वा कणिकृष्णस्तमब्रवीत् ॥

௫௬. भगवद्विषया एव मया गाथा हि गीयते ।
कदाचिदपि मानुष्यगाथा न क्रियते मया ॥

௫௭. भगवद्विषया वापि तदीयविषया तु वा ।
इत्येतच्छास्त्रनिर्णीतं कर्तव्या कविना कृतिः ॥

௫௮. कथं नरस्तुतिं राजन्! करिष्ये भगवत्परः ।
तेन निर्बन्धितोऽप्येवं स्वकीयकृतिकारणे ॥

௫௯. कणिकृष्णः स भूपेन नाङ्गीकारमवाप सः ।
विलोक्य कणिकृष्णाय तमुल्लंघितशासनम् ॥

---

பாடும்" என்று மறுபடியும் வார்த்தை சொன்னான். அவனுடைய அவ்வார்த்தையைக் கேட்டு, கணிகண்ணர் "அரசனே! எம்பெருமானைப்பற்றிய பாடல்களையே நான் பாடுவேன். ஒருபோதும் மனிதர்களைப்பற்றிய பாடல்களைப் பாடமாட்டேன். கவியாயிருப்பவன் எம்பெருமானைப் பற்றியோ அல்லது அவனடியாரைப்பற்றியோதான் பாட வேண்டும் என்று சாஸ்த்ரங்களில் அறுதியிடப்பட்டுள்ளது. அப்படியிருக்க, எம்பெருமானிடம் ஈடுபட்ட நான் எப்படி மனிதனைத் துதிப்பேன?" என்று பதிலுரைத்தார். தன்னைப்பற்றிப் பாடச்சொல்லி அவ்வரசனால் இவ்வண்ணமாக நிர்பந்திக்கப்பட்டபோதிலும்

६०. मद्देशे न वसेत्येवं कुपितः प्राह भूपतिः ।
प्रतिगृह्य वचो राज्ञः कुपितस्य दृढव्रतः ॥

६१. तदान्यदेशगमने चकार मतिमान् मतिम् ।
भक्तिसारान्तिकं गत्वा प्रणम्य प्रेमपूर्वकम् ॥

६२. नृपोक्तमखिलं तस्मै कणिकृष्णो न्यवेदयत् ।
तत् श्रुत्वा वचनं तस्य भक्तिसारस्तमब्रवीत् ॥

६३. आगच्छामि त्वया सार्धं स भवान् यत्र गच्छति ।
शेषतल्पे शयानं तं भगवन्तमिहाऽच्युतम् ॥

---

கணிகண்ணர் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. தனது ஆணையை மறுத்த கணிகண்ணரைப்பார்த்துக் கோபம் கொண்ட அரசன "என் தேசத்தில் நீ இருக்கக்கூடாது" என்று உத்தரவிட்டான். கோபம்கொண்ட அவ்வரசனின் வார்த்தையை ஏற்றுக்கொண்ட உறுதியுடைய பேரறிவாளரான கணிகண்ணர் அப்போதே வேறு தேசம் செல்ல உறுதிகொண்டார்.

## கணிகண்ணரும் ப$_4$க்திஸாரரும்

61*-*63. கணிகண்ணரும் ப$_4$க்திஸாரரிடம் சென்று அன்போடு அவரை வணங்கி அரசன் கூறியது அனைத்தையும் அவரிடம் விண்ணப்பித்தார். அவருடைய அவ்வார்த்தையைக்கேட்டு, ப$_4$க்திஸாரரும் 'நீர் எங்கு செல்லுகிறீரோ அவ்விடத்துக்கு உம்மோடு நானும் வருகிறேன்' என்று வார்த்தை சொன்னார்.

६४. शिष्यप्रियो भक्तिसारः प्रणम्येदमभाषत ।
देवदेव! जगन्नाथ! भक्ताभीष्टप्रदायक! ॥

६५. शृणु विज्ञापनं विष्णो! दासभूतस्य मेऽधुना ।
कणिकृष्णोऽस्मदीयोऽयं किलैवं भगवत्कविः ॥

६६. राजा स्वविषयां गाथां कुरुष्वेत्याह तं प्रति ।
कणिकृष्णं समाहूय निर्बन्ध्य बहुशोऽधुना ॥

६७. तेन निर्बन्धितोऽप्यत्र नानुमेने दृढव्रतः ।
स तेन नृपतिः क्रुद्धः तमेवमवदद्रुरे ॥

---

## சொன்னவண்ணம் செய்த பெருமாள்

63*-*77 சிஷ்யரிடம் அன்பு மிகுந்தவரான ப₄க்தி ஸாரர் அடியவரை நழுவவிடாத அச்சுதனும், ஆதிஶேஷனாகிற படுக்கையில் படுத்திருப்பவனுமான திருவெஃகா எம்பெருமானை வணங்கிப் பின்வருமாறு விண்ணப்பம் செய்தார்;—"தே₃வதே₃வனே! ஜக₃ந்நாத₂னே! அன்பர்கள் வேண்டுவன அனைத்தையும அளிப்பவனே! ஸர்வவியாபகனே! அடியேன் இப்போது விண்ணபபிப்பதைக் கேட்பாய்: எனது அன்பனுய், உன்னையே பாடுகினறவனுன கணிகண்ணன் இங்கு இருக்கிருனலலவா; அவனை அழைத்து இந்நாட்டு அரசன் தன்னைப் பாடச் சொல்லிப் பலவாறு நிர்ப்பந்தம் செய்து இப்போது கட்டளையிட்டான. இவ்வாறு கட்டாயப்படுத்தப்பட்ட போதிலும் 'நாககொண்டு மானிடம் பாடேன்' என்று உறுதியான விரதங்கொண்ட கணிகண்ணன் அதற்கு இசையவில்லை. எம்பெருமானே! அதனுல் கோபமடைந்த அரசன, 'எனது ஆணையை மீறிய உனக்கு என் நாட்டில் இடமில்லை. ஆகையால்

६८. तवोल्लङ्घितकार्यस्य स्वराष्ट्रे न कृतालयः ।
अतो मद्विषयं त्यक्त्वा गच्छान्यविषयं जवात् ॥

६९. स तस्मादस्मदीयोऽयं भगवन्! यत्र गच्छति ।
तं देशमनुगच्छामि ह्यनुज्ञां देहि मे जवात् ॥

७०. स च भक्तपराधीनो भक्तिसारस्य तद्वचः ।
शेषशायी निशम्यैवं जगाद जगदाश्रयः ॥

७१. अहं त्वयैवागच्छामि स भवान् यत्र यास्यति ।
न त्वां विनात्र वत्साद्य क्षणं वा स्थातुमुत्सहे ॥

७२. तेनैवमुक्तस्तं प्राह भक्तिसारो जगत्पतिम् ।
यद्येवं भवतश्चित्तं वर्ततेऽब्जाक्ष! सांप्रतम् ॥

---

என் நாட்டைவிட்டு விரைவில் வேறு நாட்டிற்குப்போ' என்று கூறிவிட்டான். அந்த எனது அன்பன் எங்கு செல்கிருனே அவ்விடத்திற்கு நானும் பின்தொடர்கின றேன். எனக்கு விரைவில விடைகொடுக்க வேண்டும்" என்னும் ப₄க்திஸாரரின் இவ்வார்த்தையைக்கேட்டு ஆதி₃ ஶேஷஶயனத்தில் படுத்திருப்பவனுய், லோகநாத₂னுய், அடியாரிட்ட வழக்காயிருப்பவனுன அவ்வெம்பெருமான் "அப்பா! நீ எங்கு செல்கின்ருயோ அங்கு நானும உன்னேடு வருகின்றேன. உன்னைப்பிரிந்து நான் ஒரு கணமும இங்கு இருக்கமாட்டேன்' என்று கூறினுன். அவனுல இவ்வண்ணம் சொல்லப்பட்ட ப₄க்திஸாரர் அந்த லோக நாத₂னைப்பார்த்து "தாமரைக் கண்ணனே! தேவர் தலைவனே! லோகநாத₂னே! இப்போது உனது திருவுள்ளம் இப்படியானுல், இப்போதே எழுந்து பைந்நாகப்பாயைச்

७३. शेषशय्यां समाहृत्य कक्षे निक्षिप्य सत्वरम् ।
उत्तिष्ठागच्छ देवेश! मया सार्धं जगत्पते! ॥

७४. भक्ताधीनस्य भक्तस्य तन्नशम्योद्धृतं वचः ।
शेषतल्पं तमादाय भक्तोक्तवचनं यथा ॥

७५. पृष्ठतो भक्तिसारस्य भगवान् सहसा ययौ ।
प्रययौ कणिकृष्णोपि सकुटुम्बो महायशाः ॥

७६. कन्थां कक्षे न निक्षिप्य भक्तिसारः ततः परम् ।
पश्चाद्ययौ शेषतल्पमादाय भगवान् हरिः ॥

७७. पश्यतां सर्वलोकानां तं तदाऽनु ययौ किल ।
ब्रह्मादयोऽखिला देवाः तमुद्वीक्ष्यातिविस्मिताः ॥

---

சுருட்டிக் கையிடுக்கில் வைத்துக்கொண்டு, என்னோடு கூட வருவாய்'' என்று கூறினார். தமது ப₄க்தனை கணிகண்ணனைப் பின்செல்பவராய், தனது ப₄க்தரான அந்த ப₄க்திஸாரர் கூறிய வார்த்தையைகேட்டு, அந்த ப₄க்தர் கூறியபடியே ஆதிசேஷனாகிற படுக்கையைச் சுருட்டியெடுத்துக்கொண்டு ப₄க்திஸாரரின் பின்னே விரைவில் நடந்தான் அவ்வெம்பெருமான். குடும்பத்தோடுகூடிய பெரும் புகழாளனான கணிகண்ணன் (முதலில்) சென்றான். அவனுக்குப்பின் தமது கந்தையைக் கையிடுக்கில் சுருட்டி வைத்துக்கொண்டு ப₄க்திஸாரர் சென்றார். அவருக்குப்பின் எம்பெருமானான ஹரி பாம்புப்படுக்கையைச் சுருட்டியெடுத்துக்கொண்டு எல்லாவுலகமும் காணும்படி அப்போதே அவரைப் பின்தொடர்ந்தானன்றோ!

## காஞ்சி ஒளியிழந்தது!

77*-82. பிரமன் முதலான எல்லா தே₃வர்களும் பக்தன் சொன்னவண்ணம் செய்த அப்பெருமானைப்

௭௮. काञ्चीपुरीं विहायाशु तां तमेवान्वयुस्तदा ।
देवराजादयस्सर्वे हरयोऽष्टादशानघ! ॥

௭௯. एकाम्बरेशादिसर्वे देवा शैवस्थलाधिपाः ।
यथोक्तकारिणं देवं ते सर्वेऽनुययुस्तदा ॥

௮௦. ब्राह्मणाः क्षत्रिया वैश्याः शूद्राश्चेतरजातयः ।
विसृज्य काञ्चीं सहसा ते सर्वेऽनुगयुस्तदा ॥

௮௧. अयोध्येवाभवत्काञ्ची वेदान्तिन्! निष्प्रभा तदा ।
रामस्यारण्यगमने सर्वजन्तुविवर्जिता ॥

௮௨. अपि वृक्षाः परिम्लानाः सपुष्पाङ्कुरकोरकाः ।
उपतप्तोदका नद्यः पल्वलानि सरांसि च ॥

---

பார்த்து மிக வியப்புற்றவர்களாய். அந்தக் காஞ்சீபுரத்தை விட்டு அப்போதே அவ்வெம்பெருமானை பின்தொடர்ந்தனர். குற்றமற்ற வேதாந்தியே! தேவராஜப்பெருமாள முதலான காஞ்சியிலுள்ள பதினெட்டு எம்பெருமான்களும், ஏகாம்பரேச்வரர் [திக்காகிற ஒரே வஸ்திரத்தை உடுத்த (திகம்பரனை) ஈசன்] முதலான சிவாலயங்களிலுள்ள சிவமூர்த்திகள் அனைவரும் அப்போதே விரைவில் சொன்னவண்ணம் செய்த பெருமாளைப் பின தொடர்ந்தனர், அந்தணர், அரசர், வணிகர். வேளாளர், மற்ற சாதியினரான அனைவரும் காஞ்சியைவிட்டு அப்போதே அவர்களைப் பின் தொடர்ந்தனர். வேதாந்தியே! ராமன காடு சென்றபோது அயோத்திமாநகரைப்போலே அக்காஞ்சி மாநகரும் ஒரு பிராணியுமற்றதாய் ஒளியிழந்ததாயிற்று. பூ முளை மொட்டுகளோடு கூடிய மரங்களும் வாடின. நதிகளும், குளங்களும், குட்டைகளும் நீர்வற்றிப்போயின,

८३. काञ्च्यां पश्चिमदिग्भागे कणिकृष्णादयोऽखिलाः ।
क्रोशमात्रं ततो गत्वा कञ्चिद्देशं प्रपेदिरे ॥

८४. तत्रैकरात्रमवसन् सर्वे काञ्चीजनाश्च ते ।
एकस्थिराख्यं तस्यासीत् वेदान्तिन्! तेन विश्रुतम् ॥

८५. उदयास्तमयौ काञ्च्यां न लक्ष्येते तदा पुनः ।
अन्धकारावृतां काञ्चीं निशामिव गतप्रभाम् ॥

८६. मन्त्रिभिस्सहितो राजा विलोक्यात्यन्तदुःखितः ।
एकस्थिताख्यं तं देशं समासाद्य महीपतिः ॥

८७. पौरैर्वृत्तान्तमाकर्ण्य तत्सर्वं पल्लवस्तदा ।
बहुशः प्रार्थयामास देवराजं जगत्पतिम् ॥

---

## ஓரிருக்கை

83-84. காஞ்சியின் மேற்கு திசையில் ஒரு குரோச தூரம் சென்று, கணிகண்ணன் முதலான அனைவரும் ஓரிடத்தை அடைந்தனர். காஞ்சியிலுள்ள ஜனங்கள் அனைவரும் அங்கு ஓரிரவு தங்கினார்கள். வேதாந்தியே! இக்காரணத்தாலேயே அவ்விடத்திற்கு 'ஓரிருக்கை' என்று புகழ்பெற்ற பெயர் உண்டாயிற்று. (இப்போது இவ்வூர் 'ஓரிகை' என்று மருவி வழங்குகிறது).

## அரசனுக்குக் கணிகண்ணன் அருள்புரிதல்

85-*96. அப்போது காஞ்சியில் சூரியன் உதிக்கவும் அஸ்தமிக்கவுமில்லை. மந்திரிகளோடு கூடிய பல்லவ அரசன் ஒளியற்ற இரவுபோலே இருள்சூழ்ந்திருந்த காஞ்சியைக் கண்டு மிகவும் துன்புற்று, ஓரிருக்கை என்னும் இடத்தை அடைந்து, ஜனங்களிடமிருந்து அப்போதே நடந்தது அனைத்தையும் கேள்விப்பட்டு, லோகநாதனான

८८. इत्याख्यातोऽथ हरिणा देवराजेन पल्लवः ।
यथोक्तकारिणं देवं प्रार्थयामास मन्त्रिभिः ॥

८९. तेन संप्रार्थितो राज्ञा भगवान् भक्तवत्सलः ।
भक्तिसारं महात्मानं प्रार्थयेत्याह भूपतिम् ॥

९०. कणिकृष्णं प्रार्थयेति भक्तिसारेण चोदितः ।
कणिकृष्णस्य पादाब्जे प्रणम्य शिरसा तदा ॥

९१. अकरोत्सहसा धीमान् अपराधक्षमापणम् ।
प्रणिपातप्रसन्ना हि मैथिली जनकात्मजा ॥

९२. सैव लक्ष्मीर्महाभागा जगन्माता न संशयः ।
लक्ष्मीपुरुषकारेण वैष्णवास्तेऽभवन् जनाः ॥

---

தே₃வராஜனைத் (திரும்பி வரும்படி) பலவாறு பிரார்த்தித்தான். அப்பெருமாளால் மறுக்கப்பெற்ற அப்பல்லவன் மந்திரிகளோடு கூடியவனாய், சொன்னவண்ணம் செய்த பெருமாளைப் பிரார்த்தித்தான். அவனால் பிரார்த்திக்கப் பெற்ற ப₄க்தவத்ஸலனான அப்பெருமான, 'ப₄க்திஸாரரைப் பிரார்த்திப்பாய' என்று அவ்வரசனுக்குக் கூறினான். (அப்படியே பிரார்த்திககப்பட்ட) ப₄க்திஸாரரால் 'கணிகண்ணனை வேண்டுவாய்' என்று நியமிக்கப்பெற்ற அறிவாளியான அவ்வரசன், அப்போதே கணிகண்ணனின திருவடிததாமரையில் தலையால் வணங்கி, உடனே மன்னிப்பு வேண்டினான். ஜனகாாஜன் திருக்குமாரியான ஸீதாதே₃வி வணங்கியவுடன உகப்பவள். அவளே லோகமாதாவான லக்ஷ்மீதே₃வி என்பதில் ஐயமில்லை. அந்த லக்ஷ்மியின் புருஷகாரத்தன்மையைப் பெற்றிருப்பவர்

९३. ततः प्रणाममात्रेण प्रसन्नस्तत्क्षणादभूत् ।
महात्मा नृपतेस्तस्य कणिकृष्णः कृतागसः ॥

९४. कणिकृष्णेन भक्तेन ततः संप्रार्थितास्सुराः ।
भक्ताधीनास्ततस्सर्वे भगवन्तः कृतादराः ॥

९५. भक्तिसारश्च भगवान् स्वं स्वं स्थानं प्रपेदिरे ।
विलोक्य पल्लवः प्रीतः तां पुरीं पूर्ववत्स्थिताम् ॥

९६. ज्ञातप्रभावस्तत्पादे भक्तिमानभवत्तदा ।
शयानं शेषपर्यङ्के भक्तिसारः प्रणम्य तम् ॥

---

களே வைஷ்ணவர்கள். ஆகையால் பரம வைஷ்ணவரான கணிகண்ணர் அரசன் வணங்கியவுடன் கணநேரத்தில் குற்றம்புரிந்த அவ்வரசன் விஷயத்தில் உகப்படைந்தார். ப₄க்தனை கணிகண்ணரால் பிரார்த்திக்கப்பெற்ற காஞ்சியிலிருந்த எம்பெருமான்கள் அனைவரும், ப₄க்திஸார முனிவரும் ப₄க்தபரதந்திரர்களாகையாலே உகப்புற்றுத் தத்தம் இருப்பிடத்தை அடைந்தனர். பல்லவ அரசனும் காஞ்சீநகரம் முன்போல் ஆனதைக் கண்டு உகந்தவனாய், கணிகண்ணரின் பெருமையை உணர்ந்து அப்போதே அவரது திருவடிகளில் ப₄க்தியுடையவனானான்.

## ப₄க்திஸாரரின் பிரார்த்த₂னை

96*-98 ஆதிசேஷனாகிற படுக்கையில் படுத்திருக்கும் திருவெஃகா எம்பெருமானை வணங்கி, ப₄க்திஸாரர் உலகத்தை அனுக்₃ரஹிப்பதற்காகப் பின்வருமாறு விண்ணப்பித்தார். "லோகஸ்வாமியான பெருமானே! இந்த

९७. एवं विज्ञापनं चक्रे लोकानुग्रहतत्परः ।
यथोक्तकारिनाम्ना त्वं मत्कृतेऽस्मिन्महीतले ॥
९८. प्रत्यक्षभूतस्सर्वेषां अत्रत्यानां निरन्तरम् ।
सर्वाभीष्टप्रदो देव! वसात्रैव जगत्पते! ॥
९९. तद्वचः प्रतिगृह्याशु भक्तस्य भगवान् हरिः ।
सर्वाभीष्टप्रदोऽद्यापि वेदान्तिन्! परिदृश्यते ॥
१००. यथोक्तकारिनामास्य तदाप्रभृति सत्तम! ।
त्रैलोक्यविदितं विष्णोः बभूव परमात्मनः ॥
१०१. विष्णुस्सर्वत्र वेदान्तिन्! शेते दक्षिणपार्श्वतः ।
श्रीकाञ्च्यां वामभागेन भक्तिसारकृते हरिः ॥

---

தி₂வ்யதே₃ஶத்தில் அடியேனுக்காக 'யதோ₂க்தகாரீ' (சொன்னவண்ணம் செய்த பெருமாள்) என்னும் திரு நாமத்துடன் அனைவர்க்கும எப்போதும் ஸேவை ஸாதித்து எல்லா விருப்பங்களையும் அளிப்பவராய் இங்கேயே வாழ வேண்டும்'' என்று பிரார்த்தித்தார்.

## சொன்னவண்ணம் செய்ததை உலகறியச் செய்தல்

99-*104, வேதா₃ந்தி நஞ்ஜீயரே! ப₄க்தருடைய அந்தப் பிரார்த்த₂னையை உடனே ஏற்றுக்கொண்ட ப₄க்தவத்ஸலனை அவ்வெம்பெருமான இன்றும் அங்கு எல்லா விருப்பங்களையும் வழங்கிக்கொண்டு விளங்குகிறான. அப்பரமாத்மாவுக்கு அதுமுதல் 'சொன்ன வண்ணம் செய்த பெருமாள்' என்னும திருநாமம் மூவுல கிலும் ஸுப்ரஸித்₃த₄மாய் விளங்குகிறது. வேதா₃ந்தியே! எல்லாக் கோயில்களிலும் எமபெருமானை விஷ்ணு (உத்ஸ வருககு) வலதுபுறம் வலது கையைத் தலைக்கு வைத்துக் கொண்டு படுத்திருககிறார். (ஏற்கனவே அப்படியே படுத் திருந்த) திருவெஃகா எம்பெருமான் ப₄க்திஸாரர் சொனன படி தான் கேட்டதை உலகறியச் செய்வதற்காக (திருப்பிப்படுக்கும்போது உத்ஸவருக்கு) இடதுபுறம் இடது கையைத் தலைக்கு வைத்துப் படுத்துக்கொண்டான்.

१०२. पूर्वोक्तशिराश्शेते वेगवत्याः कूलेऽनघ ! ।
यथोक्तकारी वेदान्तिन् ! तदा प्रत्यङ्मुखः किल ॥

१०३. ततो याम्यशिराः प्रत्यङ्मुखश्शेते हरिस्तदा ।
ख्यापयन्निव लोकेभ्यो भक्तवात्सल्यमद्भुतम् ॥

१०४. भक्तिसारकृते तत्र ह्यद्यापि परिदृश्यते ।
भक्तिसारोऽपि तत्रैव कञ्चित्कालमुवास सः ॥

१०५. स तेनाष्टाङ्गयोगेन ध्यायन् हरिपदाम्बुजम् ।
तत्रैव कणिकृष्णोऽपि भक्तिसारस्य संततम् ॥
तस्थौ स कुर्वन् कैङ्कर्यं जगद्विदितवैभवः ॥

---

குற்றமற்ற வேதாந்தியே! முன்னம் (ப்₃ரஹ்மாவின் யாக₃த்தைக் கலைப்பதற்காக அவரது பத்தினியான ஸரஸ்வதி கடுங்கோபத்துடன் வேக₃வதீ என்னும் ஆருகப் பெருகிவந்தபோது அந்த யாக₃த்தைக் காக்க) சொன்ன வண்ணம்செய்த எமபெருமான் வேக₃வதியாற்றின் குறுக்கே வடக்கே தலையை வைத்துக்கொண்டு மேற்கு நோக்கிப் படுத்துக்கொண்டான். மறுபடியும் படுக்கும் போது தெற்கே தலையை வைத்துக்கொண்டு மேற்கு நோக்கிப் படுத்துக்கொண்டான். தன்னுடைய அற்புத மான ப₄க்தவாத்ஸல்யத்தை எல்லாவுலகங்களுக்கும் உணர்த்துவதற்காக ப₄க்திஸாரருக்காக அங்கு இன்றும அப்படியே காட்சியளிக்கிருன்.

## காஞ்சீவாஸம்

*104*-106.* ப₄க்திஸாரரும அஷ்டாங்க₃யோக₃த்திஞல் எம்பெருமானின் திருவடித்தாமரைகளை தியானித்துக் கொண்டு அந்தக் காஞ்சியிலேயே சிறிதுகாலம் வாழுங்

१०६. एतादृशं सत्यमनन्तरूपं श्रीभक्तिसारस्य महात्मनोऽग्र्यम्।
प्रभावमार्याः सततं पठन्ति तेषां यशः श्रीरतुलाऽस्तु नित्या ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे भक्तिसारवैभवातिशयकथनं नाम त्र्यशीतितमोऽध्यायः ॥

॥ चतुरशीतितमोऽध्यायः ॥

१. ततो ययौ कुम्भकोणयात्रापरवशो महान्।
भक्तिसारो महीसारक्षेत्रजो दक्षिणां दिशम् ॥

२. यो नरः कुम्भकोणेऽस्मिन् क्षणार्धमपि तिष्ठति।
करस्थं तस्य कैवल्यं किमुतान्या विभूतयः ॥

---

தார். உலகம பரவிய புகழாளரான அக்கணிகண்ணரும் ப₄க்திஸாரருக்கு எப்போதும் கைங்கர்யம் செய்துகொண்டு வாழ்ந்துவந்தார். மஹாத்மாவான ப₄க்திஸாரருடைய இத்தகைய மிகச் சிறந்ததாய், உண்மையானதாய், அளவற்றதான பெருமையைப படிக்கும் நல்லோர்களுக்கு ஒப்பற்ற புகழும செல்வமும் என்றும் உண்டாகட்டும்,

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ப₄ட்டார்யவேத₃ாந்தி ஸம்வாத₃த்தில்
ப₄க்திஸார மஹாவைப₄வத்தைச் சொல்லும்
எண்பத்துமூன்றும் அத்தியாயம் நிறைவுற்றது.

## எண்பத்துநாலாம் அத்தியாயம்

### ப₄க்திஸார ப்ரப₄ாவ நிறைவு

#### திருக்குடந்தைநோக்கிச் செல்லுதல்

1-3. திருமழிசையில அவதரித்த பெரியவரான ப₄க்திஸாரர் திருககுடந்தை யாத்திரையில் விருப்பங்கொண்டவராய், தெற்குநோக்கிப் புறப்பட்டார். எந்த மனிதன் இந்தத் திருக்குடந்தையில அரைக்சணமாவது வாழ்கிருனே, அவன் கையில் மோக்ஷமே வந்துவிடுகிறது.

३. एतादृशप्रभावेऽस्मिन्कुम्भकोणे महास्थले ।
तत्रैव नित्यवासाय भक्तिसारोऽप्यमन्यत ॥

४. शार्ङ्गपाणेर्महाभक्त्या सेवनार्थं महतो जवात् ।
गच्छन्मार्गे पुरं प्राप महाव्याघ्रपुराभिधम् ॥

५. गृहस्य कस्यचित्तत्र भक्तिसारो निषेदिवान् ।
बहिर्वितर्द्यां तत्रैव चक्रुरध्ययनं द्विजाः ॥

६. तं विलोक्याद्विजं मत्वा निवृत्ताध्ययनाः स्थिताः ।
तत्प्रभावमजानन्तः गूढं यद्ब्रह्मवर्चसम् ॥

---

மற்ற செல்வங்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? இத்தகைய பெருமையையுடைய திருக்குடந்தையாகிற பெருந்திருப்பதியிலேயே (ஆயுளுள்ளவரையில்) நித்ய வாஸம்செய்ய பக்திஸாரர் திருவுள்ளங்கொண்டார்.

## பெரும்புலியூரில் வேதியர்கள்

4-6. பேரன்போடு சார்ங்கபாணிப்பெருமாளை ஸேவிப்பதற்காக அதிவேகமாகச் செல்லும்போது வழியில் பெரும்புலியூர என்னும் ஊரை அடைந்தார் பக்திஸாரர். அவ்வூரில் ஒரு வீட்டின் வெளித்திண்ணையில் உட்கார்ந்தார். அங்கேயே சில வேதியர்கள் வேதமோதிக் கொண்டிருந்தார்கள். அவரைக் கண்டவுடன் 'இவர் வேதியரல்லர்' என்று எண்ணியவர்களாய், மறைந்திருக்கும அவரது ப்ரஹ்ம தேஜஸ்ஸாகிய பெருமையை அறியாமல் வேதம் ஓதுவதை நிறுத்திக்கொண்டனர் அவ்வேதியர்கள்.

७. तदुद्वीक्ष्याथ सहसा तत्रान्यस्थलमाप सः ।
तेषां तत् विस्मृतं वाक्यं तदनन्तरसंस्थितम् ॥
८. तद्व्याकुलान्तःकरणाः किमिदं किमिदं बत ।
अपस्मृतस्य को हेतुः इति चिन्तां तदाऽगमन् ॥
९. भक्तिसारस्स तान् दृष्ट्वा वेदान्तिन्! करुणार्णवः ।
कृतागःस्वपि सञ्जातक्षमावान् भगवत्परः ॥
१०. नीलव्रीहिं नखैः सम्यक् कृत्वा निर्भिन्नमञ्जसा ।
संज्ञया कृपया तेषां तद्वाक्यस्मरणं व्यधात् ॥
तत्प्रभावपरः श्लोको बहुधा श्रूयते भुवि ॥

---

## ப₄க்திஸாரரின் வேதப்புலமை

7-11. அதைப்பார்த்த ப₄க்திஸாரர் உடனே அத்திண்ணையைவிட்டு வேறு இடம் சென்றார். அந்த வேதியர்களுக்கு ஓதிய இடத்திற்கு அடுத்துள்ள வேதவாக்யம் மறந்துபோய்விட்டது, அதைக்கண்டு 'இது என்ன? இது என்ன? இப்படி மறந்ததற்குக் காரணம் என்ன?' என்று கலங்கிய நெஞ்சை உடையவர்களாய் அந்த வேதியர்கள் கவலைப்பட்டார்கள். நஞ்சீயரே! கருணைக்கடலான ப₄க்திஸாரர் கலங்கிநிற்கும் அவர்களைக்கண்டு அச்சுதனடியாராகையாலே குற்றம் செய்தவர்களிடமும் பொறுமையுடையவராய், (கீழேகிடந்த) கறுப்பு நெலலைத் தமது நகங்களாலே நன்கு பிளந்து, கருணையோடு **"க்ருஷ்ணாநாம் வ்ரீஹீணாம் நக₂நிர்ப்பி₄ந்நம்"** (கறுப்பு நெற்களை நகத்தால் பிளப்பது) என்னும் அந்த க்ருஷ்ணயஜுர்வேத₃ வாக்யத்தை (வாயால் சொல்லாமல்) அவர்களுக்குக் குறிப்பால் உணர்த்தினார். இந்த அவரது பெருமையைக்காட்டும் ஶ்லோகம் உலகில் பின்வருமாறு பாடப்படுகிறது:—

११. विमानितो योगिवरस्य ते श्रुतेः
विस्मृतग्रन्थप्रतिभाविवर्जिताः ।
तमन्वयुस्तत्प्रतिभाविवृद्धये
स कृष्णशालीन्नखदारितान् व्यधात् ॥

१२ कृतार्थास्तेन ते सर्वे ब्राह्मणा वेदपारगाः ।
भगवन्तं महात्मानं भक्तिसारमपूजयन् ॥

१३. न शूद्राः भगवद्भक्ताः विप्रा भागवताः स्मृताः ।
सर्ववर्णेषु ते शूद्राः ये ह्यभक्ता जनार्दने ॥

---

"யோகி₃யர் தலைவரான அந்த ப₄க்திஸாரரை அவமதித்த அந்த வேதியர்கள் அடுத்துள்ள வேத₃ பா₄க₃த்தை மறந்தவர்களாய், அது நினைவுவருவதற்காக அவரையே எதிர் பார்த்து நின்றனர். அந்த ப₄க்திஸாரரும் (அவ்வாக்யத்தை நினைவுறுத்துவதற்காக) கறுப்பு நெற்களைத் தம் நக₃ங்களாலே பிளந்து காட்டினார்."

## வேதியர்கள் ப₄க்திஸாரரைப் பூஜித்தல்

12-14. வேதம் கரைகண்ட அந்த அந்தணர்கள் அனைவரும் அவருடைய குறிப்பால் மறந்த வேதவாக்யத்தை உணர்ந்தவர்களாய், மஹாத்மாவான ப₄க்திஸாரரைப் பூஜித்தனர். "எம்பெருமானடியார்கள் (நாலாவது வர்ணத்தில் பிறந்தபோதிலும்) ஶூத்₃ரர்களல்லர். ப₄கவத்₃ப₄க்தர்கள் (வேறு ஜாதியினராயினும்) அந்தணர்களேயாவர். ஜநார்த்த₃னனிடம் ப₄க்தியற்றவர்கள் எந்த வர்ணத்திற் பிறந்தவராயினும் ஶூத்₃ரர்களேயாவர்" என்னும் சாஸ்திர வசனத்தைச் சொல்லிக்கொண்டு அந்த ப₄க்திஸாரரை

१४. इत्युक्त्वा तं परिक्रम्य भक्तिसारं प्रणम्य च ।
कृतार्थाः पूर्ववद्वेदं पठन्तः सुखमास्थिताः ॥

१५. उञ्छवृत्तिपरो धीमान् भक्तिसारो महायशाः ।
उञ्छं कर्तुं ततो ग्रामे यां यां वीथिं स आगमत् ॥

१६. तस्यास्तस्याः प्रतोल्याश्च तदा ह्यभिमुखं ययौ ।
तत्र ग्रामेऽर्चनाभूतो भगवान् विष्णुरव्ययः ॥

१७. तस्यार्चकास्समुद्वीक्ष्य तच्चित्रं परमाद्भुतम् ।
विस्मिता ब्राह्मणेभ्यश्च कतिभ्यस्समदर्शयन् ॥

१८. ते तत्र यज्ञशालायां समागत्याशु संभ्रमम् ।
द्विजास्तं ऋत्विजस्सर्वान् दीक्षितं चाब्रुवंस्तदा ॥

---

ப்ரத₃க்ஷிணம் செய்து வணங்கிப் பேறுபெற்றவர்களாய் முனபோலே வேதத்தை ஓதிக்கொண்டு இனிதிருந்தனர்.

## பெரும்புலியூரெம்பெருமானின் ப₄க்திஸாரப்ரேமம்

15-17. பேரறிவாளராய், பெருமபுகழாளரான ப₄க்தி ஸாரர் உஞ்ச₂வ்ருத்தி செயதே ஜீவிப்பவராகையாலே உஞ்ச₂வ்ருத்தி செய்வதற்காக அந்த கிராமத்தில் எந்த எநத வீதிக்கு எழுந்தருளினரோ, அந்த அந்த வீதிப்பக்கம் நோக்கி அவ்வூரெம்பெருமானை அச்சுதன திரும்பினனை. அவனுடைய அர்ச்சகர்கள பெரிய அற்புதமும விசித்திரமு மான அதைக்கண்டு வியப்புற்று, சில அந்தணர்களுக்கு அதைக்காட்டினார்கள்.

## யாக₃சாலையில் ப₄க்திஸாரருக்கு அக்₃ரபூஜை

18-*26. அவ்வந்தணர்கள் அப்போதே அவ்வூரி லுள்ள யாக₃சாலைக்குப் பரபரப்போடு விரைந்து வந்து,

१९. दृष्टं महच्चित्रमिदं नेत्रसाफल्यवत्स्फुटम् ।
अत्यद्भुतं भक्तिसारप्रभावमतिमानुषम् ॥

२०. तत् श्रुत्वा दीक्षितोऽत्यन्तं शालायां बहिरञ्जसा ।
निर्गत्य तत् विचित्रं तु वीक्ष्य देवालये तदा ॥

२१. भक्तिसारं विलोक्याथ प्रणिपत्येदमब्रवीत् ।
भक्तिसार! जगद्वन्द्य! कृतार्थोऽस्मि तवागमात् ॥
अद्यैव सफलो यागः सन्तुष्टाः सर्वदेवताः ॥

२२. अक्ष्णोः फलं त्वादृशदर्शनं हि जिह्वाफलं त्वादृशनामकीर्तनम् ।
शिरःफलं त्वादृशवन्दनं हि पाण्योः फलं त्वादृशपूजनं हि ॥

---

அங்குள்ள (யாகம் செய்யும் யஜமானரான) தீக்ஷிதரையும் (யாகத்தை நடத்தித்தரும் அத்4வர்யுமுதலான) எல்லா ருத்விக்குகளையும் பார்த்து "கண்படைத்த பயனையிருப்பதாய், பெரிய அதிசயமாய், சிறந்த அற்புதமாய், மனிதர் பெருமைக்கு அப்பாற்பட்டதான இந்த ப4க்திஸாரப்ரபா4வம் எங்களால் நேரே காணப்பட்டது" என்று கூறினார்கள். அதைக் கேட்டு தீக்ஷிதர் உடனே யாகசாலைக்கு வெளியேவந்து அவ்வூர்க்கோயிலில் பேராச்சரியமான அதை அப்போதேகண்டு ப4க்திஸாரரைப் பார்த்து வணங்கி, "உலகனைத்தாலும் வணங்கத்தக்க ப4க்திஸாரரே! தேவரீர் இவ்வூருக்கு எழுந்தருளியதால் அடியேன் பேறுபெற்றேன்; இன்றே எனது யாக3மும் பயன்பெற்றது. எல்லா தே3வர்களும் உகப்படைந்தனர், உம்மைப்போன்றவரைக் காண்பதே கண்

२३. इत्युक्त्वा दीक्षितः सम्यक् हरिपादो महौजसम् ।
आदाय यज्ञशालायां प्रार्थनापूर्वकं तदा ॥

२४. अग्रासने समारोप्य ब्रह्ममण्डलमध्यगे ।
अकरोदग्रपूजां तां स तस्मै विधिपूर्वकम् ॥

२५. सर्वेषां पश्यतां तत्र ऋत्विजां ब्रह्मवादिनाम् ।
राजसूयाध्वरे कृष्णं गोविन्दं पशुपाङ्गजम् ॥

२६. अपूजयन्महाभक्त्या धर्मराजः पुरा यथा ।
अध्वर्युप्रमुखास्तत्र तेऽग्रपूजां विलोक्य ताम् ॥

---

படைத்த பயனாகும், உம்மையொத்தவர்களின் திருநாமத்தைச்சொல்லுவதே நாப்படைத்த பயனாகும். உம்மைப் போன்றவர்களை வணங்குவதே தலைபடைத்த பயனாகும். உம்மையொத்தாரைப் பூஜிப்பதே கைகள் படைத்த பயனாகும்" என்று கூறினார்; இப்படிக் கூறியபின் ஹரிபாதர் என்னும் அந்த தீக்ஷிதர் பெரிய தேஜஸ்ஸை உடைய பக்திஸாரரை யாகசாலைக்குப் பிரார்த்தித்து அப்போதே அழைத்துச்சென்று, (முன்பொருநாள்) ராஜஸூயயாகத்தில் மாடுமேய்க்கும நந்தகோபாலன் குமரனை கோவிந்தனுக்குப் பரமபக்தியுடன் தர்மபுத்திரர் அக்ர பூஜை செயததுபோலே, வேதமோதும் எல்லா ருத்விக்குகளும் பார்த்திருக்கையில் அந்தணர் கூட்டத்தின் நடுவிலிருக்கும் அக்ராஸனத்தில் பக்திஸாரரை எழுநதருளச் செய்து, முறைப்படி அவருக்கு அக்ரபூஜை செய்தார்.

२७. गर्हयन्तः शपन्तश्च भक्तिसारं च दीक्षितम् ।
शिशुपालादिवत्पूर्वं श्रीकृष्णं च युधिष्ठिरम् ॥

२८. तमाहिताग्निं संवीक्ष्य कोपेनैवोचुरीदृशम् ।
मूढेन भवता मन्द! मूढयागः कृतः किल ॥

२९. शूद्रं कञ्चित्समादाय शौचाचारादिवर्जितम् ।
देवब्राह्मणसम्पूर्णे शालामध्ये पवित्रके ॥

३० ऋत्विजोऽन्याननादृत्य वेदवेदान्तपारगान् ।
अग्रासने समारोप्य तस्मै शूद्राय सत्वरम् ॥

---

## அக்₃ரபூஜையை அந்தணர் ஆட்சேபித்தல்

26*-32. அத்₄வர்யு முதலான அங்கிருந்த அந்தணர் அனைவரும் அந்த அக்₃ரபூஜையைக் கண்டு சிசுபாலன் முதலானோர் (முன்பு ராஜஸூய யாக₃த்தில்) ஸ்ரீ க்ருஷ்ணனை யும், தர்மபுத்திரரையும் வைததுபோலே, ப₄க்திஸாரரையும் தீ₃க்ஷிதரையும் இகழ்ந்து வைபவர்களாய், அனற்படுகைய ரான தீ₃க்ஷிதரைக் கோபத்தோடு பார்த்து "அடிமுட்டாளே! முட்டாளான உன்னால் இந்த யாக₃ம் பயனற்றுப் போயிற்று. வேத₃வேதா₃ந்தங்கள் கரைகண்ட மற்ற ருத் விக்குகளை அலட்சியம்செய்து, ஆசார வ்யவஹாரங்களற்ற ஒரு சூத்ரனை அழைத்து வந்து, தே₃வப்₃ராஹ்மணர்கள் நிறைந்த புனிதமான யாக₃சாலையின் நடுவில் அந்த சூத்ரனைச் சடக்கென அக₃ராஸனத்தில் அமரச்செய்து ஸோமயாக₃ம் செய்த நீ அவனுக்கு அக்₃ரபூஜை செய்து விட்டாய்; இதனால இந்த யாக₃மும் பயனற்றுப் போய்

३१. अग्रपूजा कृता तेन भवता सोमयाजिना ।
प्रणष्टस्तत्र यागोऽयमेतेन च भवांस्तथा ॥

३२. इत्युक्त्वा परुषं वाक्यं बहुशस्तं च दीक्षितम् ।
तत्प्रभावमजानन्तः निनिन्दुरखिला जनाः ॥

३३. असहिष्णुस्स तद्वाक्यं निशम्य परुषं महान् ।
प्रव्याकुलान्तःकरणः भक्तिसारमुखाम्बुजम् ॥

३४. विलोक्य भगवद्भक्तो व्याजहार वचः शुभम् ।
भक्तिसार! महाभाग! श्रुतं चैतत् वचः किल ॥

३५. एते परुषवाक्यानि ह्यसह्यानि वदन्ति हि ।
कथं सहिष्ये तानार्य! त्वद्भक्तोऽहं महात्मक ! ॥

---

விட்டது. நீயும ப்₄ரஷ்டனுய்" என்று வார்த்தை சொன்ஞர்கள். ப₄க்திஸாரரின பெருமையை அறியாமல் இவவண்ணமாக ப₄க்திஸாரரையும் தீ₃க்ஷிதரையும் பார்த்து எலலா ஜனங்களும் கொடிய வார்த்தைகளைக் கூறிப் பலவாறு வைதார்களா.

## தீக்ஷிதரின் பிரார்த்தனை

*33-36* அவர்களுடைய கொடிய நிந்தைச் சொற்களைக்கேட்டு, ப₄க₃வத்₃ப₄க்தராய், பெரியவரான அந்த தீ₃க்ஷிதர் பொறுக்கமாட்டாதவராய் மனங்கலங்கி, ப₄க்திஸாரரின் திருமுகத்தாமரையைப் பார்த்து, "பெரியவரான ப₄க்திஸாரரே! இந்த நிந்தைச் சொறகளைக் கேட்டீரல்லவா. இவர்கள் பொறுககமுடியாத கொடிய வாக்யங்களைக் கூறுகிருர்களே; நல்லவரே! அவற்றை உமது ப₄க்தனை நான் எப்படிப் பொறுத்துக்கொள்வேன்? பெரி

३६. निन्दां भगवतः शृण्वन् तत्परस्य जनस्य वा ।
ततो नापैति यः सोपि यात्यधः सुकृताद् च्युतः ॥

३७. अङ्गीकृत्य वचस्तस्य दीक्षितस्य दयाम्बुधिः ।
इयेष तत्र यत्स्वीयं महिमानं प्रदर्शितुम् ॥

३८. अष्टाङ्गयोगसिद्धानां हृद्योगनिरतात्मनाम् ।
योगिनामधिकारः स्यात् एकस्मिन् हृदयाम्बुजे ॥

३९. हृत्पुण्डरीके ध्यायन् तं योगेन जगदीश्वरम् ।
अनन्तशयनं देवं शङ्खचक्रगदाधरम् ॥

---

யோரே! எம்பெருமானையாவது, அவனடியார்களையாவது நிந்திப்பதைக் கேட்டபினபு எவன் அந்த இடத்தைவிட்டுப் போகவில்லையோ, அவன் புண்ணியம நழுவப்பெற்றுக் கீழான க₃தியை அடைகிருன" என்னும் மங்க₃ளமான வார்த்தையைச் சொன்ஞர்.

## ப₄க்திஸாரரிடம் எம்பெருமான் காட்சியளித்தல்

37-41. கருணைக்கடலான ப₄க்திஸாரரும் அந்த தீ₃க்ஷிதருடைய வார்த்தையை ஏற்றுக்கொண்டு, அவ்விடத்தில் தம் பெருமையை வெளிப்படுத்தத் திருவுள்ளங் கொண்டார். அஷ்டாங்க₃யோக₃ம் கைவரப்பெற்றவர்களும், நெஞ்சில் தியானிப்பதிலேயே ஈடுபட்டவர்களுமான யோகி₃களுக்கு ஹ்ருத₃யகமலத்தில் வாழும் ஒப்பற்ற அந்தர்யாமி ப₄க₃வானிடம் எதையும் கேட்பதற்குத் தகுதி உண்டு. (ஆகையால்) அவரும் தமது இதயக் கமலத்தில் யோக₃த்தால் தியானித்து, ஜக₃தீ₃ஶ்வரனை, அநந்த

४०. बहुशः प्रार्थयामास लोकानुग्रहकारणात् ।
प्रत्यक्षो भव सर्वेषां अत्रत्यानां द्रुतं प्रभो! ॥

४१. प्रार्थितस्तेन भगवान् भक्ताधीनः श्रियःपतिः ।
भक्तिसारशिरोमध्ये प्रत्यक्षमगमद्धरिः ॥

४२. शयानं शेषपर्यङ्के शङ्खचक्रगदाधरम् ।
नीलमेघनिभं दिव्यं पीताम्बरधरं हरिम् ॥

४३. तं दृष्ट्वा देवदेवेशं भगवन्तं जगत्पतिम् ।
अध्वर्युप्रमुखास्सर्वे नमश्चक्रुर्द्विजर्षभाः ॥

---

ஶாயியாய், ஶங்க2சக்ரக3தைகளை த4ரித்திருப்பவனை எமபெருமானை உலகத்திற்கு அநுக்3ரஹம் செய்வதற்காகப் பலவாறு பிரார்த்தித்தார்.—"எமபிரானே! இங்குள்ள அனைவருககும் விரைவில் ப்ரத்யக்ஷமாகக காட்சியளிப்பாய்" என்று. அவரால பிரார்த்திக்கப்பெற்ற ப4கதபரவசனாய், ஶ்ரிய: பதியான ப4க3வான் ஹரி ப4கதிஸாரரின் நெற்றியின் நடுவில் நேரே காட்சியளித்தான்.

## அந்தணர் திருந்தி ப4க்திஸாரரைப் பூஜித்தல்

**42-*49.** அத்4வர்யு முதலான அந்தணர் தலைவர்கள் அனைவரும ஆதி3ஶேஷஶயனத்தில் சயனித்திருப்பவரும், ஶங்க2ம் சக்ரம் க3தை3 ஆகியவற்றை த4ரித்திருப்பவரும், நீலமேகவண்ணரும், அபராக்ருதரும், பீதகவாடையை உடுத்தவரும், தே3வதே3வர்களுககும் தலைவரும், லோக நாத2ருமான ப4க3வான் ஹரியைக்கண்டு வணங்கினர். ப4கதிஸாரருக்கு எதிரிகளாயிருந்த அத்4வர்யு முதலான

४४. अध्वर्युप्रमुखास्तत्र भक्तिसारविरोधिनः ।
भक्तिसारशिरोमध्ये शेषतल्पे समास्थितम् ॥

४५. नीलमेघनिभं दिव्यं पीताम्बरधरं हरिम् ।
प्रत्यक्षेण विलोक्यैव दिव्यमङ्गलविग्रहम् ॥

४६. सर्वेऽतिविस्मिता भीताः परभक्तिसमन्विताः ।
भक्तिसारस्य पादाब्जे भक्त्या साष्टाङ्गवन्दनम् ॥

४७. विधाय सहसा चैव ह्यपराधक्षमापणम् ।
भक्तिसारं ब्रह्मरथे सद्भक्त्याऽऽरोप्य सत्वरम् ॥

४८. बहुधा पूजयामासुः कृतार्थास्तेन तेऽभवन् ।
स तेभ्यो भक्तिसारश्च ऋत्विग्भ्यः करुणार्णवः ॥

४९. ज्ञानोपदेशं बहुशश्चकार कृपया तदा ।
ततः संप्रेषितस்तेन हरिपादेन पूजितः ॥

---

அனைவரும் சேஷசாயியாய் நீலமேகவண்ணராய், அப்ராக்ருதராய், பீதாம்பரத்தை உடுத்தவராய், திவ்ய மங்கள விக்ரஹமுடையரான ஹரியை பக்திஸாரரின் நெற்றியின் நடுவில் நேரே கண்டு மிகவும் வியப்புற்று பயந்து பரபக்தியோடு கூடியவர்களாய், பக்திஸாருடைய திருவடித்தாமரைகளை அன்போடு சடக்கென ஸாஷ்டாங்க நமஸ்காரம்செய்து, பக்திஸாரரிடம மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, பேரன்போடு பக்திஸாரரை விரைவில் ப்ரஹ்ம ரதத்தில ஏறறி, பலவிதமாக ஆராதித்தனர். அதனால் அவர்கள் பிறவிப்பயன் பெற்றார்கள. அந்த ரித்விக்குகளுக்குக் கருணைக்கடலான அந்த பக்திஸாரர் கிருபையோடு ஞானோபதேசத்தைப் பலவாறு செய்தார்.

५०. कुम्भकोणं ययौ धीमान् भक्तिसारो महायशाः ।
भक्तिसारः प्रणम्याशु शार्ङ्गपाणिं जगत्पतिम् ॥
५१, विलोक्य शयनं तस्य शार्ङ्गपाणेर्महात्मनः ।
सन्तुष्टो ह्यवदच्चैकां गाथां काञ्चिन्महाकविः ॥
५२. निशम्योक्तां स तां तेन हरिर्द्राविडभाषया ।
उद्युक्तो भक्तवात्सल्यादुत्थितुं सहसा ह्यभूत् ॥
५३. उत्तिष्ठमानं तं दृष्ट्वा भक्तिसारो भयान्वितः ।
मोत्तिष्ठेति तदा देवं प्रार्थयामास भूरिशः ॥

---

## திருக்குடந்தையில் ஆராவமுதன் கிடந்தவாறெழுந்திருத்தல்

*49*-56.* அதற்குப்பின் ஹரிப₄ாதர் என்னும் அந்த தீ₃க்ஷிதரால் ஆராதி₄க்கப்பட்டு விடைகொடுக்கப்பெற்ற பேரறிவாளராய், பெரும்புகழாளரான ப₄க்திஸாரர் கும்ப₄ கோணத்திற்குச் சென்றார். லோகநாத₂னை சார்ங்க பாணியை விரைவில் வணங்கி, மஹாகவியான ப₄க்தி ஸாரர் மஹாபுருஷனை சார்ங்கபாணியின் சயனத்தை ஸேவித்து, உகந்து,

**"நடந்தகால்கள் நொந்தவோ? நடுங்க ஞாலம் ஏனமாய்**
**இடந்த மெய் குலுங்கவோ? இலங்குமால் வரைச்சுரம்**
**கடந்தகால் பரந்தகாவிரிக்கரைக் குடந்தையுள்**
**கிடந்தவாறு எழுந்திருந்து பேசு வாழிகேசனே"**

(திருச்சந்த-61)

என்னும் தமிழ்ப்பாடலைப் பாடினார். அவரால் பாடப்பட்ட அந்தத் தமிழ்ப்பாடலைக்கேட்டு ப₄க்தரான அவரிடம் வாத்ஸல்யததாலே அவ்வெம்பெருமான் சடக்கென எழுந் திருக்கத் தொடங்கினான். எழுந்திருக்கும் அவ்வெம்பெரு மானைப் பார்த்து பயந்த ப₄க்திஸாரர் 'எழுந்திருக்க வேண்

५४. संप्रार्थितस्तदा तेन भगवान् भक्तवत्सलः ।
स्वभक्तजनवात्सल्यं लोकेष्वप्यस्तुचयन्निव ॥

५५. उत्तानशयनः श्रीमान् शार्ङ्गपाणिर्महोन्नतः ।
तदाकारतयाद्यापि तत्रैव परिदृश्यते ॥

५६. यत्तदुत्तानशयनं यत्तेजः सुमहाद्भुतम् ।
अतः सन्निधिविस्तीर्णं यत्तदन्यादृशं भुवि ॥

५७. वेदान्तिन्! भक्तिसारोऽथ शार्ङ्गपाणिं जगत्पतिम् ।
भक्त्या संप्रार्थयामास तत्प्रेमातिशयेन सः ॥

---

டாம்' என்று அப்போதே அவ்வெம்பெருமானைப் பலகால் பிரார்த்தித்தார். அவரால் பிரார்த்திக்கப்பெற்றவனாய், தனது ப₄க்தவாத்ஸல்யத்தை உலகனைத்துக்கும் உணர்த்துபவன் போலே, திருமகள் கேள்வனாய், ப₄க்தவத்ஸலனாய், ப₄க₃வானாய், மிகப்பெரியவனான சார்ங்கபாணி கிடந்தவாறெழுந்திருக்கும் அந்த உத்தானஶயனத் திருக்கோலத்தோடேயே இன்றும் அங்கு ஸேவை ஸாதி₃க்கிறான். உத்தானஶயனமான அப்பெருமானின் தேஜஸ் மிகப்பெரிய அற்புதமானது. அதனால் அங்கு எம்பெருமானின் ஸாந்நித்₄யம் சிறப்புற்றது. உலகில் வேறெங்கும் காணவியலாதது.

## சார்ங்கபாணியை ப₄க்திஸாரர் பிரார்த்தித்தல்

*57-60.* வேதா₃ந்திஞ்சீயரே! பெருங்காதலாலே அந்த ப₄க்திஸாரர் லோகநாத₂னை சார்ங்கபாணியை அன்போடு பின்வருமாறு பிரார்த்தித்தார்:—புகழ்பெற்ற கும்பகோணத்தில ஆதிசேஷனை சயனத்தில் கிழக்கே திருமுகமண்டலத்தை உடையவனாய், தெற்குத்திசையில் திருமுடியை உடையவனாய், மென்மைமிக்க திருவடிகளை

५८. विख्याते कुम्भकोणे फणिपतिशयने प्राङ्मुखो दक्षिणाशा-
दिग्भागे न्यस्तशीर्षो मृदुपदयुगलं चोत्तरे तत्प्रसार्य ।
यः शेते शार्ङ्गपाणिः सकलतनुभृतां सर्वसंपत्प्रदाता
दद्यान्मे देवदेवः सरसिजनयनः सन्निधिं योगिलभ्यः ॥

५९. ताम्राधरं तरुणपल्लवपादपाणिं
तारेशकोटिनयनं तरणिप्रकाशम् ।
तत्कुम्भकोणनगराधिपमादिनाथं
तं शार्ङ्गपाणिमनिशं हृदि चिन्तयामि ॥

६०. स शार्ङ्गपाणिः सरसीरुहाक्षः
समस्तकल्याणगुणाम्बुराशिः ।
सामप्रियः सर्वजनानुकूलः
करोतु मे मङ्गलमार्तबन்धुः ॥

---

வடக்குநோக்கி நீட்டிக்கொண்டிருப்பவனாய், சயனித்திருக்கும் தேவதேவனாய், தாமரைக்கண்ணனாய், யோகிகளால் அடையப்படுபவனாய், எல்லாச் சேதனர்க்கும் எல்லாச் செல்வங்களையும் அளிப்பவனான சார்ங்கபாணி எனக்குக் காட்சியளிப்பானாக. பழுத்த திருப்பவளங்களையும், இளந் தளிர்போன்ற திருவடிகளையும், திருக்கைகளையும உடையவனாய், கோடி சந்திரர்களைப்போன்று குளிர்ந்த திருக் கணகளை உடையவனாய், ஸூர்யன்போல் பிரகாசிப்பவனாய், திருக்குடந்தைக்குத் தலைவனாய், ஆதிநாதனான சார்ங்க பாணியை நெஞ்சில் தியானிக்கிறேன். தாமரைக்கண்ணனாய், எல்லாக் கல்யாணகுணங்களும் தங்கும் கடலாயிருப்பவனாய், ஸாமவேதத்தில் பிரீதிகொள்பவனாய், எல்லா ஜனங்களுக்கும் அநுகூலனாய், வருந்துமவர்க்கு உறவினனாயிருக்கும் அந்த சார்ங்கபாணி எனக்கு மங்களத்தை அளிப்பானாக.

६१. एवं दृष्ट्वाऽनुभूयाथ सौन्दर्यातिशयं हरेः ।
तस्यानुभवसञ्जातप्रेमातिशयहेतुना ॥

६२. प्रबन्धद्वितयं तेन कृतं भार्गवसूनुना ।
तत्र श्रीद्राविडीभाषाद्विशतं षोडशाधिकम् ॥

६३. एकं चतुर्मुखान्तादिनामदिव्यप्रबन्धकम् ।
गाथाः षण्णवतिस्तत्र वेदान्तिन्! परिकीर्तिताः ॥

६४. अन्यं श्रीचन्दवृत्ताख्यप्रबन्धं द्राविडं मुनेः ।
शतं च विंशतिस्तत्र विद्वन्! गाथाः प्रकीर्तिताः ॥

६५. स्तुतानि भक्तिसारेण स्थलान्येकादशात्र हि ।
श्रीरङ्गं वेङ्कटाद्रिश्च वीक्षारण्यं महामते ॥

---

## திவ்யப்ரபந்தங்களை அருளல்

*61-64.* இவ்வண்ணமாக எம்பெருமானை ஸேவித்து அவனுடைய சிறந்த அழகை அனுபவித்து அந்த அநுபவத்தினால் உண்டான அன்புவெள்ளம் காரணமாக பார்க்கவபுத்ரரான திருமழிசையாழ்வார் இரண்டு திவ்ய ப்ரபந்தங்களை அருளிச்செய்தார். அந்நூல்களில் தமிழ் பாஷையில் இருநூற்றுப் பதினாறு பாடல்கள் உள்ளன. வேதாந்திநஞ்ஜீயரே! ஆழ்வாரின் அவ்விருநூல்களில் முதலாவதான நான்முகன் திருவந்தாதி என்னும திவ்யப்ரபந்தத்தில் தொண்ணூற்றாறு பாடல்கள் உள்ளன. இரண்டாவதான திருச்சந்தவிருத்தம என்னும் தமிழ்ப் பிரபந்தத்தில் நூற்றிருபது பாடல்கள் உள்ளன.

## பாடப்பெற்ற திவ்யதேசங்கள்

*65-69.* திருமழிசையாழ்வாரால் பாடப்பெற்ற திவ்ய தேசங்கள் பதினொன்றாகும். பேரறிவாளரே! (1) ஸ்ரீரங்

६६. यथोक्तकारी यो वेगासिन्धौ काञ्चीपुरे वरे ।
गानगेहे पार्थदूतः शेषगेहे त्रिविक्रमः ॥

६७. कैरविण्यां पार्थसूतः श्रीनृसिंहादिसंयुतः ।
कुम्भकोणे शार्ङ्गपाणिः गजार्तिघ्नः कपिस्थले ॥

६८. प्रेमपुर्यां सुन्दराङ्गो ह्यपूपेशो महापुरे ।
अस्मिन्नर्थे महान् श्लोकः श्रूयते लोकविश्रुतः ॥

६९. रङ्गं प्रेमपुरं कपिस्थलवरं श्रीकुम्भकोणस्थलं
श्रीमाल्याख्यपुरं च वेङ्कटगिरिः श्रीकैरविण्यास्तटम् ।
काञ्च्यां शेषगृहं च गानसदनं वेगार्णवो विश्रुतः
श्रीमत्पक्षिगृहपट्टणं भृगुसुतेनैकादशैते स्तुताः ॥

---

கம், (2) திருவேங்கடமலை, (3) திருவெவ்வுள், (4, 5, 6) சிறப்புற்ற காஞ்சியில் வேகவதிக்கரையிலுள்ள சொன்ன வண்ணம் செய்தபெருமாள் எழுந்தருளியிருக்கும் திருவெஃகா, பாண்டவதூதன் எழுந்தருளியிருக்கும திருப்பாடகம், திரிவிக்கிரமன் எழுந்தருளியிருக்கும திருவூரகம், (7) ஸ்ரீந்ருஸிம்ஹன் முதலான எம்பெருமான்களோடு ஸ்ரீ பார்த்தஸாரதி எழுந்தருளியிருக்கும் திருவல்லிக்கேணி. (8) ஶார்ங்கபாணி எழுந்தருளியிருக்கும் திருக்குடந்தை, (9) க₃ஜேந்த்₃ரவரத₃ன் எழுந்தருளியிருக்கும் கபிஸ்த₂லம், (10) ஸுந்தரராஜன் எழுந்தருளியிருக்கும் அன்பில், (11) அபபக்குடத்தான் எழுந்தருளியிருககும் திருப்பேர்நகர். இவ்விஷயத்தில் உலகமறிந்ததொரு பெரிய ஶ்லோகம் உள்ளது. (அதனைபொருள் பின்வருமாறு) (1) ஸ்ரீரங்கம, (2) அன்பில, (3) கபிஸ்தலம, (4) திருக்குடந்தை, (5) திருப்பேர்நகர், (6) திருவேங்கடமலை, (7) திருவல்லிககேணி, (8, 9, 10) காஞ்சியில் திருவூரகம, திருப்பாடகம், திருவெஃகா என்று புகழ்பெற்ற தலங்கள், (11) திருவெவ்வுள் என்னும் இப்பதினொரு தலங்களும் ப்₄ருகு₃குலத்திலுதித்த திருமழிசையாழ்வாரால் பாடப்பெற்றவை.

७०. उत्तानशायिनं तस्य विग्रहं महदद्भुतम् ।
हृत्पुण्डरीके श्रीमन्तं ध्यायन् भक्त्या निरन्तरम् ॥

७१. संवत्सराणां त्रिशतं सहस्रद्वितयं च सः ।
सुखेन न्यवसद्योगी कुम्भकोणे महायशाः ॥

७२. क्षीरपानैकनिरतो ह्यन्नाहारादिवर्जितः ।
सहस्रत्रितयं चैव यः सप्तशतवत्सरान् ॥

७३. उवास भूम्यां भगवदनुभावेन संततम् ।
आसन् सहस्रवर्षाणि भक्तिसारस्य षट् ततः ॥

७४. परान्यमतसञ्चारे तस्य चैकसहस्रकम् ।
अतो हि सप्तसाहस्रवर्षाण्यायुर्महात्मनः ॥
अस्मिन्नर्थे महान् श्लोकः श्रूयते लोकविश्रुतः ॥

---

## எழுந்தருளியிருந்த காலம்

70-75. கிடந்தவாறெழுந்திருந்து பேசும் திருக்குடந்தை எம்பெருமானின் அத்யாஶ்சர்யமான திரு நிறைந்த திருமேனியைத் திருமழிசையாழ்வார் தமது இதயக்கமலத்தில் இடைவிடாது அன்போடு தியானித்துக் கொண்டு இரண்டாயிரத்துமுந்நூறு வருடங்கள் யோகம் செய்துகொண்டு பெரும்புகழாளராய்த் திருக்குடந்தையில் இனிது வாழ்ந்தார். அன்னம்முதலான உணவுகளற்றவராய், பால் ஒன்றையே அருந்துபவராய், பகவதநுபவத்தையே இடையறாத உணவாகக் கொண்டவராய் மூவாயிரத்தெழுநூறு வருடங்கள் அவர் பூமியில் வாழ்ந்தார். இப்படி ஆறுயிரம் வருடங்கள் அவருக்குக் கழிந்தன. சமணம், சாக்கியம், ஶைவம் முதலான மதங்களைப்பற்றிக் கொண்டு ஓராயிரம் வருடங்கள் வாழ்ந்தார். ஆகையால் அந்த மஹாத்மாவுக்கு ஏழாயிரம் வருடங்கள் ஆயுளாகும்.

७५. मध्ये कलिद्वापरयोः सहस्र-
वर्षाणि सप्तैव विहृत्य भूमौ ।
सौदर्शनीं मूर्तिमुपागतं च
तं भक्तिसारं शरणं प्रपद्ये ॥

७६. दिव्यप्रबन्धमुपदिश्य ततोऽखिलेभ्यः
तं वेदसारमखिलार्थनिधिं जनेभ्यः ।
अज्ञानघोरतिमिरं तदपोह्य तेषाम्
स्वज्ञानदीपकलया ह्यवनिं ररक्ष ॥

---

இவ்விஷயத்தில் உலகமறிந்த பின்வரும் ஶ்லோகம் கேட்கப்படுகிறது. (அதன் பொருள் பின்வருமாறு) கலியுகத்துக்கும் த்வாபரயுகத்துக்கும் இடையேயுள்ள ஸந்தியில் ஏழாயிரம் வருடங்கள் பூமியில் வாழ்ந்துவிட்டுத் தன்னுடைய ஸுதர்ஶனாழ்வானாகிற மூலமூர்த்தியை ஶரணமடைந்த அந்த பக்திஸாரரை ஶரணமடைகிறேன்.

## முடிவுரை

76-79. திருமழிசையாழ்வார் வேதங்களின் ஸாரமாய் இருப்பதாய், அறியவேண்டிய எல்லா அர்த்தங்களையும் தன்னுட கொண்டதான திவ்யப்ரபந்தத்வயத்தையும் எல்லா ஜனங்களுக்கும் உபதேஶித்து, அவர்களுடைய கொடிய அஜ்ஞானவிருளைப் போக்கி, தம்முடைய ஜ்ஞான விளக்கின் ஒளியாலே உலகை ரக்ஷித்தார். அவருடைய அந்த திவ்யப்ரபந்தங்களை ஸேவிப்பதன் மூலம் எல்லா ஜநஸமூஹங்களும் பாபங்கள் நீங்கப்பெற்றவர்களாய், பரிஶுத்தமான நெஞ்சையுடையவர்களாய ப்ரபந்நர்க

௭௭. दिव्यप्रबन्धपठनात् सकला जनौघाः
संत्यक्तपापनिवहाः परिशुद्धचित्ताः ।
उत्तीर्णघोरभववारिधयो महान्तः
वैकुण्ठलोकमगमन् सहसा प्रपन्नाः ॥

௭௮. कुम्भघोणे महापुण्ये स्थित्वाऽसौ बहुवत्सरान् ।
तत्रैव चागमन्मुक्तिं भक्तिसारो महायशाः ॥

௭௯. चित्रं चरित्रं परमं पवित्रं
तद्भक्तिसारस्य वरं महार्थम् ।
पठन्ति शृण्वन्ति च ये तु भक्त्या
ते विष्णुलोके निवसन्ति सत्यम् ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे भक्तिसारवैभवकथनं नाम चतुरशीतितमोऽध्यायः ॥

---

ளான பெரியவர்களாகிக் கொடியதான ஸம்ஸாரக்கடலைத தாண்டி ஸ்ரீவைகுண்டலோகத்தை விரைவிலேயே அடைந்தனர். பெரும்புகழாளரான பக்திஸாரர் பரமபவித்திரமான திருக்குடந்தையில் பல வருடங்கள் வாழ்ந்து அங்கேயே முக்தியடைந்தார். ஆஶ்சர்யமானதாயப் பரம பாவநமானதாய் மிகச்சிறந்ததாய் அரிய அர்த்தங்களைத தன்னுடைகொண்டதான பக்திஸாரருடைய இந்தச் சரித்திரத்தை எவர்கள் அன்புடன் கேட்கிறார்களோ, படிக்கிறார்களோ அவர்கள் விஷ்ணுலோகத்தில் வாழ்வார்கள் என்பது ஸத்யம்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் பட்டார்ய வேதாந்தி ஸம்வாதத்தில் பக்திஸாரருடைய வைபவத்தை நிறைவு செய்வதாகிற எண்பத்துநாலாம் அத்தியாயம் முற்றிற்று.

पञ्चाशीतितमोऽध्यायः ॥

१. श्रुत्वा माधवदासोऽथ भक्तिसारस्य वैभवम् ।
संप्रहृष्टोऽथ भट्टार्यं प्रणिपत्येदमब्रवीत् ॥

२. श्रोतुमिच्छामि भगवन्! शठारेस्तस्य वैभवम् ।
ब्रूहि मे करुणासिन्धो! यद्यद्वक्तव्य साम्प्रतम् ॥

३. प्रतिगृह्य वचस्तस्य भट्टार्यस्तमथाब्रवीत् ।
अवतारक्रमेणैव शठकोपस्य वैभवम् ॥

४. वक्तव्यं सांप्रतं विद्वन्! तथापि शृणु मद्वचः ।
निरूप्यावयवान् पूर्वं पश्चात्तस्य निरूपणम् ॥

---

## எண்பத்தைந்தாம் அத்தியாயம்

## ஸ்ரீகுலசேகரரின் அவதார வர்ணனம்

### நஞ்சீயரின் கேள்வி

*1-2.* மாத₄வதா₃ஸராகிற நஞ்சீயர் ப₄க்திஸாரருடைய வைப₄வத்தைக் கேட்டு மிகவுகந்தவராய் ப₄ட்டரை வணங்கி "ஆசார்யரே! நம்மாழ்வாருடைய வைப₄வத்தைக் கேட்க விரும்புகிறேன். கருணைக்கடலே! இப்போது அதுபற்றி ப₄க்தனான எனக்குச் சொல்லவேண்டியதனைத்தையும் ஸாதிக்கவேணும்" என்று கூறினார்.

### அவயவியும் அவயவங்களும்

*3-5.* அந்த நஞ்சீயருடைய வார்த்தையைக் கேட்டு ப₄ட்டர் "அறிவாளியே! அவதாரக்ரமத்தில் பார்த்தால் திருமழிசையாழ்வாருக்கு அடுத்தபடி அவதரித்த நம்மாழ்வாருடைய வைப₄வமே இப்போது சொல்லத்தக்கது. இருந்தபோதிலும் ஒருவார்த்தை சொல்லுகிறேன் கேளும்.

५. यतोऽवयविनः शास्त्रे कर्तव्यमिति निर्णयः।
शठकोपो ह्यवयवी ये चान्येऽवयवाः किल ॥
६. कासारयोगिप्रमुखचतुर्णां चरितं शुभम्।
उक्तं किल मया सम्यक् श्रुतं विस्तरतस्त्वया ॥
७. सांप्रतं शृणु वक्ष्यामि कुलशेखरवैभवम्।
घुष्यते यस्य नगरे रङ्गयात्रा दिने दिने ॥
८. तमहं शिरसा वन्दे राजानं कुलशेखरम्।
याम्यपश्चिमयोर्मध्ये देशः केरलनामकः ॥
९. बभूव सर्वशोभाढ्यस्तालक्रमुकशोभितः।
बभूव सुमहद्दिव्यं तत्र श्रीकोलिपट्टणम् ॥

---

முதலில அவயவங்களை நிரூபித்தபின்பே அவயவியின் நிரூபணம் செய்யப்படவேணும் என்று ஶாஸ்த்ரங்களில் நிர்ணயிக்கப்பட்டிருக்கையாலும், நமமாழ்வார் அவயவியாயிருக்கையாலும், மற்ற ஆழ்வார்கள் அவயவங்களாயிருக்கையாலும் மற்ற ஆழவார்களின் சரித்திரங்களைச் சொன்னபின்பே நம்மாழ்வாரின் சரித்திரத்தைச் சொல்லப் போகிறேன" என்று கூறினார்.

## கோழிக்கோட்டில் கேரள அரசர்

6-13. பொய்கையார், பூதத்தார், பேயார், மழிசையாராகிற ஆழ்வார்கள நால்வரின் மங்களமான சரிதம் என்றல் நன்கு விரிவாகச் சொல்லப்பட்டு உம்மால் கேட்கப்பட்டது. இப்போது (நமமாழ்வாரை அடுத்து அவதரித்தவரான) குலஶேகரருடைய வைப₄வத்தைக் கூறுகிறேன் கேளும். "எவருடைய தலைநகரில் தினந்தோறும் ஸ்ரீரஙகயாத்ராஶப்₃த₃ம் முழங்கப்படுகிறதோ, அத்தகைய குலஶேக₂ரரான அரசரை நான் தலையால வணங்குகிறேன்." ப₄ாரத தே₃ஶத்தின தென்மேற்குத் திசையில் கேரளம் என்னும் தே₃ஶம் உளளது. அது பனைமரங்களும், கமுகுமரங்களும நிறைந்ததாய் மலைவளம, வனவளம், நீர் வளம முதலான எல்லா அழகுகளும் மிகுந்ததாயுள்ளது.

१०. तत्पुरं सर्वशोभाढ्यं राजस्थानं महोच्छ्रयम् ।
दृढव्रताख्यो राजासीत् भगवद्भक्तिपारगः ॥

११. स चेरकुलदुग्धाब्धिचन्द्रमाः क्षत्रियर्षभः ।
तत्प्रभावपराः श्लोकाः श्रूयन्ते बहवो भुवि ॥

१२. अत्यद्भुता काचन केरलेषु पुरी वरा कुक्कुटनामसाह्वा ।
प्रायेण यस्याः परिखाविलासं पतिर्नदीनां प्रकटीकरोति ॥

१३. वेधास्तुलायामुभयोस्तुलार्थमारोपयद्याममरावतीं च ।
पूर्वा तयोः प्राप भुवं गरिम्णा परोपरिष्टात् प्रययौ लघिम्ना ॥

---

அங்கு மிகப்பெரியதும் அழகியதுமான கோழிக்கோடு என்னும பட்டணம் உள்ளது அந்த நகரம் அரசின தலை நகராய் மிகப்பெரியதாய் எல்லா அழகுகளும் நிறைந்ததா யுள்ளது. அநதத் தலைநகரிலே ப₄க₃வத்₃ப₄க்தியின் எலலையைக கண்டவராய், சேரகுலமாகிற திருப்பாற் கடலில் உதித்த சந்திரன்போன்றவராய், க்ஷத்ரியர் களுக்குத தலைவரான த்₃ருட₄வ்ரதர் என்பவர் அரசாண்டு வந்தார். அந்தத் தலைநகரின் பெருமையை விளக்கும் பல ஶ்லோகங்கள் கூறப்படுகின்றன. (அவற்றில் இரண்டின் பொருள பின்வருமாறு) "கேரளத்தில மிகவற்புதமாய்ச் சிறந்ததான கோழிக்கோடு என்னும் நகரம் ஒன்று உளளது. நதி₃களுக்கெல்லாம் பதியான ஸமுத்₃ரம அதற்கு அகழாகவமைந்துளளது" "பிரமன் இந்தக் கோழிக்கோட்டையும இந்திரனின் தலைநகரான அமரா வதியையும் எது எடைமிக்கது என்று நிறுப்பதற்காக, தராசின் இரண்டு தட்டுக்களில்வைத்து நிறுத்தார். அதில் கோழிக்கோட்டை வைத்திருந்த தட்டு எடைமிக்கிருந்த தால் தாழ்ந்து பூமியைத்தொட்டது. அமராவதியை வைத்திருந்த தட்டு எடை குறைவாயிருந்ததால் உயரப் போயிற்று."

१४. सन्तानकामस्सततं श्रीहरिं समुपासत ।
तथा यथा दशरथो हयमेधादिभिः पुरा ॥
१५. दृढव्रतस्य राजर्षेः प्रसन्नो भगवान् हरिः ।
अपत्यलाभं प्रददौ कृपया भक्तवत्सलः ॥
१६. वर्षे पराभवे मासे कुम्भे वै शुक्लपक्षके ।
श्रीमत्पुनर्वसुतारे दशम्यां गुरुवासरे ॥
१७. कौस्तुभांशेन संजज्ञे महात्मा कुलशेखरः ।
दृढव्रतस्य राजर्षेः श्रीरामो भगवान् यथा ॥
अस्यावतारश्लोकाश्च गीयन्ते प्रथिता भुवि ॥

---

## குலஶேக2ரரின் அவதாரம்

14-22 முன்னொரு காலத்தில் த3ஶரத2ன் மக்களை வேண்டி அஶ்வமேத4யாக3ம் முதலானவற்றால் எம்பெருமானை ஆராதி4த்தது போலே, இந்த த்3ருட4வ்ரதராஜாவும் புத்திரனை வேண்டி எம்பெருமானை இடைவிடாது ஆராதி4த்து வந்தார். ப4க்தவத்ஸலனான எம்பெருமானும் ராஜரிஷியான த்3ருட4வ்ரதருக்கு அருளகூர்ந்து ஓர் குமாரரை அநுக்3ரஹித்தார். "பராப4வ வருஷத்தில் மாசி மாத ஶுக்லபக்ஷத்தில் சிறப்புமிகுந்த புனர்வஸு நக்ஷத்திரத்தில் த3ஶமி திதி2யில் வியாழக்கிழமையன்று, ஸ்ரீராம பிரான த3ஶரத2ருக்குப் புத்ரனாய் அவதரித்ததுபோலே ராஜரிஷியான த்3ருட4வ்ரதருக்கு ஸ்ரீகௌஸ்துப4ாம்ஶராய் மஹாத்மாவான குலஶேக2ரர் புத்திரராக அவதரித்தார்" இவரைப்பற்றி உலகில் புகழ்பெற்ற அவதார ஶ்லோகங்கள் பாடப்படுகின்றன. (அவற்றின் பொருள் பின்வருமாறு) "அந்த ராணியிடம் மாசி மாதம் புனர்வஸு நக்ஷத்ரம் கூடிய சுபதினத்தில் எமபெருமானின் பூர்ணகடாக்ஷத்

१८. तस्यामभूचेरकुलप्रदीपः
श्रीकौस्तुभात्मा कुलशेखरोऽसौ ।
महीपतिर्माघपुनर्वसुभे
दिने हरेः पूर्णकटाक्षलक्ष्यः ॥

१९. कुम्भे पुनर्वसुजातं केरले कोलिपट्टणे ।
कौस्तुभांशं धराधीशं कुलशेखरमाश्रये ॥

२०. दृढव्रतो धराधीशं पुत्रं दृष्ट्वाऽतिसुन्दरम् ।
ब्राह्मणेभ्योऽतिसन्तुष्टो वसुधान्यादिकं बहु ॥

२१. प्रददौ ह्याश्रितेभ्यश्च कृतकौतुकमङ्गलः ।
चकार नामकरणं पुत्रस्यामिततेजसः ॥

२२. कुलस्य शेखरो यस्मात्कुलशेखर इत्ययम् ।
दृढव्रतो महातेजाः चकार कुलभूषणः ॥

---

திற்கு இலக்காயிருப்பவராய், சேரகுலத்திற்கு அணிவிளக்காயிருப்பவராய், அரசரான இந்தக் குலஶேக₂ரர் ஸ்ரீகௌஸ்துப₄த்தின் அம்ஶமாக அவதரித்தார்." "மாசி மாதத்தில் புனர்வஸு நக்ஷத்ரத்தில் கேரளத்தில் கோழிக் கோட்டில் கௌஸ்துப₄ாமஶமாக அவதரிததவராய், அரசரான குலஶேக₂ரரை ஆஶ்ரயிக்கிறேன்" த்₃ருட₄வ்ரதராஜா மிகவழகிய புத்திரன் உலகை ஆள்வதற்காகப் பிறநதிருப் பதைப் பார்த்து மிகவுகந்தவராய், மஙகளகாரிடஙகளைச் செய்து அந்தணர்களுக்கும அடியார்களுக்கும் பணம் த₄ாந்யம் முதலானவற்றை மிகுதியாகக் கொடுத்தார். அளவற்ற ஒளியையுடைய அப்புத்திரனுக்கு 'இவன் நமது குலத்தை விளங்கவைக்கப் போகிறுனகையாலே குலஶேக₂ரன் என்று பெயர் பெறட்டும' என்றெண்ணி, சேரகுலத்திற்கு ஆப₄ரணமாய் மஹாதேஜஸ்வியான த்₃ருட₄வ்ரதர் குலஶேக₂ரன் என்று திருநாமமிட்டார்.

२३. चौलादिसर्वसंस्कारान् यथाकालं यथाविधि ।
संप्राप्य सर्वशास्त्राणि धनुर्वेदं च बुद्धिमान् ॥

२४. जग्राहाखिलविद्याश्च साक्षिमात्राद्गुरोर्मुखात् ।
शासनात्स पितुः श्रीमान् तेन राज्ये प्रतिष्ठितः ॥

२५. शशास पृथिवीं सर्वां स श्रीरामो यथा पुरा ।
चतुरङ्गबलोपेतो राजा धर्मपरायणः ॥

२६. कुलशेखरभूपालो ह्यजयत्सकला दिशः ।
रिपवः कान्दिशीकास्ते सर्वे भूपाः पलायिताः ॥

---

## ஸம்ஸ்காரங்களும் அரசாட்சியும்

23-*35 சௌளம் உபநயனம் முதலான எல்லா ஸம்ஸ்காரங்களையும் அந்தந்தக்காலங்களில் முறைப்படி பெற்று, எல்லா ஶாஸ்த்ரங்களையும் எல்லாக் கலைகளையும் த₄னுர்வேத₃த்தையும் அறிவாளியான குலஶேக₂ரர் ஆசார்யருடைய உபதே₃ஶத்திறல் ஆசார்ய ஸந்நிதி₄ மாத்ரத்தாலேயே கற்றார். தந்தையின் ஆணையாலே எல்லாச் செல்வங்களும் நிறைந்த குலசேகரர் தந்தையாலே ராஜ்யத்தில் அரசராக முடிசூட்டப்பெற்றார். ஸ்ரீராம பிரான் முற்காலத்தில் அரசாண்டதுபோலே இவரும் பூ₄மி முழுவதையும் ஆண்டார். தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை என்னும் நால்வகைச் சேனைகளையும் உடையவராய், த₄ர்மத்தில் ஈடுபட்டவராய், குடிகளை உகப்பிப்பவராய், குலஶேக₂ரராகிற அரசர் எல்லாத் திக்குக்களிலும் உள்ள அனைத்தரசுகளையும் வென்றார். அவருக்கு எதிரிகளாயிருந்த எல்லா அரசர்களும் அவரிடம தோற்று, திசை தெரியாமல் தடுமாறி ஓடினர். ராஜ்யம் முழுவதையும் எதிரிகளற்றதாக்கித் தன்வசத்தில்

२७. स्ववशे स्थापयामास राज्यं निहतकण्टकम् ।
रामराज्ये प्रजास्सर्वाः यथा मुमुदिरे पुरा ॥

२८. कुलशेखरराज्ये च तथा मुमुदिरे प्रजाः ।
दृढव्रतो महाराजः स्वपुत्रस्य महौजसः ॥

२९. विलोक्य विस्मितोऽत्यन्तं प्रभावमतिमानुषम् ।
सन्तुष्टस्सकलं राज्यं पुत्रे निक्षिप्य सत्वरम् ॥

३०. कृतकृत्यस्तु राजर्षिः तपोवनमुपागतः ।
ततस्स राजा धर्मेण तथा राज्यमरक्षत ॥

३१. यथा बलवता लोके बलहीनो न हन्यते ।
गोसहस्रप्रदानानि श्रीराम इव सादरम् ॥

३२. ब्राह्मणेभ्यो ददौ राजा महादानानि षोडश ।
स्वतन्त्रो दानशीलश्च नियन्ता कुलशेखरः ॥

---

அவர் நிலைநிறுத்தினர். த்ரேதாயுக$_3$த்தில் ராமராஜ்யத்தில் ப்ரஜைகள் எப்படி ஆநந்தத்துடன் இருந்தனரோ, அப்படியே குலசேகரருடைய ராஜ்யத்திலும குடிகள் ஆனந்தத்துடன் இருந்தனர். ராஜரிஷியாய் மஹாராஜரான த்$_3$ருட$_4$வ்ரதரும மஹாதேஜஸ்வியான தன் பிள்ளையினுடைய பெருமை அதிமாநுஷமாயிருப்பதைக் கண்டு மிகவும் வியப்புற்று, மிகவுகந்தவராய், விரைவிலேயே தம் ராஜ்யத்தை அவருக்கு அதீ$_4$னமாக்கி, தம் கடமை நிறைவேறப் பெற்றவராய்த் தவத்தின் பொருட்டுக் காட்டுக்குச் சென்றார். அரசரான குலசே$_2$கரரும சிறியதைப் பெரியது நலியாதபடி பார்த்துக்கொண்டு அறவழியிலே அரசாண்டுவந்தார். ஸ்ரீராமனைப்போலே ஆயிரக்கணக்கான பசுக்களையும், பதினாறு வகைப்பட்ட மஹாதா$_3$னங்களையும் குலசே$_2$கரர் அன்போடு அந்தணர்களுக்கு அளித்து வந்தார். எவர்க்கும் வசப்படாதவராய், தா$_3$னம் செய்வதையே இயல்பாக

३३. शशास राज्यं धर्मेण ख्यातिलोभपरो महान् ।
विभूतिद्वयनिर्वाही भगवान् करुणार्णवः ॥

३४. निर्हेतुककृपावेशात्तस्मै राज्ञे ददौ तदा ।
निरस्ततामसरजोगुणसत्त्वैकनिष्ठकम् ॥

३५. तदीयशेषपर्यन्तं सम्यग्ज्ञानमनुपमम् ।
विज्ञापितोऽथ हरिणा सैन्येशो भुवमेत्य सः ॥

३६. तस्मै नृपाय कृपया पञ्चसंस्कारपूर्वकम् ।
सर्वार्थांश्चोपदिश्याशु यावतीस्तत्त्वसंपदः ॥

---

வுடையவராய், அனைவரையும் நியமிப்பவராய், புகழில் ஆசையைக் கடந்து நிற்பவராய், பெரியவரான குலசேக₂ரர் ராஜத₄ர்மப்படி அரசாண்டார். உப₄யவிபூ₄திகளையும் நிர்வஹிப்பவனாய், கருணைக்கடலான எம்பெருமான் தனது நிர்ஹேதுக கிருபையினாலே ரஜஸ்தமோ கு₃ணங்களற்ற ஸத்வகு₃ணம் ஒன்றிலேயே நிலைநிற்பதான நிஷ்டை₂யையும், தனக்காட்பட்டிருப்பதோடு நில்லாமல் தன்னடியார்களுக்கும் ஆட்பட்டிருக்கைக்கு உறுப்பான ஒப்பற்ற அறிவையும் குலசேக₂ரருக்கு அப்போதே அருளினான்.

## பஞ்சஸம்ஸ்காரமும் மயர்வறமதிநலமருளப் பெறுகையும்

*35*-*40. எம்பெருமானால நியமிககப்பெற்ற விஷ்வக்ஸேநர் பூமிக்குவந்து அரசரான குலசேக₂ரருக்குக் கருணையோடு பஞ்சஸமஸ்காரம் செய்து தத்வ விஷயத்திலும் ரஹஸ்ய விஷயத்திலும் அறியவேண்டிய அர்த்த₂ங்களையெல்லாம் உபதே₃ஶித்து அவரால் ஆராதி₄க்கப்பெற்று அப்போதே வைகுண்ட₂த்திற்கு வந்து சேர்ந்தார். அவருடைய அநுக்₃ரஹததாலே பரமப₄க்தியையடைந்தவராய்

३७. वैकुण्ठनगरं प्राप्तस्तेन संपूजितस्तदा ।
तत्कृपालब्धसद्भक्तिः ज्ञानवैराग्यसागरः ॥

३८. आसीत्परमधर्मज्ञः स राजा कुलशेखरः ।
सम्यक् श्रीभगवद्रूपं तद्गुणास्तद्विभूतयः ॥

३९. सर्वं प्रकाशयामास वेदान्तिन्! तस्य भूपतेः ।
सञ्जाता महती प्रज्ञा संसारार्णवतारिणी ॥

४०. कुलशेखरदेवस्य तदा तस्य ततोऽनघ! ।
अकृत्यकरणादावप्यत्यन्तोद्भटवृत्तकः ॥

४१. यथाग्निज्वालिकामध्ये संप्रविश्य च वर्तनम् ।
अर्थकामाभिभूतोऽयं उन्मत्त इव वर्तते ॥

---

ஜ்ஞான வைராக்₃யங்களுக்குக் கடலாயிருப்பவராய், எம்பெருமானே பரமத₄ர்மம் என்பதை அறிந்தவரானுர் அரசரான அக்குலஶேக₂ரர். வேதாந்தியே! எம்பெருமானுடைய ஸ்வரூபரூபங்கள் கு₃ணங்கள் விபூ₄திகள் ஆகிய அனைத்தையும் அவ்வரசருக்கு விஷ்வக்ஸேநர் வெளிப்படுத்திஞர். குற்றமற்றவரே! அந்தக் குலஶேகரப்பெருமாளுக்கு அப்போது ஸம்ஸாரக் கடலைத் தாண்டுவிக்கும்படியான மயர்வற்ற பேரறிவு அதனுலேயே உண்டாயிற்று.

## வைராக்₃யமும் ராமப்ராவண்யமும்

40*-50 வேத₃ாந்தியே! "இவ்வுலகிலுள்ள ஸம்ஸாரி ஜீவன் செய்யத்தகாததைச் செய்வது, செய்ய வேண்டியதைச் செய்யாமலிருப்பது முதலான பாபங்களில் மிகவும் தன்னிச்சையாகத திரிபவனுய், அக்னிஜவாலையின் நடுவிலே நுழைந்திருப்பவன் போன்றவனுய், அர்த்த₂ காமங்களால் ஆட்கொள்ளப்பட்டுப் பைத்தியம் பிடித்தவ

४२. भगवद्विमुखैरेतैः शब्दादिविषयातुरैः ।
देहाभिमाननिरतैः नित्यसंसारिभिस्सह ॥
४३. तन्मध्ये वर्तनं मेऽद्य ध्रुवं कारागृहे यथा ।
राज्यं विधाय तज्जातं सुखं संभोगरूपकम् ॥
४४. यथाग्निज्वालिकामध्ये संप्रविश्यात्मवर्तनम् ।
अतस्संसारिभिस्सार्धं सहवासोऽतिदुस्सहः ॥
४५. भगवद्दासभूतस्य तत्कैङ्कर्यरतस्य मे ।
एवं निश्चित्य वेदान्तिन्! महात्मा कुलशेखरः ॥
४६. देहानुबन्धिनां तेषां साङ्गत्यं स विसृज्य तत् ।
राज्यं भगवदायत्तं तत्कैङ்कर्योपयोगि च ॥

---

னைப்போலே வாழ்கிறன். எம்பெருமானிடம் ஈடுபாடு இல்லாதவர்களாய், ஶப்₃த₃ாதி₃ விஷயங்களிலேயே மிகவும் ஈடுபட்டவர்களாய், தே₃ஹத்தையே ஆத்மாவாக நினைப்பதில் நிலைநிற்பவர்களான இத்தகைய நித்ய ஸம்ஸாரிகளோடுகூட அவர்களுக்கு நடுவே இன்று நான் வாழ்வது உண்மையில் சிறையில் வாழ்வதுபோலவேயுள்ளது. அரசாட்சி செலுத்திக்கொண்டு அதனல் உண்டாகும் ராஜபோ₄க₃ரூபமான இன்பத்தையடைந்து ஒருவன் வாழ்வது நெருப்பின நடுவில் வாழ்வது போன்றதாகும். ஆகையால் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவனும அவனுக்குக் கைங்கர்யம் செய்வதில் ஈடுபட்டவனுமான எனக்கு ஸம்ஸாரிகளோடு கூடிவாழ்வது மிகவும பொறுக்க வொண்ணுதது" என்று இவ்வண்ணமாக உறுதிபூண்டு மஹாத்மாவான குலஶேக₂ரர் தே₃ஹஸம்ப₃ந்த₄முடைய ஸம்ஸாரிகளோடு உறவைக் கைவிட்டு ராஜ்யத்தை எம்பெருமானுக்கு உரிய

४७. कृत्वा भागवताधीनं श्रीरामं शरणं गतः ।
परित्यक्ता मया लङ्का मित्राणि च धनानि च ॥
भवद्गतं मे राज्यं च जीवितं च सुखानि च

४८. क्षेत्राणि मित्राणि धनानि नाथ!
पुत्राश्च दाराः पशवो गृहाणि ।
त्वत्पादपद्मप्रवणानुवृत्तेः
भवन्ति सर्वे प्रतिकूलरूपाः ॥

४९. इत्युक्त्वा राक्षसश्रेष्ठो वेदान्तिन्! स विभीषणः ।
त्यक्त्वा पुत्रांश्च दारांश्च राघवं शरणं गतः ॥

५०. हरेरर्चावताराणां भक्तिः श्रीवेङ्कटेश्वरे ।
श्रीरामे विभवानां तु कुलशेखरभूपतेः ॥

---

தாகவும் அவனுடைய கைங்கர்யத்திற்கு உறுப்பானதாக வும பா₄க₃வதர்களுக்கு வஶப்பட்டதாகவும் செய்து, ஸ்ரீராமபிரானை ஶரணமடைந்தார். "வேதா₃ந்தியே! என்னால் இலங்கையும் நண்பர்களும செல்வங்களும் கைவிடபபட்டன. எனது அரசும் வாழ்வும இன்பங் களும தேவரீரிடமே அடங்கியுள்ளன" "நாத₂னே! வயல களும் நண்பர்களும் செல்வங்களும் மக்களும் மனைவியும் பஶுக்களும் வீடுகளும் ஆகிய அனைத்தும் உனது திருவடித் தாமரையில் ஈடுபட்டவனுக்கு எதிர்த்தட்டானவையாகவே தோன்றுகின்றன" என்று சொல்லி அரக்கர் தலைவனான விபீ₄ஷணன மக்களையும் மனைவியையும்விட்டு ராமனை ஶரணமடைந்தான. அத்தகைய ப₄க்தியை எம்பெருமா னின் அர்ச்சாவதாரங்களில் திருவேங்கடமுடையானிடமும விப₄வாவதாரங்களில் ஸ்ரீ ராமனிடமும் கொண்டிருந்தார் அரசரான குலஶேக₂ரர்.

५१. कैङ्कर्यप्रार्थनां चक्रे वेदान्तिन्! कुलशेखरः।
सोपानभूतः स्थित्वाहं वेङ्कटेश! त्वदालये ॥
५२. संप्रेक्ष्य त्वन्मुखाम्भोजं प्रवालसदृशाधरम्।
ततः श्रीरङ्गमाहात्म्यमशृणोत् कुलशेखरः ॥
५३. श्रीरङ्गयात्रा श्रीरङ्गयियासा चैव नारद!।
उत्तारयति संसारान्नित्यवासस्तु किं पुनः ॥
५४. एवं श्रीरङ्गमाहात्म्ये यो ह्यर्थः प्रतिपादितः।
तमर्थमञ्जसादाय हृदि भागवतोत्तमः ॥
५५. अचिन्तयत्तदा प्राज्ञो भगवान् कुलशेखरः।
नश्वराः प्राकृता भोगाः पुत्रवित्तकुलानि च॥

---

## அர்ச்சாவதாரத்தில் ஈடுபாடு

51-*58. வேதாந்தியே! "நெடியானே! வேங்கடவா! நின் கோயிலின் வாசல்...படியாய்க்கிடந்து உன் பவளவாய்க் காண்பேனே" [திருவேங்கடமுடையானே! உன் கோயிலின் வாசலில் படியாய்க்கிடந்து உன் திருமுகத்தாமரையையும், பவளம்போன்ற திருவதரத்தையும் கண்டு களிக்கக கடவேன்] என்று திருவேங்கடமுடையானிடம கைங்கர்ய ப்ரார்த்தனையைச் செய்தார் குலசேகரர். அதற்குப்பிறகு குலசேகரர் ஸ்ரீரங்க மாஹாத்ம்யத்தைக் கேட்டார். "நாரதரே! ஸ்ரீரங்கத்திற்கு யாத்திரை செய்வதும், ஸ்ரீரங்கத்திற்கு யாத்திரை செய்யவேண்டுமென்று நினைப்பதும் ஸம்ஸாரத்திலிருந்து மனிதனைக் கரையேற்றிவிடும. ஸ்ரீரங்கத்திலேயே எப்போதும் வாழ்வதைப்பற்றிச் சொல்லவும் வேணுமோ?" என்று ஸ்ரீரங்கமாஹாத்ம்யத்திலே சொல்லப்பட்ட அர்த்தத்தைப் பேரறிவாளராய், பூஜிககத்தக்கவராய், பாகவதோத்தமரான குலசேகரர்

५६. श्रीरङ्गे रङ्गराजस्य सेवा नित्यसुखप्रदा ।
नित्यवासस्तु कर्तव्यः तद्देशे सर्वथा मया ॥

५७. ततो महात्मा वेदान्तिन्! कुलशेखरभूपतिः ।
रङ्गयात्रापरवशो घोषयामास पट्टणे ॥

५८. श्रीरङ्गयात्रा श्रीरङ्गयात्रेति सुमहारवम् ।
अमन्त्रयंस्तदा सम्यक् श्रुत्वा तन्मन्त्रिणोऽञ्जसा ॥

५९. रङ्गयात्रापरवशो रङ्गं यदि स गच्छति ।
भूयः स्वकीयनगरं नायाति किल निश्चयम् ॥

---

மனத்தில் உறுதியாகக்கொண்டு அப்போது பின்வருமாறு சிந்திக்கலுற்ருர்:—“இந்த ப்ரக்ருதி மண்டலத்திலுள்ள பிள்ளை, பணம், குலம் முதலான போ₄க₃ங்கள் அழியக்கூடியவை. ஸ்ரீரங்கத்தில் ரங்கராஜருடைய ஸேவை எப்போதும் இன்பத்தைத் தருவது. ஆகையால் அந்தத் திருப்பதியில் என்ஞல் எப்படியாவது நித்யவாஸம் செய்யபபட வேண்டும்” என்று. வேதாந்தியே! மஹாத்மாவான குலஶேக₂ரராஜா இப்படிச் சிந்தித்தபின்பு ஸ்ரீரங்க₃யாத்ரையில் மிகவும் ஈடுபட்டவராய் “ஸ்ரீரங்க₃யாதரை, ஸ்ரீரங்கயாத்ரை” என்னும் பேரொலியைத் தம் நகரில் முழங்கச் செயதார்.

## மந்திரிகளின் தந்திரச் செயல்

58*-70. இந்தபபேரொலியைக் கேட்டு மந்திரிகள் அப்போதே ஒன்றுகூடி நன்கு ஆலோசித்தனர். “ரங்கயாத்ரையில ஈடுபட்டவராய் நமது அரசர் ஸ்ரீரங்கத்துக்குச் சென்றுவிட்டாரென்ருல் மறுபடியும் நம்முடைய நகருக்குத் திரும்பிவரமாட்டாரென்பது நிச்சயம். கிரீடம, தோளவளை, பொற்குண்டலம், பவளமாலை, முத்துமாலை, பொனனுபர

६०. किरीटकेयूरसुवर्णकुण्डल-
प्रवालमुक्तावलिहेमभूषणम् ।
विशालवक्षःस्थलहेमकौस्तुभं
श्रिया च देव्याऽध्युषितोरुवक्षसम् ॥

६१. प्रशस्तचामीकरचारुवाससं
समेखलं नूपुरशोभिताङ्घ्रिकम् ।
सुवर्धनीजातमृणालकोमलं
दधानमच्छच्छवियज्ञसूत्रकम् ॥

६२. भुजोपधानं प्रसृतान्यहस्तं
निकुञ्चितोत्सारितपादयुग्मम् ।
सुदीर्घमुद्बाहुमुदग्रवेषं
भुजङ्गतल्पं पुरुषं महान्तम् ॥

---

ணங்கள் ஆகியவற்றை உடையவனும், பரந்த மார்பில பொனனில்பதித்த கௌஸ்துப, மணியையுடையவனும், ஸ்ரீதேவி வாழும் பெரிய மார்பை உடையவனும், மிகச் சிறந்த அழகிய பொன்னுடையையுடையவனும், மேகலையோடு கூடியவனும், சிலம்பினுலே அலங்கரிக்கப் பெற்ற திருவடிகளையுடையவனும், ஆகாஶ கங்கையி லிருந்து உண்டான தாமரைத்தண்டுபோல் அழகியதாய் ஒளிமிக்கதான யஜ்ஞோபவீதத்தையுடையவனும், வலத் திருக்கையைத் தலைக்கு அணையாகக் கொண்டவனும், இடத்திருக்கையை நீட்டிக் கொண்டிருப்பவனும், நனகு நீட்டிய இருதிருவடிகளையும் உடையவனும, நீண்ட திரு மேனியை உடையவனும், சிறந்த திருக்கைகளை உடைய வனும, அழகிய திருக்கோலத்தையுடையவனும், ஆதி, ஶேஷ ஶயனத்தில் படுததிருப்பவனும், மஹாபுருஷனும்,

६३. ब्रह्मादिवन्द्यं भगवन्तमाद्यं
वेदान्तवेद्यं भुवि रङ्गनाथम् ।
विलोक्य नेत्रैः कमनीयगात्रं
को वा समर्थो हि निवर्तने स्यात् ॥

६४. विशेषतः सत्कुलशेखरोऽयं
महानुभावो भगवत्पराग्र्यः ।
अपश्यदाद्यं यदि रङ्गनाथं
करोति तत्रैवहि नित्यवासम् ॥

६५. तस्य विघ्नो हि कर्तव्यः तस्मादद्यैव सत्वरम् ।
इति निश्चित्य ते सर्वे सम्यगानाय्य वैष्णवान् ॥

६६. प्रणिपत्य शुभं वाक्यमिदमूचुर्महौजसः ।
श्रीरङ्गयात्रामुद्दिश्य प्रत्यूषे कुलशेखरः ॥

---

பிரமன் முதலானவர்களால் வணங்கப்படுபவனும், ஆதி₃ தே₃வனும், வேதா₃ந்தங்களில் அறியப்படுபவனும், அழகிய திருமேனியையுடையவனுமான ஸ்ரீரங்க₃நாத₂னைக் கண்களால்கண்டு எவனால்தான் திரும்பிவர முடியும்? குறிப்பாக நற்குலத் தோன்றலான இம்மஹானுபாவர் ப₄க₃வத்₃ ப₄க்தர்களில் தலைசிறந்தவராகையாலே ஆதி₃புருஷனாகிற ரங்க₃நாத₂னை ஸேவித்தாராகில அங்கேயே நித்யவாஸம் செய்துவிடுவாரன்றோ. ஆகையால் அவர் ஸ்ரீரங்க₃யாத்ரை செல்ல முடியாதபடி இன்றே விரைவாக நாம் தடை செய்ய வேண்டும்" என்று அவர்களனைவரும் நன்கு நிச்சயம் செய்து, மஹாதேஜஸ்விகளான வைஷ்ணவர்களை அழைத்துவரச்செய்து அவர்களை வணங்கி "வைஷ்ணவர்களே! அரசரான குலஶேக₂ரர் நாளை விடியற்காலையில் ஸ்ரீரங்க₃யாத்ரையைக் குறித்து எவராலும் தடைசெய்ய

६७. अनिवार्यगतिस्तस्मात्स गच्छति किलाधुना ।
श्रीरङ्गराजसेवार्थं श्रीरङ्गं यदि गच्छति ॥

६८ स्वकीयनगरं राजा भूयो नायाति निश्चयम् ।
समर्था यूयमेवास्य मनसो विनिवर्तने ॥

६९. शृणोत्येव स तद्वाक्यं युष्माकं नात्र संशयः ।
येन केन प्रकारेण तं निवर्त्याऽद्य भूपतिम् ॥

७०. तस्मात् श्रीरङ्गगमनात् वैष्णवाः कुलशेखरम् ।
संरक्षताखिलजन त्वदधीनं तमीदृशम् ॥

७१. अङ्गीकृत्य वचस्तेषाममात्यानां महात्मकाः ।
तथैव चक्रुर्वेदान्तिन्! सहसा वैष्णवोत्तमाः ॥

---

முடியாதபடி உடனடியாகச் செல்லவிருக்கிறார். ஸ்ரீரங்க₃ ராஜனை ஸேவிப்பதற்காக ஸ்ரீரங்க₃த்தைச் சென்றடைந்து விட்டாராகில் தமது நகருக்கு அவர் மறுபடியும் திரும்பி வரமாட்டாரென்பது நிச்சயம். அவருடைய மனத்தை மாற்றுவதற்கு நீங்களே வல்லவர்கள். அத்தகைய வாக யத்தை நீங்கள் சொன்னால் அவஶ்யம் அவர் அதைக் கேட்பார் என்பதில் ஐயமில்லை. ஆகையால் ஏதாவதொரு வழியில அந்தக குலஶேக₂ரரை ஸ்ரீரங்கம செல்லாதபடி இப்போது மனதை மாற்றி உங்களையே எதிர்பார்த்திருக் கும இத்தகைய எலலா ஜநங்களையும் காப்பாற்றுவீர்களாக" என்று மங்களமான வார்த்தையைச் சொன்னார்கள.

## ததீ₃யாராத₄ன வைப₄வம்

71-87. வேதா₃ந்தியே! அந்த மந்திரிகளுடைய வார்த்தையை ஏற்றுக்கொணடு மஹாத்மாக்களான வைஷ் ணவர்கள் உடனே அப்படியே செய்தனர். 'ஸ்ரீரங்கயாத்ரை ஸ்ரீரங்கயாத்ரை' என்று மிகுந்த ப₄க்தியுடன் பேரொலி

७२. श्रीरङ्गयात्रा श्रीरङ्गयात्रेत्यत्यन्तभक्तितः ।
रवेण महता तस्य वदतो गच्छतोऽञ्जसा ॥

७३. तदाभिमुखमायाताः राजर्षेर्वैष्णवोत्तमाः ॥
तान् विलोक्य महाभक्त्या सन्तुष्टोऽर्व्यां प्रणम्य च ॥

७४. पूजनाद्विष्णुभक्तानां पुरुषार्थोऽस्ति नेतरः ।
तेषु तद्द्वेषतः किञ्चिन्नास्ति नाशनमात्मनः ।

७५. षष्टिवर्षसहस्राणि विष्णोराराधने फलम् ।
सकृद्वैष्णवपूजायाः कलां नार्हति षोडशीम् ॥

७६. एवं हृदि निधायार्थं तमिमं शास्त्रवित्तमाः ।
निवर्तयित्वा योगेन श्रीरङ्गगमने मतिम् ॥

७७. तान् वैष्णवान् समादाय राजा भागवतप्रियः ।
स्वपुरं संप्रविश्याशु तान् भक्त्या समपूजयत् ॥

---

யுடன் சொல்லிக்கொண்டு அழகாகப் புறப்பட்டுச் செல்லும் அந்த ராஜரிஷியான குலஶேகரருக்கு முன்னால் அந்த வைஷ்ணவோத்தமர்கள் அப்போதே வந்தார்கள். அவர்களைப் பார்த்து உகந்து பெருங்காதலுடன் பூமியில் விழுந்து வணங்கி "விஷ்ணு பக்தர்களை ஆராதிப்பதைக் காட்டிலும் சிறந்த புருஷார்த்தம் வேறு இல்லை. பாபங்களுள் விஷ்ணுபக்தர்களை த்வேஷிப்பதைக் காட்டிலும் ஆத்மநாஶத்தை விளைக்கக்கூடியது வேறில்லை. அறுபதினாயிரம் வருஷங்கள் விஷ்ணுவை ஆராதிப்பதனால் வரும் பலமானது ஒருமுறை ஒரு வைஷ்ணவனை ஆராதிப்பதனால் வரும் பலனில் பதினாறில் ஒரு பங்குக்கு ஒப்பாகாது"-என்னும் இந்த ஶாஸ்த்ரார்த்தத்தை ஶாஸ்த்ரங்களை அறிந்தவர்களில் தலைசிறந்தவராய், பாகவதபக்தியுடையவரான அந்தக் குலஶேகரர் நெஞ்சிற்கொண்டு, பாகவதர்களோடு சேர்த்தி ஏற்பட்டபடியாலே ஸ்ரீரங்கம்

௭௮. तेषामाराधनार्थाय तदेव श्लाघ्यमुत्तमम् ।
सुवर्णसदृशं सूपमतिधावल्यतण्डुलम् ॥

௭௯. दध्याज्यगुडमाषादिनिखिलं वस्तु पुष्कलम् ।
यावत्प्रमाणं यत्तस्मात् द्विगुणं त्रिगुणाधिकम् ॥

௮௦. प्रददौ भक्तिभावेन प्रार्थनापूर्वकं स्वयम् ।
विष्ण्वाराधनपर्यन्तं तत्कैङ्कर्यरतोऽभवत् ॥

௮௧. कृताञ्जलिर्निराहारः तस्थौ तद्भोजनावधि ।
श्रीपादतीर्थं स्वीकृत्य पश्चात्परमपावनम् ॥

௮௨. पश्चात् तद्भुक्तशिष्टान्नं बुभुजे कुलशेखरः ।
ततः श्रीवैष्णवेभ्यश्च तेभ्यः परमहर्षितः ॥

---

செல்வதில் எண்ணத்தைக் கைவிட்டு அந்த வைஷ்ணவர்களை அழைத்துககொண்டு உடனே தமது நகரில் நுழைந்து அவர்களை அன்போடு ஆராதித்தார். அவர்களை ஆராதிப்பதற்காக மிகச்சிறந்ததாய் ஒப்பற்றதாய்ப் பொன்போல நிறமுடையதான நெகிழகறியமுதையும் (குழமபையும்), மிக வெண்மையான அரிசியையும, தயிர், நெய், வெல்லம, உளுந்து முதலான எல்லாப் பொருள்களையும் எவ்வளவு தேவையோ அதற்கு இரணடு அல்லது மூன்று பங்குக்கு மேலேயே பக்தியோடு பிரார்த்தித்துத தாமே நிறையக்கொடுத்தார். எம்பெருமானுக்குத் திருவாராதனம் நடக்குமவரையில அவர்களுக்குக் கைங்கர்யம செயவதில ஈடுபட்டிருந்தார். அவர்கள அமுது செய்து முடியும்வரையில் தாம உண்ணுமல அவர்களுக்கருகில் கைகூப்பி நின்ருர். அதற்குப்பிறகு அவர்களுடைய பரமபாவனமான ஸ்ரீபாததீர்த்தத்தை ஸ்வீகரித்துக் கொண்டு அதற்குப் பின் அவர்கள் உண்டு மிகுந்த

८३. पीताम्बरैरलङ्कृत्य कुण्डलादिविभूषणैः ।
श्रीचन्दनैः सुगन्धैश्च कुसुमैर्दिव्यवासितैः ॥

८४. ताम्बूलं रुचिरं सम्यगर्पयामास भूमिपः ।
ततः श्रीवैष्णवैस्सम्यक् तैश्चोक्तान् भगवद्गुणान् ॥

८५. भक्त्या परमया शृण्वन् तस्थावासायमादरात् ।
एवं दिने दिने राजा वेदान्तिन्! मन्त्रिचोदितैः ॥

८६. श्रीवैष्णवैस्संनिरुद्धरङ्गयात्रो बुधप्रियः ।
राज्यं चकार धर्मात्मा वैष्णवाधीनवृत्तिकः ॥

८७. ततः श्रीवैष्णवैस्साकं वेदवेदान्तपारगैः ।
सहवासपरस्तस्थौ निरन्तरमतन्द्रितः ॥

---

அன்னத்தைக் குலசேகரர் அமுதுசெய்தார். அதற்குப் பின் அந்த ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு மிகுந்த உகப்புடன் பீதாம்பரங்கள், குண்டலம் முதலான ஆபரணங்கள், ஸ்ரீசந்தனம் முதலான வாஸனைப் பொருள்களை, நறுமணம் மிக்க மலர்கள் ஆகியவற்றை அளித்து அவர்களை அலங் கரித்து இனிய தாம்பூலததையும் நன்கு அவர்களுககு ஸமர்ப்பித்தார் அவவரசர். அதற்குப் பிறகு அந்த ஸ்ரீவைஷ்ணவர்களால் உபதேசிக்கப்பட்ட பகவத் குணங்களை ஆர்வத்தோடும் அன்போடும் மாலைவரையில் கேட்டுக்கொண்டிருந்தார். வேதாந்தியே! இவ்வண்ண மாக மந்திரிகளால் தூண்டப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களால் ரங்கயாத்ரை செல்லாமல் தடைசெய்யப்பெற்றவராய்— ஜ்ஞானிகளிடம ஈடுபாடு கொண்டவராய், வைஷ்ணவர் களுக்கு வசப்பட்ட செயலையுடையவராய், தர்மாத்மாவான அவ்வரசர் அரசாட்சி புரிந்து வந்தார். அதற்குப்பின் வேதவேதாந்தங்களைக் கரைகண்ட ஸ்ரீவைஷ்ணவர் களோடு சோம்பலில்லாமல் எப்போதும் ஸஹவாஸம் செய்பவராய் வாழ்ந்தாரவர்.

८८. ततः श्रीवैष्णवाद्राजा भक्तिमान् कुलशेखरः ।
वेङ्कटाचलमाहात्म्यमशृणोत् भक्तिपूर्वकम् ॥

८९. एतादृशोऽर्थो वेदान्तिन्! महांस्तत्र समास्थितः ।
त्रैलोक्यविश्रुता पुण्या स्वामिपुष्करिणीतटे ॥

९०. गङ्गाद्यैस्सकलैस्तीर्थैः सा समा विमलोदका ।
तत्र देवर्षिगन्धर्वाः सिद्धाश्च परमर्षयः ॥

९१. वसन्ति नियताहाराः वेङ्कटाह्वयभूधरे ।
श्रुत्वार्थं तमिमं राजा वेदान्तिन्! कुलशेखरः ॥
स्तुतिं मुकुन्दमालाख्यं चक्रे लोकहितेच्छया ॥

---

## திருமலைப்பெருமைகேட்டு முகுந்தமாலை இயற்றுதல்

88—92. அதற்குப்பின் பக்தியுடைய அரசரான குலசேகரர், ஒரு ஸ்ரீவைஷ்ணவரிடமிருந்து வேங்கடாசல மாஹாத்ம்யத்தை பக்தியோடு கேட்டார். வேதாந்தியே! பின்வரும் பெரிய அர்த்தம் அந்த மாஹாத்ம்யத்தில் உள்ளது—"மூவுலகிலும் புகழ்பெற்றதாய், பாவனமானதாய், மங்களமானதான ஸ்வாமிபுஷ்கரிணி திருவேங்கடமலையில் உள்ளது. அது கங்கை முதலான எல்லாத் தீர்த்தங்களுக்கும் ஸமானமானதாகவும் பரிசுத்தமான நீரை உடையதாகவும் உள்ளது. அந்தத் திருவேங்கடமலையில தேவர்களும், ருஷிகளும், கந்தர்வர்களும, ஸித்தர்களும், ஆஹாரநியமமுடைய மஹரிஷிகளும் வாழ்கிறார்கள்." வேதாந்தியே! இவவாத்தத்தைக் கேட்டு உலகின் நன்மையை விரும்பி முகுந்தமாலை என்னும் எம்பெருமானைப் பற்றிய துதியை அருளிசசெய்தார் அரசரான குலசேகரர், இவ்வண்ணமாக மஹாத்மாவான குலசேகரர்

१२. एवं महात्मा कुलशेखराख्यो
रेजे तदा वैष्णवपारिजातः ।
अव्याहतश्रीर्हरिभक्तिधर्मः
प्रह्लादवत् विश्रुतदिव्यकीर्तिः ॥

इति प्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे कुलशेखरावतारवर्णनं
नाम पञ्चाशीतितमोऽध्यायः ॥

षडशीतितमोऽध्यायः ॥

१. ततो महात्मनस्तस्य लीलामानुषरूपिणः ।
बभूवैवं हि बुद्धिस्तु सर्वलोकैकशिक्षिका ॥

२. वेदवेद्यपरे पुंसि जाते दशरथात्मजे ।
वेदः प्राचेतसादासीत् साक्षाद्रामायणात्मना ॥

---

வைஷ்ணவர்களுக்குப் பாரிஜாதம்போல் அனைத்தையும் அளிப்பவராய், அழிவற்ற செலவத்தைவுடையவராய், ஹரி பக்தியையே தர்மமாகக் கொண்டவராய, ப்ரஹ்லாதனைப் போலே நல்லவர்களுக்கெல்லாம உபமானமாயிருக்கும் பெரும்புகழையுடையவராய் விளங்கினார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் பட்டார்ய வேதாந்தி ஸம்வாதத்தில்
குலசேகரரின் அவதாரத்தை வர்ணிக்கும்
எண்பத்தைந்தாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## எண்பத்தாறும் அத்தியாயம்

### குலசேகரரின் ராமப்ரத்யக்ஷம்

#### ஸ்ரீ ராமாயண ச்ரவணம்

1—5. எம்பெருமானுடைய லீலாரஸத்தின் பொருட்டு மனித உருவைத் தாங்கிககொண்டிருககும் மஹாத்மாவான குலசேகரருக்கு எல்லாவுலகிறகும் நல்லொழுக்கத்தைக்

३. वेदतुल्यमिदं साक्षात् श्रीमद्रामायणं परम् ।
अतो हि तस्य श्रवणं कर्तव्यं यावदायुषम् ॥

४. तदेव साधनं मुक्तेः तज्ज्ञतेऽन्यन्न विद्यते ।
एवं हृदि विनिश्चित्य श्रीरामे दृढभक्तिमान् ॥

५. श्रीमद्रामायणकथाश्रवणेनैव सन्ततम् ।
कालं संक्षिप्य तद्भक्त्या भगवान् कुलशेखरः ॥

६. आरण्यकाण्डे वेदान्तिन्! खरदूषणसङ्गरे ।
शुश्राव तमिमं श्लोकं भक्तिमान् कुलशेखरः ॥

---

கற்பிக்கும் இத்தகையதொரு எண்ணம் உண்டாயிற்று. "'வேதத்தால் அறியப்படும் பரமபுருஷன் தஶரத சக்ர வர்த்தித் திருக்குமாரனாக அவதரித்தவளவிலே, வேதமானது வால்மீகியினிடமிருந்து ஸாக்ஷாத் ராமாயணமாக அவதரித்தது' என்கிறபடியே இந்த ஸ்ரீமத்₃ ராமாயணம் நேரே வேத₃த்துக்கு ஸமானமானதாய், மேலானதாயிருக்கிறபடியால ஆயுள் உள்ளவரையில் அதை நாம் கேட்கவேண்டும். மோக்ஷஸாதனமாயிருப்பதும் அந்த ஸ்ரீமத₃ ராமாயணமே. அறியவேண்டியதனைத்தையும் அறிவிக்கும் நூல் அதையொழிய வேறில்லை." இவ்வண்ணமாக நெஞ்சில் உறுதிபூண்டு ஸ்ரீ ராமனிடத்தில் அசையாத அன்புடையவராய, குலசேகராழ்வார் ஸ்ரீராமப₄க்தியோடு ஸ்ரீமத் ராமாயண சரித்ரத்தை எப்போதும் கேட்பதிலேயே காலம் கழித்துக்கொண்டிருந்தார்.

## குலசேகரரின் பரிவு

6-10. வேதா₃ந்தி நஞ்ஜீயரே! ஸ்ரீ ராமாயணத்தில் ஆரண்ய காண்டத்தில க₂ரதூ₃ஷண யுத்₃த₄ ப்ரகரணத்தில் "பயங்கரமாகப் போர்புரியும பதினாலாயிரம் ராக்ஷஸர்

७. चतुर्दशसहस्राणि रक्षसां भीमकर्मणाम् ।
एकश्च रामो धर्मात्मा कथं युद्धं भविष्यति ॥

८. ऋषयोऽभ्यागमंस्तत्र द्रष्टुकामास्तमद्भुतम् ।
श्लोकार्थं तमिमं श्रुत्वा प्रेम्णा परवशस्तदा ॥

९. असहिष्णुस्ततोऽधर्मयुद्धं शीघ्रं स्खलद्गतिः ।
धनुर्बाणान् समादाय खड्गं चर्म च वीर्यवान् ॥

१०. चतुरङ्गबलोपेतो जनस्थानं कृतत्वरः ।
प्रतस्थे तत्क्षणे तस्य सहायार्थं हरिप्रियः ॥

११. अतिप्रवृत्तां यात्रां तां नृपतेस्तस्य मन्त्रिणः ।
विलोक्य विस्मयं गत्वा तस्य ते विनिवर्तने ॥

---

கள் ஒருபுறமும் த4ர்மாத்மாவான ராமன் ஒருவனுமே ஒரு புறமும் இருக்கும்போது, இந்த யுத்3த4ம் எப்படியாகுமோ என்னும் ப4யத்துடன் ஆஶ்சர்யமான அந்தப் போரைக் காண்பதற்காக ரிஷிகள் அங்கு வந்தார்கள்" என்னும் பொருளுள்ள ஶ்லோகத்தை ப4க்தியுள்ள குலசேகரர் கேட்டார். அந்த ஶ்லோகத்தின் பொருளைக் கேட்டவுடன் பேரன்பினாலே பொங்கும் பரிவுடையவராய், அந்த அத4ர்ம யுத்3த4த்தைப் பொறுக்கமாட்டாதவராய், வீர்யமுடையவராய், ஹரிப4க்தரான அந்தக்குலசேகரர் (கோபத்தாலே) தடுமாறிய நடையுடையவராய், அம்புகளுடன் கூடிய வில்லையும் உறையுடன்கூடிய கத்தியையும் விரைவில் எடுத்துக் கொண்டு 'யானை குதிரை தேரொடு காலாள்' எனப்படும் நால்வகைச் சேனையோடு கூடியவராய், அக்ஷணத்திலேயே ராமனுக்குத் துணையாக ஜநஸ்தா2னத்தை நோக்கிப் புறப்பட்டார்.

## மந்திரிகளின் சமயோசிதபு3த்3தி4.

11-*18. அவ்வரசருடைய உலகநடைக்கு மாறான யாத்திரையைக்கண்ட அவரது மந்திரிகள் மிகவும் வியப்புற்று

१२. सम्यगालोच्य मनसा समर्थान्वैष्णवांस्तदा ।
तस्य राज्ञो ह्यभिमुखं प्रेषयामासुरञ्जसा ॥

१३. ते तस्याभिमुखं गत्वा राजानमिदमब्रुवन् ।
चतुर्दशसहस्राणि रक्षसां भीमकर्मणाम् ॥

१४. अर्धाधिकमुहूर्तेन राघवेणैव सङ्गरे ।
तेन धर्मात्मनैकेन निहतानि नृपोत्तम! ॥

१५. तं दृष्ट्वा शत्रुहन्तारं महर्षीणां सुखावहम् ।
बभूव हृष्टा वैदेही भर्तारं परिषस्वजे ॥

१६. श्रीवैष्णवानां तद्वाक्यं सत्यं परमसंमतम् ।
निशम्य संप्रहृष्टोऽथ रामभक्तो नृपोत्तमः ॥

---

அவரைத் திருப்பிக்கொண்டு வருவதற்காக மனத்தில் நன்கு ஆலோசித்து வல்லவர்களான சில வைஷ்ணவர்களை அரசருககு எதிரே வரும்படியாக அனுபபினார்கள். அவர்களும் அவ்வரசனுக்கு எதிரேவந்து "அரசரே! பயங்கரமாகப் போர்புரியும் அந்தப் பதினாலாயிரம் ராக்ஷஸர்களும் தர்மாத்மாவான ராமனாலே ஒன்றரை முகூர்த்தத்திலேயே போரில அழிக்கப்பட்டார்கள், இப்படி எதிரிகளை அழித்தவனாய், மஹாஷிகளுக்கு ஆனந்தம் விளைத்தவனான கணவனைகண்டு வைதேஹி உயிர்தரித்தாள். உகப்பையும அடைந்தாள்; கணவனை ஆரத்தழுவினாள்" என்று கூறினார்கள். ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய உண்மையான மிகப் பொருத்தமான அந்த வாக்யத்தைக் கேட்டு மிகவும் உகந்த ராமபக்தரான அந்த அரசதலைவர் தம்முடைய திருவாபரணங்களனைத்தையும உகப்புடன் அவர்களுக்குப

१७. स्वभूषणानि सर्वाणि स तेभ्यः प्रददौ मुदा ।
सर्वानादाय सहसा वैष्णवान् कुलशेखरः ॥

१८. विवेश स्वपुरं राजा तन्निवृत्तमतिस्तदा ।
संप्रवक्ष्यामि ते भूयो वेदान्तिन्! महदद्भुतम् ॥

१९. श्रूयतां तस्य राजर्षेः चरित्रमतिपावनम् ।
असादृश्यं हि यद्भक्तिपारवश्यं महात्मनः ॥

२०. अवैष्णवमुखं क्वापि नेक्षते कुलशेखरः ।
श्रीवैष्णवमयं राज्यं सर्वं समभवत्ततः ॥

---

பரிசளித்தார். ஜநஸ்தானம் செல்லும் எண்ணத்தை அப்போதே கைவிட்டவராய், அரசரான குலசேகரர் அந்த வைஷ்ணவர்கள் அனைவரையும் அழைத்துக்கொண்டு தலைநகருக்குள் நுழைந்தார்.

## குலசேகரரின் ராமாயண பக்தி

18*-25. குற்றமற்ற வேதாந்தி நஞ்ஜீயரே! உமக்கு மறுபடியும் அந்த ராஜரிஷியுடைய அதிபாவனமாய் ஆச்சர்யமானதோர் வரலாற்றைச் சொல்லபபோகிறேன். அதைக்கேளும். அந்த மஹாத்மாவின் ப$_4$க்தியினாலுண்டான ஈடுபாடு உலகில் எவரிடமும் இல்லாததன்றோ. அக்குலசேகரர் அவைஷ்ணவர்கள் முகத்தையும் ஒருபோதும் காணமாட்டார். ஆகையாலே அவருடைய ராஜ்யம் முழுவதும் ஸ்ரீவைஷ்ணவமயமாயிருந்தது எல்லா வைஷ்ணவர்களோடு கூடியிருந்து மௌன வ்ரதத்தை அனுஷ்டிப்

२१. सर्वैः श्रीवैष्णवैस्साधं मौनव्रतपरायणः ।
नित्यं पौराणिकात् शृण्वन् तस्थौ रामायणं किल ॥

२२. आनन्दबाष्पनयनः पुलकाङ्कितविग्रहः ।
भक्त्या परमया युक्तो महात्मा कुलशेखरः ॥

२३. तद्भक्तिपारवश्यं च विदित्वा सुसमाहितः ।
दक्षः पौराणिकस्तत्र श्रीमद्रामायणेऽनघ! ॥

२४. राघवस्याजयस्थानं यद्यत्सर्वं विसृज्य तत् ।
सोत्कर्षमेव रामस्य प्रोवाच नृपतेः सदा ॥

२५. भक्त्या परमया युक्तस्तदेकहृदयोऽनिशम् ।
तत्राक्षेपादिरहितः शृण्वन् रामायणं स्थितः ॥

---

பவராய், ஆனந்தக் கண்ணீருடன் கூடியவராய், மயிர்க்கூச்செறியும திருமேனியையுடையவராய், மேலான பக்தியுடையவரான அந்த மஹாத்மாவான குலசேகரர் தினந்தோறும் பௌராணிகரிடமிருந்து ஸ்ரீ ராமாயணத்தைக் கேட்டுவந்தாரன்றோ. அந்தப் பௌராணிகரும அவருடைய பக்தியினாலுண்டான ஈடுபாட்டை அறிந்தவராய், மிகக கவனத்துடன் ஸ்ரீமத் ராமாயணத்தில் ராமனுக்குத் தோலவி உண்டாகக கூடுமோ என்று ஸந்தேஹம ஏற்படக்கூடிய இடங்களை மிக்க ஸாமர்த்யத்துடன விட்டுவிட்டு, ராமனுடைய வெற்றியையே வலியுறுத்தி அவ்வரசருககு எப்போதும கதைசொல்லிவந்தார. மேலான பக்தியுடன கூடியவராய் அக்கதையிலேயே நெஞ்சைச்செலுத்தி அதில் ஆக்ஷேபம் முதலானவற்றைச் செய்யாமல் தினந்தோறும ராமாயணத்தைக் கேட்டுவந்தார் குலசேகரர்.

२६. संप्रविष्टोऽन्यकार्येऽथ कदाचित्स पुरोहितः ।
तस्य रामायणं वक्तुं पुत्रं प्रेषितवान् किल ॥

२७. अजानानो ह्यभिप्रायं राज्ञः पौराणिकः परम् ।
तत्रोक्तरीत्या तां सर्वां कथामकथयत्तदा ॥

२८. आरण्यकाण्डे वेदान्तिन्! तत्रैव विद्यते किल ।
जहार रावणः सीतां बुधः खे रोहिणीमिव ॥

२९. श्रुत्वाऽसहिष्णुस्तद्वाक्यं सीताहरणजं तदा ।
कोपेन महता युक्तः पदाहत इवोरगः ॥

३०. सर्वेषां शृण्वतां राजा व्याजहार वचः शुभम् ।
तामसन्मातरं देवीं रामपत्नीं यशस्विनीम् ॥

---

## ஸீதாபஹாரத்தைக்கேட்டுக் கோபித்தல்

26—33 அந்தப் பௌராணிகர் ஒருசமயம் வேறு காரியம இருந்ததினல் தமது பிள்ளையை ராமாயணம் சொலல அனுப்பினர். அரசருடைய மனநிலையை அறியாத புதுப் பௌராணிகர் அப்போது ராமாயணத்தில் உள்ளபடியே கதைமுழுவதையும் சொல்லி வந்தார். வேதாந்தியே! ஆரண்யகாணடத்தில் ராவணன ஸீதையை அபஹரிக்கும் ப்ரகரணத்தில "ஆகாயத்தில் புதன் ரோஹிணீ நக்ஷத்திரத்தைக் கவர்வதுபோல் ராவணன் ஸீதையைக் கவர்ந்தான்" என்னும் வாகயம் காணபபடுகிறதன்றோ. ஸீதையை ராவணன கவரும் இந்த வாகயத்தைக கேட்டவுடன் காலால் மிதிக்கப்பட்ட பாமபுபோலே பெருங் கோபம்கொண்ட அரசர் அனைவரும் கேட்டுக்கொண்டிருக்கும் போதே பின்வரும் மங்களமான வார்த்தையைச் சொன்னர்-

३१. दुरामा रावणः पापः कथं हरति वा वत ।
अधुनैवाशु गत्वाहं लङ्घयित्वा महोदधिम् ॥
३२. भस्मीकृत्वा पुरीं लङ्कां हत्वा रावणमाहवे ।
सपुत्रदारं सामात्यं समित्रज्ञातिबान्धवम् ॥
३३. आनयिष्यामि तां सीतां मातरं मे यशस्विनीम् ।
इत्युक्त्वा सधनुर्बाणः खड्गमादाय सत्वरम् ॥
३४. लङ्कां प्रतस्थे वेदान्तिन्! राजा श्रीरामभक्तिमान् ।
प्रतस्थे पृष्ठतस्तस्य चतुरङ्गबलं महत् ॥
३५. तद्भक्तिपारवश्येन समुद्रमभिगच्छतः ।
न लक्षितस्तदा तस्य शक्तः कोपि निवारणे ॥

---

"ராமனுக்குப் பத்னியாய், கற்பில் மிக்கவள என்று புகழ பெற்றவளாய், என் தாயான ஸீதாதேவியை துராத்மாவும் பாவியுமான ராவணன் எப்படி அபஹரிக்க முடியும்? இன்றே நான் விரைவில் சென்று கடலைததாண்டி லங்கா புரியை எரித்து. மனைவி, மக்கள், மந்திரிகள, நண்பர்கள், உற்றூர், உறவினர் அனைவரோடும ராவணனைப் போரில் கொன்று புகழ்மிகக என் தாயான ஸீதாதேவியை அழைத்து வருகிறேன" என்று.

## படையோடு லங்கைக்குப் புறப்படுதல்

*33*-*40.* வேதாந்தியே! இவ்வண்ணமாகக் கூறி வில்லையும் அம்பையும், கத்தியையும விரைவில் எடுத்துக் கொண்டு ஸ்ரீ ராமபக்தி மிகுந்தவரான அவ்வரசர் இலங்கைக்குப் புறப்பட்டார். அவர் பின்னே ஆனைப் புரவித் தேரொடு காலாள் என்னும நாலுவகைப்பட்ட பெரியஸேனையும் புறப்பட்டது. அறிவாளியான வேதாந்தியே! ப்ரளய

३६- वेलातिक्रमणस्याब्धेर्वैदान्तिन्! प्रलये यथा ।
अतिदेवचरित्रस्य रामभक्तस्य भूपतेः ॥

३७. वर्णयामि कथं विद्वन्! चरितं यदनूपमम् ।
देवास्संद्रष्टुकामास्ते तद्भक्ति परमाद्भुताम् ॥

३८. आस्थितास्सहसा सर्वे विमानस्था नभःस्थले ।
ततो विवेश राजर्षिः स महोदधिमञ्जसा ॥

३९. चतुरङ्गबलं तस्य यथा राजा तथा प्रजाः ।
दिव्यन्तरिक्षे भूमौ च हाहाकारो महानभूत् ॥

४०. तद्द्रष्टुमागतानां च मानवानां दिवौकसाम् ।
ततो भक्तपराधीनः श्रीरामः करुणाम्बुधिः ॥

---

காலத்தில் கரைகடந்து செல்லும கடலை எவராலும தடுகக முடியாததுபோலே ப₄க்திவசப்பட்டுக் கடலை நோக்கிச் செலலும அவரைத் தடுக்கக்கூடியவர் எவரும் காணப்பட வில்லை. தே₃வர்களைக்காட்டிலும் சிறப்புற்ற நடத்தையை யுடையவராய், ராமப₄க்தரான அவ்வரசரின ஒப்பற்ற சரி தத்தை எப்படி வர்ணிப்பேன்? பேராஶ்சர்யத்தை விளக் கும அவருடைய ப₄கதியைக காண்பதற்காக தே₃வர்கள் அனைவரும் விமானத்தில் ஏறிக்கொண்டு ஆகாயத்தில் உடனே தோன்றினர்கள். அந்த ராஜரிஷியும் கடலினுள விரைவில் புகுந்தார். அவருடைய நால்வகைச் சேனையும் அரசரைப் பின்பற்றி அவ்வண்ணமே செயதது. அதைப் பார்க்கவந்த மனிதர்சள தேவர்களுடைய ஹாஹாகாரம ஆகாயமெஙகிலும பூமியிலும் உண்டாயிற்று.

## ஸ்ரீ ராமன் தோன்றி அருள்புரிதல்

*40*-*49.* அதற்குப்பின் ப₄க்தர்களுக்கு வசப்பட்டவ ஞய், கருணைக்கடலாய், லக்ஷ்மணனேடு கூடியவனை

४१. लक्ष्मणानुचरः सीतां हस्तेनादाय मैथिलीम् ।
प्रसन्नो नृपतेस्तस्य व्याजहार वचः शुभम् ॥

४२. कुलशेखर! सद्भक्त! मयि तिष्ठति पुत्रक! ।
किमर्थं भवतस्तात! महानेतादृशः श्रमः ॥

४३. समरे रावणं हत्वा सपुत्रज्ञातिबान्धवम् ।
सीतामादाय वैदेहीमधुनाहं समागतः ॥

४४. सैषा हि भवतो माता वैदेही पश्य पुत्रक! ।
इत्युक्त्वा राघवः श्रीमान् स्वभक्ताय महात्मने ॥

४५. तदा प्रदर्शयामास सीतां जनकनन्दिनीम् ।
रामं च लक्ष्मणं सीतां विलोक्य कुलशेखरः ॥

४६. सन्तुष्टः प्रणिपत्याथ तैस्सार्धं राघवादिभिः ।
वेलाधिरोहणं चक्रे कृतकृत्यः ससैनिकः ॥

---

ஸ்ரீ ராமன் மிதிலா ராஜகுமாரியான ஸீதையைக் கையால் பிடித்துக்கொண்டு அவ்வரசருக்கு முன் தோன்றி "பெருங் காதலுடைய குழந்தாய் குலசேகரா! நீ எதற்காக இப்படி சிரமப்படவேண்டும்? நண்பர் உற்றார் உறவினரோடு ராவணனைப் போரில்கொன்று, விதேஹ ராஜனுக்குப் பெண் ணுன ஸீதையை அழைத்துக்கொண்டு இப்போதே வந்தி ருக்கிறேன். உன்னுடைய தாயான வைதேஹி இதோ இருக்கிறுள் பார் குழந்தாய்!" என்னும் மங்களமான வார்த் தையைச் சொன்னுன். ஸ்ரீய:பதியான ராகவன் இவ் வண்ணம் சொல்லி மஹாத்மாவான தன் பக்தனுக்கு ஜனகனின் பெண்ணுன ஸீதையை அப்போதேகாட்டினுன். ராமனையும் லக்ஷ்மணனையும் ஸீதையையும் கண்டு குல சேகரர் காரியம் நிறைவேறிவிட்டபடியால் மிக உகந்தவராய் அவர்களை வணங்கி அவர்களோடும் ஸேனையோடும்கூடக்

३६. वेलातिक्रमणस्याब्धेर्वेदान्तिन्! प्रलये यथा ।
अतिदेवचरित्रस्य रामभक्तस्य भूपतेः ॥

३७. वर्णयामि कथं विद्वन्! चरितं यदनूपमम् ।
देवास्संद्रष्टुकामास्ते तद्भक्ति परमाद्भुताम् ॥

३८. आस्थितास्सहसा सर्वे विमानस्था नभःस्थले ।
ततो विवेश राजर्षिः स महोदधिमञ्जसा ॥

३९. चतुरङ्गबलं तस्य यथा राजा तथा प्रजाः ।
दिव्यन्तरिक्षे भूमौ च हाहाकारो महानभूत् ॥

४०. तद्द्रष्टुमागतानां च मानवानां दिवौकसाम् ।
ततो भक्तपराधीनः श्रीरामः करुणाम्बुधिः ॥

---

காலத்தில் கரைகடந்து செல்லும் கடலை எவராலும் தடுக்க முடியாததுபோலே ப₄க்திவசப்பட்டுக் கடலை நோக்கிச் செல்லும் அவரைத் தடுக்கக்கூடியவர் எவரும் காணப்பட வில்லை. தே₃வர்களைக்காட்டிலும் சிறப்புற்ற நடத்தையை யுடையவராய், ராமப₄க்தரான அவ்வரசரின் ஒப்பற்ற சரி தத்தை எப்படி வர்ணிப்பேன்? பேராஶ்சர்யத்தை விளைக் கும் அவருடைய ப₄க்தியைக் காண்பதற்காக தே₃வர்கள் அனைவரும் விமானத்தில் ஏறிக்கொண்டு ஆகாயத்தில் உடனே தோன்றினார்கள். அந்த ராஜரிஷியும் கடலினுள் விரைவில் புகுந்தார். அவருடைய நால்வகைச் சேனையும் அரசரைப் பின்பற்றி அவ்வண்ணமே செய்தது. அதைப் பார்க்கவந்த மனிதர்கள் தேவர்களுடைய ஹாஹாகாரம் ஆகாயமெங்கிலும் பூமியிலும் உண்டாயிற்று.

## ஸ்ரீ ராமன் தோன்றி அருள்புரிதல்

*40*-*49.* அதற்குப்பின் ப₄க்தர்களுக்கு வசப்பட்டவ னாய், கருணைக்கடலாய், லக்ஷ்மணனோடு கூடியவனான

௪௧. लक्ष्मणानुचरः सीतां हस्तेनादाय मैथिलीम् ।
प्रसन्नो नृपतेस्तस्य व्याजहार वचः शुभम् ॥

௪௨. कुलशेखर! सद्भक्त! मयि तिष्ठति पुत्रक! ।
किमर्थं भवतस्तात! महानेतादृशः श्रमः ॥

௪௩. समरे रावणं हत्वा सपुत्रज्ञातिबान्धवम् ।
सीतामादाय वैदेहीमधुनाहं समागतः ॥

௪௪. सैषा हि भवतो माता वैदेही पश्य पुत्रक! ।
इत्युक्त्वा राघवः श्रीमान् स्वभक्ताय महात्मने ॥

௪௫. तदा प्रदर्शयामास सीतां जनकनन्दिनीम् ।
रामं च लक्ष्मणं सीतां विलोक्य कुलशेखरः ॥

௪௬. सन्तुष्टः प्रणिपत्याथ तैस्सार्धं राघवादिभिः ।
वेलाधिरोहणं चक्रे कृतकृत्यः ससैनिकः ॥

---

ஸ்ரீ ராமன் மிதிலா ராஜகுமாரியான ஸீதையைக் கையால் பிடித்துககொண்டு அவ்வரசருககு முனனேதோன்றி "பெருங காதலுடைய குழந்தாய் குலசேகரா! நீ எதறகாக இப்படி சிரமப்படவேண்டுமா? நண்பர் உற்ருர் உறவினரோடு ராவணனைப போரில்கொனறு, விதேஹ ராஜனுக்குப் பெண்ணான ஸீதையை அழைத்துக்கொண்டு இப்போதே வந்திருக்கிறேன். உன்னுடைய தாயான வைதேஹி இதோ இருக்கிருள் பார் குழந்தாய்!" எனனும் மங்களமான வார்த்தையைச் சொன்னுன். ஸ்ரீயःபதியான ராகவன் இவ்வண்ணம் சொல்லி மஹாத்மாவான தன் பகதனுக்கு ஜனகனின் பெண்ணான ஸீதையை அப்போதேகாட்டினுன். ராமனையும் லக்ஷ்மணனையும் ஸீதையையும் கண்டு குலசேகரர் காரியம நிறைவேறிவிட்டபடியால் மிக உகந்தவராய அவர்களை வணங்கி அவர்களோடும் ஸேனையோடும்கூடக்

४७. कण्ठमात्रजलेनैव सिन्धौ गच्छन्तमञ्जसा ।
भक्त्या लङ्कां प्रति जवात् सीताऽऽनयनकारणात् ॥
४८. ताम्रचूडपुरस्तात्तु तं कृत्वाभिमुखं तदा ।
स भक्तिपारवश्येन ससैन्यं नृपपुङ्गवम् ॥
४९. सर्वेषां पश्यतां तत्र श्रीरामोऽन्तर्दधे हरिः ।
अदृष्ट्वा राघवं राजा दुःखितो विगतस्मृतिः ॥
५०. क्षणमात्रं ततो धीमान् नाबुध्यत तदाऽखिलम् ।
यथा धनं स्वप्नलब्धं अदृष्ट्वा बुद्धवान् जनः ॥
५१. ततो विबुध्य तत्सर्वं यत्सीताहरणादिकम् ।
सम्यक् रामायणे प्रोक्तं पौराणिकमुखात्तदा ॥
स्वस्थचित्तो नृपो धीमान् स्वपुरं प्रत्यपद्यत ॥

---

கரையேறினார். கடலில் கழுத்தளவு ஜலத்தில விரைவில் ஸீதையை அழைத்து வருவதற்காக லங்கையைக் குறித்து பக்தியினாலே ஸேனையோடு வேகமாகச் செல்கின்ற அவரைக் கோழிக்கோட்டை நோக்கி விரைவில திருப்புபவராக ஆக்கியபின் அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும போதே ஸ்ரீ ராமனாகிற எம்பெருமான் மறைந்தருளினான்.

## தலைநகருக்குத் திரும்புதல்

49* - 52. ராகவனைக் காணாது அரசர் மிக வருந்தி, சிறிது நேரம் நினைவிழந்தவராய், கனவில்கண்ட செல்வத்தை விழித்தவுடன் காணாதவனைப்போலே அப்போது எதையும் காணாதவரானார். அதற்குப்பின், இப்படி ராவணன் ஸீதையை அபஹரித்தது முதலானவையனைத்தும் பௌராணிகரால் ராமாயணத்திலிருந்து சொல்லப்பட்டவை என்று அப்போதே உணர்ந்து தேறிய நெஞ்சினராய்,

९२. अत्यद्भुताख्यानकथां सुपुण्यां शृण्वन्ति भक्त्या च पठन्ति ये वै।
ते पापसंघान्परिहृत्य शीघ्रं भवेयुरग्र्याः भुवि रामभक्ताः ॥
इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे श्रीकुलशेखरस्य
श्रीरामप्रत्यक्षं नाम षडशीतितमोऽध्यायः ॥

सप्ताशीतितमोऽध्यायः ॥

१. रामभक्तस्य राजर्षेः चरितं महदस्ति यत् ।
तत्सर्वं गदितुं समर्थो कः समर्थो महीतले ॥
२. तथापि शृणु वक्ष्यामि यत्किञ्चित्कृपया गुरोः ।
चित्रं तदीयभक्तस्य चरितं नृपतेर्महत् ॥

---

அறிவாளியான அவர் தமது நகரை அடைந்தார். அத்யாஶ்சர்யமாய் மிகப் புண்ணியமான இந்த அத்தியாயத்தின் கதையை எவர்கள் பக்தியுடன் கேட்கிறார்களோ படிக்கிறார்களோ அவர்கள பாபஸமூஹத்தை விரைவில்போககி இவவுலகில் ராமபக்தர்களாக ஆவார்கள்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் பட்டார்ய வேதாந்தி ஸம்வாதத்தில்
ஸ்ரீ குலசேகரர் ராமனை நேரே கண்டதைக்கூறும்
எண்பத்தாருமத்தியாயம் நிறைவுற்றது.

## எண்பத்தேழாமத்தியாயம்
### குலசேகரர் வைபவபூர்த்தி
### ராஜ்யத்தை வைஷ்ணவாதீனமாக்குதல்

1-*7. அறிவாளியான நஞ்சீயரே! ராமபக்தராய் ராஜரிஷியான குலசேகரருடைய சரிதம முழுவதையும் இவ்வுலகில எவருள் சொல்ல முடியும? ஆயினும, ஆசார்யகடாக்ஷத்தாலே விஷ்ணுபக்தரான அவ்வரசருடைய பெரிய சரிதத்தில ஒரு சிறிது கூறுகிறேன கேளும். உபயவேதாந்தங்களையும ஓதிய நாலுகோடி

३. श्रीवैष्णवानां वेदान्तिन्! वेदान्तद्वयशालिनाम् ।
चतस्रः कोटयो राज्ञा षड्रसान्नैर्दिने दिने ॥
४. पायसान्नैश्च भक्ष्यैश्च परितृप्तास्तदाऽभवन् ।
ततोऽधिकतराश्चान्ये तृप्तिं प्राप्ता हि वैष्णवाः ॥
५. बहुनोक्तेन किं विद्वन्! संक्षेपेण ब्रवीम्यहम् ।
स्वराज्यं वैष्णवाधीनमकरोत्कुलशेखरः ॥
६. राज्यं भागवताधीनं सर्वं कृत्वा निरन्तरम् ।
दासभूतो हि सर्वेषां वैष्णवानां महात्मनाम् ॥
७. गुणानुभवकैङ्कर्यनिरतोऽभूत्सदा हरेः ।
कुलशेखरदेवस्य वृत्तान्तं मन्त्रिणस्तदा ॥

---

வைஷ்ணவர்கள் தினந்தோறும் அவ்வரசராலே அறுசுவையுண்டியும், பாயஸான்னங்களும், திருப்பணியாரங்களும் ஸமர்ப்பிக்கப்பெற்று அக்காலத்தில் திருப்தியடைந்து வந்தார்கள். அதற்கு மேலும் பல ஸ்ரீ வைஷ்ணவர்கள திருப்திபெற்று வந்தார்கள். பேரறிவாளரே! பல சொல்லியென்? சுருக்கமாகக் கூறுகிறேன். குலசேகரர் தன் ராஜ்யத்தை வைஷ்ணவர்களுக்கு அதீனமாக்கிவைத்தார். இவ்வண்ணமாக ராஜ்யம் முழுவதையும் பாகவதர்களுக்கு அதீனமாக்கி மஹாத்மாக்களான வைஷ்ணவர்கள் அனைவருக்கும் எப்போதும் அடியவராக வாழ்ந்து எம்பெருமானுடைய குணாநுபவத்திலும் கைங்கர்யத்திலும் ஈடுபட்டவராயிருந்தார்.

## மந்திரிகளின் சதியாலோசனை

7*-18 அப்போது குலசேகராழ்வாருடைய அந்தச் செய்தியனைத்தையும் கண்டு அவருடைய செயலையும் பார்த்து அவருடைய மந்திரிகள் அதை முழுவதையும்

८. विदित्वा सकलं तच्च विलोक्यैनद्विचेष्टितम् ।
तदाऽसहिष्णवस्तत्र समेत्य मन्त्रिणस्तदा ॥

९. राज्ञः स्वराज्यं वित्ताद्यं न किञ्चित्किल विद्यते ।
विष्णुदासैकदासत्वमुपेत्य तदधीनकः ॥

१०. भ्रान्तवत् भ्रमते राजा भ्रान्तसङ्गात् भ्रमान्वितः ।
महाच्चित्तभ्रमो जातः नीतिज्ञस्यापि भूपतेः ॥

११. एतेषां सहवासेन वैष्णवानां महात्मनाम् ।
राज्ञोऽस्य मरणं प्राप्तं सिन्धौ किल तदा ह्यभूत् ॥

१२. केनचित् दैवयोगेन तस्मात्संरक्षितो नृपः ।
कालाकालमजानन्तः सञ्चरन्ति हि वैष्णवाः ॥

१३. राजस्थाने च शुद्धान्ते भोजनावसरेऽपि च ।
सर्वदा कांक्षते राजा वैष्णवागमनं प्रति ॥

---

பொறுக்காதவர்களாய் ஒன்றுகூடி "நம அரசருக்கு அரசு பணம் முதலான எச்செல்வமும இல்லை. விஷ்ணு தாஸர்களுக்கு தாஸராகி மயங்கி, அவர்களுடைய ஸஹவாஸத்தால் மயக்கமடைந்தவராயப் பித்தன்போலே மயங்கி நிற்கிருர் நம் அரசர். நீதிவழி நடப்பவராயினும் நம் அரசருக்குப் பெரிய பைத்தியம பிடித்துவிட்டது. மஹாத்மாக்களான இநத வைஷ்ணவர்களுடைய ஸஹவாஸத்தாலே அனெருரு நாள நம் அரசருககுக் கடலில்லை மரணம் நேரவிருந்தது. ஏதோ ஓர் அதிருஷ்டவசத்தாலே அவ்வாபததிலிருந்து அரசர் காப்பாற்றப்பட்டார் சமயாசமயம தெரியாமல ஸ்ரீ வைஷ்ணவர்கள ராஜஸபையிலும் அந்தப்புரத்திலும் உணவு உண்ணுமபோதுங்கூட வந்து பார்க்கிருர்கள். அரசர் எப்போதும் வைஷ்ணவர்கள் வருவதை எதிர்பார்த்து

१४. वैष्णवास्तद्गृहं पूर्णं ह्यागच्छन्ति यदा यदा ।
दृष्टमात्रेण सन्तुष्टः स तेषां हि यथा निधेः ॥

१५. संभ्रमात्सहसोत्थाय रत्नसिंहासनात् नृपः ।
स्वकार्यं दूरतः क्षिप्त्वा महच्चापि तृणादिवत् ॥

१६. श्रीवैष्णवेभ्यस्सर्वेभ्यो विधायोपचितिं मुदा ।
पाण्ड्यदेशे ब्रह्मदेशे राजगोपालसन्निधौ ॥

१७. श्रीवैष्णवैस्तु तत्त्वार्थलग्नचित्तो हि भूमिपः ।
एतद्विज्ञाय विज्ञाप्यमस्माभिर्हितकाङ्क्षिभिः ॥

१८. इति निश्चित्य ते सर्वे मन्त्रिणो मन्त्रकोविदाः ।
अर्थं निवेदितुं प्राप्तं कांक्षन्तः समयं स्थिताः ॥

---

நிற்கிறார். வைஷ்ணவர்கள் எப்போதெல்லாம் நிறைய வருவார்களோ அப்போது அவர்களைக் கண்ட மாத்திரத்தாலே நிதியைக்கண்டதுபோலே உகக்கிறார் நமது அரசர். பெரிய ராஜகார்யங்களையும் புல்லென நினைத்து உதறி, நம் அரசர் பரபரப்புடன் உடனே எழுந்து ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவருக்கும் உகப்புடன் உபசாரம் செய்கிறார். பாண்டிய நாட்டிலுள்ள ப்ரஹ்மதேஶம் எனப்படும் ராஜமன்னார் கோயிலில் அரசர் ஸ்ரீவைஷ்ணவர்களோடுகூட தத்வார்த்த விசாரத்தில் ஈடுபட்டிருக்கிறார். அவருக்கு நன்மையை விரும்பும் நாம் இதனை தகைதயும் அறிந்து விண்ணப்பிக்க வேண்டும்" என்று நிச்சயித்து மந்திராலோசனையில வல்லவர்களாய் அரசரிடம் இச்செய்தியை விண்ணப்பிப்பதற்குத் தக்க காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

१९. दृष्ट्वा तान् जगतीनाथः कार्यं ब्रूतेत्यचोदयत् ।
तेऽब्रुवन् सहिता राजन्! महाभागवतार्चनम् ॥
२०. एतत्तु खलु कर्तव्यं मुमुक्षूणां महात्मनाम् ।
राज्ञा तु खलु सन्तिष्ठेत् प्रजापालनकर्मणि ॥
२१. सतां च संग्रहं कुर्वन् असतां च विनिग्रहम् ।
सप्ताङ्गराज्यचतुरः शक्तिभिस्तिसृभिर्युतः ॥
२२. सततं चतुरो वर्णान् तत्तद्धर्मे नियोजयन् ।
कुर्वन् च विविधां भक्तिं भगवत्यम्बुजेक्षणे ॥
२३. मानयन्मन्त्रिणो मन्त्रकोविदान् सूक्ष्मधीमतः ।
एवं तिष्ठति यो राजा स चतुस्सागरावधिम् ॥

## மந்திரிகளின் விண்ணப்பம்

19-25. சக்ரவர்த்தியான குலசேகரர் தம்மைக் காண வந்த மந்திரிகளைப் பார்தது "என்ன காரியம் சொல்லுங் கள்" என்று நியமித்தார். அவர்கள் அனைவரும் கூடி "அரசரே! (தேவரீர் செய்யும்) மஹாப,ாக,வதாராத,னம மஹாத்மாககளான முமுக்ஷுக்களாலேயே செய்யத்தக்கது. அரசனுெவெனில் நல்லவர்களைச் சேர்ததுக்கொணடும் தீயவர்களை விலககியும் குடிகளை ரக்ஷிப்பதிலேயே ஈடுபட வேண்டும். (1) புரோஹிதன் (2 மநதிரி (3) நண்பன் (4) பொக்கிஷம் (5) ராஜ்யம் (6) கோட்டை (7) ஸேனை எனனும் ஏழு அங்கங்களைக்கொண்டு அரசாளவதில வல்லவனுய், பொக்கிஷ ப,லமும் ஸேனுப,லமுமாகிற ப்ரபு, ஶக்தியும், பராக்ரமப,லமாகிற உத்ஸாஹ ஶக்தியும், மந்த்ராலோசனையாகிற மந்த்ரஶக்தியுமான மூன்று ஶக்திக ளோடு கூடியவனுய், நாலு வர்ணஙகளையும் அவரவரு டைய த,ர்மங்களை எப்போதும் அனுஷ்டிக்கும்படி செய் பவனுய், எம்பெருமானுன தாமரைக்கண்ணனிடம் பலவிதமாக ப,க்தி செலுத்துபவனுய், மந்த்ராலோசனை

२४. धरित्रीमखिलां भुङ्क्ते दिवमाखण्डलो यथा ।
एते भागवता राजन् राजधर्ममनुत्तमम् ॥
२५. न बोधयन्ति ते नित्यं प्रत्यक्षं सर्वसौख्यदम् ।
तच्छ्रुत्वा मन्त्रिणां वाक्यं राजा स्मित्वा ह्युवाच तान् ॥
२६. श्रीवैष्णवेभ्यो लोकेऽस्मिन् भुक्तिमुक्तिप्रदायकाः ।
हितोपदेशकाः के स्युः मम प्राणा हि वैष्णवाः ॥
२७. इत्युक्त्वा मन्त्रिणस्सर्वान् करणीयेषु कर्मसु ।
नियोज्य प्रयतान् कृत्वा राज्यकार्येषु स स्वयम् ॥
२८. वैष्णवैस्सह तत्त्वार्थलग्नचित्तस्सदाऽभवत् ।
मन्त्रिणोऽपि तदा राज्ञो वैष्णवानां च भेदने ॥

---

களில் வல்லவர்களாய் நுண்ணறிவுடையவரான மந்திரிகளை மதிப்பவனாக எந்த அரசன் அரசாள்கிறானோ, அவன் தேவலோகத்தை இந்த்ரன் ஆளவதுபோலே நாலுபுறமும் கடலால சூழப்பட்ட உலகம் முழுவதையும் ஆளகினறான். அரசரே! ஒப்பற்றதாய், எல்லா இன்பங்களையும் தரவல்லதாக ப்ரத்யக்ஷமாக விளங்கும் ராஜதர்மத்தை இந்த பாகவதர்கள் ஒருபோதும் உபதேசிககமாட்டார்கள்" என்று விண்ணப்பித்தார்கள்.

## அரசர் இசையாமையும் மந்திரிகளின் தீய எண்ணமும்

25-29. மநதிரிகளுடைய இவ் வார்த்தையைக் கேடட அரசர் புன்சிரிப்போடு அவர்களைப் பார்த்து "இவவுலகில் போகமோக்ஷங்களை அளிகக வல்லவர்களாய், நன்மையையே உபதேசிக்ககூடியவர்சள ஸ்ரீவைஷ்ணவர்களைக்காட்டிலும வேறு எவர் உளர்? வைஷணவர்கள் எனக்கு உயிராயிருப்பவர்சளன்றோ" என்று கூறினார். இப்படிக் கூறியபின் மந்திரிகள அனைவரையும் செய்ய வேண்டிய ராஜ்ய காரியங்களிலும மற்ற செயல்சளிலும் நியமித்து அடங்கச்செய்து, தாம வைஷ்ணவர்களோடு தத்வார்த்த விசாரங்கள் செய்வதில எப்போதும் நெஞ்சு

२९. अभवन् पापमतयः च्छिद्रान्वेषणतत्पराः ।
ततः कदाचित् भूमीशः महाभागवतैस्सह ॥
३०. दिव्यस्रग्वस्त्रललितो हारकेयूरकुण्डलैः ।
मणिग्रैवेयमञ्जीरकङ्कणाद्यैर्विराजितः ॥
३१. पौराणिकैस्सत्कविभिर्मन्त्रिभिस्सपुरोहितैः ।
सभायां शुशुभे राजा नक्षत्रैरिव चन्द्रमाः ॥
३२. तदा भागवतश्रेष्ठाः महाकारुण्यसिन्धवः ।
श्रीमदष्टाक्षरमनुसदर्थासक्तचेतसः ॥
३३. शमादिगुणसम्पन्नाः द्राविडश्रुतिबोधकाः ।
तत्त्वत्रयज्ञाः शेषत्वज्ञानवन्तस्तथाऽऽययुः ॥

---

செலுத்தியவராயிருந்தார். அப்போது மந்திரிகளும் பாப புத்தியுடையவர்களாய் அரசரையும் வைஷ்ணவர்களையும் பிரித்து விடுவதற்கு இடம் கிடைக்குமா என ஆராய்வதில் ஈடுபட்டிருந்தார்கள்.

## நகைகள் களவு

*29*-*40.* அதற்குப்பின் ஒரு ஸமயம் சக்ரவர்த்தியான குலசேகரர் மிக அழகான மாலை, பட்டுவஸ்த்ரம் ஆகியவற்றோடு விளங்குகிறவராய், ஹாரம், தோள்வளைகள், குண்டலங்கள், ரத்னமயமான கழுத்தணிகள், சதங்கை, கைவளைகள் முதலானவற்றால் அலங்கரிக்கப் பெற்றவராய், மஹா பாகவதர்களோடும், புராணம் வாசிப்பவர்களோடும், நல்ல கவிகளோடும், மந்திரிகளோடும், புரோஹிதர்களோடும், நக்ஷத்ரங்களோடு (ஆகாயத்தில்) சந்திரன் விளங்குவதுபோலே ராஜ ஸபையில் ஒளிவீசிக் கொண்டு வீற்றிருந்தார், அப்போது பெருங் கருணைக்கடல்களாய், திருவஷ்டாக்ஷரப் பொருளிலேயே ஈடுபட்ட நெஞ்சையுடையவர்களாய், மனத்தையும் இந்திரியங்களையும் அடக்கியவர்களாய், தமிழ் வேதங்களின் பொருளை

३४. राजोत्थाय प्रणम्याथ संस्तुत्य विनयान्वितः ।
पूजयित्वा च तान् तत्त्वगोष्ठ्यां रामे मनो दधौ ॥

३५. श्रुत्वा यामद्वये राजा परमाह्लादनिर्भरः ।
स्नातुकामस्ततः स्वाङ्गभूषणानि विमुच्य च ॥

३६. सिंहासने विनिक्षिप्य कथासक्तमनाः पिबन् ।
सम्यक् श्रीरामतत्त्वार्थं सत्सल्लापकुतूहलः ॥

३७. ततः प्रणम्य विधिवत् स विसृज्य च वैष्णवान् ।
स्नात्वा संभोजयित्वा तान् स्वयं भुक्त्वा च शेषतः ॥

३८. संविश्य चाथ विश्रम्य सभां गन्तुं मनो दधौ ।
भूषणानि सभामध्ये स्थापितानि मयाऽऽसने ॥

---

விளக்குகிறவர்களாய், தத்வத்ரயத்தையும் அறிந்தவர்களாய், ஶேஷத்வஜ்ஞானமுடையவர்களான பரமபாகவதர்கள் அந்த ஸபைக்கு வந்தனர். அரசர் எழுந்திருந்து அவர்களை வணங்கி, அடக்கத்தோடு துதித்து ஆராதித்து, அந்தத் தத்வவிசாரக்குழுவில் ஸ்ரீராமபிரானிடம் மனத்தைச் செலுத்தினர். ராமகு₃ணங்களை இரண்டு யாமங்கள் கேட்டு அரசர் பேரானந்தம் நிறைந்தவராய், அதற்குப் பின் நீராடவிரும்பியவராய், தன் அவயவங்களில் இருந்த நகைகளைக் கழற்றி ஸிம்ஹாஸனத்தில் வைத்துவிட்டு ராமகதையில் ஈடுபட்ட நெஞ்சையுடையவராய், நல்லோர்களிடம் அதுபற்றிப் பேசுவதிலேயே உத்ஸாஹமுடையவராய் ஸ்ரீராம தத்வார்த்த₂மாகிற அமுதத்தை நன்கு பருகுகின்றவராக ஆனார். அதற்குப்பின் முறைப்படி வணங்கி வைஷ்ணவர்களை விட்டு விலகி, நீராடி, அவர்களுக்கு உணவளித்து ஶேஷப்ரஸாதத்தைத் தானுண்டு, களைப்பாறும் அறைக்குச்சென்று இளைப்பாறி, ராஜஸபைக்குச் செல்லத் திருவுள்ளங்கொண்டார். "ஸபையின் நடுவில் ஸிம்ஹா

३९. तान्यानयत्वमित्युक्ते राज्ञस्ते परिचारकाः ।
सभां प्रविश्यादृष्ट्वा च तानि चिन्तायुतास्तदा ॥

४०. भूषणानि न सन्तीति तत्र राज्ञे न्यवेदयन् ।
राजा तु तद्वचः श्रुत्वा कुपितो मन्त्रिणस्तदा ॥

४१. आहूय रक्षकान्सर्वान् कुपितस्तानुवाच ह ।
सदा युष्मासु तिष्ठत्सु रक्षां कुर्वत्सु सर्वतः ॥

४२. तस्कराः किन्तु मुष्णन्ति न दृष्टं स्तेयमीदृशम् ।
अधुनैवानयध्वं मे भूषणान्यविलम्बितम् ॥

४३. नोचेत्प्राणान्तिकं दण्डं करिष्येऽहं भवत्सु वै ।
अथामात्याः पुरः स्थित्वा कृताञ्जलिपुटा नृपम् ॥

---

ஸனத்தில் என்னால் வைக்கப்பட்ட அந்த ஆபரணங்களைக் கொண்டுவாருங்கள்" என்று நியமிக்கப்பெற்ற அரசரின் வேலைக்காரர்கள் ஸபையில் நுழைந்து அந்த ஆபரணங்களைக் காணமல் கவலையடைந்தவர்களாய் "திருவாபரணங்கள் அங்கு இல்லை" என்று அரசரிடம் விண்ணப்பித்தனர்.

## அரசரின் கோபமும் மந்திரிகளின் சூழ்ச்சியும்

40*-*46. அவர்களுடைய வார்த்தையைக் கேட்டுக் கோபமடைந்த அரசர் அப்போதே மந்திரிகளையும் காவற்காரர்கள் அனைவரையும் அழைத்து, "நீங்கள் அனைவரும் எப்போதும் அரண்மனையிலிருந்துகொண்டு எல்லாப் பக்கங்களிலும காவலகாததுக கொண்டிருக்கும்போது திருடர்கள் எப்படித் திருடமுடியும? இத்தகைய திருட்டை நான் இதுவரை கண்டதில்லை. இப்போதே எனனுடைய ஆபரணங்களைக காலதாமதம் செய்யாமல் எடுத்துவாருங்கள். இல்லையேல் உங்களுக்கு மரணதண்டனை விதித்து விடுவேன்" என்று கோபததோடு அவர்களைப் பார்த்து வார்த்தை சொன்னர். அப்போது மந்திரிகள் அவருக்கு

४४. ऊचुस्तदाऽऽज्ञया चौरनामापि श्रूयते न हि ।
त्वन्मन्दिरेऽधुना सर्वैः श्वेतमृन्मात्रधारणात् ॥
४५. सर्वे निवारिताश्चैवायान्ति यान्ति च वैष्णवाः ।
चित्तेऽस्माकं तु संदेहो वैष्णवेष्वपि जायते ॥
४६. तान् विनाऽन्ये न गृह्णन्ति भूषणानि नृपोत्तम! ।
तच्छ्रुत्वा दुष्कृतां वाक्यं मन्त्रिणां दुष्टचेतसाम् ॥
४७. पिधाय कर्णौ संरब्धः भगवन्नाम संस्मरन् ।
मुखानि न निरीक्षेऽहं युष्माकं दुष्टचेतसाम् ॥
४८. इति ब्रुवाणोऽमात्येषु दण्डदाने मनो दधे ।
एवं निश्चित्य मनसा सचिवानब्रवीन्नृपः ॥

---

முன் கைகூப்பி நின்று அரசரைப்பார்த்து "உம்முடைய ஆணையைப் பின்பற்றிய எங்களுடைய கட்டளையாலே இப்போது உம்முடைய அரண்மனையில் திருடன் எனகிற பேச்சே கிடையாது. அரண்மனையில அனைவரும் திருமண் காப்பை சாத்திக்கொண்டிருக்கையால திருடர்கள அனைவரும் தடுக்கப்பட்டு விட்டார்கள வைஷ்ணவர்களோ போயக்கொண்டும் வந்துகொண்டும் இருக்கிறார்கள் அந்த வைஷ்ணவர்கள் விஷயத்திலேயே எங்கள நெஞ்சில் ஸந்தேஹம் உண்டாகிறது; அரசர் தலைவரே! தேவரீருடைய திருவாபரணங்களை அவர்களைத்தவிர வேறு எவரும் எடுக்கவில்லை" என்று கூறினார்கள்.

## அரசரின் கடுங்கோபமும் குடப்பாம்பில் கையிடும் சபதமும்

46*-59* தீய நெஞ்சுடையவராய், தீமை செய்தவர்களான அந்த மந்திரிகளின் வார்த்தையைககேட்டுப் பரபரப்படைந்தவராய் அரசரான குலசேகரர் காதுகளைக் கையால் மூடிக்கொண்டு எம்பெருமானுடைய திருநாமங்களை (பாகவதர்களின் நிந்தையைக் கேட்டதற்குப் பிராயச்சித்தமாக) நினைத்து 'தீயவர்களான உங்கள் முகத்தையே இனிக்காண மாட்டேன்" என்று கூறியவராய், மந்திரிகளுக்குத் தண்டனை

४९. लोके तिष्ठति यत्पापं तद्धरिस्मरणाद्धृतम् ।
हरिनिन्दाकृतं पापं वैष्णवस्तुतिभिर्हृतम् ॥

५०. निन्दया वैष्णवानां तु यत्पापं प्रतिपद्यते ।
तन्न नश्यति केनापि वदन्ति हि महर्षयः ॥

५१. तस्माद्भवद्भिर्या निन्दा कृता वैष्णवसज्जने ।
दण्डं करोमि युष्मासु तिष्ठेल्लोके च मेऽयशः ॥

५२. तस्माद्दण्डान्निवृत्तोऽहं युष्मास्वद्य समुद्यतात् ।
क्रोधलोभानृताज्ञानकामादिरहितेषु च ॥

५३. स्तेयमारोपितमहं वैष्णवेषु विमार्जयन् ।
प्रमाणं तु करिष्यामि निःशङ्केनान्तरात्मना ॥

---

யளிக்கத் திருவுள்ளங்கொண்டார். இப்படி நெஞ்சில் உறுதிபூண்டு அரசர் மந்திரிகளைப் பார்த்து "உலகத்திலுள்ள எல்லாப் பாபங்களும எம்பெருமானை நினைப்பதால போய்விடும். எம்பெருமானை நிந்திப்பதாலுண்டாகும் பாபம் வைஷ்ணவர்களைத் துதிப்பதால் போய்விடும. வைஷ்ணவர்களை நிந்திப்பதாலுண்டாகும் பாபமோவெனில் எதனாலும் அழியாது என்று மஹர்ஷிகள் சொல்லுகிறார்கள். ஆகையால் நல்லவர்களான வைஷ்ணவர்களைப்பற்றி நீங்கள் செய்த நிந்தைக்கு உங்களுக்கு தண்டனைகொடுத்துவிடுவேன்; ஆனால் (வைஷ்ணவ பக்ஷபாதத்தாலே மந்திரிகளை தண்டித்தான என்னும்) அபகீர்த்தி எனக்கு வந்துவிடும் ஆகையால் உங்களுக்கு இப்போது கடுந்தண்டனை கொடுக்காமல், கோபம், பொருளில் ஆசை, பொய், அறிவின்மை, காமம் முதலான தோஷங்களற்ற வைஷ்ணவர்கள் விஷயத்தில் நீங்கள் ஏறிட்ட திருட்டுப் பழியைத் துடைப்பதற்காக, ஐயமில்லாத நெஞ்சோடு நான ஒரு ப்ரமாணம் செய்யப்போகிறேன்" என்று கூறினர். இப்படிச் சொல்லி, மிகக்கொடிய நச்சுப்பாம்பை ஒரு

५४. इत्युक्त्वाऽऽशीविषं घोरं स्थापयित्वा घटान्तरे ।
पुरोहितान् पौरजनान् पौरवर्गान्समाह्वयत् ॥

५५. उवाचैवं शृणुध्वं मे वाक्यं सत्यं वदाम्यहम् ।
श्रीवैष्णवा मुक्तिमुक्तिनिःस्पृहा नैव तस्कराः ॥

५६. सत्यं सत्यमिदं सत्यं वाक्यं चेन्मामयं विषी ।
न दंशिष्यति सर्पोऽपि पश्यतैतद्विचेष्टितम् ॥

५७. इत्युक्त्वा पश्यतां तेषां सर्वेषां कुलशेखरः ।
कुम्भीनसफणां व्यात्तां कुम्भान्तर्गतसुस्थिताम् ॥

५८. गृहीत्वा स्वर्णमुद्रां तां करेणोद्धृतवांस्तदा ।
कुर्वत्येवं महाराजे नभस्संस्थितनिर्जराः ॥

५९. विस्मयं परमं गत्वा पुष्पवर्षाण्यमुञ्चत ।
दुन्दुभिध्वनिमिश्रैव तं नृपं समभिष्टुवन् ॥

---

குடத்தினுள் இட்டு மூடி, புரோஹிதர்களையும் எல்லா வகைப்பட்ட குடிமக்களையும் அங்கு அழைத்தார். பின்வருமாறு கூறவும் செய்தார் -" என் வார்த்தையைக் கேளுங்கள். ஸத்யமாகக் கூறுகிறேன். ஸ்ரீவைஷ்ணவர்கள் போகம், மோக்ஷங்களில் ஆசையற்றவர்கள்; திருடர்கள் அல்லர்; முக்கால் சத்தியம் செய்து நான் கூறும் இவ்வார்த்தை உண்மையானால் இந்த விஷப்பாம்பு என்னைக் கடிக்காது. இதன் செயலைப் பாருங்கள்" என்று கூறி அவர்களனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே பொன்னால் முத்திரையிடப்பட்ட அக்குடத்தை எடுத்துத் திறந்து, அக்குடத்தினுள் இருப்பதாய், வாய்திறந்துகொண்டு படமெடுத்தாடுவதான பாம்பைக் கையாலே அப்போதே தூக்கினார். மஹாராஜரான குலசேகரர் இப்படிச் செய்தவுடன் ஆகாயத்திலுள்ள தேவர்கள் பெருவியப்புற்றுப் பூமாரி பொழிந்தனர். துந்துபி வாத்யங்களை முழக்கி அவ்வரசரைத் துதித்தனர்.

६०. ततः समस्तदेवैश्च श्रीपतिस्तत्र चागतः ।
कारुण्यसिन्धुः श्रीरामः कोटिसूर्यसमप्रभः ॥

६१. आविर्बभूव सदसि राजानमवलोक्य तम् ।
कृपासुधादृष्टिभिश्च शिशिरीकृत्य सद्गतिः ॥

६२. उत्थाप्य संपरिष्वज्य प्राह वाक्यं कृपान्वितः ।
कल्याणगुणसंपन्न! वैष्णवोत्तम! भूपते! ॥

६३. मत्तोऽधिकान्महाभाग! मद्भक्तान्मन्यसे यथा ।
सन्तुष्टोऽहमनेनाद्य वृणीष्व वरमुत्तमम् ॥

६४. इति ब्रुवाणे श्रीरामे वाक्यमुत्तरमब्रवीत् ।
नृपतिः प्राञ्जलिर्भूत्वा विनयेन समन्वितः ॥

---

## குலசேகரரின் வரப்ரார்த்த₂னை

60-*67. அதற்குப்பின் லக்ஷ்மீநாதனை அரங்க நகரப்பன் கருணைக்கடலாய், கோடி ஸூர்யர்களின் ஒளி யுடையவனுயிருக்கும் ஸ்ரீ ராமனின் திருமேனியுடன் எல்லா தேவர்களோடு அங்கு எழுந்தருளி, ராஜஸபையில் தோன்றினன். அவ்வரசரைப்பார்த்து, நலலோர்களுக்குத் தஞ்சமாயிருப்பவனுய், கருணையுடையவனை அப்பெரு மான் கருணையமுதக் கடாக்ஷங்களாலே அவரைக் குளிரச் செய்து, அவரை எழுப்பி ஆரத்தழுவி "கல்யாண கு₃ணங் களை உடையவரே! வைஷ்ணவர்களில் தலைசிறந்த அரசரே! மஹாபா₄க்₃யசாலியே! நீர் என்னைக்காட்டிலும் மேலானவர்களாக என் அடியார்களை நினைக்கிறபடியால், நான் மிகவும் உகந்திருக்கிறேன். இப்போதே என்னிட மிருந்து ஒரு சிறந்த வரத்தைப் பெற்றுக்கொள்வீர்" என்று அருளினன். இப்படி ஸ்ரீராமபிரான் அருளியவுடன், அவ்வரசர் அடக்கத்துடன் கைகூப்பி "அரசர் தலைவனை

६५. राम! राजेन्द्र! लोकाभिराम! राजीवलोचन! ।
योगीन्द्रचित्तकमलद्युमणे! कमलासख! ॥

६६. वृणीष्वेति वरं देव! ब्रवीषि करुणाकर! ।
किं प्रार्थयेऽहं देवेश! सर्वमेवाददाः पुरा ॥

६७. त्वद्भक्तेषु दृढां भक्तिं त्वयि चैव वृणोम्यहम् ।
एवमुक्ते नृपवरे सन्तुष्टहृदयो हरिः ॥

६८. वरं तथैव दत्वाथ पुनः प्रोवाच विस्मितः ।
नीलांशजातां त्वत्पुत्रीं देहि मे नरनायक! ॥

६९. भवामि तेऽहं जामाता श्वशुरस्त्वं मतो मम ।
तच्छ्रुत्वा रङ्गनाथस्य वाक्यं नृपशिखामणिः ॥

---

ராமபிரானே! உலகை அழகால் வசப்படுத்துகிறவனே! தாமரைக் கண்ணனே! யோகியர் தலைவர்களின் இதயக கமலங்களை மலரவைக்கும் ஸூர்யனே! கமலையின் துணைவனான தேவனே! கருணைக்கடலே! 'வரம் வேண்டிக்கொள்' என்று கூறுகிறாய். தேவர்தலைவனே! நீ எனக்கு வேண்டியது அனைத்தையும் ஏற்கனவே கொடுத்திருக்கிறாய்; (ஆகையால்) உன்னிடம் நான் எதைப் பிரார்த்திப்பேன்? உன் அடியார்களிடமும் உன்னிடமும் உறுதியான பக்தியையே நான் வரமாக வேண்டுகிறேன்" என்று பதிலுரைத்தார்.

## சேரகுலவல்லீபரிணயம்

67ா-74. அவர் அவ்வண்ணம உரைத்தவுடன் அரசர் தலைவரான அவரிடம் உகந்த நெஞ்சினனான எம்பெருமான் அவ்வண்ணமே வரமளித்து, வியப்புற்றவனாய் அவரைப் பார்த்து, "அரசரே! நீளாதேவியின் அம்சமாய்ப் பிறந்திருக்கும் உமது பெண்ணை எனக்குக் கன்னிகாதானம் செய்து கொடுப்பீர்! உமக்கு நான் மாப்பிள்ளையாகிறேன்.

७०. धन्योऽस्म्यहं कुलं जन्म पवित्रं च मम प्रभो! ।
इत्युक्त्वा स्वपुरीं रम्यां कृत्वालङ्कारसंयुताम् ॥

७१. भूषणैर्भूषयित्वाथ कन्यां परमशोभनाम् ।
वेदिं कृत्वा सभामध्ये हुत्वाग्निं स यथाविधि ॥

७२. श्रीरङ्गपुण्यनाथाय देवेशेन्द्रमुखामरैः ।
सेविताय ददौ राजा कन्यां तां विधिपूर्वकम् ॥

७३. सोऽपि प्रगृह्य तां कन्यां राजपुत्रीं मनोहराम् ।
राज्ञा संपूजितः सर्वैरनघैः वस्तुभिः शुभैः ॥

७४. देवैस्सह पुनः प्राप स्वधाम परमं हरिः ।
ततो नृपस्य सचिवाः विस्मयाविष्टचेतसः ॥

---

உம்மை எனது மாமனாராக வரிக்கிறேன்" என்று மறுபடியும் அருளினான். அரசர்தலைவரான குலசேகரர் அரங்கநகரப்பனுடைய அந்த வார்த்தையைக் கேட்டு, "ஐயனே! நான் பேறுபெற்றேன். எனது குலமும் பிறவியும் பரிசுத்தமாயிற்று" என்று கூறி, அழகிய தன் நகரை மேலும் அலங்கரித்து, மிக அழகியவளான தன் பெண்ணைத் திருவாபரணங்களால் அலங்கரித்து, ஸபையின் நடுவிலேயே மணமேடையை அமைத்து, முறைப்படி அக்னியில் ஹோமம் செய்து, தேவர்தலைவர்களான இந்திரன் முதலானவர்களால் ஸேவிக்கப்பெற்ற ஸ்ரீரங்கநாதனுக்குத் தன் பெண்ணை முறைப்படி கன்யகாதானம் செய்தார். அப்பெருமானும் அழகிய ராஜகுமாரியான அப்பெண்ணை ஏற்றுக்கொண்டு விலைமதிப்பற்ற எல்லாவிதமான மங்களப் பொருள்களாலும் அரசராலே ஆராதிக்கப்பெற்றவனாய், தேவர்களோடுகூட, தனது மேலான இருப்பிடத்தை அடைந்தான்.

௭௫. प्रभावं तस्य विज्ञाय गृहीत्वा भूषणान्यपि ।
निक्षिप्य पुरतस्तस्य भूषणानि भयान्विताः ॥

௭௬. राजानं प्रणिपत्याथ स्वापराधं निवेद्य च ।
ययाचिरेऽभयं तेभ्यः स राजाप्यभयं ददौ ॥

௭௭. ततः स्वपुत्रमनघं गुणवन्तं महाबलम् ।
राज्येऽभिषिच्य सततं तस्थौ वैष्णवसेवया ॥

௭௮. ततो नराधिपः श्रीमान् रामायणपरायणः ।
तास्ता रामकथाः शृण्वन् परमानन्दनिर्भरः ॥

௭௯. ततः कदाचिच्छ्रीरामनवम्यां सुमहोत्सवः ।
बभूव रामचन्द्रस्य सर्वलोकमहोत्सवः ॥

---

## குமாரனுக்குப் பட்டாபி4ஷேகம்

74*-78. அதற்குப்பின் அவ்வரசரின் மந்திரிகள் வியப்புற்ற நெஞ்சினராய் அவருடைய பெருமையை அறிந்து, (மறைத்து வைத்திருந்த அவரது) ஆப4ரணங்களை எடுத்து அவற்றை அவருக்கு முன்வைத்து ப4யத்துடன் அரசரை வணங்கித் தம் பிழையை விண்ணப்பித்துத் தமக்கு அப4யமளிக்கும்படி வேண்டினர். அவ்வரசரும் அவர்களுக்கு அப4யமளித்தார். அதற்குப்பின் குற்றமற்றவனாய், கு3ணங்களையுடையவனாய் பெரும்ப3லமுடையவனான தன் பிள்ளையை அரசனாகப் பட்டாபி4ஷேகம் செய்வித்து, தாம் வைஷ்ணவர்களுக்கு எப்போதும் கைங்கர்யம் செய்வதில் ஈடுபட்டார். அதற்குப்பிறகு, கைங்கர்யச் செல்வம் மிக்க அவ்வரசர் தலைவர் ஸ்ரீ ராமாயணத்திலேயே ஈடுபட்டவராய், ராமனின் அந்தந்தக் கதைகளைக் கேட்டுக்கொண்டு பேரானந்தத்தில் ஆழ்ந்தவராயிருந்தார்,

८०. चमूवालङ्कृतस्सम्यक् ताम्रचूडपुरं महत् ।
रम्भास्तम्भैः पताकाभिः शोभमानैश्च तोरणैः ॥

८१. भेरीकाहलनादैश्च वेदघोषैश्च पूरितम् ।
कुलशेखरदेवस्य रामभक्तस्य भूपतेः ॥

८२. गृहोत्तमे मणिमये विचित्रे देवतागृहे ।
विशेषतो महानासीत् रामचन्द्रमहोत्सवः ॥

८३. तस्यार्चाविग्रहस्यापि सीतारामस्य भक्तितः ।
राजगोपालदेवस्य मज्जनावसरे तदा ॥

८४. विमुच्य भूषणान्याशु चानर्घाण्यखिलानि च ।
तान्यर्चका यथामात्रं क्वचिद्देशे ह्यधिष्ठिपन् ॥

---

## ஸ்ரீ ராமநவமி மஹோத்ஸவத்தில் ஹாரத் திருட்டு

79—92. அதற்குப்பின், ஒரு ஸ்ரீராமநவமி தினத்தன்று ஸ்ரீ ராமபிரானுக்கு அனைத்துலகும் கொண்டாடும் பெரு விழாவான பெரிய மஹோத்ஸவம் நேர்ந்தது. மிகப் பெரியதான கோழிக்கோடு நகரம் வாழைமரங்களாலும், கொடிகளாலும், அழகிய தோரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்று, பேரி காஹளம் முதலான வாத்ய முழக்கங்களாலும், வேதவொலியாலும் நிறைந்திருந்தது; ராமபக்தரான குலசேகர ராஜாவின் ரத்னமயமான அரண்மனையில் உள்ள ஆச்சர்யமான கோயிலில் ராமசந்திரனுக்கு மிகப் பெரிய அவதார மஹோதஸவம் சிறபபாக நடைபெற்றது, அதுசமயம் அந்த ஸீதாராமனுடைய அர்ச்சைத் திருமேனிக்கும், ராஜகோபாலப் பெருமாளுடைய அர்ச்சைத் திருமேனிக்கும் பக்தியோடு திருமஞ்சனம் நடக்கும்போது, அர்ச்சகர்கள் விலைமதிப்பற்ற எல்லாத் திருவாபரணங்களையும் திருமேனியிலிருந்து விரைவாகக் களைந்து ஓரிடத்தில்

८५. अभिषेकं तदा चक्रुः हरये परमात्मने ।
तदा पुरुषसूक्तैश्च श्रीसूक्तैर्वेदपारगाः ॥

८६. भूसूक्तैरनुवाकैश्च वैष्णवैश्च महारवैः ।
नृत्तगीतादिवाद्यैश्च महाभेरीरवैस्तथा ॥

८७. बद्धाञ्जलिर्महाराजस्तं मज्जनमहोत्सवम् ।
सेवमानस्तदा तस्थौ तदेकहृदयो महान् ॥

८८. तदेकहृदयास्सर्वे पश्यन्तस्तं महोत्सवम् ।
आस्थितास्तस्य ये चान्ये वैष्णवास्तत्र सादरं ॥

८९. तदन्तरं समावेद्य मन्त्रिणः सहसा तदा ।
अनघं मौक्तिकं हारं तत्रैकमपहृत्य ते ॥

---

வைத்திருந்தனர். அப்போதே பரமாத்மாவான எம்பெருமானுக்கு வேதம் வல்லவர்கள், பெருமுழக்கமுடைய புருஷஸூக்த ஸ்ரீஸூக்த பூஸூக்த விஷ்ணுஸூக்த மந்திரங்களோடும், நாட்டியம், பாட்டு, வாத்தியங்கள் முதலானவற்றோடும், மஹாபேரீ முழக்கங்களோடும் திருமஞ்சனம் நடத்தினார்கள். மஹாபுருஷராய், மஹாராஜாவான குலசேகரரும், அதிலேயே நெஞ்சு செலுத்திக் கைகூப்பி நின்று அந்தத் திருமஞ்சன மஹோத்ஸவத்தை ஸேவித்துக்கொண்டிருந்தார். அங்கிருந்த நாட்டுமக்களும், நகரமக்களுமான விஷ்ணுபக்தர்கள் அனைவரும் அன்போடு அதிலேயே நெஞ்சு செலுத்தி அவ்வுத்ஸவத்தை அங்கு கண்டு களித்திருந்தனர். அந்த ஸமயத்தை அறிந்து, நிபுணர்களான மந்திரிகள் வைஷ்ணவர்களிடம் துவேஷம் காரணமாக, எவரும் காணாமலிருக்கும்போது அங்கிருந்த விலைமதிப்பற்ற ஹாரத்தைச் சடக்கெனக் களவாடி வேறிடத்தில் மறைத்துவைத்து, முன்போலவே அரசரின் அருகில்

९०. फेनाप्यलक्षितास्तत्र वैष्णवद्वेषकारणात् ।
निक्षिप्तान्यस्थले हारं निगूढं निपुणाश्च तम् ॥

९१. पूर्ववद्राजनिकटे मन्त्रिणः समुपस्थिताः ।
ततोऽलङ्कारसमये देवस्य परमात्मनः ॥

९२. नालक्ष्यन्त तदा हारो चिन्त्युस्ते वैष्णवास्ततः ।
आचख्युरर्चकास्सर्वे तद्भूषाहरणं तदा ॥

९३. हारस्य तस्य राहित्यात्कुपितः कुलशेखरः ।
विलोक्य मन्त्रिणस्सर्वानब्रवीत्पृथिवीश्वरः ॥

९४. आख्यात हारहर्तारं शीघ्रं सम्यक् विचार्य च ।
अद्यैव सत्वरं चोरमानयध्वं ममान्तिकम् ॥

९५. प्रतिगृह्य वचस्तस्य राज्ञस्ते मन्त्रिणस्तदा ।
विचार्य तत्र सर्वत्र तं चोरं नृपशासनात् ॥

---

கின்றிருந்தனர். அதற்குப்பின எம்பெருமான்களை அலங்கரிக்கும்போது பரமபுருஷனின் ஹாரத்தைக் காணவில்லை. அதனால் அங்கிருந்த வைஷ்ணவர்களான அர்ச்சகர்கள் அனைவரும்பயந்தனர்; அதுபற்றி அப்போதே (அரசரிடம்) அறிவித்தனர்.

## அரசரின் கோபமும், மந்திரிகளின் குற்றச்சாட்டும்

93-* 101. அந்தஹாரம் காணமற் போனதுகுறித்துக் கோபங்கொண்ட சக்ரவர்த்தியான குலசேகரர் எல்லா மந்திரிகளையும் பார்த்து, "ஹாரத்தைத் திருடியவன் யாரென்று விரைவில் நன்கு விசாரித்துச் சொல்லுங்கள். இன்றே திருடனை எனக்கருகில் கொண்டுவாருங்கள்" என்று கட்டளையிட்டார். அப்போதே அவ்வரசருடைய வார்த்தைகளை ஏற்று, வைஷ்ணவ துவேஷிகளான மந்திரிகள் அரசரின் ஆணைப்படி ஹாரத்தைத் திருடியவனைப்பற்றி

९६. नृपान्तिकमुपागम्य ते तमूचुर्गुरुद्रुहः ।
अस्माभिरधुना सम्यक् यत्नेन महता नृप! ॥
९७. विचार्यमाणे चौर्येऽस्मिन् चोरोऽन्येषु लक्षितः ।
उद्देश्या भवतोऽत्यन्तं वैष्णवाश्चान्तरङ्गिणः ॥
९८. तैरेवापहृतो हारो नृप! नास्त्यत्र संशयः ।
भगवद्द्रव्यहरणे कः समर्थो विना हि तान् ॥
९९. सञ्चरन्त्यखिला एते सम्पत्पुत्रा इवानिशम् ।
अनिवारितपन्थानः सर्वत्रात्रैव वैष्णवाः ॥
१००. कोशस्थाने च शुद्धान्ते मन्त्रास्थाने महीपते! ।
तेषां निवारणे राज्ञः कोपोऽभूदिति ते महान् ॥

---

எங்கும் விசாரித்துவிட்டு. அரசரிடம் வந்து "அரசரே! பெருமுயற்சியோடு இப்போது நாங்கள் திருடனைத் தேடிய வளவிலும் (வைஷ்ணவர்களைத் தவிர) வேறு எங்கும திருடன் காணப்படவில்லை அரசரே! தேவரீருககு நெருங்கியவர்களாய், மிகவும் வேண்டியவர்களாயிருப்பவர்கள வைஷ்ணவர்களே. அவர்களே ஹாரத்தைத் திருடியுள ளனர். இதில் ஐயமில்லை. எம்பெருமானுடைய திருவாபரணத்தைத் திருட அவர்களைத்தவிர வேறு யாரால் முடியும்? இந்த வைஷ்ணவர்கள் அனைவரும் இரவும் பகலும் செல்வப் பிள்ளைகளைப்போலே எவராலும் தடுக்கப்படாமல் இங்குள்ள பொக்கிஷ அறையிலும், அந்தப்புரத்திலும், மந்திராலோசனையறையிலும் ஸஞ்சாரம் செய்துகொண்டு இருக்கிறார்கள். அரசரே! அவர்களைத் தடுத்தால் அரசரான தேவரீருக்குப் பெருங்கோபம் வந்துவிடுகிறது என்னும் காரணத்தால் அவர்களைக கண்டவுடன் வணங்கி நாங்கள் அனைவரும் பேசாமலிருந்து விடுகிறோம்" என்று கூறினர்.

१०१. प्रणम्य दृष्टमात्रेण सर्वे तूष्णीं स्थिता वयम् ।
तच्छ्रुत्वा नृपतिः क्रुद्धो मन्त्रिणामशुभं वचः ॥
१०२. यन्मिथ्यारोपितं तीक्ष्णं चौर्यं भागवते जने ।
असहिष्णुस्ततो विद्वान् कर्णशल्योपमं तदा ॥
१०३. आहर्तुकामस्तां निन्दां व्याजहार वचः शुभम् ।
न चोरा वैष्णवा लोके सत्यं सत्यं मयोच्यते ॥
१०४. प्रमाणपूर्वकं तच्च दर्शयिष्यामि वः स्फुटम् ।
निन्दां भगवतः शृण्वन् तत्परस्य जनस्य वा ॥
१०५. ततो नापैति यस्सोपि यात्यधः सुकृताद् च्युतः ।
करोति निन्दां यो लोके विष्णोर्भागवतस्य वा ॥

---

## குலசேகரரின் சபதமும் மந்திரிகள் திருந்துதலும்

101 * - 113. வேதாந்தியே! மந்திரிகளின் அந்த அமங்களமான வார்த்தையைக் கேட்டுக் கோபங்கொண்ட அரசரான குலசேகரர், பேரறிவாளராகையால், பாகவதர்கள்மேலே ஏறிடப்பெற்றதாய், காதில் பாய்ந்த அம்பு போன்றதான கொடிய திருட்டுக் குற்றச்சாட்டை அடியோடு அப்போதே போக்கடிக்க விரும்பியவராய், “இவ்வுலகில் வைஷ்ணவர்கள் திருடர்களல்லர் என்று பலகால் சத்தியம்செய்து நான் கூறுகிறேன். அதை சபதம்செய்து உங்களுக்குத் தெளிவாகக் காட்டுகிறேன். எம்பெருமானைப்பற்றியோ, அவனடியார்களைப்பற்றியோ நிந்தையைக் கேட்டபின்பும் அவ்விடத்திலிருந்து வெளியேறாதவனும் புண்ணியமிழந்து கீழான கதிக்குச் செல்கின்றான். இவ்வுலகில் அத்தகைய நிந்தையைச் செய்பவனுடைய நாக்கைத் துண்டிக்க வேண்டும் என்பதே சாஸ்திரங்களின் முடிவு. பரமபுருஷனான விஷ்ணு-பிரமன் உருத்

१०६. जिह्वायाः च्छेदनं तस्य कर्तव्यं शास्त्रनिर्णयः ।
सर्वेषामधिको विष्णुर्ब्रह्मादीनां परः पुमान् ॥

१०७. तस्माद्विष्णोर्जगद्धेतोर्वैष्णवा ह्यधिकाः स्फुटम् ।
श्रीवैष्णवमहानिन्दां तां सहिष्ये कथं वत ॥

१०८. तद्भक्तोऽहं तादृशश्च महतीमयशस्करीम् ।
इत्युक्त्वा सहसा राजा वेदान्तिन्! कुलशेखरः ॥

१०९. स्नातः सचेलः सद्भक्त्या महाभागवताश्रयः ।
श्रीमद्भागवतार्थाय राजगोपालरूपिणः ॥

११०. विष्णोर्भगवतस्तस्य सन्निधौ निश्चलस्तदा ।
शुद्धा भागवता लोके न भवन्ति हि तस्कराः ॥

---

திரன் முதலான அனைவரைக் காட்டிலும பெரியவன். ஜகத்காரணனை அந்த விஷ்ணுவைக்காட்டிலும் வைஷ்ணவர்கள் சிறப்புற்றவர்கள் என்பதும் சாஸ்திரங்களால் தெளியப்பெற்ற விஷயம். (அப்படியிருக்கும்போது) ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பெரிய அபகீர்த்தியை விளைக்கும் இந்த நிந்தையை அத்தகைய விஷ்ணுபக்தனை நான் எப்படிப் பொறுத்துக்கொண்டிருப்பேன்?" என்றுகூறினர். பிறகு மஹாபாகவதர்களைத் தஞ்சமாகக்கொண்ட அரசரான குலசேகரர் உடனே உடுத்த வஸ்திரத்துடன் ஸ்நானம்செய்து அப்போதே எல்லாமறிந்த எம்பெருமானை ஸ்ரீராஜகோபாலனது கோயிலுககுச் சென்று, எம்பெருமானடியார்களுக்காக பக்தியோடும உறுதியோடும் "இவ்வுலகில பாகவதர்கள் பரிசுத்தமானவர்கள்; அவர்சள் திருடமாட்டார்கள்" என்று சபதம செய்து, அவர்கள அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே (குடத்திலுள்ள) பெரிய பாம்பைக் கையால் எடுத்தார். பெரிய அற்புதச் செயலான அதைக்கண்டு பயந்து, மந்திரிகள் (ஆரத்தை மறைத்துவைத்த) தங்களது செயலனைத்தையும் ராஜ

१११. इत्युक्त्वा पश्यतां तेषां जग्राह स महोरगम् ।
भीतास्ते मन्त्रिणस्तत्र तं दृष्ट्वा सुमहाद्भुतम् ॥

११२. विज्ञाप्य सकलं सम्यक् स्वकृत्यं राजसन्निधौ ।
हारमादाय सहसा प्रार्थयामासुरातुराः ॥

११३ अपराधक्षमार्थाय नृपतेः पादपद्मयोः ।
श्रीवैष्णवपदाब्जेषु प्रणामं विदधुश्च ते ॥

११४. ततो ह्यचिन्तयद्राजा भगवान् कुलशेखरः ।
न शौरिचिन्ताविमुखजनसंवासवैशसम् ॥

११५. वरं हुतवहज्वालापञ्जरान्तर्व्यवस्थितिः ।
इत्येवं सम्यगालोच्य भगवद्भक्तिपारगः ॥

---

ஸந்நிதி,யில் நன்கு விண்ணப்பித்து, உடனே ஹாரத்தை எடுத்துவந்து தங்களது குற்றத்தைப் பொறுக்கவேணும் என்று அரசரின் திருவடித்தாமரைகளில் வருத்தத்துடன் பிரார்த்தித்தார்கள். ஸ்ரீ வைஷ்ணவர்களின் திருவடிகளிலும் அவர்கள் வணங்கினர்.

## அரசைவிட்டு ஸ்ரீரங்கம் அடைதல்

*114-119.* அதற்குப்பின் அரசராய் மஹாஜ்ஞானியான குலசேகராழ்வார் "எம்பெருமானைப்பற்றிய சிந்தனையற்ற ஜனங்களுக்கு நடுவில் வாழும் படுகொலையைக் காட்டிலும், அக்,நிஜ்வாலையால் சூழப்பெற்ற கூட்டினுள் இருப்பது சிறந்தது" என்னும் சாஸ்திர வசனத்தை நன்கு ஆலோசித்து, ப,க,வத்,ப,க்தியின கரையைக்கண்டவராகையாலே, அந்த மந்திரிகளோடு கூடி வாழ்வதை மிகவும் பொறுக்க வொண்ணாததாக நினைத்து. விரைவில் தம் பிள்ளையான த்,ருட,வ்ரதனிடம் அரசை ஒப்படைத்து, பெரியவர்களான

११६. मत्वातिदुस्सहं तेषां सहवासं च मन्त्रिणाम् ।
दृढव्रताख्यं स्वसुतं राज्ये निक्षिप्य सत्वरम् ॥

११७. श्रीवैष्णवैर्महाभागैर्विबुधैश्चान्तरङ्गिभिः ।
निवृत्तराज्यः सन्तुष्टः प्रतस्थे रङ्गमञ्जसा ॥

११८. श्रीरङ्गं सत्पुरं प्राप्य दृष्ट्वा श्रीरङ्गनायकम् ।
नत्वा मुमोद भूलोकमहानिधिमिवाधनः ॥

११९. नीलांशजां चेरकुलप्रदीपां निजात्मजां रङ्गिणि सक्तचित्ताम् ।
समर्प्य तस्मै जगदीश्वराय स्वसंपदं यौतकमेव चक्रे ॥

१२०. प्रबन्धं देवगीताख्यं दिव्यं द्राविडभाषया ।
विधाय लोकरक्षार्थं सर्वं जगदपालयत् ॥

---

ஸ்ரீவைஷ்ணவர்களோடும், நெருங்கிய பேரறிவாளர்களோடும் மிக உகப்புடன் ராஜ்யத்தினின்றும் நீங்கி ஸ்ரீரங்க₃த்தை நோக்கிப் புறப்பட்டார், திருவரங்கப்பெருநகரை அடைந்து ஸ்ரீரங்கநாதனைக்கண்டு வணங்கி, செல்வமற்றவன் பூவுலகிலுள்ள மிகப் பெரியநிதி₄யைப் பெற்றதுபோலே மகிழ்ச்சியுற்றார். சேரகுலத்திற்குப் பெருவிளக்காயிருப்பவளும், நீளாதேவியின் அம்சமாகப் பிறந்தவளும், ஸ்ரீரங்க₃நாத₂னிடமே ஈடுபட்டவளுமான தன் பெண்ணை, ஜக₃ந்நாத₂னை அவனுக்கே ஸமர்ப்பித்து. தன் செல்வமனைத்தையும் ஸ்த்ரீத₄னமாக அரங்கனுக்கே அளித்தார். *

## பெருமாள் திருமொழியருளல்

120—127. தமிழ் பா₄ஷையிலே 'பெருமாள் திருமொழி' என்னும் தி₃வ்யப்ரப₃ந்த₄த்தை உலகை ரக்ஷிப்ப

---

* ஸ்ரீரங்க₃த்தில் அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும் சேரகுலவல்லித்தாயார் ஸ்ரீராமநவமியன்று நம்பெருமாளுடன் ஏகாஸனத்தில் வருடந்தோறும் உத்ஸவம் கண்டு அருளுகிறார்.

१२१. भगवद्वैभवं चात्र तद्भागवतवैभवम् ।
उभयं सम्यगेवार्यप्रबन्धे प्रतिपादितम् ॥

१२२. पञ्चोत्तरशतं तत्र गाथानां समुदीरितम् ।
अभिष्टुता दिव्यदेशास्तेन सप्तानघादरात् ॥

१२३. रङ्गेशं रङ्गनिलये श्रीनिवासं वृषाचले ।
रघूद्वहमयोध्यायां गोविन्दं चित्रकूटके ॥

१२४. कृष्णपुर्यां शौरिराजं सुन्दराङ्गं वनाचले ।
वाराहस्वामिनश्चैतानस्तौषीत्कुलशेखरः ॥
अस्मिन्नर्थे महान् श्लोकः श्रूयतेऽस्मद्यते! भुवि ।

---

தன்பொருட்டு அருளிச்செய்து உலகனைத்தையும் உய்வித்தார் குலசேகராழ்வார். ஆழ்வாருடைய இந்த அருளிச்செயலில் எம்பெருமானுடைய பெருமையும், அவனடியார்களுடைய பெருமையும் நன்கு விளக்கப்பெற்றுள்ளன. அதில் நூற்றைந்து பாடல்கள் பாடப்பெற்றன. குற்றமற்ற அன்போடு அந்த ஆழ்வாரால் ஏழு திவ்யதே3ஶங்கள் மங்க3ளாஶாஸனம் செய்யப்பெற்றுள்ளன. ஸ்ரீரங்க3த்தில் அரங்கநகரப்பனையும், திருமலையில் ஸ்ரீநிவாஸனையும், அயோத்தியில் இராமனையும், திருச்சித்ரகூடத்தில் கோவிந்தனையும், திருக்கண்ணபுரத்தில் சௌரிராஜனையும், *திருமாலிருஞ்சோலையில் அழகரையும், (திருவித்துவக்கோட்டில்) வராஹப்பெருமானையும் குலசேகரர் துதித்துள்ளார். நஞ்சீயரே! இது விஷயமாக (பின்வரும் பொருளுள்ள) சிறந்த ஶ்லோகமொன்று இவ்வுலகில் புகழ்பெற்றுள்ளது - " அயோத்தி, *திருமாலிருஞ்சோலை, திருமலை,

---

*மாலிருஞ்சோலை அழகரைப்பாடியுள்ள தமிழ்ப்பாடல்கள் எவையென்று விளங்கவில்லை. ஆழ்வாரால் பாடப்பெற்ற திருவாலி விடப்பட்டுள்ளது.

१२५. साकेतो वनभूधरो वृषगिरिः श्रीचित्रकूटस्थलम्
रङ्गं कृष्णपुरं च केरलतले वाराहनामा पुरी ।
सप्तैते कुलशेखरेण मुनिना श्रीदिव्यदेशाः स्तुताः
तान् प्रातः प्रतिवासरं पठति यः श्रीमान् स भूयान्नरः ॥

१२६. अनुग्रहेण स्वयमाप्ततत्त्वज्ञानोदयो रङ्गपतेर्दयालोः ।
अभाषत द्राविडभाषयाऽसौ गाथाशतेनास्य महाप्रबन्धम् ॥

१२७. श्रीशस्य रङ्गाधिपतेः स्वसूक्ते गाथाशते वेदशिखार्थगर्भे ।
चक्रे पुनः सप्ततिमञ्जनाद्रिधुरीणकंसारिरघूद्वहानाम् ॥

१२८. ततः श्रीरङ्गनगरं कञ्चित्कालं नृपोत्तमः ।
स्थित्वा त्वाराधयन् सम्यक् श्रीरङ्गेश्वरमद्भुतम् ॥

---

திருச்சித்திரகூடம், ஸ்ரீரங்கம், திருக்கண்ணபுரம், கேரள நாட்டிலுள்ள வராஹபுரி (வித்துவக்கோடு) என்னும் ஏழு திவ்ய தேசங்களும் குலசேகரரால் பாடப்பெற்றவை. அப்பாடல்களைத் தினந்தோறும் காலையில் எவன் பாராயணம் செய்கிறானோ, அம்மனிதன் கைங்கர்யச் செல்வம் மிக்கவனாகிறான். பரமகாருணிகனான அரங்கனின் அருளால் மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார் அவனைக் குறித்து நூறு பாடல்கள்கொண்ட பெரிய திவ்யப்ரபந்தத்தைத் தமிழ பாஷையில் செய்தார். உபநிஷத்துகளின் உட்பொருளைப் பொதிந்துகொண்டிருக்கும் நூறு பாடல்கள்கொண்ட அந்தப் பெருமாள்திருமொழியில் ஸ்ரீய:பதியான அரங்கநகரப்பனைக் குறித்தும், திருமலையப்பன், கண்ணன், இராமன் ஆகிய எம்பெருமான்களைக் குறித்தும் (1, 4, 6 முதல் 10 திருமொழிகளில்) எழுபது பாடல்களைப் பாடினார்.

## திவ்யதேச யாத்திரை

128-*131. அரசர்தலைவரான குலசேகராழ்வார் அற்புதனான அரங்கநகரப்பனை ஸ்ரீரங்கத்திலிருந்து சிறிது

१२९. विधाय बहुधा तत्र तदीयाराधनं तथा ।
कृतकृत्यस्ततस्सर्वदिव्यदेशदिदृक्षया ॥

१३०. सार्धं श्रीवैष्णवैस्सर्वैः प्रतस्थे कुलशेखरः ।
सर्वस्थलानि संसेव्य दिव्यदेशस्थलानि च ॥

१३१. तदीयाराधनं चक्रे तत्र तत्र महत्तरम् ।
कुरुकानगराभ्याशे ब्रह्मदेशाख्यमुत्तमम् ॥

१३२. नगरं प्राप सहसा कुलशेखरभूपतिः ।
नत्वा श्रीराजगोपालं ब्रह्मदेशपुराधिपम् ॥

१३३ तस्याभिप्रायवशतो वसंस्तत्रैव चादरात् ।
स्थित्वा भूम्यां सप्तषष्टिं वत्सरान्सुखवर्त्मना ॥

---

காலம் நன்கு ஆராதித்து, அங்கு பலவித₄மான ததீ₃யா ராத₄னங்களையும் செய்துவிட்டு, கடமையை நிறைவேற்றியவராய், அங்கிருந்து மற்ற தி₃வ்யதே₃ஶங்களைக் காண வேணும் என்னும் ஆசையால், எல்லா ஸ்ரீ வைஷ்ணவர்களோடும் புறப்பட்டார். (ஆழ்வார்கள் மங்களாஶாஸனம் பெற்ற) தி₃வ்யதே₃ஶங்களையும், மற்ற திருத்தலங்களையும ஸேவித்து, ஆங்காங்கு மிகப் பெரிய ததீ₃யாராத₄னங்களைச் செய்தார்.

## ப்₃ரஹ்மதே₃ஶத்தில் பரமபத₃மடைதல்

131* - 136. (இப்படி யாத்திரை செய்துவரும்போது) அரசரான குலசேகராழவார் திருக்குருகூர் என்னும் ஆழ்வார்திருநகரிககு அருகில் உள்ள ப்₃ரஹ்மதே₃ஶம் (மன்னனூர் கோயில்) என்று அழைக்கப்படும் மிகச்சிறந்த ஸ்த₂லத்தை விரைவில் அடைந்தார். அந்த ப்₃ரஹ்மதே₃ஶக்கோயிலில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ ராஜகோ₃பாலனை வணங்கி, அப்பெருமானுடைய திருவுள்ளப்படி அங்கேயே ஆர்வத்துடன் வாழ்ந்துகொண்டு இந்நிலவுலகில் அறு

१२४. पाण्ड्यदेशे ब्रह्मदेशे राजगोपालसन्निधौ ।
वैकुण्ठनगरं प्राप महात्मा कुलशेखरः ॥
१२५. विख्यातराजर्षिकुलेऽवतीर्य वितत्य भूमौ भगवत्प्रभावम् ।
विरिञ्चिरुद्रादिसुरैरगम्यं विष्णोः पदं सम्यगवाप धीरः ॥
१२६. दिव्यं यत्तदनूपमाद्भुततरं श्रोतुः श्रवानन्ददं
विख्यातं कुलशेखरस्य चरितं भक्ताब्जसूर्योदयम् ।
पुण्यं पापविनाशनं शुभकरं संपत्करं सर्वदा
ये शृण्वन्ति पठन्ति सौम्यहृदयास्ते यान्ति विष्णोः पदम् ॥
इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे कुलशेखरार्यचरितं नाम
सप्ताशीतितमोऽध्यायः ॥

---

பத்தேழு வருடங்கள் இனிது வாழ்ந்தபின் மஹாத்மாவான குலசேகரர், பாண்டியநாட்டிலுள்ள அந்த ப்ரஹ்ம தேஶத்தில் ராஜகோபாலன் திருமுன்பே வைகுண்ட நகரத்தை அடைந்தார். பேரறிவாளரான குலசேகரர் புகழ்பெற்ற ராஜரிஷிகளின் குலத்தில் பிறந்து, எம்பெருமானுடைய பெருமையை இவ்வுலகில் பரவச்செய்து, பிரமன் உருத்திரன் முதலானவர்களாலும் அடைதற்கரிய விஷ்ணுவின் பரமபதத்தை அடைந்தார். அழகிய மனத்தையுடைய எவர்கள் எப்போதும் அழகியதும், ஒப்பற்றதும், மிக ஆச்சரியமானதும், கேட்பார்க்குச் செவிக்கினியதும், புகழ்பெற்றதும், பக்தர்களாகிற தாமரைகளை ஸூர்யோதயம்போல மலரச்செய்வதும், புண்ணியமும், பாபத்தை நீக்குவதும், மங்களமளிப்பதும், செல்வமளிப்பதுமான குலசேகரரின் வரலாற்றைக் கேட்பதோ, படிப்பதோ செய்கிறார்களோ, அவர்கள் விஷ்ணுவின் பரமபதத்தை அடைகிறார்கள்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் பட்டார்யவேதாந்தி ஸம்வாதத்தில்
குலசேகராழ்வாரின் சரிதத்தை விளக்கும் எண்பத்தேழாம்
அத்தியாயம் நிறைவுற்றது.

॥ अष्टाशीतितमोऽध्यायः ॥

१. प्रणिपत्य स वेदान्ती भट्टार्यं देशिकोत्तमम् ।
विष्णुचित्तस्य चरितं परिपप्रच्छ सादरम् ॥

२. श्रीविष्णुचित्तचरितं श्रेष्ठं वै गुरुपुङ्गव! ।
ब्रूहि मे विशदं विद्वन्! भक्ताय करुणार्णव! ॥

३. प्रतिगृह्य वचस्तस्य भट्टार्यः शिष्यवत्सलः ।
व्याजहार शुभं वाक्यं शिष्यं वेदान्तिनं प्रति ॥

४. विष्णुचित्तस्य चरितं विमलं ज्ञानसाधनम् ।
दशानां महतस्तस्य शृणु वक्ष्यामि सांप्रतम् ॥

५. अग्रे वक्ष्यामि वेदान्तिन्! तन्महत्त्वस्य कारणम् ।
प्राग्भागे केरलस्याथ दक्षिणाम्भोनिधेस्तटे ॥

---

# எண்பத்தெட்டாவது அத்தியாயம்

## ஸ்ரீ விஷ்ணுசித்தரின் அவதாரம்

### நஞ்ஜீயரின் கேள்வியும் பட்டரின் பதிலும்

*1-4.* வேதாந்தி நஞ்ஜீயர் ஆசார்ய ஸ்ரேஷ்டரான ஸ்ரீ பராஸரபட்டரை அன்புடன் வணங்கி "கருணைக்கடலாய், பேரறிவாளரான ஆசார்ய ஸ்ரேஷ்டரே! மிகச் சிறந்ததான ஸ்ரீ விஷ்ணுசித்தரின் வரலாற்றை பக்தனை எனக்குத் தெளிவாகக் கூறுவீர்" என்று விஷ்ணுசித்தரின் சரிதத்தைப்பற்றிக் கேட்டார். அவருடைய வார்த்தையை ஏற்றுக்கொண்டு ஸிஷ்யரிடம் அன்புடையவரான பட்டர் சீடரான வேதாந்தியைக்குறித்து "பத்து ஆழ்வார்களின் சரிதங்களுக்குள் குற்றமற்றதாய், ஜ்ஞானத்தை அளிப்பதாயிருக்கும் பெரியவரான விஷ்ணுசித்தருடைய வரலாற்றை இப்போது கூறுகிறேன்; கேட்பீராக" என்று அருளினார்.

६. पाण्ड्यदेशो बभूवार्यः चोलदेशस्य दक्षिणे ।
तत्र धन्विपुरं नाम दिव्यमस्ति स्थलं महत् ॥
७. विष्णोः प्रीतिकरं स्थानं यच्च त्रैलोक्यविश्रुतम् ।
विराजते पुण्यतीर्थं सप्तसागरनामकम् ॥
८. क्षीराब्धिवासं स विहाय भूम्यां तत्राविरासीत् वटपत्रशायी ।
संरक्षणार्थं भगवान्मुकुन्दः तत्रागतास्सप्त महार्णवाश्च ॥
९. ब्रह्मादयस्सर्वसुरासुरेन्द्राः वाणीमुखाः सर्वसुरस्त्रियश्च ।
सेवार्थमेते निवसन्ति विष्णोः देवर्षयस्तत्र च नारदाद्याः ॥

---

## ஸ்ரீவில்லிபுத்தூரின் பெருமை

5-11. வேதாந்தியே! அந்த விஷ்ணுசித்தருடைய பெருமைக்குக் காரணம் இன்னதென்பதை முதலில் இவ் வத்தியாயத்தில் கூறுகிறேன். தெற்கு ஸமுத்ரத்தின் கரையில் கேரள நாட்டுக்குக் கிழக்குதிக்கில் சோழதேசத் திற்குத் தெற்கேயுள்ள பாண்டியநாட்டில் இப்பெரியவர் அவதரித்தார். அந்நாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூர் என்னும் பெரிதாய் அழகியதான ஸ்தலமொன்றுண்டு. அத்தலம் மூவுலகிலும் புகழ்பெற்றதாய், திருமாலுக்கு உகப்பை விளைப்பதாயுள்ளது. அங்கு ஏழுகடல் என்னும் புண்ய தீர்த்தமும் விளங்குகிறது. திருப்பாற்கடல் நாதனான பகவான் முகுந்தன் திருப்பாற்கடலைவிட்டு உலகை ரக்ஷிப் பதின் பொருட்டு பூமியில் வடபத்ரஶாயியாக அங்கு தோன்றினான். ஏழுகடல்களும் அங்கு வந்தன. பிரமன் முதலான தேவர் தலைவர்களும், அஸுரர் தலைவர்களும் ஸரஸ்வதி முதலான தேவஸ்த்ரீகளும், நாரதர் முதலான தேவரிஷிகளும் அந்த எம்பெருமானை ஸேவிப்பதற்காக அங்கு வாழ்கிறார்கள். அதனால் பெரியதான அந்த ஸ்ரீவில்லிபுத்தூர் மிகப் புண்யமானதாய், எல்லாத் தலங்களி லும் புகழ்பெற்றதாய், திருமாலின் திருவடித்தாமரைகளில்

१०. ततो महद्धन्विपुरं सुपुण्यं विख्यातमेकं सकलस्थलेषु ।
विद्वज्जनैर्विष्णुपदाब्जभृङ्गैः संपूर्णमासीत्सकलोत्सवैश्च ॥
११. अथाभवद्धन्विवनाभिधाना पाण्ड्याभिगुप्ता नगरी प्रतीता ।
यत्सम्पदालोकनलज्जयैव पुरं सुराणामभजत्सुमेरुम् ॥
१२. तत्र वेदविदां श्रेष्ठः महात्मा द्विजपुङ्गवः ।
यः शालावृतगोत्राब्धिचन्द्रमा वैष्णवोत्तमः ॥
१३. श्रीबोधायनसूत्रश्च यजुश्शाखी पुरश्शिखः ।
मुकुन्दार्य इति श्रीमान् बभूव भगवत्प्रियः ॥
१४. पद्माख्या तस्य भार्यासीत् काचित्साध्वी बभूव ह ।
सन्तानकामस्सततं भार्यया सह सत्तमः ॥
१५. वटपत्रशयानं तं प्रार्थयामास भूरिशः ।
संप्रार्थितस्ततो देवो मुकुन्दार्येण केशवः ॥

---

வண்டுபோல் ஈடுபட்ட பேரறிவாளர்கள் நிறைந்ததாய், எல்லா உத்ஸவங்களாலும் நிறைவுபெற்றதாய் இருந்தது. அந்தப் புகழ்பெற்ற ஸ்ரீவில்லிபுத்தூர் பாண்டிய அரசர்களால் ரக்ஷிக்கப்பட்டு வந்தது, அவ்வூரின் செல்வத்தைக் கண்டு வெட்கமுற்று, தேவர் தலைநகர் மேருமலைக்கு மேலிடத்தை அடைந்தது. ["நாகமேந்து மேருவேற்பை" என்னும் திருச்சந்த விருத்தத்தொடரின் வ்யாக்யானம் காண்க]

## பெற்றோர் பெருமை

11-*14. அவ்வூரில் ஶாலாவ்ருதகோ₃த்ரமாகிற கடலில் உதித்து அதைப் பொங்கச்செய்யும் சந்திரன்போன்றவரும், வேதத்தை அறிந்தவர்களில் சிறந்தவரும், மஹாபுருஷரும், ப்₃ராஹ்மணஶ்ரேஷ்ட₂ரும் வைஷ்ணவோத்தமரும், போ₃தா₄யனஸூத்ரத்தையும் யஜுஶ்ஶாகை₂யையுமுடையவரும், பூர்வஶிகையை உடையவரும், கைங்கர்யச் செல்வத்தையுடையவரும், எம்பெருமானுக்கு இனியவருமான முகுந்த₃ப₄ட்டர் என்பவர் இருந்தார். 'பத்₃மா' என்னும் திருநாமமுடைய மங்கைநல்லாள் அவருக்கு மனைவியாயிருந்தாள்.

१६. अपत्यलाभं प्रददौ तस्मै भक्ताय सादरम् ।
तवः क्रोधनवर्षे तु ग्रीष्मतौ ज्येष्ठमासके ॥
१७. शुक्लपक्षे हरितिथौ सुलग्ने भानुवासरे ।
स्वातीतारे खगाधीशभागेन द्विजपुङ्गवात् ॥
१८. पद्मार्यायां मुकुन्दार्यात विष्णुचित्तस्ततोऽजनि ।
अस्यावतारश्लोकाश्च गीयन्ते प्रथिता भुवि ॥
१९. श्रीज्येष्ठमासे पवमानतारे ज्येष्ठो गुणेनाजनि भट्टनाथः ।
कृताभिरूपः स गरुत्मदात्मा कटाक्षलक्ष्यः कमलापतेर्यः ॥

---

## விஷ்ணுசித்தர் அவதாரம்

*14*-21.* மனைவியோடுகூடி அப்பெரியவர் தமக்குப் பிள்ளையைவேண்டி வடபத்ரஶாயியை எப்போதும் ப்ரார்த்தி₂த்து வந்தார். முகுந்தப₄ட்டரால் மிகவும் ப்ரார்த்தி₂க்கப்பட்ட அக்கேஶவன் ப₄க்தரான அவருக்குக் குழந்தைகளை அன்புடன் அளித்தான். (நாலு குழந்தைகள் பிறந்த) பிறகு குரோதன வருடத்தில் க்₃ரீஷ்மருதுவில் ஆனி மாதத்தில் ஶுக்லபக்ஷத்தில் ஏகாத₃ஶி திதியில் ஞாயிற்றுக் கிழமையன்று ஸ்வாதீ நக்ஷத்ரத்தில் க₃ருட₃னுடைய அம்ஶத்தோடு அந்தணர்தலைவரான முகுந்த₃ப₄ட்டரின் மனைவியான பத்₃மாதே₃வியிடம் விஷ்ணுசித்தர் அவதரித்தார். இவரைப்பற்றிய (பின்வரும் பொருளுள்ள) அவதார ஶ்லோகங்கள் உலகில் புகழ்பெற்று விளங்குகின்றன:—"ஜ்யேஷ்ட₂ (ஆனி) மாதத்தில் வாயுவை தேவதையாகக்கொண்ட ஸ்வாதீ நக்ஷத்ரத்தில் கு₃ணங்களால் ஜ்யேஷ்ட₂ராய் (பெரியவராய்), அழகியவராய், க₃ருட₃னின் அம்ஶமாயிருப்பவராய், லக்ஷ்மீநாத₂னின் கடாக்ஷத்திற்குப் பாத்திரமாயிருப்பவரான பட்டர்பிரான் அவதரித்தார்" "பாண்டிய மன்னனின் ஸபை₄யில் அப்போதே (எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபையாலே) உண்டான மேத₄ாவிலாஸத்தாலே ப₄க₃வத்பரத்வத்தை விரித்து, வித்₃வான்களை வெற்றிகொண்டு யானைமேல் செல்கையில,

२०. तादात्विकप्रतिभया भगवत्परत्वं
विस्तीर्य पाण्ड्यकटके विजयी गजेन ।
गच्छन् प्रियादुपगते गरुडेन नाथे
प्रेम्णाशिषं रचयति स्म नमोस्तु तस्मै ॥

२१. ज्येष्ठे स्वातीभवं विष्णोः रथांशं धन्विसत्पुरे ।
प्रपद्ये श्वशुरं विष्णोः विष्णुचित्तं पुरश्शिखम् ॥

२२. चत्वारो भ्रातरस्तस्य बभूवुस्सुमहौजसः ।
भट्टनाथस्य वेदान्तिन्! भगवद्भक्तिपारगाः ॥

२३. तन्मध्ये सुमहातेजाः भट्टनाथो महायशाः ।
व्यरोचत कलापूर्णो ग्रहैरिव निशाकरः ॥

२४. जातकर्मादिसंस्कारान् यथाकालं यथाविधि ।
अकरोद्विष्णुचित्तस्य मुकुन्दार्यः पिता तदा ॥

---

மிக உகப்புடன க₃ருட₃ன்மேல் ஏறிவரும் எம்பெருமானைக் கண்டு பொங்கும் பரிவாலே அவனுக்குப் பல்லாண்டு பாடிய அந்தப் பெரியாழ்வாருக்கு நமஸ்காரம்" "ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆனி மாதம் ஸ்வாதியில் விஷ்ணுவின வாஹனமான க₃ருட₃னின் அம்ஶமாய் அவதரித்தவராய், பூர்வ ஶிகையை உடையவராய், அரங்கனுக்கு மாமனுரான விஷ்ணுசித்தரை ஶரணமடைகிறேன்."

## ஸம்ஸ்காரங்கள்

22-*26, வேதாந்தியே! அந்த பட்டர்பிரானுக்குப் பெரிய தேஜஸ்விகளாய் ப₄க₃வத்₃ப₄க்தியைக் கரைகண்டவர்களான நாலு (மூத்த) ஸஹோத₃ரர்கள் இருந்தனர். அவர்களுக்கிடையில் பட்டர்பிரான் பெரிய தேஜஸ்வியாய், பெரும் புகழாளராய். கிரணங்களோடுகூடிய நிறைமதிச் சந்திரன்போல் விளங்கினுர். தந்தையான முகுந்த₃ப₄ட்டர் ஜாதகர்மம் முதலான (அந்தணர்க்குரிய) ஸம்ஸ்காரங்களை உரிய காலங்களில் முறைப்படி விஷ்ணுசித்தருக்கு அவ்வப்

२५. वैकुण्ठात् भुवमासाद्य देवो सूत्रवतीसखः ।
विधाय पञ्चसंस्कारान् भट्टनाथाय सादरम् ॥
२६. तेन संपूजितस्सम्यक् स्वधाम प्रत्यपद्यत ।
तस्य विष्णोर्भगवतः निर्हेतुककटाक्षतः ॥
२७. प्रह्लादवद्भट्टनाथो ह्यभवत् जन्मवैष्णवः ।
सहजं वैष्णवं दास्यं नैजं संप्राप्य वैष्णवः ॥
२८. अकिञ्चित्कुर्वतो नास्ति शेषत्वमिति निश्चितम् ।
कर्तुकामो भगवतो नित्यं कैङ्कर्यमादरात् ॥
२९. किञ्चित्तत्र च कैङ्कर्यं कर्तव्यमिति बुद्धिमान् ।
वेदान्तिन्! भट्टनाथार्यो हृदि सम्यगचिन्तयत् ॥
३०. दशावतारान् वेदान्तिन्! सम्यगालोडयत्तदा ।
कृष्णावतारे तस्यासीत् प्रावण्यं सुमहत्ततः ॥

---

போது செய்தார். ஸூத்ரவதியின் கணவரான விஷ்வக்ஸேனர் வைகுண்டத்திலிருந்து பூமிக்கு வந்து அன்போடு பட்டர்பிரானுக்குப் பஞ்சஸம்ஸ்காரங்களைச் செய்து அவரால் நன்கு பூஜிக்கப்பட்டவராய்ப் பரமபதமடைந்தார்.

## கைங்கர்யத்தில் ஆசை

26*-*29. எம்பெருமானாகிற திருமாலின் நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே ப்ரஹ்லாதனைப்போலே விஷ்ணுசித்தர் பிறந்ததுமுதல் வைஷ்ணவராயிருந்தார். கூடப்பிறந்த இயல்வான விஷ்ணுகைங்கர்ய விருப்பத்தோடு கூடிய வைஷ்ணவரான அவர் 'கைங்கர்யம் செய்யாவிடில் ஶேஷத்வும் ஸித்திக்காது' என்று ஶாஸ்திரங்களில் நிஶ்சயிக்கப்பட்டிருக்கிறபடியால், அன்போடு எம்பெருமானுக்கு நித்ய கைங்கர்யம் செய்ய விரும்பியவராய், எம்பெருமானுக்கு ஏதாவதொரு கைங்கர்யம் செய்யவேண்டும் என்னும் எண்ணமுடையவரானார்.

३१. एष नारायणः श्रीमान् क्षीरार्णवनिकेतनः ।
नागपर्यङ्कमुत्सृज्य ह्यागतो मधुरां पुरीम् ॥
३२. पुण्या द्वारवती तत्र यत्रास्ते मधुसूदनः ।
साक्षाद्देवः पुराणोऽसौ सहि धर्मस्सनातनः ॥
३३. भगवानवतीर्यैत्र साधुसंरक्षणाय च ।
माणिक्यवर्णो देवेशः विभूतिद्वयनायकः ॥
३४. ब्रह्मेशसनकादीनामपि ध्यानाद्यगोचरः ।
स भक्तसुलभः श्रीमान् भगवान्नन्दगोकुले ॥
३५. गोपिकाधीनवृत्तिश्च तन्निर्माल्यधरस्सदा ।
नवनीतापहारादिकरणे ताडितो भृशम् ॥

---

## க்ருஷ்ணப₄க்தியும் புஷ்ப கைங்கர்யமும்

29*-42. வேதா₃ந்தியே! அந்த பட்டர்பிரான் த₃ஶாவதாரங்களுக்குள் எது சிறப்புடையது என்று தம நெஞ்சில் நன்கு சிந்தித்து ஆராய்ந்தார். அப்போது க்ருஷ்ணாவதாரத்தில் அவருக்கு மிகவும் ஈடுபாடு ஏற்பட்டது. (இதிஹாஸ புராணங்களில்) "லக்ஷ்மீநாத₂னை இந்த நாராயணன் திருப்பாற்கடலில் பள்ளிகொண்டவனாய், திருவனந்தாழ்வானாகிற படுக்கையைவிட்டு வடமதுரைக்கு வந்தானன்றோ. மது₄ஸூத₃நனை அவன் புண்யமான த்₃வாரகையில் இருந்தான். பழையோனை இவனே நேரே தெய்வமெனத் தக்கவன். அவனே பழமையான உபாயமுமாவானன்றோ. மணிவண்ணனாய், தே₃வர் தலைவனாய், உப₄யவிபூ₄திநாயகனாய், பிரமன் உருத்திரன் ஸனகர் முதலானோர்களுக்கும் ஶ்ரவணமனனத்₄யானங்கள் செய்ய அரியவனாய், அடியார்க்கு எளியவனாய், ஸ்ரீய: பதியான அந்த எம்பெருமான் நந்தனுடைய ஆய்ப்பாடியிலே அவதரித்து, அங்குள்ள ஆய்ச்சிகளுக்குப் பரதந்த்ரனாயிருப்பவனாய், அவர்கள் பு₄ஜித்து மிகுந்ததை எப்போதும் பு₄ஜிப்பவனாய், வெண்ணெய் களவுகாணும்போது அவர்களால் அடிக்கப்பட்டவனாய், உரலில் கட்டப்பட்டபோதும்

३६. यद्युलूखलबन्धादिकरणे दृढसम्मतः ।
अनिष्टवारणं तेषां कुर्वंस्तत्र समास्थितः ॥

३७. ततः कंसवधार्थाय मधुरामागतः पुरीम् ।
कंसकार्यकृतस्तस्य सुदाम्नः सदनं प्रति ॥

३८. स्वयमेवार्पितां मालां अग्रहीत् साग्रजस्ततः ।
प्रसादपरमौ नाथौ मम गेहमुपागतौ ॥

३९. धन्योऽहमर्चयिष्यामीत्याह माल्योपजीवनः ।
अर्थं महान्तं ज्ञात्वैवं श्रीकृष्णे दृढभक्तिमान् ॥

४०. श्रीबृन्दावनकैङ्कर्यं विधाय भगवत्परः ।
वटपत्रे शयानाय श्रीधन्विपुरवासिने ॥

४१. मनोहरास्सुगन्धाश्च तुलसीपुष्पमालिकाः ।
नित्यं समर्पयंस्तस्थौ विष्णवे बृहतेऽनघ! ॥

---

பொருந்தி இசைந்திருந்தவனாய், அவர்களுடைய அநிஷ்டங்களையெல்லாம் ஆய்ப்பாடியிலே போக்கிக்கொண்டிருந்தவனாய், அதற்குப்பின கம்ஸனைக் கொல்லுவதற்காக வடமதுரைக்கு வந்தவனாய், கம்ஸனுக்கு மாலைகட்டித்தரும மாலாகாரரின் வீட்டைத்தேடிச்சென்று, அவரால் 'அருள் நிரம்பியவர்களான ஸ்வாமிகள் என் வீடு தேடி வந்தார்கள்; நான் பேறுபெற்றேன்; அவர்களை ஆராதிக்கிறேன் என்று மாலாகாரர் சொன்னார்' [வி. பு.] என்கிறபடியே உகப்புடன் அளிக்கப்பட்ட மாலையைத் தமையனோடு ஏற்றுக்கொண்டானன்றோ" என்று கூறப்பட்ட இந்தப்பெரிய ஸாஸ்த்ரார்த்தத்தை இவ்வண்ணம் அறிந்து, ஸ்ரீக்ருஷ்ணனிடம் உறுதியான பக்தியுடையவராய், அவனிடம் ஈடுபட்டவராய், நந்தவன கைங்கர்யத்தைச் செய்துகொண்டு ஸ்ரீவில்லிபுத்தூரில் எழுந்தருளியிருக்கும் வடபத்ரஸாயியான எம்பெருமானுக்கு அழகிய நறுமணம்மிக்க துளஸி முதலான பூக்களால் தொடுக்கப்பட்ட மாலைகளை ஸமர்ப்பித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார் விஷ்ணுசித்தர்.

४२. एवं महात्मा भगवत्परायणो मुकुन्दसूनुः मुदितानुरागः ।
श्रीविष्णुकैङ्कर्यरतः स धन्विपुरे विरेजे महतां समाजे ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे भट्टनाथावतारकथनं नाम अष्टाशीतितमोऽध्यायः ॥

एकोननवतितमोऽध्यायः ॥

१. तस्य धन्विपुरस्याथ पञ्चयोजनमात्रतः ।
आसीत्कौबेरदिग्भागे मधुराख्या महापुरी ॥

२. योजनानां द्विषट्के च श्रीरङ्गस्याथ दक्षिणे ।
तस्यां पुर्यां महातेजाः धार्मिकः पाण्ड्यभूपतिः ॥

---

அத்₄யாய நிக₃மநம்

42. இவ்வண்ணமாக மஹாத்மாவாய், எம்பெருமானையே எல்லாமாகக் கொண்டவராய், பொங்கும் பரிவுடையவராய், முகுந்த₃ப₄ட்டரின் பிள்ளையான அந்த விஷ்ணுசித்தர் ஸ்ரீவில்லிபுத்தூரில எம்பெருமானுடைய கைங்கர்யத்தில் ஈடுபட்டவராய், பெரியோர்களின் கூட்டத்தில் விளங்காநின்றார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ப₄ட்டார்ய வேதா₃ந்தி ஸம்வாத₃த்தில் பட்டர்பிரானுடைய அவதாரத்தைக்கூறும் எண்பத்தெட்டாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## எண்பத்தொன்பதாம் அத்தியாயம்

### பரதத்துவ நிர்ணயம்

#### வல்லபதேவன் ஆட்சி

1-*4. அந்த ஸ்ரீவில்லிபுத்தூருக்கு ஐந்து யோஜனை (ஒரு யோஜனை என்பது சுமார் எட்டுமைல்) வடக்கேயும், ஸ்ரீரங்கத்துக்குப் பன்னிரண்டு யோஜனை தெற்கேயும்

३, आसीत् वल्लभदेवाख्यः विद्वान्कश्चित् बुधप्रियः ।
दुर्बलं बलवान् राष्ट्रे न यथा बाधते जनम् ॥
४. तथैव राज्यं धर्मेण प्रशशास महीपतिः ।
ततो वल्लभदेवाख्यो धार्मिको धरणीधरः ॥
५. नगरीशोधनार्थाय निशीथे निर्ययौ तदा ।
वीथ्यां बहिर्विनद्यां तु कस्यचिद्वेश्मनोऽनघ! ॥
६- एकाकिनं शयानं तमपश्यत् वल्लभो द्विजम् ।
विलोक्यान्तिकमागम्य राजा वचनमब्रवीत् ॥

---

'மதுரை' என்னும் பெரிய நகரம உள்ளது. அந்த நகரத்தில் மிக்க தேஜஸ் உடையவனுய், அறவழி நடப்பவனுய், அறிவாளியாய், அறிவாளிகளை உகப்பவனுய், 'வல்லப₄ தேவன்' என்னும் பெயருடையவனை ஒரு பாண்டிய அரசன் இருந்தான். தன் ராஜ்யத்தில் வலிமை குறைந்தவர்களை வலிமைமிக்கவர்கள் நலியாதபடி அறவழியில அவ்வரசன் ஆட்சிபுரிந்து வந்தான்.

## நகர சோதனையும் அந்தணனும்

*4*-8.* அந்த வல்லபதேவன் என்னும் தா₄ர்மிஷ்ட₂னை அரசன் அப்போது ஒருநாள் இரவில் நகர சோதனையின் பொருட்டுப் புறப்பட்டான. குற்றமற்றவரே! அப்போது ஒரு வீதியில் ஒரு வீட்டின் வெளித்திண்ணையில் தனியாக ஓர் அந்தணன் படுத்திருப்பதை வல்லபதேவன் கண்டான். அவனைப்பார்த்து அவன் அருகில் சென்று அவ்வரசன் "நீர் யார்? எங்கிருந்து இங்கு வந்திருக்கிறீர்? இவ்விஷயத்தை விரைவில எனக்குச் சொல்லும்" என்று கேட்டான். அரசனின் வார்த்தையைச் செவியுற்ற அவ்வந்தணன் "அரசனே! புண்ய தீர்த்தங்கள் ஆடுவதற்காக யாத்திரை

७. को भवानिह संप्राप्तः कुत्रत्यस्तद्वदाशु मे ।
स राज्ञो वचनं श्रुत्वा ब्राह्मणस्तमथाब्रवीत् ॥

८. ब्राह्मणस्तीर्थगो राजन् कृतगङ्गावगाहनः ।
सेतुस्नानेच्छया गच्छन् अत्राहं समुपागतः ॥

९. तस्य तद्वचनं श्रुत्वा प्रहृष्टेनान्तरात्मना ।
प्रणिपत्य द्विजश्रेष्ठं राजा वचनमब्रवीत् ॥

१०. भवत्संदर्शनादेव कृतार्थोऽस्मि न संशयः ।
तथापि मे परं पथ्यं वदात्महितमञ्जसा ॥

११. ब्राह्मणस्तद्वचः श्रुत्वा वेदान्तिन् ! तस्य सादरम् ।
समीचीनतरं श्लोकं जगाद नृपतिं तदा ॥

---

செல்லும்போது கங்கையில் தீர்த்தமாடிவிட்டு ஸேது ஸ்நானத்துக்காகச் செல்லும் வழியில் இங்கு தங்கியிருகக்கிறேன்'' என்று கூறினன்.

## ஆத்மஹிதமான ஶ்லோகம்

9-12. அவ்வந்தணனுடைய அந்த வார்த்தையைக் கேட்ட அரசன் உகந்த நெஞ்சினனாய் அவ்வந்தணனை வணங்கி, "தேவரீரை ஸேவித்ததாலேயே பெரும்பயன் பெற்றேன் என்பதில் ஐயமில்லை. இருந்தபோதிலும் ஆத்மாவுக்கு ஹிதத்தைத் தெரிவிக்கும் ஒரு ஶ்லோகத்தை எனக்காக விரைவில் சொல்லும்'' என்று கேட்டான். வேதாந்தியே! அவ்வந்தணனும் அரசனின் வார்த்தையைக்கேட்டு மிக அழகிய பொருளுடைய ஶ்லோகமொன்றை அன்போடு அவ்வரசனுக்கு அப்போதே சொன்னான். (அதன்பொருள் பின்வருமாறு—) "விவேகியாயிருப்பவன் நான்கு மாதங்கள் மழைபொழியும்போது உண்டு வாழ்வதற்காக மற்ற எட்டு மாதங்களிலும் முயல

१२. वर्षार्थमष्टौ प्रयतेत मासान् निशार्थमर्धं(न्यं) दिवसं यतेत ।
वार्धक्यहेतोर्वयसा नवेन परत्र हेतोरिह जन्मना च ॥

१३. तं तदा श्लोकमाकर्ण्य व्युत्पन्नः स नृपोत्तमः ।
श्लोकार्थं सम्यगेवाशु ज्ञात्वा धीमानचिन्तयत् ॥

१४. दृष्टादृष्टे उभे ह्येते सम्पाद्ये वै ततः किल ।
विचारः कोऽपि वा नास्ति मम दृष्टे महीपतेः ॥

१५. अदृष्टयत्नः कर्तव्यः सांप्रतं सहसा मया ।
कोवा मोक्षप्रदो देवः तत्र ते बहवः सुराः ॥

---

வேண்டும்; இரவில் இன்புறுவதற்காகப் பகலில் பணம்பெற முயலவேண்டும். வயதுமுதிர்ந்த காலத்தில வாழப் பொருள் சேர்ப்பதற்காக வாலிபப்பருவத்தில் மிகவும் உழைக்க வேண்டும்; (இவைபோலவே) மறுமையில் இன்புறுவதற்காக இப்பிறப்பாகிற இம்மையில் முயலவேண்டும்" (என்பது பொருள்.)

## அரசனின் சிந்தனை

*13–16.* அரசர் தலைவனான அந்த வல்லபதேவன் அப்போது அந்த ஶ்லோகத்தைக்கேட்டு, சொற்பொருளை அறியும் வல்லமையுடைய அறிவாளியாகையாலே, அந்த ஶ்லோகத்தின் பொருளை நன்கு விரைவாக அறிந்து பினவருமாறு சிந்திககலுற்றான் — "எந்த மனிதனும் இம்மையின்பத்தையும், மறுமையின்பத்தையும் பெற முயலவேண்டும் எனபது வெளிப்படை. அவற்றில் அரசனான எனக்கு இம்மையின்பத்தைப்பற்றிக் கவலைப்படவேண்டிய தொன்றுமில்லை. ஆகையால், மறுமையில் பேரின்பம் அடைவதற்கு இப்போதே முயலவேண்டும். அந்தப் பேரின்பமாகிற மோக்ஷத்தை அளிக்கவல்ல தேவன் யார் என்று விளங்கவில்லையே; தேவர்கள் பலராகவன்றோ இருக்

१६. प्रत्याकुलान्तः करणः सञ्चिन्त्यैवं महीपतिः ।
तं ब्राह्मणं समाराध्य विवेशान्तःपुरं तदा ॥
१७. प्रभातायां तु शर्वर्यां कृतकर्मा नृपोत्तमः ।
सम्पत्पूर्णं समाहूय पुरोहितमथाब्रवीत् ॥
१८. पुरुषार्थप्रदं वस्तु शास्त्रनिर्णयपूर्वकम् ।
ब्रूहि मे मोक्षसिद्ध्यर्थं जगज्जन्मादिकारणम् ॥
१९. संप्रहृष्टस्स तद्वाक्यं निशम्याथ पुरोहितः ।
वेदान्तिन्! भूपतिं सम्यक् व्याजहार वचश्शुभम् ॥
२०. धर्मज्ञसमयो वेदाः प्रमाणं च नृपोत्तम! ।
अतश्शास्त्रविदस्सर्वान् समाहूय बुधर्षभान् ॥

---

கிருர்கள்" என்று இவவண்ணமாகச் சிந்தித்து மனம் கலங்கியவனுய், அந்த அந்தணனை உபசரித்துவிட்டு அந்தப்புரத்தினுள் அப்போதே நுழைந்தான் அவ்வரசன்.

## செல்வநம்பியின் ஆலோசனை

17-*22. இரவு முடிந்தவுடன் அவ்வரசன் காலைக்கடன் களைச் செய்துவிட்டு, தனது புரோஹிதரான செல்வநம் பியை அழைத்து "மோக்ஷமாகிற மேலான பயனை நான் அடையும்பொருட்டு உலகைப்படைத்து அளித்து அழிப்ப தாய், மோக்ஷ புருஷார்த்த₂த்தை அளிப்பதான பரம பொருள எது என்பதை ஶாஸ்த்ரங்களில் முடிவு கட்டி யிருக்கிறபடி எனக்குக் கூறுவீர்" என்று கேட்டான். வேதா₃ந்தியே! புரோஹிதர் அந்த வார்த்தையைக்கேட்டு மிக உகந்தவராய், அவ்வரசனைப்பார்த்து "அரசர் தலைவரே! 'அறததை அறிந்தவர்களின் ஒழுக்கமே முக்கியமான ப்ரமாணம்; அடுத்தபடி வேதங்களும் பிரமாணமாகின்றன' என்று ஆபஸ்தம்பத₄ர்ம ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக் கிறது. ஆகையால் அறிவாளிகளில தலைவர்களான ஶாஸ்த்ர வித்₃வானகள் அனைவரையும் அழைத்து அந்தப் பேரறிவாளாகளைக்கொண்டு வேதா₃ந்தங்களில் முடிவாகக் கூறப்பட்டிருக்கும் வாக்யங்களை ஆராய்ந்து பரம்பொருள்

२१. वाक्यैर्वेदान्तसिद्धान्तैः परतत्त्वस्य निर्णयम् ।
कारयित्वा बुधश्रेष्ठैः तन्मार्गेणार्यसम्मतम् ॥
२२. ज्ञातव्यं तन्महद्वस्तु परतत्त्वमिदं स्फुटम् ।
निशम्य वल्लभो राजा तस्य वाक्यं पुरोधसः ॥
२३. संतुष्टस्सर्वविबुधान् आनयामास विश्रुतान् ।
बबन्ध तोरणस्तम्भे विद्याशुल्कं महद्धनम् ॥
२४. तत्त्वार्थनिर्णयं कृत्वा गृहाणेति नृपस्तदा ।
राजाज्ञया च वेदान्तिन्! मधुरानगरीं प्रति ॥
२५. दिग्भ्यो दशभ्यस्सहसा बुधास्सर्वे समागताः ।
तदा राजसभायां ते राज्ञा सम्यक् प्रपूजिताः ॥
२६. वादांश्चक्रुस्तदान्योन्यं ब्राह्मणाश्शास्त्रवादिनः ।
एवं वादपरैस्तैस्तु विद्वद्भिस्संशयाकुलः ॥

---

எது என்று நிர்ணயம் செய்து, அவர்கள் மூலமாகப பெரி யோர்கள் ஒப்புக்கொண்ட மிகப் பெரிய வஸ்துவான அந்தப் பரம்பொருளை அறியவேணடும என்பது வெளிப் படை" என்னும் மங்களமான வார்த்தையைக்கூறினார்.

## வித்வான்களின் வாதமும் அரசனின் கலக்கமும்

22*-*27. புரோஹிதருடைய அந்த வாக்கியத்தை அரச னை வல்லபன்கேட்டு உகந்தவனாய், நாட்டில் புகழ்பெற்ற அறிவாளிகள் அனைவரையும் அழைக்கச் செய்தான் ஒரு தோரணத்தூணில பரதத்துவ வாதத்தில் வெற்றிபெறும் வித்வானுககுப் பரிசாகப் பெரும் பொன்முடிப்பைக் கட்டி வைத்தான். அப்போதே அந்த அரசன் 'பரதத்துவம் எது என்று நிர்ணயம் செய்பவர் எவராயினும், அவர் இந்தப் பொன் முடிப்பை எடுத்துக்கொள்ளலாம்' என்று அறிவித் தான். வேதாந்தியே! அரசனின் ஆணையாலே பத்துத் திசைகளிலிருந்தும் மதுரை நகரை நோக்கி உடனே அறி வாளிகள் அனைவரும் வந்து கூடினார்கள். அப்போதே

२७. राजा निर्णीततत्त्वार्थाभिलाषी व्याकुलोऽभवत् ।
स तदाचिन्तयत् शौरिर्धन्विमङ्गलनायकः ॥
२८. परतत्त्वमजानानाः सर्वे संसारिचेतनाः ।
अज्ञानतमसाच्छन्नाः कर्ममार्गे भ्रमन्त्यहो ॥
२९ अनेन कारयित्वाशु सांप्रतं तत्त्वनिर्णयम् ।
मद्गुनाथेन ते लोका रक्षितव्या न संशयः ॥
३०. तस्याज्ञानं निवार्याथ स्वपदप्रापणाय च ।
प्रकाशयामि स्वपदशरणागतिवर्त्म च ॥
३१. इति निश्चित्य तं प्राह वटपत्रशयो हरिः ।
ततः प्रसन्नो भगवान् स्वप्ने तस्य जगत्पतिः ॥

---

அரசவையில் அவர்கள் அரசனுல உபசரிக்கப்பட்டார்கள். அப்போது ஶாஸ்தர வசனங்களைச் சொல்லி அந்த அந்த ணர்கள ஒருவரோடொருவர் முரண்பட்டு வாதம் செய் தார்கள். இப்படி அந்த வித்வான்கள் வாதம செய்து கொண்டிருக்கும்போது ஐயத்தால் ஆட்கொள்ளப்பட்டு, முடிந்த உண்மையைத் தெரிந்துகொள்ள விரும்பியவனுய் வருத்தமுற்முன் அவ்வரசன்.

## வடபெருங்கோயிலுடையானின் நியமனம்

27* - *37, அப்போது ஸ்ரீவில்லிபுத்தூரின் நாயகனுன வடபெருங்கோயிலுடையான் பின்வருமாறு சித்திக்கலுற் ருன—"ஸம்ஸாரி சேதனர் அனைவரும் அஜ்ஞானமாகிற இருளாலே மறைக்கப்பட்டவர்களாய், பரமபொருளை அறியாமல் இருவினைகளின் வழியிலேயே உழலகின்ருர்க ளந்தோ! இப்போது இந்தப் பட்டர்பிரானுலே பரதத்துவ நிர்ணயத்தை விரைவில் செய்வித்து இவ்வுலகங்களை ரக்ஷிக்க வேண்டியது அவசியமாகும். ஆகையால அந்த விஷ்ணு சித்தரின் அஜ்ஞானத்தை என் அருளாலே போக்கி,ஸம் ஸாரி சேதனர் என் திருவடிகளை அடைவதற்காக என் திரு வடிகளில் சரணமடைவதாகிற வழியை (இவரைக்கொண்டு) வெளிப்படுத்துவேன்" என்று நிச்சயம் செய்து, அந்த ஆலி

३२. अवोचल्लोकरक्षार्थं भट्टनाथं वचः शुभम् ।
मधुरानगरं गत्वा पाण्ड्यराजसभास्थले ॥
३३. उक्त्वाऽत्र विष्णुरेवेति परतत्त्वं बुधान्तरे ।
तद्द्रव्यं सहसा छित्वा तोरणस्तम्भबन्धि(संस्थि)तम् ॥
३४. मच्छासनात्तदादाय समागच्छाशु सत्वरम् ।
हरेर्वाक्यं समाकर्ण्य भट्टनाथस्तमब्रवीत् ॥
३५. विद्याशुल्कं तु तद्द्रव्यं विद्या मम न विद्यते ।
कथं हरामि देवेश! विद्वत्सङ्घेन मानितम् ॥
३६. तदङ्गीकृत्य वचनं शौरिस्तं प्रत्यभाषत ।
तूष्णीं यातु भवानद्य यद्विद्वन्मण्डलं प्रति ॥

---

லேயில் பள்ளிகொண்ட லோகஸ்வாமியான பெருமான் பட்டர் பிரானின் கனவில் தோன்றி "மதுரை நகருக்குச் சென்று பாண்டிய மன்னனின் சபையில் வித்₃வான்களுக்கு நடுவிலே 'விஷ்ணுவே பரம்பொருள்' என்று நிர்ணயம் செய்து, தோரணத்தூணில் கட்டப்பட்டிருக்கும் அந்தப் பொற்கிழியை எனது நியமனத்தாலே விரைவில் அறுத்து எடுத்துக்கொண்டு இங்கு வருவீராக" என்னும் மங்கள மான வார்த்தையை உலகங்களை ரக்ஷிப்பதற்காக அருளி ஞன், எம்பெருமானுடைய அந்த வார்தையைக்கேட்டு, பட்டர்பிரான் "தேவர் தலைவனே! அந்தப் பொற்கிழி வித்₃யாவாத₃த்தில் வெற்றிபெறுபவர்களுக்குப் பரிசாகக் கட்டப் பட்டது. எனக்கு ஶாஸ்த்ரக் கல்வி எதுவும் கிடையாது. அப்படியிருக்க, பெரிய வித்₃வான்கள் அடையப்பாடுபடும் அப்பொற்கிழியை நான் எப்படி எடுக்கமுடியும்?" என்று எம்பெருமானுக்குப் பதில் கூறினர். எம்பெருமான் அந்த வார்த்தையைச் செவியேற்று "நீர் என்னை எதிர்த்துப் பேசாமல் அந்தவித்₃வான்களுடைய கூட்டத்திற்கு இன்றே செல்வீர். வேதார்த்தத்தை நிர்ணயம் செய்து (உம்மைக் கொண்டு) வெளிப்படுத்தப்போகிறவன் நானேயன்றோ" என்று பதில் கூறினன்.

३७. अहमेव हि तत्कर्ता वेदार्थप्रतिपादने
एवं निर्बन्धितस्तेन वेदान्तिन्! शौरिणा तदा ॥

३८. अङ्गीचकार तद्वाक्यं भट्टनाथो जगत्पतेः ।
ततः स्वप्नात् समुत्थाय विस्मयं परमं ययौ ॥

३९. भट्टनाथश्च वेदान्तिन्! भगवद्भक्तिपारगः ।
ब्राह्मे मुहूर्ते चोत्थाय कृतकर्मा द्विजर्षभः ॥

४०. स्वप्नोक्तिं हृदि निश्चित्य तथ्यमत्यन्तसास्मितम् ।
प्रतस्थे सहसा धीमान् विद्वद्गोष्ठीं दृढव्रतः ॥

४१. स तदा वल्लभो राजा संपत्पूर्णः पुरोहितः ।
संवीक्ष्य तावुभौ हृष्टौ भट्टनाथं द्विजोत्तमम् ॥

---

## பாண்டியன் கொண்டாடல்

*37* - *43.* இவ்வண்ணமாக எம்பெருமானால் நிர்பந்திக்கப்பட்ட பட்டர்பிரான் லோகஸ்வாமியான அவனுடைய வார்த்தையை அப்போதே அங்கீகரித்தார். அதற்குப்பின் கனவு கலைந்து விழித்து மிகவும் வியப்புற்றார். வேதாந்தியே! எம்பெருமானிடம் அன்பின் கரையைக் கண்டவராய், பேரறிவாளராய், பகவத் கைங்கர்யத்தில் உறுதியுடையவராய், அந்தணர்தலைவரான பட்டர்பிரான் ப்ராஹ்ம முஹூர்த்தத்தில் எழுந்திருந்து காலைக்கடன்களை முடித்தவராய், தன் கனவில் எம்பெருமான் கூறியது உண்மையே என்று உறுதிபூண்டு, பாண்டியசபையில் வித்வான்களின் கோஷ்டியை நோக்கி விரைவில் புறப்பட்டார். அப்போது அரசனான வல்லபனும் செல்வநம்பியெனும் புரோஹிதருமாகிய இருவரும் அந்தணர்தலைவரான பட்டர்பிரானைக் கண்டு எம்பெருமான் தானே எழுந்தருளியிருப்பதாக நினைத்து உகந்தவர்களாய், ஸ்ரீவைஷ்ணவர்

४२. अभ्यागतः स्वयं विष्णुरिति मत्वाऽतिभक्तितः ।
प्रत्युत्थानप्रणामादिपूर्वकं विधिपूर्वकम् ॥

४३. अर्चयामासतुर्भट्टनाथं श्रीवैष्णवोत्तमम् ।
विद्वद्गोष्ठ्यां स्थितास्सर्वे महान्तो विबुधर्षभाः ॥

४४. सर्वविद्वत्सभामध्ये सर्वराजन्यमण्डले ।
सिंहासने समासीनं भट्टार्यं हेमनिर्मिते ॥

४५. दृष्ट्वा न सेहिरे पूजां वेदान्तिस्तस्य तां च ते ।
भट्टनाथं तृणीकृत्य वीक्ष्य राजपुरोहितम् ॥

४६. नृपमूचुश्च परुषं वाक्यं तद्विषय बुधाः ।
वेदाक्षराणि न क्वापि प्राप्तान्यस्य श्रुतेः पथि ॥

---

தலைவரான பட்டர்பிரானை எதிர்கொண்டழைத்து வணங்கி, அர்க்₄ய பாத்₃யாதி₃களை அளித்து முறைப்படி ஆராதி₄த்தனர்.

## வித்வான்கள் ஆட்சேபித்தல்

43*-*52. வேதாந்தியே! அந்த வித்வான்களுடைய கோ₃ஷ்டி₂யில் இருந்த பேரறிவாளர்களாய், பெரியவர்களான அனைவரும், எல்லா வித்வான்களும் கூடியிருக்கும் சபையின் நடுவில், எல்லா அரசர்களும் குழுமியிருக்கும் இடத்தில், பொன்னாலான ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கும் பட்டர்பிரானைக்கண்டு அவருக்கு அளிக்கப்பட்ட அந்த உபசாரத்தைப் பொறுக்காதவர்களானார்கள்; பட்டர்பிரானைப்புல்லென ஒதுக்கி, ராஜ புரோஹிதரையும் அரசனையும் பார்த்து பட்டர்பிரானைப்பற்றிக் கடுமையாக நிந்திக்கும் வார்த்தையை அறிவாளிகளாயிருந்தும் (பின்வருமாறு) கூறினார்கள்:— "அரசர்தலைவனே! இந்த விஷ்ணுசித்தருடைய காதுவழியாக வேத₃ாக்ஷரங்கள் என்றும் நுழைந்ததில்லை. ஸந்த்₄யாவந்த₃னம் முதலான நித்யநைமித்திக

४७. तत्सन्ध्यादिक्रिया कापि न चास्माभिर्विलोकिता ।
द्विजो निरक्षरो योऽयं गायत्रीं वेत्ति वा नवा ॥

४८ वृत्तिं चास्य प्रवक्ष्यामः शृणु राजन्समाहितः ।
दासवृत्तिं समास्थाय कुर्वन्नारामपोषणम् ॥

४९. श्रीकृष्णतुलसीमाला विधायातिमनोहराः ।
स मालाकारवन्नित्यं शौरिणे सम्यगर्पयत् ॥

५०. वृत्त्याऽनयानुदिवसं कालक्षेपमथाकरोत् ।
वेदं वा शास्त्रवाक्यं वा नायं वेत्ति नृपोत्तम ! ॥

५१. ब्राह्मणानां पुरः शूद्रो निकृष्टः खलु भूपते! ।
विद्वद्गोष्ठ्यां राजसभास्थाने चाग्रासने शुभे ॥

५२. पूजितोऽयं त्वयानेन ह्यस्माकं पश्यतां नृप! ।
सम्पत्पूर्णश्च तद्वाक्यं श्रुत्वा राजपुरोहितः ॥

---

கர்மங்களை இவா செய்வதை நாங்கள் பார்த்ததில்லை. ஓர் அக்ஷரமறியாத இவ்வந்தணர் கா₃யத்ரியையாவது அறிவாரா இல்லையா என்பது ஸந்தேஹமே. அரசனே! இவருடைய தொழிலைக் கூறுகிறோம். கவனமாகக் கேட்பாயாக. ஶூத்₃ரர்கள் செய்யும் தோட்டத்தைப்பேணும் தொழிலை ஏற்றுக்கொண்டு, அழகிய க்ருஷ்ண துளசி மாலைகளைத் தொடுத்து மாலாகாரரைப்போலே இவர் தினந்தோறும் வடபெருங்கோயிலுடையானுக்கு ஸமர்ப்பித்து வருகிறார். இந்தத் தொழிலிலேயே இவர் தினந்தோறும் பொழுதுபோக்கி வருகிறார். வேத₃த்தையோ மற்ற ஶாஸ்த்ரவாக்யங்களையோ இவர் அறியார். ராஜசபையில வித்வத்கோஷ்டியில் அந்தணர்களுக்கு முன்னாலே தாழ்ந்த ஶூத்₃ரன் போன்றவரான இவர் நாங்கள் எல்லாரும பார்த்துக்கொண்டிருக்கும்போது மங்க₃ளமான அக்₃ராஸனத்தில் அமர்த்தி உன்னால் பூஜிக்கப்பட்டார்" என்று.

५३. असहिष्णुस्ततस्सर्वान् निर्भर्त्स्य विबुधर्षभान् ।
भट्टनाथमुखं वीक्ष्य भक्त्या तं प्रणिपत्य सः ॥

५४. महानुभावस्सर्वेषां शृण्वतामब्रवीत् वचः ।
परतत्त्वं विनिर्णीय वेदान्तप्रतिपादितम् ॥

५५. ब्रूहि मे विशदं नित्यं शिष्याय विबुधान्तिके ।
पुरोहितवचः श्रुत्वा भट्टनाथो दृढव्रतः ॥

५६. सस्मार हृदये विष्णुं स्वप्नोक्तिं मनसा स्मरन् ।
तदा शौरिकटाक्षेण विष्णुचित्तस्य धीमतः ॥

५७. हस्तामलकवत्सम्यक् सर्वार्थाः संप्रदर्शिताः ।
हसितं भाषितं चैव गतिर्या यच्च चेष्टितम् ॥

---

## செல்வநம்பியின் ப்ரார்த்தநை

52*-*55. அவர்களுடைய வார்த்தையைக்கேட்டு ராஜ புரோஹிதராய் மஹாநுப₄ாவரான செல்வநம்பி பொறுக்க மாட்டாதவராய், அந்த வித்வான்கள் அனைவரையும் மேலும் நிந்திக்காதபடி அதட்டி, பட்டர்பிரானின் திருமுகமண்டலத்தை நோக்கி ப₄க்தியோடு அவரை வணங்கி, அவர்கள் அனைவரும் கேட்டுக்கொண்டிருக்கும்போதே "இந்த வித்₃வான்களின் சபையில் வேதா₃ந்தங்களில் சொல்லப்பட்ட பரம்பொருள யார் என்று நிர்ணயித்து, என்றும் உமது ஶிஷ்யனான எனக்குத் தெளிவாகக் கூறுவீராக" என்று வார்த்தை சொன்னார்.

## பரதத்துவ நிர்ணயம் செய்தல்

55* - 67. புரோஹிதருடைய வார்த்தையைக்கேட்டு, ப₄க₃வத் கைங்கர்யத்தில் உறுதிகொண்டவரான பட்டர் பிரான் கனவில் எம்பெருமான் சொன்னதை மனத்தாலே நினைத்து, தம் நெஞ்சில் விஷ்ணுவை தியானித்தார். அப்போது எம்பெருமானுடைய கடாக்ஷத்தாலே அறிவாளி

५८. तत्सर्वं धर्मवीर्येण यथावत्संप्रपश्यति ।
वाल्मीकिर्भगवान्पूर्वं यथा ब्रह्मप्रसादतः ॥

५९. शङ्खप्रान्तेन गोविन्दः स पस्पर्श कृताञ्जलिम् ।
उत्तानपादतनयं द्विजवर्यं जगत्पतिः ॥

६०. ततः प्रसन्नवदनः तत्क्षणान्नृपनन्दनः ।
कृष्णं च प्रणतो भूत्वा भूतधातारमच्युतम् ॥

६१. तथैवायं भट्टनाथो ज्ञातसर्वार्थसञ्चयः ।
सर्वविद्वत्सभामध्ये विदधे तत्त्वनिर्णयम् ॥

६२. तच्चरित्रं महच्चित्रं तत्कथं वर्ण्यतेऽधुना ।
स साक्षाल्लोकरक्षार्थं वेदात्मा विहगेश्वरः ॥

---

யான விஷ்ணுசித்தருக்கு எல்லா ஶ்ருதிஸ்ம்ருத்யர்த்த₂ங்களும் கையிலங்கு நெல்லிக்கனிபோல் நன்கு காட்சியளித்தன. முற்காலத்தில் பிரமனுடைய அருளாலே ப₄க₃வான் வால்மீகி ஶ்ரீராமபிரான் சிரித்தது, பேசியது, நடந்தது, செயல்புரிந்தது முதலான எல்லாச் செயல்களையும் உள்ள படி கண்டதுபோலவும், உத்தானபாதனின் பிள்ளையாய, க்ஷத்ரிய ஶ்ரேஷ்ட₂னாய், கைகூபபிநின்றவனை துருவனை லோகஸ்வாமியான கோவிந்தன் சங்கத்தின் நுனியாலே தொட்ட கணத்திலே ராஜகுமாரனை அவன் தெளிந்த முகத்தையுடையவனாய, அனைத்தையும் த₄ரிக்கும் அச்யுதனை கார்வண்ணனை வணங்கித் துதித்ததுபோலவும், இந்த பட்டர்பிரான் எலலா வித்₃வான்களும குழுமியிருக்கும் சபைநடுவே எல்லா அர்த்த₂ங்களும் உணரப்பெற்றவராய், பரமபொருள் எது என்னும் நிர்ணயத்தைச் செய்தார். அத்யாஶ்சர்யமான இந்தச் சரித்திரத்தை இப்போது எப்படி வர்ணிக்க முடியும்? உலகங்கள அனைததையும் ரக்ஷிப்பதற்காக வேத₃ஸ்வரூபியான கருடன் தானேயன்றோ

६३. भट्टनाथस्वरूपेण संजातः किल भूतले ।
विष्णोः पूर्णकटाक्षश्च तावुभौ मिलितौ यदि ॥

६४. तत्प्रसङ्गप्रवचने कः शक्तो भुवनत्रये ।
गङ्गाप्रवाहवद्वाचः तास्सहस्रमुखास्तदा ॥

६५. विष्णुचित्तमुखात्तत्र निर्ययुर्निगमान्तजाः ।
सर्वे सभासदस्तत्र चासंश्चित्रार्पिता इव ॥

६६. श्रुतिस्मृतीतिहासैश्च पुराणैर्निखिलैरपि ।
ऐककण्ठ्यं विधायाशु सर्ववेदान्तसद्गिरः ॥

६७. विशदं बालबोधार्थं उपन्यस्य विचक्षणः ।
हरिरेव परं तत्त्वं इति संस्थापनं व्यधात् ॥

---

பட்டர்பிரானாக இவ்வுலகில அவதரித்திருக்கிறார் அந்த கருடனும் விஷ்ணுவின் பூரண கடாக்ஷமுமாகிய இரண்டும் ஒன்றுசேர்ந்திருக்கும்போது அந்தப் பட்டர்பிரானுடைய பரதத்துவ நிர்ணய ப்ரகாரத்தைச் சொல்லுவதற்கு இம் மூவுலகில் எவனால் முடியும்? ஆயிரக்கணக்கான வேதா₂ந்த வாக்யங்கள் அப்போது விஷ்ணுசித்தருடைய முகத்திலிருந்து க₃ங்கா₃ப்ரவாஹம்போலே வெளிப்பட்டன. சபையிலிருந்த அனைவரும் அங்கு எழுதப்பட்ட சித்திரங்கள் போலே அசையாமல் நின்றனர். எல்லா வேதா₂ந்தங்களிலும் பரம்பொருளைப்பற்றிக்கூறும் வாக்யங்களையும் ஒன்றாக கொண்டு முரண்படாமலும், ஸ்ம்ருதி இதிஹாஸ புராண வாக்யங்களனைத்தோடும் முரண்படாமலும் ஒருமுகப்படுத்தி, சிறுவர்களும் அறியலாம்படி விரைவில் தெளிவாக உபந்யஸித்து, வல்லவரான விஷ்ணுசித்தர் 'விஷ்ணுவே பரம்பொருள்' என்னும் நிர்ணயத்தைச் செய்தார்*.

---

* இந்தப் பரதத்துவ நிர்ணயப்ரகாரம் நம்மால் விஷ்ணுசித்தவிஜயம் எனும் பெரிய நூலில் விவரிக்கப்பட்டு வருகிறது.

६८. तत्र द्वित्राणि वाक्यानि वक्ष्ये गुरुकटाक्षतः ।
श्रूयतामवधानेन सर्वविद्वद्गणाधिप! ॥

६९. सर्वार्था वेदगर्भस्था वेदाश्चाष्टाक्षरे स्थिताः ।
अष्टाक्षरस्तु प्रणवे ह्यकारे प्रणवः स्थितः ॥

७०. यो वेदादौ स्वरः प्रोक्तो वेदान्ते च प्रतिष्ठितः ।
तस्य प्रकृतिलीनस्य यः परः स महेश्वरः ॥

७१. समस्तशब्दमूलत्वादकारस्य स्वभावतः ।
समस्तशब्दवाच्यत्वात् ब्रह्मणोपि स्वभावतः ॥

७२. वाच्यवाचकसम्बन्धः तयोरर्थात्प्रतीयते ।
अक्षराणामकारोस्मि गीताचार्येण भाषितम् ॥

---

## சில ஶ்ருதிஸ்ம்ருதி வாக்யங்கள்

68-*81. வித்வான்களில் தலைமை பெற்றவரே! விஷ்ணு சித்தர் எடுத்துக்காட்டிய ஶ்ருதிஸ்ம்ருதி வாக்யங்களில் ஒருசிலவற்றை ஆசார்யகடாக்ஷத்தாலே கூறுகிறேன். கவனமாகக் கேளும்:— எல்லா அர்த்தங்களும் வேதத்தில் பொதிந்திருப்பவை. வேதார்த்த₂ம் முழுவதும திருவஷ்டாக்ஷரத்தில் அடங்கியுள்ளது. திருவஷ்டாக்ஷரத்தின் பொருள் ப்ரணவத்தில் பொதிந்துள்ளது. ப்ரணவார்த்த₂ம அகாரத்தில் அடங்கியுள்ளது. இவ்வர்த்த₂மே தைத்திரீய நாராயணவல்லியில் பததாம் அநுவாகத்தின் இறுதி மந்திரத்தில் "வேத₃த்தின் ஆதி₃யில் எந்த அக்ஷரம் ஓதப் படுகிறதோ, வேத₃த்தின் இறுதியிலும் எது நிலைநிற்கிறதோ, ப்ரணவமாகிற அந்த அக்ஷரத்தின் காரணமான அகாரததிற்குப் பொருளான விஷ்ணுவே ஸாவேஶ்வரனுவான்" என்று முழங்கப்படுகிறது. "அகாரம் இயல்வாகவே மற்ற எல்லா ஶப்₃த₃ங்களுக்கும் காரணமாயிருப்பது; எலலா ஶப்₃த₃ங்களாலும இயல்வாகவே சொல்லப்படுவதாயிருப்பது பரப்₃ரஹ்மம; இக்காரணத்தால் அகாரம ப்₃ரஹ்மத்தின் பெயராகவும ப்₃ரஹ்மம் அகாரத்தின பொருளாகவும் உள்ளது எனனும் தொடர்பு தன்னடையே தேறு

७३. अकार एव सर्वार्थः अकारो विष्णुवाचकः ।
अकारवाच्यस्तत्रैवं विष्णुरेवेति गीयते ॥

७४, अकारवाच्यो भगवान्विष्णुर्नारायणः परः ।
सर्ववेदादिवाक्यैश्च सर्वस्मात्पर इष्यते ॥

७५. जगज्जन्मस्थितिलयास्तत्परत्वस्य सूचकाः ।
अतोवधारणाद्यैश्च धात्वर्थः श्रीपतौ स्फुटः ॥

७६- अतो नेत्यादि वाक्यानि तस्यैवापादकानि च ।
एवं जन्मादिहेतुत्वं श्रुतिसिद्धं हरेः किल ॥

---

கிறது'' [வாமன புராணம] என்று இவ்விஷயம் ப்ரஸித்₃த₄ ப்ரமாணங்களிலும் சொல்லப்படுகிறது. "அக்ஷரங்களுள் நான் அகாரமாயிருக்கிறேன்'' [கீ₃தை 10-33] என்று கீ₃தா சார்யன் அருளினன். "அகாரத்திலேயே எல்லா அர்த் த₂ங்களும் அடங்கியுள்ளன. அகாரம் விஷ்ணுவைச் சொல்லுகிறது'' "இவ்வண்ணமாக அகாரததினல் சொல் லப்படுபவன் விஷ்ணு என்றே முழங்கப்படுகிருன்'' "அகா ரத்தினல் சொல்லப்படுபவன் ப₄க₃வானய், விஷ்ணுவாய், பரமாதமாவான நாராயணனே ஆவான. எல்லா ஶ்ருதி ஸ்ம்ருதி வாக்யங்களாலும் அவனே எல்லாவற்றிலும் பெரிய வன் என்று நிர்ணயிக்கப்படுகிருன். உலகைப்படைத்து அளித்து அழிக்கும செயல்கள் அவனே பரமாத்மா என்று உணர்த்துகின்றன.'' 'புருஷ ஏவேத₃ம் ஸர்வம்' 'நாராயண ஏவேத₃ம் ஸர்வம்' 'தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:' முதலான ஏகாரத்தோடு கூடிய வேதவாக்யங்களிலிருந்து 'அவ-ரக்ஷணே' என்னும் தா₄துவின் பொருளான ஸர்வரக்ஷ கத்வம் ஶ்ரிய:பதியிடமே உள்ளது என்று தெளிவாகிறது. 'ந ப்₃ரஹ்மா நேஶாந:' முதலான வாக்யங்கள் மும்மூர்த்தி களில் மற்ற இருமூர்த்திகளுக்கும் காரணன் அந்த விஷ் ணுவே என்று தெரிவிக்கின்றன. இவ்வண்ணமாக 'உலகங் களுக்கு ஸ்ருஷ்டி ஸ்தி₂திலயங்களைச் செய்யும் காரண புருஷன் ஹரியே' என்று ஶ்ருதிகளிலிருந்து தேறுகிற தன்றே—(என்று பல ப்ரமாணங்களிலிருந்து ஜக₃த்காரணப் பொருள் நாராயணனே என்று நிர்ணயித்தார் பட்டர்பிரான்.)

௭௭. नारायणानुवाकेन वेदान्तवचनैस्तथा ।
निःश्रेयसप्रदातृत्वं मुमुक्षूपास्यताऽनघ ॥

௭௮. तस्यैवाकारवाच्यस्य श्रीहरेः प्रतिपादिता ।
विष्णोस्सकाशादुद्भूतं जगत्तत्रैव च स्थितम् ॥

௭௯. स्थितिसंयमकर्ताऽसौ जगतोऽस्य जगच्च सः ।
नारायणात्परो देवो न भूतो न भविष्यति ॥

௮௦. एतद्रहस्यं वेदानां पुराणानां च संमतम् ।
सत्यं सत्यं पुनस्सत्यमुद्धृत्य भुजमुच्यते ॥

---

குற்றமற்ற வேத₃ாந்தியே! உபநிஷத்₃வாக்யங்களிலும் (அவற்றின முடிவுப் பகுதியான) நாராயணு நுவாகத்திலும முற்கூறிய ஜக₃த்காரணத்வமும், முமுக்ஷுக் களால் உபாஸிககத்தக்கவனுயிருக்கையும், மோக்ஷமளிக்க வலலவனுயிருக்கையும் அகாரத்தின் பொருளான அந்த ஸ்ரீஹரிக்கே முழங்கப்பட்டுள்ளது. வேத₃ங்களை விளக்கும் உபப்₃ரும்ஹணங்களான இதிஹாஸ புராணங்களும் "உலகம் விஷ்ணுவிடமிருந்தே உண்டாயிற்று; அவனிடமே நிலைநிற்கிறது; அதற்கு ரக்ஷண ஸம்ஹாரங்களைச் செய்ப வனும் அவனே; (உலகிற்கு அந்தர்யாமியாகையால்) உலகமும் அவனே" [வி.பு- 1-1-31] "நாராயணனைக் காட்டி லும மேலான தே₃வன் இருந்ததுமில்லை; உண்டாகப் போவதுமில்லை; இதுவே வேத₃ங்களும் புராணங்களும் ஒரு மிடருக ஒப்புக்கொண்ட ரஹஸ்யம்" "முக்கால் சத்தியம் செய்து கைதூக்கிநின்று கூறுகிறேன்; வேத₃த்தைக் காட்டிலும் மேலான சாஸ்திரமில்லை; கேசவனைக்காட்டிலும் மேலான தெய்வமில்லை" என்று இவ்விஷயமே வலியுறுத்தப் பட்டுள்ளது (என்றும் நிலைகாட்டினர் பட்டர்பிரான்.)

८१. वेदाच्छास्त्रं परं नास्ति न देवः केशवात्परः ।
एवं प्रमाणवाक्यानि भट्टनाथे वदत्यलम् ॥

८२. यत्स्थूणाग्रे दृढं बद्धं विद्वच्छुल्कं महद्धनम् ।
क्षिप्रं त्रुट्यत्पपातोर्व्यां रवेण महता तदा ॥

८३. पतमानं समुद्दिश्य विद्याशुल्कं प्रहृष्टधीः ।
भित्वा जग्राह वेगेन भट्टनाथो महायशाः ॥

८४. राजा पुरोहितश्चैते ब्राह्मणा विबुधास्तथा ।
सर्वेऽतिविस्मयाविष्टाः प्रणेमुस्तं द्विजर्षभम् ॥

८५. स्थितोऽस्य हृदये विष्णुर्यद्भूद्विबुधर्षभ! ।
विष्णुचित्ताभिधां तस्य नृपश्चक्रे तदादरात् ॥

---

## விரைந்து கிழியறுத்த விஷ்ணுசித்தர்

81*—85. அப்போது இவ்வண்ணமாக பட்டர்பிரான் போதுமானவளவுக்கு ப்ரமாண வாக்யங்களை முழங்கிக் கொண்டு வருகையில், தூணின் நுனியில் வித்வான்களுக்குப் பரிசாக உறுதியாகக் கட்டப்பட்டிருந்த பெருந்தனம் அறுந்து பெரிய ஒலியுடன் விரைவில் பூமியில விழுந்தது. பெரும்புகழாளரான பட்டர்பிரானும், மிக உகந்தவராய், விழுந்த அந்தக் கல்விப்பரிசை நோக்கி விரைவாகச் சென்று கிழியை அறுத்துப் பரிசை எடுத்துககொண்டார். அரசனும் புரோஹிதரும், அங்கிருந்த அறிவாளிகளான அந்தணர் அனைவரும் மிக வியப்புற்றவர்களாய், அந்தணர் தலைவரான அந்த பட்டர்பிரானை வணங்கினர். அறிவாளிகளில் தலைவரான நஞ்சீயரே! அவரது நெஞ்சில் விஷ்ணு எழுந்தருளியிருந்ததால், விஷ்ணுசித்தர் என்னும் திருநாமத்தை அரசன் அன்போடு பட்டர்பிரானுக்கு இட்டான்.

८६. विष्णुचित्तं गजस्कन्धे प्रतिष्ठाप्य महौजसम् ।
पुरप्रदक्षिणं राजा कारयामास भक्तितः ॥

८७. छत्रचामरवृन्तादीन् समादाय विपश्चितः ।
ते सर्वेऽनुययुर्धीरं वेदपाठैस्सहादरात् ॥

८८. भेरीमृदङ्गवाद्यैश्च चतुरङ्गबलैस्सह ।
अमात्यसहितः श्रीमान् स राजाऽनुययौ गुरुम् ॥

८९. संपत्पूर्णो महाभक्त्या तस्य राजपुरोहितः ।
जाम्बूनदमयं छत्रं दधार महतस्तदा ॥

९०. विचित्रतोरणवती पताकाध्वजमालिनी ।
साऽयोध्येवाभवद्दिव्या श्रीरामोत्सवशोभिता ॥

---

## யானைமேல் நகர்வலம்

*86-90* மஹாதேஜஸ்வியான விஷ்ணுசித்தரை யானை மேல அமர்த்தி, அவருக்கு நகர்வலத்தை அன்போடு நடத்தி வைத்தான் அரசன். குடை, சாமரம், விசிறி முதலான உபகரணங்களை எடுத்துக்கொண்டு, அங்கிருந்த வித்வான்கள அனைவரும் வேத₃மோதிக்கொண்டு அறிவாளிகள் தலைவரான விஷ்ணுசித்தரை ப₄க்தியோடு பின்தொடர்ந்தனர். பே₄ரி, மிருதங்கம முதலான வாத்₃யங்களோடும், ர்த₂க₂ஜதுரக₃பத₂ாதிகள (தேர், யானை, குதிரை, காலாள்) என்னும் நாலுவகைப்பட்ட சேனைகளோடும், அமைச்சரோடும் கூடிய அத்திருவுடைய அரசன் பெரியவரான் அவரைப் பினதொடர்ந்தான். அந்த அரசனது புரோஹிதரான செல்வநம்பியும் அப்போது பேரனபோடு அந்தப் பெரியவரான விஷ்ணுசித்தருக்குப் பொன்னாலான குடையை ஏந்தினர். அந்த மதுரைமாநகர் ஆஶ்சர்யமான தோரணங்களோடு கூடியதாய், பலவகைப்பட்ட கொடிகளாலும், மாலைகளாலும அலங்கரிககப்பெற்றதாய், ஸ்ரீராம பட்டாபி₄ஷேக மஹோத்ஸவத்தின்போது அழகுடன் விளங்கிய அயோத்திமாநகரத்தைப்போல் விளங்கிற்று.

९१. तथा ब्रह्मरथारूढंपुत्रमप्रतिमौजसम् ।
यथा प्रेम्णा पिता पुत्रं द्रष्टुकामो महौजसम् ॥

९२. तदा सर्वेश्वरः श्रीमान् जगद्बीजप्रदः पिता ।
जगन्मात्रा महालक्ष्म्या सहितः पुत्रवत्सलः ॥

९३. दिव्यपञ्चायुधधरो ब्रह्मरुद्रादिसेवितः ।
नीलाम्बुदनिभाकारः पीताम्बरधरो युवा ॥

९४. वैनतेयं समारुह्य व्योममार्गे श्रियःपतिः ।
अनेकदिव्याभरणो दिव्यमङ्गलविग्रहः ।

९५. भगवान् विष्णुचित्तस्य प्रत्यक्षमगमत्तदा ।
केषाञ्चिन्महतां तत्र नृपतेश्च पुरोधसः ॥

---

## கருடவாஹனன் காட்சியளித்தல்

91-*97. ப்₃ரஹ்மரதத்தில் ஏறிவரும் பெருங்கீர்த்தியுள்ள புத்திரனைக்காணப் பரிவோடு தந்தை வருவது போலே, அப்போது, உப₄யவிபூ₄திகளையுமுடைய ஸர்வேஶ்வரனாய், உலகில் ஜீவர்களாகிய வித்தை விதைத்த தந்தையாய், புத்ரவாத்ஸல்யமுடையவனாய், அப்ராக்ருதமான பஞ்சாயுத₄ங்களை த₄ரித்தவனாய், பிரமன் உருத்திரன் முதலானவர்களால் ஸேவிக்கப்பெற்றவனாய், நீலமேக மேனியனாய், பீதாம்பரம் த₄ரித்தவனாய், யௌவனப் பருவத்தினனாய், பலபல திருவாப₄ரணங்களை உடையவனாய், தி₃வ்யமங்க₃ளத் திருமேனியை உடையவனாய், ப₄க₃வானான ஸ்ரீமந்நாராயணன், லோகமாதாவான மஹாலக்ஷ்மியோடு கருடன்மேல் ஏறிக்கொண்டு விஷ்ணுசித்தருக்கும், அரசனுக்கும், புரோஹிதருக்கும், அங்கிருந்த மற்றும் சில பெரியோர்களுக்கும் ஆகாயமார்க்கத்தில் காட்சியளித்தான்.

९६. ते सर्वे भट्टनाथस्य कृपया जगदीश्वरम् ।
भगवन्तं समुद्वीक्ष्य लोचनाभ्यां महौजसम् ॥

९७. प्रणम्य बहुधा भक्त्या कृतार्था ह्यभवंस्तदा ।
भट्टनाथो भगवतः परमप्राकृतं महः ॥

९८. विलोक्य विस्मयं गत्वा परं तं हर्षमाप्तवान् ।
स संप्राप्तानवधिकज्ञानभक्तिमहार्णवः ॥

९९. भट्टनाथो भगवतो निर्हेतुककटाक्षतः ।
सर्वज्ञत्वादिकान्विष्णोर्गुणान् सर्वाननुपमान् ॥

१००. दिव्यज्ञानेनानुभूय विशदं विबुधाग्रणीः ।
सौन्दर्यं सौकुमार्यं च लावण्यं चाद्वितीयकम् ॥

---

அப்போது அவர்கள் அனைவரும், ப4ட்டர்பிரானுடைய கருணையால் லோகநாத2னை, பேரொளியுடையவனை ப4க3வானை கண்களால் கண்டு பலவாறு ப4க்தியோடு வணங்கிப் பேறுபெற்றார்கள்.

## பல்லாண்டு பாடுதல்

*97*-110.* பட்டர்பிரானோவெனில் எம்பெருமானுடைய அப்ராக்ருதமான திருமேனியைக் கண்டு வியப்புற்றுப் பரமானந்தமடைந்தார், பேரறிவாளர்தலைவரான பட்டர் பிரான எல்லையற்ற ஞானத்தையும், ப4க்தியையும நிர்ஹேதுகமான எம்பெருமானருளாலே அடைந்தவராகையாலே, எம்பெருமானுடைய ஸர்வஜ்ஞத்வம் (எல்லாமறிந்தவனாயிருக்கை) முதலான பரத்வத்தைக் காட்டும் ஒப்பற்ற கு3ணங்கள் அனைத்தையும், அவயவ அழகாகிற ஸௌந்த3ர்யம், திருமேனிமென்மையாகிற ஸௌகுமார்யம், திருமேனியழகாகிற லாவண்யம் எனும் நீர்மையைக் காட்டும் ஒப்பற்ற கு3ணங்களையும், பரிணமம்

१०१. परिणामादिरहितं सर्वभूतमनोहरम् ।
नित्यसिद्धं भगवतः तत्पञ्चोपनिषन्मयम् ॥
१०२. यद्रूपं परमस्थाने सदा पश्यन्ति सूरयः ।
क्षणक्षरस्वभावेन कालात्मपरिणामिके ॥
१०३. कलिसाम्राज्यभूयिष्ठे लोकेऽस्मिन्निरयोपमे ।
अज्ञानतमसाच्छन्ने चार्थकामपरायणे ॥
१०४. नित्यमुक्तैकभोग्यं यत्तत्पञ्चोपनिषन्मयम् ।
अप्राकृतं दिव्यरूपमचक्षुर्विषयं गतम् ॥
१०५. हानिशङ्कां समासाद्य तस्यैवालभ्यवस्तुनः ।
अनिष्टपरिहाराय प्रेमावेशवशात्तदा ॥

---

அழிவு முதலானவையற்றதாய், எல்லா உயிர்களின் நெஞ்சையும் ஈர்ப்பதாய், நித்யமானதாய், பஞ்சோபனிஷந்மயமானதாய், நித்யஸூரிகளால் என்றும் காணப் படுவதான எம்பெருமானுடைய திருமேனியையும் தி₃வ்யஜ்ஞானத்தாலே அனுப₄வித்து, என்றும விகாரமடைவதையே இயல்வாகவுடையதாய், காலத்தால் பரிணமைமடைவதாய், கலி ஸாம்ராஜ்யம் செலுத்துவதாய், நரகம் போன்றதாய், அறிவின்மையாகிற இருளால் மூடப்பட்டதாய், அர்த்த₂காமங்களே விஞ்சியிருக்கப்பெற்றதான இவ்வுலகில், பஞ்சோபநிஷந்மயமாய், நித்யமுக்தர்களாலேயே அனுபவிக்கத்தக்கதாய், (இங்குள்ளவர்களால்) காணத்தகாததான அப்ராக்ருதத்திருமேனி காட்சியளிப்பதைக்கண்டு, 'இதற்கு என்ன தீங்கு வருகிறதோ?' என்று ஐயமுற்று, கிடைத்தற்கரிய அப்பரம்பொருளுக்குத் தீங்கு நேராமலிருப்பதற்காகப் பொங்கும் பரிவாலே யானையின் கழுத்திலேயிருந்த மணிகளைத் தாளமாகக்கொண்டு, ஸௌகுமார்யம் முதலான கு₃ணங்களுக்கு த்₃ருஷ்டிதோ₃ஷம்

१०६. गजकण्ठगता घण्टास्तालवाद्यं विधाय च ।
तदनिष्टनिवृत्त्यर्थं सौकुमार्यादिसम्पदाम् ॥
१०७. तत्रैव पारवश्येन विष्णवे लोकजिष्णवे ।
मङ्गलाशासनं चक्रे धीमानकृतवन्दनः ॥
१०८. तावन्मात्रेण चातृप्तो विष्णोर्दिव्यविभूतयः ।
ताः समुद्दिश्य सहसा मङ्गलाशासनं व्यधात् ॥
१०९. स तं लोकोपकाराय गाथाद्वादशसंमितम् ।
प्रबन्धमकरोद्भक्त्या मङ्गलाशासनात्मकम् ॥
११०. श्रीहरिर्भगवान्विष्णुः विष्णुचित्तेन भूयसा ।
कृताशीः प्रययौ विद्वन्! कृतार्थः परमं पदम् ॥
१११. ततस्स राजा वेदान्तिन्! शिष्यत्वमगमत्तदा ।
विष्णुचित्तस्य महतः सामात्यः सपुरोहितः ॥

---

வாராமைக்காக அஸ்தானே பயஶங்கையாலே, எல்லாவுலகங்களையும் வெற்றிகொண்ட விஷ்ணுவுக்குப் பேரறிவாளராகையாலே வணக்கம் செலுத்தாமல் மங்களாசாஸனம் செய்தார். அத்துடன் திருப்தியடையாமல், எம்பெருமானுடைய அழகிய செல்வங்களான ஸ்ரீதேவி, திவ்யாயுதங்கள், லீலாவிபூதி ஆகியவற்றைக் குறித்தும் பல்லாண்டு பாடினார். (இவ்வண்ணமாக) உலகம் உய்யும் பொருட்டு எம்பெருமானுக்கு மங்களத்தை விரும்பிப் பாடும் பன்னிரண்டு பாடல்கள் கொண்டதான 'திருப்பல்லாண்டு' என்னும் திவ்யப்ரபந்தத்தைப் பாடினார் பட்டர்பிரான். அறிவாளியே! பகவான விஷ்ணு விஷ்ணுசித்தரால் இப்படி மிகுதியாக மங்களாஶாஸனம் செய்யப் பெற்றுப் பெரும்பேறு பெற்றவனாய், பரமபதத்தை அடைந்தான்.

## ஸ்ரீவில்லிபுத்தூரில் வரவேற்பு

111-116 வேதாந்தியே! அதற்குப்பின் வல்லபதேவ ராஜா அமைச்சர்களோடும், புரோஹிதரோடும் கூடிய

११२. तेन संपूजितस्सम्यग्राज्ञा प्रस्थापितस्तदा ।
महता वैभवेनैव भट्टनाथो महायशाः ॥

११३. सुवर्णशिबिकारूढः सुवाद्यैश्छत्रचामरैः ।
मधुरानगराद्धीमान् प्रतस्थे धन्विमङ्गलम् ॥

११४. धन्विनव्यपुराधीशशौरिणा प्रेषिता जनाः ।
भेरीमृदङ्गवाद्यैश्च तदीयैश्छत्रचामरैः ॥

११५. क्रोशमात्रेण तस्याथ पुरस्य पुरवासिनः ।
विष्णुचित्तं महात्मानं प्रत्युद्गम्याभिपूज्य च ॥

११६. पुरमानीय तत्रार्यं कारयित्वा प्रदक्षिणम् ।
वीथीचतुष्टयेष्वार्यं निन्युस्तं स्वामिसन्निधिम् ॥

---

வனாய், பெரியவரான விஷ்ணுசித்தருக்கு சிஷ்யனானான். அவனால் நன்கு ஆராதித்து விடைகொடுக்கப்பெற்றவராய், பேரறிவாளராய், பெரும்புகழாளரான பட்டர்பிரான தங்கப் பல்லக்கில் ஏறிக்கொண்டு, நல்ல வாத்₃யங்கள், குடைகள், சாமரங்கள் முதலான பெரிய வைப₄வத்துடன் மதுரை நகரிலிருந்து ஸ்ரீவில்லிபுத்தூருக்குப் புறப்பட்டார். ஸ்ரீவில்லிபுத்தூரின் நாயகனான வடபத்ரஶாயியால் அனுப்பப்பெற்ற ஸ்ரீவில்லிபுத்தூர்வாஸிகளான அவனது அடியார்கள் அவனுடைய குடைகள், சாமரங்கள், பே₄ரி, மிருதங்கம், மற்ற வாத்₃யங்கள் முதலானவற்றோடு அங்கிருந்து ஒரு குரோசதூ₃ரம் எதிர்கொண்டழைத்து, பெரியவரான விஷ்ணு சித்தரை ஆராதி₁த்து அவ்வூருக்கு அழைத்துவந்து, அவ்வூரின் நாலுவீதிகளிலும் ஊர்வலமாக அழைத்துச் சென்று பெருமாள் கோயிலை அடைந்தனர்.

११७. भक्तं संवीक्ष्य भगवान् वटपत्रशयो हरिः ।
तीर्थं प्रसादं मालां च दापयित्वार्चकैर्मुदा ॥

११८. विष्णुचित्ताय वेदान्तिन्! सन्मानमकरोन्महत् ।
विष्णुचित्तस्स तत्सर्वं भक्त्या संगृह्य सादरम् ॥

११९. यद्यद्राजार्पितं तस्मै तत्सर्वं विष्णवे धनम् ।
समर्प्य पूर्ववत्तत्र तुलसीवनकारकः ॥

१२०. सुगन्धतुलसीमालाः पुष्पमालाश्च सादरम् ।
श्रीमालाकारवन्नित्यं भक्त्या तच्छौरिणे मुदा ॥

१२१. भट्टनाथोऽर्पयन् तस्थौ वेदान्तिन्! दृढभक्तिमान् ।
तस्य श्रीकृष्णभक्तत्वात् सम्यग्भागवतस्थितम् ॥

---

## கைங்கர்ய நிஷ்டை

117-121. வேதாந்தியே! தனது அன்பரான விஷ்ணுசித்தரைக் கடாக்ஷித்து, எம்பெருமானான வட பெருங்கோயிலுடையான், அர்ச்சகர்களைக்கொண்டு தீர்த்தம், ப்ரஸாதம், மாலை ஆகியவற்றை உகப்புடன் அளிக்கச்செய்து அவருக்குச் சிறந்த சம்மானங்களைச் செய்தான். பட்டர்பிரானாய் உறுதியான பக்தியுடையவரான விஷ்ணுசித்தரும் அவற்றையெல்லாம் ஆர்வத்தோடும், பக்தியோடும் ஏற்றுக்கொண்டு, வல்லபதேவராஜாவால் ஸமர்ப்பிக்கப்பட்ட செல்வம் அனைத்தையும் அப்பெருமானுக்கு ஸமர்ப்பித்து, முன்போலவே துளஸீவனத்தை வளர்ப்பவராய், நறுமணம் மிக்க துளஸீமாலைகளையும், பூமாலைகளையும், ஸ்ரீமாலாகாரரைப்போல அன்போடும், பக்தியோடும், உகப்போடும் எம்பெருமானுக்கு ஸமர்ப்பித்துக்கொண்டிருந்தார்.

१२२. कृष्णावतारचरितं सम्यक् ज्ञात्वा विचक्षणः ।
कृष्णस्य गोपवेषं च तस्यामानुषचेष्टितम् ॥

१२३. नवनीतादिहरणं गोपीजनविहारणम् ।
सौन्दर्यं सौकुमार्यं च सौलभ्याद्यखिलान् गुणान् ॥

१२४. तद्भक्तिपारवश्येन गोपिकाजनवत्तदा ।
अनुभूय स तत्सर्वं कृष्णलीलामहोत्सवम् ॥

१२५. अतिष्ठत्तन्मयो नित्यं कृष्णादन्यं न वेद सः ।
कृष्णानुभवसञ्जातमहानन्दो महात्मनः ॥

१२६. न ममुस्तत्र वेदान्तिन्! भट्टार्यस्य तनौ किल ॥
तमेवार्थं समुद्दिश्य महाकारुणिकस्तदा ॥

---

## பெரியாழ்வார் திருமொழி அருளல்

121*-128. வேத₃ாந்தியே! அந்த விஷ்ணுசித்தர் கண்ணனிடம் ப₄க்தியுடையவராகையால், அறிவாளியான அவர் ஸ்ரீ ப₄ாக₃வதத்தில் உள்ள க்ருஷ்ணவதார சரிதத்தை நன்கு அறிந்து, கண்ணனுடைய ஆய்ப்பிள்ளை வேடத்தையும், அவனுடைய அதிமானுஷச் செயல்களையும், வெண்ணெய் பால் முதலானவற்றைத் திருடியதையும், கோ₃பிகளோடு விளையாடியதையும், அழகு, மென்மை, எளிமை முதலான எல்லா கு₃ணங்களையும், கண்ணனிடம் பேரன்புக்கு வசப்பட்டு கோபிகளைப்போலே கண்ணனின் விளையாட்டுச் செயல்கள் அனைத்தையும் அநுப₄வித்துக் கண்ணன் நினைவாகவே இருந்தார்; கண்ணனைத் தவிர வேறு எதையும் அவர் அறியவில்லை. கண்ணனை அனுப₄வித்ததாலுண்டான பேரானந்த₃ம், மஹாத்மாவான அந்த ப₄ட்டர்பிரானின் திருமேனியில் அளவில்லாததாகக் காணப்பட்டது. அப்போது பரமகாருணிகராய், பெரும்புகழாளரான அந்த ப₄ட்டர்பிரான் அந்த க்ருஷ்ணனுப₄வத்தை

१२७. ततो लोकोपकाराय भट्टनाथो महायशाः ।
तं भट्टनाथगीताख्यं दिव्यद्राविडरूपकम् ॥

१२८. कृत्वा प्रबन्धं वेदान्तिन्! सर्वं जगदपालयत् ।
चतुश्शतं चैकषष्टिर्गाथास्तत्र प्रकीर्तिताः ॥

१२९. भट्टनाथस्तुता विष्णोर्दिव्यदेशास्त्रयोदश ।
धन्विनव्यपुरं रङ्गं मधुरा द्वारकापुरी ॥

१३०. गोष्ठीकुरङ्गनगरे श्वेताद्रिः सुन्दराचलः ।
श्रीकृष्णनगरं चैव शेषाद्रिः पुरुषोत्तमः ॥

१३१. नन्दव्रजश्च मधुरा तस्मादेते त्रयोदश ।
तस्मिन्नर्थे महान् श्लोकः श्रूयते लोकविश्रुतः ॥

---

விஷயமாகக்கொண்டு, உலகம் உய்யும்பொருட்டு, அழகிய தமிழ்மொழியில் ''பெரியாழ்வார் திருமொழி'' என்னும் திவ்யப்ரபந்தத்தை அருளிச்செய்து உலகனைத்தையும் ரக்ஷித்தார். அத்திருமொழியில் நானூற்றறுபத்தொன்று பாடல்கள் உள்ளன.

## மங்களாசாஸனம் செய்த திவ்யதேசங்கள்

129-133. பட்டர்பிரானால் துதிக்கப்பெற்ற எம்பெருமானுடைய திவ்ய தேசங்கள் பதின்மூன்றாகும். (1) ஸ்ரீவில்லிபுத்தூர் (2) ஸ்ரீரங்கம் (3) (கூடல் எனப்படும்) தென்மதுரை (4) துவாரகாபுரி (5) திருக்கோட்டியூர் (6) திருக்குறுங்குடி (7) திருவெள்ளறை (8) திருமாலிருஞ்சோலை (9) திருக்கண்ணபுரம் (10) திருவேங்கடம் (11) புருடோத்தமனிருக்கையான கண்டமென்னும் கடிநகர் (12) திருவாய்ப்பாடி (13) வடமதுரை என்னும் இவையே அப்பதின்மூன்று தலங்கள். (திருக்குடந்தை, அயோத்தி சாளக்கிராமம் முதலான மற்றும் சில திவ்யதேசங்கள் இங்கு

१३२. रङ्गं धन्विपुरं च पाण्ड्यमधुरा गोष्ठी कुरङ्गस्थलम्
श्रीमत्कृष्णपुरं वनाचलवरः श्वेताचलः श्रीपुरी ।
शेषाद्रिः पुरुषोत्तमं च मधुरा नन्दव्रजश्चैव ते
देशा भट्टमुनीन्द्रदिव्यकृतिना षट् सप्त चाभिष्टुताः ॥

१३३. विष्णुचित्तस्य वेदान्तिन्! तथैव कृतिना मुदा ।
महाकारुणिको धीमान् जगत्सर्वमपालयत् ॥

१३४. तत्तच्छ्रुत्वा च वेदान्ती माहात्म्यं तस्य चाद्भुतम् ।
प्रहृष्टः प्रणिपत्योर्व्यां भूयो विज्ञापनं व्यधात् ॥

१३५. संपूर्णा ज्ञानभक्त्यादिगुणैस्सर्वैर्दशैव ते ।
तेभ्यो महत्त्वं सुतरां भट्टनाथस्य देशिक! ॥

---

விடப்பட்டுள்ளன) இதுவிஷயமாகப் (பின்வரும்)பொருளுள்ள ஶ்லோகம்) சொல்லப்படுகிறது: (1) ஶ்ரீரங்க₃ம் (2) ஶ்ரீவில்லிபுத்தூர் (3) பாண்டியநாட்டு மதுரை (4) திருக்கோட்டியூர் (5) திருக்குறுங்குடி (6) திருக்கண்ணபுரம் (7) திருமாலிருஞ்சோலைமலை (8) திருவெள்ளறை (9) ஶ்ரீ (த்₃வாரகா)புரி (10) திருவேங்கடமலை (11) புருடோத்தமனிருக்கையான கண்டமென்னும் கடிநகர் (12) வடமதுரை (13) திருவாய்ப்பாடி என்னும் பதின்மூன்று தி₃வ்யதே₃ஶங்கள் ப₄ட்டர்பிரானின் திருமொழியில் துதிக்கப்பட்டன. ''வேத₃ாந்தியே! மஹாகாருணிகராய், அறிவாளியான அந்த விஷ்ணுசித்தர் உகப்புடன் பாடிய இத்தி₃வ்ய ப்ரப₃ந்த₄த்தால் உலகனைத்தையும் ரக்ஷித்தார்.

## நஞ்சீயரின் விண்ணப்பம்

134-138. பெரியாழ்வாரின் இந்த அற்புதமான வைப₄வங்களைக்கேட்டு உகந்தவராய், பட்டரைத் தரையில் விழுந்து வணங்கி மறுபடியும் பின்வருமாறு விண்ணப்பித்தார்: ''வல்லவரான ஆசார்யரே! பத்து ஆழ்வார்களுமே ஜ்ஞானம், ப₄க்தி முதலான குணங்களால் நிறைந்தவர்

१३६. माहात्म्यं येन सञ्जातं तन्मे ब्रूहि विचक्षण! ।
महार्य इति नामास्य भट्टनाथस्य देशिक ॥
१३७. तन्नाम तस्य कैर्दत्तं विशदं जगतीतले ।
भट्टनाथसुतेत्येवं गोदादेवी प्रगीयते ॥
१३८. अवतारक्रमं ब्रूहि देव्यास्तस्यास्तु विस्तरम् ।
किं कृत्वा भुवि भट्टार्य! महार्यः स्थितवानयम् ॥
१३९. तस्य तद्वचनं श्रुत्वा भट्टार्यः शास्त्रवित्तमः ।
अवोचद्वचनं धीमान् शिष्यं वेदान्तिनं प्रति ॥
१४०. भगवन्तं समुद्दिश्य नवैते स्वेष्टकाङ्क्षिणः ।
वेदान्तिन्! बहुधा विष्णुं नमस्कारं प्रचक्रिरे ॥

---

களே, அப்படியிருக்க, மற்ற ஆழ்வார்களைக்காட்டிலும் ப₄ட்டர்பிரானுக்கு எதனால் மிக்க பெருமை உண்டாயிற்றென்பதை எனக்குக் கூறுவீர். ஆசார்யரே! பட்டர்பிரானுக்கு 'பெரியாழ்வார்' என்னும் பெயர் வழங்கிவருகிறது. இவ்வுலகெங்கும் வழங்கும் அப்பெயர் அவருக்கு எவரால் வழங்கப்பட்டது? கோ₃தா₃தே₃வியாகிய ஆண்டாள் பெரியாழ்வாருடைய பெண்பிள்ளையாகக் கொண்டாடப்படுகிறாள். அந்த தே₃வியின் அவதாரக்ரமத்தை விரிவாகச் சொல்லுவீர். ப₄ட்டாசார்யரே! எந்தச் செயல் செய்ததால் இவ்வுலகில் விஷ்ணுசித்தர் பெரியாழ்வாரானார்?

## பெரியாழ்வார் என்னும் பெயர்

139-143. அவருடைய அந்த வார்த்தையைக்கேட்டு அறிவாளியாய், சாஸ்திரங்களில் மிக வல்லவரான ப₄ட்டர் வேதா₃ந்தியைக்குறித்துப் பின்வருமாறு வார்த்தை சொன்னார்: வேதா₃ந்தியே! மற்ற ஒன்பது ஆழ்வார்களும் தங்களது விருப்பமான ப₄க₃வத்ப்ராப்தியை விரும்பி எம்பெருமானைக் குறித்துப் பலமுறை ப்ரபத்தி செய்து

१४१. अयं तु भगवत्प्रेमपारवश्येन भूयसा ।
कदाचिद्धीनता तस्येयं (स्य यत्) यथा न भवेत्तथा ॥
१४२. महत्यै भगवद्भूत्यै मङ्गलाशासनं व्यधात् ।
यदाचार्यवरो यस्माद्विष्णुचित्तो बभूव ह ॥
१४३. ततो महार्यनामास्य बभूव भुवि विश्रुतम् ।
चक्रुस्तन्नाम तस्यैव नवैते दिव्यसूरयः ॥
१४४. तत्प्रबन्धो महादिव्यो मङ्गलाशासनात्मकः ।
स प्रबन्धः प्रथमतः वेदादौ प्रणवो यथा ॥
१४५, सर्वप्रबन्धाध्ययने पठ्यते विबुधर्षभैः ।
चतुष्टयसहस्राणां प्रबन्धानां वरः स्मृतः ॥

---

வேண்டினர்கள். இப்பெரியாழ்வாரோவெனில், எம்பெருமானிடம் பொங்கும் பரிவாலே எம்பெருமானுக்கு எந்தக் குறையும் எப்போதும் ஏற்படாதபடி அவன் மிகவும் பொலிவுபெற்று விளங்குவதற்குப் பல்லாண்டு பாடினர், இக்காரணத்தினல் விஷ்ணுசித்தர் ஆழ்வார்களில் தலை சிறந்தவரானபடியால், அவருக்குப் பெரியாழ்வார் என்னும் பெயர் உலகில் பரவிற்று, அவருக்கு அப் பெயரை அளித்தவர்கள் மற்ற ஒன்பது ஆழ்வார்களுமே யாவர்.

## திருப்பல்லாண்டின் பெருமை.

144- 147, (எம்பெருமானுக்கும், அவனது செல்வங்களுக்கும்) பல்லாண்டு பாடும் அவருடைய மிகச்சிறந்த தி₃வ்யப்ரப₃ந்த₄மான "திருப்பல்லாண்டு" வேத₃த்திற்கு ஆதியில் "ஓம்" என்னும் ப்ரணவம் ஓதப்படுவதுபோல் தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களை ஓதும்போது அறிஞர் தலைவர்களால் முதலில் ஓதப்படுகிறது (இவ்வண்ணம்) நாலாயிரதி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களில் திருப்பல்லாண்டு சிறந்து விள்ங்குவதால்,

१४६. प्रबन्धस्स यतस्तेषां विष्णुचित्तस्ततः परः ।
श्रीवैष्णवत्वसिद्ध्यर्थं स एवादौ प्रयत्नतः ॥
१४७. पठितव्यो वैष्णवेन मङ्गलाशासनात्मकः।
महत्प्रबन्धद्वितयं भट्टनाथकृतं तथा ॥
१४८. त्रिसप्ततिश्च गाथानां तत्प्रबन्धे चतुश्शतम् ।
प्रबन्धं विष्णुचित्तस्य ये पठन्ति महार्थदम् ॥
१४९. सर्वपापविनिर्मुक्तास्ते भवेयुर्मुमुक्षवः ।
य इदं शृणुयान्नित्यं भट्टार्यचरितं महत् ॥
सर्वकामान्स संप्राप्य विष्णुलोके महीयते ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे श्रीविष्णुचित्तार्येण राजसभास्थाने तत्त्वनिर्णयकथनं नाम एकोननवतितमोऽध्यायः ॥

---

ஆழ்வார்களுக்குள் பெரியாழ்வாரும் பெரியவராகிருர். பல்லாண்டுபாடும் அந்த தி₃வ்யப்ரப₃ந்த₄மே, ஸ்ரீவைஷ்ணவத்வம் உண்டாவதற்காக ஒவ்வொரு வைஷ்ணவனுலும் முயன்று முதலில் கற்கத்தக்கது.

## பெரியாழ்வாரின் இரு ப்ரப₃ந்த₄ங்கள்.

147-149. ப₄ட்டர்பிரானுலே "திருப்பல்லாண்டு" "பெரியாழ்வார் திருமொழி" என்னும் இரு ப்ரபந்தங்கள் அருளிச்செய்யப்பட்டன. அவ்விரு ப்ரபந்தங்களிலும் நானூற்று எழுபத்துமூன்று பாடல்கள் உள்ளன. ஆழ்ந்த கருத்துடைய விஷ்ணுசித்தருடைய பிரபந்தங்களைப் படிப்பவர்கள் எல்லாப்பாபங்களிலிருந்தும் நீங்கப்பெற்றவர்களாய், மோக்ஷமடைவதில் விருப்பமுள்ளவர்களாவார்கள். எவனொருவன் தினந்தோறும் ப₄ட்டர்பிரானின் இந்தச் சரித்திரத்தைக் கேட்கிருனே, அவன் எல்லா விருப்பங்களையும் பெற்று விஷ்ணுலோகத்தில் சிறப்புறுகிருன்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ப₄ட்டார்யவேதா₃ந்தி ஸம்வாதத்தில் ஸ்ரீவிஷ்ணுசித்தரால் ராஜஸபையில் பரதத்துவ நிர்ணயத்தைக் கூறும் எண்பத்தொன்பதாம் அத்தியாயம் நிறைவுற்றது.

नवतितमोऽध्यायः ॥

१. श्रीवत्सचिह्नतनयो भगवान् भट्टदेशिकः ।
गोदावतारं शिष्याय प्रवक्तुमुपचक्रमे ॥

२. देवस्य महिषीं दिव्यामाद्यां गोदामुपास्महे ।
यन्मौलिमालिकां प्रीत्या स्वीकरोति स्वयं प्रभुः ॥

३. नीलातुङ्गस्तनगिरितटीसुप्तमुद्बोध्य कृष्णम्
पारार्थ्यं स्वं श्रुतिशतशिरस्सिद्धमध्यापयन्ती ।
स्वोच्छिष्टायां स्रजि निगलितं या बलात्कृत्य भुङ्क्ते
गोदा तस्यै नम इदमिदं भूय एवास्तु भूयः ॥

४. इतीव वन्दनं कृत्वा गोदादेव्यै महामतिः ।
वेदान्तिनं समुद्दिश्य व्याजहार वचः शुभम् ॥

---

## தொண்ணூறாவது அத்தியாயம்.

### கோதாஸ்வயம்வரம்

#### ஆண்டாள் சரித்திரத் தொடக்கம்

1-5. கூரத்தாழ்வானுடைய குமாரரான ஸ்ரீபராசரபட்டர், சீடரான நஞ்சீயருக்கு ஆண்டாளின் அவதாரத்தைச் சொல்லத்தொடங்கினார். "எவள் சூடிக்கொடுத்த அழகிய மாலையை உகப்புடன் எம்பெருமான் தானே அணிந்து கொண்டானோ, அத்தகைய முதன்மைபெற்ற திவ்ய மஹிஷியான கோதையை தியானிக்கிறோம். எவளொருத்தி நீளாதேவியின் சிறப்புற்ற திருமுலைத்தடங்களிலே உறங்கும் கண்ணனுக்குத் திருப்பள்ளியெழுச்சி பாடி விழிக்கச் செய்து, கணக்கற்ற வேதாந்தங்களில் காணப்படும் தனது பாரதந்த்ரியத்தை அவனுக்கு உணர்த்தி, தான் சூடிக் களைந்த மாலையாலே கட்டப்பட்ட அவனை வலியச்சென்று அநுபவித்தாளோ, அந்த கோதாதேவிக்குப் பலகால் வணக்கம் செய்கிறேன்" - என்று பேரறிவாளரான பட்டர் கோதாதேவிக்கு வணக்கம் செலுத்தி வேதாந்தியைக் குறித்து "கோதையின் பரமாத்புதமான அந்த அவதார சரித்திரத்தைக் கூறுகிறேன். ஸீதையின் அவதார சரித்திரம்போலே மிகச் சிறந்ததான அதைக் கவனமாகக் கேட்பீராக" என்னும் மங்களமான வார்த்தையைக் கூறினார்.

५. अवतारं प्रवक्ष्यामि गोदायास्तन्महाद्भुतम् ।
शृणुष्वावहितः सम्यक् सीताया इव चोत्तमम् ॥

६. यजतः कर्षतः क्षेत्रं लाङ्गलादुत्थिता मया ।
क्षेत्रं शोधयता लब्धा नाम्ना सीतेति विश्रुता ॥

७. भूतलादुत्थिता सा तु व्यवर्धत ममात्मजा ।
एवं जनकराजेन सीताया जन्म भाषितम् ॥
तथैव गोदा तुलसीवनभूमौ तदाऽजनि ॥

८. समन्ततो वीक्ष्य चरन् वनान्तरे
नवप्रसूनान्यपचित्य कुत्रचित् ।
स विष्णुचित्तस्तुलसीवनावनीं
खनित्रवक्त्रेण निखन्य कल्पयन् ॥

---

## ஆண்டாள் அவதாரம்

6-12. ஜனகமகாராஜா ஸீதையின் அவதாரத்தைப் பற்றிப்பேசும்போது ''நான் யாகம் செய்கையில் பூமியைக் கலப்பையால் உழும் சமயத்தில் யாகபூமியைச் செப்பனிடும்போது இந்தப்பெண் எனக்குக் கிடைத்தாள். கலப்பை உழுதவழியிலே கிடைத்தமையாலே ஸீதா (கலப்பை உழுதவழி) என்று பெயர் பெற்றுள். பூமியிலிருந்துதோன்றிய அந்த என்னுடைய பெண் (காலக்கிரமத்தில்) வளர்ச்சியுற்ருள்'' என்று பேசினுர். அவ்வண்ணமே ஆண்டாளும் (பெரியாழ்வார் தமது) துளஸிவன பூமியில் நந்தவனத்தைச் சீர்திருத்தும்போது அவதரித்தாள். அந்த விஷ்ணுசித்தர் தமது நந்தவனத்தைச் சுற்றிலும் ஆராய்ந்து புதிய மலர்களை ஓரிடத்தில் பறித்துவிட்டு, துளஸிப்பாத்தியை மண்வெட்டியின் நுனியாலே செப்பனிட்டுக்கொண்டு வரும்போது மஹாத்மாவான அவர் ஒரு துளஸிச்செடியின் அடியில் வெட்டும் ஸமயத்தில்

९. तदा खनित्रवक्रेण विष्णुचित्ते महात्मनि ।
तुलसीवृक्षमूलस्य खननं च प्रकुर्वति ॥
१०. आषाढे पूर्वपक्षे च चतुर्थ्यां भौमवासरे ।
मध्याह्ने पूर्वफल्गुन्यां तुलालग्ने शुभे दिने ॥
११. लक्ष्म्यंशाल्लोकरक्षार्थं गोदा भूम्यां ततोऽजनि ।
गोदावतारश्लोकाश्च गीयन्ते प्रथिता भुवि ॥
१२. स विष्णुचित्तस्तुलसीवनानि खनित्रवक्रेण निखानमाचरत् ।
शुभे मुहूर्ते शुचि मासि फल्गुनीप्रतीततारे तुलसीवनान्तरे ॥
भुवाऽभवत्काचन बालकन्यका स तां तदा प्रेक्ष्य विसिस्मिये मुदा॥
१३. तां दृष्ट्वा विस्मयात् बालां विष्णुचित्तः प्रहर्षितः ।
आदाय गृहमागम्य गोदां कृत्वा स्वपुत्रिकाम् ॥

---

ஆடிமாதத்தில் சுக்லபக்ஷ சதுர்த்தியில் செவ்வாய்க்கிழமையில் நடுப்பகலில் பூரநக்ஷத்திரம்கூடிய சுபதினத்தில் துலாலக்கினத்தில் ஸ்ரீதேவியின் அம்சமாக உலகங்களை ரக்ஷிப்பதற்காகக் கோதை இவ்வுலகில் அவதரித்தாள். கோதை அவதரித்ததைப்பற்றிய (பின்வரும் பொருளுள்ள) சுலோகங்கள் பிரஸித்திபெற்றுள்ளன, ''அந்த விஷ்ணுசித்தர் துளஸிப்பாத்திகளை மண்வெட்டியாலே வெட்டிக்கொண்டிருந்தார். அப்போது ஆடிமாதத்தில் சுபமுகூர்த்தத்தில் பூரநக்ஷத்திரத்தில் துளஸிப்பாத்தியில் பூமியிலிருந்து ஓர் சிறுகுழந்தை தோன்றினாள். அப்போதே அவளைப்பார்த்து விஷ்ணுசித்தர் வியப்புற்றார்.''

## கோதையின் வளர்ச்சி

13-16. வேத₃ாந்தியே! அந்தப் பெண்ணைப்பார்த்துப் பேரன்புகொண்ட அவ்விஷ்ணுசித்தர் உகந்தவராய் வீட்டிற்கு எடுத்துச்சென்று அவளைத் தமது பெண்ணாகவே கொண்டு, ராஜரிஷியான ஜனகர் முற்காலத்தில் எப்படி ஜகந்மாதாவான ஸீதையை வளர்த்து வந்தாரோ அப்

१४. नित्यं पुपोष वेदान्तिन्! सम्यक् दुहितृवत्सलः ।
राजर्षिर्जनकः पूर्वं यथा सीतां जगत्प्रसूम् ॥
१५. श्रीवैष्णवान्समाहूय कारयित्वाथ मङ्गलम् ।
गोदेति नामकरणं चकार दुहितुस्तदा ॥
१६. लालिता पोषिता नित्यं पितृभ्यां प्रेमपूर्वकम् ।
ववृधे बालिका गोदा पित्रोरानन्ददायिनी ॥
१७. गोदाजन्म समारभ्य धन्विनव्यपुरं हि तत् ।
अशोभतानुदिवसं वेदान्तिन्नधिकश्रिया ॥
१८. ततोऽखिलजनास्तत्र दृष्ट्वा गोदां रमांशतः ।
जातां ज्ञात्वाधिकां भक्तिं तस्यां चक्रुर्बुधोत्तमाः ॥
१९. बाल्यात्प्रभृति सुस्निग्धा सदाचारसमाश्रया ।
वैराग्यज्ञानभक्तीनां सीमाभूमौ बभूव सा ॥

---

படியே தினந்தோறும் கோதையை வளர்த்துவந்தார். ஸ்ரீவைஷ்ணவர்களை அழைத்துக் காப்பிடச்செய்து அப் பெண்ணுக்கு அப்போதே 'கோதை' என்று திருநாமமிட் டார். பெற்றோர்களாலே தினந்தோறும் அன்போடு கொண்டாடி வளர்க்கப்பட்ட பெண்ணான கோதையும் பெற் றோர்களுக்கு இன்பத்தை அளிப்பவளாய் வளர்ந்துவந்தாள்.

## பிஞ்சாய்ப் பழுத்தாள்

17-21. வேதாந்தியே! ஆண்டாள் பிறந்ததிலிருந்து அந்த ஸ்ரீவில்லிபுத்தூர் தினந்தோறும் மேன்மேலே பொலிவுபெற்று விளங்கிற்று. அதற்குப்பின் அறிவிற் சிறந்த அவ்வூர் ஜனங்கள் அனைவரும் கோதை ஸ்ரீதேவி யின் அம்சமாகப் பிறந்தவளே என்று அறுதியிட்டு அவ ளிடம் மிகுந்த பக்தி செலுத்தினார்கள். இளமை முதற் கொண்டே எம்பெருமானிடம் அன்புபூண்டவளாய், நல் லொழுக்கம் நிறைந்தவளாய், வைராக்யம், ஜ்ஞானம்,

२०. जनकावाप्तसंस्कारपञ्चका भगवत्परा ।
पञ्चमोपायनिष्ठैका गोदादेवी बभूव सा ॥

२१. दुहितुर्ज्ञानभक्त्यादिसद्गुणान् वीक्ष्य संततम् ।
सादृश्यरहितान् क्वापि सन्तुष्टो विस्मयं गतः ॥

२२. अलङ्कारप्रिया बाला तस्य ताः पुष्पमालिकाः ।
जनकाज्ञातवृत्तान्ता सा धम्मिल्ले दधौ रहः ॥

२३. ततः पितृभयाद्भीता पूर्ववत्पेटिकान्तरे ।
निधाय मालिकाः सम्यक् अम्लाना अतिकोविदा ॥

---

ப₄க்தி ஆகியவற்றின் எல்லை நிலத்திலே விளங்கினாள் அவள். தந்தையிடம் பஞ்சஸம்ஸ்காரங்களைப் பெற்றவளாய், எம்பெருமானிடம் மிகவும் ஈடுபட்டவளாய், தனது ஆசார்யரான விஷ்ணுசித்தரையே பேற்றுக்கு உபாயமாகக் கொண்டவளாய் ஒப்பற்றவளாய் விளங்கினாள் அந்த கோ₃தா₃தே₃வி. வேறு எவரிடமும் காணப்படாத தன் பெண்ணின் ஜ்ஞானம் ப₄க்தி முதலான நற்குணங்களை எப்போதும் கண்டு உகந்து வியப்புற்றார் விஷ்ணுசித்தர்.

## சூடிக்கொடுத்த நாச்சியார்

22-*34. அலங்காரம் செய்துகொள்வதில் ஈடுபாடுடைய சிறுமியான ஆண்டாள் திருத்தகப்பனாருக்குத் தெரியாமல் அவர் எம்பெருமானுக்குத் தொடுத்து வைத்திருந்த பூமாலைகளை ரஹஸ்யமாகத் தன் திருக்குழலிலே சூட்டிக்கொண்டாள். அதற்குப்பின் தகப்பனாரிடம் பயத்தினாலே மறுபடியும் பூக்குடலைக்குள்ளே வாடாத அந்த மாலைகளை நன்கு வைத்து, இப்படி எவருமறியாதபடி செய்துகொண்டிருந்தாள் அதிஸமர்த்தையான கோ₃தா₃தே₃வீ. இவ்வண்ணமே அவள் தினந்தோறும் பல

२४. कैनाप्यज्ञातवृत्तान्ता गोदा देवी समाश्रिता ।
गोदा प्रकुर्वतीत्येवं प्रत्यहं सा समाश्रिता ॥

२५. कदाचिद्विष्णुचित्तोऽथ गोदायास्तद्विचेष्टितम् ।
विलोक्य भीतोऽप्यकृतकोपो दुहितृवत्सलः ॥

२६. व्याजहार शुभं वाक्यं गोदां तां सान्त्वपूर्वकम् ।
अपचारतमं कार्यमबले! यत्त्वया कृतम् ॥

२७. मनागपि न कर्तव्यं नैव चिन्त्यं हृदापि तत् ।
एवं दुहितरं सम्यक् शिक्षयित्वा महामनाः ॥

२८. तास्ततो विष्णवे तत्र नार्पयत्पुष्पमालिकाः ।
तस्यां रात्र्यां तदा तस्य वटपत्रशयो हरिः ॥

२९. स्वप्ने प्रसन्नो भगवान् भट्टनाथं वचोऽब्रवीत् ।
किमर्थमस्मिन् दिवसे न दत्ताः पुष्पमालिकाः ॥

---

நாட்கள் செய்துகொண்டிருந்தாள். ஒருநாள் விஷ்ணுசித்தர் கோதையின் இச்செயலைக்கண்டு பயந்தபோதிலும், பெண்ணிடம் வாத்ஸல்யத்தாலே கோபம் கொள்ளாமல் அமைதியாகவே கோதையைப்பார்த்து ''பெண்ணே! நீ செய்த காரியம் மிகமிக அபசாரமல்லவா? இனி என்றும் இதைச் செய்யக்கூடாது. மனத்தாலும் நினைக்கக்கூடாது'' என்னும் மங்களமான வார்த்தையைக் கூறினார். இவ்வண்ணமாகப் பெண்ணை நன்கு கடிந்துகொண்ட பிறகு நன்னெஞ்சையுடையவரான அவர் அந்தப் பூமாலைகளை எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கவில்லை. அன்றிரவு வடபெருங்கோயிலுடையான் அவரது கனவில்தோன்றி பட்டர்பிரானைப்பார்த்து ''என்னிடம் மிகுந்த பக்தியுடையவராய் பூமாலை ஸமர்ப்பிக்கும் நீர் இன்று ஏன் அவற்றைச் சமர்ப்

३०. नित्यं प्रदाता भवता मह्यं मद्भक्तिशालिना ।
तस्य तद्वचनं श्रुत्वा चक्रे विज्ञापनं तदा ॥

३१. दिनेऽस्मिन्बालया पुत्र्या धृता मे पुष्पमालिकाः ।
अतो मया हि भगवन्! प्रदत्ता हन्त ते न ताः ॥

३२. निशम्य तद्वचस्तस्य भगवानब्रवीत्तदा ।
धृता यदि तया मालाः सुगन्धा मे ह्यतिप्रियाः ॥

३३. धृतपूर्वास्तयैवैताः मालिकाः सम्यगर्पय ।
ततः स्वमात्समुत्थाय विष्णुचित्तः सविस्मयः ॥

---

பிக்கவில்லை?'' என்று வார்த்தைசொன்னன். அவனுடைய அவ்வார்த்தையைக்கேட்டு ''இன்று சிறுமியான என் பெண் அந்த மாலைகளைச் சூடிக்கொண்டுவிட்டாள். எம் பெருமானே! அதனுலேயே நான் அந்த மாலைகளை தேவரீருக்கு ஸமர்ப்பிக்கவில்லை'' என்று அப்போதே விஷ்ணுசித்தர் விண்ணப்பித்தார். அவருடைய அவ்வார்த்தையைக்கேட்ட எம்பெருமான், ''அவளால் அந்த மாலைகள் த₄ரிக்கப்பட்டனவாகில் அவை மிகுந்த மணமுடையவையாய், எனக்கு மிக இனியவையாயிருந்தன. ஆகையால், இனி எப்போதும் அவள் சூடிக்களைந்த மாலைகளையே எனக்கு ஸமர்ப்பிப்பீராக'' என்று அருளிச்செய்தான். உடனே கனவிலிருந்து விழித்தெழுந்த விஷ்ணுசித்தர் மிகவும் வியப்புற்றவராய் பூ₄மியிலிருந்து பிறந்த விதே₃ஹராஜ புத்ரியான ஸீதையைப்போலவே பூ₄மியிலிருந்து பிறந்த கோதையும் மஹாலக்ஷ்மியேயாவாள் என்று எண்ணினர்.

## ஆண்டாளுக்கு ஆழ்வார்களில் ஏற்றம்

34*-40 எம்பெருமானைக் கைப்பிடிக்கத்தக்க பேரழகையுடைய கோதை நேரே பெரியபிராட்டியார்

३४. गोदां मत्वा महालक्ष्मीं वैदेहीमिव भूमिजाम् ।
गोदा सदृशलावण्या साक्षाल्लक्ष्मीरिवाबभौ ॥

३५. जन्मारभ्य बभौ गोदा ज्ञानभक्त्यादिसद्गुणैः ।
दिव्यगन्धयुतैवासीत् यथा श्रीतुलसी वरा ॥

३६. ज्ञानभक्त्यादयस्तस्याः गुणा ववृधिरेऽधिकाः ।
दशभ्यो दिव्यसूरिभ्यः गोदादेव्यास्ततोऽनघ! ॥

३७. पुंसः पुरुषे प्रेम स्त्रीप्रीतिर्योषितश्च या ।
निम्नोन्नताधिरोहेव सा महायत्नसाधिता ॥

३८. योषितः पुरुषप्रेम स्त्रीप्रीतिः पुरुषस्य या ।
उन्नतान्निम्नपतनं तद्यथा सुकरं भुवि ॥

---

போலே விளங்கினாள். துளஸிச்செடி முளைவிடும்போதிலிருந்தே மணம்மிக்கதாயிருப்பதுபோலே கோதையும் பிறந்தது முதலே ஜ்ஞானம் பக்தி முதலான நற்குணங்களாலே நறுமணம் வீசுகின்றவளாகத் திகழ்ந்தாள். குற்றமற்ற வேதாந்தியே! அக்காரணத்தாலேயே பத்து ஆழ்வார்களைக் காட்டிலும் ஆண்டாளுக்கு ஜ்ஞானம் பக்தி முதலானவை அதிகமாக வளர்ந்தன. ஆண் ஆணைக்கண்டு காமுறுவதும் ஸ்த்ரீ ஸ்த்ரீயைக் கண்டு காமுறுவதும் தாழ்ந்த இடத்திலிருந்து உயர்ந்த இடத்துக்கு நீர்பாய்ச்சுவது போலே மிகுந்த முயற்சியால் விளையக்கூடியது. பெண் ஆணைக்கண்டு காமுறுவதும் ஆண் பெண்ணைக் கண்டு காமுறுவதும் உயர்ந்தவிடத்திலிருந்து தாழ்ந்த இடத்தில் நீர்விழுவதுபோலே இவ்வுலகில் எளிதாயுள்ளது. இக்காரணத்தாலேயே பெண்ணான கோதைக்கு, புருஷோத்தமனான எம்பெருமானிடமுள்ள காதல் ஆண்களான ஆழ்

३९. अतोहि भगवत्प्रीतिः गोदायाः परमाधिका ।
कृष्णप्रीतिर्गोपिकानां नन्दादिभ्योऽधिका ततः ॥

४०. स्त्रियस्साधुरिति प्राह वेदव्यासस्ततः किल ।
पुरुषेभ्योऽधिका प्रीतिः स्त्रीणां विष्णौ भविष्यति ॥

४१. श्रीकृष्णविरहाद्गोप्यो यथाऽतप्यन्त सन्ततम् ।
अतप्यत तथा गोदा वेदान्तिन्! भगवत्परा ॥

४२. हेमन्ते प्रथमे मासि नन्दव्रजकुमारिकाः ।
चेरुर्हविष्यं भुञ्जानाः कात्यायिन्यर्चनव्रतम् ॥

४३. एवं गोदा महाभागा भगवत्प्रेमपारगा ।
सा सम्यगनुभूयार्थं श्रीमद्भागवतस्थितम् ॥

---

வார்களுக்கு அவனிடமுள்ள காதலைக்காட்டிலும் மிகுந்திருந்தது. அதனாலேதான் நந்தகோபன் முதலான ஆண்களுக்குக் கண்ணனிடமுள்ள அன்பைக்காட்டிலும் பெண்களான ஆயர் சிறுமியருக்கு அவனிடம் காதல் மிகுந்திருந்தது. ஆண்களைக் காட்டிலும் பெண்களுக்குப் புருஷோத்தமனை விஷ்ணுவிடம் காதல் மிகுதியாக விளையும் என்னும் காரணத்தாலன்றோ வேதவியாஸர் "பெண்கள் பாக்கியசாலிகள்" என்று கூறினார்.

## ஆண்டாள் அருளிய தி₃வ்யப்ரப₃ந்த₄ங்கள்

41-*47. வேதாந்தியே! கண்ணனைப்பிரிந்து எப்படி கோபிகள் எப்போதும் வருந்தினார்களோ, அப்படியே கோதையும் எம்பெருமானிடம் பெருங்காதலினாலே அவனைப் பிரிந்து வருந்தினாள். ஹேமந்தருதுவின் முதல் மாதமான மார்கழியில் ஆய்ப்பாடிச் சிறுமிகள் நோன்புக்குரிய உணவையுண்டு காத்யாயினீ வ்ரதத்தை அனுஷ்டித்தனர்.

४४. तमेवार्थं समुद्धृत्य लोकसंरक्षणाय च ।
प्रबन्धद्वितयं चक्रे सर्वलोकामृतप्रदम् ॥

४५. गाथानां द्वितयं तत्र त्रिसप्तत्यधिकं शतम् ।
दिव्यप्रबन्धस्तत्रैको लक्ष्मीव्रताभिधो महान् ॥

४६. धनुर्मासोत्सवपरः त्रिंशद्गाथाविराजितः ।
गोदास्तवाभिधस्तत्र द्वितीयः परिकीर्तितः ॥

४७ त्रिचत्वारिंशदधिकं गाथानां शतमत्र हि ।
संस्तुतानि तयाष्टौ च विष्णुस्थानानि भूतले ॥

---

ஸ்ரீமத்₃ ப₄ாக₃வதத்திலுள்ள இந்த அர்த்த₂த்தை நன்கு அனுப₄வித்து, கோபிகளைப்போலவே கண்ணனிடம் காமத்தின் எல்லையைக் கண்டவளாய், மஹாப₄ாக்₃யசாலியான கோதையும் அந்த அர்த்த₂த்தையே பொருளாகக்கொண்டு உலகங்களை ரக்ஷிப்பதற்காக எல்லா உலகங்களுக்கும் மோக்ஷத்தை அளிக்கக்கூடிய இரண்டு தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களை அருளிச்செய்தாள். இரண்டிலும் சேர்ந்து நூற்று எழுபத்துமூன்று பாடல்கள் உள்ளன. அவற்றில் முதலாவது தி₃வ்யப்ரப₃ந்த₄ம் மார்கழி நோன்பைப்பற்றியதாய், முப்பதுபாடல்கள் கொண்டதாய், 'திருப்பாவை' என்று பெயர் பெற்றதாகும். இரண்டாவது தி₃வ்யப்ரப₃ந்த₄ம் 'நாச்சியார் திருமொழி' என்று பெயர்பெற்றது. அதில் நூற்றுநாற்பத்துமூன்று பாடல்கள் உள்ளன.

## ஆண்டாள்பாடிய தி₃வ்யதே₃ஶங்கள்

47*-50. இவ்வுலகில் ஆண்டாளால் எட்டு தி₃வ்ய தே₃ஶங்கள் மங்க₃ளாஶாஸனம் செய்யப்பெற்றன;— (1) ஸ்ரீரங்க₃ம் (2) திருவேங்கடமலை (3) திருமாலிருஞ்சோலைமலை (4) ஸ்ரீவில்லிபுத்தூர் (5) திருப்பாற்கடல் (6) திருக்கண்ணபுரம் (7) வடமதுரை (8) திருவாய்ப்பாடி

४८. श्रीरङ्गं वेङ्कटाद्रिश्च वनाद्रिर्धन्विमङ्गलम् ।
क्षीराब्धिः कृष्णनगरं मधुरा गोकुलं तथा ॥
अस्मिन्नर्थे महान् श्लोकः श्रूयते लोकविश्रुतः ॥

४९. रङ्गं कृष्णपुरं च धन्विनगरं पाण्ड्ये वनाद्रिर्महान्
क्षीराब्धिर्वृषभूधरश्च मधुरा नन्दव्रजश्चोत्तरे ।
अष्टौ ते समभिष्टुता भगवतः श्रीगोदया भक्तितः
तानेवं प्रतिवासरं पठति यः श्रीमान्स भूयान्नरः ॥

५०. एवं गोदा महादेवी वेदान्तिन्! भक्तितत्परा ।
दिव्यप्रबन्धं कृत्वाशु जगत्सर्वमपालयत् ॥

५१. एतादृशगुणोपेतां यौवनारंभपेशलाम् ।
अनिर्देश्यवयोरूपामतुल्यहरिभक्तिकाम् ॥

---

என்பவை அவை. இவ்விஷயத்தில் லோகப்ரஸித்$_2$த$_4$மான (பின்வரும் பொருளுள்ள) ஶ்லோகம் படிக்கப்படுகிறது. (1) ஸ்ரீரங்க$_3$ம், (2) திருக்கண்ணபுரம், பாண்டியதே$_3$ஶத்திலுள்ள (3) ஸ்ரீவில்லிபுத்தூரும் (4) திருமாலிருஞ்சோலைமலையும், வடக்கேயுள்ள (5) திருப்பாற்கடல் (6) திருவேங்கடமலை (7) வடமதுரை (8) திருவாய்ப்பாடி என எம்பெருமான் கோயில்கொண்டிருக்கும் இந்த எட்டு தி$_3$வ்யதே$_3$ஶங்களும் ஆண்டாளால் ப$_4$க்தியுடன் துதிக்கப்பெற்றன. இவற்றை தினந்தோறும் படிக்கும் மனிதன் எல்லாவகைச் செல்வமும் பெற்றவனுகிருன். வேத$_3$ாந்தியே! பெரியவளாய் மிகுந்த ப$_4$க்தியுடையவளான கோ$_3$தா$_3$தே$_3$வி இவ்வண்ணமாக இரண்டு தி$_3$வ்ய ப்ரப$_3$ந்த$_4$ங்களை வெளியிட்டு உலகனைத்தையும் விரைவில் ரக்ஷித்தாள்.

### விஷ்ணுசித்தரின் கவலையும் கோதையின் உறுதியும்

51-*57. இத்தகைய கு$_3$ணங்களுடையவளும், யௌவனப்பருவத்தின் தொடக்கத்திலுல் மென்மைபெற்றவளும், வர்ணிக்கவொண்ணுத பருவத்துக்கேற்ற அழகு

५२. दृष्ट्वा दुहितरं साध्वीं विष्णुचित्तो महामतिः ।
इयं मम सुता गोदा कस्मै देयेत्यचिन्तयत् ॥
५३. पतिसंयोगसुलभं वयो दृष्ट्वैव मे पिता ।
चिन्तार्णवगतः पारं नाससादाप्लवो यथा ॥
५४. एवं स जनको राजा चिन्तामाप दुरत्ययाम् ।
पतिसंयोगसुलभं गोदाया यद्वयः शुभम् ॥
५५. दृष्ट्वा तदा विष्णुचित्तः चिन्तामाप दुरत्ययाम् ।
तद्व्याकुलान्तःकरणं विलोक्य पितरं तदा ॥
५६. व्याजहार शुभं वाक्यं गोदादेवी हरिप्रिया ।
भगवन्तं विना नान्यं वरिष्येऽहमतस्सती ॥

---

டையவளும், ஒப்பற்ற ஹரிப₄க்தியுடையவளும், நல்லொழுக்கமுடையவளுமான பெண்ணைக்கண்டு பேரறிவாளரான விஷ்ணுசித்தர், ''என் பெண்ணான இந்தக் கோதையை யாருக்குக் கொடுப்பது?'' என்று சிந்திக்கலுற்றார். ''கணவனோடு சேர்க்கத்தக்க பிராயம் நிரம்பிய என்னைக்கண்டு எனது தந்தை கவலைக்கடலில் மூழ்கி, ஓடமில்லாமல் கடலில் மூழ்கியவனைப்போலே கரையேருதவராயிருந்தார்'' என்று சீதாப்பிராட்டி சொன்ன ரீதியில், ஜனகமகாராஜர் ஸீதையின் திருமணத்தின் பொருட்டுக் கடத்தற்கரிய கவலையில் மூழ்கினாரன்றோ. (அதுபோலே) கணவனோடு சேர்க்கத்தக்க மங்க₃ளமான பிராயம் கோதைக்கு வந்தடைந்ததைக்கண்டு, கடக்க அரிய கவலைவசப்பட்டார் விஷ்ணுசித்தர். அப்போது கவலையினால் கலங்கிய தந்தையைக்கண்டு ஹரிப்ரியையான கோதை அப்போதே மங்க₃ளமானதொரு வார்த்தையைச் சொன்னாள் — ''அறத்தை அறிந்தவரே! எம்பெருமானை மனத்தால் வரித்துவிட்ட பதிவ்ரதையான நான் அவனைத்தவிர வேறு யாரையும் நெஞ்சாலும் நினைக்கமாட்டேன். நீர் வருந்தவேண்டாம். என்னை எம்பெருமான் ரக்ஷிப்பான்'' என்று.

௫௭. मा शोकं कुरु धर्मज्ञ! मदर्थे रक्षको हरिः ।
तच्छ्रुत्वा वचनं तस्याः सन्तुष्टो विष्णुचित्तकः ॥

௫௮. गोदां विलोक्यार्द्रदृशा व्याजहार वचश्शुभम् ।
अष्टोत्तरशतं विष्णोः स्थानानि जगतीतले ॥

௫௯. तेषु स्थितान् हरीन्वीक्ष्य श्रुत्वा भगवतोऽखिलान् ।
वृणीष्वाभिमतं विष्णुं सुन्दरं वाञ्छितप्रदम् ॥

௬௦. गोदादेवि! प्रवक्ष्यामि स्थलानि शृणु सादरम् ।
भूम्यां पुराणसिद्धानि विष्णुस्थानानि भूरिशः ॥

௬௧. मुख्यान्यष्टोत्तरशतं तत्र दिव्यानि योगिभिः ।
शठकोपादिभिर्दिव्यप्रबन्धापादितानि च ॥

---

## நூற்றெட்டுத் திருப்பதி எம்பெருமான்களை வர்ணித்தல்

57*-69. குற்றமற்ற வேதா3ந்தியே! கோதையின் அந்த வார்த்தையைக்கேட்டு உகந்த விஷ்ணுசித்தர் அவளை அன்புடன் பார்த்து மங்க3ளமான வார்த்தையைப் பின்வருமாறு கூறினார்:—''கோதையே! உலகில் எம்பெருமானுக்கு நூற்றெட்டு தி3வ்யதே3ஶங்கள் உள்ளன. அங்கு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களைக் கண்டு, அவனுடைய ரூபகு3ணச் செயல்கள் முழுவதையும் கேட்டு, எந்த எம்பெருமான் உன் விருப்பத்தை நிறைவேற்றும் அழகனாய் உனக்கு இனியவனாயிருக்கிறானோ அவனைக் கணவனாக வரிப்பாய். அந்த தி3வ்யதே3ஶங்களைக் கூறுகிறேன்; அன்போடு கேட்பாயாக: இந்த பூ4மியில் புராணங்களில் புகழப்படும் விஷ்ணுஸ்த2லங்கள் பலபல உள்ளன. அவற்றில் நூற்றெட்டு தி3வ்யதே3ஶங்கள் முக்கியமானவை. சடகோபர் முதலான ஆழ்வார்களாலே தம் தி3வ்யப்ரப3ந்த4ங்களிலே மங்களாசாஸனம் செய்யப்பெற்றவை அவை,

६२. अष्टादशस्थलान्यत्र पाण्ड्यदेशे रमापतेः ।
केरले सुमहाभागे! दिव्यदेशाश्चतुर्दश ॥
६३. द्विचत्वारिंशदित्याहुश्चोलदेशे स्थलानि हि ।
ते त्रयोविंशतिर्दिव्या देशास्तुण्डीरमण्डले ॥
६४. उदीच्यां दिशि दिव्यानि स्थलान्येकादश स्फुटम् ।
एतेष्वष्टोत्तरशतस्थानेष्वम्भोजलोचने ॥
६५ आस्थितानां भगवतां भक्तानुग्रहकारणात् ।
सौन्दर्यसौकुमार्यादिगुणान्सर्वाननूपमान् ॥
६६ श्रीरङ्गेशादिदेवानां दृष्टिचित्तापहारिणाम् ।
प्रभावानद्भुतान् दिव्यान् शृणु वक्ष्यामि तत्त्वतः ॥
६७. एवं दुहितृवात्सल्यात् भट्टनाथस्ततोऽनघ! ।
अष्टोत्तरशतस्थानस्थितानां परमात्मनाम् ॥

லக்ஷ்மீ நாதனுடைய அந்த திவ்ய தேசங்களில் இந்தப் பாண்டியநாட்டில் பதினெட்டு உள்ளன. மஹாபாக்ய சாலியே! கேரளநாட்டில் அவற்றில் பதினாலு உள்ளன, *சோழநாட்டில் அவற்றில் நாற்பத்திரண்டு உள்ளன. தொண்டைமண்டலத்தில் அவற்றில் இருபத்துமூன்று திவ்ய தேசங்கள் உள்ளன. வடநாட்டில் பதினொரு திவ்ய தேசங்கள் உள்ளன. தாமரைத்தடங்கண்களையுடையவளே! இந்த நூற்றெட்டுத் திருப்பதிகளில் அடியார்களுக்கு அருள் புரிவதற்காக எழுந்தருளியிருப்பவர்களாய், கண்ணையும் நெஞ்சையும் ஈர்ப்பவர்களான ஸ்ரீரங்கநாதன் முதலான எம்பெருமான்களுடைய ஸௌந்தர்யம் (அழகு), ஸௌகு மார்யம் (மென்மை) முதலான ஒப்பற்ற குணங்கள் அனைத்தையும், ஆஶ்சர்யமான திவ்யப்ரபாவங்களையும் உள்ளபடி கூறுகிறேன் கேட்பாயாக'' என்று பெண்ணிடம் அன்பாலே பட்டர்பிரான் நூற்றெட்டுத் திருப்பதிகளிலும் எழுந்

* நடுநாட்டுத் திருப்பதியிரண்டும் சோழநாட்டுத் திருப்பதிகளோடு சேர்க்கப்பட்டுள்ளன.

६८. प्रभावं कृपया सर्वं तस्यै सम्यक् सविस्तरम् ।
वेदान्तिन्! क्रमशो विद्वान् गोदादेव्यै न्यवेदयत् ॥

६९. अष्टोत्तरशतं धाम्नामस्त्यर्चारूपिणो हरेः ।
भुवि यद्वैभवं श्रुत्वा पुंसां मुक्तिः करे स्थिता ॥

७०. विष्णुनामपदान्येवं विष्णुचित्ते विवृण्वति ।
मधुराधीशकृष्णस्य वृत्तं श्रुत्वातिविस्मिता ॥

७१. ततस्सुन्दरराजस्य चरितं शृण्वती मुदा ।
उदारपुलकाङ्कुरमुवाह सुतनुस्तनौ ॥

७२. वेङ्कटाद्रिपतेर्विष्णोः कथाकर्णनकर्मणा ।
रमणीये मुखे तस्याः विकासोऽभूद्विजृम्भितः ॥

---

தருளியிருக்கும் எம்பெருமான்களின் பெருமை அனைத்தை யும் கருணையாலே அவளுக்கு நன்கு விரிவாக முறையாக வர்ணித்தார். இந்த உலகில் உள்ள நூற்றெட்டுத் திருப் பதிகளிலும் எழுந்தருளியிருக்கும் அர்ச்சாவதார எம்பெரு மான்களின் பெருமையைக்கேட்ட மனிதர்களுக்கு மோக்ஷம் கைப்பட்டதாகிறது.

## அரங்கனிடம் ஆண்டாளின் காதல்

70—81. எம்பெருமானுடைய தி₂வ்ய தே₃ஶங்களை இவ்வண்ணமாக விஷ்ணுசித்தர் விவரித்துக்கொண்டிருக் கையில், மதுரைக்கதி₂பதியான கண்ணனின் செயல்களைக் கேட்டு மிக வியப்புற்றாள் ஆண்டாள். அதற்குப்பின் திருமா லிருஞ்சோலை அழகரின் சரிதத்தை உகப்புடன்கேட்டு வடி வழகியான ஆண்டாள் தன் திருமேனியில் மயிர்க்கூச்செறி யப்பெற்றாள். திருவேங்கடமுடையானின் கதையைக் கேட்டதினாலே அவளுடைய அழகிய முகத்தில் மிகுந்த மலர்ச்சி உண்டாயிற்று, திருவரங்கராஜனுடைய மஹா வைப₄வத்தைக்கேட்டு, தாமரை இதழ்போன்ற கண்களை

௭௩. श्रीमुतो रङ्गराजस्य शृण्वती महिमोदयम् ।
आधत्तामन्दमानन्दमरविन्ददलेक्षणा ॥

௭௪. एवं निशम्य सर्वेषां हरीणां वैभवं तदा ।
भट्टनाथमुखात्सर्वं गोदाऽऽनन्दमवाप सा ॥

௭௫. अष्टोत्तरशतस्थानस्थितार्चारूपिणस्तदा ।
ता विष्णुमूर्तयस्सर्वा भट्टनाथेन संस्तुताः ॥

௭௬ गोदास्वयंवरे शीघ्रं गोदोद्वाहाभिकाङ्क्षिणः ।
स्वकीयदिव्यलावण्ययौवनाद्यभिसंयुताः ॥

௭௭. श्रीरङ्गेशादयो देवाः धन्विमङ्गलमागताः ।
रङ्गेशादीन् ततस्सर्वान् गोदादेवी विलोक्य तान् ॥

௭௮. तन्मध्ये सुमहात्मानं तं विलोक्य महौजसम् ।
रङ्गेशं सुन्दरवरं वरयामास सुन्दरी ॥

---

யுடைய அவள் பேரானந்த₃மடைந்தாள். இவ்வண்ணமாக அப்போது எல்லா எம்பெருமான்களுடைய வைப₄வம் முழுவதையும் பட்டர்பிரானுடைய திருமுகத்திலிருந்து கேட்டு, கோதை ஆனந்தமடைந்தாள். பட்டர்பிரானால் வர்ணிக்கப்பட்ட ஸ்ரீரங்க₃நாத₂ன் முதலான அர்ச்சாவதார எம்பெருமான்கள் அனைவரும் கோதையை மணம்புரிய விரும்பி, தமது திருமேனி அழகு, யௌவனம் முதலான கு₃ணங்களோடுகூடியவர்களாய், கோ₃தா₃ஸ்வயம்வரத்திற்காக ஸ்ரீவில்லிபுத்தூருக்கு விரைவில் வந்து சேர்ந்தார்கள். ரங்க நாத₂ன் முதலான அந்த எல்லா எம்பெருமான்களையும் கண்டு, அவர்களுக்கிடையே பெருத்த புகழையும் அழகையுமுடைய அழகிய மணவாளனை ஸ்ரீரங்க₃நாத₂னையே அழகுமிக்கவளான கோதைப்பிராட்டி தனக்கேற்ற மணவாளனாக வரித்தாள். அதற்குப்பின் அந்த

௭௯. भट्टनाथेन हरयः तेन संपूजितास्ततः ।
संप्रेषिताश्च ते सर्वे स्वं स्वं स्थानं प्रपेदिरे ॥

௮௦. स्वलावण्यादिमहिमासम्पद्भिस्सादरं मुहुः ।
गोदां संमोहयित्वाशु रङ्गेशो रङ्गमभ्यगात् ॥

௮௧. गोदा रङ्गेश्वरं देवं मत्वा स्वाभिमतं वरम् ।
ध्यायन्ती सततं तस्थौ तमेवानन्यमानसा ॥

इति श्रीप्रपन्नामृते श्रीभट्टार्यवेदान्तिसंवादे गोदावतारकथायां
तत्स्वयंवरे देवानां धन्विपुराभिगमनं नाम नवतितमोऽध्यायः ॥

---

தி₃வ்யதே₃ஶ எம்பெருமான்கள் அனைவரும் பட்டர் பிரானால் ஆராதி₄க்கப்பெற்று விடைகொடுக்கப்பெற்று தத்தம் தி₃வ்யதே₃ஶங்களுக்குத் திரும்பினர். தன்னுடைய திருமேனியழகு முதலான கு₃ணச்செல்வத்தாலே அன்போடு கோதையை மிகவும் மயங்கச்செய்துவிட்டு திருவரங்கச் செல்வன் ஸ்ரீரங்க₃த்துக்கு விரைவில் திரும்பினன். கோதையும் ஸ்ரீரங்க₃நாத₂னையே தனக்குத்தக்க மணவாளனாக எண்ணி மற்றொன்றில் நெஞ்சுசெல்லாதவளாய், அவனையே தியானித்துக்கொண்டிருந்தாள்.

ஸ்ரீ ப்ரபன்னாம்ருதத்தில் ஸ்ரீ ப₄ட்டார்ய வேதா₃ந்தி ஸம்வாத₃த்தில்
ஆண்டாளின் அவதார சரித்திரத்தில்
அவளுடைய ஸ்வயம்வரத்துக்காக
தி₃வ்யதே₃ஶ எம்பெருமான்கள் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு
எழுந்தருளியதை வர்ணிக்கும்
தொண்ணூறாவது அத்தியாயம் நிறைவுற்றது.

एकनवतितमोऽध्यायः ॥

१. सन्तुष्टोऽसद्यतिस्सम्यक् निशम्याद्भुतवत्तराम् ।
तां कथां परिपप्रच्छ भूयो भट्टार्यमादरात् ॥

२. श्रोतुमिच्छामि भगवन्! गोदाकल्याणमद्भुतम् ।
ब्रूहि मे विशदं विद्वन्! शिष्याय करुणार्णव! ॥

३. तदङ्गीकृत्य वचनं भट्टार्यस्तमथाब्रवीत् ।
अनिर्देश्यवयोरूपविभ्रमोदार्यविस्मितैः ॥

४. पुंसामपि च वेदान्तिन्! दृष्टिचित्तापहारकैः ।
मोहयित्वाशु तां गोदां रङ्गेशो रङ्गमभ्यगात् ॥

---

# தொண்ணூற்றோராம் அத்தியாயம்

## அரங்கனின் காட்சி

### நஞ்ஜீயரின் கேள்வி

1-2. மிக ஆச்சர்யமான அந்தக் கதையைக்கேட்டு, நஞ்சீயர் மிக உகந்தவராய், "கருணைக்கடலான மஹாசார்யரே! அத்புதமான கோதா கல்யாணத்தை அடியேன் கேட்க விரும்புகிறேன். ஶிஷ்யனான அடியேனுக்குச் சொல்லுவீராக" என்று மறுபடியும் பட்டரை ஆர்வத்துடன் கேட்டார்.

## கோதையின் பிரிவுத்துன்பம்

3-7. நஞ்சீயருடைய வார்த்தையை ஏற்று, பட்டர் அவரைக் குறித்துச் சொல்லத் தொடங்கினார்:—வேதாந்தியே! ஆண்களின் கண்ணையும் நெஞ்சையும் ஈர்க்கக்கூடிய விவரிக்கவொண்ணாத பிராயம், வடிவழகு, சேஷ்டிதங்கள்,

५. रङ्गेशागमनाभावात्सा गोदा विरहातुरा ।
रङ्गेशलग्नहृदया ह्यतप्यत दिवानिशम् ॥

६. गोपिकाः कृष्णविरहाद्यथाऽतप्यन्त भूरिशः ।
रङ्गेशबद्धहृदया गोदा नियतमानसा ॥

७. जितनिद्रा जिताहारा राधिकेव समास्थिता ।
रङ्गेशविरहेणैव सन्तप्तां तामहर्निशम् ॥

८. पिता दुहितरं वीक्ष्य विष्णुचित्तोऽप्यतप्यत ।
अचिन्तयत् भट्टनाथस्ततो दुहितृवत्सलः ॥

९. रङ्गेशो भगवान् देवः क्व च श्रीरङ्गनायकः ।
तस्मादद्य महत्कार्यं कथं वा घटते मम ॥

---

வண்மை, புன்சிரிப்பு ஆகியவற்றால் கோதையை மயக்கி விட்டு, ஸ்ரீரங்கராஜன் திருவரங்கத்துக்குச்சென்றுவிட்டான். மறுபடியும் திருவரங்கன் திரும்பிவராமையால் அவனிடமே ஈடுபட்ட நெஞ்சுடையவளாய், அவனது பிரிவினால் வருந்தி இரவும் பகலும் துன்புற்றாள் கோதை. கண்ணனைப் பிரிந்து கோபிகள் எப்படித் துன்புற்றார்களோ, அப்படியே அரங்க னிடம் ஈடுபட்ட கோதையும் அவனையல்லதறியாத நெஞ்சை யுடையவளாய், தூக்கமும் உணவும் கொள்ளாமல் ராதை யைப்போலே இருந்தாள்.

## விஷ்ணுசித்தரின் கவலையும், அரங்கனின் நியமனமும்

7*—15. குற்றமற்ற வேதா₃ந்தி நஞ்சீயரே! அரங் கனைப்பிரிந்து இரவு பகலாகத் துன்புறும் தன் பெண்ணைப் பார்த்து, தந்தையான விஷ்ணுசித்தரும் மிகவும் துன்புற்றார். பெண்ணிடம் அன்புள்ள அந்தப் பட்டர்பிரான் ''ஸ்ரீரங்க ராஜனாகிற அவ்வெம்பெருமான் எங்கே? நான் எங்கே?

१० वरं समीचीनतरं अकामयत मे सुता ।
तयोर्वैवाहिकं कार्यं श्रीरङ्गेश्वरगोदयोः ॥

११. केनोपायेन तत्साध्यमिति चिन्तापरोऽभवत् ।
प्रव्याकुलान्तःकरणो भट्टनाथस्तदाऽनघ! ॥

१२. तमेव शरणं गत्वा सुष्वापाकृतभोजनः ।
स्वप्ने प्रसन्नो भगवान् भट्टनाथस्य रङ्गराट् ॥

१३. व्याजहार शुभं वाक्यं वेदान्तिन्! भक्तवत्सलः ।
स त्वं श्वशुर! सर्वज्ञ! किमर्थं परितप्यसे ॥

१४. तूर्णं दुहितरं गोदां समादायार्य सादरम् ।
मम रङ्गं समायाहि महता वैभवेन च ॥

१५. सर्वेषां पश्यतां शीघ्रं गोदाया दुहितुस्तव ।
करिष्याम्यहमेवाद्य पाणिग्रहणमङ्गलम् ॥

---

இந்தப் பெரிய காரியம் இப்போது எனக்கு எப்படிக் கை கூடும். என் பெண் அழகிய மணவாளனையே விரும்பு கிருள். கோதைக்கும் அழகிய மணவாளனுக்கும் விவாஹ மங்க₃ளத்தை நான் எப்படி நிறைவேற்றிவைப்பேன்?'' என்று கவலையில் மூழ்கினர். கவலைகொண்ட நெஞ்சுடைய வரான பட்டர்பிரான் அப்போது எம்பெருமானையே ஶரண மடைந்தவராய், உணவுகொள்ளாமல் உறங்கினர். பட்டர்பிரானுடைய கனவில் தோன்றிய ஸ்ரீரங்க₃நாத₂ன் ப₄க்தவத்ஸலனுகையாலே, ''எல்லாம் அறிந்த என் மாம னரே! எதற்காகத் துன்புறுகிறீர்? விரைவிலேயே அன் போடு உம் பெண்ணை அழைத்துக்கொண்டு என்னுடைய திருவரங்கத்துக்கு வாரும். அனைவரும் காணும்படியாக, பெரிய வைப₄வத்துடன் உம்முடைய பெண்ணைக் கைப்பிடிக் கும் விவாஹமங்க₃ளத்தை நானே நடத்திவைக்கிறேன்'' என்னும் மங்க₃ளமான வாக்யத்தைக் கூறினன்.

१६. ततः स्वप्नात्समुत्थाय भट्टनाथः सविस्मयः ।
दुहित्रे स्वप्नवृत्तान्तं सर्वं सम्यङ्निवेद्य तत् ॥

१७. सन्तुष्टो निर्भरस्तस्थौ तां सुतां लालयंस्तदा ।
अतिप्रियतमं सत्यं तन्निशम्य पितुर्वचः ॥

१८. अकरोद्भगवत्प्रीत्यै धनुर्मासव्रतोत्तमम् ।
सा लोकरक्षणार्थाय गोदा देवी पतिव्रता ॥

* [हेमन्ते प्रथमे मासि नन्दव्रजकुमारिकाः ।
चेरुर्हविष्यं भुञ्जानाः कात्यायन्यर्चनं व्रतम् ॥
इति चैवं यथा चक्रुर्व्रजे तिन्गोपिकाः स्त्रियः ।
धनुर्मासि व्रतं गोदा तथैव भगवत्परा ॥
स्ववेश्मनि प्रतिष्ठाप्य तं सुन्दरवरं हरिम् ।
रंगेशं पूजयामास विधिना नियतव्रता ॥ ]

## திருப்பாவை நோன்பு

16-*29. வேதாந்தியே! அதற்குப்பின் பட்டர்பிரான் விழித்தெழுந்து வியப்புற்றவராய், தன் பெண்ணிடம் கனவுச் செய்தி முழுவதையும் நன்குகூறி மிக உகந்தவராய், அப் பெண்ணை மிகவும் கொண்டாடிக்கொண்டு கவலையற்றவரா யிருந்தார். மிக இனியதும் உண்மையானதுமான தந்தை யின் அவ்வார்த்தையைக்கேட்டு, பதிவ்ரதையான கோதா தேவி உலகங்களை ரக்ஷிப்பதற்காகவும், எம்பெருமானுடைய உகப்புக்காகவும் மார்கழி மாதத்தில் செய்யப்படும் சிறந்த நோன்பை அனுஷ்டித்தாள். ''ஹேமந்தருதுவில் முதல் மாஸமான மார்கழியில் ஆய்ப்பாடிச் சிறுமிகள் நோன்பிற் குரிய உணவையுண்டு காத்யாயனீ வ்ரதத்தை அனுஷ்டித் தனர்; என்று (பாகவதத்தில்) சொல்லப்பட்டபடி எம்பெரு மானிடம் ஈடுபட்ட ஆண்டாளும் மார்கழி மாதத்தில் ஆயர்

* [ ] அடைப்பினுள் உள்ளவை சில பதிப்புகளிலேயே உள்ளன.

१९. ब्राह्मे मुहूर्ते चोत्थाय रङ्ग रङ्गेति भाषिणी ।
स्नात्वा शुभ्राम्बरधरा चोर्ध्वपुण्ड्रधरा शुभा ॥

२०. पीताम्बरेण रङ्गेशं समलङ्कृत्य भूषणैः ।
गन्धपुष्पैश्च धूपैश्च दीपैर्नीराजनैस्तथा ॥

२१. सम्यक् संपूज्य विधिवत् तदा हरिपरायणा ।
मुद्गान्नं शर्कराज्यादिसंप्लुतं फलसंयुतम् ॥

२२. नैवेद्यं विष्णवे सम्यक् समर्प्यात्यन्तभक्तितः ।
दत्त्वा कर्पूरताम्बूल नीराजनमनुत्तमम् ॥

२३. गाथां मनोहरामेकां कृत्वा द्राविडभाषया ।
तां समर्प्य च पूजान्ते पुनर्नीराजनं ददौ ॥

---

சிறுமிகள்போல் மார்கழி நோன்பை அனுஷ்டி₂த்தாள். தனது க்ருஹத்தில் அழகிய மணவாளனை அரங்கநகரப்பனை ப்ரதிஷ்டை செய்து, நோன்புக்குரிய நியமங்களோடு கூடியவளாய், முறைப்படி அப்பெருமானை ஆராதித்தாள்; ப்₃ராஹ்ம முஹூர்த்தத்தில் 'ரங்க ரங்க' என்று கூறிக் கொண்டே விழித்தெழுந்து, நீராடி மங்க₃ளமான வஸ்திரத்தை உடுத்து, ஊர்த்₄வபுண்ட்₃ரம் தரித்து, பரமமங்க₃ளையாய், எம்பெருமானிடமே ஈடுபட்டவளான கோதை திருவரங்கனைப் பீதகவாடையாலும், திருவாப₄ரணங்களாலும் அலங்கரித்து. க₃ந்த₄புஷ்பங்களையும் தூ₄பதீ₃பங்களையும் ஸமர்ப்பித்து, திருவந்திக்காப்பெடுத்து முறைப்படி நன்கு ஆராதித்து, அப்போதே நெய், வெல்லம் ஆகியவைநிறைந்த பொங்கலையும் பழங்களோடுகூட எம்பெருமானுக்கு ப₄க்தியோடு தளிகை ஸமர்ப்பித்து, கர்ப்பூர தாம்பூ₃லம் அளித்து, மறுபடியும் திருவந்திக்காப்பு எடுத்து, தமிழ் பாஷையாலே அனைவருடைய நெஞ்சையும் ஈர்க்கக் கூடிய திருப்பாவையில் முதல் பாட்டை அருளிச்செய்து, திருவாராதனத்தின் இறுதியில் அதை விண்ணப்பித்து, மறு

२४. ततः प्रदक्षिणं कृत्वा रंगेशं प्रणिपत्य तम् ।
कृताञ्जलिपुटा भक्त्या प्रार्थयामास निश्चला ॥

२५. रंगेश! करुणासिन्धो! मत्पाणिग्रहणं कुरु ।
त्वां विनान्यं न जानामि सत्यं वच्मि नमोऽस्तु ते ॥

२६. एवं संप्रार्थ्य वेदान्तिन्! स्वमनोभीष्टमुत्तमम् ।
तदीयाराधनं चक्रे भगवत्प्रीतयेऽनिशम् ॥

२७. भुक्त्वैकवारं नैवेद्यं हविष्यं नियतव्रता ।
दृढभक्तियुता गोदा भूशया ब्रह्मचारिणी ॥

२८. रंगेशलग्नहृदया राधिकेव समास्थिता ।
मासमेकं चरित्वैवमेतद्व्रतमनुत्तमम् ॥

---

படியும் திருவந்திக்காப்பெடுத்தாள். அதற்குப்பின் அரங்கனை வலம்வந்து வணங்கி, ப₄க்தியோடு உறுதியாகக் கைகூப்பி நின்றவளாய் "கருணைக்கடலான ஸ்ரீரங்க₃நாத₂னே! என்னைக்கைப்பிடிப்பாயாக; உன்னைத்தவிர நான் வேறு யாரையும் அறியமாட்டேன். உண்மையே சொல்லுகிறேன்; உனக்கு நமஸ்காரம்" என்று பிரார்த்தித்தாள். இவ்வண்ணமாகத் தன் சிறந்த திருவுள்ளக்கருத்தை விண்ணப்பித்து, எம்பெருமானுடைய உகப்புக்காக தினந்தோறும் ததீயாராதனத்தையும் செய்தாள். நோன்புக்குரிய உணவை ஒரு வேளையே உண்டு, நோன்புக்குரிய நியமங்களையுடையவளாய், உறுதியான ப₄க்தியையுடையவளாய், பூ₄மியில் சயனித்திருப்பவளாய், திருவரங்கனையே நெஞ்சில் கொண்டவளாய், ராதையைப்போலேயிருந்த கோதை மாதம் முழுவதும் இந்த ஒப்பற்ற நோன்பை இவ்வண்ணமாக அனுஷ்டி₂த்து, அப்போதே முப்பது பாட்டுக்கொண்ட திருப்பாவையாகிற தி₃வ்ய ப்ரப₃ந்த₄த்தை நிறைவு செய்தருளினாள்.

२९. त्रिंशद्गाथायुतं दिव्यं प्रबन्धं विदधे तदा ।
[कृष्णलीलाविहरणं तत्सर्वमवधारय ।
तत्समाप्तिदिने रंगनायकः सहसा तदा ॥]
स्वप्ने प्रसन्नो भगवान् गोदादेव्याः श्रियःपतिः ॥
३०. व्याजहार शुभं वाक्यं मन्दस्मितमुखः सतीम् ।
परितुष्टोऽस्मि भद्रं ते स्तोत्रेणानेन बालिके ! ॥
३१. अर्चनेन विशेषेण धनुर्मासि कृतेन च ।
त्वत्पाणिग्रहणं शीघ्रं करिष्यामि न संशयः ॥
३२. इत्युक्त्वा सर्वभोगांश्च गोदायै प्रददौ हरिः ।
तन्मासान्तदिने गोदा सर्वभोगसमन्विता ॥

---

## கோதையின் பே₄ாக₃ாநுப₄வம்

29*-33. நஞ்சீயரே! கண்ணனின் விளையாட்டுக்கள் அனைத்தையும் கேட்பீராக. இந்தப் பாவைநோன்பின் முடிவு தினத்தில் ஶ்ரீரங்க₃நாத₂னை ஶ்ரீமந்நாராயணன் கோதாதேவியின் கனவில் சடக்கெனக் காட்சியளித்து, பதிவ்ரதையான அவளைக்குறித்துப் புன்சிரிப்புடையவனாய், "பெண்ணே! இந்த உன்னுடைய துதிநூலாலும் மார்கழி மாதத்தில் நீ செய்த சிறப்பான ஆராத₄னத்தாலும் நான் உகப்படைந்தேன். உனக்கு மங்களம் உண்டாகுக. விரைவிலேயே உன்னைக் கைப்பிடிப்பேன். இதில் ஐயமில்லை" என்னும் மங்க₃ளமான வார்த்தையைக் கூறினான். இப்படிக் கூறியபின் அவ்வெம்பெருமான் கோதைக்கு எல்லா பே₄ாக₃ங்களையும் அளித்தருளினான். அந்த மார்கழி மாதத்தின் கடைசி நாளில் எல்லா பே₄ாக்₃யப்பொருள்களோடும் கூடியவளான

३३. रंगेशेनाखिलान् भोगान् बुभुजे हरिणा सह।
भोगीति नाम तस्यासीत् दिवसस्य तदानघ ॥
३४. यस्मिन्दिने सर्वभोगान् श्रीगोदा बुभुजे ततः।
भूम्यास्तले शायिनी सा निराहारा यतव्रता ॥
३५. धनुर्मासे सुसंपूज्य रंगेशं राधिका यथा।
तदेकहृदया तस्थौ श्रीकृष्णविरहातुरा ॥
३६. तया संपूजितस्सम्यक् गोदया रङ्गराट् तदा।
धनुर्मासेऽन्त्यदिवसे प्रत्यक्षमगमद्धरिः ॥
३७. गोदाविवाहदिवसं तमित्याहुर्मनीषिणः।
विधाय मङ्गलस्नानं बन्धुभिस्सह सादरम् ॥

---

கோதை திருவரங்கனுகிற எம்பெருமானேடு எல்லா பேோகங்களையும் அனுபவித்தாள். குற்றமற்ற நஞ்சீயரே! அக்காரணத்தினல் அன்றுமுதல் அந்தநாளுக்கு 'போகி' என்று பெயர் உண்டாயிற்று.

## போகிப்பண்டிகையில் அரங்கனின் காட்சி

34-*37. மார்கழி மாதத்தில் உண்ணுமல் நோன்புக்குரிய விரதங்களோடு பூமியில் ஶயனித்திருப்பவளாய், கிருஷ்ணனைப்பிரிந்து வருந்திய ராதை அக்கண்ணனை ஆராதித்ததுபோலே ரங்கநாதனை நன்கு ஆராதித்து, அவனையே நெஞ்சில் கொண்டவளாய், கோதாதேவி எந்த நாளில் எல்லா போகங்களையும் அனுபவித்தாளோ, அந்தக் கோதையால் நன்கு ஆராதனம் செய்யப்பட்ட ரங்கராஜன் மார்கழிமாதத்தின் கடைசிநாளான அந்த நாளிலேயே அவளுக்குப் பிரத்யக்ஷமாகக் காட்சி அளித்தான். அந்த நாளையே பெரியோர்கள் கோதா விவாஹநாளாகக் கூறுகிறார்கள்.

३८. उत्सवं कारयेत्तत्र सर्वभोगसमृद्धये ।
अभोगं भोगिदिवसे यः करोति विमूढधीः ॥

३९. ततो ह्यभोगवान्नित्यं स नरो जायते भुवि ।
गोदारंगेशकल्याणं ये कुर्वन्ति स्ववेश्मनि ॥

४०. तेषां च नित्यकल्याणं भविष्यत्यनिशं ध्रुवम् ।
कल्याणं ये प्रकुर्वन्ति गोदाकल्याणवासरे ॥

४१. कल्याणसहितास्सर्वे भवेयुः सर्वदा नराः ।
श्रीभोगिदिवसे ये तु गोदारंगेशयोस्तदा ॥

---

## போகிப் பண்டிகையின் சிறப்பு

37*-42. எல்லா போ₄க₃ங்களும் வளர்வதன்பொருட்டு அந்த போ₄கி₃ப் பண்டிகையன்று மங்க₃ளஸ்நானம் செய்து உறவினர்களோடுகூட அன்போடு உத்ஸவம் செய்ய வேண்டும். அறிவற்ற எவனொருவன் போ₄கி₃ப்பண்டிகையன்று போ₄க₃ங்களோடு அதைக் கொண்டாடாமல் இருக்கிறானோ, அவன் எப்பொழுதுமே இவ்வுலகில் போ₄க₃ங்களற்றவனாகவே இருக்கிறான். அன்று தங்களுடைய வீட்டில் அரங்கனுக்கும் ஆண்டாளுக்கும் எவர்கள் கல்யாணம் செய்து வைக்கிறார்களோ, அவர்களுக்கு எப்போதும் நித்ய கல்யாணமாகவே இருக்கும் என்பது உறுதி. கோதையின் கல்யாணதினமான அன்று எவர்கள் ஆண்டாள் திருக்கல்யாணத்தை நடத்துகிறார்களோ, அந்த மனிதர்கள் அனைவரும் எப்போதும் மங்களம் உடையவர்களாகவே ஆகிறார்கள். போகிப்பண்டிகையன்று கோதைக்கும் அரங்கனுக்கும் நன்கு விவாஹத்தை நடத்திவைப்பவர்கள் எப்போதும் இவ்வுலகில் செல்வச்செழிப்போடு விளங்குகிறார்கள்.

४२- सम्यक् विवाहं कुर्वन्ति सम्पन्नास्तेऽनिशं भुवि ।
विष्ण्वालये गृहे वापि गोदाकल्याणमुत्तमम् ॥
ये सेवन्ते महात्मानः श्रीमन्तस्ते सदा भुवि ॥
इति श्रीप्रपन्नामृते श्रीभट्टार्यवेदान्तिसंवादे गोदायै रंगेशप्रत्यक्षो
नाम एकनवतितमोऽध्यायः ॥

द्विनवतितमोऽध्यायः ॥

१. अस्मद्यतिस्स भट्टार्यं प्रणिपत्येदमब्रवीत् ।
धन्विनव्यपुरे गोदा स्वसद्मनि किलास्थिता ॥
२. रंगेशो रङ्गनगरे सोऽर्चारूपो हरिः स्थितः ।
बभूव कथमुद्वाहः श्रीगोदारङ्गनाथयोः ॥

---

திருமால் திருக்கோயிலிலாவது வீட்டிலாவது நடக்கும் ஆண்டாள் திருக்கல்யாண மஹோத்ஸவத்தை எந்த மஹான்கள் ஸேவிக்கிறுர்களோ அவர்கள் எப்போதும் இவ்வுலகில் எல்லாச் செல்வமும் பெற்று வாழ்கிறுர்கள்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ப₄ட்டார்ய வேதா₃ந்தி ஸம்வாத₃த்தில் கோதைக்கு அரங்கனின் காட்சியை விளக்கும் தொண்ணூற்றொராவது அத்தியாயம் நிறைவு பெற்றது.

# தொண்ணூற்றிரண்டாம் அத்தியாயம்

## ஆண்டாள் அரங்கனின் சேர்த்தி

### நஞ்சீயரின் கேள்வி

1-*3. நஞ்சீயர் ஸ்ரீபராஶரப₄ட்டரை வணங்கி "ஆண்டாள் ஸ்ரீவில்லிபுத்தூரில் தன் வீட்டில் இருப்பவள். அரங்க நகரப்பனே திருவரங்கத்தில் அர்ச்சாரூபியாயிருப்பவன். அந்த ஆண்டாளுக்கும் அரங்கனுக்கும் விவாஹம் இவ்வுலகில் எப்படி நடந்தது என்னும் அற்புதமான அந்தப் பெரிய சரித்திரம் முழுவதையும் தெளிவாகக் கூறுவீராக" என்று கேட்டார்.

३. तत्सर्वं विशदं ब्रूहि यन्महच्चाद्भुतं भुवि ।
अवधार्य स भट्टार्यः शुभमस्यतेर्वचः ॥

४. अवोचदखिलं तस्मै गोदाकल्याणमद्भुतम् ।
स तयाराधितस्सम्यक् रंगेशो गोदयाऽनघ! ॥

५. स्वप्ने प्रसन्नो भगवानिदं वचनमब्रवीत् ।
परितुष्टोऽस्मि भद्रं ते स्तोत्रेणानेन सुन्दरि! ॥

६. अर्चनेन विशेषेण धनुर्मासि कृतेन च ।
त्वत्पाणिग्रहणं शीघ्रं करिष्यामि न संशयः ॥

७. इत्युक्त्वा सुन्दरवरः तत्रैवान्तर्दधे हरिः ।
ततः स्वप्नात्समुत्थाय गोदा सन्तुष्टमानसा ॥

---

## அரங்கன் அப4யமளித்தல்

3*-*7. ஸ்ரீபராஸரப4ட்டர் நஞ்சீயருடைய அந்த மங்க3ளமான வார்த்தையைக்கேட்டு, அற்புதமான கோ3தா3 கல்யாணம் முழுவதையும் அவருக்குப் பின்வருமாறு கூறினார்-குற்றமற்ற நஞ்சீயரே! இப்படி ஆண்டாளால் நன்கு ஆராதி4க்கப்பட்ட ஸ்ரீரங்க3நாத2ன் அவளுடைய கனவில் தோன்றி, "அழகியவளே! உன்னுடைய இந்தத்துதியாலும், மார்கழிமாதத்தில் நீ செய்த ஆராத4னத்தாலும் நான் மிகவும் உகந்தேன். உனக்கு மங்க3ளம் உண்டாகுக, விரைவிலேயே உன்னைக்கைப்பிடிப்பேன். இதில் ஐயமில்லை" என்று அருளினான். இப்படிக் கூறியவுடன் அழகிய மணவாளனானஎம்பெருமான் அப்போதேமறைந்துவிட்டான்.

## அரங்கனின் நியமனம்

7*-*11. அதற்குப்பின் கனவிலிருந்து விழித்தெழுந்து, ஆண்டாள் மிக உகந்த நெஞ்சினளாய், தந்தையிடம் நடந்ததனைத்தையும் விண்ணப்பித்து உறுதியோடு இனிது

८. पित्रे निवेद्य तत्सर्वं निश्चला सुखमास्थिता ।
ततो रङ्गेश्वरः श्रीमान् स्वश्रीरङ्गाधिकारिणः ॥

९. इत्युवाच प्रवालोष्ठस्फुरद्दशनसुप्रभः ।
मदीयैर्मङ्गलैर्वाद्यैः सकलैः छत्रचामरैः ॥

१०. नवरत्नमयीं दिव्यां मदीयां शिविकां पराम् ।
आदाय धन्विनगरं संप्राप्यात्यन्तवैभवैः ॥

११. विष्णुचित्तसुतां गोदामानयध्वं ममान्तिकम् ।
अङ्गीकृत्याञ्जसा सर्वे रंगेशाज्ञां त्वरान्विताः ॥

१२. धन्विनव्यपुरं जग्मुर्गोदानयनकारणात् ।
विष्णुचित्ताय तत्सर्वं तस्मै सम्यगबोधयन् ॥

---

வாழ்ந்தாள். அதற்குப்பின் திருவின்செல்வனை அரங்கன் ஒளிவீசும் பற்களையுடைய பவளம்போன்ற சோதிவாய் திறந்து, திருவரங்கம் திருக்கோயில் அதிகாரிகளைக் குறித்து ''என்னுடைய மங்கள வாத்யங்களோடும், குடை சாமரம் முதலான எல்லா வைபவங்களோடும் என்னுடைய நவரத்தினங்கள் பதிக்கப்பெற்ற மிகஉயர்ந்த திருப்பல்லக்கை ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எடுத்துச்சென்று விஷ்ணுசித்தருடைய பெண்ணை கோதையை என்னிடம் அழைத்து வாருங்கள்'' என்று அருளிச்செய்தான்.

## பெரியாழ்வார்

## வடபெருங்கோயிலுடையானிடம் விடைபெறுதல்.

**11*-15** வேதாந்தி நஞ்சீயரே! அவ்வதிகாரிகள் அனைவரும் அரங்கனின் ஆணையைச் சிரமேற்கொண்டு கோதையை அழைத்து வருவதற்காக விரைவாக ஸ்ரீவில்லிபுத்தூருக்குச் சென்றார்கள் அந்த விஷ்ணுசித்தரிடம் அரங்கனின் நியமனமனைத்தையும் நன்கு விண்ணப்பித்தார்கள்.

१३. तेषां तद्वचनं श्रुत्वा महत्कर्णामृतं च सः।
विस्मितस्सं प्रहृष्टोऽथ तान् सर्वान्समपूजयत् ॥

१४. अतिप्रहृष्टो वेदान्तिन्! भट्टनाथः कृतत्वरः।
श्रीधन्विपुरनाथाय तत्सम्यग्विज्ञाप्याखिलम् ॥

१५. विज्ञाप्य सादरं भक्त्या तेनानुज्ञापितस्तदा।
ततः श्रीरङ्गगमने चकार मतिमान् मतिम् ॥

१६. वल्लभाय स्वशिष्याय गोदोद्वाहं च शंसितुम्।
भूपाय प्राहिणोत् शिष्यान् भट्टेशो मधुरां पुरीम् ॥

१७. निशम्य स तदुद्वाहमतिमानुषवैभवम्।
श्रीवैष्णवेभ्यस्सर्वेभ्यो वल्लभस्तानपूजयत् ॥

---

அவர்களுடைய கர்ணாம்ருதம் போன்ற அப்பெரிய வார்த்தையைக்கேட்டு விஷ்ணுசித்தரும் வியப்புற்று உகந்தவராய், அவர்கள் அனைவரையும் ஆராதித்தார். மிக உகந்த பேரறிவாளரான பட்டர்பிரான் விரைவாக ஸ்ரீவில்லிபுத்தூருறைவானை வடபெருங்கோயிலுடையானிடம் அச்செய்தியனைத்தையும் அன்போடும் பக்தியோடும் விண்ணப்பித்து, அவரால் விடைகொடுக்கப்பெற்றவராய் அப்போதே திருவரங்கம் செல்லத் திருவுள்ளம் பற்றினார்.

## கோதையின் திருவரங்கயாத்திரை

16-32 வேதாந்தியே! தம் சிஷ்யனான வல்லபதேவ அரசனுக்கு கோதாகல்யாணத்தைத் தெரிவிப்பதற்காக பட்டர்பிரான் தம் சிஷ்யர்களை மதுரைக்கு அனுப்பினார். வல்லபதேவனும் மனித சக்திக்கு அப்பாற்பட்ட பெருமையுடைய அக்கல்யாணத்தைப்பற்றிக் கேள்விப்பட்டு அதைச் சொன்ன அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரையும்

१८. प्रगृह्य शिरसा राजा गुरोराज्ञामलङ्घिताम् ।
धन्विनव्यपुरं प्राप चतुरङ्गबलो महान् ॥

१९. तमागतमभिप्रेत्य स्वशिष्यं वल्लभं गुरुः।
भट्टनाथः संप्रहृष्टो यथोचितमपूजयत् ॥

२०. रङ्गेश्वरं विना नान्यमकामयत मे सुता ।
अनन्या राघवेणाहं भास्करेण प्रभा यथा ॥

२१. गोदादेवी तथैवासीत् पातिव्रत्यपरायणा।
सर्वलोकेश्वरस्यैवं रंगेशस्य प्रिया सती ॥

२२. नोचितं दृष्टिपतनं तदन्यपुरुषस्य हि ।
इत्येवं सम्यगालोच्य भट्टनाथो महामतिः ॥

---

ஆராதித்தான். தட்டமுடியாத அந்த ஆசார்ய நியமனத்தைச் சிரமேற்கொண்ட மகாராஜன் நால்வகைச் சேனையோடுங்கூட ஸ்ரீவில்லிபுத்தூரை அடைந்தான். வந்தடைந்த தம் சிஷ்யனை வல்லபதேவனை எதிர்கொண்டழைத்து ஆசார்யரான பட்டர்பிரான் மிக உகந்தவராய் முறைப்படி அவனை கௌரவித்தார். 'ஸூர்யனைவிட்டு ஒளி பிரியாததுபோலே ராகவரைவிட்டு நான் பிரிவதில்லை' என்று ஸீதாப்பிராட்டி அருளியதுபோலே, கோதையான என் பெண்ணும் ஸ்ரீரங்கநாதனைத்தவிர வேறெவரையும் நினைக்கவும்மாட்டாள். கற்பு நெறியில் நிற்பவள். எல்லா உலகுக்கும் ஈச்வரனை அரங்கனுக்கு இனிய மனைவியாவாள். அத்தகைய அவள்மேலே பிறர் கண்படக்கூடாது'' என்று இவ்வண்ணமாக நன்கு ஆலோசித்து, பேரறிவாளரான பட்டர்பிரான் ஆண்டாள் எழுந்தருளும் பல்லக்கைப் பீதகவாடையைக்கொண்டு நன்கு வெளியில் மூடி, திருவரங்கனின் குடை சாமரங்க

२३. पीताम्बरेण संछाद्य सुदृढं शिबिकां बहिः ।
महता वैभवेनैव रङ्गेशच्छत्रचामरैः ॥

२४. राज्ञा वल्लभदेवेन तत्रस्थैर्निखिलैर्जनैः ।
भेरीमृदङ्गनादैश्च जयशब्दैश्च वन्दिनाम् ॥

२५. प्रतस्थे सहसा धीमान् श्रीरङ्गं प्रति सादरम् ।
धन्विमङ्गलमारभ्य चाश्रीरङ्गं समन्ततः ॥

२६. सुपुष्पकायमानैश्च निवासस्थानमण्डपैः ।
तन्मार्गं सहसा सम्यगलङ्कारं प्रचक्रिरे ॥

२७. वैकुण्ठमार्गवद्रङ्गमार्गस्तेनाभवत्तदा ।
अयं रङ्गेश्वरो देवो विष्णुचित्तसुतामिमाम् ॥

---

ளோடும், பேரி, மிருதங்கம் முதலான வாத்யங்களோடும் துதிபாடகர்களின் ஜய கோஷங்களோடும், வல்லப தேவ ராஜாவும் ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்த எல்லா ஜனங்களும் சூழ்ந்து வர, ஸ்ரீரங்கத்துக்குப்பேரார்வத்தோடு விரைவாகப் புறப்பட்டார். ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து ஸ்ரீரங்கம் வரையில் உள்ள வழியில் நல்ல புஷ்பங்களாலான இளைப்பாறும் பந்தல் களை எல்லாவிடத்திலும் அமைத்து அவ்வழியை அலங்கரித் தனர். அதனால் ஸ்ரீரங்கத்துக்குச் செல்லும் வழி வைகுண்டத்துக்குச்செல்லும் வழி போலாயிற்று. "தேவனான இந்த ஸ்ரீரங்கநாதன் விஷ்ணுசித்தரின் பெண்ணான இந்த மனிதப் பெண்ணைக் கைப்பிடிக்கும் ஆச்சரியச்செயலை எப்படி நிறைவேற்றப் போகிறான்" என்பதைக் காண்பதற்காக சோழ நாடு, பாண்டிய நாடு முதலான பல தேசங்களிலிருக் கும் மனிதர்கள் அனைவரும் ஸ்ரீரங்கத்தவைந்தடைந்தார்கள். அவர்கள் அனைவரும் ஸ்ரீரங்கத்தில் ஒன்று கூடி, கோதையின்

२८. कथं करोति मनुजां पाणिग्रहणमद्भुतम् ।
इति तद्द्रष्टुकामास्ते विस्मयाविष्टमानसाः ॥

२९. श्रीरङ्गं निखिला जग्मुश्चोलपाण्ड्यादिमानवाः ।
ते समेत्याखिला रङ्गं गोदाऽऽगमनमुत्तमम् ॥

३०. प्रतीक्षन्तोऽनिशं तस्थुस्तद्विवाहदिदृक्षया ।
श्रीरङ्गनगरं सर्वैर्जनैरापूरितं बभौ ॥

३१. नित्यमुक्तसमाकीर्णं वैकुण्ठनगरं यथा ।
निचुलानगरं प्राप गोदा देवी तदाऽनघ ॥

३२. पित्रा नृपतिना सार्धं चतुरङ्गबलेन च ।
गोदाऽऽगमनवृत्तान्तं रंगेशाय महात्मने ॥

३३. रङ्गाधिकारिणस्सम्यक् चक्रुर्विज्ञापनं तदा ।
सन्तुष्टस्तेन वाक्येन रङ्गराट् प्राह तांस्तदा ॥

---

கல்யாணத்தைக் காண்பதற்காக ஆண்டாள் எழுந்தருளும் சிறந்த காட்சியை எதிர்பார்த்துக் கொண்டு பல நாட்கள் காத்திருந்தனர். எல்லா ஜனங்களாலும் நிறைந்திருந்த திருவரங்கப் பெருநகர் நித்யமுக்தர்கள் நிறைந்த வைகுண்ட நகரத்தைப் போலே விளங்கிற்று. தந்தையோடும், நால் வகைச் சேனையோடு கூடிய அரசனோடும் கூட கோதாதேவி அப்போது நிசுளாபுரியை (உறையூரை) வந்தடைந்தாள்.

## அரங்கனின் நியமனம்

32*-*35. ஸ்ரீரங்க₃த்தின் அதி₄காரிகள் மஹாபுருஷனை ஸ்ரீ ரங்க நாத னிடம் கோதை எழுந்தருளியிருப்பதை அப்போதே நன்ருக விண்ணப்பித்தனர்.

३४. सम्यङ्मसेदं यत्पूर्णमलङ्कृत्य पुरं तथा ।
विष्णुचित्तसुतां गोदां विष्णुचित्तादिभिस्सह ॥

३५. महता वैभवेनैव चानयध्वं मदन्तिकम् ।
निचुलानगरस्यास्य श्रीरङ्गस्य च सत्तम! ॥

३६. सुपुष्पकायमानानि मध्ये चक्रुर्महान्ति हि ।
नीपक्रमुकरम्भादिस्तम्भान् पार्श्वद्वयेऽनघ! ॥

३७. मध्ये मध्ये तथैतेषामिक्षुदण्डात् बबन्धिरे ।
प्राकारसप्तकं तत्र सर्वत्र समलङ्कृतम् ॥

३८. शुभे मुहूर्ते सुदिने सुनक्षत्रे सुलग्नके ।
विधाय मङ्गलस्नानं सर्वभूषणभूषिता ॥

---

அந்த வார்த்தையினல் உகந்த ஸ்ரீரங்க₃நாத₂ன் "எனது இந்தத் திருவரங்கப் பெருநகரை விரைவில் நன்கு அலங்கரித்து, விஷ்ணுசித்தரின் பெண்ணை கோதையை விஷ்ணுசித்தர் முதலானவர்களுடன் மஹாவைப₄வத்தோடு எனதருகில் அழைத்து வாருங்கள்" என்று அப்போதே அவர்களைக்குறித்து அருளினன்,

## ஆண்டாளின் ஸ்ரீரங்க பட்டணப்ரவேசம்

35*-56. குற்றமற்ற நற்குணமுடைய வேத₃ாந்தி நஞ்ஜீயரே! அப்போது உறையூருக்கும் ஸ்ரீரங்கத்திற்கும் இடையிலுள்ள பெரிய வழியனைத்தையும் நல்ல மலர்களால் அலங்கரித்தனர். வழியின் இருபுறங்களிலும் பெருங்கடம்பு, கமுகு, வாழை ஆகிய மரங்களைத் தூண்களாக நட்டு அவற்றின் இடையிடையே கரும்புத்தடிகளைக் கட்டி வைத்தார்கள். ஸ்ரீரங்கத்தில் ஏழு ப்ராகாரங்களும் முழுவதும் அலங்கரிக்கப்பட்டன. மங்க₃ளமான தினத்தில்,

३९. रङ्गेशपाणिग्रहणत्वरया श्रीहरिप्रिया ।
कृताञ्जलिपुटा भक्त्या चिन्तयन्ती तमेव सा ॥

४०. श्रीगोदा शिबिकारूढा वैष्णवैः कृतमङ्गला ।
महता वैभवेनैव देशिकानुज्ञया तदा ॥

४१. निचुलानगरात्तूर्णं प्रतस्थे रङ्गमुत्तमम् ।
सुमहान्काहलिरवो गोदागमनसूचकः ॥

४२. तद्यशस्सूचकश्चाग्रे तदाश्रावि महारवः ।
श्रीवैष्णवाः पठन्तोऽग्रे प्रबन्धान् भगवत्परान् ॥

४३. अन्योन्यबद्धहस्ताश्च निर्ययुश्शुभ्रवाससः ।
सर्वालङ्कारसहितं कुथास्तरणरञ्जितम् ॥

---

மங்க3ளமான முஹூர்த்தமும், நக்ஷத்திரமும், லக்3னமும் கூடியிருந்த வேளையில் மங்க3ளஸ்நாநம் செய்து எல்லாத் திருவாப4ரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவளாய், அரங்கனுக்கு இனியவளாய், அரங்கனைக் கைப்பிடிக்க வேண்டும் என்னும் த்வரையினாலே, ப4க்தியோடு கைகூப்பியவளாய், அரங்கனையே நினைத்திருப்பவளாய், வைஷ்ணவர்களால் மங்க3ளாஶாஸனம் செய்யப்பெற்றவளான அந்தக்கோதை பெரியாழ்வாரிடம் அனுமதி பெற்றுப் பல்லக்கில் ஏறி உறையூரிலிருந்து விரைவில் திருவரங்கப்பெருநகருக்குப் புறப்பட்டாள். ஆண்டாள் வருவதையும், அவளுடைய பெருமையையும், காட்டும் பெரிய காளங்களின் பெருமுழக்கமும், (மக்களின்) பேரொலியும் பல்லக்கின்முன்னே அப்போது ஒலித்தது. ஒருவரோடொருவர் கைகோத்துக்கொண்டு வெள்ளை வஸ்திரம் த4ரித்துநின்ற ஸ்ரீ வைஷ்ணவர்கள் எம்பெருமானைப்பற்றிய தி3வ்யப்ரப3ந்த4ங்களை ஸேவித்துக்கொண்டு முன்னே சென்றனர், எல்லா அலங்காரங்களுமுடையதாய், கம்பளிவிரிப்பினால் அலங்கரிக்கப் பெற்றதாய், பல மணிக

௪௪. अनेकघण्टासहितं ततो भद्रगजाह्वयम् ।
ततश्चाश्वयुगं पश्चात्सर्वालङ्कारसंयुतम् ॥

௪௫. निर्जितामरसुन्दर्यस्ततो वाराङ्गनास्तदा ।
निर्मलाश्चित्रवसनाः सर्वालङ्कारशोभिनाः ॥

௪௬. गायन्त्यश्च प्रनृत्यन्त्यः सम्यक् शैलूषशिक्षिताः ।
गोदायाः पुरतः सम्यक् मोहयन्त्यस्सुहृज्जनान् ॥

௪௭. तस्याः पार्श्वद्वये देव्याः उभौ भट्टेशवल्लभौ ।
विरेजतुर्महात्मानौ गोदासंरक्षणोद्यतौ ॥

௪௮. वेत्रहस्ताः प्रदृश्यन्ते शतशोऽथ सहस्रशः ।
शिबिकायाश्चतुर्दिक्षु सुवस्त्राश्चारुभूषणाः ॥

---

ளால் அணிசெய்யப்பெற்றதாய், ப₄த்₃ரக₃ஜம் என்னும் பெயருடைய யானையும், அதற்குப் பின்னால் எல்லா அலங்காரங்களையுமுடைய இரு குதிரைகளும், அவற்றுக்குப் பின்னால் தே₃வஸ்திரீகளையும் அழகில் விஞ்சியவர்களாய் எல்லா ஆப₄ரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவர்களாய், குற்றமற்றவர்களாய், பலநிறப்புடவைகளை அணிந்தவர்களாய், எல்லா அலங்காரங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவர்களாய், நல்ல நட்டுவனார்களால் கற்பிக்கப்பெற்று ஆடல் பாடல்களில் ஈடுபட்டிருப்பவர்களான நாட்டியப் பெண்மணிகளும் அப்போது ஆண்டாளுக்கு முன்னால் நல்லோர்கள் அனைவரையும் ஈடுபடுத்திக்கொண்டு அழகாகச் சென்றனர். அந்த கோ₃தா₃தே₃வியின் இருபுறத்திலும் மஹாபுருஷர்களான பட்டர்பிரானும், வல்லப₄தே₃வனுமாகிய இருவரும் ஆண்டாளை ரக்ஷிப்பதில் ஈடுபட்டவர்களாய் விளங்கினார்கள். பல்லக்கின் நாலுபுறத்திலும், நல்ல வஸ்திரபூ₄ஷணங்களை தரித்துப் பிரம்பு ஏந்திச் செல்பவர்கள் நூற்றுக்கணக்கிலும், ஆயிரக்கணக்கிலும் காணப்

४९. शिबिकायास्ततः पश्चात्कुर्वन्तः स्वस्तिवाचनम् ।
द्विजसङ्घाश्च शतशो रवेण महता तदा ॥

५०. ततस्सङ्कीर्तनपरा ब्राह्मणा मधुरस्वराः ।
गाननिर्जितगन्धर्वाः ययुर्भागवतास्ततः ॥

५१. वाचामगोचरेणैव वैभवेन महत्यसौ ।
विवेश रङ्गनगरं सप्तप्राकारशोभितम् ॥

५२. विचित्रतोरणवती विचित्रध्वजमालिनी ।
विचित्रचित्रदीपालिश्चित्रवीथी विराजते ॥

५३. सा सप्तावरणान्यत्र प्रदक्षिणमथाकरोत् ।
हेमाद्रिशिखराभानि चित्रसौधानि ताः स्त्रियः ॥

---

பட்டனர். பல்லக்கின் பின்னுல், பேரொளியோடு பல்லாண்டுபாடும் நூற்றுக்கணக்கான அந்தணர்கள் காணப் பட்டனர். அதற்குப்பின் இனிய குரலில் பாடும் அந்தணர்களும், அதற்குப்பின் கந்தர்வர்களேயும் வெற்றிகொள்ளும்படி பாடும் (அந்தணரல்லாத) ப₄ாக₃வதர்களும் காணப் பட்டனர். ஏழு வீதிகளோடு கூடிய திருவரங்கப்பெரு நகரை, வர்ணிக்கமுடியாத பெருமையை உடைய ஆண்டாள் மஹாவைப₄வத்தோடு பிரவேசித்தாள். அந்நகரிலுள்ள ஆச்சர்யமான வீதி, ஆச்சர்யமான தோரணங்களே உடையதாய், ஆச்சர்யமான கொடிகளேயும், பூமாலேகளேயும் உடையதாய், பல வர்ணமுடைய ஆச்சர்யமான விளக்குகளின் வரிசையை உடையதாய் விளங்கிற்று. அந்த ஏழு வீதிகளேயும் ஆண்டாள் அதற்குப்பின் வலம் வந்தாள். தே₃வஸ்த்ரீகளேயும் வென்றிருக்கும் அழகுடையவர்களாய், ஒலிக்கும் சதங்கையை உடையவர்களான ஸ்ரீரங்கநகர்ப் பெண்கள் மேருமலேச் சிகரம்போன்ற மாடி வீடுகளின்மேல் கோதையைக் காண்பதற்காக ஏறிநின்று

५४. निर्जितामरसौन्दर्याः शिञ्जन्मञ्जीरभूषणाः ।
समारुह्याथ वेदान्तिन्! गोदादर्शनकौतुकाः ॥

५५. ववृषुः पुष्पवर्षाणि गोदायाः शिबिकोपरि ।
सौधानि गोपुराण्याशु प्राकारान् मण्डपान् जनाः ॥

५६. आरुह्याशु च ते सर्वे तदुत्सवदिदृक्षया ।
तत्सर्वं जनसंपूर्णमदृश्यत महाद्भुतम् ॥

५७. एवं प्रदक्षिणं कृत्वा तत्रावरणसप्तकम् ।
आससादाञ्जसा गोदा श्रीमच्चन्दनमण्डपम् ॥

५८. औत्सवो भगवांस्तत्र श्रीसुन्दरवराभिधः ।
विधाय मङ्गलस्नानं सर्वालङ्कारशोभितः ॥

५९. पुण्याहवाचनं कृत्वा ह्यङ्कुरारोपणं तथा ।
विधिज्ञैर्ब्राह्मणैस्साकं वेदवेदान्तपारगैः ॥

---

கோதையின் பல்லக்கின்மேல் மலர்மாரி பொழிந்தனர். திருவரங்கமக்கள் அனைவரும் கோதையின் பட்டண ப்ரவேச மஹோத்ஸவத்தைக் காண மாடிகளையும், கோபுரங்களையும், மதில்களையும், மண்டபங்களையும் ஏறி நின்றனர். ஆச்சரியமான அந்த நகர் முழுவதும் மக்களால் நிறைந்ததாய் விளங்கிற்று,

## அரங்கன் கோதையைக் கைப்பிடித்தல்

57-63. இவ்வண்ணமாக ஏழு வீதிகளையும் வலம் வந்தபின் ஆண்டாள் சிறப்புமிக்க சந்தன மண்டபத்தை நன்கு அடைந்தாள். அழகிய மணவாளன் என்னும் உத்ஸவமூர்த்தி திருமஞ்சனமாடி எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவராய், புண்யாஹவாசனமும், அங்குரார்ப்பணமும் செய்து, வேதவேதாந்தங்களைக் கரைகண்டு விவாஹவிதியையும் அறிந்த அந்தணர்க

६०. त्रयस्त्रिंशत्कोटिसुरैः ब्रह्मरुद्रादिभिस्सह ।
गोदागमनमाकाङ्क्षन् तस्थौ तत्र स मण्डपे ॥

६१. समागतां स तां गोदां रंगेशो वीक्ष्य हर्षितः ।
सुमुहूर्ते सुलग्ने च द्विजदेवाग्निसन्निधौ ॥

६२. चकार पाणिग्रहणं गोदादेव्याः श्रियः पतिः ।
विवाहं शेषहोमान्तं विधिज्ञैर्ब्रह्मसत्तमैः ॥

६३. निर्वर्त्य विधिवत्सम्यग्विप्राशीः कृतमङ्गलः ।
प्रहर्षमतुलं प्राप श्रीसुन्दरवरस्तदा ॥
रंगेशपाणिग्रहणात् गोदा परममहर्षिता ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्ति संवादे श्रीरंगेशगोदासमागमो नाम द्विनवतितमोऽध्यायः ॥

---

ளோடும், பிரமன், உருத்திரன் முதலிய முப்பத்துமுக் கோடி தே₃வர்களோடும் கூடியவராய், கோதையின் வரவை எதிர்பார்த்து அந்த மண்டபத்தில் எழுந்தருளி யிருந்தார். அங்கு வந்தடைந்த கோதையைக் கண்டு உகந்த செல்வனை அரங்கநகரப்பன், அந்தணர் தேவர்கள் அக்னி ஆகியவர்கள் முன்னிலையில் நல்ல முஹூர்த்தத்தில், நல்ல லக்₃னத்தில் கே₃ாத₃ாதே₃வியைக் கைப்பிடித் தான். முறையறிந்த அந்தணர்தலைவர்களைக்கொண்டு சேஷஹோமமீருன விவாஹ கார்யங்களையும் முறைப்படி நன்குசெய்து, அந்தணர்களால் பல்லாண்டு பாடப்பெற் றவனுய், விவாஹத்தை நிறைவுசெய்து அழகியமணவாளன் ஒப்பற்ற ஆனந்தம் அடைந்தான். அரங்கனைக் கைப்பிடித் ததால் கோதையும் மிகவும் உகந்தாள்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீ பராசரபட்ட வேத₃ாந்தி ஸம்வாத₃த்தில்
ஸ்ரீரங்க₃நாத₂னும் ஆண்டாளும் கூடியதை வர்ணிக்கும்
தொண்ணூற்றிரண்டாம் அத்தியாயம்
நிறைவுபெற்றது.

त्रिणवतितमोऽध्यायः ॥

वेदान्त्युवाच—

१. विशदं ब्रूहि मे विद्वन्! शिष्याय करुणार्णव ।
विवाहं लोकविख्यातं गोदादेव्याः श्रियःपतेः ॥

२. भट्टार्यस्तमुवाचाथ विवाहं रङ्गगोदयोः ।
एवं स्वयंवरे गोदां वरणस्रक्करां तदा ॥

३. रंगेशः प्रीतितः स्निग्धां दृष्ट्वा तां निकटे स्थितः ।
तया च पश्यतां तेषां वरणस्रग्वृतोऽभवत् ॥

४. दृष्ट्वाथ विष्णुचित्तोऽपि वृतं श्रीरङ्गनायकम् ।
प्रेम्णा प्रत्युज्जगामाथ हृष्टश्च प्रणनाम च ॥

---

# தொண்ணூற்றுமூன்றும் அத்தியாயம்

## ஆண்டாள் திருக்கல்யாணம்

### நஞ்சீயரின் கேள்வி

1. "கருணைக்கடலான பேரறிவாளரே! கோதைக்கும் அரங்கனுக்கும் நடந்த லோகப்ரஸித்₃த₄மான கல்யாணத்தைப்பற்றி, சிஷ்யனை எனக்கு மேலும் தெளிவாகக் கூற வேண்டும்" என்று நஞ்ஜீயர் கேட்டார்.

### மணவீடு புகுதல்

2—*7. இப்படிக்கேட்கப்பட்ட ப₄ட்டர் அந்த வேதா₃ந்திக்கு அரங்கன் ஆண்டாள் திருக்கல்யாணத்தைப் பின் வருமாறு விரிவாகக் கூறினார்:- அப்போது ஸ்வயம்வரத்தில் மாலையேந்திநின்ற இனியவளான கோதையைக் கடாக்ஷித்து, அவளுக்கு அருகில் நின்ற அரங்கன் அவர்கள் அனைவரும் பார்த்திருக்கும்போதே அவளால் மாலையணிவித்து மணமகனாக வரிக்கப்பெற்றான். ஸ்ரீரங்க₃நாத₂ன் ஆண்டாளால் மணமகனாக வரிக்கப்பட்டதைக்கண்டு, விஷ்ணுசித்தரும் அன்போடு அவனை எதிர்கொண்டழைத்து, உகப்புடன் வணங்கினார்.

५. विनयेन समानीय रङ्गिणं भक्तवत्सलम् ।
प्रवेशयामास गृहं महेन्द्रभवनोपमम् ॥

६. पद्मासनभवाद्यैश्च देवैर्ब्रह्मर्षिभिस्तदा ।
सिद्धचारणगन्धर्वैः अप्सराभिश्च संयुतम् ॥

७. वन्दिभिस्स्तूयमानं च छत्रचामरशोभितम् ।
मन्त्रैः सिंहासनासीनं कृत्वा योगविदां वरः ॥

८. पूजयामास चार्घ्यादिमधुपर्कादिभिर्हरिम् ।
सभार्यस्तमलङ्कृत्य वस्त्राभरणधेनुभिः ॥

९. गन्धपुष्पाक्षतैः पीतैः उपवीतादिशोभितम् ।
पाणिग्रहविधानेन गोदाहस्तं च धारयन् ॥

---

ப₄க்தவத்ஸலனை அரங்கனை அடக்கத்தோடு அழைத்துக் கொண்டு, மஹேந்த்₃ரனின் வீடுபோன்றதாய், பிரமன், சிவன் முதலான தே₃வர்களும், ப்₃ரஹ்மரிஷிகளும், ஸித்₃த₄ர், சாரணர், க₃ந்த₄ர்வர் ஆகியவர்களும், அப்ஸரஸ் ஸுக்களும் கூடியிருக்கப்பெற்றதாய், பாடகர்களால் துதிக்கப்பெற்றதாய், குடை சாமரங்களால் அலங்கரிக்கப்பெற்றதான மணவீட்டை அடைந்தார் விஷ்ணுசித்தர்.

## கோ₃தை₃யின் பாணிக்₃ரஹணம்

7*-11. பரமப₄க்தரான விஷ்ணுசித்தர் அழகியமணவாளனைச் சீரிய சிங்காசனத்தில் எழுந்தருளச்செய்து வஸ்திரம், ஆபரணங்கள், பசுக்கள், மஞ்சள் நிறமுள்ள சந்தனம், புஷ்பம், அக்ஷதைகள் ஆகியவற்றை ஸமர்ப்பித்து அலங்கரித்து, பூணூல் முதலானவற்றால் விளங்காநிற்கும் அப்பெருமானைத் தமது மனைவியோடு கூடிநின்று மந்திரங்களால் ஆராதித்தார்.

१०. तस्मै परात्मने रङ्गनाथाय करमादरात् ।
तस्याः समर्पयामास गोदायाः समलङ्कृतम् ॥

११. मङ्गलाशासनैर्वेदपुराणैः ऋषिकल्पितैः ।
तां च भूम्यंशसंभूतां तस्मै त्वेवं समार्पयत् ॥

१२. ततश्चाग्निं प्रतिष्ठाप्य हावयामास वैष्णवैः ।
अग्नेः समीपे गोदायाः पाणिभ्यां लाजहोमकम् ॥

१३. कारयित्वा रङ्गनाथः ब्राह्मणैश्च पुरस्कृतः ।
गोदां नवोढां संगृह्य भूषितां भूषणोत्तमैः ॥

---

பாணிக்₃ரஹண விதி₄ப்படி, அந்தக் கோதையின் கையைத் தம் கையால் தாங்கி, அலங்கரிக்கப்பெற்ற அந்தக்கோதையின் கையை, பரமாத்மாவான அந்த ரங்க₃நாத₂னுடைய திருக்கையில் அன்போடு ஸமர்ப்பித்தார். வேத₃புராணங்களில் உள்ளவையும், ருஷிகளால் இயற்றப்பெற்றவையுமான மங்களஶ்லோகங்களாலே பூ₄மியின் அம்சமாகப் பிறந்தவளான அவ்வாண்டாளை அந்த ரங்க₃நாத₂னுக்கு இவ்வண்ணமாக விஷ்ணுசித்தர் ஸமர்ப்பித்தார்.

## லாஜஹோமமும் ஸப்தபதி₃யும்

12—14. அதற்குப்பின் அக்₃னிப்ரதிஷ்டை₂யைச் செய்து வைஷ்ணவமந்திரங்களைக்கொண்டு, அக்னியின் அருகில் கோதையின் கைகளைக் கொண்டு லாஜஹோமத்தை (பொரிமுகந்து அட்டல்) செய்வித்தார். ப்₃ராஹ்மணர்களை முன்னிட்டுக்கொண்டு லாஜஹோமத்தைச்செய்வித்து, புதுமணப் பெண்ணை, சிறந்த ஆபரணங்களால் அலங்கரிக்கப்பெற்ற கோதையையும் ஏற்றுக்கொண்டு நடக்கும் அரங்கன் தான் முன்னே சென்றான்,

१४. अगादग्रे स्वयं गोदा स्वयं पश्चाच्चलन् हरिः ।
सप्तप्रदक्षिणं कृत्वा मुमोद सह भार्यया ॥

१५. विष्णुचित्तो महायोगी दैवतैस्सह पूजितैः ।
कासाराद्यैर्योगिमुख्यैः विवाह द्रष्टुमागतैः॥

१६. तमनुज्ञाप्य संपूज्य भूषणादिभिरुज्ज्वलैः ।
रङ्गनाथं तन्निलयं प्रेषयामास गोदया ॥

१७. शेषतल्पे शयानं तं रङ्गेशं सेवितुं तदा ।
इयेष भक्त्या सा गोदा सत्वरं वरवर्णिनी ॥

१८. सर्वेषां पश्यतां तस्मात् गोदा चन्दनमण्डपात् ।
सुमुहूर्ते विनिर्गत्य प्रविश्यान्तः पुरं तदा ॥

---

கோதை தானே (அரங்கனுக்குப்) பின்னால் சென்றாள். (அக்னியை) ஏழுமுறை வலம்வந்து பத்தினியான கோதையோடு உகப்படைந்தான் அரங்கன்.

## ஆண்டாள் அரங்கனோடு ஒன்று சேருதல்

15—*22. பெரியாழ்வாராகிய விஷ்ணுசித்தரும், விவாஹத்தைக் காணவந்திருந்தவர்களாய், பூஜிக்கப் பட்டவர்களான அயர்வறும் அமரர்களோடும், ஆழ்வார் களான பொய்கையார் முதலானோரோடும், விளங்கும் திருவாபரணங்கள் முதலானவற்றாலே ஆராதித்து, அவ்வரங்கனைக் கோதையோடுகூட அவனது இருப்பிடத்துக்கு விடைகொடுத்தார். அப்போது சிறந்த நிறமுடையவளான அந்த ஆண்டாளும் ஆதிசேஷ சயனத்தில் பள்ளிகொண்டிருக்கும் அவ்வரங்கனை பக்தி யோடு விரைவில் ஸேவிக்க விரும்பினாள். அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே நல்ல முஹூர்த்தத்தில் அந்தச் சந்தனமண்டபத்திலிருந்து அந்தக்கோதை புறப் பட்டு (காயத்ரீ) மண்டபத்தினுள் நுழைந்து, கைகூப்பி நிற்பவளாய் அந்த விமானத்தை வலம்வந்து, பக்தியோடு

१९. विधाय प्राञ्जलिर्भूत्वा तद्विमानप्रदक्षिणम् ।
संप्राप्य सहसा भक्त्या सन्निधिं रङ्गशायिनः ॥
२०. शेषतल्पे शयानं तमपश्यद्रङ्गशायिनम् ।
लावण्यं च तदेवाद्यं रङ्गेशस्य महाद्भुतम् ॥
२१. दृष्ट्वा दृष्ट्वाऽसकृत्सम्यगनुभूयानुभूय च ।
शेषतल्पं समारुह्य तत्पादाब्जसमीपगा ॥
२२. नादृश्यत तदा देवी सर्वेषां पश्यतां सताम् ।
तं दृष्ट्वाश्चर्यमतुलं विस्मयं परमं ययुः ॥
२३. विष्णुचित्तो वल्लभश्च ते सर्वे पुरवासिनः ।
श्रीभूमिनीलागोदाभिः स तत्र रमितस्सदा ॥

---

விரைவில் ஸ்ரீரங்கஶாயியின் திருமுன்பே வந்து, ஆதிஶேஷனின்மேல் சயனித்துக்கொண்டிருக்கும் அவ்வரங்கனைக் கண்டாள். தேவியான அவள் பெரிய அற்புதமாய், திருமேனிகுணங்களில் முதன்மைபெற்றதான அரங்கனின் அந்த லாவண்யத்தை (திருமேனியழகை)ப் பலமுறை பார்த்துப்பார்த்துப் பலகால் அநுபவித்து அநுபவித்து, ஆதிசேஷனாகிற படுக்கையில் ஏறி அவனது திருவடித்தாமரைகளின் அருகில் சென்றவளாய், அங்கிருந்தோர் அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே (எவராலும்) காணமுடியாதவளானாள். (அரங்கனின் திருமேனியினுள் மறைந்தாள்.)

## விஷ்ணுசித்தருக்கு விடைகொடுத்தல்

22*—29. விஷ்ணுசித்தரும், வல்லபதேவராஜாவும், அந்தத் திருவரங்கந் திருப்பதியிலுள்ள அனைவரும் ஒப்பற்ற அவ்வற்புதத்தைக் கண்டு மிகவும் வியப்புற்றனர். பாம்பணை மேல் பள்ளி கொண்ட அவ்வரங்கன் ஸ்ரீபூமிநீளைகளோடும், ஆண்டாளோடும் அவ்வரங்கத்தில் (அர்ச்சாரூபியாக) எப்போதும் சேதனர்களுக்கு மோக்ஷமளித்துக்

२४. शयानो भोगिशयने तस्थौ मुक्तिप्रदो नृणाम् ।
अङ्गीकृत्याथ तां देवीं भगवान् रङ्गराट् तदा ॥
२५. विष्णुचित्तं समाहूय सर्वेषां शृण्वतां तदा ।
इत्युवाच प्रवालोष्ठस्फुरद्दशनसुप्रभः ॥
२६. समुद्रराजवन्मेऽद्य श्वशुरोऽभूत् भवान् किल ।
तीर्थं प्रसादं मालां च शठकोपं च सादरम् ॥
२७. दापयित्वार्चकैस्साकं श्वशुराय स रङ्गराट् ।
द्विपटं हाटकमयमाच्छादयामास संभ्रमम् ॥
२८. वटपत्रशयानाय पूर्ववद्धन्विमङ्गले ।
श्रीपुष्पतुलसीमालाकैङ्कर्यं प्रतिवासरम् ॥
२९. कुर्वंस्तत्रैव भट्टार्य! सुखमास्व निरन्तरम् ।
इत्युक्त्वा भट्टनाथायं तदा प्रस्थापयद्धरिः ॥

---

கொண்டு இன்புற்றிருக்கிருன். அந்த ரங்க₃ராஜன் அப்போது அவ்வண்ணம் அக்கோதாதே₃வியை ஏற்றுக் கொண்ட பின்பு, அங்கிருந்த அனைவரும் கேட்கும்படி விஷ்ணுசித்தரைக் கூப்பிட்டு, தனது திருப்பவளத்தில் ஒளிவீசும் பற்களையுடையவனுய், "பட்டர் பிரானே! தேவரீர் கடலரசனைப் போலே எனக்கு இன்று மாமனுர் ஆனீர். முன்போலே ஸ்ரீவில்லிபுத்தூரில் வடபெருங்கோயிலுடையானுக்குப் பூமாலைகளையும், துளசிமாலைகளையும் தொடுத்து அளிக்கும் கைங்கர்யத்தை தினந்தோறும் செய்து கொண்டு, அங்கேயே இடைவிடாமல் இனிது வாழ்வீராக" என்று அருளிச்செய்து, அர்ச்சகர்களைக் கொண்டு மாமனுரான அவருக்கு தீர்த்த₂ப்ரஸாத₃ங்களையும், தான் சூடிக்களைந்த மாலையையும், ஸ்ரீஶட₂கோபனையும் அளிக்கச் செய்து, (உடுத்துக்களைந்த) பொன்மயமான ஆடையையும் அவருக்கு மிகுந்த பரபரப்போடு போர்த்தச் செய்து, அவருக்கு அப்போதே விடைகொடுத்தான்.

३०. कृत्वा विवाहं भट्टार्यो गोदां संस्थाप्य तां हरौ ।
विषादप्रीतियुक्तात्मा तेन संप्रेषितस्तदा ॥

३१. राज्ञा वल्लभदेवेन चतुरङ्गबलैस्सह ।
धन्विनव्यपुरं प्राप्य पूर्ववत्सुखमास्थितः ॥

३२. ततो वल्लभराजोऽपि भट्टार्यं देशिकोत्तमम् ।
तं धन्विमङ्गले सम्यक् प्रतिष्ठाप्य महोजसम् ॥

३३. तेनानुज्ञापितो धीमान् प्रययौ मधुरां पुरीम् ।
विष्णुचित्तो महाभागः श्वशुरो रङ्गभूपतेः ॥

३४. तत्कैङ्कर्यं सदा कुर्वन् तस्थौ दास्यैकजीवनः ।
वटपत्रशयानाय पूर्ववद्धन्विमङ्गले ॥

---

## விஷ்ணுசித்தரின் வில்லிபுத்தூர் வாழ்ச்சி

30—36 இவ்வண்ணமாக ஆண்டாள் திருக்கல்யாணத்தைச் செய்து வைத்து, கோதையை அரங்கனிடம் வாழச் செய்த பட்டர்பிரான் கோதையைப் பிரிந்ததால் வருத்தத்தையும், திருக்கல்யாணத்தால் மகிழ்ச்சியையும் அடைந்தவராய், அப்போதே விடை கொடுக்கப்பெற்று, நால்வகைச் சேனையோடு கூடிய வல்லப,தே₃வனோடு ஸ்ரீவில்லிபுத்தூருக்குச் சென்று முன்போலே இனிது வாழ்ந்தார். ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியவராய், தனது ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரான பட்டர்பிரானைச் சேர்த்து நன்கு நிலைநிறுத்தியபின், அவரால் விடைகொடுக்கப்பெற்று மதுரை மாநகருக்குச் சென்றான் அரசன். திருவரங்கராஜனுக்கு மாமனாராய்ப் பெரும்பேறு பெற்ற விஷ்ணுசித்தரும் அச்சுதனுக்கு அடிமை செய்வதையே வாழ்வாகக் கொண்டவராய், முன்போலே ஸ்ரீவில்லிபுத்தூரிலேயே வாழ்ந்து பூமாலைகளையும், துளஸீ மாலைகளையும் தொடுத்து வடபெருங்கோயிலுடையானுக்கு அளிப்பவராய் தினந்தோறும் அக்கைங்கர்யத்தையே இடைவிடாமல் செய்துகொண்டு அங்கு இனிது வாழ்ந்தார்.

३५. श्रीपुष्पतुलसीमालाकैङ्कर्यं प्रतिवासरम् ।
कुर्वंस्तत्रैव भट्टार्यः सुखमास्ते निरन्तरम् ॥
३६. नित्यं तस्य हरेर्मनोज्ञतुलसीश्रीपुष्पमालाः पराः
सम्यक् भट्टगुरुस्तदेकहृदयो भक्त्यार्पयद्विष्णवे ।
मुष्णन्सर्वजनौघपापतिमिरं बाह्यं तमो भानुवत्
पञ्चाशीतिसमाः स तत्र निवसन् श्रीधन्विनव्ये पुरे ॥
३७. ततो रङ्गेश्वरस्तस्या गोदायाः पृथगेव सः ।
अष्टमावरणे सम्यक् कारयित्वालयं महत् ॥
३८. प्राकारगोपुरयुतं मण्डपैरुपशोभितम् ।
नित्योत्सवादिसहितं वर्धयामास तं तदा ॥

---

பட்டர்பிரான் அந்த எம்பெருமானுக்கு உகப்பான துளஸீ மாலைகளையும், பூமாலைகளையும் அவனிடமே நெஞ்சு செலுத்தி தினந்தோறும் நன்கு பக்தியோடு ஸமர்ப்பித்துக்கொண்டு, அதனாலே ஸூர்யன் வெளியிருளைப் போக்குவது போலே எல்லா ஜனங்களுடைய பாபங்களாகிற இருளைப் போக்கிக் கொண்டு, அந்த ஸ்ரீவில்லிபுத்தூரிலேயே எண்பத்தைந்து திருநக்ஷத்ரங்கள் வாழ்ந்தார்.

## ஆண்டாள் திருக்கோயில்கள்

37—42. அதற்குப்பின் ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீரங்கத்தில் எட்டாவது வீதியான அடையவளைந்தானில் (தென் மேற்கு மூலையில்) அவ்வாண்டாளுக்குத் தனியாகக் கோயிலை அமைக்கச் செய்து, மதிள்களும் கோபுரங்களும் உடையதாகவும், மண்டபங்களால் விளங்குவதாகவும், நித்யோத்ஸவம் மாஸோத்ஸவம் முதலான திருவிழாக்களோடு கூடியதாகவும் அக்கோயிலை வளரச்செய்தான். குற்றமற்ற நஞ்சீயரே! அதுதொடங்கி எம்பெருமானுடைய நூற்றெட்

३९. तदारभ्याखिलस्थानेष्वष्टोत्तरशतेषु च ।
शिलालोहादिरूपेण गोदादेव्यास्ततोऽनघ ॥

४०. आविर्बभूवुस्सर्वत्र मूर्तयः पृथिवीतले ।
स्वावतारस्थलत्वेन यद्धन्विनगरं महत् ॥

४१. सुमहद्वैभवं तत्र गोदादेव्याः प्रदृश्यते ।
गोदादेवीशठारातिर्यतिराजश्च ते त्रयः ॥
सर्वथावश्यकतमाः सर्वविष्णुस्थलेषु च ॥

४२. गोदा शठारिपरकालमुखादिसिद्धैः
नाथार्ययामुनयतीश्वरकूरनाथैः ।
सार्धं जगत् करुणया कलिदोषदुष्टं
स्वाधीनरङ्गनिलया सकलं ररक्ष ॥

---

டுத் திருப்பதிகளிலும் சிலை, உலோகம் முதலானவற்றால் ஆண்டாளுக்கு நாடெங்கும் அர்ச்சாமூர்த்திகள் உண்டாயின. மிகப் பெரியதான ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாளின் அவதாரஸ்தலமாயிருக்கையால், அங்கு கோதாதேவிக்குப் பெருமை மிகுந்து காணப்படுகிறது, ஆண்டாள், நம்மாழ்வார், யதிராஜர் என்னும் மூவரும் எல்லா விஷ்ணு கோயில்களிலும் அர்ச்சாரூபியாக அவசியம் எழுந்தருளியிருக்கவேண்டியவர்களாயுள்ளனர். தனக்கு வசப்பட்டிருக்கும் திருவரங்கநாதனை உடைய அர்ச்சாரூபியான ஆண்டாள், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் முதலான ஆழ்வார்களோடும், நாதமுனி, யாமுனமுனி, யதிராஜர், கூரத்தாழ்வான் முதலான ஆசார்யர்களோடும் கூடிநின்று, கலிதோஷத்தால் கலங்கியிருக்கும் உலகனைத்தையும் ரக்ஷித்துவருகிறாள்.

४३. गोदाचरित्रं सुमहद्विचित्रं समस्तसन्मङ्गलपूर्णपात्रम् ।
शृण्वन्ति ये भक्तियुताः पठन्ति सन्मङ्गलास्ते सततं भवेयुः ॥

इति श्रीप्रपन्नामृते श्रीपराशरभट्टार्यश्रीवेदान्तिसंवादे
गोदारङ्गेश्वरविवाहकथनं नाम त्रिणवतितमोऽध्यायः ॥

चतुर्णवतितमोऽध्यायः ॥

१. असद्यतिः प्रणम्याथ भट्टार्यं प्रेमपूर्वकम् ।
भक्ताङ्घ्रिरेणुचरितं पप्रच्छ भगवत्परः ॥

२. कासारयोगिप्रमुखयोगिनां चरितानि च ।
त्वत्तः श्रुतानि भट्टार्य! सम्यग्विस्तरतो मया ॥

---

## கோ₃தா₃சரித்ர ப₂லஶ்ருதி

43, எல்லா நல்லமங்களங்களும் நிறைந்திருப்பதாய், மிகப்பெரியதாய், ஆஶ்சர்யமானதான கோ₃தா₃சரித்ரத்தை ப₄க்தியுடன் எவர்கள் கேட்கிறார்களோ, எவர்கள் படிக்கிறார்களோ, அவர்களனைவரும் நல்ல மங்களங்களையுடையவர்களாக எப்போதும் வாழ்கிறார்கள்,

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீ பராசரப₄ட்டருக்கும் வேதா₃ந்தி நஞ்சீயருக்கும் ஸம்வாத₃த்தில் ஆண்டாளுக்கும் அரங்கனுக்கும் விவாஹத்தை வர்ணிக்கும் தொண்ணூற்று மூன்றும் அத்தியாயம் நிறைவுற்றது.

# தொண்ணூற்றுநாலாம் அத்தியாயம்

## தொண்டரடிப்பொடியாழ்வார் அவதாரம்

### நஞ்சீயரின் கேள்வி

1—3. எம்பெருமானிடம் மிகவும் ஈடுபட்ட நஞ்சீயர் ஸ்ரீ பராசரப₄ட்டரை அன்போடு வணங்கி, தொண்டரடிப் பொடியாழ்வாரின் வரலாற்றை, "ஆசார்யரான ப₄ட்டரே! பொய்கையாழ்வார் முதலான முதலாழ்வார்கள் மூவர், திருமழிசைப்பிரான், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள்

३ भक्ताङ्घ्रिरेणुचरितं श्रोतुमिच्छामि सांप्रतम् ।
विशदं ब्रूहि मे विद्वन् भक्ताय करुणार्णव ॥

४. तस्य तद्वचनं श्रुत्वा भट्टार्यो भगवत्परः ।
आलोक्यासद्यतिं सम्यक् प्रहृष्टो वाक्यमब्रवीत् ॥

५. भक्ताङ्घ्रिरेणुचरितं विचित्रं पापनाशनम् ।
वक्ष्यामि शृणु वेदान्तिन्! समाहितमनास्ततः ॥

६. काश्मीरसदृशो देशश्चोलदेश इति स्मृतः ।
देशः कश्चिद्बभूवाद्यः प्रसिद्धस्सकलावनौ ॥

७. नित्यप्रवाहा कावेरी दक्षिणोत्तरभागयोः ।
या प्रहृष्टा प्रवहति तस्य सर्वत्र सर्वदा ॥

---

ஆகியவர்களுடைய வரலாறு உம்மிடமிருந்து தெளிவாகவும் விரிவாகவும் என்னால் கேட்கப்பட்டது. இப்போது தொண்டரடிப்பொடியாழ்வாரின் வரலாற்றைக் கேட்க விரும்புகிறேன், அதைத்தெளிவாகக் கூறுவீராக'' என்று வினவினார்.

## சோழநாட்டின் பெருமை

4-10. நஞ்சீயரின் அந்த வார்த்தையைக் கேட்டு பகவத்பக்தரான ஸ்ரீ பராசரபட்டர் மிக உகந்தவராய் நஞ்சீயரைப்பார்த்துப் பின்வருமாறு கூறினார்:—வேதாந்தி நஞ்சீயரே! ஆஸ்சர்யமானதாய், பாவங்களைப் போக்குவதான தொண்டரடிப்பொடிகளின் சரிதத்தைக் கூறுகிறேன், கவனமாகக் கேட்பீராக. காச்மீரதேசத்தை (அழகிலும் வளத்திலும்) ஒத்ததாய், நெடுங்காலமாகவே உலகம் முழுவதிலும் சோழநாடு என்று புகழ்பெற்றதான நாடு ஒன்று உள்ளது. அந்நாட்டில் வடக்குப்பகுதியிலும் தெற்குப்பகுதியிலும் இரண்டாகப் பிரிந்து காவேரி ஜீவ நதி

८. संपूर्णसस्यैस्सकलैश्चोलदेशः समन्ततः ।
प्रसिद्धस्सर्वदेशेषु ततः संराजते भृशम् ॥
९. विष्णुस्थानानि सर्वत्र सन्ति तत्र पदे पदे ।
अनन्तत्वात्ततस्तेषां संख्यातुं नैव शक्यते ॥
१०. पराङ्कुशादियोगीन्द्रप्रबन्धैः प्रतिपादिताः ।
विख्याता दिव्यदेशास्तु द्विचत्वारिंशदीरिताः ॥
११. तन्मध्ये सुमहत्पुण्यं कुम्भकोणं सुविश्रुतम् ।
भक्तिसारेण वकुलाभरणेन महात्मना ॥
१२. परकालेन वेदान्तिन्! तच्च सम्यगभिष्टुतम् ।
तस्य पश्चिमदिग्भागे क्रोशद्वयविदूरतः ॥

---

யாய் என்றும் ஓடுகிறது. அப்படி இருகரையும் பெருகிக் காவேரி அந்த நாட்டில் எல்லாவிடத்திலும் எப்போதும் ஓடுகையால், அந்தச் சோழநாடு எங்கும் எல்லாவித மான பயிர்களும் நிரம்பப்பெற்று, எல்லா தேசங்களிலும் மிகப் புகழ் பெற்றதாய் விளங்குகிறது. அந்த நாட்டில் விஷ்ணுவின் ஆலயங்கள் பார்த்தவிடமெங்கும் உள்ளன. கணக்கற்றவையாகையாலே, அவற்றை எண்ணமுடியாது. நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களில் பாடப்பெற்ற புகழ் பெற்ற திவ்யதேசங்கள் அந்நாட்டில் நாற்பத்திரண்டு உள்ளன. (நடுநாட்டையும் சோழநாட் டோடு சேர்த்துக் கணக்கிடப் பெற்றுள்ளது)

## மண்டங்குடியின் பெருமை

11-16. அந்தச் சோழ நாட்டு திவ்ய தேசங்களுக் கிடையே கும்பகோணம் மிகவும் புகழ் பெற்றதும், புண்ணியமானதுமாகும். திருமழிசையாழ்வாராலும், மஹா புருஷரான நம்மாழ்வாராலும், திருமங்கையாழ்வாராலும் அந்த திவ்யதேசம் சிறப்பாகப் பாடப்பெற்றது. அதனுடைய

१३· मण्डंगुडिसमाख्यातं बभूव नगरं महत् ।
कावेर्याश्चोत्तरतटे सर्वविद्वज्जनावृतम् ॥

१४. तत्प्रभावपराः श्लोकाः श्रूयन्ते प्रथिता भुवि ।
श्रीदिव्यसूरिचरिते वेदान्तिन्! लोकविश्रुताः ॥

१५. ततो महान् श्रीमति चोलदेशे कवेरजायास्तटसीम्नि कश्चित् ।
ग्रामोस्ति मण्डंगुडिनामधेयो यत्रासते सप्तशतानि विप्राः ॥

१६. ऋग्वेदिनः केचन भूसुरेन्द्राः केचिद्यजुर्वेदधरा महान्तः ।
अन्ये च सामश्रुतिपाठशौण्डाः तन्वन्ति यत्रोर्ध्वशिखा निवासम् ॥

१७. तत्राभवद्वेदविशारदाख्यः द्विजोत्तमः पूर्वशिखो महात्मा ।
विद्वत्प्रियो विष्णुरतस्सभार्यः सन्तानकामो हरिमेव दध्यौ ॥

---

மேற்குத் திசையில் இரண்டு குரோச தூரத்தில் காவேரியின் வடகரையில் எல்லா ஶாஸ்த்ரங்களிலும் வல்ல வித்வான்கள் நிறைந்ததான "மண்டங்குடி" என்னும் பெரிய நகரமுள்ளது. வேத₃ாந்தி நஞ்சீயரே! அந்த நகரத்தின் பெருமையைப் பேசுகின்றவையாய், நாடுநகரங்களில் புகழ்பெற்றவையான (பின்வரும் பொருளுள்ள) ஶ்லோகங்கள் திவ்யஸூரி சரிதத்தில் காணப்படுகின்றன. செல்வம் கொழிக்கும் சோழ வள நாட்டில் காவேரிக் கரையில், 'மண்டங்குடி' என்னும் பெரிய ஊர் உள்ளது. அங்கு சிலர் ருக்வேதிகளாகவும், சிலர் யஜுர்வேதிகளாகவும், சிலர் ஸாமவேதிகளாகவும் எழுநூறு மஹான்களான பூர்வசிக ஶ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மணர்கள் வாழ்ந்து வந்தனர்.

## விப்ரநாராயணர் அவதாரம்

17-*23. குற்றமற்ற வேதாந்தியே! அவ்வூரில் மஹாபுருஷராய், வித்வான்களுக்கு இனியவராய், எம்பெருமானிடம் ஈடுபட்டவராய், பூர்வசிக ஶ்ரீ வைஷ்ணவ

१८. नारायणाद्रिं प्रयतस्समेत्य कल्याणतीर्थे कृतमज्जनोऽत्र ।
सन्तानकामः स बुधस्सदारः ननाम नारायणमप्रमेयम् ॥
१९. तत्र रामप्रियं नत्वा सम्पत्पुत्राभिधं हरिम् ।
मण्डगुडिपुरं प्राप भूयस्स द्विजपुङ्गवः ॥
२०. नारायणकटाक्षेण ब्राह्मणस्य ततोऽजनि ।
विप्रनारायणो नाम धीमान् तस्य सुतो महान् ॥
२१. तत्कालनिर्णयं वक्ष्ये शृणुष्वावहितोऽनघ ।
गतेष्वष्टोत्तरशतवत्सरेषु कलौ युगे ॥
२२. प्रभवाब्दे धनुर्मासे वेदान्तिन्! ज्येष्ठभे ततः ।
श्रीविष्णुवनमालांशात् विप्रनारायणोऽजनि ॥

---

ப்₃ராஹ்மணோத்தம குலத்தில் பிறந்தவரான வேதவிசாரதர் என்பவர் மனைவியோடு கூடிநின்று குழந்தையை விரும்பி எம்பெருமானைப் பிரார்த்தித்துவந்தார். நியமங்களோடு கூடியவராய், மனைவியோடுகூட (மேலக்கோட்டை) திரு நாராயணபுரத்தை அடைந்து, கல்யாணிதீர்த்தத்தில் நீராடி அறிவாளியான அவர் அறிதற்கரிய திருநாரா யணனை வணங்கினார். அங்கு (உத்ஸவமூர்த்தியான) செல் வப்பிள்ளை எனப்படும் ராமப்ரியரை வணங்கிய பின் அவ்வந் தணர் தலைவர் திருமண்டங்குடியை அடைந்தார். திருநாரா யணனுடைய கடைக்கண் நோக்காலே அவ்வந்தணருக்குப் பேரறிவாளராய், மஹாபுருஷரான விப்ரநாராயணர் குழந் தையாக அவதரித்தார். குற்றமற்ற வேதாந்தியே! அவ ருடைய கால நிர்ணயத்தைக் கூறுகிறேன். கவனமாகக் கேட்பீராக. கலியுகத்தில் நூற்றெட்டு வருஷங்கள் கழிந்தபின்பு 'ப்ரபவ' வருஷத்தில் மார்கழி மாதத்தில் கேட்டை நக்ஷத்திரத்தில் எம்பெருமானின் 'வைஜயந்தி' எனும் வனமாலையின் அம்சமாக ஸ்ரீ விப்ரநாராயணர் திருமண்டங்குடியிலே அந்தணர் வீட்டில் அவதரித்தார்.

२३. मण्डंगुडिपुरे श्रीमान् ब्राह्मणस्य निवेशने ।
अस्यावतारश्लोकाश्च गीयन्ते बहवो भुवि ॥

२४. चोलक्षितौ धनुषि मासि महेन्द्रतारे
यः प्रादुरास मुरभिद्वनमालिकांशः ।
रङ्गेशकेलिसखमूर्ध्वशिखं द्विजेन्द्रं
भक्ताङ्घ्रिरेणुमनघं सुगुणं प्रपद्ये ॥

२५. तत्रोदभूत् भागवतद्विजेन्द्रात् ज्येष्ठाख्यभे मासि च मार्गशीर्षे ।
श्रीविप्रनारायणनामधेयो मुरारिवक्षोवनमालिकांशः ॥

२६. कोदण्डे ज्येष्ठनक्षत्रे मण्डंगुडिपुरोद्भवम् ।
चोलोर्व्यां वनमालांशं भक्तपद्रेणुमाश्रये ॥

---

## அவதார ஶ்லோகங்கள்

23* - 26. இவரைப்பற்றி (பின்வரும் பொருளுள்ள) அவதார ஶ்லோகங்கள் உலகில் பல வழங்குகின்றன: - (1) சோழநாட்டில் மார்கழி மாதம் கேட்டை நக்ஷத்ரத்தில் முராரியினுடைய வனமாலையின் அம்சமாக எவரொருவர் அவதரித்தாரோ, ஸ்ரீரங்கநாதனின் விளையாட்டுத் தோழராய், குற்றமற்றவராய், நற்குணங்கள் நிறைந்தவராய் பூர்வசிக ப்ராஹ்மணோத்தமரான அந்தத் தொண்டரடிப் பொடிகளை வணங்குகிறேன். (2) முராரியின்மார்பில் விளங்கும் வனமாலையின் அம்சமாயிருப்பவராய், ஸ்ரீவிப்ர நாராயணர் அந்த மண்டங்குடியில் மார்கழிக்கேட்டையில் பரமபாகவதரான அந்தணருக்குக் குழந்தையாக அவதரித்தார். (3) சோழநாட்டில் மண்டங்குடியென்னும் மாநகரத்தில் மார்கழிக்கேட்டையில் வனமாலையின் அம்சமாக அவதரித்த தொண்டரடிப்பொடிகளை ஆச்ரயிக்கிறேன்.

२७. नारायणप्रसादेन यतोऽभूदात्मजो महान् ।
विप्रनारायणो नाम चक्रे तस्याभिधां तदा ॥
२८. ततोऽन्नप्राशनमुखैः संस्कारैस्संस्कृतो द्विजः ।
जग्राहाखिलशास्त्राणि वेदान्साङ्गान्स देशिकात् ॥
२९. स बुधाग्रेसरो धीमान् विप्रनारायणो महान् ।
पित्रोरानन्ददः श्रीमान् व्यवर्धत महायशाः ॥
३०. विप्रनारायणायाथ देवो वेत्रवतीसखः ।
विधाय पञ्चसंस्कारान् मन्त्रार्थं चाप्यबोधयत् ॥

---

## ஸம்ஸ்காரங்கள்

27-30. திருநாராயணனின் அருளாலே தனக்குக் குழந்தை பிறந்ததால் மஹாபுருஷரான அவரது தந்தை உரியகாலத்தில் 'விப்ரநாராயணன்' என்னும் பெயரை அக்குழந்தைக்கு இட்டார். அதற்குப்பின் அந்தந்தக் காலங்களில் அன்னப்ராஶனம் முதலான ஸம்ஸ்காரங்களைப் பெற்றவரான அந்த அந்தணர் சிறுவர் ஆசாரியரிடமிருந்து அங்கங்களோடு கூடிய வேதங்களையும், எல்லா சாஸ்த்ரங்களையும் கற்றுத்தேர்ந்தார். விப்ரநாராயணர் என்னும் அறிவாளியான அந்த மஹாபுருஷர் அறிவாளிகளுக்குத் தலைமைபெற்றவராகவும், பெரும்புகழுடையவராகவும், பெற்றோர்க்கு ஆனந்தமளிப்பவராகவும், நற்குணச் செல்வமுடையவராகவும் வளர்ந்தார். அந்த விப்ரநாராயணருக்கு வேத்ரவதியின் கணவரான விஷ்வக்ஸேனர் (எம்பெருமானால் நியமிக்கப் பெற்று) ஸ்ரீவைஷ்ணவர்களுக்குரிய பஞ்சஸம்ஸ்காரங்களையும்செய்து ரஹஸ்யத்ரய மந்த்ரப்பொருள்களையும் அறிவித்தார்.

३१. सज्ज्ञानज्ञानवैराग्यो विप्रनारायणस्ततः ।
मतिमानकृतोद्वाहः श्रीरङ्गेशदिदृक्षया ॥
३२. प्रतस्थे सहसा धीमान् श्रीरङ्गं प्रति सादरम् ।
मरुद्वृधाया मध्यस्थं चन्द्रपुष्करिणीतटे ॥
३३. श्रीरङ्गमतुलं श्रेष्ठं श्रिया जुष्टं महाद्भुतम् ।
आससादाञ्जसा श्रीमान् विप्रनारायणोऽनघः ॥
३४. विमानमभ्येत्य चतुःप्रदक्षिणं
चतुर्दिशं तस्य कृतप्रणामः ।
तदन्तरे विश्वनिधिं ददर्श
महार्हनीलाचलसंनिकाशम् ॥

---

## அரங்கனை ஸேவித்தல்

31-37. குற்றமற்ற வேதாந்தியே! ஜ்ஞான வைராக்யங்கள் உண்டாகப் பெற்றவராய், அறிவாளியாய், விவாஹமாகாதவரான விப்ரநாராயணர் அக்காலத்தில் ஸ்ரீரங்கநாதனைக் காணவேண்டுமென்று ஆர்வத்தோடு ஸ்ரீரங்கத்தைக்குறித்து விரைவில் புறப்பட்டார். குற்றமற்றவராய், பக்திச்செல்வம் நிரம்பியவரான அந்த விப்ரநாராயணர் இரு காவேரிகளுக்கு இடையிலிருப்பதாய், சந்த்₃ரபுஷ்கரிணியின் கரையில் இருப்பதாய், செல்வம் நிரம்பியதாய், வெகு ஆஶ்சர்யமாயிருப்பதாய், சிறந்ததாய், ஒப்பற்றதான திருவரங்கம் பெரியகோயிலை உரியகாலத்தில் அடைந்தார். நாலு ப்ரத₃க்ஷிணங்களையுடைய அந்த ஸ்ரீரங்க விமானத்தையடைந்து, அதனுடைய நாலு திசைகளிலும் வணங்கியவராய், பிரமனைப்போலே அந்தணர் குலத் தலைவரான அவர் அந்த விமானத்தினுள் உலகுக்

३५. प्रसन्नवक्त्रं नलिनायतेक्षणं कृपामयं कान्तिनिकेतरूपम् ।
संसेव्य रङ्गेश्वरदिव्यदेहं विरिञ्चिवद्विप्रकुलाग्रगण्यः ॥

३६. स तस्य लावण्यमिदं विलोक्य
जगाम हर्षं सुतरां महात्मा ।
अनूपमात्यद्भुतदिव्यसुन्दरं
प्रादर्शयद्दृष्टि मनोपहारिणम् ॥
स्वरूपमस्मै परमञ्जसादरात्
स्वभक्तियुक्तं स चकार तं द्विजम् ॥

३७. विप्रनारायणो धीमान् अपारकरुणाम्बुधिः ।
तथा रङ्गदयापात्रं स बभूव तदाऽनघ ॥

---

கோர் நிதியாய், விலைமதிப்பற்ற நீலமலைபோன்றவனாய், உகப்புடைய திருமுகமண்டலத்தை உடையவனாய், தாமரைத்தடங்கண்ணனாய், கருணை நிரம்பினவனாய், ஒளிமயமானவனான திருவரங்கனை ஸேவித்தார்; திருவரங்கராஜனின் திருமேனியை ஸேவித்து, அந்த மஹாபுருஷர் அந்தத் திருமேனியின் அழகைக்கண்டு பேரானந்தம்கொண்டார். எம்பெருமானும் ஒப்பற்றதாய், அத்யாஶ்சர்யமானதாய், அப்ராக்ருத அழகுடையதாய், கண்ணையும் நெஞ்சையும் ஈர்ப்பதான, தன் திருமேனியை அன்போடு விரைவாக அவருக்குக் காட்டினான்; தன்னிடம் அவ்வந்தணரை பக்தியுடையவராகவும் செய்தான். எல்லையற்ற கருணைக்குக் கடல்போல் இருக்கும் அறிவாளியான விப்ரநாராயணரும் அப்போது இவ்வண்ணமாக ஸ்ரீரங்கநாதனின் கருணைக்குப் பாத்திரமானார்.

३८. यथाभूद्भगवद्भक्तः पुण्डरीकश्च पुण्यकृत् ।
तथाभूद्भगवद्भक्तः विप्रनारायणो महान् ॥

३९. मालां सकृत्समर्प्यैकां श्रीकृष्णाय स्वसद्मनि ।
मालाकारोऽभवत्तेन कृतार्थो भगवत्प्रियः ॥

४०. अतः प्रियतमेष्वस्य कैङ्कर्येष्वखिलेषु च ।
श्रीपुष्पदामकैङ्कर्यं सुतरां भगवत्प्रियम् ॥

४१. इति सम्यक् समालोक्य विप्रनारायणस्तदा ।
श्रीमद्रङ्गनाथवद्भक्त्या भगवद्भक्तिपारगः ॥

४२. नन्दनोद्यानवद्रम्यं श्रीपुष्पतुलसीवनम् ।
रङ्गप्रतीच्यां कृत्वाशु नित्यं श्रीरङ्गशायिने ॥

## துளவத்தொண்டு செய்தல்

38-*44 — பெரியவரான விப்ரநாராயணர் புண்ய ஶாலியாய், பு$_4$க$_3$வத்$_3$பு$_4$க்தரான புண்ட$_3$ரீகரைப்போலே, எம்பெருமானிடம் அன்பு பூண்டிருந்தார். "(வடமதுரையில்) மாலை கட்டி விற்கும் மாலாகாரர் தன் வீடு தேடிவந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ஒருமுறை ஒரு மாலையை ஸமர்ப்பித்து, பெருப்பேறு பெற்றவராய், எம்பெருமானுக்கு இனிய வருமானர், ஆகையால், மிக இனியவையான கைங்கர்யங்கள் அனைத்திலும் மாலைகட்டி ஸமர்ப்பிக்கும் கைங்கர்யமே எம்பெருமானுக்கு மிக இனியது" என்று நன்கு ஆலோசித்து, பு$_4$க$_3$வத்$_3$பு$_4$க்தியின் எல்லையைக் கண்டவரான விப்ரநாராயணர் அப்போதே பெரியாழ்வாரைப்போலே, தேவேந்திரனின் நந்த$_3$னத்தோட்டம் போல் அழகியதான துளஸீ புஷ்ப நந்தவனத்தைத் திருவரங்கத்தில் மேல் திசையில் விரைவில் அமைத்து, ஸ்ரீரங்க$_3$நாத$_2$னுக்குத் துளவமும், பூக்களும் தொடுக்கப்பெற்ற

४३. श्रीपुष्पतुलसीमालां दिवारात्रं समर्पयत् ।
श्रीवैष्णवगृहेष्वत्र भिक्षाशनरतः शुचिः ॥
४४. जितकामः सुखं तस्थौ वेदान्तिन्प्रथमाश्रमी ।
तदा करम्बनगरे कावेर्याश्चोत्तरे तटे ॥
४५. उत्तमस्वामिनिलये वेश्या काचिद्बभूव ह ।
देवदेवीति विख्याता सा वै देवाङ्गनांशजा ॥
४६. कदाचिच्चोलभूपालदर्शनार्थं सखीजनैः ।
निचुलानगरं प्राप सा वेश्या लोकमोहिनी ॥
४७. चोलेन्द्रं मोहयित्वाशु लास्यगीतादिविभ्रमैः ।
राज्ञो बहुधनं प्राप्य रत्नभूषाम्बराणि च ॥

---

மாலைகளை இரவு பகலாக தினந்தோறும் ஸமர்ப்பித்து வந்தார். வேத₃ாந்தியே! அவர் ப்₃ரஹ்மசர்ய ஆஶ்ரமத்திலிருப்பவராய், காமத்தை வென்றவராய், (முக்கரணங்களிலும்) பரிசுத்தமானவராய், ஸ்ரீரங்க₃த்தில் ஸ்ரீவைஷ்ணவர்களின் திருமாளிகைகளில் பி₄க்ஷையெடுத்து உண்பவராய் இனிது வாழ்ந்து வந்தார்.

## தேவதேவியின் வருகை.

44*-*49 — அக்காலத்தில் வடதிருக்காவேரியின் வடகரையில் உத்தமர் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் திருக்கரம்பனூரில் தேவதேவி என்று பெயர் பெற்ற வேசி ஒருத்தி இருந்தாள். அவள் தேவஸ்த்ரீயின் அம்சமாகப் பிறந்தவள். உலகத்தையே மயக்க வல்ல அவள் ஒரு சமயம் சோழ ராஜாவைக் காண்பதற்காகத் தோழிகளோடு அவனது தலைநகரான உறையூரை அடைந்தாள். நாட்டியம் பாட்டு முதலானவற்றாலே விரைவில் சோழ ராஜாவை மயக்கிவிட்டு, அவனிடமிருந்து பெருந்தனத்தையும், ரத்தினமயமான ஆப₄ரணங்களையும் வஸ்தி

४८. गर्वेण महता युक्ता प्रतस्थे स्वपुरं प्रति।
मार्गखेदापनोदार्थं विप्रनारायणाश्रमम् ॥

४९. आससादाञ्जसा श्रीमद्देवदेवी सखीजनैः।
नन्दनोद्यानसदृशे जितचैत्ररथे वने ॥

५०. सर्वश्रमापहरणे वृक्षमूले च सा स्थिता।
वनं सर्वं विलोक्यैषा देवदेवी तदाऽनघ! ॥

५१. अतिप्रहृष्टा पार्श्वस्थामग्रजां वीक्ष्य हर्षिता।
वेदान्तिन्नलिवेण्याख्यां देवदेवी तदाऽनघ ॥
ख्यापनाभिमुखी वेश्या व्याजहार वचः शुभम् ॥

---

ரங்களையும் பரிசாகப்பெற்று மிகுந்த க₃ர்வத்தோடு கூடிய வளாய், தனது ஊருக்குப் புறப்பட்டாள். அழகு நிறைந்த அந்த தேவதேவி வழி நடந்த களைப்பை ஆற்றிக்கொள் வதற்காக, தோழிகளோடுகூட விப்ரநாராயணரின் தோட் டத்தில் ஆஶ்ரமத்தை விரைவில் அடைந்தாள்.

## தேவதேவி நந்தவனத்தைப் புகழ்ந்து பேசல்

49*-63 — குற்றமற்ற வேத₃ாந்தியே! இந்திரனின் தோட்டத்தை ஒத்ததாய், குபே₃ரனின் தோட்டமான சைத்ரரத₂த்தை வென்றிருப்பதான அத்தோட்டத்தில் எல்லாக் களைப்பையும் ஆற்றவல்ல மரமொன்றின் அடியில் தங்கியவளாய், அந்த தே₃வதே₃வி தோட்டம் முழுவதையும் பார்த்து மிக உகந்தவளாய், அருகிலிருந்த அலிவேணி எனும் தனது தமக்கையைப் பார்த்து ஆனந்தத்தோடு அப்போதே அத்தோட்டத்தை வர்ணிக்கத் தொடங்கிய வளாய், மங்களமான (பின்வரும்) வார்த்தையைச் சொன் ஞள்:— "அக்கா! அழகியதாய், ஆச்சரியமானதாய், பெரி தாய், சைத்ரரத₂த்தைக் காட்டிலும் செழிப்புற்றதான இத் தோட்டத்தைப்பாராய், இதில் உள்ள பெரிய மரங்கள் பழங் களின் ப₄ாரத்தால் வளைந்து தாழ்ந்து, க₃ர்ப்பி₄ணிப்பெண்

५२. पश्याग्रजे! सुन्दरमेतदद्भुतं
वनं महच्चैत्ररथाधिकश्रियम् ।
वृक्षा महान्तः फलभारपीडिताः
नम्राश्च गर्भिण्य इवात्र भान्त्यहो ॥

५३. नारिकेलाम्रपनसकदम्बवनराजयः ।
पुन्नागलिकुचाशोकजम्बीरवनराजयः ॥

५४. राजन्ते सम्यगेवात्र कदलीवनराजयः ।
पिकाश्चात्रैव मधुरं कूजन्ति शुकशारिकाः ॥

५५. निरन्तरं वसन्त्यस्मिन्नारामे सुमनोहरे ।
केतकीमल्लिकाजातिमालत्यादीनि सन्ततम् ॥

५६. कुसुमानि विराजन्ते नक्षत्राणीव चाम्बरे ।
पुष्पासवं पिबन्तश्च कूजन्तस्सादरं महत् ॥

---

களைப்போல் காட்சியளிக்கின்றன. தென்னை, மா, பலா, கடம்பு, புன்னை, எலுமிச்சை. அசோகம், துளசி, வாழை முதலான பல மரங்கள் நிறைந்த தோட்டங்கள் இங்கு நன்கு விளங்காநிற்கின்றன. குயில்கள் இங்கு இனிமையாகக் கூவுகின்றன. கிளிகளும், மைனாக்களும் இவ்வழகிய நந்தவனத்தில் எப்போதும் வாழ்கின்றன. இச்சோலையில் தாழை, மல்லிகை, சாதி, மாலதி முதலான பூக்களும் ஆகாயத்தில் நட்சத்திரங்கள்போலே ஒளிர்கின்றன, வண்டுகள் பூக்களில் தேனைப்பருகிக்கொண்டும், உகப்போடு பெரிதாக ரீங்காரம் செய்துகொண்டும், பூக்களிடையே நடனமாடுவதுபோலே எப்போதும் ஸஞ்சரித்துக்கொண்டுமுள்ளன. அக்கா! குட்டைகளும், கிணறுகளும், குளங்களும் இச்சோலையில் நீர் நிறைந்தவையாய், தாமரை

५७. नृत्यन्तः पुष्पनिकरे भ्रमन्ति भ्रमरास्सदा ।
वापीकूपसरांस्यत्र संपूर्णाम्भांसि सन्ततम् ।

५८. सपद्मानि विराजन्ते पश्य पश्याग्रजे वनम् ॥
वनमध्ये प्रवहति कावेरी निर्मलोदका ॥

५९. सुशीतलस्सुगन्धश्च मन्दवातो मनोहरः ।
सर्वदा वाति सुश्रोणि! सर्वश्रमहरो महान् ॥

६०. हसतीव समाभाति रङ्गेशोद्यानमुत्तमम् ।
इन्द्रोद्यानं चैत्ररथं कुबेरस्य च तद्वनम् ॥

६१. प्रवहत्यस्य कावेरी वनस्योभयपार्श्वयोः ।
आधारं सर्वजन्तूनां वल्लीतरुसुशोभितम् ॥

६२. रङ्गेशरङ्गनायक्योर्विहारस्थानमुत्तमम् ।
क्वेदं वनमिदं रम्यं दुर्गम क्व च नन्दनम् ॥

---

மலரப்பெற்றவையாய் விளங்குகின்றன. இச்சோலையைப் பாராய் பாராய்! சோலையின் நடுவில் தெளிந்த நீரையுடைய காவேரிநதி பெருகுகின்றது. மெல்லிடையாளே! மிகக் குளிர்ந்ததாய், நறுமணம் வீசுவதாய், நெஞ்சைப்பிர்ப்ப தாய், எல்லாக் களைப்பையும் ஆற்றுவதான சிறந்த காற்று இங்குஎப்போதும் மெல்ல வீசுகிறது. திருவரங்கனின் இந்தச் சிறந்த சோலை இந்திரனின் நந்த₃னவனத்தையும், குபே₃ர னுடைய சைத்ரரத₂வனத்தையும் பார்த்து 'அழகில் எனக்கு நீங்கள் நிகரோ?' என்று சிரிப்பதுபோல் விளங்குகிறது. இச்சோலையின் இருபுறங்களிலும் காவேரி பாய்கின்றது. இது எல்லா ஜீவராசிகளுக்கும் வாழுமிடமாய், கொடி களும், மரங்களும் நன்கு விளங்கப் பெற்றதாய், ஸ்ரீரங்க₃ நாத₂னுக்கும், ஸ்ரீரங்க₃நாயகிக்கும் சிறந்த விளையாடு மிடமாயுள்ளது. இந்த அழகான நந்தவனம் எங்கே? செல்லவரிய (இந்திரனின்) நந்த₃னவனம் எங்கே? அக்கா! திருவரங்கராஜன் வேட்டையாடுவதால் உண்

६३. रङ्गेशमृगयायासश्रमापहरणं वनम् ।
अस्माकमध्वगायासहरणे किमुताग्रजे ॥

६४. तद्वर्णयन्ती सा चैवं देवदेवी वनोत्तमम् ।
आराममलक्ष्मीं पश्यन्ती साभिप्राया सखीजनैः ॥

६५. सञ्चरन्ती तत इतस्तत्रारामे महौजसम् ।
अपश्यत्पुरुषं कञ्चिद्वैष्णवं तद्वनाधिपम् ॥

६६. शुभ्राभाम्बरयज्ञसूत्रममलं च्छिद्रोर्ध्वपुण्ड्रोज्ज्वलं
कण्ठोदग्रविराजमानतुलसीपद्माक्षमालाञ्चितम् ।
दीर्घश्मश्रुशिरोजरोमविततिं संधारयन्तं परं
श्रीवृन्दावनमुद्धृतेन पयसा संपूरयन्तं घटैः ॥

---

டாகும் களைப்பையே ஆற்றவல்ல இச்சோலை நம்மைப் போன்ற வழிப்போக்கர்களின் களைப்பை ஆற்றும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?”

## தேவதேவி விப்ரநாராயணரைக்கண்டு வியப்புற்று வணங்குதல்

64-*70 — வேத₃ாந்தியே! அந்த தே₃வதே₃வி அந்தச் சிறந்தசோலையை இவ்வண்ணமாக வர்ணிக்கிறவளாய், கருத்தூன்றிச் சோலையின் அழகைத் தோழிகளோடு பார்க்கின்றவளாய், அச்சோலையில் இங்குமங்கும் செல்லும்போது, அச்சோலையின் உரிமையாளரான வைஷ்ணவர் ஒருவரைக் கண்டாள். வெளுத்த வஸ்திரத்தையும், பூணூலையும் அணிந்தவராய், குற்றமற்றவராய், இடைவெளியுடன் கூடிய திருமண்காப்புக்களினால் விளங்கப் பெற்றவராய், கழுத்தில் விளங்கும் துளஸீ மணி மாலைகளையும், தாமரை மணி மாலைகளையும் உடையவராய், நீண்டு வளர்ந்துள்ள தலை முடியும், மீசையும் உடையவராய், சிறந்தவராய்,

௬௭. रङ्गेशाङ्घ्रिसरोरुहामृतरसास्वादैकसंजीवनं
तत्कैङ्कर्यपरायणं प्रतिदिनं चाज्ञातकामादिकम् ।
स्वप्ने किञ्चिदपि प्रमादवशतोऽप्यज्ञातयोषित्सुखम्
तं मौनव्रतमद्भुतार्यचरितं श्रीविप्रनारायणम् ॥

௬௮. तरुगुल्मलतानां च ह्यालवालं विधाय च ।
आलवालेष्वविरतं पूरयन्तं पयः स्वयम् ॥

௬௯. विप्रनारायणं सम्यक् देवदेवी विलोक्य तम् ।
विस्मयाविष्टहृदया सालिवेण्या समेत्य च ॥

௭௦. विनयेन प्रणम्यार्यं प्राञ्जलिः समुपस्थिता ।
दृष्ट्वाप्यदृष्ट्वा वेदान्तिन्! देवदेवीं दृढव्रतः ॥

---

தூக்கியெடுத்த குட நீராலே துளசிப்பாத்திகளுக்கு நீர் விடுகிறவராய், திருவரங்கனின் திருவடித் தாமரையில் பெருகும் தேனைப் பருகுவதையே த4ாரகமாகக் கொண்டவராய், அவனுக்கு தினந்தோறும் கைங்கர்யம் செய்வதையே பரமப்ராப்யமாகக் கொண்டவராய், காமம், கோபம் முதலானவற்றை அறியாதவராய், கனவிலும் தம்மையறியாமலும் பெண்களோடு கலவியின்பத்தைச் சிறிதும் அநுபவிக்காதவராய், மௌனவ்ரதத்துடன் கூடியவராய், ஆச்சரியமான நல்லொழுக்கத்தை உடையவரான விப்ரநாராயணரைக் கண்டாள். மரங்களுக்கும், புதர்களுக்கும், கொடிகளுக்கும் பாத்தி கட்டி, அப்பாத்திகளில் இடைவிடாமல் தாமே தண்ணீர் விடுபவரான அந்த விப்ரநாராயணரை நன்கு பார்த்து, வியப்புற்ற நெஞ்சினளாய், தமக்கையான அலிவேணி(வண்டார்குழலி)யோடு அப்பெரியவரை அடைந்து, கைகூப்பி நின்று பணிவோடு வணங்கி பக்கத்தில் நின்றாள்.

## விப்ரநாராயணரின் அலட்சியமும், தேவதேவியின் கேள்வியும்

70*-*73 — வேதாந்தியே! உறுதியான ப்3ரஹ்மசர்ய விரதமுடையவராய் தேவதேவியைக்கண்டும் காணாதவர்

७१. तिरस्कृत्य स तां स्वीयकैङ्कर्ये निरतोऽभवत् ।
विप्रनारायणं दृष्ट्वा देवदेवी पराङ्मुखम् ॥
७२. आदरेणाग्रजां वीक्ष्य देवदेवी वचोऽब्रवीत् ।
उन्मत्त एष षण्डो वा न पश्यति पुरःस्थिताम् ॥
७३. मामसादृश्यलावण्यां सर्वलोकैकमोहिनीम् ।
देवदेवीवचः श्रुत्वा सा प्रहस्य तदग्रजा ॥
७४. अलिवेण्यब्रवीदिदं तत्प्रभावममानुषम् ।
न च षण्डो न चोन्मत्तः न चैष प्राकृतो जनः ॥
७५. महाविरक्तो रङ्गेशकैङ्कर्यनिरतस्सदा ।
दाने लक्षधनस्यापि न त्वां पश्यति चक्षुषा ॥
७६. अयं न चोलभूपालः त्वद्विभ्रमविमोहितः ।
लोके समानं पुरुषं न च पश्येयमुत्तमम् ॥

---

போலே அவளைப் புல்லென மதித்து அவர் தம் நந்தவன கைங்கர்யத்திலேயே ஈடுபட்டிருந்தார். தன்னைப் புறக்கணித்திருந்த அந்த விப்ரநாராயணரைக் கண்ட தே₃வதே₃வி ஆர்வத்துடன் தமக்கையைப் பார்த்து, "உலகனைத்தையும் மயக்கும் ஒப்பற்ற அழகையுடைய நான் நேரே நின்றுகொண்டிருக்கையில், இவர் என்னைக் கண்ணெடுத்துக் காண்கிறாரில்லையே- இவர் பைத்தியமா அல்லது அலியா?" என்னும் வார்த்தையைச் சொன்னாள்.

## தமக்கையின் பதில்

73*-76 தே₃வதே₃வியின் இவ்வார்த்தையைக் கேட்ட அவளது தமக்கையான வண்டார்குழலி சிரித்துவிட்டு, மனிதர்களிடம் காணமுடியாத அவரது அற்புதமான பெருமையைப் பின்வருமாறு கூறலுற்றாள்:— "இவர் அலியும் அல்லர்; பித்தருமல்லர்; இவர் ஸாமாந்ய மனிதருமல்லர்; பரமவைராக்₃யமுடையவராய், அரங்கனின் கைங்கர்யத்தில் எப்போதும் ஈடுபட்டவர். லக்ஷம் பொன் கொடுத்தாலும் உன்னைக் கண்ணெடுத்துப்பார்க்கமாட்டார். உன்னைக் கண்டு மயங்கிய சோழராஜாவல்லரிவர்; இவரோடு ஒத்தாரையும், மிக்காரையும் உலகில் நான் காணவில்லை" என்று.

७७. अलिवेण्या वचः श्रुत्वा देवदेवी रुषान्विता ।
लावण्यस्यैव गर्वेण स्वसामर्थ्यमथाब्रवीत् ॥

७८. अजानन्तीव वदसि दृष्ट्वाप्यन्यादृशं मम ।
सामर्थ्यं सन्ततं सुभ्रु! तदसाध्यं न मन्यते ॥

७९. मयोपार्जितवित्तस्य न संख्या विद्यते किल ।
वातपर्णजलाहाराः योगिनश्चोर्ध्वरेतसः ॥

८०. मन्मुखालोकनेनैव किलासन् गलितेन्द्रियाः ।
पीवानयं सुन्दराङ्गः सुवक्षाः पद्मलोचनः ॥

८१. कोमलावयवः श्रीमान् यौवनारम्भविग्रहः ।
एकाकी विजनारामे वर्तते सुमनोहरे ॥

---

## தேவதேவியின் க3ர்வப்பேச்சு

77-82. தமக்கையான வண்டார் குழலியின் வார்த்தையைக் கேட்ட தேவதேவி கோபங்கொண்டவளாய், தனது அழகில் க3ர்வத்தாலே தன் திறமையைப் பின்வருமாறு கூறலுற்றாள்:— "அழகிய புருவமுடைய தமக்கையே! என்னுடைய ஒப்பற்ற திறமையைக் கண்டு வைத்தும் தெரியாதவள்போலே பேசுகிறாய். எப்போதுமே அத்திறமையால் ஸாதி4க்க முடியாதது யாதுமில்லை. என்னால் அத்திறமையால் ஸம்பாதிக்கப்பட்ட பணத்துக்கு அளவில்லையன்றோ. காற்றையும் இலையையும் ஜலத்தையும் உண்டு வாழ்பவர்களாய், புலனடக்கமுடையவர்களான யோகி3களும் என் முகத்தைப் பார்த்தவுடனே வீர்யத்தை இழந்து விடுகின்றனர். இவரோ பருத்தவராய், அழகியவராய், பரந்த மார்புடையவராய், தாமரைக்கண்ணராய், அழகிய அவயவங்களையுடையவராய், பரம ரஸிகராய்,

८२. वशीकरणकार्ये तु तस्य चारामवासिनः ।
कः प्रयासोऽग्रजे! मेऽद्य साधवः सुलभाः किल ॥

८३. तस्यास्तद्वचनं श्रुत्वा महद्यौवनगर्वितम् ।
प्राह साऽसहमानैवं रोषाद्रक्तान्तलोचना ॥

८४. रूपविभ्रमसम्पद्भिः चारुहासावलोकनैः ।
धीमान्वैराग्यनिलयः तवायं मोहितो यदि ॥

८५. वारस्त्रीजनमुख्यैव सा तदा त्वं भविष्यसि ।
अहं दासी भविष्यामि चाषण्मासं तवैव हि ॥

८६. प्रतिज्ञारूपकं वाक्यं तस्याः श्रुत्वा तलोदरी ।
संरक्तनयना रोषात् देवदेवी तदाऽनघ ॥

---

யௌவனத்தின் தொடக்கத்தில் உள்ளவராய். ஜனங்களற்ற அழகிய நந்தவனத்தில் தனியாக வாழ்கிறவர், இவரை வசீகரிப்பதில் இன்று எனக்கு என்ன சிரமமுள்ளது? இவரைப் போன்ற ஸாதுக்களை வசீகரிப்பது மிக எளிதன்றோ'' என்று.

## தமக்கையின் ப்ரதிஜ்ஞை

83-85. தன் யௌவனப் பெருஞ்செருக்கால் விளைந்த அந்த வார்த்தையைக் கேட்ட தமக்கை அதைப் பொருதவளாய், கோபத்தாலே கண்கள் சிவந்தவளாய், ''அறிவாளியும் வைராக்யத்துக்கு ஓர் இருப்பிடமுமான இப்பெரியவர் உன்னுடைய அழகு, மயக்கும் செயல்கள் முதலான உனது பெருமைகளாலும், அழகிய சிரிப்பு பார்வை முதலானவற்றாலும் மயங்கிவிட்டாரானால், அப்போது நம் தாஸிகுலத்துக்கே நீ தலைவியாவாய். நான் உனக்கு ஆறுமாதம் அடிமையாயிருப்பேன்.'' என்று பிரதிஜ்ஞை செய்தாள்.

## தேவதேவியின் பதில் பிரதிஜ்ஞை

86-*89 குற்றமற்ற வேதாந்தியே! அழகியவளாய், மெல்லியலாளாய், உலகிலேயே ஒப்பற்ற அழகுடையவளான

८७. प्रतिज्ञामकरोत्तद्वत् वेदान्तिन्! लोकसुन्दरी ।
अलिवेण्यग्रजे! सम्यक् मद्वाक्यं शृणुतामिदम् ॥

८८. मद्विभ्रमविलासादिमोहितं तमिमं वरम् ।
यद्यहं न करिष्यामि महावैराग्यवारिधिम् ॥

८९. तव दासी भविष्यामि चाषण्मासं तदा ध्रुवम् ।
कृत्वा प्रतिज्ञां सा चैवमग्रजां तां सखीजनैः ॥

९०. प्रस्थापयित्वा स्वगृहं देवदेवी तदाऽनघ ।
विसृज्य भूषणान्याशु सर्वाणि चतुरा तदा ॥

९१. स्नात्वा स्थूलपटं सम्यक् परिधायानतानना ।
धृतोर्ध्वपुण्ड्रा वेदान्तिन्! तदा सात्त्विकवेषतः ॥

---

அந்த தேவதேவி தமக்கையின் ப்ரதிஜ்ஞாரூபமான இந்த வார்த்தையைக் கேட்டு அப்போது கோபத்தாலே சிவந்த கண்களையுடையவளாய், "தமக்கையான வண்டார் குழலியே! என்னுடைய இந்த வார்த்தையை நன்றாகக் கேட்டுக்கொள். மிகச்சிறந்தவராய், சிறந்த வைராக்யத்துக்கு ஒரு கடல்போல் இருப்பவரான இவரை என்னுடைய மயக்கும் செயல்கள் முதலானவற்றாலே நான் மயங்கச் செய்யாவிடில் அப்போது ஆறு மாதம் நான் உனக்கு தாஸியாயிருப்பேன் என்பது உறுதி" என்று அவளைப் போலவே பிரதிஜ்ஞை செய்தாள்.

## தேவதேவி விப்ரநாராயணரை அணுகுதல்

89*-92. குற்றமற்ற வேதாந்தியே! அந்த தேவதேவி இவ்வண்ணமாகப் பிரதிஜ்ஞை செய்தவளாய், தமக்கையைத் தோழிகளோடு வீட்டுக்கு அனுப்பி விட்டு வல்லவளாகையாலே அப்போதே தனது எல்லா ஆபரணங்களையும் சடக்கெனக் கழற்றிவிட்டு. குளித்து முரட்டுச்சேலை ஒன்றை நன்கு உடுத்து,வணங்கிய முகத்தையுடையவளாய்,

९२. समागत्याङ्गमा तस्य सन्निधिं कृतवन्दना।
कृताञ्जलिपुटा तस्थौ सा सतीवासती तदा॥
९३. विप्रनारायणो दृष्ट्वा तामेवमवदत्तदा।
किमर्थमागता का त्वं वद तत्कारणं मम॥
९४. विप्रनारायणस्याथ श्रुत्वा वाराङ्गना वचः।
भक्तियुक्तेव निपुणा तं पुनः प्रणिपत्य च॥
९५. सम्यग्विज्ञापयामास स्ववृत्तान्तं नतानना।
अङ्गीकुरुष्व भो स्वामिन्! मम विज्ञापनं गुरो॥
९६. अहं तु पापबाहुल्यात् वारस्त्रीवंशसंभवा।
दशस्त्रनिसमश्चक्री दशचक्रिसमो ध्वजी॥

---

ஊர்த்₄வபுண்ட்₃ரமணிந்து ஸாத்விக வேஷத்துடன் விப்ர நாராயணருக்கு அருகில் வந்து நன்கு வணங்கி, பொல்லாதவளாயிருந்தபோதிலும் நல்லவள்போலே கைகூப்பி நின்ருள்.

## விப்ரநாராயணரின் கேள்வி

93. விப்ரநாராயணர் அவளைக்கண்டு "நீயார்? எதற்காக வந்தாய்? வந்த காரணத்தை எனக்குச் சொல்" என்று கேட்டார்.

## தேவதேவியின் கபடப் பேச்சு

94–*110 தாஸியாய் மிக வல்லவளான அந்த தேவதேவி விப்ரநாராயணரின் அந்த வார்த்தையைக் கேட்டு, கவிழ்ந்த முகத்தை உடையவளாய், ப₄க்தியுடையவள் போலே அவரை மறுபடியும் வணங்கி, தன் வரலாற்றை அவரிடம் பின்வருமாறு நன்கு விண்ணப்பித்தாள் :— "ஆசார்ய ஸ்வாமியே! எனது விண்ணப்பத்தைச் செவியேற்றருளவேணும். பாபத்தின் மிகுதியாலே நான் தாஸிகுலத்தில் பிறந்துவிட்டேன். 'சிற்றரசன் ஒருவன்

९७ दशध्वजिसमा वेश्या चेत्येते शास्त्रनिर्णयाः ।
वेश्याजन्म ततो विद्वन्! बहुपापसमुद्भवम् ॥

९८. केनचित्पुण्यलेशेन काचिन्मतिरभून्मम ।
जाताहं पापबाहुल्यादस्मिन्वेश्याकुलेऽधुना ॥

९९ भूयोऽहमधुना ह्यस्मिन् कृत्वा पापं सुदारुणम् ।
कान् लोकांश्च गमिष्यामीत्येवं चिन्ता महत्यभूत् ॥

१००. कृत्वा श्रीवैष्णवानां च विष्णोः कैङ्कर्यमन्वहम् ।
तन्मार्गवर्तनं सम्यगितीयं मे मतिर्गुरो ॥

१०१. अस्मन्मातृमतिस्त्वार्य घोरा नैतादृशी पग ।
भार्या भूत्वा तु सर्वेषां मोहयित्वा स्वविभ्रमैः ॥

---

பத்துக் கசாப்புக் கடைக்காரனின் பாபத்தையுடையவன். பத்து சிற்றரசர்களுடைய பாபத்தையுடையவன் கொடியை யுடைய பேரரசன். பத்துப் பேரரசர்களுடைய பாபத்தை யுடையவள் வேசி' என்பவை சாஸ்த்ர நிர்ணயங்கள். பேரறிவாளரே! இக்காரணத்தால் வேசியாய்ப் பிறப்பது மிகுந்த பாபத்தாலுண்டாவது. ஏதோ ஒரு புண்யலேசத் தாலே எனக்கு ஒரு நல்ல அறிவு உண்டாயிற்று. 'பாப மிகுதியாலே இப்போது நான் வேசி குலத்தில் பிறந்தி ருக்கிறேன்; இந்த இப்பிறப்பிலும் மிகக்கொடிய வேசித் தொழிலைச் செய்து எத்தகைய நரகங்களுக்குப் போவேனே?' என்று பெருங்கவலை உண்டாயிற்று. அதனல் 'ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் விஷ்ணுவுக்கும் தினந் தோறும் கைங்கர்யங்கள் செய்து அவர்கள் வழி நடப்பது நல்லது' என்னும் நினைவு எனக்கு உண்டாயிற்று. பெரியவரான ஆசார்யரே! என் தாயின் நினைவோ இப்படியில்லாமல் மிகக் கொடியதாயிருந்தது. 'உன்னை நாடி வரும் எல்லாப் புருஷர்களுக்கும் நீ மனைவியாகி உன் மயக்கும் செயல்களாலும், மருந்துகளாலும்,

१०२. सर्वान् जनांश्च मैषज्यैः धनसंपादनं कुरु ।
इति मामनिशं माता स्वामिन्संपीडयत्यलम् ॥
१०३. तन्मातृवचनं घोरं निर्भत्स्यं नरकावहम् ।
मुक्तिकामा मुमुक्षोश्च भवतः पादपङ्कजम् ॥
१०४. संसेव्य त्वदधीनाहं वर्तिष्यामि न संशयः ।
अतिलुब्धामनादृत्य मातरं पापचारिणीम् ॥
१०५. त्वां गतास्म्यद्य शरणं अलुब्धं धर्मचारिणम् ।
युष्मद्दास्यां घृणासिन्धो निक्षिप्य करुणां मयि ॥
१०६. अनाथामातुरां दीनां रक्ष मां शरणंगताम् ।
रङ्गेशतुलसीदामप्रदानसमये तथा ॥

---

அவர்களை மயங்கச் செய்து பணம் சம்பாதிப்பாயாக' என்று என் தாய் தினந்தோறும் என்னைத் துன்புறுத்தினள், பயமுறுத்துவதாய், கொடியதாய், நரகத்தை அளிக்கக் கூடியதாயிருந்தது அந்தத் தாயின் வார்த்தை. முக்தியை விரும்புகிறவளான நான் முமுக்ஷுவான தேவரீருடைய திருவடித்தாமரையில் பணி புரிந்து உமக்கு வசப்பட்டு வாழ்வேன்; இதில் ஐயமில்லை. பாபச்செயல் புரிபவளாய், பேராசை கொண்டவளான என் தாயை உதறி, ஆசையற்றவராய் தர்மவழிநடப்பவரான உம்மை இன்று சரணமடைந்தேன். கருணைக்கடலே! உமது வேலைக்காரியான என்னிடம் கருணை வைத்து, புகலற்றவளாய், துன்புறுகிறவளாய், வருந்தத்தக்க நிலையிலிருப்பவளாய், சரணமடைந்தவளான என்னை ரக்ஷிப்பீர். திருவரங்கனுக்குத் துளஸிமாலை ஸமர்ப்பிக்க நீர் எழுந்தருளும்போதும், பிக்ஷையெடுக்கச் செல்லும்போதும் நான் இந்த நந்தவனத்தைப் பாதுகாப்பவளாய் உமது ஆணைப்படி நடப்பேன். இதில் ஐயமில்லை. நீரையோ, காய்ந்த இலையையோ, பழத்தையோ, காயையோ

१०७. भिक्षाचरणवेलायामप्यहं वनपालिका ।
भविष्यामि न सन्देहस्त्वदाज्ञापरिपालिनी ॥

१०८. तोयं वा शीर्णपर्णं वा फलं वा शाकमेव वा ।
शरीरधारणं कृत्वा वर्तिष्ये तव शासने ॥

१०९. दास्यास्त्वद्भुक्तशिष्टान्नं दत्तं हि कृपया यदि ।
सदानन्दा भविष्यामि कृतार्थाहं न संशयः ॥

११०. अङ्गीकुरुष्व मां दीनां साधवो दीनवत्सलाः ।
अज्ञानानः स साधुत्वात्कौटिल्यं वारयोषितः ॥

१११. तथ्यं मत्वा तदा तस्या वेदान्तिन्! दीनवत्सलः ।
सम्यङ्नियोजयामास स तामारामरक्षणे ॥

---

உண்டு உயிர் வாழ்ந்து, தேவரீருடைய நியமனத்தின்படி நடப்பேன். வேலைக்காரியான எனக்கு நீர் உண்டு மிகுந்த அன்னத்தைக் கருணையோடு கொடுப்பீராகில், நான் எப்போதும் ஆனந்தமுடையவளாய், பேறு பெற்ற வளாக ஆவேன். இதில் ஐயமில்லை. கதியற்ற என்னை வேலைக்காரியாக ஏற்றுக் கொள்வீர். நல்லோர்கள் கதியற்றவர்களிடம் இரக்கமுடையவர்களன்றோ'' என்று.

## தேவதேவியை ஏற்றுக்கொள்ளல்

110*-114 குற்றமற்ற வேதாந்தியே! அவர் நல்ல வராயிருந்தபடியாலும், எளியவர்களுக்கு அருளுடையவரா யிருந்தபடியாலும் அந்த வேசியின் கபடத்தை அறியாமல் அவள் வார்த்தையை உண்மை என்று எண்ணி, நந்தவனத்தைப் பாதுகாக்கும்படி அவளை அப்போதே நியமித்தார். அவருடைய அவ்வார்த்தையிலே உகந்த வளாய், புன்முறுவலையுடையவளான தேவதேவி அப்போதே தன் பிரதிஜ்ஞை நிறைவேறியதாக முடிவு கட்டினாள். தினந்தோறும் காவேரியில் மூன்று வேளையும்

११२. तेन वाक्येन सन्तुष्टा देवदेवी शुचिस्मिता ।
तीर्णप्रतिज्ञमात्मानममन्यत तदाऽनघ ॥

११३. नित्यं त्रिषवणस्नानं कावेर्यां कुर्वती ततः ।
कृतोर्ध्वपुण्ड्रा नियता तुलसीबद्धमालिका ॥

११४. विप्रनारायणाङ्घ्रयब्जं त्रिकालकृतवन्दना ।
तेन निर्णीतकैङ्कर्यनिरताऽभूत् सदाऽनघ ॥

११५. वेदान्तिन्! वैष्णवश्रेष्ठो विप्रनारायणो महान् ।
कृत्वा माधुकरं सम्यक् तत्समर्प्य च विष्णवे ॥

११६. स्वयं भुक्त्वावशिष्टान्नं देवदेव्यै तदा ददौ ।
सा देवदेवी सन्तुष्टा प्रतिगृह्य तदोदनम् ॥

११७. भुक्त्वा सम्यक् महाभक्त्या विसृष्टा सर्वपातकैः ।
अशोभत महाशुभ्रा शरद्राकानिशा यथा ॥

---

ஸ்நானம் செய்பவளாய், அதற்குப்பின் ஊர்த்4வபுண்ட்3ரம் த4ரிப்பவளாய், நியமங்களுடையவளாய், துளஸி மாலையைத் தொடுப்பவளாய், விப்ரநாராயணருடைய திருவடித் தாமரைகளை மூன்று வேளையும் வணங்குபவளாய், அவர் நியமிக்கும் கைங்கர்யங்களில் எப்போதும் ஈடுபட்டவளாயிருந்தாள்.

## போனகம் செய்த சேடத்தால் புனிதமுறல்

115-117 வேதா3ந்தியே! வைஷ்ணவர்தலைவராய், பெரியவரான விப்ரநாராயணர் மாது4கரத்தை (குறிப்பிட்ட சில வீடுகளில் பி4க்ஷையெடுப்பதை) முறைப்படி செய்து அவ்வுணவைத் தம் திருவாராத4னப் பெருமாளுக்கு அமுது செய்வித்துத் தாம் அமுது செய்து, மிகுந்ததைத் தாம் அமுது செய்தபின் தேவதேவிக்கு அளித்து வந்தார். தேவதேவியும் மிக உகந்தவளாய் அவ்வுணவை ஏற்றுக் கொண்டு, மிகுந்த ப4க்தியுடன் உண்டு எல்லாப் பாபங்களும் நீங்கப் பெற்றவளாய், சரத்காலத்தில் பூர்ண சந்திர ராத்ரி போலே மிகப்பரிசுத்தமானவளாய் விளங்கினாள்.

११८. देवदेवी तत.सम्यक् पुष्पारामे निरन्तरम् ।
सर्वेषां पुष्पतुलसीवृक्षाणां प्रयताऽनघा ॥

११९. तदा खनित्रचक्रेण परेषामपि सादरम् ।
विधाय खननं तेषामालवालांश्च सादरम् ॥

१२०. घटाभ्यां जलमादाय कृत्वा चात्र प्रपूरणम् ।
तानेवं वर्धयामास रञ्जयन्ती मुनेर्मनः ॥
सहमानानिशं सम्यक् वातवर्षहिमातपान् ॥

१२१. सर्वांश्च भोगान् सुविसृज्य शीघ्रं
तामग्रजोक्तां गिरमेव चित्ते ।
स्मृत्वा मुहुः शल्यमिव प्रतिज्ञां
अप्राप्तकामा परिशोषमाप ॥

## தேவதேவியின் தவம்

118-123 அதற்குப்பின் அந்த தேவதேவி ஸ்நாநாதி₃ ஶௌசத்₃தி₄களையுடையவளாய், குற்றமற்றவளாய், அந்த நந்த₃வனத்தில் உள்ள எல்லாப் பூச்செடிகளுக்கும், துளசிச் செடிகளுக்கும், மற்ற மரங்களுக்கும் மண்வெட்டியைக் கொண்டு அன்போடு பாத்திகளை வெட்டி, குடங்களிலே ஜலத்தையெடுத்து அந்தப்பாத்திகளில் அன்போடு ஜலத்தை நிறைத்து, விப்ரநாராயண முனிவரின் மனத்தை உகப்பிப்பவளாய், எப்போதும் காற்று, மழை பனி, வெய்யில் ஆகியவற்றை நன்கு பொறுத்துக்கொண்டிருப்ப வளாய், அந்த மரம் செடி கொடிகளை எப்போதும் நன்கு வளர்த்து வந்தாள். விரைவிலேயே எல்லா பே₄ாக₃ங்களையும் நன்கு கைவிட்டவளாய், நெஞ்சில் அம்பு போல் தைத்துக் கொண்டிருந்த தமக்கையின் ப்ரதிஜ்ஞா வார்த்தையையே நினைத்திருப்பவளாய், விருப்பம் நிறைவேறப்பெருதவளாய்

१२२. रङ्गेशकैङ्कर्यपरम्पराभिः कालः सुखेनैव दिवापयाति ।
रात्रिर्महाकालनिशैव चासीत् तस्या वने तेन पृथक् स्थितायाः ॥

१२३. सा देवदेवी भगवत्परैव रङ्गेशकैङ्कर्यरतैव तस्थौ ।
स्वकार्यसंसिद्धिमभीप्सयन्ती श्रीविप्रनारायणदास्यचित्ता ॥

इति श्रीप्रपन्नामृते श्रीपराशरभट्टार्य-श्रीवेदान्तिसंवादे
भक्ताङ्घ्रिरेण्ववतारचरितकथनं नाम चतुर्णवतितमोऽध्यायः ॥

पञ्चनवतितमोऽध्यायः ॥

१. ततोऽस्मद्यतिराहेदं स भट्टार्यं कृताञ्जलिः ।
संत्यक्तसर्वभोगैका देवदेवी दृढव्रता ॥

---

மிகவும் வாடிப்போனாள். அவளது பொழுது பகல்வேளையில் அரங்கனுக்குக் கைங்கர்யங்கள் செய்வதிலேயே இனிதாகக் கழிகிறது ஆனால் அம்முனிவரை விட்டுத் தனியே துயிலும் அவளது இரவுப்பொழுது அந்த நந்தவனத்தில் பிரளய காலராத்ரிபோலே நெடுகிச் செல்கின்றது. ஸ்ரீவிப்ர நாராயணருக்கு அடிமை செய்வதிலேயே ஈடுபட்டவளான அந்த தேவதேவி தன் எண்ணம் நிறைவேறுவதை எதிர்பார்த்துக் கொண்டு, எம்பெருமானை அரங்கனிடம் ஈடுபட்டவளாய் அவனது கைங்கர்யத்தையே செய்பவளாய் இருந்தாள்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீபராஸரபட்டர் நஞ்சீயர் ஸம்வாதத்தில் தொண்டரடிப்பொடியாழ்வாரின் அவதாரம் முதலானவற்றைக் கூறும் தொண்ணூற்று நாலாம் அத்தியாயம் நிறைவுற்றது.

# தொண்ணூற்றைந்தாம் அத்தியாயம்

## விப்ரநாராயண தேவதேவீ விவாஹம்

## நஞ்சீயரின் கேள்வி

1-3. அதற்குப்பின் நஞ்சீயர் பராஸரபட்டரைக் குறித்துக் கைகூப்பியவராய் ''தேவதேவியானவள்

२. कैङ्कर्यं कुर्वती चैवं कियत्कालं समास्थिता ।
कार्यसिद्धिः कथमभूद्वेश्यायाः पापसन्ततेः ॥
३. वश्यः कथमभूत्तस्याः स वैराग्यनिधिर्महान् ।
एतत्सर्वमशेषेण वद कौतूहलं मम ॥
४. असद्यतेर्वचः श्रुत्वा भट्टार्यस्तमथाब्रवीत् ।
हन्त ते कथयिष्यामि शृणु त्वमवधानतः ॥
५. भक्ताङ्घ्रिरजसस्तस्य कथां तामद्भुतां शुभाम् ।
सम्यगारामकैङ्कर्यं कुर्वती तत्पथानुगा ॥
६. एवं षण्मासपर्यन्तं देवदेवी समास्थिता ।
प्रतिज्ञा सफला नाभूत् वेदान्तिन् वारयोषितः ॥

---

எல்லா போ₄க₃ங்களையும் கைவிட்டவளாய், தனிமையில் வாடுபவளாய், உறுதியான குறிக்கோளையுடையவளாய், இவ்வண்ணமாக அரங்கனுடைய நந்தவன கைங்கர்யத்தைச் செய்து கொண்டு எவ்வளவு காலம் வாழ்ந்தாள்? பாப குலத்தில் பிறந்த வேசியான அவளுடைய காரியம் எப்படி நிறைவேறிற்று? வைராக்₃யத்துக்கு ஓர் இருப்பிடமாயிருந்த பெரியவரான விப்ரநாராயணர் எப்படி அவளுக்கு வசப் பட்டார்? இவை அனைத்தையும் எனக்குச் சொல்லுவீராக; இதைக் கேட்க எனக்கு மிகுந்த ஆவல் உள்ளது" என்று கேட்டார்.

## தேவதேவீ ஶரணாக₃தி

4-*19. நஞ்சீயரின் வார்த்தையைக் கேட்டு பட்டர் பின்வருமாறு கூறலுற்றார் — குற்றமற்ற நஞ்சீயரே! தொண்டரடிப்பொடியாழ்வாரின் ஆஶ்சர்யமாய் அழகியதான அந்தச் சரித்திரத்தை உமக்குக் கூறுகிறேன். கவனமாகக் கேட்பீராக. தேவதேவியானவள் இவ்வண்ணமாக நந்தவன கைங்கர்யத்தை நன்கு செய்து

௭. सा चिन्तार्णवनिर्मग्ना देवदेवी परं तदा ।
सा चिन्तयित्वा बहुधा रङ्गेशं शरणं गता ॥
௮. रङ्गेश करुणासिन्धो देवदेव प्रसीद मे ।
वृथाप्रतिज्ञा गर्वेण नीचया च मया कृता ॥
௯. वैराग्यनिधिरक्षोभ्यो मादृशामपि योषिताम् ।
एष श्रीमान् जितारातिः विप्रनारायणो महान् ॥
௧௦. मयानुवर्तितः सम्यगाषण्मासं निरन्तरम् ।
अपाङ्गवीक्षणेनापि मां न पश्यति कर्हिचित् ॥
௧௧. महागाढान्धकारेऽपि निशीथसमये वने ।
एकाकिनीमनाथां बहिःशयां शरणं गताम् ॥

---

கொண்டு, விப்ரநாராயணரின் அடிச்சுவட்டைப் பின் பற்றியவளாய் ஆறு மாதம் வாழ்ந்து வந்தாள். தா₃ஸியான அவளுடைய ப்ரதிஜ்ஞை நிறைவேறவில்லை. அப்போது அந்த தேவதேவியானவள் கவலைக்கடலில் மூழ்கியவளாய், பலவிதமாகச் சிந்தித்து ஸ்ரீரங்க₃நாத₂னை ஶரணமடைந்தாள். "ரங்க₃நாத₂னே! கருணைக்கடலே! தேவதேவனே! எனக்கு அருள்புரிவாய்; மிகத்தாழ்ந்தவளான நான் கர்வத்தினால் வீணான ப்ரதிஜ்ஞையைச் செய்துவிட்டேன். பெரியவரான இந்த விப்ரநாராயணர் வைராக்₃யத்துக்கோர் இருப்பிடமாய், என்னைப் போன்ற பெண்களாலும் கலக்க முடியாதவராய், உன்னிடம் ப₄க்தியாகிற செல்வத்தை யுடையவராய், புலன்களாகிற உட்பகைகளை வென்ற வராய், என்னால் ஆறு மாதம் இடைவிடாமல் கைங்கர்யம் செய்யப்பெற்ற போதிலும் என்னை ஒருமுறை கடைக்கண் களாலும் காண்கிறாரில்லை. காரிருள் சூழ்ந்திருக்கும் இரவுப் போதிலும், நந்தவனத்தில் வேறு புகலற்றவளாய் அவரையே புகலாகக் கொண்டவளாய் ஆஶ்ரமத்தின் வெளியே

१२. मां त्यक्त्वा निर्दयो धीरस्सुखं स्वपिति वै किल ।
किं भुक्तं कुत्र शेषे त्वमित्येवं मां कदाचन ॥
१३. स्थित्वाप्यसम्मुखे किञ्चिन्न पृच्छति बतैष हि ।
आरामे किं कृतं बाले किं कैङ्कर्यं करिष्यसि ॥
१४. सांप्रतं श्वः परश्वो वा किं कैङ्कर्यं करिष्यसि ।
इत्येव रङ्गिकैङ्कर्यकरणेनापि मां प्रति ॥
१५. किञ्चिद्वचो महानेष न पृच्छति कदाचन ।
आस्थिता यावती तस्य वनवृक्षेषु या दया ॥
१६. मय्येकशरणायां तु तावत्यपि न विद्यते ।
कदा तीर्णप्रतिज्ञाहं भविष्यामि न वेद्म्यतः ॥

---

படுத்திருக்கும் என்னை விட்டுவிட்டு, கருணையற்றவராய், விகாரமில்லாதவராய், இனிதாகத் தூங்குகிறாரே. என் முகத்தைக்கூட நேராகப் பார்க்காமல் 'நீ என்ன சாப்பிட்டாய்? எங்கு படுத்திருக்கிறாய்?' என்று கூட என்னை ஒருபோதும் ஏதாவது கேட்கிறாரல்லரே. பெரியவரான இவர் 'இளையவளே! இன்று நீ நந்தவனத்தில் என்ன கைங்கர்யம் செய்தாய்? இப்போது என்ன கைங்கர்யம் செய்யப் போகிறாய்? நாளை அல்லது அதற்கு மறுநாள் என்ன கைங்கர்யம் செய்யப் போகிறாய்?' என்று அரங்கனின் கைங்கர்யத்தின் பொருட்டுங்கூட என்னிடம் ஒருபோதும் ஒரு கேள்வியும் கேட்கின்றிலரே! அந்த நந்தவனத்தில் மரங்களிடம் அவருக்கு எத்தனை கருணையுள்ளதோ அத்தனை கருணை கூட அவரையன்றி வேறு புகலறியாத என்னிடம் இல்லையே! இந்நிலையில் நான் எப்போது பிரதிஜ்ஞையை நிறைவேற்றுவேன் என்று எனக்குப் புரியவில்லை. திருவரங்கனே! கருணைக்கடலே! புருஷோத்தமனே! புகலற்ற என்னைக் கடாக்ஷித்து என்னுடைய

१७. रङ्गेश करुणासिन्धो मामनाथां विलोकय।
मया कृतापराधांस्तान् क्षमस्व पुरुषोत्तम ॥
१८. तीर्णप्रतिज्ञां रङ्गेश मामङ्गीकुरु सर्वदा।
अनन्यशरणां चैव देवदेवी तदाऽनघ ॥
१९. भक्ताभीष्टप्रदं देवं रङ्गेशं शरणं गता।
तदा रङ्गेश्वरः श्रीमान् भक्तानुग्रहकारकः ॥
२०. प्रतिज्ञां सफलां तस्याः सत्यं कर्तुममन्यत।
प्रावृट्कालस्ततः श्रीमान् सर्वसस्यसमृद्धिदः ॥
२१. देवदेवीमनोभीष्टपूरकः समवर्तत।
आसारवर्षः सुमहान् कदाचिदभवन्निशि ॥

---

குற்றங்களைப் பொறுத்தருள்வாயாக. அரங்கனே! பிரதிஜ்ஞையை நிறைவேற்றியவளாகச் செய்து எப்போதும் என்னை ஏற்றுக் கொள்வீராக'' என்று இவ்வண்ணமாக வேறு புகலற்றவளாய் தேவதேவி பக்தர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் திருவரங்கனை அப்போது சரணமடைந்தாள்.

## அரங்கன் அருள் புரிதல்

19*-*24 பக்தர்களுக்கு அருள்புரிபவனும், பெரிய பிராட்டியாருடன் கூடியவனுன ஸ்ரீரங்க₃நாத₂ன் அவளது ப்ரதிஜ்ஞையை உண்மையானதாகவும், பயனுடையதாகவும் ஆக்குவதற்குத் திருவுள்ளம் கொண்டான். எல்லாப் பயிர்களையும் வளர வைப்பதாய், தேவதேவியின் மனக் கருத்தை நிறைவேற்றுவதான சிறப்புடைய மழைகாலம் அப்போது உண்டாயிற்று. ஒருநாள் இரவு பெரிதான த₄ாராவர்ஷம் (கனமழை) பெரிய மின்னல்களோடு கூடியதாய், பேரிடிகள் கொண்டதாய், பயங்கரமானதாகப் பொழிந்தது, அறிவாளியான விப்ரநாராயணர் அப்போது

२२. महाविद्युद्गणो भीमो महाशनिसमन्वितः ।
पर्णशालास्थितो धीमान् विप्रनारायणस्तदा ॥

२३. वर्षेण हन्यमाना सा देवदेवी बहिःस्थिता ।
रङ्गेशानुग्रहादेव विप्रनारायणस्य वै ॥

२४. कारुण्यं तस्य संजातं देवदेव्यां तदाऽनघ ।
वर्षेण पीडयमानां तां देवदेवीं विलोक्य सः ॥

२५. कृपया प्राह धर्मात्मा विप्रनारायणो महान् ।
वातवर्षो महानस्ति बहिः स्थातुं न शक्यते ॥

२६ अत्रागच्छाशु शालायां देवदेवि! क्वचित्स्थले ।
अङ्गीकृत्याशु तद्वाक्यं प्रहृष्टेनान्तरात्मना ॥

२७. धन्यास्मीति वदन्त्याशु पर्णशालां विवेश सा ।
प्रविश्य पर्णशालायां तस्य पादान्तिके स्थिता ॥

---

தம் பர்ணசாலையிலிருந்தார், மழையினால் பீடிக்கப்பட்ட அந்த தேவதேவியோ வெளியிலிருந்தாள், குற்றமற்றவரே! அப்போது திருவரங்கனின் அருளாலே விப்ரநாராயண ருக்கு தேவதேவியிடம் கருணை உண்டாயிற்று.

## தேவதேவீ ஸமாகமம்

24*-31. குற்றமற்ற வேத₃ாந்தியே! தர்மாத்மாவாய் பெரியவரான விப்ரநாராயணர் மழையினால் பீடிக்கப்படும் அந்த தேவதேவியைக் கண்டு கருணையுடன் ''தேவதேவி! பெரிய புயல் மழை வீசுகிறது. உன்னால் வெளியில் நிற்க முடியாது; விரைவில் பர்ணசாலைக்குள் வந்து ஓரிடத்தில் இருப்பாய்'' என்று கூறினார். மிக உகந்த நெஞ்சை யுடையவளான அவள் அவருடைய வார்த்தையை உடனே ஏற்றுக்கொண்டு 'நான் ப₄ாக்₃யமுடையவளானேன்' என்று கூறியவளாய், விரைவில் பர்ணசாலையுள் நுழைந்தாள்.

२८. विचित्ररूपलावण्या कोकिलस्वरभाषिणी ।
रञ्जयन्ती मनस्सम्यक् मुनेर्मधुरभाषणैः ॥

२९. स्ववाक्यश्रवणे सक्तमकुर्वत तदाऽनघ ।
पादसंवाहने यत्नं नैपुण्यात् शनकैर्व्यधात् ॥

३०. विप्रनारायणस्याथ देवदेवी महामतेः ।
देवदेव्या कृतं सम्यक् पादसंवाहनं तदा ॥

३१. अङ्गीचकार वेदान्तिन्! विप्रनारायणोऽपि सः ।
अन्योन्यप्रीतिसंयुक्तौ तावुभौ मिलितौ तदा ॥

३२. अङ्गारसदृशी नारी घृतकुम्भसमः पुमान् ।
तस्मान्नारीषु संसर्गं दूरतः परिवर्जयेत् ॥

---

பர்ணசாலையில் நுழைந்தவுடன் அவருடைய திருவடிகளின் அருகிலே இருப்பவளாய், ஆஶ்சர்யமான உடலழகையும் அங்க அழகையும் உடையவளாய், குயில் போலே பேசுபவளாய், அந்த முனிவருடைய மனத்தை அழகிய பேச்சுக்களாலே நன்கு உகப்பிப்பவளாய், தன் வார்த்தைகளைக்கேட்பதில் ஈடுபட்டவராக அவரை அப்போதே செய்தாள். பேரறிவாளரான விப்ரநாராயணருடைய திருவடிகளைப் பிடித்து விடுவதில் அந்த தேவதேவி சிறிது சிறிதாக முயற்சி செய்தாள்; விப்ரநாராயணரும் திருவடிகளை அவள் நன்கு பிடித்து விடுவதை அப்போது ஏற்றுக் கொண்டார். ஒருவரோடொருவர் காதல் கொண்ட அவ்விருவரும் அப்போதே ஒன்று சேர்ந்தனர்.

## ஸ்த்ரீஸம்ஸர்க்கத்தின் கொடுமை

32-35. "பெண்ணானவள் நெருப்பைப் போன்றவள்; (நெருப்பின் அருகில் உருகும்) நெய்க்குடம் போன்றவன் ஆண்பிள்ளை. ஆகையால் பெண்ணோடு சேர்வதை அடியோடு விலக்கவேண்டும்."

३३. यथैव वह्निसान्निध्यादाज्यं स्रवति निश्चयम् ।
तथा युवतिसान्निध्यात्पुंसां चेतश्चलत्यहो ॥
३४. सर्वथा परिहर्तव्यः योषित्सङ्गस्सुदुर्मदः ।
योगिनामपि सर्वेषां सत्यं चैवोर्ध्वरेतसाम् ॥
३५. विप्रनारायणस्तत्र देवदेव्या सहादरात् ।
रमयामास वेदान्तिन् श्रीकृष्णो राधया यथा ॥
३६. तस्य तद्वचनं श्रुत्वा महाश्चर्यसमन्वितः ।
तमवोचत्स भट्टार्यं वेदान्ती गुरुपुङ्गवम् ॥
३७. दुश्शीलया विरक्तस्य महावैराग्यवारिधेः ।
सुज्ञानिनस्तया सार्धं कथमासीत्समागमः ॥

---

''நெருப்பு அருகிலிருக்கும்போது நெய் உருகுவது உறுதி, அதுபோலவே யௌவனமுடைய பெண் அருகிலிருக்கும் போது ஆண்மகனின் மனமும் உருகிவிடுமன்றோ'' ''மிகுந்த மதத்தை விளைக்கக்கூடிய பெண்ணின் தொடர்பு அடியோடு விலக்கத்தக்கது; இந்த்₃ரியங்களைவென்ற எல்லா யோகி₃களுக்குங்கூட இது உண்மையாகும்'' வேதா₃ந்தியே! (இந்த ப்ரமாணங்களின்படி) விப்ரநாராயணர், கிருஷ்ணன் ராதையோடுகூட இன்புற்றதுபோல் தே₃வதே₃வியோடு ஆர்வத்துடன் இன்புற்றார்.

## நஞ்சீயரின் கேள்வி

36-*38, பட்டருடைய அந்த ஆஶ்சர்யமான வார்த்தைகளைக் கேட்டு வேதா₃ந்தி நஞ்சீயர் ஆசார்யஶ்ரேஷ்ட₂ரான பட்டரைப் பார்த்து ''எல்லா விஷயங்களினின்றும் நீங்கியவராய், (பெண்ணை ஏறெடுத்தும் பார்க்காத)பெரிய வைராக்₃யத்துக்குக் கடல்போலிருந்தவராய், பேரறிவாளரான

३८. तद्विचित्रमिवाभाति वद विस्तरतो मम ।
प्रतिगृह्य स तद्वाक्यं भट्टार्यस्तमथाब्रवीत् ॥

३९. अजेया वैष्णवी माया योषिद्रूपा न संशयः ।
न शक्नुवन्ति तां जेतुं ब्रह्मेशानादयोपि हि ॥

४०. पादाब्जस्पर्शमात्रेण स्ववशीकृत्य तं तदा ।
साभिप्रायमनोहारिमन्दहासावलोकनैः ॥

४१. तन्मनश्चालयन्ती सा वायुर्दीपशिखां यथा ।
कोकिलस्वरयुक्तेन माधुर्यवचसा तदा ॥

४२. अवोचदसितापाङ्गी पश्यन्ती तं मुहुर्मुहुः ।
दास्यै तव हितं वाक्यं ब्रूहि मे करुणाकर ॥

---

அந்த விப்ரநாராயணருக்குத் தீயொழுக்கமுள்ள அவளோடு எப்படிச் சேர்த்தி உண்டாயிற்று? இது எனக்கு விசித்திரமாகத் தோன்றுகிறது. இதை எனக்கு விரிவாகச் சொல்லுவீராக'' என்று கேட்டார்.

## தேவதேவியின் மயக்குகள்

38*—*44. நஞ்சீயருடைய அந்த வாக்யத்தைக் கேட்டு பட்டர் கூறலுற்றார் — பெண்ணுருவிலிருக்கும் விஷ்ணுமாயை எவராலும் வெல்ல அரியது என்பதில் ஐயமில்லை. பிரமன், உருத்திரன் இந்திரன் முதலான தேவர் தலைவர்களாலும் அதை வெல்லமுடியாதன்றோ. விப்ரநாராயணருடைய திருவடித் தாமரைகளைப் பிடித்து விடுவதினாலேயே அவரை அப்போதே தன் வசப்படுத்தி, நெஞ்சை ஈர்க்கும் கருத்துமிக்க புன்சிரிப்பாலும், பார்வைகளாலும், காற்று தீபஜ்வாலையை அசைப்பதுபோலே, அவருடைய மனத்தைத் தடுமாறச் செய்பவளாய், குயில் போன்று இனியகுரலையுடைய வார்த்தையாலே அந்தக்

४३. त्वत्पादपद्मकैङ्कर्यं करिष्येऽहं यथामतम् ।
मन्दस्मितमुखी सुभ्रूः साभिप्रायावलोकना ॥

४४. अपाङ्गवीक्षणैस्सम्यक् विप्रनारायणं स्थिता ।
विप्रनारायणस्सोपि तद्विलासाद्विमोहितः ॥

४५. चक्रेऽथ पाणिग्रहणं देवदेव्याः शुचिस्मितः ।
धन्यास्मीति वदन्त्याशु प्रहृष्टेनान्तरात्मना ॥

४६. मन्दस्मितमुखी सुभ्रूः देवदेवी दृढव्रता ।
तं गाढालिङ्गनं चक्रे विप्रनारायणं तदा ॥

४७. रमयामास तन्वङ्गी सा तेन परमर्षिणा ।
विचित्रसुरतैस्सम्यक् अज्ञातविषयादिना ॥

---

கண்ணழகுடைய தேவதேவி அவரை அடிக்கடிபார்த்துக் கொண்டு "கருணைக்கடலே! உமது அடிமையான எனக்கு நல்வார்த்தை கூறுவீர். உமது திருவடித்தாமரைகளுக்கு உமது விருப்பப்படி நான் கைங்கர்யம் செய்கிறேன்" என்று கூறினள். புன்சிரிப்புடையவளாய், அழகிய புருவமுடைய வளாய், கருத்துமிக்க பார்வைகளையுடையவளாய், விப்ரநா ராயணரைக் கடைக்கண்ணாலே நோக்கிக்கொண்டு அருகில் நின்றாள் தேவதேவி.

## கா3ந்த4ர்வ விவாஹம்

44*-49- அந்த விப்ரநாராயணரும் அவளுடையமயக்கு களாலே மயங்கி, புன்சிரிப்புடையவராய் அந்த தே3வதே3வி யின் கையைப்பற்றினர். புன்சிரிப்புடையவளாய், அழகிய புருவமுடையவளாய், உறுதியான குறிக்கோளையுடையவ ளான அந்த தே3வதே3வியும் மிகஉகந்தநெஞ்சினளாய் 'நான் த4ந்யையானேன்' என்று கூறிக்கொண்டு உடனே அந்த விப்ரநாராயணரை ஆரத்தழுவினள். மெல்லியலாளான அவள் அந்தப் பரமரிஷியை அச்செயலாலேயே இன்புறச்

४८. अज्ञातयोषिदानन्दं किञ्चित्स्वप्नेऽपि कर्हिचित् ।
विषयार्णवनिर्मग्नं तत्क्षणे साऽकरोन्मुनिम् ॥
४९. युवतीजनसामर्थ्यं वर्णितुं केन शक्यते ।
ब्रह्मादयोऽखिला देवाः तदधीनाः किलाभवन् ॥
५०. ततः स्वगृहमागत्य देवदेवी दृढव्रता ।
विधाय मङ्गलस्नानं सा सम्यक् कृतभोजना ॥
५१. सर्वाभरणसंयुक्ता विचित्राम्बरशोभिता ।
आभिरूप्येण तन्वङ्गी विप्रनारायणं मुहुः ॥
५२. सम्यक् स्वसुन्दराङ्गानां योगीशभ्रान्तिकारिणाम् ।
एकदेशे विनिर्मग्नं नैपुण्याद्विदधे तदा ॥

---

செய்தாள். ஶப்₃த₃ாதி₃விஷயங்களை அறியாமலே இருந்தமையாலே, கனவிலும் எப்போதும் சிறிதும் சிற்றின்பத்தை அறியாதிருந்தவரான அந்த முனிவரை ஆஶ்சர்யமான காம சேஷ்டைகளாலே அக்கணத்திலேயே சிற்றின்பத்தில் நன்கு மூழ்கியவராகச் செய்தாள் அவள். யுவதிகளின் திறமையை எவரால் வர்ணிக்கமுடியும்? பிரமன் முதலான எல்லாத்தேவர்களும் பெண்ணுக்கு வசப்பட்டவர்களாகவே இருந்தார்களன்றோ.

## விப்ரநாராயணரின் தடுமாற்றம்

50—*61. அதற்குப்பின், உறுதியான குறிக்கோளைக் கொண்டவளாய், அழகுமிக்க மெல்லியலாளான தே₃வதே₃வி தன் வீட்டுக்கு வந்து மங்களஸ்நாநம் செய்து நன்கு போ₄ஜநம் செய்து, எல்லா ஆப₄ரணங்களையும் அணிந்து கொண்டவளாய், நல்ல பட்டாடையுடுத்தவளாய், யோகி₃யர்தலைவர்களையும் மயக்கவல்ல தன்னுடைய அழகிய அங்கங்களின் ஒருபகுதியில் விப்ரநாராயணரை நன்கு

५३. आरामे नन्दनोद्यानसदृशे तत्र सुन्दरी ।
मल्लिकामाधवीजातिलताकुञ्जेषु सन्ततम् ॥

५४. रमणीये मनोहारिमत्तभृङ्गविनादिते ।
शुककोकिलकोयष्टिशारिकागणशोभिते ॥

५५. विचित्रनिर्भरानङ्गमहोत्सवमहारसम् ।
दृढानुरागावन्योन्यमनुभूयासकृद्रहः ॥

५६. अन्योन्यक्षणविश्लेषं मन्यमानौ महायुगम् ।
संक्रीडतां निकुञ्जेषु श्रीराधामाधवाविव ॥

५७. तमेवं स्ववशीकृत्य देवदेवी द्विजोत्तमम् ।
सुश्लाघ्यमाना सकलैः अलिवेण्या च तज्जनैः ॥

---

அடிக்கடி ஈடுபடுபவராக அப்போதே செய்தாள். இந்திரனின் நந்தவனத்தை யொத்ததாய், அழகியதாய், நெஞ்சை ஈர்க்கும் தேன் பருகிய வண்டுகளின் ரீங்காரத்தையுடையதாய், கிளிகள் குயில்கள் நாரைகள் மைனுக்களால் அலங்கரிக்கப்பெற்றதான (விப்ரநாராயணரின்) நந்தவனத்தில் அந்த அழகியான தே₃வதே₃வியும் விப்ரநாராயணரும் ஆஶ்சர்யமானதாய், நிறைந்ததான காமலீலா மஹாரஸத்தை மல்லிகை மாதவி ஜாதி முதலான பூங்கொடிகளால் அமைந்த லதாக்₃ருஹங்களில் அடிக்கடி ரஹஸ்யமாக இடைவிடாமல் அனுப₄வித்து ஒருவரையொருவர் ஒரு நொடி பிரிவதையும் ஓர் ஊழிகாலமாக நினைப்பவர்களாய், பரஸ்பரம் உறுதியான காதலை உடையவர்களாய், கொடிக் குடில்களில் ராதையும் கிருஷ்ணனும் போலே விளையாடினார்கள். தே₃வதே₃வியானவள் அந்த அந்தணர் தலைவரை இவ்வண்ணமாக வசப்படுத்தி, தமக்கையான வண்டார் குழலியாலும், எல்லா உறவினர்களாலும் மிகவும் கொண்டாடப் பெற்றவளாய், தன் விருப்பம் நிறைவேறப்பெற்ற

५८. सन्तीर्णकामा स्वगृहं तेन सार्धं विवेश सा ।
त्यक्तवर्णाश्रमाचारं विटवेषविशारदम् ॥

५९. योषित्परवशं सम्यक् विप्रनारायणं व्यधात् ।
ततः स्वधर्मानुष्ठानं यत्सन्ध्यावन्दनादिकम् ॥

६०. सर्वं त्यक्त्वानिशं सम्यक् वेश्याभोगपरायणः ।
त्यक्तरङ्गेशकैङ्कर्यः तद्वारवनितागृहे ॥

६१. विप्रनारायणः श्रीमान् कञ्चित्कालमवर्तत ।
आकर्ण्य तद्वचस्तस्य वेदान्ती भयमोहितः ॥

६२ अत्यन्तविस्मितो धीमान् भट्टार्यं प्रणिपत्य सः ।
बद्धाञ्जलिपुटस्सम्यक् चक्रे विज्ञापनं तदा ॥

---

வளாய், அந்த விப்ரநாராயணரோடு தன் வீட்டுக்குச் சென்ருள். அந்த விப்ரநாராயணரைத் தம்முடைய ப்₃ராஹ்மண வர்ணத்துக்கும் ப்₃ரஹ்மசர்யாஶ்ரமத்துக்கும் உரிய ஒழுக்கங்களைக் கைவிட்டவராய், காமிகளின் வேஷத்தைப பூண்டவராய், பெண்ணுக்கு நன்கு அடிமைப்பட்டவராக ஆக்கினுள், அதற்குப் பின் நற்குணமுடையவராய் இருந்த விப்ரநாராயணர் தமக்குரிய ஸந்த்₄யாவந்த₃னம் முதலான கர்மாநுஷ்ட₂ானங்கள் அனைத்தையும், அரங்கனின் கைங்கர்யத்தையும் விட்டு வேசியிடம் சிற்றின்பம் அனுப₄விப்பதிலேயே மிகவும் ஈடுபட்டவராய் அந்த வேசியின் வீட்டிலே சிலகாலம் வாழ்ந்துவந்தார்.

## நஞ்சீயரின் கேள்வி

61*—70. ப₄ட்டருடைய அந்த வார்த்தையைக் கேட்டு அறிவாளியான வேதாந்தி நஞ்சீயர் ப₄யத்தாலே கலங்கியவராய், மிகவும் வியப்புற்றவராய் ப₄ட்டரை வணங்கி, கைகூப்பி நின்று "ஆசார்யரே! இப்படிப் பட்ட ஆஶ்சர்யத்தை நான் கண்டதுமில்லை. கேட்டதுமில்லை.

६३. स्वामिन्नेतादृशं चित्रं न दृष्टं न मया श्रुतम् ।
अत्यद्भुततमं कार्यं तदिदं लोकगर्हितम् ॥

६४. तस्य रङ्गेशभक्तस्य वर्णिनश्चाभवत्कथम् ।
कासारयोगिप्रमुखदशान्तर्वर्तियोगिराट् ॥

६५. नैव सामान्यपुरुषो वनमालांशजो हरेः ।
नित्यमस्पृष्टसंसारगन्ध इत्यभिधीयते ॥

६६. कथमेतादृशस्यास्य संजातं कार्यमीदृशम् ।
वेश्यायाः पापरूपायाः सर्वपापप्रणाशनः ॥

६७. कथं समभवत्तस्य पादस्पर्शो महात्मनः ।
अस्याः कथमभूज्जन्म रङ्गक्षेत्रे बुधर्षभ ॥

६८. साक्षात्परं पदं रङ्गं मुक्तिस्थानं न संशयः ।
तत्कथाश्रवणेऽत्यन्तं स्वामिन् कौतूहलं हि मे ॥

---

அரங்கனின் ப4க்தராய், அந்தண ப்3ரஹ்மசாரியான அவருடைய—உலகினரால் இகழத்தக்கதான ஆஶ்சர்யமான இச்செயல் எப்படி ஏற்பட்டது? இந்த விப்ரநாராயணரோ பொய்கையாழ்வார் முதலான பதின்மருக்குள் ஓர் ஆழ்வாராய் உள்ளவர். ஸாமான்யமனிதரல்லர். எம்பெருமானுடைய வநமாலையின் அம்ஶமாய் அவதரித்தவர் என்றும், எப்போதும் ஸம்ஸாரத்தின் வாஸனையாலும் தீண்டப்படாதவர் என்றும் சொல்லப்படுபவர். இத்தகைய இவருக்கு இந்த இழிசெயல் எப்படி ஏற்பட்டது? எல்லாப் பாபங்களையும் அழிக்கக்கூடிய இந்த மஹாபுருஷனின் பாத3ஸ்பர்ஶம் பாபமே உருவெடுத்த அந்த வேசிக்கு எப்படி ஏற்பட்டது? அறிவாளிகளில் தலைவரே! இத்தகையவளுக்கு இந்த ரங்கக்ஷேத்ரத்தில் பிறப்பு எப்படி ஏற்பட்டது? இந்த ஸ்ரீரங்கம் முக்தியை அளிக்கவல்ல பரமபதமே என்பதில் ஐயமில்லையன்றோ இந்த வரலாற்றைக் கேட்பதில் எனக்கு விருப்பம் மிகவும் உள்ளது. மூவுலகி

६९. न तवाविदितं किञ्चित् त्रिषु लोकेषु विद्यते।
भवान् कूरेश्वरसुतः श्रीरङ्गेशपुरोहितः ॥

७०. सर्वशास्त्रार्थतत्त्वज्ञः साक्षान्नारायणो गुरुः।
विशदं ब्रूहि मे विद्वन् तच्च सर्वं सहेतुकम् ॥

७१. तेनोदीरितमाकर्ण्य सन्तुष्टः कूरराट्सुतः।
तत्पूर्वजन्मवृत्तान्तं वक्तुकामोऽब्रवीद्वचः ॥

७२. विप्रनारायणकथा सा श्रीकृष्णकथा यथा।
राधामाधवसंवादसदृशं चरितं तयोः ॥

---

லும் நீர் அறியாதது எதுவுமில்லை- தேவரீர் கூரத்தாழ்வானின் புதல்வர். ஸ்ரீரங்கநாதனின் புரோஹிதர். எல்லா ஶாஸ்த்ரங்களின் உட்கருத்தையும் அறிந்தவர். நேரே நாராயணனின் அவதாரமான ஆசார்யராயிருப்பவர். எல்லாமறிந்தவரே! காரணங்களோடு கூடிய இவையனைத்தையும் எனக்குத் தெளிவாகச் சொல்லுவீராக'' என்று அப்போதே நன்கு விண்ணப்பித்தார்.

## தேவதேவி விப்ரநாராயண அவதார ரஹஸ்யம்

71—*74, நஞ்சீயர் கூறியதைக்கேட்டு உகந்த கூரத்தாழ்வான் குமாரர் விப்ரநாராயண தேவதேவிகளின் முற்பிறவி வரலாற்றைச் சொல்ல விரும்பியவராய், பின்வருமாறு கூறலுற்றார்—விப்ரநாராயணரின் கதை ஸ்ரீக்ருஷ்ணனின் கதையைப்போன்றது. அவருக்கு தேவதேவியோடு ஏற்பட்ட ஸங்கம வரலாறு ராதாமாதவர்களின் ஸங்கம வரலாறு போன்றது. விப்ரநாராயணர் நேரே திருமகள் கேள்வனை க்ருஷ்ணனே என்பதில் ஐயமில்லை. க்ருஷ்ணாவதாரத்தில் கூனியாயிருந்தவளே தேவதேவி என்னும் வேசியாக மறுபடியும் இவ்வுலகில் பிறந்தாள். அவளுடைய பிறப்புக்குக் காரணத்தை நன்கு கூறுகிறேன், கேட்பீராக.

७३. विप्रनारायणः श्रीमान् साक्षात्कृष्णो न संशयः ।
कुब्जैव देवदेव्याख्या वेश्या जाता पुनर्भुवि ॥

७४. शृणुष्वाभिहितं सम्यक् वक्ष्ये तज्जन्मकारणम् ।
पुरा कृष्णावतारे तु कुब्जा श्रीचन्दनं परम् ॥

७५. प्रददौ भक्तिभावेन कृष्णाय किल विष्णवे ।
सन्तुष्टस्तेन तां कृष्णो व्यदधाद्दिव्यसुन्दरीम् ॥

७६. मन्मथाविष्टहृदया कृष्णं संजातयौवना ।
जितकन्दर्पलावण्यं अकामयत सुन्दरी ॥

७७. कुब्जाभवनमासाद्य कृष्णः शृङ्गारवल्लभः ।
रमयामास तन्वङ्ग्या विचित्रसुरतैस्तथा ॥

७८. सैरन्ध्र्याः कामतप्तायाः सन्तुष्टोऽभीष्टदायकः ।
व्याजहार शुभं वाक्यं श्रीकृष्णस्तां तदाऽनघ ॥

---

## கண்ணனும் கூனியும்

74*—93 குற்றமற்ற வேத₃ாந்தியே! முன் யுக₃த்தில் ஸ்ரீகிருஷ்ணவதாரத்தில் (வடமதுரையில்) ஓர் கூனி கண்ணனெம்பெருமானுக்கு மிகுந்த ப₄க்தியுடன் மேலான சந்த₃னத்தை அளித்தாளன்றோ. அதனால் உகந்த கண்ணன் (அவளது கூனை நிமிர்த்தி) அவளைப் பேரழகியாக்கினன். யௌவனப்பருவத்தை அடைந்த அவ்வழகி காமவசப்பட்டவளாய், காமனையும் வெல்லும் அழகுடைய கண்ணனைக் காமுற்றாள். சிருங்காரரஸத்தில் வல்லவனை கண்ணனும் அவள் வீட்டுக்குச் சென்று அவ்வழகியைப் பல காமபோகங்களை அனுபவிக்கச் செய்தான். காம நோயால் பீடிக்கப்பெற்ற (கூனியாயிருந்த அந்த) ஸைரந்த்₄ரியிடம் உகந்த கண்ணன், அவள் விருப்பமான

७९. वरं वरय भद्रं ते भक्तानां वरदोऽस्म्यहम् ।
वाञ्छितानि प्रदास्यामि सर्वाभीष्टानि सांप्रतम् ॥
८०. तच्छ्रुत्वा भगवद्वाक्यं सैरन्ध्री कामपीडिता ।
अयाचित्वा तु तं मोक्षं श्रीकृष्णं मोक्षदायकम् ॥
८१, तस्मात्कामं वरं वव्रे तद्विभ्रमविमोहिता ।
तस्यै कामवरं दत्वा सैरन्ध्र्यै भगवान् हरिः ॥
८२. कञ्चित्कालं तया सार्धं रेमेऽत्यन्तं स केशवः ।
तदुद्धवादिसहितस्तया संप्रेषितो हरिः ॥
८३. कुब्जया भगवान् कृष्णः स्वगृहं प्रविवेश सः ।
श्रीकृष्णविरहात्कुब्जा सन्तप्ताऽहर्निशं सती ॥
८४. जितनिद्रा जितहारा राधिकेव समास्थिता ।
तस्याः प्रसन्नो भगवान् स भूयो भक्तवत्सलः ॥

---

காமபோகங்களை அவளுக்கு அளித்துவிட்டு, "நான் ப₄க்தர்களுக்கு வரமளிப்பவன்: என்னிடம் நீ வரம் கேள், நீ விரும்பும் விருப்பங்களனைத்தையும் இப்போதே அளிக்கிறேன்" என்னும் மங்க₃ளமான வார்த்தையை அவளிடம் கூறினன். அவனுடைய அவ்வார்த்தையைக் கேட்டு, காமநோயால் வருந்திய அந்த ஸைரந்திரி, மோக்ஷமளிக்கவல்ல அந்தக்கண்ணனிடம் மோக்ஷத்தை யாசிக்காமல், அவனது அழகில் மயங்கி, அவனிடம் காமபே₄ாக₃ங்களை யாசித்தாள். அந்தக்கேசவனும் அவளுக்கு அவ்வரத்தை அளித்து, சிலகாலம் அவளோடு மிகவும் இன்புற்று வாழ்ந்தான். அதற்குப்பின் அவளால் விடைகொடுக்கப்பெற்ற அப்பெருமான் உத்₃த₄வர் முதலானவர்களோடு தன் வீட்டிற்குச் சென்றான். அக்கூனியும் கண்ணனையல்லது அறியாதவளாகையாலே, அவனைப் பிரிந்து இரவும் பகலும் வருந்தி, உணவும் தூக்கமும்

८५. व्याजहार शुभं वाक्यं वेदान्तिन्! तां तदाऽनघ।
सन्तापस्त्यज्यतां भद्रे! तव भद्रं भविष्यति॥

८६. मत्सङ्गमस्तवाद्यायं जन्मन्यस्मिन् सुदुर्घटः।
रङ्गक्षेत्रे महापुण्ये मम प्रीतिकरे शुभे॥

८७ सर्वसंपत्प्रदे सुभ्रु! पापिनामपि मुक्तिदे।
तत्र रङ्गेश्वरः श्रीमान् चन्द्रपुष्करिणीतटे॥

८८. शयानः शेषपर्यङ्के भक्तानुग्रहतत्परः।
सर्वाभीष्टप्रदो देवो जयत्यव्याहतस्सदा॥

८९. रङ्गेशनृत्यगीतादिमहाकैङ्कर्यकारणम्।
तव श्रीरङ्गनगरे वेश्याजन्म भविष्यति॥

---

இல்லாதவளாய், ராதையைப்போல் வாழ்ந்தாள். குற்ற மற்ற வேத₃ாந்தியே! அவளுக்கு மறுபடியும் காட்சியளித்த ப₄க்தவத்ஸலனை அவ்வெம்பெருமான் அவளைப்பார்த்து "மங்க₃ளமானவளே! வருந்தாதே! உனக்கு மங்க₃ளம் உண்டாகப் போகிறது. இந்த என்னுடைய அவதாரத்தில் நீ விரும்பும் (ப்ராக்ருத) காமம் நிறைவேறாது. அழகிய பருவமுடையவளே! மஹாபுண்யமானதும், எனக்கு உகப்பை அளிப்பதும், மங்க₃ளமானதும், எல்லாச் செல்வங்களையுமளிப்பதும், பாபிகளுக்கும் மோக்ஷமளிப் பதுமான ஸ்ரீரங்க₃க்ஷேத்ரத்தில் சந்திரபுஷ்கரிணிக்கரையில் ஸ்ரீதே₃வியோடு கூடிய ஸ்ரீரங்க₃நாத₂னுகிற பெருமான் ப₄க்தர்களுக்கு அருள்புரிபவனாய், எல்லா விருப்பங்களையும் அளிப்பவனாய், ஆதிசேஷ ஶயனத்தில் பள்ளி கொண்டவனாய் எப்போதும் தடையற வெற்றி பெற்று விளங்குகிறான். அந்தத் திருவரங்கனுக்கு நாட்டியமாடிப் பாடும் பெரும் பணியை அளிக்கவல்ல வேசிஜன்மம் உனக்கு அத்திருவரங்கத் திருநகரில் உண்டாகப்போகிறது.

९०. सर्वासां नायिका भूत्वा वेश्यानां लोकसुन्दरी ।
श्रीरङ्गेश्वरकैङ्कर्यनिरता त्वं भविष्यसि ॥

९१. विप्रनारायणो भूत्वा सोऽहं तत्र द्विजर्षभः ।
रङ्गेशतुलसीदामकैङ्कर्यनिरतस्सदा ॥

९२. सैरन्ध्रि! लोकशिक्षार्थं भविष्यामि न संशयः ।
तदा भवत्यै सुश्रोणि तत्र सम्यगमानुषम् ॥

९३. कामभोगं प्रदास्यामि मुक्तिं चापि विशेषतः ।
एवमुक्त्वा ततः कृष्णः स्वधाम प्रत्यपद्यत ॥

९४. ततः कालान्तरे कुब्जा रङ्गक्षेत्रे तदाऽजनि ।
विष्णोर्लीलावतारास्तु बहवः सन्ति भूतले ॥

---

உலகில் ஒப்பற்ற அழகியான நீ எல்லா வேசிகளுக்கும் தலைவியாகி, ஸ்ரீரங்க₃நாத₂னின் கைங்கர்யத்தில் ஈடுபடப் போகிறாய். ஸைரந்திரி! நான் அப்போது அந்தணர் தலைவரான விப்ரநாராயணராகி உலகிற்கு ப₄க₃வத் கைங்கர்யம் செய்யவேண்டும் என்று கற்பிப்பதற்காக, ஸ்ரீரங்க₃நாத₂னுக்குத் துளவமாலை தொடுக்கும் கைங்கர்யத்தில் எப்போதும் ஈடுபடப் போகிறேன், அழகியவளே! அப்போது உனக்கு நீ விரும்பிய அமானுஷமான காம போ₄க₃த்தையும், நீ கேளாத மோக்ஷத்தையும் சிறப்பாக அளிக்கப்போகிறேன்'' என்னும் மங்க₃ளமான வார்த்தையைக் கூறினான். இவ்வண்ணமாக அருளிவிட்டுக் கண்ணன் தன் இருப்பிடம் சென்றான்.

## விப்ரநாராயணவதாரப் பெருமை

94—99 அதற்குப்பின் கலியுக₃த்தில் கூனியானவள் ஸ்ரீரங்க₃த்தில் தே₃வதே₃வியாகப் பிறந்தாள். விஷ்ணுவின் லீலையின் பொருட்டான அவதாரங்கள் இவ்வுலகில் பல உள்ளன. அறிவாளியே! அதில் சில அவதாரங்கள்

९५. अंशावताराः कतिचित्तत्र सन्ति बुधर्षभ! ।
आवेशाद्यवताराश्च केचित्तात्कालिकाः स्मृताः ॥

९६. तस्यावतारास्ते सर्वे भक्तानुग्रहहेतवः ।
स्वभक्तानुग्रहः कार्यः न गुणागुणचिन्तनम् ॥

९७. नह्युच्चनीचव्यापारः सर्वभूतात्मनो हरेः ।
कृष्णस्तु राधाविरहात् सन्तापमगमत् बहु ॥

९८. सञ्जाता न्यूनता का वा श्रीकृष्णस्य ततोऽनघ ।
राधामाधवसंवादं यदेतन्मुक्तिसाधनम् ॥

---

(பிரமன் சிவன் போன்ற) ஒரு ஜீவனிடம் தன் ஶக்தியைக் கொடுத்துப் பிறக்கும் அம்ஶாவதாரங்களாகவும் உள்ளன. (பரசுராமனிடம் போலே) ஓர் ஜீவனிடம் தன் திருமேனியோடு பிரவேசித்துப் பிறக்கும் ஆவேஶாவதாரங்களும் அவ்வக்காலங்களில் உண்டாவதுண்டு. (இத்தகைய அவதாரங்களில் ஒன்றே விப்ரநாராயணவதாரம் என்று கருத்து.) அவனுடைய அவதாரங்கள் எல்லாமே ப₄க்தர்களுக்கு அருள்புரிவதற்காகவே எடுக்கப்பட்டவை. அடியார்களின் கு₃ணதோ₃ஷங்களைக் கணிசியாமல் அவர்களுக்கு அவன் அருள்புரிய வேண்டுமன்றோ. எல்லா ஜீவராசிகளிலும் நுழைந்து செயல்புரியும் எம்பெருமானுடைய செயல்களில் சில உயர்ந்தவை என்றும், சில தாழ்ந்தவை என்றும் நாம் நினைக்கமுடியாதன்றோ. கண்ணன் ராதையைப் பிரிந்து மிகவும் துன்புற்றானன்றோ. குற்றமற்ற வேதா₃ந்தியே! அதனால் கண்ணனுக்கு என்ன தாழ்வு விளைந்தது? ராத₄ாமாத₄வர்களின் சேர்த்தியை அநுஸந்தி₄ப்பது மிகப்பாவனமாகவும், குற்றமற்றதாகவும்,

९०. सर्वासां नायिका भूत्वा वेश्यानां लोकसुन्दरी ।
श्रीरङ्गेश्वरकैङ्कर्यनिरता त्वं भविष्यसि ॥
९१. विप्रनारायणो भूत्वा सोऽहं तत्र द्विजर्षभः ।
रङ्गेशतुलसीदामकैङ्कर्यनिरतस्सदा ॥
९२. सैरन्ध्रि! लोकशिक्षार्थं भविष्यामि न संशयः ।
तदा भवत्यै सुश्रोणि तत्र सम्यगमानुषम् ॥
९३. कामभोगं प्रदास्यामि मुक्तिं चापि विशेषतः ।
एवमुक्त्वा ततः कृष्णः स्वधाम प्रत्यपद्यत ॥
९४. ततः कालान्तरे कुब्जा रङ्गक्षेत्रे तदाऽजनि ।
विष्णोर्लीलावतारास्तु बहवः सन्ति भूतले ॥

---

உலகில் ஒப்பற்ற அழகியான நீ எல்லா வேசிகளுக்கும் தலைவியாகி, ஸ்ரீரங்க₃நாத₂னின் கைங்கர்யத்தில் ஈடுபடப் போகிறாய். ஸைரந்திரி! நான் அப்போது அந்தணர் தலைவரான விப்ரநாராயணராகி உலகிற்கு ப₄க₃வத் கைங்கர்யம் செய்யவேண்டும் என்று கற்பிப்பதற்காக, ஸ்ரீரங்க₃நாத₂னுக்குத் துளவமாலை தொடுக்கும் கைங் கர்யத்தில் எப்போதும் ஈடுபடப் போகிறேன், அழகியவளே! அப்போது உனக்கு நீ விரும்பிய அமானுஷமான காம பே₄าக₃த்தையும், நீ கேளாத மோக்ஷத்தையும் சிறப்பாக அளிக்கப்போகிறேன்'' என்னும் மங்க₃ளமான வார்த்தை யைக் கூறினான். இவ்வண்ணமாக அருளிவிட்டுக் கண்ணன் தன் இருப்பிடம் சென்றான்.

## விப்ரநாராயணவதாரப் பெருமை

**94—99** அதற்குப்பின் கலியுக₃த்தில் கூனியானவள் ஸ்ரீரங்க₃த்தில் தே₃வதே₃வியாகப் பிறந்தாள். விஷ்ணுவின் லீலையின் பொருட்டான அவதாரங்கள் இவ்வுலகில் பல உள்ளன. அறிவாளியே! அதில் சில அவதாரங்கள்

१०३. हन्त ते कथयिष्यामि राधाचरितमुत्तमम् ।
तच्च गुह्यतमं सम्यक् श्रूयतामवधानतः ॥
१०४. दशग्रीवस्य भगिनी याऽभूत् शूर्पणखा पुरा ।
नन्दव्रजे समुत्पन्ना राधा भूत्वा तथैव सा ॥
१०५. यमुनातीरकुञ्जेषु श्रीकृष्णो राधया तया ।
भक्ताभीष्टप्रदो धीमान् आत्मारामोऽप्यरीरमत् ॥
१०६. रक्षोनाथवधोपायसहकारी निशाचरी ।
कोटिकन्दर्पलावण्यं जगन्मोहनविग्रहम् ॥
१०७ श्रीरामचन्द्रं सा दृष्ट्वा कन्दर्पशरपीडिता ।
तेनैव सार्धं रामेण सा विहर्तुमियेष हि ॥
१०८. कृष्णावतारे फलिताः शूर्पणख्या मनोरथाः ।
रामावतारे ये सम्यगसंप्राप्तफला जनाः ॥

---

தலை ராவணனின் தங்கையான சூர்ப்பணகையாகப் பிறந்திருந்தவளே, த்₃வாபரயுக₃த்தில் ஆய்ப்பாடியில் ராதை₄யாகப் பிறந்தாள். தன்னுடைய ஸ்வரூபத்தின் அனுபவத்திலேயே ஈடுபட்ட பரமாத்மாவாயிருந்தபோதிலும் அடியார் விரும்புவதை அளிக்கும் அறிவாளியான கண்ணன் யமுனைக்கரைப் பூந்திடல்களிலே ராதையோடு கலந்து இன்புற்றாள். ராவணனைக் கொல்ல ராமபிரானுக்கு உதவிபுரிந்த சூர்ப்பணகை, கோடி மன்மத₂ர்களின் அழகுடையவனாய் உலகையே மயக்கும் திருமேனியுடையவனான ஸ்ரீராமசந்திரனைக் கண்டு மன்மத₂ப₃ாணங்களால் அடிக்கப்பட்டுத் துன்புற்றாள். அந்த ராமனோடு காமபோ₄க₃ங்களை அனுப₄விக்க அவள் விரும்பினாளன்றோ. அந்த சூர்ப்பணகியின் விருப்பங்கள் கிருஷ்ணவதாரத்தில் (அவள் ராதை₄யாகப் பிறந்த போது) நிறைவேறின. ராமாவதாரத்தில் ராமனை மணம்புரிய விரும்பி, அவ்விருப்பம்

१०९. ते संप्राप्तफलास्सर्वे ह्यभवन्कृष्णजन्मनि ।
वेदान्तिन् राघवो भूयः कृष्णो भूत्वा जगत्पतिः ॥

११०. तेषां मनोरथान्सर्वान्पूरयामास भूरिशः ।
कृष्णलीलाविहरणं तस्याः कथमभून्महत् ॥

१११. न विचारोऽत्र कर्तव्यः दुष्टशूर्पणखीति सा ।
सर्वभूतात्मनस्तस्य सत्यं सर्वजनः समः ॥

११२. श्रीरामस्मरणादेव पापात्मा ह्यपि मुक्तिभाक् ।
भविष्यतीति सर्वाणि शास्त्राण्याहुः किल स्फुटम् ॥

११३. संभाषणाद् दर्शनाच्च विग्रहानुभवाद्धरेः ।
स्वमनोभीष्टसंसिद्धौ तस्याः कः संशयोऽनघ ॥

---

நன்கு நிறைவேறப்பெருத அனைவரும் கிருஷ்ணவதாரத்தில் கண்ணனைத் தழுவும் பேறுபெற்ற ஆய்ச்சியராகவும், மனைவியராகவும் ஆகி விருப்பம் நிறைவேறப் பெற்ருர்களன்ருே. குற்றமற்ற வேத₃ாந்தியே! அந்த லோகநாத₂ஞன ராமபிரானேயன்ருே அவர்களுடைய விருப்பங்கள் அனைத்தையும் கண்ணனுகிப் பூர்ணமாக நிறைவேற்றினுன். கண்ணனுக்கு து₃ஷ்டையான சூர்ப்பணகியோடு மிகப்பெரிய காதல் லீலைகள் எப்படி ஏற்பட்டது என்று ஆராயக்கூடாது. எல்லா ஜீவராசிகளுக்கும் அந்தர்யாமியான எம்பெருமானுக்கு எல்லா ஜீவர்களும் ஸமமானவர்கள் என்பது உண்மையன்ருே; ஸ்ரீராமனை எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பவன் பாபியாயினும் முக்தியடைவான் என்று எல்லா சாஸ்திரங்களும் தெளிவாக முழங்குகின்றனவன்ருே; (இப்படியிருக்கையில்) ராமனேடு பேசி, அவனைக் கண்ணுரக் கண்டு அவன் திருமேனியை அநுப₄வித்த சூர்ப்பணகை₂யின் விருப்பம் நிறைவேறியதில் ஐயமுற இடம் ஏது?

११४ शिवं तु शिशुपालस्य सायुज्यं प्रददौ किल ।
श्रीकृष्णो धर्मभूपालराजसूयाध्वरे तदा ॥
११५. दक्षे जडे शठे धूर्ते स्तुवत्येव दयावति ।
प्रीतिस्तुल्या यथा मातुर्वेदान्तिन्नात्मसंभवे ॥
११६. श्रीहरेस्सर्वभूतेषु तथैव परमात्मनः ।
लीलाकार्योपकरणं सर्वमित्युपधारय ॥
११७. राधाजन्मन्यभून्मोक्षः शूर्पणख्यास्तदाऽनघ ।
देवदेव्यवतारे तु कुब्जा मोक्षं ततो गता ॥
११८. एवं क्रमेण सर्वेषां भगवत्कृपयाऽनघ ।
तेन निःश्रेयसप्राप्तिर्भविष्यति न संशयः ॥

---

ஸ்ரீகிருஷ்ணன் த₄ர்மராஜாவின் ராஜஸூயயாக₃த்தின்போது (தன்னை நிந்தித்த) ஶிஶுபாலனுக்கே பரமமங்களமான மோக்ஷத்தை அளித்தானன்றோ. குற்றமற்ற வேதாந்தியே. திறமையுள்ளவன், திறமையற்றவன், நிந்தி₃ப்பவன், துதிப்பவன், கருணையற்றவன், கருணையுள்ளவன் எனப்பலவகைப் பட்ட பிள்ளைகளிடம் எவ்வண்ணம் தாய்க்குஅன்பு ஒருபடியாயிருக்குமோ, அவ்வண்ணமே பரமாத்மாவான ஸ்ரீஹரிக்குச் சேதனர் அனைவரிடத்தும் அன்பு ஒருபடிப்பட்டதே. இவர்களனைவரும் அவனது விளையாட்டுக்குக் கருவிகளாயிருப்பவரே என்று அறிவீர்: ராதையாகப்பிறந்தபோது சூர்ப்பணகிக்கு மோக்ஷம் உண்டாயிற்று. தேவதேவியாகப்பிறந்தபோது கிருஷ்ணவதாரக்கூனி மோக்ஷமடைந்தாள். இவ்வண்ணமே எம்பெருமானோடு தொடர்பு கொண்டவர்கள் அனைவர்க்கும் அவனாலேயே மோக்ஷம் விளையப்போகிறது. இதில் ஐயமில்லை—என்னும் பட்டருடைய வார்த்தையால் அப்போதே

११९. विच्छिन्नसंशयस्तेन भट्टार्यवचसा तदा ।
संप्रहृष्टमना भूयः तत्कथाश्रवणे महान् ॥
स बभूव महातेजाः वेदान्ती गुरुभक्तिमान् ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे भक्ताङ्घ्रिरेणुदेवदेवी-
विवाहो नाम पञ्चनवतितमोऽध्यायः ॥

## ॥ षण्णवतितमोऽध्यायः ॥

१. भट्टार्यं प्रणिपत्योर्व्यां वेदान्ती तमपृच्छत ।
देवदेवीगृहे तत्र कियत्कालं तया सह ॥
२. रममाणः सुखं तस्थौ विप्रनारायणो महान् ।
कथं वियोगः संजातो जातप्रीत्योः परस्परम् ॥

---

ஐயம் நீங்கப்பெற்ற மஹாதேஜஸ்வியும் கு₃ருப₄க்தியுடைய வருமான வேத₃ாந்தி மிகவுகந்தவராய், மறுபடியும் விப்ர நாராயணருடைய கதையைக் கேட்பதில் ஆவலுடைய வரானர்

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீபராஶரப₄ட்டர் வேத₃ாந்தி ஸம்வாத₃த்தில் விப்ரநாராயணருக்கும் தேவதேவிக்கும் க₃ாந்த₄ர்வ விவாஹத்தைக்கூறும் தொண்ணூற்று ஐந்தாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## தொண்ணூற்றாறும் அத்தியாயம்

### தொண்டரடிப்பொடியாழ்வார் சரித்திர நிறைவு

### நஞ்சீயரின் கேள்வி

1-3. வேத₃ாந்தி நஞ்சீயர் ஸ்ரீப₄ட்டரை அங்க₃ம் நிலனுற வணங்கி "பெரியவரான விப்ரநாராயணர் அந்த தே₃வதே₃வியின் வீட்டில் அவளோடுகூடிச் சிற்றின்பம் அனுப₄வித்துக்கொண்டு எவ்வளவுகாலம் இனிது வாழ்ந்தார்?

३. सा देवदेवी संसारात्केन रूपेण मोचिता ।
तत्सर्वं विशदं ब्रूहि शिष्याय गुरुपुङ्गव ॥

४. स तद्वाक्यं समाकर्ण्य कृपया भट्टदेशिकः ।
वेदान्तिनेऽखिलां तस्य कथामकथयत्तदा ॥

५. रममाणस्तया सार्धं देवदेवीगृहोत्तमे ।
विप्रनारायणः श्रीमान् कश्चित्कालमवर्तत ॥

६. विप्रनारायणं मत्वा साक्षाद्रङ्गेश्वरं तदा ।
पादसंवाहनादीनि कैङ्कर्याण्यखिलानि च ॥

७. कुर्वन्ती ह्यनिशं तस्य देवदेवी समास्थिता ।
तदेकहृदया साध्वी पुरुषान्तरवर्जिता ॥

---

ஒருவரோடு ஒருவர் காதல்கொண்ட இருவருக்கும் எப்படிப் பிரிவு ஏற்பட்டது? அந்த தே₃வதே₃வி ஸம்ஸாரத்திலிருந்து எப்படி மோக்ஷமடைந்தாள்? ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரே! இது அனைத்தையும் ஶிஷ்யனுன எனக்குத்தெளிவாகக் கூறுவீராக'' என்று கேட்டார்.

## தேவதே₃வியின் ப₄க்தி

4-7, நஞ்சீயரின் அவ்வாக்கியத்தைக் கேட்டு ப₄ட்டர் வேத₃ாந்திக்கு விப்ரநாராயணரின் கதை முழுவதையும் அப்போதே சொன்ஞர். ஸ்ரீவிப்ரநாராயணர் தே₃வதே₃வியின் சிறந்த வீட்டில் அவளோடு சிற்றின்பமனுபவித்துக் கொண்டு சிறிதுகாலம் வாழ்ந்தார். அப்போது தே₃வதே₃வி விப்ரநாராயணரை நேரே திருவரங்கனுகவே நினைத்து, திருவடிகளைப் பிடித்து விடுதல் முதலான கைங்கர்யங்களனைத்தையும் தினந்தோறும் அவருக்குச் செய்துகொண்டிருப்பவளாய், வேறு ஆண்களை எண்ணுதவளாய், கற்புநெறியுடையவளாய், விப்ரநாராயணரையே நெஞ்சில் கொண்டவளாய் வாழ்ந்து வந்தாள்.

८. नित्यं वित्तार्जनरता तन्माता विटकण्टकी ।
विप्रनारायणधनं यत्सर्वमपहृत्य तत् ॥

९, निःस्वं कृत्वा क्षणेनाशु निर्भर्त्स्य बहुधा तदा ।
निर्दया धनराहित्यात् तं बहिर्विप्रवासयत् ।

१०. प्रव्याकुलान्तःकरणः देवदेव्या गृहात् बहिः ॥
तन्मोहपाशसम्बद्धो वितर्द्यामशयिष्ट सः ॥

११. ह्रियाऽनतमुखोऽत्यन्तं सम्यगाच्छादिताम्बरः ।
समाकुञ्चितसर्वाङ्गः विप्रनारायणोऽनघः ॥

१२. तदा रङ्गेश्वरः श्रीमान् श्रिया सार्धं जगत्पतिः ।
कुर्वन् विलाससञ्चारं रथ्यायां तत्र तत्र च ॥

---

## தே3வதே3விமாதாவின் கொடுமை

8-11. தாஸிலோலர்களுக்கு முள்போல் இருப்பவளாய், கருணையற்றவளாய், எப்போதும் பொருள் சேர்ப்பதிலேயே ஈடுபட்டவளான தே3வதே3வியின் தாய் விப்ரநாராயணரின் பொருள் அனைத்தையும் கைப்பற்றிக்கொண்டு அவரைப் பொருள் இழந்தவராக்கி, பொருளின்மை காரணமாகவே உடனே அவரைப் பலவித4மாக ப4யமுறுத்தி வீட்டைவிட்டுத் துரத்திவிட்டாள். குற்றமற்றவரான விப்ரநாராயணர் மனம் நொந்தவராய், தே3வதே3வியிடம் காதலாகிற கயிற்றாலே கட்டுண்டவராய், லஜ்ஜையாலே மிகவும் தலைகவிழ்ந்தவராய், உடல் முழுவதையும் துணியாலே மறைத்துக்கொண்டவராய், அவயவங்களனைத்தையும் ஒடுக்கிக்கொண்டு தே3வதே3வியின் வீட்டில் வெளித்திண்ணையில் படுத்துக்கொண்டிருந்தார்.

## தி3வ்யத3ம்பதிகளின் ஸம்பா4ஷணை

**12-22.** குற்றமற்றவேதா3ந்தியே! ஸர்வலோகநாத2னை ஸ்ரீரங்கராஜன் பிராட்டியோடுகூடத் திருவரங்கம் வீதிகளில்

१३. विप्रनारायणाभ्याशमाससाद यदृच्छया ।
वेश्याङ्गनागृहद्वारि शयानं तं तथाविधम् ॥
१४. श्रीरङ्गनायकी दृष्ट्वा मन्दस्मितमुखी तदा ।
रङ्गेशं तस्य वृत्तान्तं परिपप्रच्छ सादरम् ॥
१५. कोऽयं वेश्यागृहद्वारि शयानो रङ्गभूपते ।
समाकुञ्चितसर्वाङ्गः सम्यगाच्छादिताम्बरः ॥
१६. तद्वृत्तं ब्रूहि मे सर्वं विस्मयो जायते मम ।
तच्छ्रुत्वा रङ्गनायक्या वाक्यं रङ्गेश्वरस्तदा ॥
१७. वृत्तान्तं तस्य तत्सर्वं देव्यै सम्यङ्न्यवेदयत् ।
पुष्पदामप्रदोऽस्माकं विप्रनारायणो ह्ययम् ॥

---

ஆங்காங்கு ஸஞ்சரித்து இன்புறும் போது, யாத்₃ருச்சி₂க மாக விப்ரநாராயணருக்கு அருகில் எழுந்தருளினர். வேசியின் வீட்டின் முகப்பில் அவ்வண்ணமாகப் படுத்தி ருக்கும் விப்ரநாராயணரை அப்போது கண்டு ஸ்ரீரங்க நாச்சியார் புன்முறுவல் கொண்டவளாய், அவரைடபற் றிய வரலாற்றை ஸ்ரீரங்கநாதனை ஆவலோடு பின்வரு மாறு கேட்டாள்— 'ஸ்ரீரங்கராஜரே! அவயவங்களையெல்லாம் ஒடுக்கிக்கொண்டு நன்கு முட்டாக்கிட்டுக்கொண்டு வேசி யின் வீட்டுவாயிலில் படுத்திருக்கும் இவர் யார்? எனக்கு மிகவும் வியப்பு உண்டாகிறது. இவருடைய வரலாறு முழுவதையும் உரைப்பீராக'' என்னும் ஸ்ரீரங்கநாயகியின் வார்த்தையைக் கேட்டு, ரங்க நாதன் விப்ரநாராயணரின் வரலாறு முழுவதையும் பிராட் டிக்குப் பின்வருமாறு விரிவாகக் கூறினன். ''இந்த விப்ர நாராயணர் நமக்குப் பூமாலைதொடுத்து அளித்துவந்தவர். இன்று வேசியிடம் காதல் கொண்டவராய், செல்வமிழந் தமையால் வெளியேற்றப்பட்டவராய்த் துன்புற்று, அவள்

१८. वेश्यायां सक्त एवाद्य वित्ताभावान्निराकृतः ।
दुःखितस्तद्गृहद्वारे मोहादेवं समास्थितः ॥

१९. श्रीरङ्गेशवचः श्रुत्वा दुःखिता सा जगत्प्रसूः ।
कृपया रङ्गिणं वाक्यमेवमाह तदाऽनघ ॥

२०. तवान्तरङ्गभक्तं तं युष्मत्कैङ्कर्यकारिणम् ।
एवमेतादृशं कर्तुं विश्वमोहनमायया ॥

२१. तवोचितमिदं किं नु भक्तसंरक्षणाय वै ।
स्वामिन् रङ्गेश भवतः किं मायाविषयो ह्ययम् ॥

२२. वेश्यासंसर्गजं दोषं निःशेषं परिहृत्य तत् ।
त्वत्कृपाविषयं शीघ्रं भक्तमङ्गीकुरुष्व तम् ॥

२३. प्रतिगृह्य वचस्तस्याः सत्वरं रङ्गभूपतिः ।
सुवर्णपञ्चपात्राणां मध्ये स्वर्णमयं महत् ॥

---

வீட்டுவாயிலில் இவ்வண்ணம் மயங்கிக் கிடக்கிறார்'' என்னும் ஸ்ரீரங்க₃நாத₂னின் வார்த்தையைக் கேட்டுத் துன்புற்றவளான ஸ்ரீரங்கநாச்சியார் கருணையாலே திருவரங்கனைப் பார்த்து அப்போதே கூறினாள்—''ஐயனே! அரங்கனே! தேவரீருக்கு நெருங்கிய ப₄க்தராய், உமது கைங்கர்யத்தைச் செய்யும் இவரை உலகனைத்தையும் மயக்கும் உமது மாயையினால் இவ்வண்ணம் மயக்குவது உமக்குப் பொருந்துமா? இவர் மாயைக்கு விஷயமாகலாமா? உமது அடியாரை ரக்ஷிப்பதற்காக, வேசியின் தொடர்பினால் இவருக்குண்டான குற்றத்தை முற்றும் நீக்கி, ப₄க்தரான இவரை உமது கருணைக்கு விஷயமாக்கி விரைவிலேயே ஏற்றுக் கொள்வீராக'' என்று.

२४. शुद्धोदकप्रदं पात्रं समादायाञ्जसा तदा ।
देवदेवीगृहद्वारसमीपं प्राप्य सादरम् ॥
२५. कवाटताडनं कृत्वा पाणिनोच्चतरं तदा ।
आजुहाव स्वरेणोच्चैः देवदेवीं तदा हरिः ॥
२६. सा तद्वाक्यं समाकर्ण्य तत्कवाटसमीपगा ।
कवाटनिकटस्थोऽद्य कोयमित्यभ्यभाषत ॥
२७. रङ्गेशस्तद्वचः श्रुत्वा तामुवाच तदा हरिः ।
रङ्गेशदासनामाहं तेन सुप्रेषितोऽधुना ॥
२८. विप्रनारायणेनैव तवान्तिकमुपागतः ।
तेनोक्तं यन्महद्वाक्यं वक्तव्यं तन्महार्थदम् ॥

---

## அரங்கன் தேவதேவிக்குப் பொற்பாத்திரமளித்தல்

23-34. வேத₃ாந்தியே! பெரிய பிராட்டியாரின் அவ் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு, திருவரங்க₃ராஜன் (தன் திருவாராதனத்துக்குரிய) பொன்மயமான ஐந்து பாத்திரங்களில் ஶுத்₃தோ₄த₃கபாத்ரத்தை எடுத்து, அப்போதே விரைவில் தே₃வதே₃வியின் வீட்டுவாயிலை ஆர்வத்தோடு அடைந்து கதவைத் திருக்கையாலே ப₃லமாகத் தட்டி உரத்தக் குரலோடு தே₃வதே₃வியை அழைத்தான். அந்த வார்த்தையைக் கேட்ட தேவதேவி, கதவின் அருகில் வந்து, "இப்போது கதவின் அருகிலிருப்பவர் யார்?" என்று கேட்டாள். அவ்வார்த்தையைக் கேட்டு, திருவரங்கநாதன் அவளைக் குறித்து, "என் பெயர் ரங்கேசதாஸன் என்பது. விப்ரநாராயணரால் அனுப்பப்பட்டு இப்போது உன்னிடம் வந்திருக்கிறேன். அவர் ஒரு பெரிய செய்தி சொல்லியனுப்பியுள்ளார். அது உனக்குப் பெரும் பொருளை அளிக்கப் போகிறது. விரைவில் கதவைத் திறந்து என் வார்த்

२९. कवाटपाटनं शीघ्रं विधाय शृणु मद्वचः ।
सा तद्वाक्यं समाकर्ण्य समुद्घाट्यादरं जवात् ॥

३०. किं तवागमनं कार्यं तद्ब्रूहीत्यब्रवीत्तदा ।
तदङ्गीकृत्य वचनं रङ्गेशस्तामभाषत ॥

३१. संप्रेषितमिदं तेन स्वर्णपात्रं तवान्तिकम् ।
देवदेवि! गृहाणेदं इति तस्यै ददौ हरिः ॥

३२. सा गृहीत्वा तु संतुष्टा स्वर्णपात्रं महत्तदा ।
विप्रनारायणं शीघ्रमानयेत्याह सादरम् ॥

३३. तच्छ्रुत्वा भगवान् शीघ्रं विप्रनारायणान्तिकम् ।
गत्वा तमब्रवीद्देवो वेदान्तिन् भक्तवत्सलः ॥

३४. भवन्तमन्तः सुप्रीता समागच्छेति सादरम् ।
देवदेव्यब्रवीद्वि प्रनारायणाधुना ॥

---

தையைக் கேட்பாய்" என்று கூறினன். அவள் அவ்வார்த்தையைக் கேட்டு, கதவை விரைவில் திறந்து "நீ எதற்காக வந்தாய்? அதைக்கூறு" என அப்போதே உரைத்தாள். அந்த வார்த்தையைக்கேட்டு, திருவரங்கன் "தே₃வதே₃வி! இந்தப் பொற்பாத்திரம் விப்ரநாராயணரால் உனக்கு அனுப்பப்பட்டுள்ளது; இதைப் பெற்றுக்கொள்வாய்" என்று கூறிக்கொடுத்தான். அவள் அந்தப்பெரிய பொற்பாத்திரத்தைப் பெற்றுக்கொண்டு உகந்து "விப்ரநாராயணரை விரைவில் அழைத்துவா" என்று அன்போடு சொன்னாள். ப₄க்தவத்ஸலனை பகவான் அதைக்கேட்டு விப்ரநாராயணரருகில் சென்று, "விப்ரநாராயணரே! தே₃வதே₃வியானவள் மிக உகப்புடன் உம்மை இப்போதே உள்ளே வரச்சொல்லி அன்போடு அழைக்கிருள்" என்று கூறினன்.

३५. श्रुत्वा कर्णामृतं वाक्यं संप्रहृष्टस्तदाऽनघ ।
देवदेवीगृहं प्राप्य विप्रनारायणस्ततः ॥

३६. रममाणस्तया सार्धं जातसौहार्दया परम् ।
क्रीडापरवशस्सम्यगतिष्ठत्स यथासुखम् ॥

३७. रङ्गेशश्च समासाद्य तत्स्वधामाब्धिकन्यया ।
शयानः शेषपर्यङ्के सुखं सुष्वाप निश्चलः ॥

३८. तस्यां रात्र्यां व्यतीतायां श्रीरङ्गेशार्चकास्तदा ।
तस्य पात्रस्य राहित्यात्स्थितास्तत्राधिकारिणे ॥

३९. सम्यगावेदयाश्चक्रुस्तद्वृत्तान्तं सुविस्मिताः ।
स निशम्याशु तद्वाक्यं आचख्यौ चोलभूपतेः ॥

---

## விப்ரநாராயணரும் தேவதேவியும் ஒன்று சேருதல்

35-36. குற்றமற்ற வேத₃ாந்தியே! காதுக்கு அமுதம் போன்ற அந்த வாக்கியத்தைக்கேட்டு உடனே தே₃வ தே₃வியின் வீட்டினுள் நுழைந்து, இவரிடம் அன்பு காட்டிய அவளோடு இன்புற்றவராய், பலவித₄மான காதல் விளையாட்டுக்களில் ஈடுபட்டு இனிது வாழ்ந்து வந்தார் விப்ரநாராயணர்.

## களவு வெளிப்படுதல்

37-40. திருவரங்கேசனும் அலைமகளான பெரிய பிராட்டியாரோடு தன் கோவிலுக்குச் சென்று ஆதி₃ஶேஷ ஶயநத்தில் அசையாதவனுய்ப் படுத்துக்கொண்டு இனிது உறங்கினன். அன்றிரவு கழிந்தபின் திருவரங்கனின் அர்ச்சகர்கள் அந்தப்பொற்பாத்திரம் காணுமலிருப்பதைப் பார்த்து வியப்புற்றுநின்றவர்களாய், அச்செய்தியை

४०. स तेन कुपितो राजा रङ्गशपरिचारकान् ।
बबन्ध रज्जुभिस्सर्वानर्चकांश्चाप्यपीडयत् ॥

४१. देवदेव्यास्तदा काचिद्भुजिष्या निर्ययौ गृहात् ।
घटमादाय सहसा जलाहरणहेतुना ॥

४२. सा तद्व्यूहं समालोक्य तत्र चागत्य संभ्रमात् ।
रज्जुना बन्धितं वीक्ष्य स्वविटं विस्मिता तदा ॥

४३. किमेतदिति तत्रत्यं कञ्चिद्विप्रमपृच्छत ।
तस्यै शशंसुस्तत्सर्वं वृत्तं ते दण्डधारिणः ॥

४४. घटचेटी समाकर्ण्य तद्वृत्तान्तं तदाखिलम् ।
स्वविटं पीडितं दृष्ट्वा कश्यैव प्रताडितम् ॥

---

அங்கிருந்த அதி₄காரியிடம் நன்கு தெரிவித்தனர். அவ் வாக்கியத்தைக் கேட்டு அவன் உடனே அதைச்சோழ ராஜாவிடம் விண்ணப்பித்தான். அதனால் கோபங்கொண்ட அவ்வரசன் திருவரங்கனின் அர்ச்சகர்களையும் கைங்கர்ய பரர்களையும் கயிற்றினால் கட்டித் துன்புறுத்தினன்.

## பொற் பாத்திரம் கிடைத்தல்

41-49. குற்றமற்ற வேத₃ாந்தியே! அப்போது தேவதேவியினுடைய வேலைக்காரி ஒருத்தி ஜலம் கொண்டு வருவதற்காகக் குடத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டாள். அவள் அங்கு கூட்டமாயிருப்பதைப் பார்த்து பரபரப்புடன் அங்கு வந்து தனது ஆசைநாயகன் ஒருவன் கயிற்றால் கட்டப்பட்டிருப்பதைக் கண்டு வியப்புற்றாள். “இங்கு ஏன் கூடியிருக்கிறீர்கள்?” என்று அங்கிருந்த ஒரு அந்தணனைக் கேட்டாள். அங்கிருந்த தண்டனை புரியும் அதி₄காரிகள் நடந்த செய்தியனைத்தையும் அவளுக்குச் சொன்னார்கள்.

४५. वेदान्तिन् स्वविटप्रेम्णा मौढ्यान्मूढतमा च सा।
तत्स्वर्णपात्रवृत्तान्तं तस्य सर्वं न्यवेदयत् ॥
४६. विप्रनारायणो रात्रौ स्वर्णपात्रं महत्परम् ।
मद्देवदेव्यै प्रददौ विद्यते तद्गृहेऽधुना ॥
४७. तच्छ्रुत्वा सहसा दण्डधारकास्संभ्रमान्विताः ।
घटचेटीं समादाय विविशुस्तद्गृहं तदा ॥
४८. विशोध्य तद्गृहं सर्वं स्वर्णपात्रं प्रगृह्य तत् ।
विप्रनारायणं देवदेवीं चात्यन्तहर्षिताः ॥
४९. निधाय चोलभूपालसन्निधौ दण्डधारकाः ।
सम्यग्विज्ञापयामासुस्सर्वं वृत्तान्तमादरात् ॥

---

தண்ணீர்க்குடம் சுமக்கும் அந்த வேலைக்காரி அச்செய்தி யனைத்தையும் கேட்டு, தன்னுடைய ஆசைநாயகன் சாட்டையால் அடிக்கப்பட்டுத் துன்புறுவதைக் கண்டு ஏற்கனவே அறிவிலியாயிருக்கும் அவள் தன்னுடைய ஆசை நாயகனிடமுள்ள காமத்தால் மேலும் அறிவு மழுங்கப் பெற்று ''விப்ரநாராயணர் பெரியதாகவும் மிகச்சிறந்ததாக வுமிருந்த ஒரு பொற் பாத்திரத்தை என் தலைவியான தே3வதே3வியிடம் நேற்றிரவு கொடுத்திருக்கிறார். அது இப்பொழுது தே3வதே3வியின் வீட்டில் இருக்கிறது'' என்று அந்தப் பொற்பாத்திரத்தைப் பற்றிய உண்மை யனைத்தையும் அந்த அதிகாரியிடம் சொல்லிவிட்டாள் இதைக்கேட்டு அந்த அதி4காரிகள் மிகுந்த பரபரப்புடன் விரைவாக அந்த வேலைக்காரியை அழைத்துக்கொண்டு தே3வதே3வியின் வீட்டிற்குள் அப்பொழுதே நுழைந்தனர். அந்த அதி4காரிகள் அந்த வீடு முழுவதையும் சோதனை யிட்டு அந்தப் பொற்பாத்திரத்தை எடுத்து மிக உகந்தவ ர்களாய், விப்ரநாராயணரையும் தே3வதே3வியையும் சோழ ராஜாவிடம் அழைத்துச்சென்று செய்தியனைத்தையும் ஆர்வத்தோடு அவனிடம் விண்ணப்பித்தார்கள்.

५०. स नृपस्तद्वचः श्रुत्वा स्वर्णपात्रं विलोक्य च ।
कोपेन महता युक्तो देवदेवीमथाऽब्रवीत् ॥

५१. श्रीरङ्गेशस्य सुमहद्धेमपात्रप्रतिग्रहः ।
मूढे तवोचितं किंतु तस्माद्दण्ड्या त्वमद्य हि ॥

५२. तद्वाक्यश्रवणाद्भीता देवदेवी कृताञ्जलिः ।
एवं विज्ञापनं चक्रे चोलेन्द्रं प्रति सत्वरम् ॥

५३. यदिदं भगवत्पात्रमिति न ज्ञायते मया ।
शपे त्वत्पादपद्माभ्यां सत्यमेवोच्यते मया ॥

५४. रङ्गदासाभिधानेन स्वदूतेनैव केनचित् ।
पात्रं मदीयमित्येष विप्रनारायणः स्वयम् ॥

५५. सहसा निशि चोलेन्द्र ! प्राहिणोन्मद्गृहं प्रति ।
अज्ञानाद्यन्मया पात्रं गृहीतं चोलभूमिप ॥

---

## அரசன் தண்டனையளித்தல்

50-*62. அவ்வரசன் அவ்வார்த்தையைக் கேட்டு, பொற்பாத்திரத்தையும் பார்த்து, மிகுந்த கோபங்கொண்டவனாய் "அறிவிலியே! ஸ்ரீரங்க₃நாத₂னுடைய இந்தப் பெரிய பொன்வட்டிலை நீ பெறுவது தக்கதா? ஆகையினால் இன்று நீ தண்டிக்கத்தக்கவளாகிறாய்" என்று தே₃வதே₃வியிடம் கூறினான். அவ்வாக்கியத்தைக் கேட்டு பயந்த அந்த தே₃வதே₃வி கைகூப்பி நின்றவளாய்ச் சோழ ராஜாவைப் பார்த்து சடக்கெனப் பின்வருமாறு விண்ணப்பித்தாள்—"சோழ சக்ரவர்த்தியே! இது எம்பெருமானுடைய பாத்திரமென்பது எனக்குத் தெரியாது. இவ்விஷயத்தை தேவரீருடைய திருவடித் தாமரையின் மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன். 'ரங்க₃தா₃ஸன்' என்னும் பெயரையுடைய தமது ஆள் ஒருவரைக் கொண்டு தன்னுடையது என்று

५६. तन्निशम्य नृपं प्राह विप्रनारायणस्तदा ।
स्वर्णपात्रं न जानेऽहं मम भृत्यो न विद्यते ॥

५७ सा निशम्य वचस्तस्य विप्रनारायणस्य तत् ।
त्वयैव प्रेषितं पात्रमिदमित्यब्रवीद्दृढम् ॥

५८. न मयापहृतं पात्रं न चैव प्रेषितं तव ।
इत्येवं तु तदन्योन्यं विवादं वीक्ष्य भूमिपः ॥

५९. निर्भर्त्स्य तावुभौ शीघ्रं विवादं परिगृह्य तत् ।
अपराधं समादाय देवदेव्यास्तदाऽनघ ॥

६०. प्रदाय रङ्गराजाय स्वर्णपात्रं च तद्धनम् ।
यत्स्वर्णस्तेयदोषस्य विप्रनारायणस्य च ॥

---

சொல்லி இந்தப்பாத்திரத்தை விப்ரநாரயணரே எனக்காக இரவில் என் வீட்டிற்கு அனுப்பினுர். நான் அறியாமை யால் அந்தப்பாத்திரத்தைப் பெற்றுக்கொண்டேன்'' என்று. அவ்வார்த்தையைக் கேட்டு அப்போதே விப்ரநாராயணர் ''இந்தப் பொற்பாத்திரத்தை நானறியேன். எனக்கு வேலைக் காரனே கிடையாது'' என அரசனிடம் கூறினுர். தே₃வ தே₃வி விப்ரநாராயணரைப் பார்த்து, ''உம்மால்தானே இந்தப் பாத்திரம் அனுப்பப்பட்டது'' என்று உறுதியாகக் கூறினுள். விப்ரநாராயணரோ ''நான் பாத்திரத்தைத் திருடவுமில்லை; உனக்கு அனுப்பவுமில்லை'' என்று கூறினுர். இப்படி ஒருவர்க்கு ஒருவர் அவ்விருவரும் வாக்குவாதம் செய்து கொண்டிருப்பதைப் பார்த்து, சோழராஜா அவ்விரு வரையும் ப₄யமுறுத்தி, உடனேயே அந்த விவாத₃த்தை விசாரணைக்கு எடுத்துக்கொண்டு தே₃வதே₃விக்கு அப்பொ ழுதே அபராதத் தொகையை விதி₄த்து, அந்த அபராதத் தொகையையும் பொற்பாத்திரத்தையும் ரங்க₃ராஜனுக்கு ஸமர்ப்பித்து விட்டு, விப்ரநாராயணர், ''ஸ்வர்ணஸ்தேயம்''

६१. कर्तुकामो युक्तदण्डं विचार्य विबुधैस्सह ।
विप्रनारायणं सम्यक् स तं कारागृहे तदा ॥

६२. निक्षिप्य स्वगृहं शीघ्रं अविशच्चोलभूपतिः ॥
रङ्गेश्वरी तदा देवी देवं रङ्गेश्वरं प्रति ॥

६३. अवोचत्पुत्रवात्सल्यात् भर्तारं भगवत्प्रिया ।
इतः परं मा कुरुष्व स्वलीलाविषयं हरे ॥

६४. विप्रनारायणं शीघ्रं भवतोऽभिमुखं कुरु ।
तदङ्गीकृत्य वचनं देव्याः श्रीरङ्गभूपतिः ॥

---

(பொன்னைத் திருடுதல்) என்ற மஹாபாதகத்தைச் செய்த தற்காக அவருக்குத் தக்க த₃ண்ட₃னையை விதி₄க்க எண்ணியவனாய், நீதியறிந்த அறிவாளிகளோடு தக்க த₃ண்ட₃னையை ஆராய்ந்து அப்பொழுதே விப்ரநாராயணரைச் சிறையிலடைத்துத் தன் அரண்மனைக்குச் சென்றான்.

## பெரிய பிராட்டியாரின் வேண்டுகோள்

62*-*64 அப்போது தேவனாய், கணவனான ஸ்ரீரங்க₃ நாத₂னைப் பார்த்து அவனுக்கு இனியவளான ஸ்ரீரங்க₃ நாயகியாரான தேவி தன் பிள்ளையாகிற விப்ரநாராயணரிடத்தில் குற்றத்தையும் குணமாகக் கொள்ளும் வாத்ஸல்யத்தாலே "எம்பெருமானே! இனியாவது இந்த விப்ரநாராயணரை உம்முடைய விளையாட்டுக்கு இலக்காக்காமல் விரைவிலேயே உம்மிடம் ஈடுபட்டவராகச் செய்யும்" என்று பிரார்த்தித்தாள்.

## அரங்கனின் நியமனம்

64*-*70 பெரியபிராட்டியாரின் அந்த வார்த்தையை ஏற்றுக்கொண்டு, கருணைக்கடலாய், ஜ்ஞானம் முதலான கு₃ணங்களால் நிறைந்தவனான ஸ்ரீரங்கராஜன் சோழ அரசனின் கனவில் தோன்றியவனாய், "அரசர்தலைவனே! விப்ரநாராயணருடைய ப்ராரப்₃த₄கர்மத்

६५. स्वप्ने प्रसन्नो भगवान् चोलेन्द्रस्य दयानिधिः ।
प्रारब्धकर्माहरणं विप्रनारायणस्य वै ॥

६६. ममाद्य कर्तुकामेन देवदेव्यै नृपोत्तम ।
दत्तं हिरण्मयं पात्रं नात्र कार्या विचारणा ॥

६७. एवंरूपेण स श्रीमान् मयाऽयं दण्डितो द्विजः ।
अदण्ड्यो भवता राजन् निर्दोषोऽयं महामनाः ॥

६८. मत्पुत्राय मया दत्तं मद्धनं तत्र को भवान् ।
यत्तद्वेश्याधनं पात्रं तच्च मे मास्तु भूपते ॥

६९. तस्यैव दत्त्वा तत्पात्रं विप्रनारायणं मुनिम् ।
विमुच्य पूर्ववत्पुष्पदामकैङ्कर्यकारिणम् ॥

७०. विधेहि शीघ्रं मद्भक्तं चोलराज मदाज्ञया ।
तस्यां रात्र्यां व्यतीतायां चोलेन्द्रस्सहसोत्थितः ॥

---

தைப் போக்குவதற்காக இன்று நானே தே₃வதே₃வியிடம் பொற்பாத்திரத்தைக் கொடுத்தேன். இதில் நீ ஆராய வேண்டியதில்லை; இப்படிக்கர்மத்தை அனுப₄விக்கச்செய்து அடியவரான இந்த அந்தணர் என்னால் தண்டிக்கப்பட்டு விட்டார். அரசனே! குற்றமற்றவராய், நன்னெஞ்சுடைய வராகிவிட்ட இவர் உன்னால் தண்டிக்கத்தக்கவரல்லர். என் பிள்ளைக்கு நான்என்னுடைய செல்வமான பாத்திரத்தைக் கொடுத்ததை விசாரிக்க நீ யார்? அரசனே! (நானே விரும்பிக்கொடுத்ததால்) வேசியின் தனமாகிவிட்ட அந்தப் பாத்திரம் எனக்குத்தேவையில்லை. சோழஅரசனே! எனது ஆணையால் தே₃வதே₃விக்கே அந்தப்பாத்திரத்தைக் கொடுத்துவிட்டு, என்னையே நினைத்துக்கொண்டிருக்கும் என் பு₄க்தரான விப்ரநாராயணரை விரைவிலேயே சிறை யிலிருந்து விடுவித்து, முன்புபோலே எனக்குப்பூமாலை தொடுத்துக் கைங்கர்யம் செய்பவராக ஆக்குவாயாக'' என்று நியமித்தான்.

७१. विस्मितः स्वप्नवृत्तान्तं मन्त्रिभ्यः स न्यवेदयत् ।
आनयित्वा ततः शीघ्रं विप्रनारायणं तदा ॥

७२. प्रणम्य सम्यक् सत्कृत्य स नृपस्तमपूजयत्।
भूयो भूयोऽथ संस्मृत्य हीनकृत्यं तदद्भुतम् ॥

७३. अनुतापं गतस्सम्यग्विप्रनारायणस्तदा ।
तद्दोषपरिहारार्थं प्रायश्चित्तमथाऽकरोत् ॥

७४. एतत्समस्तपापानां प्रायश्चित्तं मनीषिभिः ।
निर्णीतं भगवद्भक्तपादोदकनिषेवणम् ॥

७५. एवमुक्तप्रकारेण वैष्णवाङ्घ्रिजलं शुभम् ।
अपिबद्भक्तिभावेन विप्रनारायणोऽनघ ॥

---

## விப்ரநாராயணரின் பிராயச்சித்தம்

70*-75. குற்றமற்ற வேத₃ாந்தியே! அவ்விரவு கழிந்த வுடன் சோழ அரசன் சடக்கென எழுந்திருந்தவனாய், வியப் புற்றவனாய், தன் கனவுச்செய்தியை மந்திரிகளிடம் தெரிவித் தான். அப்போதே விப்ரநாராயணரை விரைவில் அழைத்து வரச்செய்து அவரை வணங்கி அவ்வரசன் அவருக்கு நன்கு உபசாரங்கள் செய்து ஆராதித்தான். அப்போது விப்ரநாராய ணரும் தாம் செய்த இழிசெயலை மறுபடியும் மறுபடியும் நினைத்து, அதற்குப்பிறகு நடந்த அற்புதங்களையும் நினைத்து, நன்கு அனுதாபம் அடைந்தவராய், தமது குற்றத்துக்குப் பரிஹாரமாகப் பிராயச்சித்தத்தையும் செய்தார். ''எம்பெருமான் அடியார்களுடைய ஸ்ரீபாத₃ தீர்த்த₂த்தைப் பருகுவதே பெரியார்களால் எல்லாப்பாபங் களுக்கும் பிராயச்சித்தமாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது'' என்று சாஸ்திரங்களில் சொன்னமுறையில் விப்ரநாரா யணர் பரமமங்க₃ளமான ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாத₃தீர்த் த₂த்தை ப₄க்தியுடன் பருகினார்.

௭௬. वेदान्तिन् भगवद्भक्तपादोदकसमं भुवि ।
न विद्यते पुण्यतमं तीर्थं पापहरं महत् ॥
௭௭ वाञ्छन्ति सकला नद्यः कलुषस्नानकल्मषाः ।
आत्मपापविशुद्ध्यर्थं वैष्णवाङ्घ्र्यवगाहनम् ॥
௭௮. तन्महापापसंघस्य प्रायश्चित्तादिरूपकम् ।
वैष्णवाङ्घ्रिजलं पीत्वा पूतात्मा प्रत्यनन्दत ॥
௭௯. ततो ग्रामकुलादिभ्यो यन्नामापादितं हि तत् ।
अनर्थकारि तन्मेने विप्रनारायणो महान् ॥
௮௦. यस्य मूर्ध्नि स्थितं यावद्वैष्णवाङ्घ्रिरजः शुभम् ।
गङ्गादिसर्वतीर्थानि तावत्तिष्ठन्त्यसंशयम् ॥

---

## ப4க3வத்3 ப4க்த பாத3ப் பெருமை

76-*83 குற்றமற்ற வேத3ாந்தியே! ப4க3வத்3 ப4க்த ஸ்ரீபாத3 தீர்த்த2த்துக்கு ஸமமாக மிகப்பெரிய புண்யமாய், பாபத்தை அழிக்கக்கூடிய தீர்த்த2ம் இவ்வுலகில் கிடையாது. பாபிகள் நீராடுவதால் பாபம் நிறையப் பெற்ற எல்லா நதி3களும் தங்களுடைய பாபம் நீங்குவதற்காக வைஷ்ணவர்களுடைய திருவடிகளோடு தங்களுக்குத் தொடர்பு ஏற்பட வேண்டும் என்று விரும்புகின்றன. ஆகையாலே பெரிய பாபக்கூட்டங்களுக்கும் பிராயச்சித்தமாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாத3தீர்த்த2த்தைப் பருகிப் பரிஶுத்3தி4 பெற்றவராய் இன்புற்ருர் விப்ரநாராயணர். அதற்குப்பின் க்3ராம வாஸம், அந்தணர் குலத்தொடர்பு முதலானவற்ருல் ஏற்பட்ட 'விப்ரநாராயணர்' என்னும் பெயரை, தீங்கு விளைப்பதாக அந்தப் பெரியவர் கருதினுர். எவனுடைய தலையில் ஸ்ரீவைஷ்ணவர்களின் மங்க3ள

८१. निरपेक्षं मुनिं शान्तं निर्वैरं समदर्शिनम् ।
अनुव्रजाम्यहं नित्यं पूयेयेत्यङ्घ्रिरेणुभिः ॥

८२. इत्येवं भगवद्गीतश्लोकं ज्ञात्वा विचक्षणः ।
अतोऽहं भगवद्भक्तपादरेण्वभिधानकः ॥

८३. भवेयमिति वेदान्तिस्तदाऽमन्यत बुद्धिमान् ।
अतोऽर्चकमुखेनाह रङ्गेशो भक्तवत्सलः ॥

८४. विप्रनारायणं सम्यक् समाहूय तदाऽनघ ।
वत्साद्य न्यूनता काचिन्न कदाचित्तवाऽनघ ॥

८५, मत्कैङ्कर्यरतो भूत्वा त्वं वसाऽत्रैव पूर्ववत् ।
तवाहं संप्रदास्यामि सर्वाभीष्टानि सांप्रतम् ॥

---

மான பாத3தூளி எவ்வளவு நேரம் இருக்கிறதோ அவ்வளவு நேரம் கங்கை3 முதலான எல்லாத் தீர்த்த2ங்களும் அங்கு வாழ்கின்றன என்பதில் ஐயமில்லை. "உலகச் செல்வங்களை எதிர்பாராதவராய், என்னையே மனனம் செய்பவராய், புலனடக்கம் உள்ளவராய், எந்த ஜீவராசிகளிடமும் வைரமில்லாதவராய், அனைவரையும் ஒக்கக்காண்பவரான ப4க்தரை, அவருடைய அடிப்பொடியாலே பரிஶுத்3தி4 பெறுவதற்காக நான் தினந்தோறும் பின்தொடர்கிறேன்" என்று எம்பெருமான் அருளிச்செய்த ஶ்லோகத்தை உணர்ந்தமையால், ஸமர்த்த2ராய்; அறிவாளியான அவர் 'தொண்டரடிப் பொடி' என்னும் திருநாமத்தைத் தமக்குப் பெயராகக் கொள்ள உறுதிகொண்டார்.

## அரங்கன் வரமளித்தல்

83*-*91 குற்றமற்ற வேத3ாந்தியே! அதற்குப்பின் ப4க்தவத்ஸலனான ரங்க3நாத2ன் அர்ச்சகர் மூலமாக விப்ரநாராயணரை அப்போதே குறிப்பிட்டு அழைத்து "குற்றமற்ற குழந்தாய்! உனக்கு எக்குறையும் எப்போது

८६. वत्स वाञ्छय निश्शङ्कं यद्यदिष्टतमं वरम् ।
प्रतिगृह्य प्रहृष्टात्मा रङ्गेशस्य वचः शुभम् ॥

८७. विप्रनारायणो धीमान् चक्रे विज्ञापनं तदा ।
भवत्सन्दर्शनादेव सर्वाभीष्टानि मेऽभवन् ॥

८८. तथापि मे वरं देहि त्वाद्दासस्याधुना हरे ।
भक्ताङ्घ्रिरेणुनामास्य यथा स्यात्प्रथितं मम ॥

८९. तथैव मे वरं देहि रङ्गेश करुणानिधे ।
सन्तुष्टो रङ्गराट् तेन विप्रनारायणस्य वै ॥

९०. भक्ताङ्घ्रिरेणुनामैव प्रथितं प्रददौ भुवि ।
परभक्तिं परं ज्ञानं वैराग्यं परमं महत् ॥

---

மில்லை. முன்போல் இங்கேயே எனக்குக் கைங்கர்யம் செய்து வாழ்வாய். இப்போது நீ விரும்பியதெல்லாம் உனக்கு வரமாக அளிக்கிறேன். உனக்கு வேண்டிய வரங்களையெல்லாம் கூசாமல் கேட்பாயாக'' என்று கூறினன். அந்த ரங்க$_3$நாத$_2$னுடைய மங்க$_3$ளமான வார்த்தையை ஏற்றுக்கொண்டு உகந்த அறிவாளியான விப்ரநாராயணர் அப்போதே அப்பெருமானிடம் ''திருவரங்கப் பெருமானே! தேவரீரைக் கண்டதாலேயே எனக்கு எல்லா விருப்பங்களும் நிறைவேறின, கருணைக் கடலே! இவ்வண்ணமிருந்தபோதிலும், உம்மடியவனை எனக்கு 'தொண்டரடிப்பொடி' என்னும் பெயரே உலக ப்ரஸித்$_3$தி$_4$ பெற்றதாக ஆகவேண்டும் என்று வரம் அளிப்பாய்'' என்று விண்ணப்பித்தார். திருவரங்க$_3$ நாதன் அவ்வார்த்தையைக் கேட்டு மிக உகந்து அந்த விப்ரநாராயணர்க்கு 'தொண்டரடிப்பொடி' என்னும் பெயரே உலகில் ப்ரஸித்$_3$தி$_4$ பெற்றதாம்படி வரமளித்து, பரப$_4$க்தியையும் பரஜ்ஞானத்தையும், மிகப் பெரிய விஷய வைராக்$_3$யத்தையும் அருளினன்.

९१. भक्ताङ्घ्रिरेणवे सर्वं यत्तद्रङ्गेश्वरो ददौ ।
तेन सञ्जातसर्वार्थज्ञानवान् भगवत्परः ॥

९२. भक्ताङ्घ्रिरेणुस्तत्रैव तत्कैङ्कर्यरतस्सदा ।
रङ्गेशसन्निधौ श्रीमान् अतिष्ठत्सुमहायशाः ॥

९३. तद्ज्ञानभक्तिवैराग्यं यत्तस्यानुत्तमं महत् ।
* भक्तांघ्रिरजसो वीक्ष्य देवदेवी महाद्भुतम् ॥

९४. संप्रहृष्टा महाश्चर्यनिरता भीतिसंयुता ।
तादृश्यहं भविष्यामीत्येवं निश्चित्य वै ध्रुवम् ॥

९५. सर्वस्वं रङ्गनाथाय महाविश्वासपूर्वकम् ।
समर्प्य साधुहृदया शुद्धसत्त्वगुणान्विता ॥

---

## தேவதேவி மோக்ஷமடைதல்

91*-98 குற்றமற்ற வேத₃ாந்தியே! இப்படி மயர்வற மதிநலமருளப் பெற்றதனல் எல்லா அர்த்த₂ங்களையும் அறிந்தவராய், எம்பெருமானிடமே ஈடுபட்டவராய், எப்போதும் திருவரங்கன் கைங்கர்யத்தையே செய்து கொண்டு ஸ்ரீரங்கத்தில் அவன் ஸன்னிதி₄யிலேயே வாழும் திருவுடையவராய், பெரும் புகழாளராய் எழுந் தருளியிருந்தார் தொண்டரடிப்பொடி. அவருடைய ஜ்ஞான ப₄க்திவைராக்₃யங்கள் ஒப்பற்றவையாய், மிகப்பெரியவையா யிருந்தன. * தொண்டரடிப்பொடிகளின் பெரிய அற்புதமான வாழ்க்கையைக் கண்ட தே₃வதே₃வி மிக உகந்தவளாய், பெரிய ஆஶ்சர்யம் கொண்டவளாய், (அவரிடம் தான் நடந்து கொண்டதை நினைத்து) ப₁யமுடையவளாய், அவரைப்போலே தானும் ப₄க்தியுடையவளாகவேண்டு மென்று உறுதிபூண்டு, தன்னுடைய சொத்தனைத்தையும் ஸ்ரீரங்க₃நாத₂னுக்கு மஹாவிஶ்வாஸத்துடன் ஸமர்ப்பித்து

---

***93* முதல் 101 ஶ்லோகம் முடிய, சில பிரதிகளில் இல்லை; அவை இருப்பதே உசிதம்.**

९६. संमार्जनादिकैङ्कर्यनिरता मानवर्जिता ।
रंगेशसन्निधौ नित्यं जितकामा बभूव सा ॥
९७. जितदुस्संगतिः स्निग्धा सत्संगतिपरायणा ।
रंगेशकैङ्कर्यरता तीर्णसंसारसागरा ।
९८. सा देवदेवी तत्रैव कस्मिंश्चित्कालपर्यये ।
जगाम वैष्णवं लोकं सत्संगमविशेषतः ॥
९९ भक्तांघ्रिरेणुः सर्वार्थज्ञानमासाद्य निश्चितम् ।
रंगेशानुग्रहादेव कृतकृत्यो महानभूत् ॥
१००. माता पिता सखा भ्राता पुत्रो बन्धुर्गुरुर्धनम् ।
विद्या संपच्च भोगाश्च सर्वं रंगेश एव मे ॥

---

நன்னெஞ்சையுடையவளாய், ஶுத்₃த₄ஸத்வகு₃ணமுடைய வளாய், அஹங்காரத்தைக் கைவிட்டுத் திருவரங்கன் ஸன்னிதி₄யில் திருவலகிடுதல் முதலான கைங்கர்யங்களைச் செய்பவளாய், ப்ராக்ருதகாமத்தை ஜயித்தவளாய், தன் உறவினர்களின் தீய ஸஹவாஸத்தை விட்டவளாய், திருவரங்கனிடம் அன்பு பூண்டவளாய், அவன் அடியார் களின் தொடர்பையே பரமப்ராப்ய ப்ராபகங்களாகக் கொண்டவளாக ஆனாள். திருவரங்கனின் கைங்கர்யத் திலேயே ஈடுபட்டுக் கொண்டு அந்த தே₃வதே₃வி ப₄ாக₃வத ஸம்ப₃ந்த₄ப் பெருமையினால் ஸ்ரீரங்க₃த்திலேயே சிறிது காலத்தில் ஸம்ஸாரக் கடலைத் தாண்டி வைஷ்ணவ லோகத்தை அடையப்பெற்றாள்.

## தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்கள் அருளல்

99-109 தொண்டரடிப் பொடிகள் அரங்கனுடைய அருளாலே எல்லா அர்த்த₂ங்களையும் உறுதியாக அறிந்தவராய், செய்யவேண்டியதனைத்தையும் செய்த

१०१. इति मत्वानिशं तस्य कैङ्कर्यनिरतः सदा ।
श्रीपुष्पतुलसीमाला विधायातिमनोहराः ॥ *

१०२. भक्ताङ्घ्रिरेणुस्तद्भक्त्या तास्समर्प्य च रङ्गिणः ।
दिव्यप्रबन्धं विदधे स श्रीमालाभिधं महत् ॥

१०३. श्रोता रङ्गेश्वरस्तत्र स्वयं वक्ताऽभवत्तदा ।
शतानन्दोऽभवच्छ्रोता वक्ताऽभूच्छौनको यथा ॥

१०४. मन्त्रत्रयार्थं तद्ग्रन्थे सम्यगापाद्य विश्रुतम् ।
विशदं बालबोधार्थं लोकोज्जीवनहेतुना ॥

१०५. तेन मालाभिधेनैवं जगत्सर्वमपालयत् ।
भक्ताङ्घ्रिरेणुर्वेदान्तिन् रङ्गेशविषयं महत् ॥

---

பெரியவரானார். "தாய், தந்தை, நண்பன், ஸஹோதரன், உறவினன், ஆசார்யன், பணம், கல்வி, செல்வம், போ₄க₃ங்கள் ஆகிய அனைத்தும் எனக்குத் திருவரங்கநாத₂னே" என்று நினைத்து, பூக்களும் துளசியும் தொடுக்கப் பெற்ற மிக அழகிய மாலைகளைக் கட்டி,* தொண்டரடிப்பொடிகள் அவற்றைத் திருவரங்கனுக்கு ப₄க்தியோடு ஸமர்ப்பித்து, அவனுக்கு எப்போதும் கைங்கர்யம் செய்வதில் ஈடுபட்டிருந்தார். 'திருமாலை' என்னும் பெரிய தி₃வ்யப்ரப₃ந்த₄த்தை அவர் அருளிச் செய்தார். ஸ்ரீவிஷ்ணு த₄ர்மத்துக்கு சதாநந்தர் கேட்பவராகவும், ஶௌனகர் சொல்லுபவராகவும் எப்படி ஆனார்களோ, அப்படியே ஸ்ரீரங்க₃ நாத₂னே கேட்பவனாகவும், ஆழ்வார் தாமே சொல்லுபவராகவும் அமைந்தது அத்திருமாலை. ஶாஸ்த்ரங்களில் புகழ்பெற்ற திருமந்த்ரம், த்₃வயம், சரமஶ்லோகம் என்னும் மூன்று ரஹஸ்யங்களின் பொருளையும் அந்த தி₃வ்ய ப்ரப₃ந்த₄த்தில் நன்கு தெளிவாக உலகத்தை உய்விக்கும்

१०६. प्रबन्धद्वितयं चक्रे सर्वलोकामृतप्रदम् ।
पञ्चपञ्चाशदित्यत्र गाथा ग्रन्थद्वयेऽनघ ॥

१०७. प्राबोधकीस्तवं तत्र नाम मालाभिधं महत् ।
प्राबोधकीस्तवे तत्र दश गाथाः प्रकीर्तिताः ॥

१०८. चत्वारिंशत्तथा पञ्च गाथा मालाभिधे कृताः ।
एक एवात्र रङ्गेशो भगवान् तेन संस्तुतः ॥

१०९. ततो रङ्गेश्वरः श्रीमान् दशाभिर्गीयते महान् ।
ततो मुख्यतमं स्थानं श्रीरङ्गमिति विश्रुतम् ॥

---

பொருட்டுச் சிறுவர்களும் புரிந்து கொள்ளும்படி விளக்கி அந்தத் திருமாலையாலேயே உலகனைத்தையும் ரக்ஷித்தார். குற்றமற்ற வேத₃ாந்தியே! தொண்டரடிப்பொடிகள் திருவரங்கனைப் பற்றியவையாய், உலகனைத்துக்கும் அமுதம் போன்ற அர்த்த₂ங்களை அளிப்பவையான இரண்டு தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களை அருளிச் செய்தார். அவ்விரண்டிலும் ஐம்பத்தைந்து பாடல்கள் உள்ளன. திருப்பள்ளியெழுச்சியும், பெரியதான திருமாலையுமே அவ்விரண்டுமாகும். திருப்பள்ளியெழுச்சியில் பத்துப் பாடல்கள் பாடப்பெற்றன. அவ்வண்ணமே திருமாலையில் நாற்பத்தைந்து பாடல்கள் பாடப்பெற்றன. அவ்வாழ்வாரால் திருவரங்க₃நாத₂னாகிற ஒரு (அர்ச்சாவதார) எம்பெருமானே இருநூல்களிலும் பாடப்பெற்றான். அதனாலேயே ஸ்ரீய:பதியாய், திருவரங்க₃ராஜனாகிற பெரியபெருமாள் ஆழ்வார்கள் பதின்மர் பாடும் பெருமாளானார். ஆகையால் மற்ற எல்லா தி₃வ்யதே₃ஶங்களைக் காட்டிலும் ஸ்ரீரங்க₃மே மிக மிக முக்கியமானதாகும்.

११०. स तच्छ्रुत्वाऽथ वेदान्ती भट्टार्यमिदमब्रवीत् ।
शेषाचलादिस्थानानि स्तुतानि कतिभिर्हरेः ॥
१११. विशदं ब्रूहि मे विद्वन् शिष्याय करुणार्णव ।
तदङ्गीकृत्य वचनं तस्मै प्रोवाच सद्गुरुः ॥
११२. हरेरष्टोत्तरशतं स्थानानि किल भूतले ।
दिव्यानि दिव्ययोगीन्द्रस्तुतानि प्रथितान्यलम् ॥
११३. अनेकसंस्तुता दिव्यदेशाः षड्विंशतिः पुरा ।
एकैकसंस्तुतास्तत्र ह्यशीतिःपरिकीर्तिताः ॥

---

## தி₃வ்யதே₃ஶங்கள்—சுருக்கமான விளக்கம்

110-122 அந்த வேதா₃ந்தி நஞ்ஜீயர் இதைக்கேட்டு ப₄ட்டரைப் பார்த்து "அறிவாளியாய், கருணைக்கடலான ஆசார்யரே! திருவேங்கடம் முதலான எம்பெருமானுடைய தி₃வ்யதே₃ஶங்கள் எவ்வளவு ஆழ்வார்களால் பாடப் பெற்றன என்பதை ஶிஷ்யனை எனக்குத் தெளிவாகக் கூறுவீராக" என்று கேட்டார். அதை ஏற்றுக்கொண்டு அந்த மஹாசார்யர் பின்வருமாறு கூறினார்—குற்றமற்ற வேதா₃ந்தியே! உலகில் எம்பெருமானுக்கு தி₃வ்யஸூரி களான ஆழ்வார்களால் துதிக்கப்பெற்ற நூற்றெட்டு தி₃வ்யதே₃ஶங்கள் புகழ் பெற்றவையாயுள்ளனவன்றோ. அவற்றில் பல ஆழ்வார்களால் துதிக்கப்பெற்ற பழமையான தி₃வ்யதே₃ஶங்கள் இருபத்தாறும். ஒவ்வொரு ஆழ்வாரால் துதிக்கப்பெற்ற தி₃வ்யதே₃ஶங்கள் எண்ப தாகும். (பரமபத₃மும் திருப்பாற்கடலும் இவ்வளவு ஆழ்வார்களால் பாடப்பெற்றவை என்று அறுதியிட முடியாதவையாகையாலே விடப்பட்டனபோலும்)

११४. दशभिस्तत्र योगीन्द्रैः एकमेव स्थलं स्तुतम् ।
नवभिर्दिव्ययोगीन्द्रैरेकमेव स्थलं स्तुतम् ॥

११५. चतुर्भिस्संस्तुतास्तत्र दिव्यदेशास्त्रयोऽनघ ।
त्रिभिः स्तुतानि पञ्चैव स्थानानि परमात्मनः ॥

११६. वेदान्तिन् दिव्यदेशाश्च द्वाभ्यां षोडश संस्तुताः ।
दशभिः संस्तुतं रङ्गं नवभिः वेङ्कटाचलः ॥

११७. चतुर्भिर्गोपनगरं तथैव वृषभाचलः ।
श्रीकृष्णनगरं चैव वेदान्तिन् समभिष्टुतम् ॥

११८. त्रिभिः श्रीरामनगरं कुम्भकोणस्थलं महत् ।
कुरङ्गनगरं चैव कैरविण्यास्तटं महत् ॥

११९. काञ्च्यां वेगस्थलं चैव संस्तुतं दिव्यसूरिभिः ।
द्वाभ्यां श्वेताचलो व्योमनगरं च कपिस्थलम् ॥

---

பத்து ஆழ்வார்களாலும் பாடப்பெற்ற தி₃வ்யதே₃ஶம் ஒன்றேயாகும். ஒன்பதின்மரால் பாடப்பெற்ற தி₃வ்யதே₃ஶமும் ஒன்றேயாகும். நாலு ஆழ்வார்களால் பாடப்பெற்ற தி₃வ்யதே₃ஶங்கள் மூன்ருகும். மூன்று ஆழ்வார்களால் பாடப்பெற்ற தி₃வ்யதே₃ஶங்கள் ஐந்தாகும். இரு ஆழ்வார்களால் பாடப்பெற்ற தி₃வ்யதே₃ஶங்கள் பதினருகும். பதின்மரால் பாடப்பெற்றது ஶ்ரீரங்கம். ஒன்பதின்மரால் பாடப்பெற்றது திருவேங்கடமலை. நால்வரால் பாடப் பெற்றவை திருக்கோவலூர், திருமாலிருஞ்சோலை, திருக் கண்ணபுரம் என்னும் மூன்று தி₃வ்யதே₃ஶங்களாகும். மூவரால் பாடப்பெற்ற தி₃வ்யதே₃ஶங்கள் திருப்பேர்நகர் (ஶ்ரீராமநகரம்), திருக்குடந்தை, திருக்குறுங்குடி, திருவல்லிக்கேணி, கச்சிவெஃகா என்னும் ஐந்தாகும். இருவ

१२०. गोष्ठीपुरं चित्रकूटं धन्विनव्यपुरं तथा ।
मोहूरं दक्षिणपुरं श्रीमन्मूलिकलाभिधम् ॥

१२१. स्थानं केरलदेशेषु चावेद्येतद्द्वयं मुने ।
यत्रोरगगृहं गीतावेश्म काञ्च्यां तु तद्द्वयम् ॥

१२२. वीक्षारण्ये किंगृहाख्यनगरं घटिकाचलम् ।
नन्दव्रजश्च मधुरा साकेतं समभिष्टुतम् ॥

१२३. अस्मद्यतिः संप्रहृष्टो गुरोर्वचनमुत्तमम् ।
निशम्य प्राञ्जलिर्भूयो भट्टार्यमिदमब्रवीत् ॥

१२४ दशानां दिव्यसूरीणां दिव्यदेशा हरेरमी ।
कैस्त्रिभिः कैश्चतुर्भिश्च काभ्यां द्वाभ்யामभिष्टुताः ॥

---

ரால் பாடப்பெற்ற தி₃வ்யதே₃ஶங்கள் (1) திருவெள்ளறை (2) திருவிண்ணகர் (3) கபிஸ்தலம் (4) திருக்கோட்டியூர் (5) திருச்சித்ரகூடம், (6) ஸ்ரீவில்லிபுத்தூர் (7) திருமோகூர் (8) திருவல்லவாழ் (9) திருமூழிக்களம் (இவ்விரண்டும் கேரளதேஶத்தில் உள்ளவை என்று அறியத்தக்கவை) (10) ஊரகம் (11) பாடகம் (இவ்விரண்டும் காஞ்சியிலுள்ளவை) (12) வீக்ஷாரண்யத்தில் உள்ள திருவெவ்வுளூர் (13) திருக்கடிகை (14) திருவாய்ப்பாடி (15) வடமதுரை (16) திருவயோத்தி என்னும் பதினாறுகும்.

## நஞ்சீயரின் கேள்வி

123—125. நஞ்சீயர் ஆசார்யருடைய மேலான வார்த்தையைக்கேட்டு உகந்தவராய் பட்டரைக்குறித்துக் கைகூப்பிநின்று "எல்லாமறிந்தவரே! அடியாரிடம் அன்புடைய பேரறிவாளரே! எம்பெருமானுடைய இந்த தி₃வ்யதே₃ஶங்கள் பத்து ஆழ்வார்களுள் எந்தெந்த மூவராலும் எந்தெந்த நால்வராலும் எந்தெந்த இருவரா

१२५. विशदं ब्रूहि मे विद्वन् सर्वज्ञाश्रितवत्सल ।
अपृष्टं यन्मयाऽज्ञानात्तत्सर्वं च दयानिधे ॥

१२६. असग्यतेर्वचः सम्यगङ्गीकृत्य कृतादरः ।
आचचक्षेऽखिलं तस्मै यदिदं भट्टदेशिकः ॥

१२७. दिव्यदेशाश्चोलदेशे द्विचत्वारिंशदीरिताः ।
अष्टैव दिव्यदेशाश्च तत्रानेकैरभिष्टुताः ॥

१२८. दशभिर्दिव्ययोगीन्द्रैर्गोदादेव्या च संस्तुतः ।
अत्र श्रीरङ्गनगरे रङ्गेशो भगवानयम् ॥

१२९. भट्टेशकलिवैरिभ्यां श्वेताद्रौ पद्मलोचनः ।
अपूपरङ்गनाथाख्यः श्रीरामनगरे हरिः ॥

---

லும் மங்கள ாஶாஸனம் செய்யப்பெற்றுள்ளன என்பதை எனக்குத் தெளிவாகக் கூறுவீராக. கருணைக்கடலே! நான் அறிவின்மையால் கேட்காமல் விட்டதனைத்தையும் கூறுவீராக'' என்று கேட்டார்.

## * சோழநாட்டுத்திருப்பதிகள்

126—137. ஆர்வமுடைய ஆசார்யரான பட்டர் நஞ்சீயருடைய பிரார்த்தனையை நன்கு ஏற்றுக்கொண்டு அனைத்தையும் அவருக்குக் கூறினார். குற்றமற்ற வேதாந்தியே! சோழதேசத்தில் நாற்பத்திரண்டு திவ்யதேஶங்கள் சொல்லப்படுகின்றன. அவற்றில் எட்டு திருப்பதிகள் பல ஆழ்வார்களால் மங்களாஶாஸனம் செய்யப்பெற்றவை. இந்தத் திருவரங்கப் பெருநகரிலுள்ள ஶ்ரீரங்கராஜனாகிற இவ்வெம்பெருமான் பத்து ஆழ்வார்களாலும் ஆண்டாளாலும் பாடப்பெற்றவன். பட்டர்பிரானாலும் கலிகன்றியாலும் பாடப்பெற்றவர் திருவெள்ளறையிலுள்ள செந்தாமரைக்கண்ணர். 'ஶ்ரீராமநகரம்' என்னப்படும் திருப்

---

* தற்காலத்திலுள்ள திவ்யதேஶக்கணக்கிற்கு மாறுபட்டதாகப் பல விஷயங்கள் இவ்வத்தியாயத்தில் சொல்லப்பட்டுள்ளன.

१३०. भक्तिसारशठारिभ्यां परकालेन च स्तुतः ।
कपिस्थले गजार्तिघ्नः भगवान्कृष्णसंयुतः ॥
१३१. परकालेन वेदान्तिन् भक्तिसारेण संस्तुतः ।
कुम्भकोणे शार्ङ्गपाणिरपर्याप्तामृताभिधः ॥
१३२. भक्तिसारशठारिभ्यां संस्तुतः कलिवैरिणा ।
लवणाभावतातारव्यश्चाकाशनगरे हरिः ॥
१३३. शठजित्परकालाभ्यां संस्तुतो लोकविश्रुतः ।
शौरिराजः कृष्णपुरे वेदान्तिन् लोकविश्रुतः ॥
१३४. शठारिभट्टनाथाभ्यां कुलशेखरयोगिना ।
गोदादेव्या च भगवान् परकालेन संस्तुतः ॥

---

பேர் நகரிலுள்ள அப்பக்குடத்தானுகிற ரங்கநாதன் திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வாராகிற மூவராலும் பாடப்பெற்றவன். கபிஸ்தலத்தில் கண்ணனேடு கூடிய க₃ஜேந்த்₃ரவரத₃ன் திருமழிசையாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும் பாடப்பெற்றவன். (திருமங்கையாழ்வார் எங்கு இவரைப் பாடியிருக்கிருர் என்று விளங்கவில்லை.) திருக்குடந்தைச்சார்ங்கபாணி திருமழிசையாழ்வார், நம்மாழ்வார் திருமங்கையாழ்வார்களால் பாடப்பெற்றவர்.(பெரியாழ்வார் ஆண்டாள் பூதத்தாழ்வார் பேயாழ்வார்களாலும் இவர்பாடப்பெற்றுள்ளார்.) திருவிண்ணகரிலுள்ள உலகம்போற்றும் உப்பிலியப்பன் நம்மாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும் பாடப்பெற்றவர். (பேயாழ்வாரும் இவரைப்பாடியுள்ளார்). திருக்கண்ணபுரத்திலுள்ள உலகப் புகழ்பெற்ற சௌரிராஜன் நம்மாழ்வார் பட்டர்பிரான் ஆண்டாள் குலசேகராழ்வார் திருமங்கையாழ்வார்களால் பாடப்பெற்றவர். தில்லைச்சித்திரகூடத்திலுள்ள திருமகள் கேள்வனை கோவிந்தராஜனுகிற எம்பெருமான் குல

१३५. गोविन्दराजो भगवान् चित्रकूटे श्रियः पतिः ।
कुलशेखरनीलाभ्यां वेदान्तिन् समभिष्टुतः ॥
१३६. अवशिष्टानि सर्वाणि तत्र प्रेमपुरं विना ।
दिव्यस्थानानि चैकेन स्तुतानि कलिवैरिणा ॥
१३७. हरिः सुन्दरराजाख्यः प्रेमपुर्यां जगत्पतिः ।
तेनैकेनैव वेदान्तिन् भक्तिसारेण वै स्तुतः ॥
१३८. पाण्ड्यदेशे दिव्यदेशाः हरेरष्टादशाऽनघ ।
अनेकसंस्तुतास्तत्र चतस्रो दिव्यभूमयः ॥
१३९. वनाद्रौ सुन्दरभुजः भगवान् संस्तुतो हरिः ।
शठजिद्भट्टनाथाभ्यां कुलशेखरयोगिना ॥
१४०. गोदादेव्या च वेदान्तिन् परकालेन विश्रुतः ।
भट्टनाथेन वेदान्तिन् संस्तुतः कलिवैरिणा ॥

---

சேகராழ்வாராலும், திருமங்கையாழ்வாராலும் பாடப் பெற்றவன். சோழநாட்டுத்திருப்பதிகளில் எஞ்சியுள்ள முப் பத்துநாலில் அன்பில் தவிர மற்ற எல்லா தி₃வ்யதே₃ஶங் களும் திருமங்கையாழ்வார் ஒருவராலேயே பாடப் பெற்றவை. அன்பிலில் வாழும் லோகநாத₂னை ஸுந்த₃ர ராஜன் திருமழிசையாழ்வார் ஒருவராலேயே பாடப் பெற்றவன்.

## பாண்டியநாட்டுத் திருப்பதிகள்

138—144. குற்றமற்ற வேத₃ாந்தியே! பாண்டிய நாட்டில் பதினெட்டுதிருப்பதிகள் உள்ளன. அவற்றில்நாலு தி₃வ்யதே₃ஶங்கள் பலரால் பாடப்பெற்றவை. திருமாலிருஞ் சோலைமலையில் சுந்தரத்தோளுடையானை எம்பெருமான் நம்மாழ்வார், பட்டர்பிரான், குலசேகரர், ஆண்டாள், திரு மங்கையாழ்வார் ஆகியவர்களால் பாடப்பெற்றவன். (பூதத் தாழ்வாரும் பேயாழ்வாரும் இவரைப் பாடியுள்ளனர். குல சேகரர் இவரை எங்கு பாடியுள்ளார் என்று விளங்கவில்லை.)

१४१. गोष्ठीपुरे गोष्ठपतिः सौम्यनारायणाभिधः ।
शठजित्परकालाख्यां कालमेघस्तु मोहुरे ॥

१४२. धन्विनव्यपुरे शौरिः विष्णुचित्तेन गोदया ।
शीतोद्यानं सत्यगिरिः श्रीदर्भशयनं तथा ॥

१४३. त्रीण्येतानि स्थलान्यत्र स्तुतानि कलिवैरिणा ।
भट्टनाथेन वेदान्तिन् मधुरानगरी स्तुता ॥

१४४. स्थलानि नव यान्यत्र श्रीवैकुण्ठमुखानि च ।
अभिष्टुतानि चैकेन वानाद्रिः शठवैरिणा ॥

---

திருக்கோட்டியூரிலுள்ள கோஷ்டநாதனாகிற ஸௌம்ய நாராயணன் பட்டர்பிரானாலும் திருமங்கையாழ்வாராலும் பாடப்பெற்றவன். (பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார் ஆகியவர்களும் இவனைப் பாடியுள்ளனர்). திருமோகூரிலுள்ள காளமேகப்பெருமாள் நம்மாழ்வாராலும் திருமங்கைமன்னனாலும் பாடப்பெற்றவர். ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ள வடபெருங்கோயிலுடையான் பெரியாழ்வாராலும் ஆண்டாளாலும் பாடப்பெற்றவன். திருத்தண்கால், திருமெய்யம், திருப்புல்லாணி என்னும் மூன்று திவ்யதேசங்களும் திருமங்கைமன்னன ஒருவராலேயே பாடப்பெற்றவை. பட்டர்பிரானால் மதுரை எனப்படும் திருக்கூடல் பாடப்பெற்றது. (திருப்பல்லாண்டு அவதரித்ததையிட்டு இப்படிக் கூறியிருக்கிறார். திருமங்கையாழ்வார் திருக்கூடலைப்பாடியிருப்பது இங்கு விடப்பட்டது.) ஸ்ரீவைகுண்டம், வரகுணமங்கை, திருப்புளிங்குடி, தொலைவில்லிமங்கலம் எனும் இரட்டைத்திருப்பதி, பெருங்குளம், திருக்குருகூர், திருக்கோளூர், தென்திருப்பேரை என்னும் நவதிருப்பதிகளும் வானமாமலையும் நம்மாழ்வார் ஒருவராலேயே பாடப்பெற்றவை.

१४५. वेदान्तिन् केरले देशे दिव्यदेशाश्चतुर्दश ।
दिव्यस्थलानि त्रीण्येव तत्रानेकस्तुतानि वै ॥
१४६. कुरङ्गनगरीपूर्णः भगवान्समभिष्टुतः ।
शठारिभट्टनाथाभ्यां परकालेन चानघ ॥
१४७. संस्तुतो दक्षिणपुरे भगवानमराधिपः ।
शठजित्परकालाभ्यां यच्छ्रीमूलिक्कलः स्तुतः ॥
१४८. वराहनगरे तत्र वराहोऽत्र श्रियः पतिः ।
कुलशेखरदेवेन येनैकेन स्तुतोऽनघ ॥

---

## மலைநாட்டுத் திருப்பதிகள்

145—*149. குற்றமற்ற வேத₃ாந்தியே! கேரள நாட்டில் பதினலு தி₃வ்ய தே₃ஶங்கள் உள்ளன. (இப்போது பாண்டிய நாட்டில் சேர்க்கப்படும் திருக்குறுங்குடியை இவர் மலைநாட்டில் சேர்த்திருக்கிருர்.) அவற்றில் மூன்று திருப்பதிகளே பலரால் பாடப் பெற்றவை. திருக்குறுங்குடி நம்பி நம்மாழ்வாராலும் பட்டர் பிரானலும் திருமங்கையாழ்வாராலும் பாடப்பெற்றவர். (திருமழிசையாழ்வாரும் இவரைப் பாடியுள்ளார்) தென் திருவல்லவாழில் அமரர்கோனகிற எம்பெருமானும் மூழிக்களத்து எம்பெருமானும் நம்மாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும் பாடப்பெற்றவர்கள். வராஹநகரம் எனப்படும் திருவித்துவக்கோட்டில் திருமகள்கேள்வனை வராகப் பெருமான் குலசேகரப்பெருமாள் ஒருவராலேயே பாடப் பெற்றவன். திருவண்பரிசாரம், திருவாட்டாறு, திருவனந்தபுரம், திருச்செங்குன்றூர்த் திருச்சிற்ருறு, திருவாறன்விளை, திருவண்வண்டூர், திருப்புலியூர், திருக்காட்கரை, திருநாவாய், திருக்கடித்தானம் என்னும் எஞ்சிய பத்து திவ்ய தேசங்களும் நம்மாழ்வார் ஒருவராலேயே பாடப்பெற்றவை.

१४९. अवशिष्टानि सर्वाणि स्तुतानि शठवैरिणा ।
तुण्डीरमण्डले विष्णोर्ये त्रयोविंशतिः स्मृताः ॥
१५०. सप्तैव दिव्यदेशाश्च तत्रानेकैरभिष्टुताः ।
यथोक्तकारी भगवान् काञ्च्यां वेगस्थले हरिः ॥
१५१. कासारभक्तिसाराभ्यां संस्तुतः कलिवैरिणा ।
तत्रोरगगृहे काञ्च्यां देवोरगगृहाधिपः ॥
१५२. कलिजिद्भक्तिसाराभ्यां श्रीपतिः समभिष्टुतः ।
गीतागृहे पाण्डुदूतः काञ्च्यां कृष्णो जगत्पतिः ॥
१५३. भक्तिसारेण वेदान्तिन् कलिघ्ना चेडितो हरिः ।
शठारिपरकालाभ्यां नृसिंहो घटिकाचले ॥

---

## தொண்டைநாட்டுத் திருப்பதிகள்

149*—*158. குற்றமற்றவேதாந்தியே! தொண்டை மண்டலத்தில் எம்பெருமானுடைய இருபத்து மூன்று திவ்யதேசங்கள் உள்ளன. (நடுநாட்டுத் திருப்பதியான திருக்கோவலூர் தொண்டைநாட்டில் சேர்க்கப்பட்டுள்ளது). அவற்றில் ஏழு திவ்யதேசங்கள் பலரால் பாடப்பெற்றவை. கச்சித்திருவெஃகாவில் உள்ள சொன்னவண்ணம் செய்த பெருமாள் பொய்கை திருமழிசை திருமங்கையாழ்வார் களால் பாடப்பெற்றவர். (நம்மாழ்வார் பேயாழ்வாராகிய இருவரும் இவரைப்பாடியுள்ளனர்). காஞ்சியில் ஊரகத்தில் ஊரகத்தானுகிற எம்பெருமான் திருமழிசையாழ்வாராலும், திருமங்கையாழ்வாராலும் பாடப்பெற்றவன். கச்சித் திருப் பாடகத்தில் பாண்டவதூதனுகிற கண்ணன் எம்பெருமான் திருமழிசையாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும் பாடப் பெற்றவன். (பூதத்தாழ்வாரும் பேயாழ்வாரும் இவரைப் பாடியுள்ளனர்). திருக்கடிகையிலுள்ள நரசிங்கன் நம்மாழ் வாராலும் திருமங்கையாழ்வாராலும் பாடப்பெற்றவன். (நம்மாழ்வர் அக்காரக்கனி என்று அருளியதையிட்டுச் சொல்லப்படுகிறது. பேயாழ்வாரும் இவரைப்பாடியுள்ளார்)

१५४. कासारभूतभ्रान्तार्यसंस्तुतः कलिवैरिणा ।
त्रिविक्रम इति ख्यातो गोपपुर्यां तु गोपतिः ॥

१५५. श्रीमत्कैरविणीतीरे भगवान् पार्थसारथिः ।
नृसिंहरामरङ्गशगजेन्द्रवरदान्वितः ॥

१५६. संस्तुतो भक्तिसारेण कलिघ्ना च शठारिणा ।
वीक्षारण्ये किंगृहाख्यनगरे वीरराघवः ॥

१५७. परकालेन वेदान्तिन् भक्तिसारेण संस्तुतः ।
तत्रावशिष्टाः सकला दिव्यदेशाश्च षोडश ॥

१५८. चतुष्कवीन्द्रकृतिभिः वेदान्तिन् समभिष्टुताः ।
एकादशोत्तरदिशि दिव्यदेशाः प्रकीर्तिताः ॥

---

பொய்கை பூதம் பேயாழ்வார்களாலும் திருமங்கையாழ்வாராலும் திருகோவலூரில் உள்ள திரிவிக்கிரமனுகிற ஆயனுர் பாடப்பெற்ருர். திருவல்லிக்கேணியில் அல்லிக் குளத்தின் கரையில் நரசிம்மன், ராமன், ரங்க₃நாத₂ன், க₃ஜேந்த்₃ரவரத₃ன் ஆகியவர்களோடு கூட எழுந்தருளியிருக்கும் ப₄க₃வான் பார்த்த₂ஸாரதி₂ திருமழிசையாழ்வாராலும் திருமங்கையாழ்வாராலும், நம்மாழ்வாராலும் பாடப் பெற்ருர்; ("தேர்கடவியபெருமான்" [திருவாய் 3-6-10] என்பது பார்த்தஸாரதியைப் பற்றியது என்பது இவர் கருத்து. பேயாழ்வாரும் இவரைப்பாடியுள்ளார்.) வீக்ஷாரண்யத்தில் உள்ள "திருஎவ்வுள்" என்னும் தி₃வ்யதே₃ஶத்திலுள்ள வீரராக₄வப் பெருமாள் திருமங்கையாழ்வாராலும், திருமழிசையாழ்வாராலும் பாடப்பெற்ருர். தொண்டை நாட்டிலுள்ள மற்ற பதினுறு தி₃வ்யதே₃ஶங்களும் நாலு கவிப்பெருமாளான திருமங்கையாழ்வார் ஒருவராலேயே பாடப்பெற்றவை.

१५९. दिव्यस्थलानि चत्वारि तत्रानेकस्तुतानि हि ।
तत्र श्रीशेषशैले च भगवान् वेङ्कटेश्वरः ॥
१६०. नवभिर्दिव्ययोगीन्द्रैः गोदादेव्या च संस्तुतः ।
कुलशेखरनीलाभ्यां अयोध्यारघुनन्दनः ॥
१६१. श्रीकृष्णो भगवान्नन्दव्रजे गोपीजनप्रियः ।
भट्टेशपरकालाभ्यां गोदादेव्या च संस्तुतः ॥
१६२ मधुरायां बालकृष्णो वेदान्तिन् संस्तुतस्त्रिभिः ।
भट्टेशपरकालाभ्यां गोदया च यदूद्वहः ॥

---

## வடநாட்டுத் திருப்பதிகள்

158*—163. வடநாட்டில் பதினொருதி₃வ்யதே₃ஶங்கள் ஆழ்வார்களால் பாடப்பெற்றவை. அவற்றில் நாலு திவ்யதேசங்கள் பலரால் பாடப்பெற்றவை. அவற்றில் திரு வேங்கடமலையிலுள்ள திருவேங்கடமுடையான் தொண்ட ரடிப்பொடிகள் தவிர்ந்த மற்ற ஒன்பது ஆழ்வார்களாலும் ஆண்டாளாலும் பாடப்பெற்றவர். அயோத்தியிலிருக்கும் இராமன் குலசேகரராலும் திருமங்கைமன்னனாலும் பாடப் பெற்றவன். (பெரியாழ்வாரும் நம்மாழ்வாரும் தொண்ட ரடிப்பொடியாழ்வாரும் அயோத்தியைப்பாடியுள்ளனர்) திருவாய்ப்பாடியிலுள்ள கோபிகளுக்கு இனியனான கண்ணன் பட்டர்பிரான் பரகாலன் ஆண்டாள் ஆகிய வர்களால் பாடப்பெற்றவன். மதுரையில் ப₃ாலக்ருஷ்ண னை யாதவர்கோன் பட்டர்பிரான் பரகாலன் ஆண்டாள் ஆகியவர்களால் பாடப்பெற்றான். [நம்மாழ்வாரும் வட மதுரைப்பிறந்தானைப்பாடியிருக்கிறார்] ஜக₃ந்நாத₂த்தில் ஜகந்நாதன் பட்டர்பிரான் ஒருவரால் பாடப்பெற்றவர். (கண்டமென்னும் கடிநகரை ஜகந்நாதம் என்றோ அங்குள்ள பெருமானை ஜகந்நாதன் என்றோ கூறுவதில்லை. அவரைப் பெரியாழ்வார் ஒருவரே பாடியுள்ளார்.

१६३. जगन्नाथे जगन्नाथो भट्टनाथेन संस्तुतः ।
अवशिष्टानि षट् चात्र स्तुतानि कलिवैरिणा ॥
१६४. अतः श्रीरङ्गनगरं सर्वेषामुत्तमोत्तमम् ।
गोदया दिव्यदेशानां गीयते दशभिर्यतः ॥
१६५. नाथयामुनपूर्णादियतीन्द्राद्यर्चितस्तु सः ।
आद्यं स्वयंव्यक्तमिदं विमानं रङ्गसंज्ञकम् ॥
१६६. तत्रापि प्रथमोद्दिष्टं स्वयंव्यक्तस्थलेषु च ।
ब्रह्मणा पूजितः सम्यगिक्ष्वाकुप्रमुखैर्नृपैः ॥

---

ஜகந்நாதபுரி ஜகந்நாதனை எந்த ஆழ்வாரும் பாடவில்லை ஆகையால் இது தவறு) மற்ற ஆறு வடநாட்டு திவ்யதேசங்களும் திருமங்கையாழ்வாரொருவராலேயே பாடப் பெற்றவை. (இதுவும் தவறு. சாளக்கிராமத்தையும், துவாரகையையும் பதரியையும் பெரியாழ்வாரும் பாடியிருக்கிறார். துவாரகையை ஆண்டாளும் திருமழிசையாழ்வாரும் நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும் பாடியிருக்கிறார்கள்.)

## ஸ்ரீரங்கத்தின் பெருமை

164-167. ஆண்டாளாலும், பத்து ஆழ்வார்களாலும் பாடப்பட்டதாய் நாதமுனி, யாமுனமுனி, பெரியநம்பி, யதிராஜர் முதலான ஆசார்யர்களாலும் ஆராதி₄க்கப் பட்ட ஒரே தி₃வ்யதே₃ஶமாகையாலே திருவரங்கப்பெரு நகர் எல்லா தி₃வ்யதே₃ஶங்களைக்காட்டிலும் மிகச்சிறந்த தாகும். (படைப்புக்காலத்திலேயே) பிரமனுக்கு அளிக் கப்பட்டதாகையாலே இந்த ஸ்ரீரங்கவிமானம் எல்லா தி₃வ்யதே₃ஶங்களுக்கும் முற்பட்டதாகும். அந்த தி₃வ்ய தே₃ஶங்களிலும் ஸ்வயம்வ்யக்தம் என்று பெயர் பெற்ற வைகளுள் இது முதலாவதாகக் கணக்கிடப்படுகிறது.

१६७. धर्मवर्मादिभिस्सवैस्तस्माद्रङ्गमनुत्तमम् ।
नित्यवासरतानां च कैवल्यं तु करस्थितम् ॥

१६८. भक्ताङ्घ्रिरेणुस्तत्रैव श्रीरङ्गे सर्वथोत्तमे ।
नित्यवासरतो धीमान् तत्कैङ्कर्यरतस्सदा ॥

१६९. पृथुकीर्तिस्सुखेनाब्दान् नीत्वा पञ्चोत्तरं शतम् ।
अगमद्विष्णुसालोक्यं श्रीरङ्गेश्वरसन्निधौ ॥

१७०. दिव्यप्रबन्धं वेदान्तिन् भक्ताङ्घ्रिरजसा कृतम् ।
यः पठेत् शृणुयाद्वापि स मुक्तो नात्र संशयः ॥

---

பிரமனும் இக்ஷ்வாகு முதலான ஸூர்யகுலமன்னர்களாலும் த4ர்மவர்மா முதலான சோழராஜாக்களாலும் இப்படி நல்லோர்கள் அனைவராலும் நன்கு ஆராதி4க்கப்பட்டதாகையாலே ஸ்ரீரங்கம் ஒப்பற்றதாகும். அதில் எப்போதும் வாழ்வதில் ஈடுபட்டவர்களுக்கு மோக்ஷம்கைப்பட்டதாகிறது.

## தொண்டரடிப் பொடிகள் மோக்ஷமடைதல்

168-169. இப்படி எல்லாப்படியாலும் சிறந்ததான ஸ்ரீரங்கத்திலேயே எப்போதும் வாழ்வதில் ஈடுபட்டவராய், அறிவாளியாய், திருவரங்கனுக்கே எப்போதும் கைங்கர்யம் செய்து கொண்டிருந்தவராய், பெரும்புகழாளரான தொண்டரடிப்பொடிகள் அங்கேயே நூற்றைந்து வயது வரையில் இனிது வாழ்ந்து திருவரங்கன் திருமுன்பே விஷ்ணுவின் பரமபத3த்தை அடைந்தார்.

## ப2லஶ்ருதி— முடிவுரை

170-175. அறிவாளியான வேத3ாந்தியே! தொண்டரடிப்பொடியாழ்வாரின் தி3வ்யப்ரப3ந்த4ங்களைப் படிப்பவர்களும் கேட்பவர்களும் முக்தியடைவார்கள் என்பதில் ஐயமில்லை,

१७१. भक्ताङ्घ्रिरजसस्तस्य माहात्म्यं परमाद्भुतम् ।
यः शृणोत्यनिशं भक्त्या स गच्छेद्वैष्णवं पदम् ॥

१७२. बहुनोक्तेन किं विद्वन् संक्षेपादिदमुच्यते ।
श्रीमालां यो न जानाति न दैवं वेत्ति तद्दृढम् ॥

१७३. भक्ताङ्घ्रिरेणुचरितं यदिदं महत्तत्
श्रीकृष्णदेवचरितप्रतिमानमाद्यम् ।
ये भक्तियुक्तमनसो ह्यनिशं पठन्ति
ते विष्णुलोकनिरता हि भवेयुरार्याः ॥

---

தொண்டரடிப் பொடிகளின் அத்யாச்சரியமான சரித்திரத்தை எவனொருவன் ப₄க்தியுடன் தினந்தோறும் கேட்கிறானோ, அவன் விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைகிறான். பல சொல்லி என்! ஆத்மஹிதத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். 'திருமாலையறியாதவன் திருமாலை அறியான்' என்பது உறுதி. பெரியதான இந்தத்தொண்டரடிப்பொடியாழ்வாரின் சரிதம் கண்ணன் எம்பெருமானின் சரிதம் போலே முதன்மைபெற்று விளங்குகிறது. எந்தப் பெரியோர்கள் ப₄க்தியுடன் தினந்தோறும் இதைப்படிக்கிறார்களோ அவாகள் விஷ்ணுலோகத்தைப் பெறவேணடும் என்னும் ஆசையுடையவர்களாவார்கள். எவரொருவர் ஸ்ரீவிஷ்ணுவின் வனமாலையின் அம்சமாய் "தொண்டரடிப் பொடிகள்" என்னும் திருநாமத்துடன் அடியார்களுக்கு அருள்புரிவதற்காக, கருணையுடன் இக்கலியுக₃த்தில் அவதரித்தாரோ, அத்தகைய பெருமையையுடையவராய். மண்டங்குடிக்குத் தலைவராய், ப்₃ராஹ்மண ஶ்ரேஷ்டராய், திருவரங்கனுக்கு மாலையளித்தவராய், திருமாலை அருளிய கு₃ணக்கடலான அவரை எப்போதும் நினைக்கவேண்டும்.

१७४. श्रीविष्णोर्वनमालिकांशवशतो भक्ताङ्घ्रिरेण्वाख्यया
भक्तानुग्रहहेतवे करुणया पश्चादभूद्भूतले ।
तं मण्डंकुडिनायकं द्विजवरं रङ्गेशमालाप्रदं
श्रीमालाकृतिकारकं गुणनिधिं सञ्चिन्तयेत्सन्ततम् ॥

१७५. श्रीरङ्गेश्वरकैङ्कर्यहेतवे गुणसिन्धवे ।
भक्ताब्जभानवे तस्मै नमो भक्ताङ्घ्रिरेणवे ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्ति संवादे भक्ताङ्घ्रिरेणुचरितं नाम षण्णवतितमोऽध्यायः ॥

सप्तनवतितमोऽध्यायः ॥

१. भट्टार्यं प्रणिपत्योर्व्यां वेदान्ती तमपृच्छत ।
श्रोतुमिच्छाम्यहं स्वामिन् श्रीपाणचरितं महत् ॥

---

திருவரங்கனுடைய கைங்கர்யத்தைச் செய்தவராய், குணக் கடலாய், பக்தர்களாகிற தாமரையை மலரச்செய்யும் ஸூர்யனான அந்தத் தொண்டரடிப்பொடிகளுக்கு வணக்கம்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீபராஶரபட்டர் வேதாந்தி ஸம்வாதத்தில் தொண்டரடிப்பொடிகளின் சரிதத்தின் நிறைவைக் கூறும் தொண்ணூற்ருரும் அத்தியாயம் நிறைவுற்றது.

# தொண்ணூற்றேழாம் அத்தியாயம்

## திருப்பாணுழ்வார் சரித்திரம்

### நஞ்சீயரின் கேள்வி

1-½. வேதாந்தி நஞ்சீயர் ஸ்ரீபராஶரபட்டரைத் தரையில் வீழ்ந்து வணங்கி "கருணைக்கடலாய், பேரறிவாளரான ஆசார்யரே! பெருமை மிக்கதான திருப்பாணுழ்வாரின் சரிதத்தை நான் கேட்க விரும்புகிறேன். சிஷ்யனை எனக்கு அதைத்தெளிவாகக் கூறுவீராக" என்று கேட்டார்.

२. विशदं ब्रूहि मे विद्वन् शिष्याय करुणार्णव ।
अङ्गीकृत्य वचस्तस्य भट्टार्यस्तमथाब्रवीत् ॥
श्रीपाणचरितं दिव्यं शृणु वक्ष्यामि सांप्रतम् ॥

३. श्रीलोकसारङ्गमहामुनीन्द्रस्कन्धाधिरूढं कलयामि नित्यम् ।
कलङ्कहीनं कमनीयभक्तं कवीश्वरं गायकसार्वभौमम् ॥

४. इतीव वन्दनं कृत्वा कथामकथयत्तदा ।
कावेरीतोयमाश्रित्य वातो यत्र प्रवर्तते ॥

५. तद्देशवासिनां मुक्तिः किमु तत्तीरवासिनाम् ।
एतादृशप्रभावायाः कावेर्या दक्षिणे तटे ॥

६. श्रीरङ्गेशस्य नैरृत्यां क्रोशमात्रेण विश्रुता ।
निचुला नाम नगरी रक्षिता धर्मवर्मणा ॥

---

## ஸ்ரீபாணசரிதத்தொடக்கம்

2*-8. நஞ்சீயரின் அந்தக் கேள்வியை ஏற்றுக் கொண்டு ஸ்ரீ ப₄ட்டர் "அற்புதமான பாணசரிதத்தை இப்போது சொல்லுகிறேன் கேட்பீராக" என்று சொல்லத் தொடங்கினார். "ஸ்ரீலோகஸாரங்க₃மஹாமுனிவரின் தோள் மேல் ஏறியிருப்பவராய், களங்கமற்றவராய், அழகிய ப₄க்தராய், கவிஞர் தலைவராய், பாடுவாரில் தலைசிறந்தவரான திருப்பாணரை தினந்தோறும் தியானிக்கிறேன்" என்று வணங்கி, ப₄ட்டர் அப்போதே கதையைச் சொல்லத் தொடங்கினார். "காவேரிநதியையொட்டி எங்கெல்லாம் அதன் காற்று அடிக்கிறதோ அந்த தேசங்களில் வசிப்பவர்க்கெல்லாம் மோக்ஷம் கிடைக்கும். காவேரிக் கரையில் வாழ்பவர்களுக்கு மோக்ஷம் கிடைக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?" எனப்படும் பெருமையுடைய காவேரியின் தென்கரையில் ஸ்ரீரங்கநாதன் எழுந்தருளியிருக்கும்

७. धर्मेण राज्यमेतस्यां धर्मवर्मा चकार सः ।
धर्मवर्मसुता चैव निचुलानायकी हरेः ॥
८. यस्यां देव्यां महामोहात्तत्रैव निचुलापुरे ।
रममाणस्तया सार्धं रङ्गेशो राजतेऽनिशम् ॥
९. तद्वाक्येन स वेदान्ती प्रहृष्टः प्रणिपत्य तम् ।
निचुलादेविकल्याणं पप्रच्छ प्रीतिपूर्वकम् ॥
१०. तच्छ्रुत्वाथ स भट्टार्यो यत्तत्सर्वं न्यवेदयत् ।
पुराऽत्र निचुलापुर्यां धर्मवर्माभिधो नृपः ॥

---

இடத்திற்குத் தென்மேற்குத்திசையில் ஒரு குரோசதூரத்தில் (சுமார் இரண்டுமைலில்) த₄ர்மவர்மா என்னும் அரசனால் ரக்ஷிக்கப்பட்ட "நிசுளா" என்னும் நகரம் (உறையூர்) உள்ளது. அந்த நகரத்தில் த₄ர்மவர்மா த₄ர்மவழிப்படி அரசு புரிந்து வந்தான். த₄ர்மவர்மாவின் பெண் நிசுளாநாயகி. அவளிடம் பெரும் காதலாலே திருவரங்கத்தெம்பெருமான் அப்பிராட்டியோடு விளையாடிக்கொண்டு எப்போதும் அவ் ஊரிலேயே விளங்குகிறான்.

## நஞ்சீயரின் கேள்வி

9. அந்த வார்த்தையைக்கேட்டு வேதாந்தி நஞ்சீயர் உகந்தவராய் ப₄ட்டரை வணங்கி, நிசுளாதே₃வியின் கல்யாணத்தைப் பற்றி உகப்புடன் அவரை வினவினார்.

## த₄ர்மவர்மாக்கள் இருவர்

10-*14 நஞ்சீயருடைய அவ்வார்த்தையைக்கேட்டு ப₄ட்டர் நிசுளாதே₃வியின் கல்யாணவரலாறு முழுவதையும் சொல்லத்தொடங்கினார். நிசுளாபுரியில் (உறையூரில்) முன்னொருகாலத்தில் ஸூர்யவம்ஶத்தில் உதித்தவனாய் மிகச் சிறந்த ப₄ாக₃வதோத்தமனாய் த₄ர்மவர்மா என்னும் பெயருடைய பெரிய அரசன் அரசாண்டுவந்தான்.

११. सूर्यान्वये महानासीत् महाभागवतोत्तमः ।
तदा तस्यैव कावेरीसैकते धर्मवर्मणः ॥
१२. प्रत्यक्षमगमच्चात्र प्रथमं रङ्गराडपि ।
रङ्गेशभक्तो रङ्गेशकैङ्कर्यनिरतस्सदा ॥
१३. तदेकहृदयः श्रीमान् धर्मवर्मा बभूव ह ।
तस्यान्ववाये मतिमान् कश्चिद्भागवतोत्तमः ॥
१४. धर्मवर्माभिधः श्रीमान् अजायत महायशाः ।
निचुलानायकी नाम काचिन्नीलांशभासुरा ॥

---

உப₄யகாவேரிக்கு நடுவிலுள்ள மணல்திடரில் அந்த த₄ர்மவர்மாவுக்கே முதன்முதலில் ரங்கநாதன் பிரத்யக்ஷமானன். அவ்வரசனை த₄ர்மவர்மா ரங்கநாதனிடம் ப₄க்தனாய், எப்போதும் அரங்கனுடைய கைங்கர்யத்திலேயே ஈடுபட்டவனாய், அரங்கனேயே நெஞ்சில் கொண்டவனாய் வாழ்ந்து வந்தான். அவனுடைய வம்ஶத்தில் அறிவாளியாய், பா₄க₃வதோத்தமனாய், பெரும்புகழாளனான 'த₄ர்மவர்மா' என்னும் பெயருடைய மற்றொரு அரசன் உண்டானான்.

## நிசுளா நாயகியின் அவதாரம்

14*-19. அந்த அரசனுக்கு நீளாதே₃வியின் அம்சத்தையுடையவளாய், எல்லா அழகுகளும் நிறைந்தவளான "நிசுளா நாயகி" என்னும் பெண்ணொருத்தி கடலரசனுக்கு லக்ஷ்மி பிறந்தது போலவும், ஜனகனுக்கு ஸீதாலக்ஷ்மி பிறந்தது போலவும் அவதரித்தாள். அவளுடைய பெருமையைக் கூறும் பின்வரும் பொருளுள்ள பல

१५. संजज्ञे सर्वशोभाढ्या दुहिता तस्य भूपतेः ।
यथा क्षीरार्णवे लक्ष्मीः यथाभूज्जनकस्य च ॥
तत्प्रभावपराःश्लोकाः गीयन्ते बहवो भुवि ॥
१६. अथ चोलमहीपतेरभून्निचुला नाम पुरी पुरातनी ।
कनकाख्यकवेरकन्यकातटिनीदक्षिणतीरसीमनि ॥
१७. तपसात्वथ धर्मवर्मणः कुलजः कश्चन चोलभूपतिः ।
महसा मथितारिमण्डलः सकलां यत्र शशास मेदिनीम् ॥
१८. तपसा विभवेन तादृशा स नृपो रङ्गिणि सक्तमानसः ।
कमलां कमलाकरोद्भवां उदधेस्तां तनयामुदारधीः ॥
१९. दुहितुस्तपनीयतण्डुलांस्त्रिशतं षष्ट्यधिकं च भारतः ।
स हिरण्मयवस्तुकुण्डलान्यदिशत्तत्सदृशानि यौतकम् ॥

---

ஶ்லோகங்கள் இவ்வுலகில் பாடப்படுகின்றன. 'பொன்னி' எனப்படும் காவேரி நதி₃யின் தென்கரையில் 'நிசுளாபுரி' என்னும் பெயருடைய பழையதான நகரம் சோழ ராஜா வுக்குத் தலைநகராயிருந்தது. (கோழி எனப்படும் உறையூரே அது). அந்த த₄ர்மவர்மாவின் குலத்தில் உதித்த ஒரு சோழ ராஜா தன்னுடைய வீரத்தாலே எதிரிகள் அனை வரையும் வென்றவனாய் உலகனைத்தையும் ஆண்டான். திருவரங்கனிடம் ஈடுபட்ட மனமுடைய அவ்வரசன் தன்னு டைய தவத்தினாலும், முற்கூறிய பெருமைகளாலும், அலை மகளாய் 'கமலை' என்னும் பெயருடையவளான ஸ்ரீதே₃வியைப் பெண்ணாகப் பெற்று, மிகவும் வண்மை மிக்கவனாகையாலே, அந்தப் பெண்ணுக்கு ஸ்த்ரீத₄நமாக முந்நூற்றறுபது ப₄ாரம் பொன்னாலான அரிசிகளையும் அதற்கிணையான பொற் குண்ட₃லங்களையும் ஸமர்ப்பித்தான்.

२०. जन्मप्रभृति सा बाला श्रीरङ्गेशपदाब्जयोः ।
एकान्तभक्तिसंपन्ना ववृधेऽहर्निशं सती ॥

२१. बालक्रीडास्वपि सदा सा श्रीरङ्गेश्वरं विना ।
अजानती बभूवान्यत्तदेकहृदया स्थिता ॥

२२. रङ्गेशोत्सवपूजादिकार्याणि निखिलानि च ।
बालक्रीडोपयोगीनि कृत्वा तानि सखीजनैः ॥

२३. वदन्ती रङ्गरङ्गेति क्रीडयामास तन्मनाः ।
ववृधे बालिका बाल्ये पित्रोरानन्ददायिनी ॥

---

## கமலவல்லியின் பா3லப்பருவம்

20-*25 நிசுளாபுர நாயகியான அக்கமலவல்லி சிறு வயது முதற்கொண்டே திருவரங்கராஜனின் திருவடித் தாமரைகளில் அநந்யப4க்தியோடு கூடியவளாய், அவனே யல்லது அறியாதவளாய் தி3னந்தோறும் வளர்ந்து வந்தாள். சிறுமிகளோடு விளையாடும்போதும் அவள் ஸ்ரீரங்க3நாத2னைத்தவிர வேறு எதையும் அறியாதவளாய், எப்போதும் அவனையே நெஞ்சிற் கொண்டவளாயிருந்தாள். தோழிகளோடு விளையாடும்போதும் திருவரங்கனின் உத்ஸவம், திருவாராதனம் முதலான கார்யங்களனைத் தையும் விளையாட்டில் சேர்த்துக்கொண்டவளாய், "ரங்க3 ரங்க3ா" என்று கூறிக்கொண்டு அவனிடமே நெஞ்சு செலுத்தி விளையாடினாள். அச்சிறுமி தாய் தந்தையர்க்கு ஆநந்த3த்தை விளைப்பவளாய்ச் சிறுவயதில் வளர்ந்து வந்தாள். ஒருஸமயம் அவள் யௌவநப்பருவத்தின் தொடக் கத்தில் இருந்தபோது இந்திரனுடைய நந்த3வனத்தைப் போன்றதாய், எப்பொழுதும் அழகியதாயிருக்கும் ஒரு

२४. डोलायां नन्दनोद्यानसदृशे पुष्पमण्डपे ।
सदाभिरामे चारामे रममाणा सखीजनैः ॥
२५. संजातयौवनारम्भा सा कदाचिदवर्तत ।
रङ्गेशो मृगयायासविश्रान्त्यै तद्वनं प्रति ॥
२६. समागत्य तदा देवीमपश्यत्कमलेक्षणाम् ।
अनिर्देश्यवयोरूपमधुरस्मितभाषणैः ॥
२७. तस्याः संमोहितो रङ्गराजोऽभूल्लोकमोहनः ॥
श्रीसुन्दरवरश्चाथ निचुलापुरनायकी ॥
२८. रङ्गेशलग्नहृदया जितनिद्रा जिताशना ।
वदन्ती रङ्गरंगेति राधिकेव समास्थिता ॥

---

தோட்டத்தில் புஷ்ப மண்டபத்தில், ஊஞ்சலில் தோழி களோடு விளையாடிக் கொண்டிருந்தாள்.

## திருவரங்கனுக்கும் கமலைக்கும் காதல்

25*-28 ஒரு ஸமயம் திருவரங்கராஜன் மனிதவுருக் கொண்டு வேட்டையாடிவிட்டு, அந்தக்களைப்பு ஆறுவதற் காக அந்தத்தோட்டத்திற்கு வந்து தாமரை போன்ற கண்களையுடைய கமலவல்லியைக் கண்டான். அழகிய மணவாளனும், உலகனைத்தையும் மயக்குகின்றவனுமான அந்த ரங்க₃ராஜன் அந்த தே₃வியினுடைய அளவிட முடியாத பருவம், வடிவழகு, புன்முறுவல், இனிய பேச்சு ஆகியவைகளாலே மயக்கமுற்றான். அந்த நிசுளாபுர நாயகியும் திருவரங்கனிடம் ஈடுபட்ட நெஞ்சையுடைய வளாய், ஊணும் உறக்கமும் அற்றவளாய், ''ரங்க ரங்க'' என்று கூறிக் கொண்டு (கண்ணனிடம் காதல் கொண்ட) ராதையைப் போன்றவளானாள்.

२९. धर्मवर्मा ततो ज्ञात्वा दुहितुस्तन्मतं महत् ।
प्रहृष्टः प्राप्य रङ्गेशसन्निधिं तं प्रणम्य च ॥

३०. दुहितुः सर्ववृत्तान्तं रङ्गेशाय न्यवेदयत् ।
अङ्गीकृत्य वचस्तस्य संप्रहृष्टोऽथ रङ्गराट् ॥

३१. व्याजहार शुभं वाक्यं धर्मवर्माणमद्भुतम् ।
करिष्याम्यहमेवाद्य तत्पाणिग्रहणं नृप ॥

३२. युष्मद्दुहितरं मह्यं प्रदेहि जलपूर्वकम् ।
रंगिणस्तद्वचः श्रुत्वा धर्मवर्मा हरिप्रियः ॥

३३. ओमित्युक्त्वा प्रणम्याशु रङ्गेशं भक्तवत्सलम् ।
निचुलानगरं प्राप्य तदलङ्कृत्य पत्तनम् ॥

---

## கமலா-ரங்க$_3$விவாஹம்

29-50 த$_4$ர்மவர்மாவாகிற அவ்வரசன் தன் பெண்ணினுடைய அச்சிறந்த கருத்தினைக் கண்டு மிகவுகந்தவனாய், திருவரங்கனின் ஸந்நிதி$_4$க்கு வந்து அப்பெருமானை வணங்கித் தன் பெண்ணைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் ஸ்ரீரங்க$_3$நாத$_2$னிடம் விண்ணப்பித்தான். ஸ்ரீரங்க$_3$ராஜனும் மிகவுகந்தவனாய், அவ்வார்த்தையை ஏற்றுக் கொண்டு, த$_4$ர்மவர்மாவைப் பார்த்து, ''அரசனே! நானே இப்போது உன் மகளைக் கைப்பிடிக்கிறேன். உன்னுடைய பெண்ணை எனக்கு தா$_4$ரை வார்த்துக் கொடுப்பாய்'' என்னும் ஆச்சரியமான மங்க$_3$ள வார்த்தையைக் கூறினான். திருவரங்கனின் அவ்வார்த்தையைக் கேட்டு, விஷ்ணுப$_4$க்தனான த$_4$ர்மவர்மா ''அப்படியே ஆகட்டும்'' என்று கூறி, ப$_4$க்தவத்ஸலனான திருவரங்கனை உடனே வணங்கி நிசுளாபுரியை அடைந்து,

३४. स तां दुहितरं सम्यगलङ्कृत्याब्जलोचनाम् ।
प्रदातुकामः सहसा श्रीरंगेशाय विष्णवे ॥
३५. विवाहमण्डपे पीठे विन्यस्यैवात्मसंभवाम् ।
रंगेशागमनाकांक्षी तदा तस्थौ सुनिश्चलः ॥
३६. सहितस्सकलैर्देवैर्ब्रह्मेशानपुरोगमैः ।
निचुलानगरीं रम्यां महेन्द्रनगरोपमाम् ॥
३७. महता वैभवेनाशु रंगेशः स्वयमेव सः ।
चकार पाणिग्रहणं दुहितुर्धर्मवर्मणः ॥
३८. धर्मवर्माथ हरये रंगेशाय महौजसे ।
ब्रह्मर्षिमध्ये ब्रह्मेशपाकशासनसन्निधौ ॥

---

அந்நகரை அலங்கரித்து, தாமரை போன்ற கண்களை யுடைய தன் பெண்ணுக்கு நன்கு அலங்காரம் செய்து, அவளை ஸ்ரீ ரங்க$_3$நாத$_2$னுகிற விஷ்ணுவுக்குக் கன்னிகா த$_3$ானம் செய்து கொடுக்க விரும்பியவனாய், அப்பெண்ணை விவாஹ மண்டபத்தில் ஆஸநத்தில் அமரச் செய்து திருவரங்கன் வருவதை எதிர்பார்த்துக் கொண்டு உறுதியோடு இருந்தான். அப்போது பிரமன், உருத்திரன் முதலான எல்லா தே$_3$வர்களோடும் கூடியவனாய், திரு வரங்கன் தானே மஹேந்திரனின் நக$_3$ரத்தைப் போன்ற தான நிசுளாநக$_3$ரத்திற்கு வந்து, பெருத்த வைப$_4$ வத்தோடு த$_4$ர்மவர்மாவின் பெண்ணை விரைவில் கைப் பிடித்தான். த$_4$ர்மவர்மாவும் ப்$_3$ரஹ்மரிஷிகளுக்கு நடுவில், பிரமன், உருத்திரன், இந்திரன் முதலான தேவர்கள் முன்னிலையில் திருவரங்கனுக்கு எல்லா வித$_4$மான ஆடை யாப$_4$ரணங்களையும் முதலில் அளித்து, எல்லா லக்ஷணங் களோடும் கூடியவளாய், நன்கு அலங்கரிக்கப்பட்ட

३९. सर्वलक्षणसंपन्नां कन्यकां तां स्वलंकृताम् ।
अलंकाराणि सर्वाणि पूर्वं दत्त्वाथ रंगिणे ॥

४०. सफलाक्षतताम्बूलदक्षिणादिसमुज्ज्वलम् ।
तस्मै दुहितरं सम्यक् पवित्रोदकपूर्वकम् ॥

४१. प्रददौ भक्तिभावेन पवित्रेणान्तरात्मना ।
सीतां श्रीरामचन्द्राय प्रददौ जनको यथा ॥

४२. क्षीरार्णवो महालक्ष्मीं श्रीमहाविष्णवे यथा ।
देवदुन्दुभिनिर्घोषः पुष्पवृष्टिर्महानभूत् ॥

४३. तस्य वैवाहिकं सम्यक् शेषहोमान्तमद्भुतम् ।
निर्वर्त्य स यथाशास्त्रं देवैर्ब्रह्मर्षिपुङ्गवैः ॥

४४. पूजयामास तान् सर्वान् यथायोग्यं दिवौकसाम् ।
वराय रङ्गराजाय पारिबर्हं महाद्भुतम् ॥

---

வளான தன் பெண்ணை, ஸீதா தே₃வியை ஸ்ரீ ராம சந்திரனுக்கு ஜநகன் கொடுத்தது போலவும், திருப்பாற் கடலரசன் மஹாலக்ஷ்மியை மஹாவிஷ்ணுவுக்குக் கொடுத்தது போலவும், பழங்கள், அக்ஷதை, தாம்பூ₃லம். த₃க்ஷிணை முதலானவை விளங்கிநிற்க, பரிஶுத்₃த₄மான மனத்தாலே ப₄க்தியோடு கன்னிகா தா₃னம செய்து கொடுத்தான். அப்போது தேவர்களின் பெரிய து₃ந்து₃பி₄ முழக்கமும், புஷ்ப வர்ஷமும் ஏற்பட்டது. ஶேஷஹோமம் ஈறுன ஆஶ்சர்யமான விவாஹ கார்யங்களை, ஶாஸ்த்ர முறைப்படி தே₃வர்களைக் கொண்டும் ப்₃ரஹ்மரிஷிஶ்ரேஷ் டர்களைக் கொண்டும் நடத்திவைத்து, தே₃வர்கள் முதலானவரை அவரவர்க்குத் தக்கவாறு கௌ₃ரவித்தான். மணமகனை திருவரங்கராஜனுக்கு முந்நூற்றறுபது ப₄ாரம் பொன்னுலான அரிசிகளையும், பெரும் புகழாளனை

४५. सौवर्णतण्डुलानां च ददौ भारशतत्रयम् ।
भक्त्या षष्ट्यधिकं सम्यक् धर्मवर्मा महायशाः ॥

४६. प्रददौ भक्तिभावेन रंगेशाय महात्मने ।
रथानश्वान् गजान् सर्वान् गोमहिष्यादिकानजान् ॥

४७. दासीदासजनांश्चैव भूषणान्यम्बराणि च ।
हिरण्मयरथे तत्र समारोप्य वधूवरौ ॥

४८. तावुभौ प्रेषयामास महता वैभवेन सः ।
धर्मवर्मसुतां सम्यक् स तामुद्वाह्य रङ्गराट् ॥

४९. सन्तुष्टः श्वशुरेणैव पूजितो धर्मवर्मणा ।
संप्रेषितः स्वधामैतत्समासाद्य तदाऽनघ ॥

५०. निचुलापुरनायकया तया सार्धं जगत्पतिः ।
रममाणः सुखं तस्थावनिशं स यथासुखम् ॥

---

த₄ர்மவர்மா ஆச்சரியமான ஸ்திரீத₄னமாகப் பேரன்போடு நன்கு ஸமர்ப்பித்தான். மஹாபுருஷனை ரங்க₃நாத₂னுக்கு ரத₂ங்கள், குதிரைகள், யானைகள், பசுக்கள், எருமைகள், ஆடுகள், வேலைக்காரிகள், வேலைக்காரர்கள், ஆபரணங்கள், ஆடைகள் முதலியவற்றையும் ப₄க்தியோடு அளித்தான். மணமகளையும் மணமகனையும் பொன்மயமான ரத₂த்திலேற்றிப் பெருத்த வைப₄வத்தோடு அவன் அனுப்பி வைத்தான். குற்றமற்ற வேதாந்தியே! த₄ர்மவர்மாவின் பெண்ணை கமலவல்லியை மணந்து கொண்ட லோகநாத₂னை அந்தத் திருவரங்க₃ராஜனும் மிகஉகந்தவனாய், மாமனாரான த₄ர்மவர்மாவாலே ஆராதி₄க்கப்பட்டு விடைகொடுக்கப் பெற்றவனாய், அப்போதே நிசுளாபுரநாயகியான அவளோடு கூடத் தன் இருப்பிடத்தை அடைந்து நித்யமாக அப்பிராட்டியோடு இன்புற்றிருக்கிறான்.

५१. निचुलानगरे तत्र रङ्गेशः श्वशुरालये ।
निचुलापुरनायक्या प्रीत्यर्थं धर्मवर्मणः ॥
५२. तया संक्रीडमाणोऽसावद्यापि परिदृश्यते ।
निचुलादेविकल्याणं ये शृण्वन्ति पठन्ति च ॥
५३. कल्याणसहिता एव भवेयुस्तेऽनिशं ध्रुवम् ।
ततः पुण्यतमे तत्र नगरे मुनिवाहनः ॥
५४. अवतारं जगद्रक्षाहेतवे विदधे तदा ।
शृणुष्व विशदं वक्ष्ये तच्चरित्रं महाद्भुतम् ॥
५५. श्रीपाणचरितं दिव्यं तदन्यस्य न विद्यते ।
द्वाविंशत्युत्तरशतवत्सरानन्तरं कलौ ॥

---

## நிசுளா நாயகீ சரித்திர முடிவுரை

51-*53 மாமனாரின் வீடாய், நிசுளா நகரம் என்று பெயர்பெற்ற உறையூரில் ஸ்ரீ ரங்கநாதன் தர்மவர்மாவின் உகப்பிற்காக நிசுளாபுரநாயகியான கமலவல்லியோடு கூட அடியார்களை ரக்ஷிப்பதாகிற விளையாட்டில் ஈடுபட்டவனாய், இன்றும் அர்ச்சாவதாரமாகக் காணப்படுகிறான். நிசுளா தேவியின் கல்யாண வரலாற்றைக் கேட்பவர்களும் படிப்பவர்களும் எப்போதும் மங்களம் உடையவர்களாக ஆவார்கள் என்பது உறுதி.

## திருப்பாணாழ்வார் அவதாரம்

53*-57* நிசுளாதேவீரங்கநாத விவாஹத்திற்கு நெடுங்காலத்திற்குப்பின் அந்தப்பரமபுண்யமான நகரத்தில் முனிவாஹனரான திருப்பாணாழ்வார் உலகை ரக்ஷிப்பதின பொருட்டு அவதரித்தார். பேரற்புதமான அவருடைய சரித்திரத்தைத் தெளிவாகச் சொல்லுகிறேன்; கேட்பீராக.

५६. दुर्मत्यब्दे कार्तिकाख्ये मासे राकामहातिथौ ।
रोहिण्यां सौम्यवारे तु श्रीपाणो निचुलापुरे ॥

५७. कस्मिंश्चिद्ब्राह्मणक्षेत्रे व्रीहिगुच्छान्महायशाः ।
श्रीवत्सांशेन संजज्ञे श्रीहरेराज्ञया तदा ॥
तस्यावतारश्लोकाश्च गीयन्ते प्रथिता भुवि ॥

५८. अथ तत्र कुलेऽन्तिमे रमारमणोरःस्थललाञ्छनांशजः ।
समजायत पाणसंज्ञकः सुकविः कार्तिकमासि वैधभे ॥

५९. कावेरीतटनिचुलापुरेऽन्त्यवंशे
रोहिण्यां विलसति वृश्चिकेऽवतीर्णः ।
श्रीनाथस्त्वहमतिशायिभक्तिभाजं
पाणाख्यं वरमुनिवाहनं प्रपद्ये ॥

---

திவ்யமான திருப்பாணாழ்வாரின் சரித்திரப் பெருமை வேறு எவருக்கும் இல்லை. கலிபிறந்து நூற்றிருபத்திரண்டு வருடம் சென்றபின் துர்மதி வருடத்தில் கார்த்திகை மாதத்துப் பௌர்ணமியில், புதன்கிழமையோடு கூடிய ரோஹிணீ நட்சத்திரத்தில், நிசுளா நகரத்தில் ஓர் அந்தணனுடைய வயலில் நெற்கதிரிலிருந்து பெரும் புகழாளரான திருப்பாணாழ்வார் எம்பெருமானுடைய நிய மனத்தாலே ஸ்ரீவத்ஸமெனும் மறுவின் அம்ஶமாக அவதரித்தார்.

## அவதார ஶ்லோகங்கள்

57*-60 அவருடைய அவதார ஶ்லோகங்கள் பின் வருமாறு (பொருளுடையவையாய்) உலகில் பிரசித்தி யுடன் பாடப்படுகின்றன:— (1) பஞ்சமகுலத்தில் ஶ்ரிய: பதியின் திருமார்பிலுள்ள ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவின் அம்ஶமாகப் பிறந்தவராய், பெரும் கவியான திருப்பாணர் கார்த்திகை மாதம் ரோகிணி நட்சத்திரத்தில் அவதரித்தார்.

६०. कार्तिके रोहिणीजातं श्रीपाणं निचुलापुरे।
श्रीवत्सांशं गायकेन्द्रं मुनिवाहनमाश्रये ॥

६१. अयोनिसंभवो जातो वेदान्तिन्! मुनिवाहनः।
पश्चात्पञ्चमवर्णे तु ववृधे बालभावितः ॥

६२. जायमानं हि पुरुषं यं पश्येन्मधुसूदनः।
सात्त्विकस्स तु विज्ञेयः स वै मोक्षार्थचिन्तकः ॥

६३. जायमानकटाक्षेण स चैवं मुनिवाहनः।
बाल्यप्रभृति सुस्निग्धः प्रह्लाद इव सत्तम ॥

---

(2) காவேரிக்கரையிலுள்ள நிசுளா நக₃ரத்தில் பஞ்சம குலத்தில் கார்த்திகை மாதம் ரோஹிணியில் திருவின் நாத₂னை எம்பெருமானே (திருப்பாணராக) அவதரித்தான். லோக விலக்ஷணமான ப₄க்தியுடையவராய், சிறந்த முனிவாஹனரான அந்தத் திருப்பாணாழ்வாரை நான் ஶரணமடைகிறேன். (3) நிசுளாபுரியில் கார்த்திகையில் ரோகிணியில் ஸ்ரீவத்ஸத்தின் அம்ஶமாக அவதரித்த வராய், பாடுவாரில் தலைவரான திருப்பாணராம் முனி வாஹனரை ஆஶ்ரயிக்கிறேன்.

## திருப்பாணரின் விநுக₃ாவம்

61-*68 நல்லோர்களில் தலைவரான வேத₃ாந்தியே! முனிவாஹனரான திருப்பாணர் ஒரு யோனியில் பிறவாத வராயிருந்தபோதிலும், பிறந்த பின்பு பஞ்சமவர்ணத்தைச் சேர்ந்த பாணர் குலத்தவர்களால் குழந்தையாக அபி₄ மானிக்கப்பெற்று வளர்ந்து வந்தார். ''பிறக்கும்போது ஒரு புருஷனை மது₄ஸூத₃னன் கடாக்ஷித்தாளுகில், அவன் ஸாத்விகன் என்று அறியத்தக்கவன்; அவனே மோ க்ஷத்தைக் குறித்துச் சிந்திப்பான்'' என்று ப்ரமாணங் களில் சொல்லப்பட்ட ஜாயமாநகடாக்ஷத்தாலே அந்த

६३. संजातज्ञानवैराग्यो ह्यभवज्जन्मवैष्णवः ।
विशेषतोऽथ वेदान्तिन् विष्वक्सेनकृपावशात् ॥

६५. संप्राप्तपञ्चसंस्कारो विदिताखिलतत्त्वधीः ।
आसीन्निवृत्तसंसारो महाभागवतोत्तमः ॥

६६. कृताधिवासो निचुलानगर्यां भगवत्परः ।
कावेरीतीरमाश्रित्य रङ्गक्षेत्राविदूरतः ॥

६७. तत्र श्रीमुखतीरे तु वीणापाणिरचञ्चलः ।
रंगेशाभिमुखं स्थित्वा कीर्तयन् भगवद्गुणान् ॥

६८. व्यतिष्ठतानुदिवसं महागान्धर्वमाश्रितः ।
कुरङ्गनगरे पूर्वं मातङ्गः कश्चिदुत्तमः ॥

---

முனிவாஹனர் சிறுவயதிலிருந்தே பிரஹ்லாதாழ்வானைப் போலே எம்பெருமானிடம் ப₄க்திபூண்டிருந்தார். ஜ்ஞான வைராக்₃யங்கள் நிறையப்பெற்ற பிறவிவைஷ்ணவரா யிருந்தார் அவர். விஷ்வக்ஸேனருடைய விசேஷகருணை யாலே பஞ்சஸம்ஸ்காரம் பெற்றவராய், எல்லாத் தத்து வங்களைக் குறித்தும் மயர்வற மதிநலமருளப் பெற்றவராய், ஸம்ஸாரத்தில் பற்றற்ற மஹாபா₄காக₃வதோத்தமரான அவர் நிசுளாநக₃ரத்தில் வாழ்ந்துகொண்டு, எம்பெருமானிடம் ஈடுபட்டவராய், ஸ்ரீரங்க₃க்ஷேத்ரத்திற்கு அருகில் காவேரிக் கரையில் (குடமுருட்டி காவேரியோடு கலக்கும்) முக₂ த்₃வாரத்தில் வீணையுங்கையுமாய்அசையாமல் திருவரங்கனை நோக்கி நின்றுகொண்டு, மஹாக₃ாந்த₄ர்வ வேத₃மாகிற ஸங்கீ₃தத்தைப்பற்றிநின்று தினந்தோறும் ப₄க₃வத் கு₃ணங்களைப் பாடிக்கொண்டிருந்தார்.

६९. स यथा कैशिकं गीतमगायत तथाऽनघ ।
संप्रार्थितस्तदा तेन मातङ्गो ब्रह्मरक्षसा ॥

७०. निग्रहात्त्राय्याऽमुष्मात्तेन गीतफलेन माम् ।
एवमुक्त्वा स मातङ्गं राक्षसः शरणं गतः ॥

७१. अङ्गीकृत्य स तद्याच्ञां मातङ्गः करुणाकरः ।
यत्तगीतफलं दत्त्वा कृपया रक्षसेऽनघ ॥

७२. वेदान्तिन् सम्यगेवालं महिमानं न्यवेदयत् ।
यन्मया पश्चिमं गीतं स्वरं कैशिकमुत्तमम् ॥

७३. फलं तस्यैव भद्रं ते मोक्षयिष्यति किल्बिषात् ।
यागदोषं स तस्याशु मातङ्गः परिहृत्य तत् ॥

---

## நம்பாடுவானும் திருப்பாணரும்

68*-76 குற்றமற்ற வேதாந்தியே! முன்னொரு காலத்தில் பஞ்சம குலத்தைச் சேர்ந்த ஒரு பெரியோன் திருக்குறுங்குடியிலே கைசிகம் என்ற பண்ணைப்பாடியது போல் திருப்பாணரும் பாடிவந்தார். கைசிகத்தைப் பாடிய போது ஒரு ப்₃ரஹ்ம ராக்ஷஸனாலே அந்த உத்தமன் "உன்னுடைய பாட்டின் ப₂லனை அளித்து இந்த ப்₃ரஹ்ம ராக்ஷஸ ஜன்மம் நீங்கும்படியாக எனக்கு அருள்புரிய வேண்டும்" என்று பிரார்த்தி₂க்கப்பட்டவனாய், அந்த ராக்ஷஸனாலே சரணாகதி செய்யப்பெற்றான். அவனுடைய அந்தப்பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டு கருணைக்கடலான அந்தப் பெரியவன் அந்தக்கைசிகம் என்ற பண்ணின் ப₂லத்தைக் கருணையோடு அரக்கனுக்குக் கொடுத்து, "நான் பின்னிரவிலே கைசிகம் என்ற சிறந்த பண்யாதொன்றைப் பாடினேனோ, அதன் ப₂லமே உன்னைப் பாபத்திலிருந்து விடுவிக்கும். உனக்கு மங்க₃ளம் உண்டாகுக" என்று க₃ானத்தின் பெருமையை வெளியிட்டான்.

௭௪. तेन गीतफलेनैव ररक्ष ब्रह्मराक्षसम् ।
तथैवायं महातेजाः श्रीपाणो निचुलापुरे ॥

௭௫. कृताधिवासः संरेजे भगवद्ध्यानतत्परः ।
भगवद्गानविद्यानां सार्वभौमो बभूव सः ॥

௭௬. श्रीपाणो नित्यवेदानां सामगानरतात्मनाम् ।
नित्यसूरिरिवाभाति देवगानेन सत्तमः ॥

௭௭. स श्रीमान्पुण्यचरितो भगवान् मुनिवाहनः ।
यत्स्ववर्णोचितं धर्ममाचरन् भगवत्प्रियः ॥

௭௮. दिव्यगानेन रंगेशं गायन्निश्चलमानसः ।
आनन्दबाष्पः सततं निर्भरः पुलकाङ्कितः ॥

---

அந்தப் பெரியோனை நம்பாடுவானும் அந்தக் கைசிகம் என்னும் பண்ணின் ப2லத்தினாலேயே அந்த ப்3ரஹ்ம ராக்ஷஸனுடைய யாக3 தோ3ஷத்தை உடனே போக்கி அவனை ரக்ஷித்தான். அவனைப்போலவே மஹாதேஜஸ்வியான இந்தத் திருப்பாணரும் எம்பெருமானைத் தியானிப்பதிலேயே ஈடுபட்டவராய், எம்பெருமானைக் குறித்த கா3னக்கலையில் மிக வல்லவராய், நிசுளாபுரியில் வாழ்பவராய் விளங்கினார். பெரியோரான திருப்பாணர் ஸாமகா3னத்தை எப்போதும் ஓதும் பெரியவர்களுக்குத் தம் தே3வகா3னத்தாலே நித்யஸூரியைப்போலே விளங்கினார்.

## திருப்பாணரின் தே3ஹயாத்ரை

77-*83 நல்லொழுக்கம் உடையவரும், கு3ணங்களால் நிறைந்தவரும், கைங்கர்யச் செல்வமுடையவருமான அந்த முனிவாஹநர் தம்முடைய பாணகுலத்திற்குரிய பாடும் தொழிலையே செய்பவராய், எம்பெருமானுக்கினியவராய், (ஸ்ரீரங்க3நாத2னுக்கு) வெகுதூரத்தில் இருந்து கொண்டு,

७९. हरिगानरसास्वादविस्मृतान्यरतिः सदा ।
रंगेशाभिमुखं तस्थौ गानेनैवातिदुग्नः ॥

८०. कावेरीद्वयमध्यस्थं श्रीरङ्गमतिपावनम् ।
अतः पदाभ्यां संस्प्रष्टुं ममैवायुक्तमित्यतः ॥

८१. सप्तप्राकारसहितं ज्ञानदृष्ट्या विलोक्य तत् ।
श्रीरङ्गमखिलं सम्यक् कावेरीसैकतेऽनघ ॥

८२. विधाय तस्य निर्माणं अनुभूय मुहुर्मुहुः ।
रंगेशं सुन्दरवरं शयानं शेषभोगिनि ॥

८३. ध्यायन्निरन्तरं तस्थौ तन्मयत्वेन चेतसा ।
तत्र कश्चिन्महायोगी सारङ्गाख्य इति श्रुतः ॥

---

உறுதியான நெஞ்சை உடையவராய், ஆனந்தக் கண்ணீர் பெருகப் பெற்றவராய், மயிர்க்கூச்செறியப் பெற்றவராய், எப்போதும் எந்தக் கவலையுமில்லாதவராய், ஹரிக₃ான ரஸத்தை, எப்போதும் பருகுவதாலே மற்ற எதிலும் ஈடுபாடு இல்லாதவராய், திருவரங்கராஜனை நோக்கி இருந்து கொண்டு தி₃வ்யஞ₃ானத்தாலே அவனைப் பாடிக் கொண்டு வாழ்ந்து வந்தார். "இரண்டு காவிரிகளுக்கு நடுவே இருக்கும் பரம பாவனமான ஸ்ரீரங்க₃த்தைப் பரம நீசனான அடியேன் காலால் மிதிக்கலாகாது" என்னும் எண்ணத்தாலே ஏழுமதில்களோடு கூடிய ஸ்ரீரங்கம் முழு வதையும் ஞானக் கண்ணாலே கண்டு, காவேரித்திடரிலே அந்த நக₃ரம் அமைந்திருப்பதை அடிக்கடி அனுப₄வித்துக் கொண்டு, திருவனந்தாழ்வான் மேலே சயனித்துக் கொண்டிருக்கும் அழகிய மணவாளனை திருவரங்க₃ ராஜனை, அவனிடமே ஈடுபட்ட நெஞ்சாலே எப்போதும் தியானித்துக் கொண்டு வாழ்ந்து வந்தார்.

௮௪. नित्यं श्रीरङ्गराजस्य कुर्वन् कैङ्कर्यमास्थितः ।
स स्वर्णकुम्भमादाय कावेरीतोयमुत्तमम् ॥
௮௫. गृहीतुकामस्तत्तीरमभ्यगात् द्विजपुङ्गवः ।
तदन्तिकस्थमालोक्य श्रीपाणं भगवत्परम् ॥
௮௬. दूरतो गच्छ गच्छेति तमवोचत्स योगिराट् ।
अज्ञातबाह्यव्यापारस्तन्मयत्वेन चेतसा ॥
௮௭. नाशृणोत्तद्वचः पाणस्तूष्णींभूतः समास्थितः ।
वर्णधर्मपराः केचित् ब्राह्मणा रङ्गवासिनः ॥
௮௮. कवेरजातटे विष्णुं गायन्तं रङ्गवासिनम् ।
ऊचुर्मङ्कं मत्वा तं गच्छ गच्छेति दूरतः ॥

---

## திருப்பாணரும், லோக ஸாரங்கரும், அந்தணர்களும்

83*-90 அந்த ஸ்ரீரங்க3த்தில் லோக ஸாரங்க3 மஹா முனி என்னும் பெரிய யோகி3 ஒருவர் ஸ்ரீரங்க3ராஜனுக்கு தினந்தோறும் கைங்கர்யம் செய்துகொண்டு வாழ்ந்து வந்தார். அந்த அந்தணர்தலைவர் பொற்குடத்தை ஏந்தி வந்து எம்பெருமானுடைய திருமஞ்சனத்திற்குச் சிறந்த காவேரி நீரை எடுக்க விரும்பி, திருப்பாணர் பாடிக் கொண்டிருந்த கரைக்கருகில் வந்தார். தாழ்குலத்தவரான திருப்பாணர் எம்பெருமானைப் பாடிக்கொண்டிருப்பதைப் பார்த்து அந்த முனிவர் தலைவர் "தூரப்போ! தூரப்போ!" என்று அவரைக் குறித்துக் கூவினார். திருப்பாணரோ எம்பெருமானிடமே ஈடுபட்ட நெஞ்சுடையவராயிருந்தமை யாலே வெளி விஷயங்கள் எதையும் அறியாதவராய், அந்த வார்த்தைகளைக் கேட்கவில்லை; விலகிப் போகாமலே இருந்தார். ஸ்ரீரங்க3த்தில் இருந்தவர்களாய், வர்ண த4ர்மங்களிலேயே ஈடுபட்டிருந்த சில அந்தணர்கள் ஸ்ரீரங்க3த்தில் காவேரிக்கரையில் இருந்துகொண்டு எம் பெருமானைப்பாடும் திருப்பாணரைப் பஞ்சம குலத்தவர் என்று எண்ணி "தூரப்போ, தூரப்போ" என்று கூவினர்.

८९. गुणानुभवकैङ्कर्यजितबाह्येन्द्रियो मुनिः ।
स तदाज्ञातवचनस्तूष्णीं भूतस्सुनिश्चलः ॥

९०. ततः कोपेन महता श्रीपाणं प्रति भूसुराः ।
शिलाः प्रचिक्षिपुस्तत्र ते सर्वे रङ्गवासिनः ॥

९१. जर्जरीकृतसर्वाङ्गः शिलावर्षैः दृढाशयः ।
अतिष्ठत् भगवत्प्रेमपारवश्येन निश्चलः ॥

९२. श्रीपाणं निश्चलं दृष्ट्वा जितबाह्येन्द्रियं मुनिम् ।
किमेतदिति सर्वे ते बिभ्युर्विस्मितचेतसः ॥

९३. सम्यक् समाप्तगीतोऽथ पूर्ववत्स दृढव्रतः ।
श्रीपाणः स्वाश्रमं प्राप जितक्रोधस्तदाऽनघ ॥

---

எம்பெருமானுடைய கு₃ணங்களை அநுப₄விப்பதாலும், க₃ான கைங்கர்யத்தாலும் வெளி இந்த்₃ரியங்கள் செயலிழந்து கிடந்த திருப்பாணுழ்வார் அப்போதும் அந்த வார்த்தைகளைக் கேளாமல் விலகிப் போகாமலே அசையாமல் இருந்தார். அதைக்கண்டு திருவரங்கவாசிகளான அந்த அந்தணர்கள் அனைவரும் கடுங்கோபம் கொண்டு திருப்பாணரைக் குறித்துக் கற்களை வீசியெறிந்தனர்.

## பாணரின் பொறுமை

91-94. அந்தக் கல்மழையினுலே உடலெங்கும் காயமடைந்த திருப்பாணர் எம்பெருமானிடம் பெருங்காதலுக்கு ஆட்பட்டு அசையாமல் பாடுவதிலேயே உறுதிகொண்டவராய் இருந்தார். வெளி இந்திரியங்கள் அனைத்தையும் வென்றவராய், எம்பெருமானையே நினைத்துக்கொண்டு அசையாமல் இருந்த அந்தத் திருப்பாணரைக் கண்ட அந்தணர்களனைவரும் வியப்புற்ற நெஞ்சினராய், "இப்படியும்ஒருவர் இருப்பதே!" என்று பயந்தனர். குற்றமற்ற வேதாந்தியே! தாம் பாடுவதை நன்கு நிறைவுபடுத்தியபின்

९४. तेषां शिलाप्रहारेण न काञ्चिदपि वेदनाम् ।
अगादुपरतक्रोधः न्यस्तभारः श्रियःपतौ ॥
९५. तेन रंगेश्वरस्यैव संजाता महती व्यथा ।
रक्तं ललाटे सुस्राव भक्तान्तर्यामिणस्तदा ॥
९६. अर्चकास्तद्विलोक्याशु बिभ्युर्विस्मितमानसाः ।
तदा तद्देशभूपालो रंगेशस्य विलोक्य तत् ॥
९७ रक्तं ललाटे प्रत्यक्षं सुतरां भीतिमागतः ।
तेन संमोहिता लोकाः सर्वेऽपि भगवत्पराः ॥
९८ संजातं केन दोषेण मम राज्ञोऽथ भूपतेः ।
इत्येवं विबुधैस्साकं मन्त्रयामास भूपतिः ॥

(பாடுவதாகிற) உறுதியான விரதத்தை உடைய வராய், கோபத்தை வென்றவரான திருப்பாணர் முன் போலவே தமது ஆஶ்ரமத்தை அடைந்தார். ஸ்ரீமந் நாராயணனிடம் தம்முடைய பொறுப்புகள் அனைத்தையும் ஒப்படைத்தவராய், கோபமே இல்லாதவரான அவர் அவர்களுடைய கல்லடியாலே சிறிதும் துன்பமடையவில்லை.

## அரங்கனின் நெற்றியில் ரத்தம்

95-98. அந்தணர்களின் இச்செயலாலே அரங்கனுக்கே பெருந்துன்பம் உண்டாயிற்று. ப₄க்தரான திருப்பாணரின் அந்தர்யாமியான அவனுடைய நெற்றியிலும் அப்போது ரத்தம் வடிந்தது. அர்ச்சகர்களனைவரும் வியப்புற்ற நெஞ்சினராய், அதைக்கண்டு துணுக்குற்று பயந்தனர். அப்போது அந்த தேசத்தின் அரசன் அரங்கனின் நெற்றியில் வடிந்த அந்த ரத்தத்தை நேரில் கண்டு மிகவும் பயமடைந்தான். அதனால் எம்பெருமானிடம் ஈடுபாடுள்ள உலகினரனைவரும் மயக்கமுற்றனர். "நான் உலகாளும் அரசனாயிருக்கையில் எந்த தோ₃ஷத்தினால் இப்படி ஆயிற்று" என்று அறிவாளிகளோடு கூட அரசன் மந்திராலோசனை செய்தான்.

९९. तदा श्रीरङ्गनायक्या रंगेशो बोधितस्तथा ।
मतिं चकार भगवान् मुनिवाहनरक्षणे ॥
१००. सारङ्गयोगिनः स्वप्ने प्रसन्नः प्रत्यभाषत ।
श्रीपाणं मामकं विप्र! निकृष्टं तं न चिन्तय ॥
१०१. स्कन्धाभ्यां तं वहन् भक्त्या प्रापयस्व मदन्तिकम् ।
ततः स्वप्नात्समुत्थाय सारङ्गमुनिपुङ्गवः ॥
१०२. अद्य मे सफलं जन्म सुप्रभाता निशा च मे ।
इत्युक्त्वा संप्रहृष्टोऽथ स्वप्नवृत्तान्तमद्भुतम् ॥
१०३. तथ्यं मत्वा यथाशास्त्रं स्नातः शुचिरलङ्कृतः ।
कृताह्निकः संप्रतस्थे श्रीपाणो यत्र वर्तते ॥

---

## லோகஸாரங்கருக்கு அரங்கனின் நியமனம்

99-*104. அப்போது ஸ்ரீரங்க நாச்சியாராலே முநிவாஹனரை ரக்ஷிக்கும்படி உணர்த்தப் பெற்ற திருவரங்க ராஜன் அவரை ரக்ஷிக்கத் திருவுள்ளம் கொண்டான். அவ்வெம்பெருமான் லோகஸாரங்க3முனிவரின் கனவில் தோன்றி, "அந்தணரே! என்னுடையவரான திருப்பாணரைத் தாழ்ந்தவராக எண்ணுதீர்! ப4க்தியுடன் அவரை உமது தோள்களில் சுமந்து என்னருகில் அழைத்து வாரும்" என்று நியமித்தான். அதற்குப்பின் கனவிலிருந்து விழித்தெழுந்த லோகஸாரங்க3 மாமுனிவர், "என்னுடைய பிறவி இன்று பயனுடையதாயிற்று; நேற்றைய இரவு இன்று எனக்கு நல்விடிவாக ஆயிற்று" என்று கூறி உகந்தவராய், ஆஶ்சர்யமான அந்தக் கனவு நியமனத்தை உண்மை என்று உறுதிகொண்டு ஶாஸ்திரமுறைப்படி ஸ்நாநம் செய்து பரிஶுத்3த4ராய், ஊர்த்4வபுண்ட்3ரங்கள், தாமரை மணி மாலைகள் முதலியவற்றை அணிந்து கொண்டவராய்,

१०४. सुदूरमपि गन्तव्यं यत्र भागवताः स्थिताः ।
श्रीरङ्गस्यातिदूरे तु कावेर्याश्च तटे रहः ॥
१०५. तन्मयत्वेन गायन्तं सततं भगवद्गुणान् ।
गुणानुभवसंजातमहानन्दाश्रुवारिभिः ॥
१०६ सम्यक् संसिक्तसर्वाङ्गं पुलकाङ्कितविग्रहम् ।
अज्ञातबाह्यव्यापारं हरौ संन्यस्तमानसम् ॥
१०७. दृष्ट्वा सारङ्गयोगीन्द्रस्तं स भागवतोत्तमम् ।
दीर्घप्रणामं साष्टाङ्गं चक्रे तस्य पदाब्जयोः ॥
१०८ एवं प्रणामं बहुशः स कृत्वा प्रेमपूर्वकम् ।
रंगेशेन यदुक्तं तत्सर्वं तस्मै न्यवेदयत् ॥

---

காலைக்கர்மங்களை முடித்து, திருப்பாணர் இருந்த இடத்திற்குப் புறப்பட்டார். "மிகுந்த தூரமாயினும் பா₄க₃வதர்கள் இருந்தவிடத்திற்குச் செல்லவேண்டும்" என்று சொல்லப்பட்டதன்றோ!

## திருப்பாணர் முநிவாஹநரானார்

104*-117. ஸ்ரீரங்க₃த்திலிருந்து மிகத்தொலைவில் காவேரிக்கரையில் ஏகாந்தமானதொரு இடத்தில் எம்பெருமானையே சிந்தித்துக் கொண்டு அவனுடைய கு₃ணங்களைப்பாடுகின்றவராய், அந்த கு₃ணாநுப₄வத்தாலே உண்டான பேரானந்த₃க்கண்ணீராலே திருமேனி முழுவதும் நனையப்பெற்றவராய், மயிர்க்கூச்செறியும் திருமேனியை உடையவராய், வெளியில் நடப்பது எதையும் அறியாதவராய், எம்பெருமானிடமே நெஞ்சைச் செலுத்தியவரான அந்த பா₄க₃வதோத்தமரை லோகஸாரங்க₃ முநிவர் கண்டு பூ₄மியில் அவரது திருவடித்தாமரைகளில் ஸாஷ்டாங்க₃மாக வணங்கி, அன்பினாலே பலமுறை நமஸ்காரம் செய்து, ரங்க₃நாத₂னாலே சொல்லப்பட்ட அனைத்தையும் அவரிடம்

१०९. स्वनैच्यं पुरतः कृत्वा तन्निशम्य वचः शुभम् ।
श्रीपाणः प्राञ्जलिर्भूत्वा तमवोचत् द्विजोत्तमम् ॥

११०. मातङ्गोऽहं महाभाग! पद्भ्यां श्रीरङ्गमुत्तमम् ।
स्प्रष्टुं नार्हामि तेनाद्य प्रवेष्टुं नोत्सहे ध्रुवम् ॥

१११. प्रतिगृह्य स तद्वाक्यं सारङ्गमुनिरब्रवीत् ।
अतश्चेन्मम दासस्य कुरु स्कन्धाधिरोहणम् ॥

११२. यथा रङ्गेश्वरस्याज्ञा तथैव क्रियतां गुरो ।
दिव्या श्रीरङ्गराजस्य नैवोल्लंघ्येयमावयोः ॥

११३. स तद्वचनमाकर्ण्य श्रीपाणो भगवत्परः ।
कृताञ्जलिर्न्यस्तभरः परतन्त्रः समास्थितः ॥

---

விண்ணப்பித்தார். திருப்பாணரோவெனில் அந்த மங்களமான வார்த்தையைக் கேட்டு, அந்த அந்தணர்தலைவரைக் குறித்துத் தமது தாழ்வை முன்னிட்டுக் கொண்டு கை கூப்பிவணங்கி, "பெரியவரே! நான் இழிந்த சாதியில் பிறந்தவன். மிகச்சிறந்ததான திருவரங்கம் பெரிய கோயிலை நான் கால்களாலே தீண்டவும் தகாதவன். ஆகையால், அந்த நகரத்துக்குள் நுழையவே மாட்டேன்'' என்று கூறினார். அந்த லோகஸாரங்கமுனிவரும் அந்தவாக்யத்தை ஏற்றுக்கொண்டு, "அப்படியானால் அடியேனை என்னுடைய தோள்களிலே ஏறி வீற்றிருப்பீராக. பெரியவரே! திருவரங்கன் ஆணையிட்டபடியே செய்வீர். திருவரங்கராஜனுடைய திருவாணையை நாம் இருவரும் மீறக்கூடாதன்றோ'' என்று கூறினார், அவருடைய வார்த்தையைக் கேட்டு பகவத் பக்தரான அந்தத் திருப்பாணர் கைகூப்பியவராய்

११४. तदा सारङ्गयोगीन्द्रः स्कन्धाभ्यां भगवत्परः ।
उवाह भक्त्या श्रीपाणं रंगेशं खगराडिव ॥
११५. वेदपारायणं पश्चात् प्रबन्धाध्ययनं पुरः ।
ब्राह्मणा वैष्णवाश्चक्रुः तस्य श्रीरङ्गशासनात् ॥
११६. यथैव मुक्तं पुरुषं समादायातिवाहिकः ।
निनाय सर्वविभवैर्वैकुण्ठे मणिमण्डपम् ॥
११७. तथा सारङ्गयोगीन्द्रः श्रीपाणमनयत्तदा ।
महता वैभवेनैव श्रीरंगे तिरुमण्डपम् ॥

---

எம்பெருமானிடமே ஸர்வ ப4ாரத்தையும் ஒப்படைத்தவராய், லோகஸாரங்க3ர் தம்மை அவரது தோள்களில் ஏற்றிக்கொள்ளலாம்படி அவருக்கு வசப்பட்டு நின்றார். அப்போது ப4க3வத்3 ப4க்தரான லோகஸாரங்க3 மாமுனிவரும், கருடன் திருவரங்கனைத் தோளில் ஏற்றிக்கொள்வது போல் திருப்பாணரை ப4க்தியோடு தமது தோள்களில் ஏற்றிக்கொண்டார். அப்படித் திருப்பாணர் செல்லுகையில், திருவரங்கனின் ஆணையாலே ஸ்ரீரங்க3த்திலுள்ள அந்தண வைஷ்ணவர்கள் முநிவாஹநருக்குப் பின்னாலே வேத3பாராயணமும் முன்னால் தி3வ்யப்ரப3ந்த4 அநுஸந்த4ானமும் செய்து கொண்டு சென்றார்கள். முக்த புருஷனை ஆதிவாஹிகரான (பரமபத3த்திற்கு அழைத்துச் செல்பவரான) நித்யஸூரி ஸ்ரீவைகுண்ட2த்திலே திருமாமணி மண்டபத்திற்கு எல்லாச் சிறப்புக்களுடன் அழைத்துச் செல்வது போலே, லோகஸாரங்க3 மாமுனிவரும் பெரிய சிறப்புக்களோடு திருப்பாணரை ஸ்ரீரங்க3த்தில் பெரியதிருமண்டபத்திற்கு அப்போது அழைத்துச்சென்றார்.

११८. स तदा रङ्गराजस्य शासनान्मुनिवाहनः ।
सम्यक् प्रदक्षिणं कृत्वा विमानस्य कृताञ्जलिः ॥

११९. श्रीरङ्गशायिनस्तस्य सन्निधिं चागमत्तथा ।
यथैव दर्शयन्नित्यदरिद्राय महानिधिम् ॥

१२०. तदा रंगेश्वरस्तस्मै श्रीपाणाय कृपानिधिः ।
दर्शयामास चात्मीयं दिव्यमङ्गलविग्रहम् ॥

१२१. किरीटकेयूरसुवर्णकुण्डल-
प्रलम्बमुक्तामणिहेमभूषणम् ।
विशालवक्षःस्थलहेमकौस्तुभम्
श्रिया च देव्याध्युषितोरुवक्षसम् ।

---

## திருப்பாணர் திருவரங்கனை ஸேவித்தல்

118-*126. அப்போது திருவரங்கனின் ஆணையாலே முநிவாஹநர் கைகூப்பி நின்றவராய் ஶ்ரீரங்க₃ விமானத்தை நன்கு வலம் வந்து, திருவரங்கத்தில் பள்ளி கொண்ட பெருமானின் ஸந்நிதி₄யை அடைந்தார். அப்போது கருணைக்கடலான ஶ்ரீரங்கே₃ஶ்வரன் நித்யதரித்திரனுக்குப் பெருநிதியைக் காட்டுவதுபோலே அந்தத்திருப்பாணருக்குத் தனது தி₃வ்ய மங்க₃ள விக்₃ரஹத்தைக் காட்டினன். "கிரீடம், தோள்வளைகள், பொற்குண்ட₃லங்கள், தொங்கும் முத்துமாலைகள், பொன்மணியாப₄ரணங்கள் ஆகியவற்றை அணிந்திருப்பவனும், பரந்த திருமார்பிலே அழகிய கௌஸ்துப₄மணியை அணிந்திருப்பவனும், ஶ்ரீதே₃வி வாழும் திருமார்பை உடையவனும், ஒளிவீசும் அழகிய பொற்பீதகவாடையை உடுத்தவனும், அழகிய மேக₂லாப₄ரணத்தாலே ஒளி விஞ்சிநிற்கும் திருக்கால்களை உடையவனும், ஆழ்ந்த நீர்நிலையில் உண்டான தாமரைக்

१२२. प्रतप्तचामीकरचारुवाससं सुमेखलापूरितशोभिताङ्घ्रिकम् ।
सुवर्धिनीजातमृणालकोमलम् दधानमच्छच्छवियज्ञसूत्रकम् ॥

१२३. भुजोपधानं प्रसृतान्यहस्तं निकुञ्चितोत्सारितपादयुग्मम् ।
सुदीर्घमुद्बाहुमुदग्रवेषं भुजङ्गतल्पं पुरुषं ददर्श ॥

१२४. एवमुक्तप्रकारेण ब्रह्मादिनिखिलैः सुरैः ।
इक्ष्वाकुप्रमुखैस्सर्वैर्भूपैश्च परिपूजितम् ॥

१२५. रंगेशं शेषशय्यायां शयानं रङ्गनायकम् ।
संयक् दृष्ट्वाथ संसेव्य श्रीपाणो भगवत्परः ॥

१२६. आपादमस्तकं तस्य तस्थावनिमिषो यथा ।
रंगेशावयवान्सर्वान् दृष्ट्वा तत्पादपद्मयोः ॥

---

கொடியின் நூல்கள்போலே அழகியதாய், வெளுத்திருப்பதான பூணூலை த₄ரித்திருப்பவனும், வலது கையைத் தலையணையாகக் கொண்டிருப்பவனும், இடது கையை நீட்டியிருப்பவனும், சிறிது வளைந்து நீண்டிருக்கும் திருவடியிணைகளை உடையவனும், நீண்ட திருமேனியையும், உயர்ந்த திருத்தோள்களையும், அழகிய வேஷத்தையும் உடையவனும், ஆதிசேஷன் மேல் படுத்திருப்பவனுமான எம்பெருமானைக் கண்டான்'' என்று சொல்லப்பட்ட ரீதியில் பிரமன் முதலான எல்லா தே₃வர்களாலும், இக்ஷ்வாகு முதலான எல்லா அரசர்களாலும் ஆராதி₄க்கப்பட்டவனாய், ஆதிசேஷனாகிற படுக்கையில் படுத்₃திருப்பவனாய், ஶ்ரீரங்க₃த்திற்கு அரசனான திருவரங்கனை ப₄க₃வத்₃ப₄க்தரான திருப்பாணர் நன்கு கண்டு, திருவடியிலிருந்து திருமுடி வரையில் நன்கு ஸேவித்து, கண் இமையாத தே₃வன் போலே இமை கொட்டாமல் நின்றார்.

१२७. वेदान्तिन्! भक्तिभावेन संजातप्रीतिमानभूत् ।
सर्वानवयवान् हित्वा स्तन्यपाने च यः शिशुः ॥

१२८. लोके स्तनन्धयो मातुः स्तनमेवाग्रहीत् यथा ।
शेषत्वप्राप्तये शेषभूतस्य प्रथमं किल ॥

१२९. एतदेवावतरणतरं तत्पादपङ्कजम् ।
पादादिकेशपर्यन्तं दिव्यमङ्गलविग्रहम् ॥

१३०. अनुभूयासकृद्भक्त्या श्रीपाणो रङ्गशायिनः ।
तदानुभवसंजातप्रेमातिशयहेतुना ॥

१३१. तमेवार्थं समुद्धृत्य रंगेशानुभवोद्भवम् ।
संगृह्य दशगाथाभिः जगत्संरक्षणाय च ॥

---

அமலனுதிபிரான் அருளிச்செய்தல்

126*-*134. வேத₃ாந்தி நஞ்ஜீயரே! திருவரங்கனின் அவயவங்கள் அனைத்தையும் ப₄க்தியோடு கண்டு, திருப்பாணர் அவனது திருவடித்தாமரைகளில் மிகவும் ஈடுபடுபவரானார். ஒரு பால் குடிக்கும் கைக்குழந்தை தாயினுடைய மற்ற எல்லா அவயவங்களையும் விட்டு, பால் குடிப்பதற்காகத் தாயின் முலையையே பற்றுவது போன்றது இது. ஶேஷபூ₄தனான ஜீவனுக்கும் தன் ஶேஷத்வம் ஸித்₃தி₄ப்பதற்காக எம்பெருமானுடைய திருவடித்தாமரையிலேயேயன்றோ இழியவேண்டியுள்ளது. (அப்படித் திருவடியை அனுப₄விப்பதோடு நில்லாமல்) ஸ்ரீரங்க₃நாத₂னுடைய திருவடியிலிருந்து திருமுடிவரையில் தி₃வ்ய மங்க₃ள விக்₃ரஹம் முழுவதையும் ப₄க்தியோடு பலமுறை அநுப₄வித்து, திருப்பாணர் அப்போது அந்த அநுப₄வத்தினாலுண்டான அன்பின் மிகுதியாலே, அந்த அர்த்த₂த்தையே பொதிந்துகொண்டதாய், திருவரங்கனின்

१३२. चकारामलनाद्याख्यं प्रबन्धं द्राविडं महत् ।
एवं प्रबन्धं कृत्वाशु श्रीपाणो भगवत्परः ॥

१३३. निर्व्याजकृपया सम्यक् जगत्सर्वमपालयत् ।
रंगेशो वेङ्कटेशश्च तेनाभूत्तत्र सन्नुतः ॥

१३४ ईषत्स्तुतो वेङ्कटेशो रंगेशो बहुशः स्तुतः ।
लोकसारङ्गयोगीन्द्रमुखास्ते सकला जनाः ॥

१३५. श्रीपाणं सम्यगाश्रित्य कृतार्था ह्यभवन् तदा ।
एवं दिव्यप्रबन्धेन कृतलोकैकरक्षणम् ॥

---

அநுப₄வத்தால் உண்டானதான "அமலனாதிபிரான்" என்னும் தமிழாலான பத்துப்பாட்டுக்கள் கொண்ட பெரிய தி₃வ்யப்ரப₃ந்த₄த்தை உலகை ரக்ஷிப்பதற்காகச் சுருக்கி அருளிச்செய்தார். எம்பெருமானிடம் ஈடுபட்டவரான திருப்பாணர் திருவரங்கனை ஸேவித்தவுடன் இவ்வண்ணமாக தி₃வ்ய ப்ரப₃ந்த₄த்தை நிர்ஹேதுக க்ருபையாலே அருளிச்செய்து உலகனைத்தையும் நன்கு ரக்ஷித்தருளினார். அந்த தி₃வ்ய ப்ரப₃ந்த₄த்தில் திருவரங்கனும், திருவேங்கடமுடையானும் அவரால் மங்க₃ளாஶாஸனம் செய்யப்பெற்றனர். திருவேங்கடமுடையான் இரண்டு பாட்டுக்களில் சுருக்கமாகத் துதிக்கப்பட்டான். திருவரங்கனோ ஒவ்வொரு பாட்டிலும் விரிவாகத் துதிக்கப்பட்டான்.

## திருப்பாணர் அரங்கன் திருமேனியில் ஐக்யமடைதல்

134*-142. லோகஸாரங்க₃முனிவர் முதலான அங்கிருந்த எல்லா ஜனங்களும் அப்போதே அந்தத் திருப்பாணாழ்வாரை ஆஶ்ரயித்துப் பேறுபெற்றவர்களானார்கள். இவ்வண்ணமாக, தி₃வ்யப்ரப₃ந்த₄த்தினாலே ஒப்பற்ற முறையில் உலகை ரக்ஷித்தவராய், கைகூப்பி

१३६. कृताञ्जलिपुटं धीरं भगवद्भक्तिपारगम् ।
स्वपादपद्माभिमुखं श्रीपाणं वीक्ष्य रङ्गराट् ॥
१३७. निर्हेतुकदयावेशात्स शरीरेण सादरम् ।
अङ्गीचकार भगवान् सर्वेषां पश्यतां तदा ॥
१३८. सर्वेषां पश्यतां तत्र रङ्गेशपदपद्मयोः ।
श्रीपाणो ह्यगमद्भक्त्या नित्यकैङ्कर्यवाञ्छया ॥
१३९. नित्यकैङ्कर्यनिरतो रंगेशपदपद्मयोः ।
श्रीपाणस्तत्र वेदान्तिन्! अद्यापि परिदृश्यते ॥
१४०. एवं भक्तपराधीनो भगवान् रङ्गनायकः ।
संप्राप्तः परमामोदं श्रीपाणेन श्रिया सह ॥
१४१. सदूरागतपुत्रेण सभार्यो जनको यथा ।
तदद्भुततमं दृष्ट्वा जनास्सर्वेऽनिशं महत् ॥

---

நிற்பவராய், அறிவாளிகளில் தலைவராய், ப4க3வத்3 ப4க்தியைக் கரைகண்டவராய், தன் திருவடித் தாமரை யையே நோக்கி நிற்பவரான அந்தத் திருப்பாணாழ் வாரைக் கடாக்ஷித்து, அங்கிருக்கும் ஜனங்கள் எல்லோரும் கண்டுகொண்டிருக்கும்போதே நிர்ஹேதுக க்ருபையாலே திருவரங்கராஜனை எம்பெருமான் பேரன் போடு அவரை அவரது சரீரத்தோடு ஏற்றுக்கொண்டான். திருப்பாணாழ்வாரும் திருவரங்கனுக்கு எப்போதும் கைங் கர்யம் செய்துகொண்டிருக்கவேண்டும் என்னும் விருப்பத் தாலே அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும் போதே ப4க்தி யோடு திருவரங்கனின் திருவடித் தாமரையை அடைந்தார். வேத3ாந்தியே! திருவரங்கனின் திருவடித்தாமரைகளில் எப் போதும் கைங்கர்யம் செய்பவராகத் திருப்பாணாழ்வார் (ஞானி களால்) இன்றும் காணப்படுகிறார். தூ3ரதே3ஶத்திலிருந்து வந்த பிள்ளையைக் கண்டு தாயோடு கூடிய தகப்பன் உகப்பது

१४२. विस्मयं परमं गत्वा नत्वा रंगेश्वरं तदा ।
प्रपेदिरे स्वसद्मानि रंगेशानुज्ञया तदा ॥

१४३. एतच्चरित्रं वेदान्तिन्! श्रीपाणस्य महाद्भुतम्।
पुरातनं पुण्यतमं संक्षेपात्कथितं तव ॥

१४४. निचुलापुरमाहात्म्ये सम्यगेत्र समीरितम् ।
पाणावतारचरितं द्रष्टव्यं तत् त्वयाऽनघ ॥

१४५. श्रीपाणचरितं पुण्यं ये शृण्वन्ति पठन्ति च ।
ते सर्वे पापनिर्मुक्ता यास्यन्ति परमां गतिम् ॥

---

போலே ப₄க்த பராதீ₄னனை அரங்கநகரப்பன் ஸ்ரீரங்கநாச்சியாரோடு கூடியவனாய், திருப்பாணரைப் பெற்றவுடன் பேரானந்தம் அடைந்தான். அங்கிருந்த ஜனங்கள் அனைவரும் அப்போது அந்தப் பேராச்சரியத்தைக்கண்டு எல்லையற்ற பெருவியப்பை அடைந்தவர்களாய், திருவரங்கனை வணங்கி அவனுடைய அனுமதியுடன் தங்கள் வீடுகளுக்குத் திரும்பிச் சென்றனர்.

## முடிவுரை

143-146. குற்றமற்ற வேதா₃ந்தியே! பேராச்சரியமானதாய், பழங்காலத்தில் நடந்ததாய், மிகப்புண்ணியமானதான திருப்பாணாழ்வாருடைய இந்தச் சரித்திரம் சுருக்கமாக உமக்குச் சொல்லப்பட்டது. நிசுளாபுர மாஹாத்ம்ய நூலில் இந்தத் திருப்பாணாழ்வாரின் சரித்திரம் மிக விரிவாகவும் தெளிவாகவும் சொல்லப்பட்டிருப்பதை நீர் அதிலேயே கண்டு கொள்ளலாம். திருப்பாணரின் புனிதமான சரித்திரத்தை எவர்கள் கேட்கிறார்களோ அல்லது படிக்கிறார்களோ அவர்களனைவரும் பாபங்கள் நீங்கப்பெற்றுப் பரமபதத்தை அடைவார்கள்.

१४६. श्रीवत्सांश उपायतः कलियुगे चोलावनौ ब्राह्मण·
क्षेत्रे श्रीनिचुलापुरे समभवत् यो व्रीहिगुच्छे महान् ।
पञ्चाशद्भुवि वत्सराण्यपनयद्रङ्गेशपादाब्जयो
वीणापाणिरुदञ्चितः प्रतिदिनं तं पाणदेवं भजे ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे श्रीपाणचरितं नाम सप्तनवतितमोऽध्यायः ॥

## ॥ अष्टनवतितमोऽध्यायः ॥

१. श्रीपाणस्य कथां पुण्यां श्रुत्वास्मद्यतिरद्भुताम् ।
श्रीपराशरभट्टार्यं भूयो वचनमब्रवीत् ॥

---

கலியுக₃த்தில், சோழ தே₃ஶத்தில் நிசுளாபுரி என்னும் உறையூரில் ஒரு ப்₃ராஹ்மணனுடைய வயலில் நெற்கதிரிலே ஸ்ரீவத்ஸமென்னும் மறுவின் அம்ஶமாக எந்தப் பெரியவர் தோன்றி, ஐம்பது வருடங்கள் வாழ்ந்து, வீணையைக் கையிலேந்தி தினந்தோறும் திருவரங்கனின் திருவடித்தாமரையில் க₃ான கைங்கர்யம் செய்து அத்திருவடியிலேயே ஒன்று சேர்ந்தாரோ அந்தத் திருப்பாணாழ்வாரிடம் ப₄க்தி செய்கிறேன்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீபராசரபட்டர் வேத₃ாந்தி ஸம்வாத₃த்தில் திருப்பாணாழ்வார் சரித்திரமாகிய தொண்ணூற்றேழாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## தொண்ணூற்றெட்டாம் அத்தியாயம்

### பரகாலரின் அவதாரம்
### நஞ்சீயரின் கேள்வி

1—*3. பரமபாவனமான திருப்பாணாழ்வாரின் ஆஶ்சர்யமான கதையைக்கேட்டு, நஞ்சீயர் ஸ்ரீபராஶரப₄ட்டரைக் குறித்து, "ஆசார்யஶ்ரேஷ்ட₂ரே! திருப்பாணாழ்வாரு

२. श्रीपाणस्याद्भुतकथा पुण्या त्वत्तः श्रुता मया ।
श्रोतुमिच्छामि भगवन् कथां श्रीकलिवैरिणः ॥
३ कथयस्व महाभाग श्रोतुं कौतूहलं हि मे ।
प्रतिगृह्य स तद्वाक्यं भट्टार्यस्तस्य सादरम् ॥
४. कथामकथयत्तस्मै सकलां कलिवैरिणः ।
परकालहरिं वन्दे पादपद्मगुहाश्रयम् ॥
५. उन्नतप्रतिकूलेभकुम्भसंभेदविभ्रमम् ।
नादप्रकाशसंत्रस्तशैवशाक्यादिकद्विपम् ॥
६ परकालमृगेन्द्रं तं प्रपद्येऽच्युतवन्दनम् ।
इतीव वन्दनं कृत्वा भट्टार्य इदमब्रवीत् ॥

---

டைய அத்₃பு₄தமாய், பாவனமான வரலாறு உம்மிட மிருந்து என்னால் கேட்கப்பட்டது. கலிகன்றியின் வரலாற்றைக் கேட்க விரும்புகிறேன். அதைக் கேட்பதில் பெரு விருப்பம் உள்ளது; சொல்லுவீராக ” என்று மறுபடியும் கேட்டார்.

## நாலு யுகங்களில் சார்ங்க₃த்தின் அவதாரங்கள்

3*—*17 நஞ்சீயரின் இக்கேள்வியை ஏற்றுக் கொண்டு ஸ்ரீபராஶரப₄ட்டர் கலிகன்றியின் கதை முழுவதையும் அவருக்கு அன்போடு சொன்னார் — “எம்பெருமானுடைய திருவடித்தாமரையாகிற குகையில் வசிப்பதாய், புறச்சமயிகளாகிற மதங்கொண்ட யானைகளின் மத்தகத்தைப் பிளப்பதையே விளையாட்டாகக் கொண்டதான பரகாலர் என்னும் சிங்கத்தை வணங்குகிறேன். தமது நாதத்தாலும், ஒளியாலும் சைவர் சாக்கியர் (பௌத்₃த₄ர்) முதலான யானைகளை பயந்தோடச் செய்வதாய், அச்சுதனை வணங்குவதான பரகாலர் எனும் சிங்கத்தைச் சரணடைகிறேன்.” என்று வணங்கி பட்டர் அந்த வரலாற்றைச் சொல்லத் தொடங்கினார். பரமபாவனமான கலி

७. प्रवक्ष्यामि कथां पुण्यां श्रूयतां कलिवैरिणः।
विष्णुशार्ङ्गांशसंभूतः परकालो महायशाः॥
८. लोकसंरक्षणे विष्णुर्यथा चैषस्तथा ध्रुवम्।
आज्ञप्तो विष्णुना तेन परकालो युगे युगे॥
९. कृतावतारो मेदिन्यां धर्मसंस्थापनाय च।
धर्मान् संस्थापयामास गूढान् भागवतान् शुभान्॥
१०. चतुर्युगेषु संजज्ञे चतुर्वर्णेषु चानघ।
एष शार्ङ्गांशजः श्रीमान् परकालो महायशाः॥
११. ब्राह्मणः कर्दमो भूत्वा संजातः प्रथमं पुरा।
यथा कृतयुगे सम्यक् सर्वं जगदपालयत्॥

---

கன்றியின் இவ்வரலாற்றைச் சொல்லுகிறேன், கேட்பீராக! எம்பெருமானுடைய சார்ங்க₃த்தின் அம்சமாகப் பிறந்தவர் பெரும்புகழாளரான பரகாலர். எம்பெருமான் உலகத்தை ரக்ஷிப்பதற்காக அவதரித்தது போலே இவரும் அவதரிக்கிருர். குற்றமற்ற வேத₃ாந்தியே! எம்பெருமானுல் நியமிக்கப்பட்டவராய், த₄ர்மத்தை நிலைநிறுத்துவதற்காக இந்தப் பரகாலர் ஒவ்வொரு யுகத்திலும் இவ்வுலகில் அவதரித்து ரஹஸ்யமாய், மங்க₃ளமானவையான ப₄ாக₃வத த₄ர்மங்களை நிலைநிறுத்துகிருர். சார்ங்கத்தின் அம்சமாக அவதரித்தவராய், கைங்கர்யச் செல்வம் மிக்கவராய், பெரும் புகழாளரான இந்தப் பரகாலர் நான்கு யுக₃ங்களிலும் முறையே நான்கு வர்ணங்களில் அவதரித்தார். க்ருத யுக₃த்தில் ப்₃ராஹ்மணனை கர்த்த₃ம ப்ரஜாபதியாக முதலில் அவதரித்து, உலகனைத்தையும் நன்கு ரக்ஷித்தார். அவ்வண்ணமே அடுத்ததான த்ரேதா யுகத்தில் உபரிசரவஸு என்னும் க்ஷத்திரியர் தலைவராய் அவதரித்து,

१२. तथोपरिचरो भूत्वा त्रेतायां वसुनामकः ।
रक्ष क्षत्रधर्मेण स जगत् क्षत्रियर्षभः ॥

१३. द्वापरे शंखपालाख्यो जज्ञे वैश्यकुलोत्तमः।
स चकाराखिलान् धर्मान् महात्मा भगवत्परान् ॥

१४. चतुर्थवर्णे संजज्ञे ततः कलियुगे महान् ।
परकाल इति ख्यातो लोकसंरक्षणाय सः ॥

१५. लोकसंरक्षणं तत्र सर्वत्र विदधेऽनघ ।
लोकसंरक्षणं कार्यं परकालस्य सर्वदा ॥

१६. आश्लिष्टपुरमाहात्म्ये द्रष्टव्यैषा कथा किल ।
अवतारं प्रवक्ष्यामि परकालस्य सांप्रतम् ॥

१७. श्रूयतामवधानेन निगृह्येन्द्रियवाजिनः ।
वेदान्तिन् चोलदेशेऽस्मिन् पूर्वाब्धेः पश्चिमे तटे ॥

---

க்ஷத்ரியத₄ர்மத்தாலே உலகை ரக்ஷித்தார். அடுத்ததான த்₃வாபர யுக₃த்தில் ஶங்க₂பாலன் என்னும் வைஶ்ய குலத்தலைவனாகப் பிறந்து இந்த மஹாபுருஷர் ப₄க₃வத் பரமான எல்லா த₄ர்மங்களையும் அநுஷ்டி₂த்துக் காட்டினார். இந்தப் பெரியவர் அடுத்ததான கலியுக₃த்தில் நாலாவது வர்ணத்தில் பரகாலர் என்று பெயர் பெற்றவ ராய் உலகை ரக்ஷிப்பதற்காக அவதரித்தார். இப்படி நான்கு யுக₃த்திலும் இவர் உலகை ரக்ஷிப் பதையே செய்தார். பரகாலருக்கு எப்போதும் லோக ரக்ஷணமே கடமையாயிற்று. "ஆஶ்லிஷ்டபுர மாஹாத்ம் யம்" என்னும் திருவாலிப்புராணத்தில் (ஶார்ங்க₃த்தின் யுக₃ாவதாரங்கள் பற்றிய) இவ்வரலாறு காணத்தக்கது. இப்போது (கலியுக₃த்தில் ஶார்ங்க₃ாம்ஶமாகத் தோன் றிய) பரகாலரின் அவதாரத்தைப் பற்றிக் கூறுகிறேன். இந்திரியங்களாகிற குதிரைகளை (மற்ற விஷயங்களில் ஓடாதபடி) அடக்கி, கவனமாகக் கேட்பீராக.

१८. आलिनाडिति विख्यातः कश्चिद्देशोऽस्ति वै किल ।
तत्र नागपुरीक्षेत्रं भाति चैकादशस्थलैः ॥

१९. तत्र सङ्गमुखं नाम पुण्यस्थानं च विश्रुतम् ।
तस्य पश्चिमदिग्भागे क्रोशद्वयविदूरतः ॥

२०. बिल्वारण्यं महापुण्यं तत्र दिव्यस्थलं महत् ।
नृसिंहपञ्चकं तत्र वर्तते दिव्यरूपकम् ॥

२१. परिरंभपुरी सैव विश्रुता जगतीतले ।
तत्प्रभावपराः श्लोका गीयन्ते बहवो भुवि ॥

२२. अथ कापि कवेरकन्यकासरितो रोधसि चोलमण्डले ।
परिरंभपुरी पयोनिधेः प्रथमस्याजनि पश्चिमे तटे ॥

---

## திருவாலி திருநகரிப்பெருமை

17*-28. குற்றமற்ற வேதா₃ந்தியே! கீழைக்கடலின் மேற்கரையில் ஆலிநாடு என்று பெயர்பெற்ற ஒருநாடு உள்ளதல்லவா? அதில் திருநாங்கூர் என்னும் க்ஷேத்ரம் பதினொரு தி₃வ்யதே₃ஶங்களுடன் விளங்குகிறது. அங்கு புகழ்பெற்ற சங்கமுகம் (காவேரி கடலுடன் கலக்கும் ஸங்க₃மஸ்த₂ானமான பூம்புகார்) உள்ளது. அதற்குமேற்கே இரண்டு க்ரோஶம் தூ₃ரத்தில் பி₃ல்வாரண்யம் என்னும் மிகப்புண்யமான தி₃வ்யஸ்த₂லம் உள்ளது. அங்கு தி₃வ்ய ரூபத்துடன் ஐந்து நரசிங்கர்கள் எழுந்தருளியிருக்கிறார்கள். அதுவே இவ்வுலகில் பரிரம்ப₄புரி (திருவாலி) என்று புகழ் பெற்றுள்ளது. அதன் பெருமையைக் கூறும் (பின்வரும் பொருளுடைய) பல ஶ்லோகங்கள் உலகில் ப்ரஸித்₃தி₄ பெற்றுள்ளன:- (1) கீழைக்கடலின் மேற்கரையில் காவேரிக் கரையில் சோழ மண்ட₃லத்தில் திருவாலியென்னும் ஊர் உள்ளது. (2) அவ்வூரில் சிறந்த நாட்டியச் செல்வனை

२३. नटयत्परिपाकसंपदा कमला बिल्ववनान्तरे पुरा ।
करुणापरिपूर्णचक्षुषा घनमालिङ्ग्यत यत्र विष्णुना ॥
२४. उपकण्ठगते उभे शुभे परितः काञ्चननूपुरापगे ।
नवहारलताविडम्बनं विदधाते भुवि यत्र निर्मले ॥
२५. कृतमुख्ययुगेष्वनुक्रमात् उदभूदत्र हरिः श्रुतीश्वरः ।
भुवि कर्दमवेधसस्ततः परिणामैर्वसुवैरमेघयोः ॥
२६. अथ काचिदभूत्तदन्तिके कमलापूर्णपुरी गरीयसी ।
कमलारमणाक्षिविभ्रमैः करुणार्द्रैः परिपूर्णवैभवा ॥
२७ परिरंभपुरस्यास्य कमलानगरस्य च ।
अन्यूननगरं नाम मध्ये भाति महत्तरम् ॥
२८. न्यूनता यत्र वसतां कदाचिदपि नास्ति यत् ।
तस्यैवान्यूनतानाम तेनाभूल्लोकविश्रुतम् ॥

---

எம்பெருமானுலே பி₃ல்வாரண்யத்தில் கருணை நிறைந்த கடாக்ஷத்தோடு லக்ஷ்மீ தே₃வி முற்காலத்தில் ஆரத்தழுவப்பட்டாள். (ஆலிங்க₃னம் செய்து கொண்ட இடமாகையால் திருவாலி என்று பெயர்)(3) அதன் அருகில் காவிரியின் கிளையான இரண்டு நிர்மலமான புண்ணிய நதிகள் புதிய ஹாரம் போல் விளங்குகின்றன. (4) க்ருத த்ரேதா த்₃வாபரயுக₃ங்களில் இங்குள்ள வேத₃ராஜனை எம்பெருமான் முறையே கர்த்த₃மப்ரஜாபதியிடமும். வஸுவிடமும், வைரமேக₄ன் என்னும் வைஶ்யனிடமும் அவதரித்தான்.(5) அந்தத் திருவாலிக்கருகில் திருநிறைந்ததான திருநகரி எனும் பெரியநக₃ரம் உள்ளது. அவ்வூர் கருணைநிறைந்த திருமகள்கேள்வனின் கடாக்ஷத்திற்கு இலக்கானதாய், நிறைந்த செல்வமுடைய தாய் விளங்குகிறது (6) அந்தத்திருவாலிக்கும்திருநகரிக்குமிடையில் குறையலூர் என்னும் பெரிய நகரம் உள்ளது; அங்கு வாழ்பவர்களுக்கு எப்போதும் குறைவே கிடையாது; அதனுலேயே குறையலூர் என்னும் புகழ்பெற்ற பெயர் அதற்கு உலகில் ஏற்பட்டது.

२९. आलिनाडुडैयाराख्यो दण्डदानिकभूपतिः ।
बभूव पादजः कश्चित् जितारातिर्महायशाः ॥

३०. शिवभक्तिरतः श्रीमान् देवब्राह्मणपूजकः ।
लोकसंरक्षणार्थाय तस्य जज्ञे चतुष्कविः ॥

३१. वेदान्तिवन् कार्तिके मासि विष्णुशार्ङ्गांशजो महान् ।
तत्कालनिर्णयं वक्ष्ये शृणुष्वावहितोऽनघ ॥

३२, कलौ युगे गताब्दानां सप्तोत्तरशतद्वये ।
नलाब्दे कार्तिके मासि राकायां कृत्तिकोडुनि ॥

३३. चतुर्थवर्णे संजज्ञे शार्ङ्गांशाद्गुरुवासरे ।
परकालो महातेजाः चतुष्कविशिखामणिः ॥

---

## பரகாலரின் அவதாரம்

29-36. அந்தநாட்டில் 'ஆலிநாடுடையார்' என்னும் பெயருடையவராய், நாலாவது வர்ணத்தில் பிறந்தவராய், எதிரிகளை வென்றவராய், பெரும் புகழாளராய், தானைத்தலைவரான சிற்றரசர் இருந்தார். சிவப₄க்தி உடையவராயும், செல்வமுடையவராயும், தெய்வங்களையும் அந்தணர்களையும் ஆராதி₄ப்பவராகவும் இருந்தார் அவர். நாலுகவிப்பெருமாளான பரகாலர் என்னும் பெரியார் உலகை ரக்ஷிப்பதின் பொருட்டு விஷ்ணுவின் சார்ங்கத்தின் அம்சமாய்க் கார்த்திகை மாதத்தில் அவருக்குப் பிள்ளையாய் அவதரித்தார். அவருடைய காலத்தைக் கூறுகிறேன்; குறிக்கொண்டு கேட்பீராக. கலியுக₃த்தில் இருநூற்றேழு வருடங்கள் கழிந்தபின்பு நள வருஷத்தில் கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நக்ஷத்திரத்தில் வியாழக்கிழமை பௌர்ணமியன்று மஹா தேஜஸ்வியாய் நாலுகவிப்பெருமாளான பரகாலர் சார்ங்க₃த்தின் அம்சமாக நாலாவது வர்ணத்தில் அவதரித்தார்.

अस्यावतारश्लोकाश्च गीयन्ते प्रथिता भुवि ॥
३४. समजायत तत्र पादजप्रमुखे कश्चन नीलनामकः।
पुरुषोत्तमकार्मुकांशजः स्फुरिते कार्तिककृत्तिकोडुनि ॥
३५. कार्तिके कृत्तिकाजातं चतुष्कविशिखामणिम् ।
षट्प्रबन्धकृतं शार्ङ्गमूर्तिं कलिहरं श्रये ॥
३६ चतुर्थवर्णेऽच्युतशार्ङ्गशक्तया कृतोदयं कार्तिककृत्तिकायाम् ।
रंगेशकैङ्कर्यतरङ्गिताशं चतुष्कवीन्द्रं शरणं प्रपद्ये ॥
३७ आलिनाडुडैयाराख्यः पुत्रं दृष्ट्वा स तं वरम् ।
प्रमोदमतुलं प्राप्य बन्धुभिः सपुरोहितः ॥

---

அவருடைய (பின்வரும் பொருளுள்ள) அவதார ஶ்லோகங்கள் உலகில் ப்ரஸித்₃தி₄ பெற்று விளங்குகின்றன:— (1) ஒரு ஶூத்₃ர குலத்தலைவருக்குப் பிள்ளையாய், புருஷோத்தமனின் சார்ங்கமென்னும் வில்லின் அம்ஶமாய், கார்த்திகை மாதத்தில் கார்த்திகைநக்ஷத்திரத்தில் நீலன் என்னும் பெயருடையவர் (திருமங்கைமன்னன்) பிறந்தார். (2) கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நக்ஷத்திரத்தில் பிறந்தவராய், நாலுகவிப் பெருமாளாய், ஆறு பிரபந்தங்களை அருளிச்செய்தவராய், ஶார்ங்க₃த்தின் அம்ஶமான கலிகன்றியை ஆஶ்ரயிக்கிறேன். (3) நாலாவது வர்ணத்தில் அச்சுதனின் சார்ங்க₃த்தின் அம்ஶமாகக் கார்த்திகையில் கார்த்திகைநாளில் பிறந்தவராய், திருவரங்கனுக்குக் கைங்கர்யம் செய்வதில் பெருவிருப்பம் கொண்டவரான நாலு கவிப்பெருமாளை ஶரணடைகிறேன்.

## பரகாலர் சிற்றரசராய் ஆட்சிபுரிதல்

37-44. ஆலிநாடுடையார் தமது அந்தச் சிறந்த குமாரனைக்கண்டு, ஒப்பற்ற உகப்படைந்து, உறவினரோடும் புரோஹிதரோடும் கூடியவராய், ஸூர்யனைப் போல் ஒளிபெற்று

३८. चकार नामकरणं पुत्रस्यादित्यवर्चसः ।
आलिनाडनितिख्यातं सर्वलोकैकविश्रुतम् ॥

३९. पित्रोरानन्ददः श्रीमान् सुन्दराङ्गो महायशाः ।
अवर्धत महातेजा बालसूर्य इवोदितः ॥

४०. संप्राप्तयौवनः श्रीमान् शास्त्रेषु कुशलो महान् ।
राजसेवापरस्तस्थौ परकालस्ततः परम् ॥

४१. तेजस्विनं महात्मानं दीर्घबाहुं महामतिम् ।
परकालं जितारातिं नीतिशास्त्रविशारदम् ॥

४२. विलोक्य विस्मितोऽत्यन्तं संतुष्टश्चोलभूपतिः ।
देशाधिपत्यं प्रददौ जिष्णवे कलिवैरिणे ॥

---

விளங்கும் தம் பிள்ளைக்கு "ஆலிநாடன்" என்னும் உலகம் புகழும் பெயரையிட்டார். அழகிய அவயவங்களை உடையவராய், பெரும்புகழாளராய், பெற்றோருக்கு ஆனந்த₃மளிப்பவராய், எல்லாச்செல்வமும் உடையவராய், உதிக்கும் இளஞ்சூரியனைப் போலே பெரிய தேஜஸ்ஸை உடையவராக அவ்வாலிநாடர் வளர்ந்துவந்தார். யௌவன வயஸ்ஸை அடைந்தபின்பு அழகியவராய், கலைகளில் வல்ல பெரியவரான பரகாலர் அந்நாட்டு அரசனிடம் சேவைசெய்து வந்தார். அச்சோழநாட்டு அரசனும் தேஜஸ்ஸை உடையவராய், பெரிய திருமேனியுடைய வராய், நீண்ட கைகளை உடையவராய், கூரிய அறிவுடையவராய், எதிரிகளை வெற்றிகொள்பவராய், நீதி சாஸ்திரங்களில் வல்லவரான அப்பரகாலரைக்கண்டு வியப்புற்று மிகவும் உகந்தவனாய், வெற்றியல்லதறியாத அக்கலிகன்றிக்கு ஆலிநாட்டுக்குச் சிற்றரசராயிருக்கும் பதவியை

४३. धर्मेण पालयन्सर्वान् प्रजारञ्जनतत्परः ।
चोलराजप्रियस्तस्थौ परकालो महायशाः ॥

४४. कालं ग्राम्यसुखेन वल्लवजनैर्नित्यं क्षिपन् सादरं
वारस्त्रीवरनाट्यलोलनिपुणः सङ्गीतसक्तश्रुतिः ।
अज्ञातात्मविचारणः खलरतिः स्वच्छन्दवृत्तिः परं
रेजे शौर्यपराजिताखिलरिपुः नीलो नरेन्द्राश्रयः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे परकालावतारकथनं
नाम अष्टनवतितमोऽध्यायः ॥

---

அளித்தான். பெரும்புகழாளரான பரகாலரும், குடிகள் அனைவரையும் அறம்வழுவாமல் ரக்ஷித்துக்கொண்டு குடிகளை உகப்பிப்பவராய், சோழராஜாவுக்கு இனியவரா யிருந்தார். அப்படிச் சோழராஜாவிடம் ஸேவைபுரிந்த போது அந்த நீலன் என்னும் பெயருடைய பரகாலர் இனிய ஸ்திரீகளோடு சிற்றின்பத்தை விரும்பி அனுப₄ விப்பதில் காலத்தைப் போக்குபவராய், நாட்டியமாடும் பொதுமகளிரின் நாட்டியத்தில் ஈடுபாடும் ஞானமும் உடையவராய், சிற்றின்பச் சங்கீதங்களையே கேட்பவராய், தூர்த்தரோடு இசைபவராய், இஷ்டப்படி நடப்பவராய், தம் வீரத்தாலே எல்லா எதிரிகளையும் வென்றவராய், ஆத்மாவைப் பற்றிய ஆராய்ச்சியே அறியாதவராய் விளங்கினார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீ பராஶரப₄ட்டர் வேத₃ாந்தி ஸம்வாத₃த்தில் பரகாலரின் அவதாரத்தைச் சொல்லும் தொண்ணூற்றெட்டாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## ॥ एकोनशततमोऽध्यायः ॥

१. तस्य नागपुरस्याथ वायव्यां दिशि सत्तम ।
विश्रुतः क्रोशमात्रेण कश्चित् श्वेतह्रदो महान् ॥

२. वेदान्तिन् राजते तत्र फुल्लपङ्कजशोभिनः ।
तीरे तस्य तटाकस्य विष्णुः संराजते सदा ॥

३. श्वेतह्रदे शान्तमूर्तिः यः स एवेति गीयते ।
तस्मात् श्वेतसरः पुण्यमपङ्कं पङ्कजावृतम् ॥

४. तदद्भुततमं शुद्धं गम्भीरमतिविस्तृतम् ।
अप्सरोगणसङ्कीर्णं तन्मानससरो यथा ॥

---

## தொண்ணூற்றென்பதாம் அத்தியாயம்

## பரகாலருக்கும் சோழராஜாவுக்கும் யுத்தம்

## திருவெள்ளக்குளத்தில் தெய்வப்பெண்

1-7. சிறப்புற்ற வேத₃ாந்தியே! அந்தத் திருநாங்கூருக்கு வடமேற்கே ஒரு குரோச (2 மைல்) தூ₃ரத்தில், மலர்ந்த தாமரைகளால் விளங்கும் ஒரு பெரிய வெள்ளைக் குளம் விளங்குகிறது. அந்தக்குளத்தின் பெயரால் விளங்கும் திருவெள்ளக்குளமாகிற அவ்வூரில் அக்குளத்தின் கரையில் ஶாந்தமூர்த்தியான விஷ்ணு எப்போதும் ஸேவை ஸாதி₃க்கிருர். ஆகையால், அந்தத்திருவெள்ளைக் குளம் பாவனமாய், சேறற்றதாய், தாமரைகள் நிறைந்ததாய், மிகமிக ஆச்சரியமானதாய், பரிசுத்தமானதாய், ஆழ்ந்ததாய், மிகப்பரந்ததாய், அப்ஸரஸ்ஸுக்களின்

५. जलक्रीडेच्छया स्वर्गात् तमागत्यामराङ्गनाः ।
तस्मिन्सरोवरे सम्यक् जलक्रीडां विधाय च ॥
६. कुर्वन्त्येका तदा तस्थौ कुमुदापचयं ह्रदे ।
तां विहाय तदा स्वर्गं ययुः सर्वाः सुराङ्गनाः ॥
७. देवरूपं परित्यज्य मानुषं रूपमास्थिता ।
तटाकतीरे एकैव सा चचारामराङ्गना ॥
८. नागपुर्याः तदा कश्चिद्वैष्णवोऽथ भिषग्वरः ।
यदृच्छयाऽऽगतस्तत्र तामपश्यद्वराङ्गनाम् ॥

---

கூட்டம் நிறைந்ததாய் (நம் நாட்டின் வடஎல்லையிலுள்ள) மாநஸஸரஸ்ஸைப்போலே விளங்குகிறது. ஒரு சமயம் நீர் விளையாட்டுக்காக, ஸ்வர்க்கத்திலிருந்து அங்கு வந்த தெய்வப்பெண்கள், அந்தக்குளத்தில் நன்கு நீர் விளையாட்டைச் செய்துவிட்டு, அக்குளத்தில் குமுதமலரைப் பறிப்பதில் ஈடுபட்டு நின்ற ஒரு தெய்வப்பெண்ணை விட்டுவிட்டு மற்ற அனைவரும் சுவர்க்கம் சென்று விட்டார்கள். அந்த தெய்வப்பெண் தன் தேவ ரூபத்தைக் கைவிட்டு மனிதவுருவை எடுத்துக்கொண்டவளாய், அந்தத் திருவெள்ளைக் குளத்தின் கரையிலே தனியாகத் திரிந்துகொண்டிருந்தாள்.

## வைத்தியரின் பெண் குமுதவல்லி

8-21. அப்போது அந்தத்திருநாங்கூரில் இருந்த வைஷ்ணவரான வைத்தியர்தலைவர் அங்கு யத்ருச்சையாக வந்தவர் அந்த தெய்வப்பெண்ணைப் பார்த்தார்.

९. वात्सल्यादवलोक्याशु व्याजहार वचः शुभम् ।
का त्वं कमलपत्राक्षि! कन्यके! कलभाषिणि! ॥
१०. तटाकतीरे एका त्वं किमर्थं वर्तसेऽधुना ।
सा तद्वाक्यं समाकर्ण्य भिषग्वरमथाऽब्रवीत् ॥
११. मया सहाऽऽगताः कन्याः मां विसृज्याखिला गताः ।
एकाकी विचराम्यद्य साहं सर्वविवर्जिता ॥
१२. पितृमातृविहीनां मामवेह्यद्य भिषग्वर ।
मां युष्मत्सदनं तात भवान् संप्रापयेद्यदि ॥
१३. आगच्छामि त्वया सार्धं संशयोऽत्र न विद्यते ।
कन्यावचनमाकर्ण्य स तत्कर्णामृतं तदा ॥

---

பேரன்போடு உடனே அவளைப் பார்த்து, "தாமரையிதழ் போன்ற கண்ணை உடையவளே! இன்மொழியுடைய கன்னிகையே! இப்போது இக்குளக்கரையில் தனியாக ஏன் இருக்கிருய்?" என்னும் மங்க₃ளமான வார்த்தையைச் சொன்னர். அவள் அவருடைய வார்த்தையைக் கேட்டு, அந்த வைத்தியரைக் குறித்து, "வைத்திய ராஜரே! என்னேடுகூடவந்த கன்னிகைகள் அனைவரும் என்னை விட்டுச் சென்றுவிட்டார்கள். அப்படி அனைவராலும் கைவிடப்பட்ட நான் தனியாக அலைந்துகொண்டிருக்கிறேன். நான் தாய்தந்தையற்றவள் என்று அறிவீர். அப்பா! தேவரீர் என்னை உமது வீட்டிற்கு அழைத்துச் செல்வீராஞல், உம்மோடு கூடவே வருவேன். இதில் ஐயமில்லை" என்னும் வார்த்தையைச் சொன்னுள். அவரும் அப்போது காதுக்கு அமுதம்போன்ற அக்கன்னியின் வார்த்தையைக் கேட்டு, பேரன்போடு அவளைத் தம் மகளைப்போலே பார்த்து, "இப்போது நீர் என்னேடு

१४. पुत्रिकामिव संवीक्ष्य वात्सल्याद्वाचमब्रवीत् ।
यद्यागताऽद्य भवती मया मन्नगरं प्रति ॥

१५. आत्मजामिव संरक्ष्ये सर्वदा त्वां न संशयः ।
तेन भागवतेनोक्तमङ्गीकृत्य वचः शुभम् ॥

१६. मतिं चकार वेदान्तिन्! गमने तत्पुरस्य सा ।
भिषजश्चानपत्यत्वात् तामादाय कृतादरः ॥

१७. प्रविश्य नागनगरं गृहमागत्य संभ्रमात् ।
भार्याहस्ते ददौ कन्यां प्रहृष्टेनान्तरात्मना ॥

१८. तस्याश्चाप्यनपत्यत्वात्तां कन्यां प्रतिगृह्य हि ।
मेने तां वैद्यवनिता स्वात्मजामिव सादरम् ॥

१९. चकार नामकरणं दुहितुः स भिषग्वरः ।
ततः कुमुदवल्लीति दधार कुमुदं यतः ॥

---

எனது ஊருக்கு வருவீராகில், நான் எப்போதும் உம்மை என் மகளைப்போலே காப்பாற்றுகிறேன். இதில் ஐயமில்லை" என்று கூறினர். வேத₃ாந்தியே! ப₄க₃வத்₃ப₄க்தரான அவரால் சொல்லப்பட்ட மங்க₃ளமான வார்த்தையை ஏற்றுக்கொண்டு, அவள் வைத்தியரோடு அவரது ஊருக்குச் செல்ல எண்ணங்கொண்டாள். அந்த வைத்தியர் மக்கட் பேறு இல்லாமலிருந்தபடியால், ஆர்வத்துடன் அவளை அழைத்துக்கொண்டு திருநாங்கூருக்குச் சென்று, விரைவில் தமது வீட்டை அடைந்து, நெஞ்சில் உகப்புடன் அக்கன் னியை மனைவியின் கையில் ஒப்படைத்தார். அந்த வைத்தியரின் மனைவி மக்கட்பேறு இல்லாமையாலே, அக்கன்னியை ஏற்றுக் கொண்டு, அவளை ஆர்வத்தோடு தன் மகளாகவே நினைக்கலுற்ருள். அந்த வைத்தியர் தலைவர், (அவளைப் பார்த்தபோது) அவள் குமுதமலரைக்

२०. तदा दधार कुमुदं या तटाकस्य रोधसि ।
तस्याः कुमुदवल्लीति तेनाभून्नाम विश्रुतम् ॥

२१. अवर्धतानुदिवसं पित्रोरानन्ददायिनी ।
बाला कुमुदवल्ल्याख्या रूपलावण्यसंपदा ॥

२२. भिषग्वरो भागवतो दृष्ट्वा दुहितरं तदा ।
संजातयौवनां साध्वीं जितदेवाङ्गनाश्रियम् ॥

२३. अज्ञातकुलगोत्रैषा रंभेवाभाति रूपतः ।
ममात्मजा गुणवती कस्मै देयेत्यचिन्तयत् ॥

---

கையில் ஏந்தியிருந்தபடியாலே அவளுக்குக் 'குமுதவல்லி' என்று பெயர் வைத்தார். அவள் திருவெள்ளைக்குளக் குளத்தின் கரையில், குமுதமலரை த4ரித்து நின்றபடி யாலே, அவளுக்கு 'குமுதவல்லி' என்னும் பெயர் உலகில் பிரசித்திபெற்று வழங்கிற்று. சிறுமியான குமுதவல்லி பெற்றோருக்கு ஆனந்த3த்தை அளிப்பவளாய், உடலழ கிலும், அவயவங்களின் அழகிலும் தினந்தோறும் வளர்ந்து வந்தாள்.

## வைத்தியரின் கவலை

22-23. பு4க3வத்3பு4க்தரான அந்த வைத்தியராஜர், யௌவனவயஸ்ஸை அடைந்தவளாய், நற்குணம் நிறைந் தவளாய், தெய்வப்பெண்களின் அழகையும் வென்றிருப் பவளான தமது பெண்ணைப் பார்த்து, அப்போது "குலம், கோ3த்ரம் ஆகியவை அறியப்பெருதவளாய், ரம்பை4யைப் போலே வடிவழகுடையவளாய், கு3ணங்கள் நிறைந்தவ ளாய், என் பெண்ணை இக்கன்னியை யாருக்கு மணம் செய்விப்பது?" என்று கவலைப்பட்டார்.

२४. तदा नीलस्य वेदान्तिन्! चाराः केचित्प्रियंवदाः ।
तस्याः कुमुदवल्ल्याश्च रूपलावण्यसंपदम् ॥
२५. सम्यगावेदयाञ्चक्रुः तस्मै ते कलिवैरिणे ।
बहुशः श्लाघयित्वोक्तं चारैः सम्यङ्निवेदितम् ॥
२६. स तदद्भुतलावण्यं द्रष्टुकामश्चतुष्कविः ।
यत्र यत्र यथापूर्वं यत्कार्यं समवस्थितम् ॥
२७. तत्र तत्र तथैवासौ तद्राज्ञो विनिधाय च ।
कृतत्वरः क्षणेनैव तत्रत्यैरभिसंवृतः ॥
२८. स्वपुरान्निर्ययौ वेगात् तदा नागपुरीं प्रति ।
अभ्येत्य नागनगरीं भिषग्राजस्य वेश्मनि ॥
२९. तेन संमानितस्तस्थौ कृतासनपरिग्रहः ।
तेन संभाषमाणोऽसौ संयग्भागवतेन वै ॥

---

## பரகாலர் குமுதவல்லியைப் பெண்கேட்டது

24-*37. வேதாந்தியே! அப்போது இனிமையாகப் பேசும் நீலனின் ஒற்றர்கள் சிலர், அக்கலிகன்றியிடம் குமுத₃வல்லியின் அழகுகளையும் நன்கு விண்ணப் பித்தனர். அப்படி ஒற்றர்களால் பலவித₄மாகப் புகழ்ந் துரைக்கப்பட்ட அவ்வழகைக் காண்பதற்காக நாலுகவிப் பெருமாள், அரசனின் கார்யங்கள் எந்தெந்த இடத்தில் எப்படியெப்படியிருந்தனவோ அது அதை அப்படியப்படியே வைத்துவிட்டு, அப்போதே நொடிப்பொழுதில் தன் மனிதர் களோடு கூடியவராய், விரைவில் தனது ஊரிலிருந்து வேகமாக வந்து திருநாங்கூரை அடைந்து, வைத்திய ராஜரின் வீட்டில் அவர் அளித்த ஆஸனத்தை ஏற்றுக் கொண்டு அவரால் கௌ₃ரவிக்கப்பட்டு அமர்ந்தார். அந்த ப₄ாக₃வதரோடு நன்கு பேசிக்கொண்டிருந்தபோது பரகாலர்

३०. अपश्यत्तत्सुतां तत्र बालां सुरसुतोपमाम् ।
तां दृष्ट्वा विस्मितोऽत्यन्तं संप्रहृष्टः चतुष्कविः ॥

३१. स तं भागवतं प्रीत्या भिषग्राजं वचोऽब्रवीत् ।
अनपत्यस्य भवतः कस्मात्कन्यैवमागता ॥

३२. वद तत्कारणं मेऽद्य श्रोतुं कौतूहलं परम् ।
अङ्गीकृत्य स तद्वाक्यं तदागमनकारणम् ॥

३३. सम्यङ्निवेद्य वेदान्तिन्! तत्सर्वं कलिवैरिणे ।
ममानपत्यतादोषस्त्वनयैव प्रमार्जितः ॥

३४. इत्युक्त्वाथ पुनः प्राह परकालं भिषग्वरः ।
अज्ञातकुलगोत्रैषा कन्यका वरवर्णिनी ॥

३५. कल्याणगुणसंयुक्ता कस्य भार्या भविष्यति ।
इति व्याकुलचित्तोऽसौ तदा भागवतोऽभवत् ॥

---

இளம் வயஸ்ஸையுடையவளாய், தெய்வப்பெண் போன்றவளான அவரது பெண்ணைப் பார்த்தார். அவளைக் கண்டு மிகவும் வியப்புற்று உகந்த நாலுகவிப் பெருமாள், வைத்தியராஜரான அந்த ப₄ாக₃வதரை அன்புடன் பார்த்து, "மக்கட்பேறற்ற தேவரீருக்கு இக்கன்னி எப்படிக் கிடைத்தாள்? இவளை நீர் அடைந்த காரணத்தைச் சொல்லுவீராக. எனக்கு இதில் இப்போது மிகுந்த ஆவல் உள்ளது" என்று வார்த்தை சொன்னார். அவரது வார்த்தையை ஏற்றுக்கொண்ட ப₄ாக₃வதரான வைத்தியர் தலைவர் குமுதவல்லி தன்னிடம் வந்த காரணத்தை விரிவாகப் பரகாலரிடம் நன்கு கூறி, "எனக்கு மக்கட்பேறில்லாமலிருந்த குறை இவளாலேயே துடைக்கப்பட்டது" என்று சொல்லி, மறுபடியும் பரகாலரைப் பார்த்து, "குலம், கோ₃த்திரம் அறியப்பெறாதவளாய், அழகியவளாய்,

३६. प्रहृष्टः तन्निशम्यासौ वैष्णवं स भिषग्वरम् ।
परकालः सुसंपूज्य सद्वस्त्रांबरभूषणैः ॥

३७. पत्न्यर्थं वरयामास भिषग्राजसुतां वराम् ।
अङ्गीकृत्य स तद्वाक्यं सभार्यः संप्रहर्षितः ॥

३८. प्रदातुमैच्छत्तां कन्यां श्रीमते कलिवैरिणे ।
पित्रोः कुमुदवल्ल्याख्या तमुद्योगं निशम्य सा ॥

३९. अवोचत्परकालस्य सन्निधौ पितरौ प्रति ।
तापः पुण्ड्रस्तथा नाम मन्त्रो यागश्च पञ्चमः ॥

---

நற்குணம் நிறைந்தவளான இக்கன்னிகை எவருக்கு மனைவியாகப்போகிறாளோ?" என்றுரைத்து, அப்போதே மனம் கலங்கியவராய் நின்றார். அதைக்கேட்டு உகந்த பரகாலர் அந்த வைத்தியர்தலைவரை நல்ல வஸ்திரங்களையும், பட்டாடைகளையும், ஆப₄ரணங்களையும் அளித்து நன்கு பூஜித்து, மிகச்சிறந்தவளான வைத்₃யராஜ குமாரியை மனைவியாகக்கொள்ளப் பெண் கேட்டார்.

## குமுதவல்லியின் நிபந்தனைகள்

37*-*49. அந்தப் பரகாலரின் பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டு, மனைவியோடு கூடிய வைத்தியர் உகப்புடன் செல்வம் நிறைந்த கலிகன்றிக்கு அக்கன்னிகையைக் கொடுக்க இசைந்தார். குமுதவல்லி யென்னும் அப்பெண் பெற்றோருடைய அந்த முயற்சியைக் கேள்விப்பட்டு, பரகாலர் முன்பே தன் பெற்றோர்களைப் பார்த்து, "(1) தாபம் (சங்கசக்ராங்கனம்), (2) புண்ட்₃ரம் (திருமண் காப்பு தரித்தல்), (3) தா₃ஸ்யநாமம் த₄ரித்தல், (4) (ரஹஸ்யத்ரய) மந்த்ரோபதே₃ஶம் பெறுதல் (5) திருவாராத₄னம் செய்தல் என்னும் இந்த ஐந்து ஸம்ஸ்காரங்கள் ஒருவனைப் பரமைகாந்தியாக்குபவை என்று சாஸ்

४०. अमीह पञ्चसंस्काराः पारमैकान्त्यहेतवः ।
एवमुक्तप्रकारेण पञ्चसंस्कारसंस्कृतम् ॥
४१. श्रीवैष्णवं विनान्यं तं न वृणेऽहं कदाचन ।
एवमध्यवसायं च ज्ञात्वा सम्यक् सुसादरम् ॥
४२. शुभस्य शीघ्रमित्युक्त्वा परकालो महामतिः ।
नागपुर्याः संप्रतस्थे श्रीनिवासपुरं प्रति ॥
४३. श्रीनिवासस्थलं तूर्णं नत्वा तत्सन्निधौ तदा ।
अग्नितप्तेन चक्रेण शंखेन भुजमूलयोः ॥
४४. पूर्णेन हरिणा तेन स सम्यक् कृतलाञ्छनः ।
धृतोर्ध्वपुण्ड्रः कुमुदवल्लयास्सन्निधिमेत्य सः ।

---

திரங்களில் சொல்லியபடி ஐந்து ஸம்ஸ்காரங்களால் பரிசுத்திபெற்ற ஸ்ரீவைஷ்ணவரைத்தவிர வேறு யாரையும் நான் ஒருபோதும் கணவனாக வரிக்கமாட்டேன்” என்று கூறினாள். இத்தகைய அவளுடைய உறுதியை ஆர்வத்தோடு நன்கு அறிந்து, பேரறிவாளரான பரகாலர், “மங்க₃ளகார்யங்களை உடனே செய்யவேண்டும்” என்று கூறி, திருநாங்கூரிலிருந்து ஸ்ரீநிவாஸன் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருநறையூருக்குப் புறப்பட்டார். அந்த தி₃வ்யதே₃ஶத்தை விரைவில் அடைந்து, நம்பி ஸந்நிதி₄யில் வணங்கி, அப்போதே நெருப்பில் காய்ச்சப்பட்ட ஶங்க₂சக்ரங்களால் தம் தோளில் அந்த நம்பியாலேயே நன்கு அடையாளமிடப்பெற்றவராய், ஊர்த்₄வபுண்ட்₃ரங்களை த₄ரித்தவராய், குமுதவல்லியிருந்த இடத்திற்கு வந்து, தி₃வ்யசின்னங்களாலே அலங்கரிக்கப் பெற்ற ஸ்ரீவைஷ்ணவ ஶ்ரேஷ்ட₂ராய் நின்றார். நற்குணம் நிரம்பிய அக்குமுதவல்லி அவரை வைஷ்ணவராகக் கண்டு, மறுபடியும் அவரைக் குறித்து, “தினந்தோறும்

४५. श्रीवैष्णववरस्तस्थौ दिव्यचिह्नैरलङ्कृतः ।
विलोक्य वैष्णवं साध्वी सा तं भूयोऽब्रवीद्वचः ॥

४६. अष्टोत्तरसहस्रेभ्यो वैष्णवेभ्यो दिने दिने ।
भोजनं षड्रसैर्दत्वा सताम्बूलं सदक्षिणम् ॥

४७. ततः श्रीपादतीर्थं च तदन्नमतिपावनम् ।
स्वीकर्तव्यं प्रयत्नेन भुक्तशेषं त्वयाऽऽदरात् ॥

४८. यद्येकं वत्सरं सम्यगेवं हि भवता कृतम् ।
ततः परं भविष्यामि तव भार्या तदाऽनघ ॥

४९. एवं कृते सुसुलभा ह्यन्यथा दुर्लभा तव ।
वचः कुमुदवल्ल्योक्तमङ्गीकृत्य चतुष्कविः ॥

---

ஆயிரத்தெட்டு வைஷ்ணவர்களுக்கு, தாம்பூ₃லத்தோடும், த₃க்ஷிணையோடும் கூடிய அறுசுவையுணவை அளித்து, அதற்குப்பின் அவர்களுடைய பரமபாவனமான ஸ்ரீபாத₃ தீர்த்த₂த்தையும், அவர்கள் உண்டுமிகுந்த உணவையும் நீர் முயன்று ஆர்வத்துடன் பெறவேணும். குற்றமற்றவரே! நீர் இவ்வண்ணம் ஒருவருடத்திற்குத் ததீ₃யாராத₄னம் செய்வீராகில், நான் உமக்கு மனைவியாவேன். இது செய்தால் நான் உமக்கு அடைதற்கெளியவள்; இல்லையேல் அடைதற்கரியவள்'' என்று கூறினாள்.

## பரகால குமுத₃வல்லீ விவாஹம்

49*-51. குமுதவல்லி கூறிய வார்த்தையைப் பரகாலர் அங்கீ₃கரித்து, ''அதை அப்படியே நிச்சயமாகச் செய்வேன்'' என்று உறுதியான ப்ரதிஜ்ஞையைச் செய்தார்.

५०. दृढप्रतिज्ञामकरोत्करिष्ये तदिति ध्रुवम् ।
ततो भिषग्वरः श्रीमान् महाभागवतस्तदा ॥

५१ ददौ कुमुदवल्लीं तां सुतामुदकपूर्वकम् ।
संतोषाल्लोकविदितं श्रीमते कलिवैरिणे ॥

५२ कृतोद्वाहस्स वेदान्तिन् प्रतिज्ञां सफलां व्यधात् ।
आराधनानां सर्वेषां विष्णोराराधनं परम् ॥

५३. तस्मात्परतरं प्रोक्तं तदीयाराधनं नृप! ।
हृदि सम्यङ्निधायार्थं तमिम भगवत्परः ॥

५४. अष्टोत्तरसहस्रेभ्यो वैष्णवेभ्यो मुदान्वितः ।
षड्रसोपेतमशनं प्रददौ प्रतिवासरम् ॥

---

அதற்குப்பின் வைஷ்ணவத்வச் செல்வம் நிரம்பியவராய், மஹாபா₄க₃வதரான அந்த வைத்தியராஜர் உகப்புடன் தன் பெண்ணை குமுதவல்லியைப் பலவகைச் செல்வங்கள் நிறைந்த அந்தக் கலிகன்றிக்கு அப்போதே உலகமெல்லாம் அறிய உத₃கபூர்வமாக மனைவியாகத் தாரைவார்த்துக் கொடுத்தார்.

## மங்கைமன்னனின் ததீயாராதனை

52-55. வேதா₃ந்தியே! அந்தப் பரகாலர் திருமணம் புரிந்துகொண்டபின்பு தனது பிரதிஜ்ஞையை நிறைவேற்றினார். "அரசனே! எல்லா ஆராத₄னங்களைக் காட்டிலும் விஷ்ணுவின் ஆராத₄னம் சிறந்தது; அதைக்காட்டிலும் சிறந்ததாகச் சொல்லப்படுவது திருமால் அடியார்களின் ஆராத₄னமேயாகும்" என்னும் இந்த ப்ரமாணத்தின் அர்த்த₂த்தை நெஞ்சில் நன்கு கொண்டு திருமாலடியாரான பரகாலர் தினந்தோறும் ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அறுசுவை உண்டியை உகப்புடன் அளித்தார்.

५५. वस्त्रं वा भूषणं वापि यद्यदिच्छति वैष्णवः ।
तत्सर्वमदिशत्तस्मै सत्वरं कलिजित्तदा ॥

५६. वैष्णवाराधनार्थाय तद्राजधनमञ्जसा ।
अगमद्विलयं सर्वं वेदान्तिन् कलिवैरिणः ॥

५७. वृत्तान्तं चोलभूपाय तत्सर्वं कलिवैरिणः ।
वेदान्तिन् सुदृढं तस्मै चाराः सम्यङ्न्यवेदयन् ॥

५८. ततो दूताः समाजग्मुः चोलराजेन चोदिताः ।
तद्धनाहरणार्थाय परकालान्तिकं जवात् ॥

५९. दूतान्समागतान् दृष्ट्वा परकालः स तांस्तदा ।
धनं दास्यामि तत्सर्वमित्युक्त्वाऽपूजयत्परम् ॥

---

அவர்களில் எந்த வைஷ்ணவன் வஸ்திரத்தையோ ஆப₄ரணத்தையோ எது எதை விரும்பினாலும், அவையனைத்தையும் அவனுக்கு அப்போதே கலிகன்றி விரைவாக அளித்தார்.

## மங்கைமன்னனும் ராஜதூதர்களும்

56-62. வேதாந்தியே! சோழராஜாவுக்குக் கலிகன்றி கட்டவேண்டிய கப்பப்பணம் அனைத்தும் ததீ₃யாராத₄னத்திலேயே நன்கு செலவழிந்துவிட்டது. கலிவைரியைப்பற்றிய இச்செய்தியனைத்தையும் அவ்வரசனின் ஒற்றர்கள் அச்சோழ ராஜாவுக்கு நன்கு தெரிவித்தனர். அதற்குப்பின் சோழ ராஜாவால் அனுப்பப்பட்ட தூ₃தர்கள் கப்பப்பணத்தைப் பெற்றுவருவதற்காக விரைவில் வந்தனர். அப்படி வந்த தூ₃தர்களைக் கண்டு பரகாலர் 'பணம் முழுவதையும் கொடுக்கிறேன்' என்று அப்போதே சொல்லி அவர்களை உபசரித்தார். காலையில் கேட்டால் 'மாலையில் தருகிறேன்' என்றும், மாலையில் 'மறுநாள் தருகிறேன்' என்றும், மறு நாள் 'நண்பகலில் தருகிறேன்', 'சூர்யாஸ்தமனம் ஆன

६०. दद्यामेव निशामुखे परदिने मध्याह्नपर्यायतयोः
पश्चादाव्रज गम्यतामवसरो नैवास्ति मे सांप्रतम् ।
इत्युक्त्वा मृदुभाषणैर्बहुविधं तान् राजदूतान् शनैः
निर्विघ्नं प्रतिवासरं कुशलश्चक्रे तदीयार्चनम् ॥

६१. एवं दिनेषु कतिषु गतेषु तदनन्तरम् ।
द्रव्यार्थं राजदूतास्ते रुरुधुः कलिवैरिणम् ॥

६२. ततः सञ्जातकोपेन परकालेन भर्त्सिताः ।
तत्कृत्यं चोलभूपाय भटाः सम्यङ्न्यवेदयन् ॥

६३. तेन वाक्येन संक्रुद्धः पदाहत इवोरगः ।
चोलराजो महातेजाः किङ्करान् षट्सहस्रकम् ॥

६४. ग्रहणे परकालस्य लब्धलक्ष्यानयोजयत् ।
स्वावतारस्थलस्याथ दक्षिणे क्रोशमात्रतः ॥

---

பின்பு தருகிறேன்' என்றும், 'பிறகு வா', 'இப்போது எனக்கு சமயம் சரியில்லாமையால் சென்றுவா' என்றும் பலவிதமாக மென்மையாகச் சொல்லி அந்த ராஜதூதர்களிடம் காலம் கடத்தி, தினந்தோறும் தடையில்லாமல் வைஷ்ணவாராத₄னத்தை மட்டும் நன்கு செய்துவந்தார். இப்படிச் சிலதினங்கள் கழிந்தபின்பு ராஜதூ₃தர்கள் பணத்திற்காகக் கலிகன்றியை எதிர்க்கத் தொடங்கினார்கள். அதனால் கோபங்கொண்ட பரகாலரால் பயமுறுத்தப்பட்ட அந்த தூ₃தர்கள் சோழராஜாவிடம் சென்று அவருடைய செயலை நன்கு விண்ணப்பித்தனர்.

## பரகாலர் சோழராஜ சேனையை வென்றது

63-78. வேதா₃ந்தியே! அந்த வார்த்தையைக்கேட்ட மாவீரனை சோழ அரசன் காலால் இடறப்பட்ட பாம்பு போல் கோபங்கொண்டவனாய், தங்கள் குறிக்கோளான

६५. कमलानगरे रम्ये परकालो महायशाः ।
तदीयाराधनं तत्र नित्यमव्याहतं महत् ॥

६६. चक्रे कुमुदवल्ल्यर्थे तल्लोकविदितं किल ।
तदीयसेवया नित्यं तदुच्छिष्टान्नभोजनात् ॥

६७. तत्पादतीर्थपानेन वेदान्तिन् कलिवैरिणः ।
नित्यं ववृधिरे तस्य ज्ञानभक्त्यादयो गुणाः ॥

६८. शुक्लपक्षे चन्द्रमसः कला इव दिने दिने ।
ततस्तदीयकैङ्कर्यसक्तो नीलस्ततोऽनिशम् ॥

६९. यथा श्रीरामकैङ्कर्ये महोत्साहो महाबलः ।
अव्याहतगतिस्तस्थौ सर्वथा मारुतात्मजः ॥

---

போரைப்பெற்றவர்களான ஆறுயிரம் சேனைவீரர்களை பரகாலரைப் பிடித்துவர அனுப்பினான். தனது அவதார ஸ்தலமான திருக்குறையலூருக்குத் தெற்கே ஒரு குரோச (கூப்பிடு) தூரத்திலுள்ள அழகிய திருநகரியில், குமுத வல்லிக்காக தினந்தோறும் தடையற்ற பெரிய ததீ₃யாரா-த₄னத்தைப் பெரும்புகழாளரான பரகாலர் செய்துவந்தார். அது உலகமறிந்ததொன்றன்றோ. எம்பெருமானடியார்களை தினந்தோறும் ஆராதி₄த்து, அவர்கள் உண்டு மிகுந்த உணவை உண்டு, அவர்களுடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தைப் பருகியதால் கலிகன்றிக்கு ஞானம், ப₄க்தி முதலான குணங் கள் வளர்பிறையில் சந்திரனின் கலைகள்போலே தினந் தோறும் வளர்ந்துவந்தன அதன் பயனாக, நீலன் அச்சுத னடியார்களுக்குக் கைங்கர்யம் செய்வதிலேயே எப்போதும் ஈடுபட்டவரானார். வாயு குமாரனாய், பெரும் ப₃லமுடைய அநுமன் எப்படி எல்லாப்படியாலும் ஸ்ரீராமகைங்கர்யத்தில் பெரிய உற்சாகமுடையவனாய், தடையற்ற செயலை உடைய வனாயிருந்தானோ, அப்படி இவர் ப₄ாக₃வத கைங்கர்யத்தி

७०. ततस्समागता दूताः चोलराजेन चोदिताः ।
ग्रहीतुकामास्तं नीलं कमलानगरं गताः ॥

७१. मारुतिग्रहणार्थाय यथा रावणकिङ्कराः ।
गृह्यतां बध्यतामेष ताड्यतां बध्यतामिति ॥

७२. राजद्रव्यापहारी च राजशासनदूषकः ।
इत्युक्त्वा परकालं तं परिवव्रुस्समन्ततः ॥

७३. प्रभावं परकालस्य प्रवक्तुं केन शक्यते ।
अभूत्तस्य तदा तेषां तद्युद्धमतिमानुषम् ॥

७४. संरक्तनयनः कोपात् महत् खड्गं प्रगृह्य सः ।
परकालोऽथ वेदान्तिन् एक एव महत् बलम् ॥

७५. गजयूथं महोत्साहात्प्रविश्य मृगराडिव ।
खड्गेन शितधारेण तत् किङ्करबलं महत् ॥

---

லிருந்தார். சோழராஜாவால் அனுப்பப்பெற்ற சேனைவீரர்கள், அநுமனைக் கட்டிக்கொண்டு வருவதற்காக அனுப்பப்பட்ட ராவண கிங்கரர்களைப்போலே, நீலனைப் பிடித்துக் கொண்டு வருவதற்காகத் திருநகரிக்கு வந்தார்கள். அவர்கள் "இவனைப் பிடியுங்கள்" "இவனைக் கட்டுங்கள்" "இவனை அடியுங்கள்" "இவனைக் கொல்லுங்கள்" "இவன் அரசனின் பணத்தைத் திருடியவன்" "இவன் அரசனின் ஆணையை மீறியவன்" என்று கூறி, பரகாலரைச் சுற்றிச் சூழ்ந்தார்கள். பரகாலரின் பெருமையை யாரால் சொல்ல முடியும்? அப்போது பரகாலருக்கும் ராஜசேனை வீரர்களுக்கும் நடந்த போர் மனிதசக்திக்கு மீறியதாயிருந்தது. அப்பரகாலர் கோபத்தாலே சிவந்த கண்ணினராய், பெரிய வாளைப் பிடித்துக்கொண்டு, யானைக்கூட்டத்தில் சிங்கம் போலே ஒருவராகவே பெரிய உற்சாகத்துடன் பெரிய சேனைக்குள் புகுந்தார். பெரியதான ராவணசேனை

७६. क्षणमात्रेण निश्शेषं निहतं कलिवैरिणा ।
यथा हनुमता कृत्तं तद्रावणबलं महत् ॥

७७. चोलराजेन वेदान्तिन् सप्तवारं ततः परम् ॥
कलिजिद्ग्रहणार्थाय पूर्ववत्प्रेषितं बलम् ॥

७८. गजवाजिसमाकीर्णं पूर्ववत् कलिवैरिणा ।
क्षणमात्रेण निःशेषं तत्सर्वं निहतं बलम् ॥

७९. ततस्तत्सर्ववृत्तान्तं श्रुत्वा चोलमहीपतिः ।
चिन्ताशोकसमाविष्टो महाश्चर्यसमन्वितः ॥

८०. मन्त्रिभिर्बहुधा सम्यक् मन्त्रयित्वा पुनः पुनः ।
युद्धार्थं स्वयमेवाशु तदा गन्तुमियेष सः ॥

---

அனுமனால் அழிக்கப்பட்டது போலே, மிகக் கூர்மையான அவ்வாளாலே அந்தப் பெரிய ராஜகிங்கரசேனை முழுவதும் கலிவைரியால் சிறிது நேரத்தில் கொல்லப்பட்டது. வேத₃ாந்தியே! கலிகன்றியைப் பிடிப்பதற்காகச் சோழராஜா வால் அதற்குப்பின்னும் ஏழுமுறை முன்போலவே சேனை அனுப்பப்பட்டது. யானைகளும், குதிரைகளும் நிறைந்த அந்த ஸேனை முழுதும் கலிகன்றியால் முன்போலவே நொடியில் அழிக்கப்பட்டது.

## பரகாலரோடு சேனாதிபதியின் யுத்தம்

79-91. அந்தச் செய்தியனைத்தையும் கேட்டுப் பேராச் சரியமடைந்த சோழராஜா கவலையும் வருத்தமும் அடைந் தார். அப்போது மந்திரிகளோடு பலமுறை பலவிதமாக நன்கு ஆலோசித்தபின்பு, அவ்வரசன் பரகாலரோடு போர் புரிய உடனே தானே செல்லவிரும்பினான். அப்போது சோழராஜ ஸேநாதி₄பதியான ஸ்ரீத₄ரன் என்னும் மாவீரன் சோழராஜா போர்புரியச் செல்வதைத் தடுத்து, ஆனைப் புரவித் தேரொடு காலாள் என்னும் நால்வகைச் சேனை

८१. सेनानीः श्रीधरो नाम तदा चोलमहीपतिम् ।
निवार्य तद्रणोद्योगं चतुरङ्गबलो महान् ॥

८२. प्रतस्थे सहसा कर्तुं कदनं कलिवैरिणा ।
कमलानगरे तत्र वैष्णवश्रीसमुज्ज्वले ॥

८३. तदीयाराधनपरः परकालः समास्थितः ।
तत्राजगाम वेदान्तिन् सह बलसमन्वितः ॥

८४. सेनानीः श्रीधरः श्रीमान् निशि निःशब्दमञ्जसा ।
श्रीधरागमनं श्रुत्वा संतुष्टः कलिजित्तदा ॥

८५. उच्चैःश्रवनिभं चाश्वं चारु ह्यादाय पट्टिशम् ।
सिंहनादेन महता स तस्याभिमुखं ययौ ॥

८६. कुत्राप्यव्याहतगतिं रामबाणमिवागतम् ।
अवितर्क्यमहाकान्तिं यथा दिव्यं सुदर्शनम् ॥

---

யொடு கூடியவனாய், கலிகன்றியோடு போர்புரியச் சடக்கெனப் புறப்பட்டான். ஸ்ரீவைஷ்ணவச் செல்வம் நிறைந்த அந்தத் திருநகரியிலே பரகாலர் (அப்போது) ததீ₃யாராத₄னம் செய்வதில் ஈடுபட்டிருந்தார். வேதா₃ந்தியே! அப்போது அந்த மாவீரனை ஸ்ரீத₄ரன் பெருஞ்சேனையோடு கூடியவனாய், இரவில் ஶப்₃த₃மில்லாமல் நன்கு வந்துசேர்ந்தான். ஸ்ரீத₄ரன் வந்திருக்கிறான் என்பதைக் கேட்டு உகந்த கலிகன்றி அப்போது இந்திரனின் புரவியான உச்சைஶ்ஶ்ரவத்தையொத்த தன் 'ஆடல் மா' என்னும் குதிரையில் ஏறி, தன் வாளை ஏந்திக்கொண்டு பெரிய சிங்கநாதம் செய்து அவனோடு போர்புரியச் சென்றார். ராமபா₃ணம் பாய்ந்து வந்ததுபோலே எங்கும் தடையற்றுச் செல்பவராய், விஷ்ணுவின் சக்கரமான ஸுத₃ர்சனம்போலே

८७. प्रवृद्धतेजसं युद्धे वायुसूनुमिवाक्षतम् ।
असंख्येयबलं धीरं नारायणमिवापरम् ॥

८८. गोभिर्विवर्धमानं तं दिवाकरमिवोदितम् ।
व्योममार्गे समायान्तं रणवीथ्यां समागतम् ॥

८९. तं दृष्ट्वा सैनिकास्सर्वे तमांसीव पलायिताः ।
दृष्ट्वा पलायितान्सर्वान् सेनानीः सैनिकांस्तदा ॥

९०. शान्तयित्वा बहुविधं वाक्यैश्च समयोचितैः ।
तदा संचोदयामास तानेव कलिवैरिणे ॥

९१. महान्तः सैनिका मेघाः सेनानीवायुचोदिताः ।
तदा प्रच्छादयामासुः परकालदिवाकरम् ॥

---

நினைத்தற்கரிய பேரொளியை உடையவராய், தோல்வியே அறியாத வாயுபுத்திரனை அநுமனைப்போலே போரில் வளரும் வீரத்தையுடையவராய், எண்ணமுடியாத ப₃லத்தை உடையவராய், போரில் சோர்வடையாதவராய், மற்றொரு நாராயணன் போன்றவராய், உதிக்கின்ற ஸூர்யன் ஆகாயத்தில் வளர்கின்ற கிரணங்களை உடையவனாய் ஸஞ்சரிப்பதுபோலே யுத்₃த₄ பூ₄மியில் ஸஞ்சரிப்பவரான அந்தப் பரகாலரைக்கண்டு ஸூர்யனைக்கண்ட இருள்போலே சேனைவீரர்கள் அனைவரும் தோற்றோடினார்கள். எல்லாச் சேனைவீரர்களும் அப்போது தோற்று ஓடுவதைக்கண்ட சேனைத்தலைவனை ஶ்ரீத₄ரன் அக்காலத்திற்குத்தக்க பல வகையான ஸமாதா₄ன வார்த்தைகளாலே அவர்களை அமைதியுறச்செய்து அவர்களையே கலிகன்றியோடு போரிட (மறுபடியும்) அனுப்பினான். அப்போது பரகாலராகிற ஸூர்யனை, சேனைத்தலைவனாகிற காற்றால் உந்தப்பட்ட சேனை வீரர்களாகிற மேக₄ங்கள் சூழ்ந்து மறைத்தன.

९२. तद्युद्धदर्शनोत्सुक्यात् विमानस्थाः नभस्स्थले ।
तदा देवगणास्सर्वे तस्थुस्तत्रैकमानसाः ॥

९३. श्रीवैष्णवास्तदा सर्वे ह्याशीर्वादं प्रचक्रिरे ।
राघवाय जनस्थाने खरदूषणसङ्गरे ॥

९४. सीता यन्मङ्गलं प्रादात्तत्ते भवतु मङ्गलम् ।
या कृपा वर्तते देव्या वैदेह्या मारुतात्मजे ॥

९५. सा कृपा वर्ततां नित्यमेतस्मिन् कलिवैरिणि ।
पूर्णः पुरस्तात्त्वां पातु पश्चात्ते भगवान्परः ॥

९६. रंगेशो दक्षिणे भागे शौरिराडुत्तरे तथा ।
मुखं पातु मुकुन्दस्ते लोचने पद्मलोचनः ॥

---

## பரகாலருக்குப் பல்லாண்டு

92—100. அப்போது அந்த யுத்3த4த்தைக் காண விரும்பி எல்லா தே3வ க3ணங்களும் ஒரேமனமுடையவர்களாய் ஆகாயத்தில் விமானத்தில் இருந்து பார்த்தனர். அப்போது ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் பின்வருமாறு ஆசீர்வாதம் செய்தார்கள்; "ஜனஸ்தா2னத்தில் நடந்த க2ரதூ3ஷண யுத்3த4த்தில் சீதை ராக4வனுக்கு யாதொரு மங்க3ளாஶாஸனம் செய்தாளோ அந்த மங்க3ளம் உமக்கு ஆகட்டும். வாயுகுமாரனான அனுமனிடம் சீதாபிராட்டிக்கு உள்ள கருணை இந்தக் கலிகன்றிக்கும் உண்டாகட்டும். (திருநறையூர் அல்லது திருக்குறுங்குடி) நம்பி உம்மை முன்புறத்தில் ரக்ஷிக்கட்டும். பரவாஸுதே3வன் உம்மைப் பின்புறத்தில் ரக்ஷிக்கட்டும். திருவரங்கன் வலப்புறத்திலும், சௌரிராஜன் இடப்புறத்திலும் உம்மை ரக்ஷிக்கட்டும். முகுந்த3ன் உமது முகத்தையும், புண்ட3ரீகாக்ஷன் உமது திருக்கண்களையும் ரக்ஷிக்கட்டும். தா3மோத3ரனாகிய

९७. दामोदरोऽव्यादुदरं वक्षः श्रीवत्सलाञ्छनः ।
बाहू सुन्दरबाहुस्ते पायाद्बुद्धिं हयाननः ॥

९८. पादौ त्रिविक्रमः पायात् सर्वाङ्गं पार्थसारथिः ।
चक्रं चक्रायुधेभ्यश्च शरेभ्यः शार्ङ्गमुत्तमम् ॥

९९. खड्गेभ्यो नन्दकः पातु गदा त्वां मुसलायुधात् ।
महारवेभ्यो द्विषतां पाञ्चजन्यं निरन्तरम् ॥

१००. एवं कुमुदवल्ली सा परकालस्य भक्तितः ।
सम्यक् दृढतरं रक्षामकरोत्साञ्जलिस्तदा ॥

१०१ कृतरक्षोऽथ देव्या च वैष्णवैः कलिजित्तदा ।
सिंहनादं विनद्योच्चैः स सैन्ये खड्गमाददे ॥

---

கண்ணன் உமது வயிற்றையும், திருமறுமார்பன் உமது மார்பையும் ரக்ஷிக்கட்டும் சுந்தரத் தோளுடையான உமது தோளையும், ஹயக்3ரீவன் உமது அறிவையும் ரக்ஷிக் கட்டும். உலகளந்த திரிவிக்கிரமன் உமது திருவடிகளையும் பார்த்த2ஸாரதி2 உமது அங்க3ங்களனைத்தையும் ரக்ஷிக்கட் டும்'' என்று. குமுத3வல்லியும் "ஸுதர்சனசக்ரம் சக்ராயுத4ங் களிலிருந்தும், சார்ங்கமென்னும் வில் அம்புகளிலிருந் தும், நந்த3கவாள் வாள்களிலிருந்தும், கௌமோத3கீ என் னும் க3தை3 த3ண்டா3யுத4ங்களிலிருந்தும், பாஞ்சஜன்ய மெனும் சங்கம் எதிரிகளின் பெரு முழக்கங்களிலிருந்தும் உம்மை எப்போதும் காப்பாற்றட்டும்'' என்று கைகூப்பி நின்றவளாய் அப்போது பரகாலருக்கு உறுதியாக நன்கு பல்லாண்டு பாடினள்.

## பரகாலர் சேனைத்தலைவனை வென்றது

101-116. குற்றமற்ற வேதாந்தியே! குமுத3வல்லீ தே3வியாலும், வைஷ்ணவர்களாலும் மங்க3ளாஶாஸனம்

१०२. यथा वज्रधरो वज्रं पुरा रक्षोगणे तथा ।
परकालस्य खड्गेन केचित् विच्छिन्नबाहवः ॥
१०३. केचिद्विच्छिन्नसर्वाङ्गाः पतिता धरणीतले ।
तमन्तकमिवायान्तं दृष्ट्वा भीताः पलायिताः ॥
१०४ परकालं महाशूरा रणं त्यक्त्वा तदाऽनघ ।
त्यक्तदेहासवः केचित् तस्याभिमुखमास्थिताः ॥
१०५. सेनान्यं शरणं जग्मुः केचिद्भीता रणाजिरात् ।
अश्वा गजाश्च बहवः तेन संचोदितास्तदा ॥
१०६. परिवव्रुश्च वेदान्तिन्! परकालं समन्ततः ।
यत्तत्सर्वं कलिघ्नेन क्षणेनैव निपातितम् ॥

---

செய்யப்பெற்ற அக்கலிகன்றி அப்போது சேனையில் புகுந்து உரத்த குரலில் சிங்கநாதம் செய்து, இந்திரன் முற்காலத்தில் அரக்கர்குலத்தை அழிப்பதற்கு வஜ்ராயுத₄த்தை எடுத்தது போல், தம் வாளை எடுத்துக் கொண்டார். பரகாலருடைய வாளாலே சிலர் கையிழந்தவர்களாகவும் சிலர் பல அங்க₃ங்களை இழந்தவர்களாகவும் பூ₄மியில் விழுந்தனர். யமனைப்போல் வரும் அந்தப் பரகாலரைக்கண்டு பெரிய சூரர்களெல்லாம் அப்போதுபோர்க்களத்தைவிட்டு பயந்து ஓடினார்கள். உயிரையும் உடலையும் பொருட்படுத்தாத சிலர் அவரோடு போர்புரிந்தனர். சிலர் போர்க்களத்திலிருந்து பயந்தோடி சேனைத்தலைவனைச் சரணடைந்தனர். அந்த சேனைத் தலைவனாலே தூண்டப்பட்ட பல குதிரைகளும் யானைகளும் அப்போது பரகாலரைச் சுற்றிலும் சூழ்ந்து கொண்டன. அவையனைத்தும் ஒரே நொடிப்போதில் கலிகன்றியாலே அழிக்கப்பட்டன. அந்த ஸ்ரீதரன் என்னும் சேனைத்தலைவனால் நடத்தப்பட்ட சேனையில் முக்கால்பகுதி அந்த இரவுக்குள்ளேயே கலிகன்றியால் முழுவதும் நன்கு அழிக்கப்பட்டது. பரகாலராகிற ஒருவர்

१०७. तल्लक्ष्मीधरसेनायां त्रिभागबलमञ्जसा ।
शात्रिशेषेण निहतं वेदान्तिन् कलिवैरिणा ॥

१०८. एकस्य बहुभिस्साधं कथं युद्धमभूदिति ।
द्रष्टुकाम इवादित्यः सहस्रैवोदितो महान् ॥

१०९. निहतं च बलं दृष्ट्वा हतशेषान् पलायितान् ।
परिशेषितमात्मानमायान्तमतिसत्वरम् ॥

११०. युगान्ते सर्वहर्तारं कालरुद्रमिवोदितम् ।
खड्गपाणिं च तं दृष्ट्वा नरान्तकमिवागतम् ॥

१११. अतिभीतिसमायुक्तः सेनानीः सत्वरं तदा ।
स गजादवरुह्याश्वमारुह्यालक्षितस्तदा ॥

११२. कांदिशीको ययौ शीघ्रं तदा कुत्राप्यलक्षितः ।
निवृत्तसङ्गरो धीमान् परकालः ततोऽनघ ॥

---

சேனைவீரர்கள் பலரோடு எப்படிப் போர்புரிகிறுர் என்பதைக் காண விரும்பியவன் போலே, பேரொளியுடைய சூரியனும் விரைவில் உதித்தான். சேனையில் பெரும்பகுதி அழிக்கப் பட்டதையும், எஞ்சியவர்கள் ஓடிவிட்டதையும் கண்டு உயிருடன் இருக்கும் தன்னை நோக்கி, ப்ரளயகாலத்தில் அனைத்தையும் அழிக்கும் காலருத்3ரனைப் போலேயும், எமனைப்போலவும் கையில் வாளேந்தி மிக வேகமாகவரும் கலிகன்றியைப் பார்த்து மிகவும் பயந்த அந்த சேனைத்தலை வன் அப்போதே விரைவில் எவருமறியாமல் யானையை விட்டு இறங்கி, குதிரையின்மேல் ஏறி, மிகவேகமாக எவரா லும் காணமுடியாதபடி தோற்றேடிவிட்டான். போரில் வெற்றிபெற்றுத் திரும்பிய அறிவாளியான பரகாலர் தேவர் களால் துதிக்கப்பட்ட இந்திரனைப்போலே பெரிய வீரராய் அப்போது விளங்கினர். தே3வது3ந்து3பி4களின் முழக்கமும்

११३. विबुधैस्संस्तुतो धीरो बलारिरिव चाबभौ ।
देवदुन्दुभिनिर्घोषः पुष्पवर्षो महानभूत् ॥
११४ वन्दिनां जयशब्देन शङ्खभेरीरवैस्सह ।
कमलानगरं रम्यं प्रविवेश महायशाः ॥
११५. जितशत्रुर्यथा पूर्वं श्रीकृष्णो मधुरां पुरीम् ।
ततः कुमुदवल्ल्याश्च पाणिस्पर्शात्तदाऽनघ ॥
११६. विनाशितक्षतः श्रीमान् महोत्साहो महाबलः ।
परकालोऽथ वेदान्तिन् खरान्तक इवाबभौ ॥
११७ अविच्छिन्नगतिः श्रीमान् कमलानगरे तदा ।
तदीयाराधनं कुर्वन् पूर्ववत् सुखमास्थितः ॥
११८. हतशेषाः ततः केचित् भीता राजभटाः शनैः ।
सर्वं तद्युद्धवैचित्र्यं चोलेन्द्राय न्यवेदयन् ॥

---

(தேவர்களால் பொழியப்பட்ட) பெரிய பூமாரியும் துதிப்பாடகர்களின் வெற்றிமுழக்கத்தோடும், சங்கபேரிகளின் முழக்கத்தோடும் அப்போது ஏற்பட்டது. பெரும்புகழாளரான பரகாலர் எதிரிகளை வென்று முற்காலத்தில் ஸ்ரீ க்ருஷ்ணன் மதுரா நகரில் நுழைந்ததுபோலே திருநகரியில் நுழைந்தார். அப்போது குமுதவல்லியின் கைபட்டவுடன் காயங்களெல்லாம் ஆறப்பெற்று, வீரஸ்ரீயோடும் பெரிய ப₃லத்தோடும் பெரிய உற்சாகத்தோடும் பரகாலர் க₂ரனைக்கொன்ற ராமனைப்போலே விளங்கினார்.

## பரகாலர் ராஜசேனையையும் அரசனையும் வென்றது

117-131. தடையற்ற நடையையுடையவரான ஸ்ரீமத் பரகாலர் அப்போது திருநகரியிலே ததீ₃யாராத₄னத்தை முன்போலவே செய்துகொண்டு இனிது இருந்துவந்தார். பரகாலரால் கொல்லப்பட்டது போக எஞ்சியிருந்த சேனை வீரர்கள் சிலர் ப₄யத்தோடு மெள்ளமெள்ளச் சோழராஜா

११९. सर्वसेनाक्षयं तच्च सेनापतिपलायनम् ।
निशम्य मूर्छितो राजा क्वचिद्भूमौ पपात ह ॥

१२०. मन्त्रिभिर्बोधितः सम्यगुत्थितो भूपतिस्तदा ।
तत्तस्य सर्ववृत्तान्तं भूयश्चारैर्निशम्य सः ॥

१२१. कोपसंरक्तनयनः गृहीतुं कलिवैरिणम् ।
उद्युक्तः स्वयमेवाशु चतुरङ्गबलान्वितः ॥

१२२. कृतस्वस्त्ययनो विप्रैः चोलराजो महाबलः ।
सुमुहूर्ते महातेजाः प्रतस्थे कमलापुरीम् ॥

१२३. स राजागमनं श्रुत्वा परकालः प्रहृष्टधीः ।
प्रगृह्य पूर्ववत् खड्गं प्रविश्य पृथिवीपतेः ॥

---

விடம் சென்று அந்த ஆச்சரியமான போரில் நடந்ததனைத்தையும் சோழராஜாவிடம் விண்ணப்பித்தார்கள். தன்னுடைய சேனை முழுவதும் அழிக்கப்பட்டதையும், சேனைத் தலைவன் ஓடிவிட்டதையும் கேட்டு மூர்ச்சையடைந்த அரசன் அவ்விடத்திலேயே பூ₄மியில் விழுந்துவிட்டான். மந்திரிகளால் மயக்கம் தெளிவிக்கப்பெற்ற மஹாதேஜஸ்வியான அவ்வரசன் நன்கு விழித்தெழுந்து தன்னுடைய ஒற்றர்கள் மூலம் போர்ச்செய்தி முழுவதையும் கேட்டு, கோபத்தால் சிவந்த கண்ணை உடையவனாய், கலிகன்றியைப் பிடிப்பதற்காகத் தானே முயற்சி கொண்டவனாய், பெரிய சதுரங்க₃ சேனையோடு கூட அந்தணர்களின் மங்க₃ளவாக்யங்களோடு விரைவிலேயே நல்ல முகூர்த்தத்தில் திருநகரியை நோக்கிப் புறப்பட்டான். ராஜாவின் வருகையைக் கேள்விப்பட்ட பெரும்புகழாளரான பரகாலர் முன்போலவே வாளையெடுத்துக் கொண்டு, மிக உகந்தவராய், கலக்கமுடியா

१२४. सेनासमुद्रमक्षोभ्यं मन्दराचलवत्तदा ।
ममन्थ तद्गतं सर्वं परकालो महायशाः ॥

१२५. परकालमुखे स्थातुमक्षमाः सैनिकास्तदा ।
चोलराजान्तिकं जग्मुः सहसा तेन मर्दिताः ॥

१२६. तानालोक्य स भूपालो विनिश्चित्य महामतिः ।
स्वयमेतेन योत्स्येऽहं यावद्बलपराक्रमम् ॥

१२७. हताश्वरथमातङ्गपदातिश्चोलभूपतिः ।
परकालेन सङ्गम्य चक्रे युद्धमनूपमम् ॥

१२८. उभौ शस्त्रास्त्रसंघातैः विनिघ्नन्तौ परस्परम् ।
कृतप्रतिकृतौ च्छत्रध्वजचापादिकृन्तनैः ॥

---

ததான அந்த ராஜஸேனைக்கடலில் அப்போதே நுழைந்து, கடலை மந்த₃ரமலை கலக்கியது போலே அதைக் கலக்கினார். அப்போது, பரகாலருக்கு முன் நிற்கமுடியாத சேனைவீரர்களனைவரும் அவரால் அடிக்கப்பட்டவர்களாய், சோழ ராஜாவிடம் உடனே சென்றனர். அவர்களைக்கண்ட பேரறிவாளியான அந்தச் சோழராஜா, "நானே எனக்குள்ள பராக்ரமம், ப₃லம் அனைத்தையும் காட்டி இவரோடு போர்புரிவேன்" என்று நிச்சயித்து, தன்னுடைய குதிரை, தேர், யானை, காலாள் ஆகிய நால்வகைச் சேனைகளையும் இழந்தவனாய், பரகாலரோடு சேர்ந்து நேருக்குநேர் ஒப்பற்ற யுத்₃த₄த்தைச் செய்தான். மஹாவீரர்களாய், போர்க்கலையில் வல்லவர்களான இருவருமே சஸ்திரங்களாலும் அஸ்த்ரங்களாலும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு குடை, கொடி, வில் முதலானவற்றை வெட்டிவீழ்த்திக் கொண்டு போர்புரிந்தனர். அதற்குப்பின் பரகாலருடைய அம்பு மழையாலே மிகவும் துன்பமுற்ற அரசன் ப₃லமிழந்

१२९. युयुधाते महावीरौ चिरं युद्धविशारदौ ।
तत: क्षीणबलो राजा बाणौघै: पीडितो भृशम् ॥

१३०. स्थातुं तत्पुरतोऽशक्त: प्रदुद्राव पराङ्मुख: ।
एवं पराजयं प्राप्य धनलोभाद्विनि:श्वसन् ॥

१३१. धर्मेण यावद्द्रव्यं मे त्वया देयं परान्तक ।
इदं तु धर्ममेवेति समार्योऽङ्गीचकार स: ॥

१३२. वैष्णवाराधनार्थं हि जात: सर्वधनव्यय: ।
केनोपायेन संगृह्य राज्ञे देयं धनं बहु ॥

१३३. एवं तस्मिन् चिन्तयति श्रीहस्तिगिरिनायक: ।
स्वप्ने तं समुपागम्य संस्पृशन्करपल्लवै: ॥

१३४. काञ्चीमागच्छ दास्यामि धनं तुभ्यं महायश: ।
इत्युक्त्वान्तर्दधे स्वामी प्रतिबुद्ध: परान்तक: ॥

---

தவனைய் அவருக்கு முன் நிற்க இயலாதவனைய்ப் புற முதுகிட்டு ஓடினன். இப்படித் தோல்வியடைந்தபோதிலும், பணத்தில் ஆசையாலே பெருமூச்சு விட்டுக்கொண்டு அவ்வரசன் "பரகாலரே! த₄ர்மப்படி நீர் என்னுடைய கப்பப்பணம் முழுவதையும் தரவேண்டும்" (என்றுகூற), மனைவியோடு கூடிய பரகாலர் "அது த₄ர்மமே" என்று ஒப்புக்கொண்டார்.

## கனவில் வரத₃னின் நியமனம்

132—134*. "ஸ்ரீவைஷ்ணவாராத₄னத்தில் எல்லாச் செல்வமும் செலவழிந்துவிட்டது. அரசனுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தை எவ்வழியாலே கொடுப்பது?" என்று பரகாலர் சிந்தித்துக்கொண்டிருக்கையில், அத்திகிரி நாயக னை அப்பன் அவரது கனவில் வந்து கைகளாலே தடவி, 'பெரும்புகழாளரே! நீர் காஞ்சிக்கு வருவீராக! உமக்குப்பணத்தை அளிக்கிறேன்' என்று கூறிமறைந்தான்.

१३५. वरदोक्तं वचो मत्वा तथ्यमत्यन्तसंभ्रमः ।
चतुर्थदिवसे चोलमन्त्रिणं वाक्यमब्रवीत् ॥

१३६. काञ्चयामस्मद्धनं किञ्चिल्लक्षितं यन्मया पुरा ।
तत्रागतश्चेद्दास्यामि युष्मद्द्रव्यं न संशयः ॥

१३७. अमात्यः स तदाकर्ण्य राज्ञे सर्वं निवेद्य तत् ।
तेनानुज्ञापितो धीमान् कृतयत्नो बलान्वितः ॥

१३८. परकालं समादाय काञ्चीपुरमगात्तदा ।
स राजभटमध्यस्थः सत्यवादी महायशाः ॥

---

## வேகவதிக் கரையில் பொருள் கிடைத்தல்

134*—*144. குற்றமற்ற வேதாந்தியே! விழித்தெழுந்த பரகாலர் வரதனின் வார்த்தையை உண்மை என்று அறுதியிட்டு மிகவும் பரபரப்புடையவராய், (அரசனிடம் பணம் செலுத்த ஒப்புக்கொண்டபின்) நாலாவது நாளில் சோழராஜாவின் மந்திரியிடம் "காஞ்சியில் முன்பொரு சமயம் எனக்குச் சேரவேண்டிய பணம் ஒன்று புதைத்து வைக்கப்பட்டுள்ளது. நீர் அங்கு வந்தால் உமக்குரிய பணத்தைக் கொடுத்து விடுகிறேன். இதில் ஐயமில்லை'' என்று கூறினர். அதைக்கேட்ட அறிவாளியான மந்திரி அரசனிடம் அனைத்தையும் விண்ணப்பித்து அவனது அனுமதிபெற்று சேனையோடு கூடியவனாய், பெரிய முயற்சியுடன் பரகாலரைக் கூட்டிக்கொண்டு அப்போதே காஞ்சிக்குச் சென்றான். அந்த அரசனின் சேனைக்கு நடுவிலிருப்பவராய், உண்மை உரைப்பவராய், பெரும் புகழா

१३९. काञ्चीपुरं समभ्येत्य तत्र स्वप्नोक्तमार्गतः ।
वेगवत्यां धनं तत्र कृतान्वेषो न लब्धवान् ॥

१४० चिन्ताव्याकुलितः शेते परकालस्तदाऽनघ ।
महाकारुणिकस्तस्य प्रसन्नो वरदस्तदा ॥

१४१. तन्निक्षेपधनस्थानं स्वप्ने विशदमब्रवीत् ।
सन्तुष्टः सहसोत्थाय परकालस्तदाऽनघ ॥

१४२. तदा वेगवतीतीरे वरदोक्तप्रकारतः ।
खनित्रेण खनित्वाशु तन्निक्षेपधनं बहु ॥

१४३. उद्धृत्य राज्ञे यद्द्रव्यं दातव्यं तन्निवेद्य तः ।
धनशेष समादाय तदीयाराधनाय च ॥

१४४. कमलानगरं शीघ्रमाजगाम महायशाः ।
चोलामात्यो धनं सर्वमादायात्यन्तविस्मितः ॥

---

ளரான அந்தப் பரகாலர் காஞ்சியை அடைந்து கனவில் வரதன் சொன்ன முறையில் வேகவதிக் கரையில் பணத்தைத் தேடிய பின்பும் அது கிடைக்கப்பெறவில்லை. அப்போது பரகாலர் மிகவும் மனக்கவலையுடன் படுத்துக் கொண்டிருந்தார். அப்போதே பரம காருணிகனை வரதன் அவருடைய கனவில் எழுந்தருளி, புதையல் இருக்குமிடத்தைத் தெளிவாகக் கூறினன். மிக உகந்த பெரும்புகழாளரான பரகாலர் சடக்கென எழுந்திருந்து வரதன் கூறிய முறையில் மண்வெட்டியாலே வேகவதிக் கரையிலே வெட்டி மிகப்பெரியதான புதையலை எடுத்து அரசனுக்குச் சேரவேண்டிய பணத்தைக் கொடுத்துவிட்டு எஞ்சியபணத்தைத் ததீயாராதனத்திற்கு எடுத்துக் கொண்டு திருநகரிக்கு விரைவில் வந்தார்.

१४५. चोलभूपालनिकटे तन्निधाय तदा धनम् ।
सर्वं निवेदयामास वृत्तान्तं कलिवैरिणः ॥

१४६. प्रसन्नो देवराजोऽस्य प्रददौ यद्धनं बहु ।
इत्याप्तमन्त्रिवचनं श्रुत्वा दृष्ट्वा धनं च तत् ॥

१४७. विस्मयाविष्टहृदयश्चोलभूपोऽब्रवीद्वचः ।
न सामान्यजनो ह्येषः महाभागवतोत्तमः ॥

१४८. महत्यापदि संप्राप्ते दुर्योधनसभान्तरे ।
द्रौपद्याः सहसा कृष्णः कृपया चाक्षयाम्बरम् ॥

१४९. दत्वा ररक्ष तां तत्र द्रौपदीं च यथा पुरा ।
तथाद्य वरदः शीघ्रं ररक्ष कलिवैरिणम् ॥

---

## அரசன் பரகாலரை கௌரவித்தல்.

144*-*156. குற்றமற்ற வேதாந்தியே! அந்தச் சோழராஜ மந்திரி மிகவும் வியப்புற்றவனாய் அந்தப் பணம் முழுவதையும் அப்போதே எடுத்துக்கொண்டு சோழராஜாவிடம் அதைச் சேர்ப்பித்து, கலிகன்றியின் செய்திகள் அனைத்தையும் விண்ணப்பித்தான். ''தே₃வ ராஜன் கனவில் தோன்றிக் கலிகன்றிக்குப் பெரும்பொருளை அளித்தார்'' என்னும் ஆப்தனானமந்திரியின் வார்த்தையைக் கேட்டு, அந்தப் பணத்தையும் கண்டு மிகவும் வியப்புற்ற நெஞ்சை உடையவனான சோழராஜா "இக்கலியன் சாமான்யமான மனிதனல்ல; மஹா பாகவதோத்தமராவார். துரியோதனன் சபையில் முன்னொரு காலத்தில் த்ரௌபதிக்குப் பேராபத்து வந்தபோது கண்ணன் அவளுக்கு வளர்கின்ற வஸ்த்ரத்தை உடனே கருணையால் அளித்து அவ்விடத்திலேயே அவளைக் காப்பாற்றினான். அதுபோலே

१५०. द्रौपदीमानभङ्गादिदोषेण कुरुसन्ततिः ।
स्वबले विद्यमानेऽपि निस्सन्ततिरभूत्किल ॥
१५१. तदीयावमतिस्तस्मात् दुर्जया कुलनाशिनी ।
कर्तव्यमधुना सम्यगपराधक्षमापणम् ॥
१५२. तमानीय प्रयत्नेन सत्कृत्य कलिवैरिणम् ।
इति निश्चित्य सहसा वेदान्तिन् मन्त्रिणा नृपः ॥
१५३. परकालं समादाय विविधैर्भूषणाम्बरैः ।
पूजयित्वा बहुविधं राजा भक्त्या पुनः पुनः ॥
१५४. मया चाज्ञानदोषेण तेऽपराधाः कृताश्च ये ।
ते क्षन्तव्यास्त्वया तात परकाल नमोस्तु ते ॥
१५५. इति क्षमापणं कृत्वा परिरभ्य मुहुर्मुहुः ।
परकालं महात्मानं वेदान्तिन् वैष्णवोत्तमम् ॥

---

இன்றுவரதன் இக்கலிகன்றியை விரைவில்காப்பாற்றினன். த்ரௌபதியை மானபங்கம் செய்த குற்றத்தாலே பெருத்த ப₃லத்தையுடைய கௌரவஸமூஹம் பூண்டற்றுப் போயிற்றன்றோ! ஆகையால் அச்சுதனுடைய அடியார்களை அவமதிப்பது குலத்தை அழிப்பதாய், பரிஹரிக்கமுடியாததொரு பாபமாகும். ஆகையால் இந்தக் கலிகன்றியிடம் நாம் செய்த குற்றத்திற்குப் பரிஹாரமாக அவரை முயன்று வரவழைத்து கௌரவப்படுத்தி அவரிடம் நன்கு மன்னிப்புக் கோரவேண்டும்" என்று கூறினன். இப்படி உறுதிபூண்ட அவ்வரசன் மந்திரியைக் கொண்டு பரகாலரை வரவழைத்து, பலவிதமான வஸ்திரங்களாலும் ஆபரணங்களாலும் பலவிதமாக ப₄க்தியுடன் மறுபடியும் மறுபடியும் அவரை ஆராதித்து, "எந்தை பரகாலரே! அறிவின்மையாகிற தோஷத்தால் நான் உமக்கு இழைத்த பல அபராதங்களை நீர் மன்னித்தருளவேண்டும். உமக்கு

१५६. तदा प्रस्थापयामास कमलानगरं प्रति ।
अचिन्तयत्ततो धीमान् वेदान्तिन् चोलभूमिपः ॥

१५७. मदर्थं परकालोऽयं त्रिरात्रं समुपोषितः ।
तद्दोषपरिहाराय देवब्राह्मणपूजनम् ॥

१५८. कर्तव्यमिति निश्चित्य यद्दत्तं कलिवैरिणा ।
स जवात्तद्धनं सर्वं देवब्राह्मणसात्तदा ॥
विधाय विज्वरः श्रीमान् मुमोद नृपसत्तमः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे परकालराजयुद्धवर्णनं नाम एकोनशततमोऽध्यायः ॥

---

வணக்கம்'' என்று மன்னிப்பு வேண்டி மஹாத்மாவாய், வைஷ்ணவோத்தமரான பரகாலரை மறுபடியும் மறுபடியும் அணைத்துக் கொண்டு அப்போதே திருநகரிக்கு வழியனுப்பினான்.

## அரசன் செய்த ப்ராயச்சித்தம்

156*-158. வேதாந்தியே! அறிவாளியான அந்தச் சோழராஜா, "என்னால் பரகாலர் மூன்று இரவுகள் உணவு கொள்ளாமலிருந்தார். அந்தக் குற்றத்தைப் போக்கிக் கொள்வதற்காக தே₃வப்₃ராஹ்மணர்களை ஆராதிக்க வேண்டும்'' என்று நினைக்கலுற்றான். இப்படி உறுதி பூண்ட அவ்வரசர்தலைவன் கலிகன்றியாலே கொடுக்கப்பட்ட அக்கப்பப்பணம் முழுவதையும் அப்போதே தெய்வங்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் உரியதாக விரைவில் ஆக்கி, கவலையற்றவனாய் திருப்தி அடைந்தவனாய் ஆனந்தித்தான்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் பட்டார்ய வேதா₃ந்தி ஸம்வாதத்தில்
பரகாலருக்கும் அரசனுக்கும் விளைந்த யுத்தத்தை
வர்ணிப்பதாகிற தொண்ணூற்றொன்பதாவது
அத்தியாயம் நிறைவுற்றது.

शततमोऽध्यायः ॥

१. ततोऽव्याहतसङ्कल्पः परकालो महायशाः ।
चोलेन्द्रपूजितः सम्यक् कमलानगरे महान् ॥

२. अविच्छिन्नगतिः कुर्वन् तदीयाराधनं बहु ।
स श्रीमांस्तेन वित्तेन वेदान्तिन्सुखमास्थितः ॥

३. द्रव्याभावे ततो यत्नं चौर्यकर्मणि स व्यधात् ।
परकालस्य तस्यासन् शिष्याः पञ्च तदाऽनघ ॥

४. तेषां नामानि वक्ष्यामि वेदान्तिन् शृणु सादरम् ।
जलोपरिगतिः कश्चित् छायासंलीनकस्तथा ॥

---

நூறுவது அத்தியாயம்

## ரங்கேச்வர ப்ரத்யக்ஷம்

### பரகாலரும் சீடர்களும்

1-6. குற்றமற்ற வேதாந்தியே! அதற்குப்பின் சோழ ராஜாவால் நன்கு பூஜிக்கப்பட்டவராய், பெரியவராய், பெரும்புகழாளரான பரகாலர் திருநகரியிலே தடையற்ற ஸங்கல்பத்தை உடையவராய், இடையறுது ஸஞ்சரிப்பவராய், தான் பெற்ற பணத்தைக் கொண்டு பெரிய ததீயாராதனத்தைச் செய்து வருகையாலே பாகவத கைங்கர்யமாகிற திருவுடையவராய் இனிது வாழ்ந்தார். அந்தப்பணம் தீர்ந்தவுடன் திருட்டுத்தொழிலே முயன்று செய்யத்தொடங்கினார். அந்தப் பரகாலருக்கு அப்போது ஐந்து சிஷ்யர்கள் இருந்தனர். அவர்களது பெயர்களைக் கூறுகிறேன், விருப்புடன் கேட்பீராக! நீரின் மேல் நடக்கவல்லவனாகையாலே 'நீர்மேல் நடப்பான்' என்பது ஒருவனது பெயர். பிறரது நிழலில் அவர்களுக்குத் தெரியாமல் பதுங்கிச் செல்ல வல்லவனாகையாலே 'நிழலில் ஒதுங்குவான்' என்று மற்றொருவனுக்குப் பெயர். எந்த

५. वृक्षाग्रारोहकः कश्चिदजितव्यवहारकः ।
कश्चिदर्गलफूत्कारकारकश्चेति विश्रुतः ॥
६. पत्नीसहोदरः कश्चित्परकालाभिधो महान् ।
षडेतेऽनुचरास्तस्य बहिः प्राणा इवाऽभवन् ॥
७. एतैरनुगतः सम्यक् सहितो वैष्णवैस्सदा ।
रुद्धमार्गो महारण्यमुपाश्रित्य महाबलः ॥
८. ऊर्ध्वपुण्ड्रललाटांश्च चक्राङ्कितभुजान्विना ।
गतागतानामन्येषां तत्र मार्गे निरन्तरम् ॥
९. धनान्याहृत्य वेदान्तिन्! नित्यमव्याहतं तदा ।
सहस्रसंख्यया चक्रे तदीयाराधनं बहु ॥

---

மரத்திலும் நுனிக்கிளையிலும் ஏறியிருக்க வல்லவனாகை யாலே 'மரநுனி ஏறுவான்' என்று ஒருவனுக்குப்பெயர். வழக்காடுவதில் என்றுமே வெற்றி பெறுபவனாகையாலே 'தோலா வழக்கன்' என்று வேறொருவனுக்குப் பெயர். எந்தத் தாளையும் (தாழ்ப்பாளையும்) வாயால் ஊதியே திறக்கவல்லவனாகையாலே 'தாளூதுவான்' என்று பிறி தொருவனுக்குப் பெயர். இவர்கள் தவிர மைத்துனனாய், பரகாலன் என்றே பெயர் கொண்ட பெரிய வீரனும் அவருக்குத் துணையாயிருந்தான். இந்த ஆறு துணைவர் களும் அவருக்கு வெளியில் உலவும் உயிர் போலே இருந்தனர்.

## அவைஷ்ணவ தனத்தையே வைஷ்ணவாராதனத்திற்குப் பறித்தார்

7-*15. குற்றமற்ற வேதாந்தியே! வைஷ்ணவர்களான இந்தச் சீடர்களோடு எப்போதும் நன்கு கூடினவராய், மஹாபலமுள்ளவரான பரகாலர் பெரும் காடுகளிலே இருந்துகொண்டு வழியைத் தடைசெய்பவராய், நெற்றி யில் திருமண் காப்பு உள்ளவர்களையும் தோளில் சக்ராங் கனம் உள்ளவர்களையும் தவிர அந்தவழியில் செல்லும் மற்ற வழிப்போக்கர்களிடமிருந்து இடைவிடாமல்

१०. शिष्या देशान्तराच्चौर्यात् धनान्याहृत्य भक्तितः ।
दद्दु कलिजिते सम्यक् तदीयाराधनाय च ॥
११. ग्रामे जनपदे चैव नगरे च वनान्तरे ।
सर्वत्र सञ्चरन्नीलो हरिभक्तो निरङ्कुशः ॥
१२. स तदा बहुशः कृत्वा चोरवृत्त्या धनार्जनम् ।
भक्त्या संप्रेषयामास नित्यं लक्ष्मीपुरं प्रति ॥
१३. देवी कुमुदवल्ल्याख्या वैष्णवाराधनप्रिया ।
तदीयाराधनं नित्यं कुर्वन्ती सा समास्थिता ॥
१४. वर्जयित्वा वैष्णवानां सद्मानि कलिजिन्महान् ।
ग्रामे जनपदे चैव सर्वत्र नगरेषु च ॥
१५. चौर्याद्धनार्जनं कुर्वन् सदाऽवर्तत भक्तितः ।
ततः कदाचिद्वेदान्तिन् परकालो महायशाः ॥

---

பொருள்களை வழிப்பறி செய்பவராய், தினந்தோறும் தடையில்லாமல் ஆயிரம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் ததீயாராதனத்தைச்செய்து வந்தார். அவருடைய சிஷ்யர்களும் மற்ற தேசங்களிலிருந்து பணத்தைப் பறித்து, பக்தியோடு கலிகன்றிக்குத் ததீயாராதனத்திற்காக நன்கு அந்தப் பணத்தைக் கொடுத்து வந்தனர். நாடு நகரங்களிலும் கிராமங்களிலும், காடுகளிலும், எல்லாவிடத்திலும் ஸஞ்சரிக்கவல்ல ஹரிப₄க்தரான அந்த நீலன் அக்காலத்தில் தடையற்றவராய் வழிப்பறித்தொழிலாலே பலவிதமாகப் பணம் சம்பாதித்து, தினந்தோறும் திருநகரிக்கு அதை ப₄க்தியோடு அனுப்பிவந்தார். வைஷ்ணவர்களை ஆராதிப்பதில் பிரீதி உடையவளான குமுதவல்லி தேவியும் அப்பணத்தைக்கொண்டு ததீ₃யாராத₄னத்தைச் செய்துகொண்டிருந்தாள். வைஷ்னவர்களுடைய வீடுகளை விலக்கி, நாடு நகரங்களிலும் கிராமங்களிலும் எல்லாவிடத்திலும் உள்ள வீடுகளிலும் ததீயாராதனத்திற்காகத் திருட்டுத் தொழிலை ப₄க்தியுடன் செய்துகொண்டே வாழ்ந்து வந்தார் பெரியவரான கலிகன்றி.

१६. कस्मिंश्चिदवसत् ग्रामे स धनाहरणेच्छया ।
वातवर्षो महानासीत् गाढान्धतमसावृतः ॥
१७ अलक्षितान्योन्यगतिः जनसंचारवर्जितः ।
तदा बहिर्वितर्द्यां तु कस्यचित् सद्मनोऽनघ ॥
१८. धनाहरणकामोऽसौ नीलो लीनो व्यतिष्ठत ।
वर्षत्यासारवर्षे तु काचित् द्वारान्तरस्थिता ॥
१९. शोधयन्ती भुक्तपात्रं तस्थौ तमसि वै निशि ।
तस्य प्रक्षालनध्वनं निशम्य कलिजित्तदा ॥
२०. तस्याः करस्थितं पात्रं हठादाहृत्य दुद्रुवे ।
तदीयभक्तिः सा तस्य वर्णितुं केन शक्यते ॥

---

## பரகாலரும் பா4க3வத த3ளமும்

15*-25 குற்றமற்ற வேத3ாந்தியே! பெரும்புகழாளரான அந்தப் பரகாலர் ஒருசமயம் பணத்தைப் பறிப்பதற்காக ஒரு கிராமத்தில் தங்கியிருந்தார். அன்று காரிருள் சூழ்ந்து பெரிய புயற்காற்று வீசியது. ஒருவரையொருவர் காணமுடியாதபடியும், (தெருக்களில்) ஜனஸஞ்சாரமில்லாதுமிருந்தது. அங்கு பணத்தைப் பறிக்க விரும்பிய நீலன் ஒரு வீட்டின் வெளித்திண்ணையில் ஒளிந்து கொண்டிருந்தார். அவ்விரவில் இருட்டில் அவ்வீட்டு வாயிலுக்கு உட்புறம் ஒரு பெண்பிள்ளை அடை மழை பெய்துகொண்டிருக்கும்போது (விலைஉயர்ந்த) உண வுத்தட்டைக் கழுவிக்கொண்டிருந்தாள். அப்போது அவள் பாத்திரத்தைக் கழுவும் ஒலியைக்கேட்டு, கலிகன்றி அவள் கையிலிருந்த பாத்திரத்தை வலியப்பிடுங்கிக்கொண்டு ஓடினார். அந்த ப4ாக3வதப்பெண்பிள்ளை உடனே "அஸ்மத்3கு3ருப்4யோ நம:" என்னும் குருபரம்பராவந்தன வாக்யத்தைச் சொன்னாள்; அதைக்கேட்டவுடன் நீலன்

२१. असद्गुरुभ्यो नम इत्यवोचत्
वाक्यं तदा भागवताङ्गना सा ।
आकर्ण्य वाक्यं तदतीवसंभ्रमः
तद्धेमपात्रं प्रमुमोच नीलः ॥

२२. पात्रं तदादाय हठात्स्वभर्त्रे वृत्तान्तमेतद्विशदं भयार्ता ।
निवेद्य तद्विस्मयसंभ्रमाभ्यां पङ्कावृतं पात्रमदर्शयत्सा ॥

२३. निशम्य पत्न्या वचनं विदित्वा धीमांस्ततस्तं परकालमार्यम् ॥
स तां समुद्वीक्ष्य च कोपदृष्ट्या प्रत्याहरत् वाचमिमां हि धीरः ॥

२४. मुग्धे महात्मा परकाल एष कैङ्कर्यहेतोः कृपयाऽऽगतोऽत्र ।
तूष्णीं स्थिता चेत्सफलं हि वित्तं स्वातन्त्र्यतस्तद्विफलं ममेदम् ॥

---

மிகவும் பரபரப்பு உடையவராய் அந்தப் பொன்தட்டை அவளை நோக்கி வீசிஎறிந்தார். அவருடைய ப$_4$ாக$_3$வதப$_4$க்தியை யாரால் வர்ணிக்கமுடியும்? ப$_4$யத்தால் நடுங்கிய அவள் அந்தப் பாத்திரத்தைச் சடக்கென எடுத்துக் கொண்டு வியப்பும் பரபரப்புமுடையவளாய், தன் கணவனிடம் செய்தி அனைத்தையும்கூறி, சேற்றால் பூசப்பெற்ற அப்பாத்திரத்தையும் காட்டினாள்; மனைவியின் வார்த்தையைக்கேட்டு அறிவாளியான அந்த ப$_4$ாக$_3$வதர் 'வந்து சென்றவர் பெரியவரான பரகாலரே' என்று அறிந்து, மனைவியைக் கோபத்தோடு பார்த்து, ப$_4$ாக$_3$வதாபி$_4$மானம் உடையவராய், "அறிவிலியே! மஹாத்மாவான பரகாலரன்றோ ப$_4$ாக$_3$வதகைங்கர்யத்திற்குப் பொருள் சேர்ப்பதற்காகக் கருணையோடு இங்கு வந்திருக்கிறார். நீ பேசாமலிருந்திருந்தால் என் த$_4$னம் பயனுடையதாயிருக்குமே. நீ ஸ்வாதந்திரியத்தோடு கூக்குரலிட்டதால் எனது இந்தப்பேறு நழுவிப்போயிற்றே" என்று வார்த்தை சொன்னார். இவ்வண்ணமாக (பறிக்கப்படுவது

२५. एवं सम्यक् विशोध्यार्थः परकालस्ततोऽनघ ।
तदीयाराधनपरः तस्थौ श्रीकमलापुरे ॥

२६. ततः कदाचिद्वेदान्तिन् विल्वारण्ये चतुष्कविः ।
स पान्थागमनाकाङ्क्षी रुद्धमार्गो व्यतिष्ठत ॥

२७. नालक्ष्यत जनः कश्चित तदा यामत्रयावधि ।
प्रव्याकुलान्तःकरणस्तेनासीत्कलिजित्तदा ॥

२८. वृक्षाग्रारोहणं वीक्ष्य शिष्यं वाक्यमथाब्रवीत् ।
कश्चिज्जनोऽस्मिन् दिवसे पथि नैवाऽऽगतः किल ॥

२९. अद्य यामत्रयं यातं वैष्णवाः क्षुधयान्विताः ।
वृक्षाग्रशाखामारुह्य विलोकय दिशो दश ॥

---

அவைஷ்ணவத₄னம்தான் என்பதை) நன்கு கண்டறிந்த பின்பே பெரியவரான பரகாலர் (அவற்றைக்கொண்டு) ததீ₃யாராத₄னம் செய்பவராகத் திருநகரியில் வாழ்ந்து வந்தார்.

## பில்வாரண்யத்தில் பரகாலர்

26-*30. வேதா₃ந்தியே! நாலுகவிப்பெருமாளாகிற பரகாலர் ஒரு சமயம் பி₃ல்வாரண்யத்தில் வழியில் தடைகளை வைத்து, வழிப்போக்கர்கள் வருவதை எதிர்பார்த்துக் கொண்டு காத்திருந்தார். இரவில் மூன்று யாமம் கடந்த பின்பும் அப்போது ஒருவரும் அவ்வழியில் வரவில்லை. அதனால் அப்போது கலிகன்றி மனம் கலங்கியவரானார். தனது சீடனை மரநுனி ஏறுவானைப் பார்த்து, “இன்று எவருமே இவ்வழியில் வரவில்லையே. இரவில் மூன்று யாமமும் கடந்துவிட்டது. (நாளை அமுது செய்வதற்காக) வைஷ்ணவர்கள் பசியுடன் காத்திருப்பார்களே. ஆகையால்

३०. अङ्गीकृत्य वचस्तस्य स तदेवाकरोत्तदा ।
तदा सर्वेश्वरः श्रीमान् भगवान् रङ्गनायकः ॥
३१. कृपयाऽचिन्तयच्छीघ्रं भक्तानुग्रहहेतवे ।
करोत्याराधनं सम्यक् वैष्णवानां निरन्तरम् ॥
३२. परकालोऽनया वृत्त्या महाविश्वासपूर्वकम् ।
एष एवात्र चरमपुरुषार्थो ह्यनुत्तमः ॥
३३. एतत्पुण्यफलं प्राप्य हेतुनाद्य मया महान् ।
तस्मात्संरक्षितव्योऽयं परकालो विशेषतः ॥
३४. इति संचिन्त्य मनसा वेदान्तिन् रङ्गराट् तदा ।
सम्यक् गृह्णाति वै चोरः यद्वेषेण समागतम् ॥

---

மரக்கிளையின் நுனியில் ஏறியிருந்து பத்துத்திசைகளிலும் யாராவது வருகிறாரா என்று பார்'' என்று வார்த்தை சொன்னார். அந்தச்சீடனும் அப்போதே அவருடைய வார்த்தையை ஏற்றுக்கொண்டு அப்படியே செய்தான்.

## ரங்க₃ராஜனின் வருகை

30*-37. வேதா₃ந்தியே! அப்போது ஸர்வேஶ்வரனாய், ஸ்ரீமானான அரங்கனெம்பெருமான், தனது ப₄க்தனுக்கு விரைவில் அருள் புரிவதற்காகக் கருணையோடு சிந்திக்கலுற்றான். ''பரகாலர் திருட்டுத்தொழிலைச் செய்து மஹாவிஶ்வாஸத்தோடு வைஷ்ணவர்களை எப்போதும் நன்கு ஆராதி₄க்கிறார். இந்த பா₄க₃வதாராத₄னமேயன்றோ ஒப்பற்ற சரமபுருஷார்த்த₂மாகும். இந்தப்புண்ணியத்தின் ப₂லனை அடைந்து, இதுகாரணமாகவே இப்பெரியவரான பரகாலர் இப்போதுள்ள நிலையிலிருந்து என்னால் சிறப்பாகக் காப்பாற்றத்தக்கவர்'' என்று மனத்தில் சிந்தித்த ரங்க₃ராஜன், எந்த வேஷத்தோடுவந்தால் திருடன் உடனே வலியப் பிடித்துக்கொள்வானோ, எந்ததனத்தை அடைந்தால் பிறகு

३५. यद्धनं प्राप्य नान्यत्र कदाचिदपि वाञ्छति ।
धनेन तेन वेषेण तूर्णं तत्राऽऽजगाम सः ॥

३६. साक्षान्नारायणो देवः कृत्वा मर्त्यमयीं तनुम् ।
मग्नानुद्धरते लोकान् कारुण्याच्छास्त्रपाणिना ॥

३७. इत्युक्तेन प्रकारेण वेदान्तिन् रङ्गराट् तदा ।
*[कृपया ब्राह्मणो भूत्वा कृतोद्वाह इव श्रिया ।
विराजमानः सर्वाङ्गभूषितोऽखिलभूषणैः ॥
लक्ष्मीसमेतो बहुभिर्धनैश्च सह संयुतः ।
अनेकाभरणैर्वस्त्रैः मित्रैः परिजनैस्तदा ॥
शिबिकायां समारोप्य लक्ष्मीं श्रीरङ्गनायकीम् ।
तुरङ्गवरमारुह्य स स्वयं रत्नभूषितम् ॥ ]
आदरादाययौ शीघ्रं परकालान्तिके तदा ॥

அவனுக்கு வேறு எதுவும் தேவையில்லையோ, அந்த வேஷத்தையும் த₄னத்தையும் கொண்டு விரைவில் அவ்வழியில் எழுந்தருளினன். "நாராயணனுகிற தே₃வனே மனித வுருக்கொண்டு ஸம்ஸாரக்கடலில் மூழ்கியுள்ள உலகினரை சாஸ்திரமாகிற கையினுல், கருணையோடு தூக்கிவிடுகிருன்" என்று சொன்ன ரீதியில் அப்போது அரங்கன் [கருணையாலே ப்₃ராஹ்மணரூபத்தை எடுத்துக்கொண்டு ஸ்ரீதே₃வியோடு கூட, கல்யாணமானவன்போலே எல்லா ஆப₄ரணங்களாலும் எல்லா அங்கங்களிலும் அலங்கரிக்கப் பெற்றவனுய், லக்ஷ்மியோடு கூடியவனுய், பெருந்த₄னத்தோடு கூடியவனுய், பலஆப₄ரணங்கள், வஸ்திரங்கள், நண்பர்கள், பரிஜனங்கள் நிறையப்பெற்றவனுய், ஸ்ரீரங்க₃ நாச்சியாராகிற லக்ஷ்மியைப் பல்லக்கில் ஏற்றி, தான்

* [ ] இவ்வடைப்பினுள் உள்ள மூன்று ஶ்லோகங்கள் சில பிரதிகளில் இல்லை.

३८ वृक्षाग्रस्थः समालोक्य स दिशो दश सत्वरम् ।
अट्टहासं विधायोच्चैः परकालमथाब्रवीत् ॥
३९. भो भोऽव्याहतसङ्कल्प संनद्धो भव सत्वरम् ।
मार्गरोधं भटैः सार्धं विधायायुधपाणिभिः ॥
४०. कश्चित् द्विजः कृतोद्वाहः सभार्यः सम्पदान्वितः ।
महत्याऽऽशु समायाति शिबिकाश्वसमन्वितः ॥
४१. अद्य प्रतीचीदिग्भागात् साक्षाद्रङ्गेश्वरो यथा ।
तस्य तद्वचनं श्रुत्वा सन्तुष्टः स चतुष्कविः ॥
४२. तस्थौ ग्रहीतुं संनद्धः सायुधः सपरिच्छदः ।
ततो विलोक्य संतुष्टो रङ्गेशं द्विजरूपिणम् ॥

---

ரத்தினங்களால் அலங்கரிக்கப்பெற்ற சிறந்த குதிரை மேல் ஏறிக்கொண்டு] பரகாலரின் அருகில் அன்போடு விரைவில் எழுந்தருளினன்.

## வேடுபறி செய்த பொருளை எடுக்கமுடியாமை

38-52. குற்றமற்ற வேத₃ாந்தியே! அந்த மரநுனி ஏறுவான் விரைவில் பத்து திக்குகளையும் பார்த்து, பெரிதாகச் சிரித்து, பரகாலரைப் பார்த்து, ''தடையற்ற ஸங்கல்பத்தையுடைய பரகாலரே! ஆயுதங்களைக் கையில் ஏந்தி உமது அடியார்களோடு கூடிநின்று வழியை அடைத்து, விரைவில் வேடு பறிக்கு ஸித்₃த₄மாவீர். ஸாக்ஷாத்₃ரங்க₃நாத₂னைப் போன்ற (லக்ஷணங்களுடைய) ஓர் அந்தணன், மணம்புரிந்து கொண்டு, மனைவியோடு கூடியவனாய், பெருஞ்செல்வ முடையவனாய், பல்லக்கு குதிரைகளோடு கூடியவனாய், மேற்குதிக்கிலிருந்து விரைவில் இப்போது வருகிறான்'' என்று கூறினன்; அவனுடைய அவ்வார்த்தையைக் கேட்டு உகந்த அந்த நாலுகவிப் பெருமாள், ஆயுத₄ங்

४३. निरुध्य स्वजनैस्सार्धं धनान्याहृत्य सत्वरम् ।
तस्य सर्वाणि सहसा भूषणान्यम्बराणि च ॥

४४. पादाङ्गुलीयमात्रं तु तस्य संशेषितं तदा ।
तस्मात् ग्रहीतुं तच्चाशु स पादाङ्गुलिमग्रहीत् ॥

४५ यत्नेन महता चापि ग्रहीतुं नाशकत्तदा ।
दन्तैरुत्पाट्य सहसा तत् ग्रहीतुं मनो दधौ ॥

४६. द्विजरूपधरो रंगी समुद्वीक्ष्य वचोऽब्रवीत् ।
ममैतद्धनसर्वस्वं हृतं सम्यक् त्वया किल ॥

४७. पादाङ्गुलीयमात्रं मे न चैतत्किं विसृज्यते ।
तस्य तद्वचनं श्रुत्वा कलिजित्तमथाऽब्रवीत् ॥

---

களோடும் பரிவாரங்களோடும் கூடியவராய், வேடுபறி செய்ய ஸித்$_3$த$_4$மாய் நின்றார். அதற்குப்பின் அந்தணவுருவிலிருக்கும் திருவரங்கனைக் கண்டு உகந்தவராய், அவ்வந்தணனைத் தடுத்து, தன் அடியார்களைக் கொண்டு விரைவில் அவனது செல்வங்களைப்பறித்து, அவனது எல்லா ஆப$_4$ரணங்களையும் வஸ்திரங்களையும் பறித்த பின்பும் அவனது திருவடிவிரல்மோதிரம் மாத்திரம் பறிக்க அரியதாய் எஞ்சிநின்றது. ஆகையால், அதையும் விரைவில் பறிப்பதற்காக அப்பரகாலர் (அரங்கனின்) திருவடிவிரலைப்பற்றினார். அப்போது பெருமுயற்சிசெய்தும் அதைப்பறிக்கமுடியவில்லை. பல்லாலே கடித்துப்பிளந்து அந்த மோதிரத்தை எளிதில் எடுத்து விடலாம் என்று அவர் நினைத்தார். அந்தணவுருவிலிருந்த அரங்கன் அதைப்பார்த்து ''என்னுடைய இந்தச் செல்வம் அனைத்தையும் ஒன்று விடாமல் நீ கொள்ளைகொண்டுவிட்டாய்; இந்தக்கால்மோதிரத்தையாவது எனக்காக விட்டுவைக்

४८. तत्ते विसृष्टमात्रेण तस्मात् किं ते प्रयोजनम् ।
वैष्णवार्थं हि किं न स्यात् भुक्तिपात्रार्थमेव तत् ॥

४९. एकस्य दिवसस्यापि तत्कथं विसृजे वृथा ।
इत्युक्त्वा दशनैः शीघ्रं तत् जहाराङ्गुलीयकम् ॥

५०. ग्रहीतुं परकालस्तन्न समर्थोऽभवत्तदा ।
तमालोक्याथ रंगेशः सस्मितं वाक्यमब्रवीत् ॥

५१. कलिहन् किं भवान् वत्स तदीयाराधनप्रियः ।
कलिजिन्नाम तेनाऽभून्नीलस्य विदितं भुवि ॥

५२. यत्तद्धनमिदं सर्वं तच्छैलमिव चास्थितम् ।
समर्था नाभवन्सर्वे भटाश्चालयितुं ततः ॥

---

கக்கூடாதா?'' என்று கேட்டார். அவருடைய அவ்வார்த்தையைக்கேட்ட கலிகன்றி அவரைப்பார்த்து, "அதை உனக்கு விட்டதினுல் மாத்திரம் என்ன பயன் விளைந்துவிடப்போகிறது? ஸ்ரீவைஷ்ணவ பே₄ாஜனத்திற்கு ஒருநாள் இலைவாங்குவதற்காகவாவது அது பயன்படுமாகையால் அதை வீணுக விடுவேனே?'' என்று பதில் கூறினர். இதைக்கூறியவுடனே அந்த மோதிரத்தை வலியப்பிடுங்கினர். அப்போதும் பரகாலர் அதை எடுக்க முடியவில்லை. அவரைப் பார்த்துத் திருவரங்கன் புன்சிரிப்போடு கூடியவராய், "அப்பா கலியனே! நீ ததீயாராதனத்தில் இத்தனை ஈடுபாடு உடையவனே?'' என்று கூறினர். இதனுல் உலகில் நீலனுக்குக் 'கலியன்' (கலிகன்றி) என்னும் பெயர் பிரசித்தமாயிற்று. அவர் பறித்த செல்வம் முழுவதும் மலைபோல் (எவராலும் எடுக்க முடியாததாய்) இருந்தது. அவரது அடியார்கள் அனைவரும் அதை அசைப்பதற்குக் கூடமுடியவில்லை.

५३. स चैतत्कलिजिद्वीक्ष्य कोपसंरक्तलोचनः ।
खड्गेन भीषयन् विप्ररूपिणं तमथाब्रवीत् ॥

५४. मन्त्रवादस्त्वया विप्र! कृतस्सम्यक् ममाऽहितः ।
संप्रत्यसांप्रतं ह्येतत् तन्मन्त्रमुपसंहर ॥

५५. स तद्वचनमाकर्ण्य रंगेशस्तमथाऽब्रवीत् ।
तन्मन्त्रं तव वक्ष्यामि विनीतः शृणु सांप्रतम् ॥

५६. तथेति प्रतिगृह्याशु तदा रंगेश्वरान्तिकम् ।
दत्तकर्णो विनीतात्मा प्राञ्जलिः पुरतः स्थितः ॥

५७. स तदा दक्षिणे कर्णे रंगेशः कृपया हरिः ।
वेदान्तिन्! परकालस्य तन्मन्त्रं प्रददौ रहः ॥

---

## வாள்வலியால் மந்திரம் கொள்ளல்

53 - *63. குற்றமற்ற வேதாந்தியே! கலிகன்றி அதைக்கண்டு கோபத்தால் சிவந்த கண்களையுடையவராய், அந்தணவுருவில் வந்த அரங்கனைக் கத்தியைக் காட்டி பயமுறுத்தி, ''அந்தணனே! எனக்கு விரோதமாக நீ ஏதோ மந்திரவாதத்தை நன்கு செய்துவிட்டாய்; இது சரியானதல்ல; அந்த மந்திரத்தைத் திருப்பி எடுத்துக்கொள்வாய்'' என்று கூறினர். அரங்கநகரப்பன் அந்த வார்த்தையைக்கேட்டு அவரைப்பார்த்து, ''அந்த மந்திரத்தை உனக்குச் சொல்லுகிறேன். அடக்கத்துடன் இப்போதே கேட்பாய்'' என்று உரைத்தான். ''அப்படியே'' என்று அதை உடனே ஏற்றுக்கொண்டு அக்கலிகன்றி அப்போதே ஸ்ரீரங்கநாதனுக்கருகில் கை கூப்பி முன்னே நின்றவராய்க் காதுகொடுத்துக் கேட்டார்.

௫௮. ऋचो यजूंषि सामानि तथैवाथर्वणानि च ।
सर्वमष्टाक्षरान्तःस्थं यच्चान्यदपि वाङ्मयम् ॥

௫௯. सर्ववेदान्तसारार्थः संसारार्णवतारकः ।
गतिरष्टाक्षरो नृणामपुनर्भवकाङ्क्षिणाम् ॥

௬௦. ऐहलौकिकमैश्वर्यं स्वर्गाद्यं पारलौकिकम् ।
कैवल्यं भगवन्तं च मन्त्रोऽयं साधयिष्यति ॥

௬௧. मन्त्राणां परमो मन्त्रो गुह्यानां गुह्यमुत्तमम् ।
पवित्रं च पवित्राणां मूलमन्त्रं सनातनम् ॥

௬௨. एतादृशप्रभावेन सहितं मन्त्रमुत्तमम् ।
अष्टाक्षरं चोपदिश्य तन्मन्त्रप्रतिपादितम् ॥

---

அப்போது அவ்வரங்கனுகிற எம்பெருமான் அந்தப்பர காலருடைய வலது காதில் கருணையோடு ரகசியமாக அம்மந்திரத்தை உபதேசித்தான். ''ரிக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்னும் நாலுவேதங்களும், மற்ற சாஸ்தி ரங்களும் எல்லாமே அஷ்டாக்ஷரத்தினுள் இருக்கின்றன. எல்லா வேதாந்தங்களினுடைய ஸாரமான பொருளைச் சொல்லுவதாய், ஸம்ஸாரக்கடலிலிருந்து ஜீவனை விடுவிப்ப தாய், பிறவி இன்மையை விரும்பும் மனிதர்களுக்குத் தஞ்சமாயிருப்பது அஷ்டாக்ஷரமே. இவ்வுலகிலுள்ள செல்வத்தையும் மறுமையில் பெறும் சுவர்க்கம் முதலான செல்வத்தையும், ஆத்மாநுபவமாகிற கைவல்ய மோக்ஷத் தையும், எம்பெருமானை அடைவதாகிற சிறந்த மோக்ஷத் தையும் இந்தத்திருவஷ்டாக்ஷர மந்திரமே பெற்றுக் கொடுக்கும். பழைமையான மூலமந்திரமான இது மந் திரங்களுக்குள் மேலான மந்திரமாகும், ரஹஸ்யங்களுக்குள் மேலான ரஹஸ்யமாகும். பாவனங்களுள் (பரிசுத்தப்படுத்துகிறவைகளுக்குள்) மேலான பாவன

६३. यद्दिव्यात्मस्वरूपं च हरिस्तस्मै न्यवेदयत् ।
लक्ष्म्या सह हृषीकेशो देव्या कारुण्यरूपया ॥

६४. सुपर्णपृष्ठे प्रबभौ श्यामः पीताम्बरो हरिः ।
काञ्चनस्य गिरेः शृङ्गे सतटित्तोयदो यथा ॥

६५. एवं हि भगवान् रङ्गनायकः कृपया तदा ।
प्रत्यक्षमगमत्तस्य परकालस्य सादरम् ॥

६६. तदा भगवतस्तस्य दिव्यमङ्गलविग्रहम् ।
अनुभूयानुभूयाथ सम्यक् साक्षात्कृतं मुहुः ॥

६७. तत्स्वरूपगुणांश्चैव तद्विभूत्यादिकांश्च तान् ।
लक्ष्मीपुरुषकारेण ज्ञानेन स चतुष्कविः ॥

---

மாகும்'' என்று சாஸ்திரங்களில் சொல்லப்படும் மிக உயர்ந்த மந்திரமான திருவஷ்டாக்ஷர மந்திரத்தை உப தேசித்து அந்த மந்திரத்தால் சொல்லப்பட்ட திவ்யாத்ம ஸ்வரூபத்தையும் அவருக்குக் காட்டினன் எம்பெருமான்.

## அரங்கனின் ப்ரத்யக்ஷாநுபவம்

63*-*68. கருணையே வடிவெடுத்தவளான லக்ஷ்மீ தேவியோடு கூடியவனய், பீதாம்பரத்தைத் தரித்தவனய், கருநிறமுடையவனை இருடீகேசனகிற எம்பெருமான் ஒரு பொன்மலையின் மேல் மின்னலோடு கூடிய மேகம் வருவது போல் கருடன்மேல் ஏறிக்காட்சியளித்தான். அந்தப்பரகாலர்க்கு அவ்வரங்கநகரப்பன் கருணையோடும் அன்போடும் இவ்வண்ணமன்றே காட்சிதந்தான். அப் போது அந்த எம்பெருமானுடைய திவ்யமங்களத் திரு மேனியை எம்பெருமானுக்கினியவராய் நாலுகவிப் பெரு மாளான கலிகன்றி மறுபடியும் மறுபடியும் நன்கு அனு

६८. आनन्दार्णवनिर्मग्नः स बभूव हरिप्रियः ।
ब्रह्मानुभवसंजातप्रेमातिशयसंपदः ॥
६९. न ममुस्तत्र वेदान्तिन् परकालतनौ तदा ।
परकालगिरेरर्थजलौघाः षड्विधा भुवि ॥
७०. निर्ययुः प्राणिसस्यानि प्लावयन्तोऽनिशं स्थिताः ।
पुरा चतुर्णां वेदानां अर्थमुद्धृत्य चोत्तमम् ॥
७१. शठारिर्लोकरक्षार्थं प्रबन्धान् चतुरः क्रमात् ।
कृत्वा द्रविडरूपेण जगत्सर्वमपालयत् ॥
७२. वेदाङ्गानां तथा षण्णामर्थमुद्धृत्य चोत्तमम् ।
षट्प्रबन्धांस्ततः कृत्वा जगत्सर्वमपालयत् ॥

---

பவித்து அவ்வெம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும் குணங்களையும் விபூதி முதலானவற்றையும் பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாகக் கொண்ட ஞானத்தாலே கண்டு பேரானந்தக் கடலில் மூழ்கினார்.

## ஆறு திவ்யப்பிரபந்தங்களை அருளிச்செய்தல்

68*-74. வேதாந்தியே! ப்ரஹ்மாநுபவத்தால் உண்டான அன்புப்பெருக்கின் வெள்ளம் இந்தப் பரகாலருடைய சரீரத்தில் அப்போது அளவிடமுடியாததாய் இருந்தது. அந்தப்பரகாலராகிற மலையிலிருந்து ஆறு விதமான திவ்யப் பிரபந்தங்களாகிற நீர்ப்பெருக்கு உயிர்களாகிற பயிர்களைத் தழைக்கச் செய்துகொண்டு இடைவிடாமல் வெளிவந்தது. முற்காலத்தில் நான்கு வேதங்களின் சிறந்த அர்த்தங்களைத் திரட்டி சடகோபராகிற நம்மாழ்வார் உலகத்தை ரக்ஷிப்பதற்காக நான்கு திவ்யப்பிரபந்தங்களாகத் தமிழில் செய்து இவ்வுலகைத்

७३. आशु चित्रं च मधुरं विस्तारं च चतुर्विधम् ।
कवनं क्रियते येन स चतुष्कविरीरितः ॥
७४. दिव्यप्रबन्धाः षट् तत्र गाथाः श्रीकलिजित्कृताः ।
त्रिशतं चैकसाहस्रमेकषष्टिः प्रकीर्तिताः ॥
७५. वेदान्तिन् तत्र गाथानां शतकेनाभिसंस्तुतः ।
रङ्गेशो भगवान् साक्षात् परकालेन चानघ ॥
७६. परकालस्य सन्तुष्टः स्तोत्रेणानेन रङ्गराट् ।
आलोक्य शीतलदृशा भगवान् कलिवैरिणम् ॥
७७. व्याजहार शुभं वाक्यं मन्दस्मितमुखो हरिः ।
परितुष्टोऽस्मि भद्रं ते स्तोत्रेणानेन बालक ॥

---

தையும் உய்வித்தார். அவ்வண்ணமே இக்கலிகன்றியும் ஆறுவேதாங்கங்களின் சிறந்த அர்த்தங்களைத் திரட்டி ஆறு பிரபந்தங்களாகச் செய்து உலகனைத்தையும் வாழ்வித்தார். ஆசுகவி, சித்ரகவி, மது,ரகவி, விஸ்தாரகவி என்று நான்கு விதமான கவிதைகளைப் பாடுகின்றவர் ''நாலு கவிப் பெருமாள்'' என்று சொல்லப்படுகிருர். அத்தகைய ஆறு திவ்யப்பிரபந்தங்கள் கலிகன்றியாலே அருளிச் செய்யப்பட்டன. அவற்றில் 1361 பாட்டுக்கள் உள்ளன.

## அரங்கன் பரகாலருக்கு வரமளித்தல்

75 - 84. குற்றமற்ற வேதாந்தியே! அவற்றில் ஸ்ரீரங்கநாதன் பரகாலரால் நூறுபாடல்களால் நேரே துதிக்கப்பட்டான். பரகாலருடைய இத்துதியால் உகந்த அவ்வெம்பெருமான் கலிகன்றியைக் குளிரநோக்கி, புன் சிரிப்புடையவனாய், ''அப்பா! உனக்கு மங்களமுண்டாகட்டும். உனது இந்தத் துதியாலே நான் மகிழ்ந்தேன். உன்னால் என் அடியார்களுடைய கைங்

௭௮. त्वया मदीयकैङ्कर्यं तत्सम्यक् बहुशः कृतम् ।
सांप्रतं तेन सुप्रीतः प्रसन्नोऽभवमञ्जसा ॥

௭௯. वरं वरय भद्रं ते वरदोऽहं समागतः ।
कलिहन् संप्रयच्छामि सर्वाभीष्टानि सांप्रतम् ॥

௮०. रंगेशस्य वचः श्रुत्वा सन्तुष्टः कलिजित्तदा ।
प्राञ्जलिः प्रणतो भूत्वा व्याजहार वचः शुभम् ॥

௮௧. दर्शनादेव भवतः कृतार्थोऽहं न संशयः ।
वाञ्छितव्यो वरः को मे त्वद्दासस्याद्य विद्यते ॥

௮௨. तथापि मे वरं देहि भक्ताय करुणार्णव ।
बिल्वारण्ये तथा चात्र परिरंभपुरीवरे ॥

௮௩. सान्निध्यं कुरु देवेश भक्तानां वरदः सदा ।
सर्वाभीष्टप्रदो यस्मादेष मेऽस्तु वरः परः ॥

---

கர்யம் பலவிதமாக நன்கு செய்யப்பட்டது. அதனல் இப்போது மிக உகந்து உனக்கு நன்கு அருள்புரிய இருக்கின்றேன். வரமளிக்க வந்திருக்கும் என்னிடம் வரத்தைக் கேட்டு நன்மை பெறுவாயாக. கலிகன்றியே! உனக்கு இப்போது எல்லா விருப்பங்களேயும் நிறை வேற்றுகிறேன்'' என்று மங்களமான வார்த்தையைக் கூறினன். அப்போது அரங்கநகரப்பனுடைய வார்த்தை யைக்கேட்டு உகந்த கலிகன்றி கைகூப்பி வணங்கி நின்று, ''தேவரீரைக் கண்டதாலேயே அடியேன் பிறவிப் பயன் பெற்றேன். இதில் ஐயமில்லே. உமது அடியாஞன நான் உம் மிடம் கேட்க வேண்டிய வரம் என்ன இருக்கிறது? கருணேக் கடலே! தேவர்தலேவனே! அப்படியிருந்த போதிலும் பக்த ஞன எனக்கு ஒருவரம் அளிப்பாய். பி३ல்வாரண்யமான இந்தத் திருவாலிநகரில், எப்போதும் பக்தர்களுக்கு வரம்

௮௪. अङ्गीकृत्य वचस्तस्य रंगेशो भक्तवत्सलः ।
भक्तसंरक्षणेऽद्यापि तत्रैव परिदृश्यते ॥
௮௫. तदाप्रभृति वेदान्तिन्! हरिणाङ्गीकृतं भुवि ।
परकालकृतं ह्येतद्धनापहरणं भुवि ॥
௮௬. सर्वस्थलेषु सर्वत्र चोत्सवेष्वश्ववाहने ।
अतस्सर्वेश्वरः सर्वस्थलेषु च महोत्सवे ॥
௮௭. तुरङ्गवाहदिवसे कृपया भक्तवत्सलः ।
सर्वस्वदानमद्यापि करोति कलिवैरिणे ॥
௮௮. एतच्चोरोत्सवं चित्रं ये सेवन्ते नरोत्तमाः ।
तेषां रंगेश्वरः शीघ्रं सुप्रसन्नो भविष्यति ॥

---

அளிப்பவனாய் ஸாந்நித்₄யம் கொள்வாய். இதுவே எனக்கு மேலான வரமாகும்'' என்னும் மங்களகரமான வார்த்தையைக் கூறினார். பக்தவத்ஸலனான ஸ்ரீரங்க நாதனும் அவருடைய வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு பக்தர்களை ரக்ஷிப்பவனாய் இன்றளவும் அங்கு எழுந் தருளியிருக்கிறான்.

## வேடுபறி உத்ஸவம்

85-88. வேதாந்தியே! பரகாலரால் செய்யப்பட்ட இந்த த₄நாபஹரணமாகிற வேடுபறி அன்று தொடக்கமாக எம்பெருமானால் இவ்வுலகிலுள்ள எல்லா திவ்யதேசங்க ளிலும் பெரியஉத்ஸவங்களில் குதிரை வாஹனத்தில் எம்பெருமான் எழுந்தருளும் போது மஹோத்ஸவமாக அங்கீகரிக்கப்பட்டது. ஆகையால் எல்லா திவ்யதேசங்க ளிலும் குதிரை வாஹனத்தன்று நடக்கும் வேடுபறி மஹோத்ஸவத்தில் பக்தவத்ஸலனான எம்பெருமான் கலி கன்றியிடம் தன்னுடைய பொருள்களையெல்லாம் பறி கொடுக்கிறான். இந்த ஆச்சரியமான வேடுபறி உத்ஸ வத்தை ஸேவிக்கும் சிறந்த மனிதர்களுக்கு ஸ்ரீரங்க₃ நாத₂ன் விரைவிலேயே அருள்புரிகின்றான்.

८९. अथ रंगेश्वरः श्रीमान् परकालं वचोऽब्रवीत् ।
श्रीरंगे मम कैङ्कर्यं विधेहि कलिहन् परम् ॥

९०. प्राकारगोपुरे धान्यनिलयं च महानसम् ।
युष्मत्प्रियतमं वत्स तत्सर्वं यद्यदेव तत् ॥

९१. परकालोऽथ रंगेशदिव्याज्ञां शिरसा वहन् ।
सन्तुष्टः संपरिक्रम्य प्राञ्जलिः पुरतः स्थितः ॥

९२. आयाहि रङ्गमित्युक्त्वा कलिघ्न करुणाकरः ।
तत्रैवान्तर्दधे श्रीमान् वेदान्तिन् रङ्गराट् तदा ॥

९३. परकालस्ततो धीमान् स शिष्यैस्सहितस्तदा ।
कमलानगरं प्राप्य सम्यगाराध्य वैष्णवान् ॥

---

## அரங்கனின் நியமனம்

89 - 92. வேதாந்தியே! அதற்குப்பின் ஸ்ரீரங்க நாதன் பரகாலரைப் பார்த்து ''குழந்தாய் கலிகன்றியே! ஸ்ரீ ரங்கத்தில் சிறந்த மதில்களையும், கோபுரங்களையும், தான்யத்தைச் சேமித்துவைக்கும் கொட்டாரத்தையும், மடைப்பள்ளியையும், மற்றும் உமக்குப் பிரியமான எல்லாக் கைங்கர்யங்களையும் செய்வாயாக!'' என்று நியமித்தான். பரகாலரும் அந்த எம்பெருமானுடைய ஆணையைச் சிர மேற்கொண்டு உகந்தவராய் அவரை வலம்வந்து கை கூப்பி முன்னே நின்றார். ''ஸ்ரீ ரங்கத்திற்கு வருவாய்'' என்று கலிகன்றியிடம் கூறி, கருணைக்கடலான அந்த ஸ்ரீ ரங்கராஜன் அப்போதே அங்கேயே மறைந்தருளினான்.

## ஸ்ரீரங்கம் சேர்ந்து அரங்கனை ஸேவித்தல்

93-97. வேத₃ாந்தியே! அறிவாளியான அப்பரகாலர் சிஷ்யர்களோடு கூட அப்போதே திருநகரியை அடைந்து ஸ்ரீ வைஷ்ணவர்களை நன்கு ஆராதி₄த்து,

९४. देव्यै कुमुदवल्ल्यै च वृत्तान्तं च निवेद्य तत् ।
तयानुज्ञापितः श्रीमान् वेदान्तिन्! स चतुष्कविः ॥

९५, श्रीरंगेशस्य कैङ्कर्यं कर्तुकामो महायशाः ।
प्रतस्थे रङ्गनगरं स्वजनैस्सह सादरम् ॥

९६ श्रीरङ्गमासाद्य फणीन्द्रतल्पे शयानमाद्यं रघुवंशनाथम् ।
रंगेश्वरं तं परभक्तियुक्तो प्रणम्य लेभे परमं प्रहर्षम् ॥

९७. दृष्ट्वा भक्तवरोऽथ सुन्दरवरं देवं च रङ्गेश्वरं
नत्वा मोदमवाप्य भक्तिसहितः तीर्थप्रसादादिकान् ।

---

தம் பத்னியான குமுதவல்லிக்குச் செய்தியனைத்தையும் தெரிவித்து அவரால் விடை கொடுக்கப்பெற்ருர். அந்தப் பெரும்புகழாளரான நாலுகவிப்பெருமாள் திருவரங்கத்தம் மானுக்குக் கைங்கர்யம் செய்ய விரும்பியவராய், தம் பரிவாரங்களோடு கூட, திருவரங்கப்பெருநகருக்கு ஆர்வத் துடன் புறப்பட்டார். ஸ்ரீரங்கத்தை அடைந்து, அரவரச ஞகிற படுக்கையில் படுத்திருப்பவனுய், ரகு₄வம்ஶத்தினரால் ஆராதி₄க்கப்பெற்றவனுய், ஆதிபுருஷனை அரங்கநகரப்ப னைப் பரப₄க்தியோடு கூடியவராய் வணங்கிப் பரமானந்த மடைந்தார். அதற்குப்பின் பேரறிவாளராய், ப₄க்தஶ்ரேஷ்ட₂ ரான அப்பரகாலர் அழகியமணவாளனை நம்பெருமாளையும் ஸேவித்து வணங்கிப் பேரானந்தமுற்று, ப₄க்தியோடு தீர்த் த₂ம், ப்ரஸாத₃ம் முதலானவற்றைத் தலைவணங்கி உடனே பெற்றுக்கொண்டு நம்பெருமாளாலும், பெரியபெருமாளா லும் விடைகொடுக்கப் பெற்று, அவர்களுக்குக் கைங்கர்யம், செய்வது குறித்துத் தம்நெஞ்சில் பெரும்கவலை கொண்டார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீபராசரப₄ட்ட வேதா₃ந்தி ஸம்வாத₃த்தில் பரகாலர் ஸ்ரீரங்க₃நாத₂னை நேரில் கண்டதை விவரிக்கும் நூருவது அத்தியாயம் நிறைவுற்றது.

स्वीकृत्याशु तरं सुनम्रशिरसा ताभ्यामनुज्ञापितः
तत्कैङ्कर्यविधौ दधार हृदये चिन्तां परां धीवरः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे परकालस्य
रङ्गेश्वरप्रत्यक्षदर्शनं नाम शततमोऽध्यायः ॥

एकोत्तरशततमोऽध्यायः ॥

१. रङ्गं समालोक्य बुधान्तरङ्गं भक्त्या प्रहृष्टः स चतुष्कवीन्द्रः ।
सर्वं हि कैङ्कर्यमुदारकीर्तिः विधातुमैच्छद्विविधप्रकारैः ॥

२. रहःप्रदेशं समुपेत्य सर्वान् शिष्यान्समादाय चतुष्कवीन्द्रः ।
रङ्गेशकैङ्कर्यरतैकचित्तः जगाद वाक्यं स तदाप्तवर्गान् ॥

३. भो भोऽमात्या महात्मानः शुभं शृणुत मे वचः ।
श्रीरङ्गराजकैङ्कर्यं कर्तव्यं महदद्य नः ॥

---

## நூற்றோராவது அத்தியாயம்

## பு₃த்₃த₄விக்₃ரஹத்தை அபஹரித்தல் மந்த்ராலோசனை

1 - *8. வேத₃ாந்தியே! பெரும் புகழாளரான அந்த நாலுகவிப்பெருமாள் அறிவாளிகளுக்கு நெருங்கியதான திருவரங்கம் கோயிலை ப₄க்தியோடு கண்டு உகந்து, பல வகைகளில் எல்லாக் கைங்கர்யங்களையும் அக்கோயிலுக்குச் செய்ய விரும்பினார். அந்த நாலுகவிப் பெருமாள் தம் சீடர்களனைவரையும் கூட்டிக்கொண்டு தனியிடத்தை அடைந்து, திருவரங்கனின் கைங்கர்யத்தையே குறியாகக்கொண்ட நெஞ்சையுடையவராய், தமது ஆப்தநண்பர்களான அவர்களைப் பார்த்து, "பெருமைமிக்க மந்திரிகளே! என்னுடைய மங்க₃ளமான வாக்கியத்தைக் கேளுங்கள். மிகப்பெரிதான ஸ்ரீரங்க₃ராஜ கைங்கர்யம்

४. द्रव्यसंपादने यत्नः क्रियतां सावधानतः ।
प्रगृह्य परकालस्य वचनं वैष्णवोत्तमाः ॥

५. ऊचुः प्रहृष्टा वेदान्तिन् अमात्यास्तं महौजसम् ।
उपायं संप्रवक्ष्यामः श्रूयतां भगवत्परा ॥

६. हैरण्यबौद्धप्रतिमा विद्यते नागपत्तने ।
काचिन्महति सा लब्धा यद्यस्माकं हि सांप्रतम् ॥

७. श्रीरङ्गराजकैङ्कर्ये चिन्ता काचिन्न विद्यते ।
गतो यदि भवान् तत्र त्वदधीना भविष्यति ॥

८. सा बौद्धप्रतिमा शीघ्रं स्वामिन् तत्र न संशयः ।
मन्त्रिवाक्यं तदाकर्ण्य सन्तुष्टः स चतुष्कविः ॥

९. प्रतिमाहरणर्थाय प्रतस्थे नागपत्तनम् ।
स नागपत्तनं प्राप्य सौन्दरारण्यनायकम् ॥

---

நம்மால் இப்போது செய்யப்பட வேண்டும். அதற்குரிய பொருளைத் தேடுவதில் கவனமாக நாம் முயற்சி செய்ய வேண்டும்'' என்னும் வார்த்தையைக் கூறினர். வேத3ாந்தியே! வைஷ்ணவ ஶ்ரேஷ்ட2ர்களான அந்த மந்திரிகளும் பரகாலரின் அவ்வார்த்தையை ஏற்றுக்கொண்டு பெரும்ப3லமுள்ள அந்தப் பரகாலரைப் பார்த்துப் பின்வருமாறு உகந்து கூறினர்:- ''ப4க3வத்3ப4க்தரான தலைவரே! இதற்கு வழிசொல்லுகிறோம் கேட்பீர். பெரியதான நாகப்பட்டினத்தில் பொன்னாலான பு3த்3த4விக்3ரஹம் ஒன்று உள்ளது. நாம் இப்போது அதைப்பெற்றுவிட்டோமென்றால் ஸ்ரீரங்க3ராஜ கைங்கர்யத்தைப் பற்றிக் கவலைப்படவே வேண்டாம். தேவரீர் அந்நகருக்கு எழுந்தருளினால் அந்த பு3த்3த4விக்3ரஹம் விரைவில் உமது கைவசமாகும். இதில் ஐயமில்லை'' என்று.

१०. नत्वा सुन्दरराजाख्यं सारपुष्करिणीतटे ।
तेनानुज्ञापितो धीमान् ययौ बौद्धालयं प्रति ॥

११. अतिस्निग्धं महोत्तुङ्गं महागोपुरसंयुतम् ।
कुत्राप्यलक्षितद्वारं वीक्ष्य बौद्धालयं महत् ॥

१२. सम्यगेतत्समालोच्य प्रतिमाहरणोद्यतः ।
न वेद ग्रहणोपायं कथञ्चिदपि यत्नतः ॥

१३. तत्रत्यैः पुरुषैर्ज्ञात्वा तन्निर्मातृकशिल्पिनः ।
वेपाणनामकं द्वीपं नावमारुह्य तं ययौ ॥

---

## நாகப்பட்டினமடைதல்

8*-12. மந்திரிகளின் இந்த வாக்கியத்தைக்கேட்டு உகந்த அந்த நாலுகவிப்பெருமாள் அந்த பு3த்3த4விக்3ரஹத்தை அபஹரிப்பதற்காக நாசப்பட்டினத்திற்குப் புறப் பட்டார். நாகப்பட்டினத்தை அடைந்து, பேரறிவாளரான அப்பரகாலர் ஸாரபுஷ்ஷ்கரிணியின் கரையில் எழுந்தருளி யிருக்கும் ஸௌந்த3ராரண்யநாயகரான ஸுந்த3ரராஜப் பெருமாளை வணங்கி, அவரால் அனுமதிக்கப்பெற்றவராய் பௌ3த்த4ாலயத்தை நோக்கிச் சென்றார். மிகவும் நெஞ்சை யீர்ப்பதாய், மிகப்பெரியதாய், பெரியகோபுரத்தோடு கூடிய தாய், எங்கும் காணப்படாத நுழைவாயிலையுடையதான அப்பெரிய பௌ3த்3த4ாலயத்தைக் கண்டு, அங்குள்ள விக்ர ஹத்தை எடுக்க முயன்றவராய், எவ்வளவு முயன்றும் அதை எடுக்கும் வழியை அறியவில்லை.

## கடல்கடந்து சிற்பிக்கு நண்பனுதல்

13 - 17. **வேத3ாந்தியே!** அந்த நாகப்பட்டினத்தி லிருந்த மனிதர்களிடமிருந்து அந்த பு3த்3த4ாலயத்தைக்

१४. स तद्द्वीपं समासाद्य सानुगो वणिगिन्द्रवत् ।
परकालोऽथ वेदान्तिन्! शिल्पिना निपुणो महान् ॥
१५. बौद्धालयकृता तेन सख्यं चक्रे महत्तरम् ।
सर्वान् जनान् वशीकृत्य गिरा मधुरया तदा ॥
१६. बहिश्चरप्राण इवावतिष्ठत् कंसस्य चाक्रूर इवान्तरङ्गः ।
कार्यार्थमेतत्कलिजिच्च शिल्पिवरस्य तस्यात्र तदा महात्मा ॥
१७. एवं स शिल्पिना तेन परकालो महामतिः ।
सख्यं कृत्वाऽथ वेदान्तिन् कञ्चित्कालमवर्तत ॥
१८. ततः कदाचित् विविधाः कथाः श्रोत्रसुखावहाः ।
उक्त्वा स शिल्पिनं सम्यक् रञ्जयित्वा मुहुर्मुहुः ॥

---

கட்டிய சிற்பியின் வாஸஸ்தானம் 'வேபாணம்' என்னும் தீவே என அறிந்து, கப்பலேறி அத்தீவுக்குப் போனூர். தன் நண்பர்களோடு கூடியவராய் வல்லவராய், பெரிய வரான அந்தப் பரகாலர் வணிகத்தலைவரைப் போல் வேடம்பூண்டு அத்தீவை அடைந்து, பௌ₃ளத்₃த₄ாலயத்தைக் கட்டிய அந்தச்சிற்பியோடு பெருநட்புப் பூண்டார். அப் போது அங்குள்ள எல்லா மக்களையும் இனிய பேச்சாலே வசப்படுத்தி, மஹாத்மாவான அக்கலிகன்றி (எம்பெரு மானுடைய) காரியத்திற்காக அத்தலைமைச் சிற்பிக்கு, கம்ஸனுக்கு அக்ரூரன் போல் நெருங்கியவராய், வெளி யில் உலாவும் பிராணன் போல் ஆனூர். வேதாந்தியே! பேரறிவாளரான அப்பரகாலர் இவ்வண்ணமாக அந்தச் சிற்பியோடு சிலகாலம் நட்புடையவராய் வாழ்ந்தார்.

## புத்தாலயநிர்மாண மர்மமறிதல்

18 - 35. **வேத₃ாந்தியே!** அதற்குப்பின் ஒரு நாள் காதுக்கினிய பலவித₄மான செய்திகளை மறுபடியும் மறுபடி

१९. तन्मध्ये निपुणं वाक्यमब्रवीत् शिल्पिनं प्रति ।
तक्षार्य! भो! सखे! चैव किमप्यद्भुतवत्तरम् ॥

२०. वचनं न किमु प्राप्तं भवतः श्रोत्रवर्त्मनि ।
सखे बौद्धालयः श्रीमान् यो मह न्नागपत्तने ॥

२१. महोन्नतो महाचित्रो विद्यते किल सांप्रतम् ।
न मानुषकृतो ह्येषः साक्षाद्देवेन निर्मितः ॥

२२. तदमानुषकर्मैत्र भूम्यामन्यादृशं किल ।
महत्तच्छिल्पिनैपुण्यं वर्णितु केन शक्यते ॥

२३. तत्र बौद्धालये काचिद्धिरण्यप्रतिमास्ति हि ।
केनाप्यज्ञातवृत्तेन प्रतिमा सा हिरण्मयी ॥

२४. केनचित्सावधानेन चोरेणापहृता बत ।
परकालोऽनुतापं च तमित्युक्त्वा ययौ तदा ॥

---

யும் அந்தச் சிற்பிக்கு நன்கு உரைத்து அவனை வசப்படுத்தி, அச்செய்திகளுக்கிடையே அந்தச் சிற்பியைக் குறித்துப் பின் வரும் தந்திரமான வார்த்தையைக் கூறினார் பரகாலர்:- "நண்பரான தலைமைச் சிற்பியே! இந்தப் பேராச்சரியமான செய்தி உமது செவியில்படவில்லையா? நண்பரே! நாகப்பட்டினத்தில் மிகப்பெரிதாய், மிக விசித்திரமானதாய், செல்வச் செழிப்புள்ளதான பெரிய பௌ3ளத்3த4ாலயம் இப்போது உள்ளதல்லவா? அது மனிதனால் கட்டப்பட்டதல்ல; தே3வனொருவனாலேயே கட்டப்பட்டுள்ளது. பூமியில் ஒப்பற்ற அதிமானுஷச் செயலாகவன்றோ அது விளங்குகிறது. அதைக்கட்டிய சிற்பியின் பெரும் திறமையை யாரால் வர்ணிக்கமுடியும்? அந்த பௌ3ளத்3த4ாலயத்தில் ஒரு ஸ்வர்ணவிக்3ரஹம் உள்ளதல்லவா? திறமையுள்ள ஓர் திருடனால் எவருமறியாத ஏதோவொரு செயலைச்

२५. निशम्य तद्वचस्तस्य स तदालयकृत्तदा ।
स्वरेण किं किमित्युच्चैः प्रवदन्सहसोत्थितः ॥
२६. कोपेन महता युक्तो दण्डाहत इवोरगः ।
परकालं समालोक्य तक्षा वाचमथाब्रवीत् ॥
२७. परकाल! महाभाग! किमुक्तं भवता बत ।
भूयस्तद्ब्रूहि विशदं यद्विचित्रमनुत्तमम् ॥
२८. एतच्चित्रमिवाभाति प्रतिमाहरणं मम ।
परकालोऽथ निपुणस्तस्य वाक्यं निशम्य तत् ॥
२९. चातुर्येणैव चतुरस्तस्मै यत्तन्न्यवेदयत् ।
प्रतिमाहरणं श्रुत्वा दुःखितो विस्मितश्च सः ॥

---

செய்து அப்பொன்சிலை திருடப்பட்டு விட்டதந்தோ!'' என்று வருத்தத்தோடு இந்த வார்த்தையைக் கூறி விட்டு நிறுத்தினார் பரகாலர். அவ்வாலயத்தைக்கட்டிய அந்தச் சிற்பி அப்போது அவருடைய அவ்வார்த்தையைக் கேட்டு, பெருத்த குரலில் 'என்ன என்ன?' என்று கேட்டுக் கொண்டு உடனே எழுந்தான். தடியால் அடிக்கப்பட்ட பாம்புபோல் பெருங்கோபம் கொண்ட அச்சிற்பி பரகாலரைப் பார்த்து, "பெரியவரான பரகாலரே! நீர் என்ன வார்த்தை சொன்னீர்! ஒப்பற்ற விசித்திரமாயிருக்கும் அவ்வார்த்தையை மறுபடியும் தெளிவாகச் சொல்லுவீர்; இந்த சிலைத்திருட்டு எனக்கு மிக விசித்திரம் போலே காண்கிறது.'' என்று வார்த்தை சொன்னான். மிக நிபுணராய், ஸமர்த்த₂ரான பரகாலர் அந்த சிற்பியின் அவ்வாக்யத்தைக் கேட்டு மிகவும் ஸாமர்த்₂யமாக அந்தத் திருட்டை விளக்கினார். அந்தச் சிலைத்திருட்டைக் கேட்டுத் துன்பமும், வியப்புமடைந்த அந்தச்சிற்பி கோபத்தாலே பெருமூச்சு விட்டுக்கொண்டு "அந்த தேசம் வாழைமரம் நிறைந்த

३०. रूपेण दीर्घनिःश्वासं कुर्वन् वाचमुवाच ह ।
मर्मज्ञेनैव महता भृङ्गमुत्पाटितं च तत् ॥

३१. रंभावाहुल्यदेशोऽयं यतस्तेनैव सा हृता ।
परकालस्तदाकर्ण्य वेदान्तिन् निपुणो महान् ॥

३२. शिल्पिनं स्ववशीकृत्य परिपप्रच्छ तच्छनैः ।
तथ्यं मत्वा तदा तक्षा प्रतिमाहरणं ततः ॥

३३. तन्निर्माणप्रकारं च तस्मै सम्यङ्न्यवेदयत् ।
सव्यापसव्यचक्राभ्यां शिखरं तत्समन्वितम् ॥

३४. रंभास्तंभेन संरुध्य तच्चक्रभ्रमणं शनैः ।
उद्वर्त्यं च यत्नेन महता शिखरं महत् ॥

३५. तत्सर्वमाविलद्वारं शिखरं शिल्पिनस्तदा ।
ज्ञात्वा प्रहृष्टः स तदा करस्थांताममन्यत ॥

---

தாகையாலே அதைக்கொண்டே திருடன் அதைத்திருடி விட்டான். மர்மமறிந்த பெரும் திருடனாலேயே அக் கோயிலின் சிகரம் பிளக்கப்பட்டு விட்டது," என்று வார்த்தை சொன்னான். வேதாந்தியே! பெரிய நிபுண ரான பரகாலர் அதைக்கேட்டு, சிற்பியை மெள்ள மெள்ளத் தன் வசப்படுத்தி 'அது எப்படி முடியும்' என்று கேட்டார். அப்போது அச்சிற்பியும், சிலைத்திருட்டு நடந்ததை உண்மையென்று நம்பி, அந்தக்கோயிலைக்கட்டிய முறையை அவருக்குத் தெளிவாகக் கூறினான். வலமாகவும் இட மாகவும் சுழலும் இரண்டு சக்கரங்களோடு கூடியது அந்த ஆலயச்சிகரம். வாழைத்தண்டுகளை உள்ளேவிட்டு அந்தச் சக்கரங்கள் சுழலுவதைச் சிறிதுசிறிதாக நிறுத்தி, அந்தச் சிகரம் பெருமுயற்சி செய்து பிளக்கப்பட வேண்டும்; என்பது முதலான அனைத்தையும், பிலத்வாரம் வரை யில் சிகரத்தின் அமைப்பையும், சிற்பியிடமிருந்து அப் போதே கேள்விப்பட்டு உகந்து, அப்போதே அப்பொற் சிலை தம் கைப்பட்டு விட்டதாக எண்ணினார் பரகாலர்.

३६. चौद्धदोषेण सा नष्टा प्रतिमा तव किं ततः ।
सखे! त्वत्समदृशः शिल्पी भूम्यामिह न विद्यते ॥

३७. इत्येवं बहुशः सम्यक् श्लाघयित्वा पुनः पुनः ।
तेनानुज्ञापितो धीमान् प्रपेदे स्वनिकेतनम् ॥

३८. अथ रात्र्यां व्यतीतायां सानुगः स चतुष्कविः ।
वेपाणनामकद्वीपान्निर्ययौ नागपत्तनम् ॥

३९. तदा प्रतस्थे क्रमुकवणिगत्यन्तवित्तवान् ।
कश्चिदादाय संपूर्णक्रमुकान्नागपत्तनम् ॥

---

## நாகப்பட்டினத்திற்குப் புறப்படுதல்

36-38 "நண்பனே! பௌ₃ளத்₃த₄ தோ₃ஷத்திஞல் [1. பௌ₃ளத்₃த₄ர்கள் சரியாகப் பாதுகாக்காத குற்றத்திஞல்; 2. (உன்) அறிவின் தோஷத்தால்] அந்தப் பொற்சிலை களவாடப்பட்டுவிட்டது. அதனுல் உனக்கு என்ன நஷ்டம்? உன்னையொத்த சிற்பி இவ்வுலகில் இப்போது இல்லை', என்று அந்தச்சிற்பியைப்பலவாருகஇவ்வண்ணம் மறுபடியும் மறுபடியும் நன்கு புகழ்ந்து, அவனுல் விடைகொடுக்கப்பெற்ற அறிவாளியான பரகாலர் தாம் தங்கியிருக்குமிடத்திற்குத் திரும்பினர். அன்றிரவு கழிந்தபின் தம்சீடர்களோடு கூடிய அந்த நாலுகவிப் பெருமாள் வேபாணம் என்னும் அத்தீவிலிருந்து நாகப்பட்டினத்திற்குப் புறப்பட்டார்.

## கப்பலில் பாதிப்பாக்கு

39-55 குற்றமற்றவேத₃ாந்தியே! பெரும்பணக்காரனை ஒரு பாக்குவியாபாரி அப்போது தனது கப்பல் நிறையப் பாக்கை எடுத்துக்கொண்டு நாகப்பட்டினத்தை நோக்கிப் புறப்பட்டான். அப்போது நாலுகவிப் பெருமாள் அந்த வணிகனேடு நட்புறவுகொண்டு தன் சீடர்களோடு சடக்கென

४०. सख्यं कृत्वा तेन सार्धं वणिजा स चतुष्कविः ।
आरुरोहाशु तन्नावं वेदान्तिन्! सानुगस्तथा ॥

४१. कथाभिरभिरामाभिश्चातुर्यवचनैस्तथा ।
तदा सर्वो जनस्तेन क्षणेनैव वशीकृतः ॥

४२. परकालस्ततो धीमान् चतुरोऽचिन्तयत्तदा ।
अयं तु नौवणिक्छ्रेष्ठो धनाढ्यो मत्सखाऽधुना ॥

४३. रक्षितव्यः प्रयत्नेन मत्कर्मनिरतस्सदा ।
श्रीरंगेश्वरकैङ्कर्ये प्राप्तमेतद्धनं यदि ॥

४४. कृतार्थोऽसौ तरीवैश्यो भविष्यति न संशयः ।
इत्यालोच्य स वेदान्तिन् एकं क्रमुकमञ्जसा ॥

४५. आदाय द्विदलं कृत्वा तत्रार्धक्रमुकं तदा ।
दर्शयित्वाथ सर्वान् स वणिजश्चैव सादरम् ॥

---

அக்கப்பலில் ஏறினர். அழகிய கதைகளாலும், திறமையான பேச்சுக்களாலும் அக்கப்பலிலிருந்த எல்லா மனிதர்களும் அப்பரகாலராலே சிறிது நேரத்திலேயே வசீகரிக்கப்பட்டார்கள். அதற்குப்பின அறிவாளியும், வல்லவருமான பரகாலர் "இந்தக் கப்பல் வியாபாரி பணம் பெருத்தவனுகவும் எனது நண்பனுகவும் இப்போது உள்ளான். எப்போதும் என் செயல்களில் ஈடுபட்டிருக்கும் இவன் முயற்சி செய்து உய்விக்கப்படவேண்டும். ஸ்ரீரங்க₃நாத₂னுடைய கைங்கரியத்தின் பொருட்டு இவனது செல்வம் கிடைத்தால் இவன் பேறு பெற்றவனுவான் என்பதில் ஐயமில்லை" என்று சிந்திக்கலானுர். இவ்வாறு சிந்தித்து, ஒரு கொட்டைப் பாக்கை எடுத்து, அதை இரு பாதிகளாகப் பிளந்து, அதில் ஒரு பாதியை அப்போது அங்கிருந்த எல்லா வணிகர்களுக்கு முன்னிலையில் ஆர்வத்தோடு காட்டி,

४६ मयाऽर्धक्रमुको नावि निक्षिप्तो भोः सखेऽधुना ।
इत्यर्धक्रमुकं तत्र चतुरः क्षिप्तवांस्तदा ॥

४७. ततस्तं तु तरीवैश्यं नीलो वाचमुवाच सः ।
मयार्धक्रमुको नावि निक्षिप्तः किल सांप्रतम् ॥

४८. प्राप्स्यतीयं यदा नौका शुभात् तीरं सुपुष्कलम् ।
नावोऽर्धक्रमुकं शीघ्रं तदा दास्यामि निश्चयम् ॥

४९. इत्यद्य पत्रिकां शीघ्रं लिखित्वा देहि भोः सखे ।
तच्छ्रुत्वा स वणिक् प्राह परकालं शुचिस्मितः ॥

५०. किमर्थं पत्रिकालेखस्तीरमेष्यति नौर्यदा ।
यावन्मात्राभिलाषस्ते तावन्मात्रं प्रगृह्यताम् ॥

---

"நண்பனே! இப்போது நான் உனது கப்பலில் பாதிப்பாக்கு வைத்திருக்கிறேன்" என்று கூறி, வல்லவரான பரகாலர் அப்போது அந்தப் பாதிப்பாக்கை அக்கப்பலில் வைத்தார். அதற்குப்பிறகு நீலன் அந்தக் கப்பல் வியாபாரியைப் பார்த்து, "நண்பனே! நான் இக்கப்பலில் இப்போது பாதிப் பாக்கை வைத்திருக்கிறேனல்லவா? 'சரக்கு நிறைந்த இக்கப்பல் எப்போது மங்களமாகக் கரையை அடைகிறதோ, அப்போது, உடனே பாதிப்பாக்கை உனக்கு உறுதியாகத் தருகிறேன்' என்று ஓர் ஓலையில் எழுதி விரைவிலேயே என்னிடம் தருவாய்" என்று வார்த்தை சொன்னார். அந்த வணிகன் அவ்வார்த்தையைக் கேட்டுப் புன்சிரிப்புடைய வனாய்ப் பரகாலரைப் பார்த்து, "ஓலை எதற்கு எழுத வேண்டும்? கப்பல் கரைசேரும்போது, இரண்டு மூன்று பாக்குகளோ ஆயிரம் பதினாயிரம் பாக்குகளோ உமக்கு எவ்வளவு வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளும்" என்று கூறினான். அப்படியும் அவன் ஓலையெழுதித்தரும்படி

५१. द्वित्राणि क्रमुकानां तु सहस्राण्ययुतानि हि ।
वेदान्तिन् परकालेन बहुशः प्रार्थितोऽभवत् ॥

५२. तद्वाक्यामृतपानेन मत्तो मन्दविचारणः ।
स सम्यक् लेखयित्वाऽथ पत्रारूढां सुपत्रिकाम् ॥

५३. सर्वेषां पश्यतां तत्र प्रददौ कलिवैरिणे ।
आससादाथ नौः शीघ्रं नागपत्तनरोधसि ॥

५४. व्यवहारेण जित्वा तं वणिजं स चतुष्कविः ।
नावोऽर्धक्रमुकान्सम्यगादाय भगवत्परः ॥

५५. तान्वणिजेऽथ विक्रीय कैङ्कर्यार्थं स रङ्गिणः ।
प्रतिमाहरणार्थाय प्रयतोऽभूत्तदाऽनघ ॥

---

பரகாலரால் பலவாறு பிரார்த்திக்கப்பட்டான். அவருடைய வாக்காகிற அமுதத்தைப் பருகியதால் மயங்கி, ஆராய்ச்சி யில்லாமல் ஓர் ஓலையில் அவர் விரும்பியபடி "கப்பலில் பாதிப் பாக்கைக் கரையேறியவுடன் தருகிறேன்" என்று நன்கு எழுதி அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே கலிகன்றியிடம் கொடுத்தான். விரைவிலேயே அக்கப்பல் நாகப்பட்டினக்கரையை அடைந்தது. குற்றமற்ற வேதாந்தியே! கரையேறியவுடன் அவ்வோலையைக் காட்டி "கப்பலில் உள்ள பாக்குகளில் பாதிபாகம் என்னுடையது" என்று வழக்காடி, எம்பெருமானுக்காகவே வாழ்ந்த அந்த நாலு கவிப் பெருமாள் அவ்வழக்கில் வென்று கப்பலில் பாதிப் பாக்கைப் பெற்று நன்கு எடுத்துக்கொண்டு, அந்த வியாபாரியிடமே அரங்கனுக்குக் கைங்கரியம் செய்வதற்காக அதை விற்று, பௌ₃ளத்₃த₄ விக்ரஹத்தைக் களவாட முயற்சி மேற்கொண்டார்.

५६. ततो निशीथसमये स्वान्तरङ्गभटैर्युतः ।
स तत्साधनसामग्रीसहितः सत्वरं वशी ॥
५७. उपरिष्टात्समारुह्य तदा बौद्धालयस्य वै ।
उन्मूल्य तच्च शिखरं सुकरोपायतो वशी ॥
५८. अपश्यदन्तः प्रतिमां परकालो हिरण्मयीम् ।
अखण्डदीपमध्यस्थां मन्त्रमूर्तिमिवापराम् ॥
५९. दृष्ट्वा प्रहृष्टः स तस्या ग्रहणे कृतनिश्चयः ।
प्रतिमाहरणार्थाय गाथामेकां जगाद सः ॥
गाथार्थं संप्रवक्ष्यामि श्रूयतां श्लोकरूपतः ॥
६०. एषा कर्तुमलं हि भूरि शिलया कांस्येन वै दारुणा
ताम्रेण त्रपुणाऽथ वा च रजसा रौप्येण सा स्यान्न किम् ।
बौद्धार्चाल्पतमेयमस्य महतः स्वर्णस्य योग्या कथं
बौद्धैर्व्यर्थतमा हिरण्मयकृता हा हन्त मूढात्मभिः ॥

---

## பொற்சிலையைக் களவாடுதல்

56-*76. குற்றமற்ற வேதாந்தியே! அதற்குப்பின் நள்ளிரவில் தமது அந்தரங்க3 சீடர்களோடு கூடியவராய், அச்சிலையை எடுப்பதற்கு வேண்டிய கருவிகளைக் கைக்கொண்டவராய், தக்க வழியாலே விரைவில் பௌ3த்3த4ாலயத்தின் மேலேறி (வாழைத்தண்டுகளாலே சக்கரங்கள் சுழல்வதை நிறுத்துவது முதலான) எளிய உபாயங்களாலே அந்த விமானத்தைப் பிளந்து, அதற்குள் பொன்மயமானதாய், அக2ண்ட3 தீ3பங்களின் இடையிலிருப்பதாய், மந்திரமே வடிவுகொண்டது போலிருப்பதான சிலையைப் பரகாலர் பார்த்தார். அதைக்கண்டு உகந்த அவர் அதை எடுப்பதில் உறுதிபூண்டவராய், அதை எடுப்பதற்காக ஒரு பாட்டைக் கூறினார். [''ஈயத்தாலாகாதோ? இரும்பினாலாகாதோ? பூயத்தால் மிக்கதொரு பூதத்தாலாகாதோ? தேயத்தே பித்தளை நற் செம்புகளாலாகாதோ? மாயப்பொன்

६१. सा समाकर्ण्य वेदान्तिन्! गाथां तां कलिजित्कृताम् ।
अतिभीतिसमायुक्ता चकम्पे बौद्धदेवता ॥

६२. परकालः स तां दृष्ट्वा देवतां भयमोहिताम् ।
पत्नीसहोदरं धीरं परकालाभिधं तदा ॥

६३. प्रतिमाहरणार्थाय चोदयामास सत्वरम् ।
अतः संचोदितस्तेन विवेशान्तः स सत्वरम् ॥

६४. ग्रहीतुकामः प्रतिमां तदन्तिकमुपागतः ।
तस्याः सम्पूर्णशक्तित्वात्सा बौद्धप्रतिमाऽनघ ॥

६५. न तस्य परकालस्य ग्रहणं समुपागमत् ।
स खिन्नहृदयस्तेन चतुष्कमिमभाषत ॥

---

வேணுமோமதித்துன்னைப்பண்ணுகைக்கே?" (பூயம்-அழுக்கு) என்பது அப்பாட்டு.] அதன் பொருளை ஶ்லோக ரூபமாகப் பின்வருமாறு கூறுகிறேன் கேட்பீர்- "மிகத்தாழ்ந்தது இந்த புத்₃த₄விக்₃ரஹம்; இதைச்செய்ய மிகவுயர்ந்த பொன்னைப் பயன்படுத்துவது தகுமோ? இதைச் செய்ய ஒரு பெரிய கல் போதாதா? பித்தளை, மரம், தாமிரம், ஈயம், புழுதிமண், வெள்ளி ஆகியவை போதாதா? அறிவற்ற நெஞ்சையுடைய பௌ₃த்₃த₄ர்கள் வீணாக இதைப் பொன்னால் செய்துவிட்டார்களந்தோ" என்பது (அந்த ஶ்லோகத்தின் பொருள்). கலிகன்றியால் பாடப்பட்ட அப்பாட்டைக் கேட்டு அந்த பௌ₃த்₃த₄ தே₃வதை மிகவும் பயந்து நடுங்கிற்று. ப₄யத்தினால் மயங்கிய அச்சிலையைக் கண்டு, பரகாலர் மிக்க தை₄ர்யமுடையவனாய் பரகாலன் என்றே பெயர்கொண்ட தன் மைத்துனனை (மனைவியின் ஸஹோத₃ரனை) அப்போது அச்சிலையை விரைவில் எடுக்கும்படி நியமித்தார். அவரால் நியமிக்கப்பெற்ற அவனும் விரைவில் விமானத்தினுள் நுழைந்தான்; அச்சிலையை எடுப்பதற்காக அதன் அருகில் சென்றான். நிறைந்த (மந்திர) சக்தியுடையதாயிருந்ததால் அந்த பௌ₃த்₃த₄ச்சிலை அந்தப் பரகாலனால் எடுக்க முடியாத

६६. परिभ्रमति कोणेषु चतुर्ष्वपि समन्ततः ।
कथञ्चिदपि यत्नेन न चैषा मद्वशं गता ॥

६७. किं करिष्यामि भोः स्वामिन् यत्नः कश्चिद्विचार्यताम् ।
तस्य तद्वचनं श्रुत्वा चतुष्कविरभाषत ॥

६८. मूर्तिभङ्गाय तस्यास्त्वं मुखे मूत्रं समुत्सृज ।
अङ्गीकृत्य तथैवाशु तत्कृत्वा तां प्रगृह्य सः ॥

६९. प्रहृष्टः परकालाय प्रददौ प्रतिमां तदा ।
तल्लब्ध्वामोदतस्तस्य देहः स्थूलीकृतो महान् ॥

७०. न समर्थः स निर्यातुं तत्सूक्ष्मद्वारतोऽनघ ।
वेदान्तिन् तच्छिरोमात्रं तद्द्वाराद्बहिर्गतम् ॥

---

தாயிற்று. அவன் அதனால் கலங்கியவனாய் நாலுகவிப் பெருமாளைப் பார்த்து "ஐயா! இச்சிலை நாலு மூலைகளிலும் எல்லாவிடங்களிலும் ஓடுகிறது. எவ்வளவு முயன்றும் இது என் கைப்படவில்லை. நான் என்ன செய்வது? செய்யவேண்டிய முயற்சியை ஆராய்ந்து கூறும்" என்று உரைத்தார். அவனது அந்த வார்த்தையைக் கேட்டு நாலுகவிப் பெருமாள் அவனைக்குறித்து "அச்சிலையின் மந்திர சக்தி அழிவதற்காக அச்சிலையின் முகத்தில் நீ மூத்திரத்தை விடுவாய்" என்று கூறினார். அவ்வார்த்தையை ஏற்றுக்கொண்டு அவன் அப்படியே உடனே செய்து அச்சிலையை எடுத்து உகந்தவனாய், அப்போதே அச்சிலையைப் பரகாலரிடம் கொடுத்தான். அச்சிலையை அடைந்தபின் ஆனந்தத்தினால் அப்பரகாலனின் உடம்பு பூரித்துப் பெரிதாகப் பருத்துவிட்டது. குற்றமற்ற வேதாந்தியே! அதனால் அந்த விமானத்தின் சிறிய துவாரத்தின் வழியாக அவன் வெளிவர இயலவில்லை. அவன் தலை மாத்திரம் அந்த துவாரத்தின் வழியாக வெளி வந்தது. எவ்வளவு முயன்றும் அவனது உடல் வெளிவர இயலவில்லை. அதற்குப் பின் தீ₄ரனான அப்பரகாலன் நீலனைப்

७१. कायो नैवागतस्तस्य कथञ्चिदपि यत्नतः ।
परकालस्ततो धीरो नीलं वाचमुवाच सः ॥

७२. स्वामिन्नमोघसङ्कल्प! चतुष्कविशिखामणे! ।
विलम्बं च विसृज्याद्य मद्वाक्यं शृणु सादरम् ॥

७३. यत्नेन महता चैत्र संलब्धा प्रतिमाऽधुना ।
तेन संजातहर्षेण देहः स्थूलीकृतो महान् ॥

७४. सूक्ष्मं तु शिखरद्वारं एतद्धनतरं महत् ।
निबद्धं सांप्रतं तस्मादसमर्थोऽभवं ततः ॥

७५. रात्रौ यामत्रयं जातं कालोऽयं सुगमः किल ।
कैङ्कर्यविघ्नो न भवेद्यथैवाशु तथा कुरु ॥

७६. आचार्यपादपद्माभ्यां वः शपे नोत्तरं वद ।
स तदैवाशु वेदान्तिन् परकालो विधाय च ॥

---

பார்த்து, "வீணாகாத ஸங்கல்பத்தையுடைய தலைவரே! நாலு கவியும் பாடவல்ல பெரும் புலவரே! காலதாமதம் செய்வதை விடுத்து, என் வார்த்தையை இப்போது குறிக்கொண்டு கேட்பீர். பெருமுயற்சி செய்து இச்சிலை இப்போது அடையப்பெற்றுள்ளது. அதனால் உண்டான ஆனந்தத்தினால் என் உடல் பெரிதாகப் பருத்துவிட்டது. விமானத்தின் துவாரமோ சிறிதாயுள்ளது. இவ்விமானமோ (உடைக்க முடியாதபடி) மிகவுறுதியாகவுள்ளது. ஆகையால் நான் இப்போது வெளிவர இயலவில்லை. இரவில் மூன்று யாமங்கள் கடந்துவிட்டன. இக்காலம் (நீர்) வெளியேற உசிதமானதன்றோ. (ஸ்ரீ ரங்க₈) கைங்கரியத்திற்கு இடையூறு வராதபடி விரைவில் செயல்படுவீர். உமது ஆசார்யனின் திருவடித்தாமரைமேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். பதில் கூறி நேரத்தை வீணாக்காதீர்" என்று கூறினான்.

௭௭. तच्छिरः प्रतिमां सम्यक् संगृह्यात्यन्तगूढगः ।
बौद्धालयाद्विनिर्गत्य तस्मात्सानुचरस्तदा ॥

௭௮. अगमद्रात्रिशेषेण तेन कृष्णकुटीपुरम् ।
जानुप्रमाणगंभीरतोयपंकविशोभिते ॥

௭௯ कस्मिंश्चित्कर्षकक्षेत्रे निक्षिप्य प्रतिमां तदा ।
सानुगः परकालोऽथ निषसाद तदन्तिके ॥

௮௦. तिन्त्रिणीवृक्षमालोक्य तत्समीपगमब्रवीत् ।
निद्राविरहितः सम्यक् त्वमेतां परिपालय ॥

## திருக்கண்ணங்குடியில் உறங்காப்புளி

76*-81. வேத3ாந்தியே! அந்தக்கலிகன்றி, (வேறு வழியில்லாமையாலே கைங்கர்யத்திற்காக உயிரையும் தியாகம் செய்த) அந்தப்பரகாலனின் தலையையும் * அந்த பௌ3த்3த4ச் சிலையையும் நன்கு எடுத்துக்கொண்டு, மிக ரஹஸ்யமாகத் தன் பரிஜனங்களோடு அந்த பு3த்3த4 விஹாரத்திலிருந்து அப்போதே வெளியேறி, அன்று இரவு முடிவதற்குள் திருக்கண்ணங்குடிக்குச் சென்றார். அங்கு முழங்காலளவும் ஆழமுள்ள நீருடைய சேறு நிறைந்ததாய், ஓர் உழவனுக்குச் சொந்தமானதான வயலில், அந்தச்சிலையை அப்போதே புதைத்து வைத்து, தம் பரிஜனங்களோடு கூடிய பரகாலர் அதன் அருகிலேயே வீற்றிருந்தார். அவ்விடத்திற்கு அருகிலிருந்த புளிய மரத்தைப் பார்த்து ''தூக்கமில்லாமல் இச்சிலையை நீ நன்கு பாதுகாப்பாய்'' என்று கூறினார். உறுதியுள்ள

* பன்னிராயிரப்படியில் ஒரு பிரதி—திருவரங்கன் பெரிய திருவடியைக் கொண்டு, புத்தவிஹாரத்திலிருந்த பரகாலனின் உடலையும் பரகாலரால் ஒரு புதரில் வைக்கப்பட்ட அவனது தலையையும் இணைக்கச்செய்து உயிருட்டியதாகக் கூறும். அவன் பெயர் யதிராஜன் என்றும் கூறும்.

८१. प्रतिमारक्षणे वृक्षं तं निवेद्य दृढव्रतः ।
विश्रमार्थं तदा तत्र सुष्वाप विगतज्वरः ॥

८२. ततः प्रभातसमये स तत्क्षेत्राधिपस्तदा ।
अङ्कुराहरणार्थाय तत्रैवाशु समागतः ॥

८३. तदुद्यमं तदालोक्य सहसा स परान्तकः ।
शप्त्वा नृपतिना सार्धं वारयामास कर्षकम् ॥

८४. ततस्तयोर्महानासीत्कलहः क्षेत्रकारणात् ।
आकृष्य कर्षकं नीलो विवेश ग्राममञ्जसा ॥

८५. व्यवहारं तयोर्ज्ञात्वा यत्तद्ग्रामाधिकारिणः ।
परकाल विलोक्याशु विस्मितास्तमथाब्रुवन् ॥

---

விரதங்கொண்ட பரகாலர் அச்சிலையை ரக்ஷிக்கும் பொறுப்பை அந்த மரத்திடம் நியமித்துவிட்டு, அப்போதே கவலையற்றவராய், களைப்புத்தீர அங்கேயே தூங்கினார். (அந்தப்புளியமரமும் அவ்வண்ணமே அச்சிலையை உறங்காமல் ரக்ஷித்தபடியால் உறங்காப்புளியென்று பெயர்பெற்றது.)

## திருக்கண்ணங்குடியில் தீராவழக்கு

82 - 93. வேதவாந்தியே! அதற்குப்பின் விடியற் காலைவேளையில் அந்த வயலுக்குச் சொந்தக்காரன் அந்த வயலில் நாற்றுநடுவதற்காக அங்கு திடீரென்று வந்து சேர்ந்தான். நாற்று நடுவதற்கு அவன் முயற்சிசெய்வதைக் கண்டு பரகாலர் உடனே அரசன்மேல் ஆணையிட்டு அவ்வுழவனைத் தடுத்தார். அப்போது அவ்விருவரிடையே அந்த வயலின் உரிமைபற்றிய பெரிய வழக்கு உண்டாயிற்று. நீலன் அவ்வுழவனை இழுத்துக்கொண்டு அந்த கிராமத்தினுள் நுழைந்தார். அவர்களிடையே

८६. परकालाद्य तत्क्षेत्रं भवतः कथमागतम् ।
त्रीण्येव व्यवहारस्य साधनानि जगत्त्रये ॥

८७. भुक्तिः साक्षी च लिखितं व्यवहारः स तैर्जितः ।
भुक्तिर्नास्त्यद्य भवतो जानीमस्त्वां दृढं वयम् ॥

८८. तथैव साक्षी नास्त्यद्य तस्माल्लिखितमानय ।
एवमुक्तोऽथ मध्यस्थैः परकालोऽब्रवीत्स तान् ॥

८९. पित्रा दामोदरेणैवमिदानीमनुभूयते ।
तस्मात् क्षेत्रं ममैवेदं सत्यं वच्मि न संशयः ॥

९०. एवंविधं विधायाशु प्रमाणं भगवत्परः ।
तत् क्षेत्रं स्ववशीकृत्य मुमोद विगतज्वरः ॥

---

வயலின் உரிமையைப்பற்றி விளைந்த வழக்கை அறிந்த அந்த கிராமத்தின் அதி4காரிகள் வியப்புற்றவர்களாகச் சடக்கெனப் பரகாலரைப்பார்த்து "பரகாலரே! இப்போது இவ்வயல் உமக்கு எப்படி உரிமையாயிற்று? மூவுலகிலும் வழக்கில் வெல்வதற்கு அநுப4வம், ஸாக்ஷி, சாஸனம் என்னும் மூன்று உபாயங்களே உண்டு. இவற்றை உடையவனே வழக்கில் வெல்வான். உம்மை நாம் (வெளியூர்க்காரர் என்று) உறுதியாக அறிவோம்; ஆகையால் உமக்கு (வயலின்) அநுப4வம் இல்லை. உமக்கு இன்று ஸாக்ஷி சொல்லுகிறவர்களும் (இவ்வூரில்) யாருமில்லை. ஆகையால் (மூன்றாவது உபாயமான) சாஸனத்தைக்காட்டும்" எனக் கூறினர். நடுவர்களால் இப்படி நியமிக்கப்பெற்ற பக3வத்3ப4க்தரான பரகாலர் அவர்களைப் பார்த்து"என் தந்தையான தா3மோத3ரனாலேயே (தாமோதரப் பெருமாளாலேயே) இப்போதும் இவ்வயல் அனுப4விக்கப்படுகிறது. ஆகையால் இந்த வயல் எனக்கே உரியது என்று ஸத்யமாகச் சொல்லுகிறேன். இதில் ஐயமில்லை"

९१. यतः कैङ्कर्यविघ्नाय ग्रामस्था मामपीडयन् ।
अतोऽत्र व्यवहारस्य जयो न स्यात्कदाचन ॥

९२. एवं शप्त्वाथ कोपेन सहसा स परान्तकः ।
दामोदरस्य सेवार्थं चकार मतिमान् मतिम् ॥

९३. तदाप्रभृति वेदान्तिन्! तत्र कृष्णकुटीपुरे ।
व्यवहारजयस्तत्र तेनाद्यापि न दृश्यते ॥

९४. स्नात्वा श्रवणतीर्थेऽथ चोर्ध्वपुण्ड्रधरस्तथा ।
गृह्णन् वकुलपुष्पाणि वाचं वकुलमब्रवीत् ॥

---

என்று இவ்வண்ணமாக ஸத்யத்தைச் சடக்கெனச் செய்து (அவர்களைச் செயலிழக்கச் செய்து வயலைத் தம் வசப்படுத்திக்கொண்டு கவலையற்றவராய் உகப்படைந்தார். "(அரங்கனின்) கைங்கர்யத்திற்கு இடையூறு செய்து இவ்வூரிலுள்ளார் என்னைத் துன்புறுத்தியதாலே, இவ்வூரில் எப்போதும் வழக்குகள் வெற்றி பெற்றுத்ராமலே இருக்கக்கடவது" என்று கோபத்துடன் சடக்கென அவ்வூராரைச் சபித்த அறிவாளியான பரகாலர் தா₃மோத₃ரப்பெருமானை ஸேவிப்பதற்கு எண்ணங் கொண்டார். அதற்குப் பின் அந்தத் திருக்கண்ணங்குடியில் இன்று வரை வழக்குகள் எவருக்கும் வெற்றியடைவதில்லை.

## திருக்கண்ணங்குடியில் காயாமகிழ்

94-*98. வேதா₃ந்தியே! அதற்குப்பின் அங்குள்ள ஶ்ரவண தீர்த்த₂த்தில் நீராடி, ஊர்த்₄வபுண்ட்₃ரங்களை த₄ரித்தவரான பரகாலர் அகிருந்த மகிழமரத்திலிருந்து மகிழம்பூக்களைப் பறித்து அந்த மகிழமரத்தைப் பார்த்து "மகிழமரமே! இந்தத் திருக்கண்ணங்குடியில் எனது ஆணையால், காயில்லாமல் எப்போதும் நீ பூக்களையே த₄ரிப்பதாய் விளங்குவாய்"

९५. शलाटुरहितो नित्यं पुष्पाण्येवात्र धारय ।
मदाज्ञयैव वकुलभुज कृष्णकुटीपुरे ॥

९६. तदाप्रभृति वेदान्तिन् स तत्र वकुलद्रुमः ।
नित्यपुष्पसमायुक्तो वर्तते फलवर्जितः ॥

९७. सूचयन्निव तत्कीर्तिं वकुलः परिदृश्यते ।
स तैः पुष्पैः समाराध्य तदा दामोदरं हरिम् ॥

९८. कृतकृत्यो महातेजाः परकालो मुमोद ह ।
निर्गत्य तस्माद्वेदान्तिन् रथ्यामभ्येत्य सत्वरम् ॥

९९. तत्रत्यान्वैष्णवान्सर्वान् नीलो जलमयाचत ।
पिपासया परिश्रान्तः बहुवारं परान्तकः ॥

१००. तत्रस्थः कोऽपि पानीयं न ददौ कलिवैरिणे ।
अकारणविवादोऽयमिति भीत्या बुधर्षभ! ॥

---

என்று அழகாகக்கூறினார். அதுமுதற்கொண்டு அந்த மகிழ மரம் காய்த்துப் பழுக்காமல் எப்போதும் பூக்களோடு கூடியதாகவே விளங்குகிறது. திருமங்கைமன்னனின் புகழை உணர்த்திக் கொண்டு இன்றும் அந்த மகிழமரம் காணப்படுகிறது. அந்த மரத்தின் பூக்களைக் கொண்டு தா₃மோத₃ரனை எம்பெருமானை ஆராதி₄த்து, கடமையைச் செய்து பொலிவு பெற்றவரான பரகாலர் உகப்படைந்தார்.

## திருக்கண்ணங்குடியில் ஊறுக்கிணறு

98*-102. நல்லார்களிலும், அறிவாளிகளிலும் சிறந்த வேதா₃ந்தியே! அந்தக்கோயிலிலிருந்து வெளிவந்து விரைவில் வீதிக்கு வந்து அங்கிருந்த எல்லா வைஷ்ணவர்களிடமும், தா₃ஹத்தால் மிகவும் களைப்படைந்த நீலனை பரகாலர் பலமுறை நீர் கொடுக்கும்படி யாசித்தார்.

१०१. स तदादत्तदोषेण परकालः शशाप तम् ।
ग्रामेऽस्मिन्सर्वदा कूपाः भवेयुर्जलवर्जिताः ॥

१०२. आपातालं खनित्वापि जलं न दृश्यते ततः ।
तत्र कृष्णकुटीराख्ये नगरेऽद्यापि सत्तम! ॥

१०३. आसायं परकालोऽथ तत्र स्थित्वा सहानुगः ।
प्रतिमां तां समादाय प्रतस्थे निशि वै रहः ॥

१०४. दामोदरस्तु भगवान् श्रीकृष्णनगराधिपः ।
गच्छतः परकालस्य पश्चादनुययौ तदा ॥

१०५. परकालस्तमालोक्य जगाद वचनं तदा ।
को भवानागतः कस्मात्कुत्र गच्छति सांप्रतम् ॥

---

"இவர் காரணமில்லாமல் வழக்காடுபவர்" என்னும்பயத்தால் அங்கிருந்த எவரும் அவருக்கு நீர் கொடுக்கவில்லை. அக்குற்றத்தாலே பரகாலர் "இந்த கிராமத்தில் எல்லாக் கிணறுகளும் எப்போதும் நீரற்றுப்போகக் கடவன" என்று அவ்வூரை சபித்தார். அதற்குப்பின் இன்றளவும் அந்தத் திருக்கண்ணங்குடியாகிற ஊரில் பாதாளம் வரையில் வெட்டினாலும் கிணறுகளில் நீர் காணப்படுவதில்லை.

## திருமங்கைக்கள்வனும் தாமோதரக்கள்வனும்.

103-*122. நல்லவரான வேதாந்தியே! தமது பரிஜனங்களோடு அன்று மாலை வரையில் அங்கிருந்த அப்பரகாலர், அந்தப் பொற்சிலையை எடுத்துக்கொண்டு இரவில் ரஹஸ்யமாகப் புறப்பட்டார். திருக்கண்ணங் குடிக்குத் தலைவனான தாமோதரப் பெருமான் அப்போது செல்லும் பரகாலருக்குப்பின்னால் தொடர்ந்து சென்றான்.

१०६. मत्पृष्ठतः समायासि किमर्थं वद तत्त्वतः ।
परकाले वदत्येवं तदा दामोदरोऽब्रवीत् ॥
१०७. मार्गसंप्रेषणार्थाय भवतो निशि गच्छतः ।
आदरादागतो नील! सोऽहं नगरपालकः ॥
१०८. प्रहस्य तद्वचः श्रुत्वा परकालस्ततोऽब्रवीत् ।
अलमेतद्दयाधिक्यं गच्छ स्वनगरं जवात् ॥
१०९. चोरेभ्यो निशि रक्षस्व प्रत्यहं दण्डधारक ।
मम युष्मद्दयामात्रमलं भोः साधु गम्यताम् ॥
११०. ततः क्षणान्तरे देवः पूर्ववत्प्रत्यदृश्यत ।
तेनैवमुक्तः तं प्राह परकालं हरिस्तदा ॥

---

அப்போது அவனைப் பார்த்துப் பரகாலர் "நீர் யார்? எங்கிருந்து வருகிறீர்? இப்போது எங்குச் செல்கிறீர்? எனக்குப் பின்னாலேயே வருவதற்குக் காரணத்தை உள்ளபடி சொல்லும்" என்று வார்த்தை சொன்னார். இவ்வண்ணமாகப் பரகாலர் கூறும்போது தா₃மோத₃ரன் அவரைப் பார்த்து, "நீலனே! இவ்வூரின் பாலகனான நான் இரவில் செல்லும் உம்மை வழியனுப்புவதற்காகவே அன்போடு கூட வருகிறேன்" எனக்கூறினான். அவனுடைய வார்த்தையைக் கேட்டுப் பெரிதாகச் சிரித்து, பரகாலர் அவனைப்பார்த்து, "உம்முடைய இந்தக் கருணைப் பெருக்கு போதுமானது; உம் ஊருக்கு நீர் விரைவில் திரும்புவீர். ஆயுதம் ஏந்தியிருப்பவரே! இரவில் இவ்வூரைத் திருடர்களிடமிருந்து தினந்தோறும் காப்பாற்றுவீர்! ஓய்! எனக்கு உமது கருணையே போதுமானது. நல்லபடியாகத் திரும்பும்" எனக் கூறினார். அதற்குப்பின் அடுத்த கணத்திலும் அப்பெருமான் முன்போலவே பின் தொடர் பவனாகக் காணப்பட்டான். பரகாலரால் திரும்பும்படி

१११. तत्सीमावधिपर्यन्तमागमिष्याम्यहं ध्रुवम् ।
तव संप्रेषणार्थाय दयया निशि गच्छतः ॥

११२. न चक्षुर्विषयं प्राप मागच्छेत्यभिभाषितः ।
पथि दामोदरस्तेन परकालेन सत्तम ॥

११३. प्रत्याख्यातोऽपि तेनैवं द्विवारं कलिवैरिणा ।
दामोदरस्तु सहसा पूर्ववत् समदृश्यत ॥

११४. स पृष्ठतः समायान्तं कालाम्बुदनिभाकृतिम् ।
आज्ञातिलंघिनं धीरं स तमेकाकिनं निशि ॥

११५. विलोक्य शंकितश्चिन्तां परकालोऽगमत्तदा ।
सत्यं वदन्ति मामेव चोर इत्यखिला जनाः ॥

११६. मत्तोऽधिकोऽयमधुना कश्चिच्चोरो महानभूत् ।
तिमेस्तिमिङ्गिलो यद्वत् तद्गिलस्य च तद्गिलः ॥

---

நியமிக்கப்பெற்ற அப்பெருமான் அப்போது அவரைப் பார்த்து, ''இரவில் செல்லும் உம்மை வழியனுப்புவதற்காக, இவ்வூரின் எல்லேவரையில் நான் வந்தே தீருவேன்; இது உறுதி'' என்று உரைத்தான். ''வராதே'' என்று பரகாலரால் நியமிக்கப்பட்டவுடன் அவரது கண்ணுக்கு மறைந்தான். பரகாலரால் இவ்வண்ணமாக இருமுறை நியமிக்கப்பெற்ற பின்பும் தா₃மோத₃ரன் முன்போலவே பின்தொடர்பவனைக் காணப்பட்டான். காளமேக₄ம் போன்ற அந்தச் சாம மாமேனிப் பெருமான் சிறிதும் பயப்படாமல் தனியனாய்த் தம் ஆணேயை மீறி இரவில் பின் தொடர்வதைப் பார்த்து ஐயமுற்றுக் கவலேகொண்டார் அவர். "என்னேயே எல்லா மக்களும் 'கள்ளர்' என்று அழைக்கின்றனர். என்னேவிடப் பெரிய கள்வராகவன்றே இப்பெரியவர் இருக்கிறார். திமியென்னும் மீனேத் திமிங்கிலம் விழுங்கும்; திமிங்கிலத்தைத் திமிங்கிலகிலம் விழுங்கும்.

११७ यत्नेन भूयसा मेऽद्य लब्धैषा प्रतिमा किल ।
वञ्चयत्याशु मामेषः प्रतिमां हर्तुमागतः ॥

११८. इदानीं लक्षितश्चैकः तत्तदीयबलं कियत् ।
मया न लक्ष्यते तत्र वर्तन्ते गूढचारिणः ॥

११९. न सहायं विना रात्रौ एक एवायमागतः ।
अतोऽयमधुना शीघ्रं हन्तव्यो नात्र संशयः ॥

१२०. एवं निश्चित्य सहसा परकालस्तदाऽनघ ।
आदाय च हठान्नीलः करवालं भयङ्करम् ॥

१२१. आकाशे भ्रामयन् हन्तुं स तस्याभिमुखं ययौ ।
खड्गहस्तं तमायान्तं वीक्ष्य दामोदरो हरिः ॥

---

நான் இந்த பௌத்₃த₄பி₃ம்ப₃த்தை இப்போது மிகவும் முயன்று அடைந்திருக்கிறேன். அந்தச்சிலையை என்னிடமிருந்து திருடுவதற்கு வந்திருக்கும் இவர் என்னை விரைவிலேயே வஞ்சித்துவிடுவார். இப்போது இவர் ஒருவராகக் காணப்பட்டாலும், அவருடையவும் அவரைச் சேர்ந்தவர்களுடையவும் ப₃லம் எவ்வளவு என்று என்னால் அறிய முடியவில்லை. இம்மாதிரி விஷயங்களில் ரஹஸ்யமாக ஸஞ்சரிப்பவர்கள் பலர் உண்டன்றோ; துணையில்லாமல் இரவு வேளையில் இவர் ஒருவராக வந்திருக்கமாட்டார். ஆகையால் இவரை இப்போது நான் விரைவிலேயே கொன்று விடவேண்டும். இதில் ஐயமில்லை!'' என்று இவ்வண்ணமாக நிச்சயித்து, பரகாலரான நீலன் விரைவிலேயே ப₄யங்கரமான கத்தியை உறுதியாக எடுத்து, ஆகாயத்தில் சுழற்றிக்கொண்டு அவரைநோக்கிச் சென்றார். கத்தியைக் கையில் கொண்டு வரும் பரகாலரைக்கண்டு, தாமோதரனை எம்பெருமான் அந்த இரவில் சங்கசக்ரங்களைத் தரித்தவனாய், பிராட்டியோடு கூடியவனாய் சந்திரன் போலே காட்சியளித்தான்.

१२२. शङ्खचक्रधरः श्रीमान् निश्यदश्यत चन्द्रवत् ।
ततः खड्गं विसृज्योर्व्यां प्रणम्याशु परान्तकः ॥

१२३. कृताञ्जलिपुटो भूत्वा तुष्टाव जगदीश्वरम् ।
स्तुत्वाथ दशगाथाभिः इदं वचनमब्रवीत् ॥

१२४. दामोदर! हृषीकेश! नमस्ते भक्तवत्सल:! ।
भवतोऽत्रैव कैङ्कर्यं करिष्येऽहं न संशयः ॥

१२५. को विशेषोऽत्र रंगेशकैङ्कर्येण ममाऽधुना ।
दामोदरो निशम्यैवं परकालवचः शुभम् ॥

१२६. मन्दस्मितमुखः श्रीमानिदं वचनमब्रवीत् ।
परकाल! सुखं वत्स! रंगक्षेत्रं व्रजाधुना ॥

१२७. तत्रैव कुरु कैङ्कर्यं रंगेशस्य यथासुखम् ।
न प्रत्यूहस्तु भवतः कदाचिदपि विद्यते ॥

---

## தாமோதரப் பெருமானின் ஆசி

122* — *128. அதற்குப்பின் பரகாலர் கத்தியை பூமியில் எறிந்து லோகநாதனை அப்பெருமானைச் சடக்கென வணங்கி, கைகூப்பி நின்றவராய்த் துதித்தார். "வங்கா மா முந்நீர் [பெரியதிரு 9—1] என்னும் பதிகத்தாலே எம்பெருமானைத் துதித்து, "தாமோதரனே! இருடீகேசனே! பக்தவத்ஸலனே! உனக்கு வணக்கம். இங்கேயே உனக்கே நான் கைங்கர்யம் செய்கிறேன்; இதில் சந்தேகம் இல்லை. எனக்கு இப்போது ரங்கநாதனுக்குத்தான் கைங்கர்யம் செய்ய வேண்டும் என்னும் அவசியம் என்ன இருக்கிறது?" என்று விண்ணப்பித்தார். தாமோதரப்பெருமான் பரகாலருடைய இந்த மங்களமான வார்த்தையைக் கேட்டு, புன்சிரிப்புடையவனாய் அழகாகப் பின்வருமாறு கூறினான்-"குழந்தாய் பரகாலா! இப்போதே இனிதாக ஸ்ரீரங்கத்திற்குப் போவாயாக; அங்கேயே ஸ்ரீரங்கநாதனுக்குப் பாங்காகக்

१२८. तमेवमुक्त्वा भगवांस्तत्रैवान्तर्दधे हरिः ।
प्रहृष्टः परकालोऽथ तेनानुज्ञापितस्तदा ॥

१२९. श्रीरामनगरं प्राप प्रत्यूषसमये तदा ।
प्रणम्यापूपरंगेशं शयानं शेषभोगिनि ॥

१३०. तदपूपप्रसादं च भक्त्या स्वीकृत्य सत्वरम् ।
जगाम सहसा रङ्गं सन्तुष्टः स परान्तकः ॥

१३१. शतशः च्छेदयित्वाशु तां बौद्धप्रतिमां तदा ।
कनिष्ठिकां विना तत्र सर्वं निरवशेषयत् ॥
श्रीरङ्गेशस्य कैङ्कर्ये वेदान्तिन्! स परान्तकः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे परकालेन
बौद्धप्रतिमाहरणं नाम एकोत्तरशततमोऽध्यायः ॥

---

கைங்கர்யத்தைச் செய்வாயாக. உனக்கு எப்போதும் எந்தத்தடையும் நேராது'' என்று கூறி அவ்வெம்பெருமான் அங்கேயே மறைந்தான்.

## பரகாலர் திருவரங்கம் அடைதல்

128*—131. அப்போது அப்பெருமாளுல் ஆசீர்வதிக்கப் பெற்றுப் பரகாலர் மிக உகந்தவராய், விடியற்காலையில் திருப்பேர் நகரை (அப்பக்குடத்தானை) அடைந்தார். திருவநந்தாழ்வான் மேல் சயனித்திருக்கும் அப்பக்குடத்து ரங்கநாதனை வணங்கி அவருடைய அப்பமாகிய பிரசாதத்தை பக்தியுடன் ஏற்றுக்கொண்டு மிகவுகந்தவராய், விரைவில் ஸ்ரீரங்கத்தை அடைந்தார். வேதாந்தியே! அந்தப்பரகாலர் அந்த பௌ₃த்₃த₄ச் சிலையை அதன் சுண்டுவிரல் நீங்கலாக நூற்றுக்கணக்கான துண்டுகளாக வெட்டி, அவைமுழுவதையும் ஸ்ரீரங்க₃நாத₂னுடைய கைங்கர்யத்தில் செலவழித்தார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ப₄ட்டார்ய வேதா₃ந்தி
ஸம்வாத₃த்தில் பரகாலர் பௌ₃த்₃த₄ பி₃ம்ப₃த்தை அபஹரிக்கும்
செய்தியைக் கூறும் 101வது அத்தியாயம் நிறைவுற்றது.

द्व्युत्तरशततमोऽध्यायः ॥

१. परं प्रहृष्टस्तद्वाक्यं श्रुत्वासद्यतिरादरात् ।
भट्टार्यं प्रणिपत्योर्व्यां भूयः पप्रच्छ तां कथाम् ॥

२. बौद्धदेवेऽप्यपहृते रङ्गिकैङ्कर्यहेतवे ।
ततः क्रोधवशात्क्रुद्धाः किमकुर्वत सौगताः ॥

३. श्रुत्वा माधवदासस्य वचस्तद्भट्टदेशिकः ।
वेदान्तिनेऽखिलां तस्मै कथामकथयत्तदा ॥

४. तस्यां रात्र्यां व्यतीतायामर्चकः सहसोत्थितः ।
कृतनित्यक्रियः सम्यक् बौद्धदेवालयं ययौ ॥

---

## நூற்றிரண்டாம் அத்தியாயம்

### சிற்பிகளுக்கு மோக்ஷம்

### நஞ்சீயரின் கேள்வி

1—2. ஸ்ரீபராசரபட்டருடைய அந்த வாக்யத்தைக் கேட்டு உகந்த நஞ்சீயர் தரையில் தண்டனிட்டு வணங்கி, அந்த வரலாற்றைப் பற்றியே “ஸ்ரீரங்நாதனுடைய கைங்கர்யத்திற்காக பௌ3த்3த4ச் சிலை அபஹரிக்கப்பட்ட பின்பு, கோபத்துக்கு வசப்பட்டுக் கடுஞ்சினம் கொண்ட பௌ3த்3த4ர்கள் என்ன செய்தார்கள்?'' என்று வினவினர்.

### பௌ3த்3த4ர்கள் பரகாலரைப் பின் தொடருதல்

3—16. நஞ்சீயருடைய இவ்வார்த்தையைக் கேட்டு ஸ்ரீபட்டர் அவருக்கு அந்த வரலாறு முழுவதையும் அப்போது(பின்வருமாறு) கூறினர். (சிலை அபஹரிக்கப்பட்ட; அந்த இரவு கழிந்தவுடன் அந்தக் கோயிலின் அர்ச்சகன் விரைவில் எழுந்திருந்து, காலைக்கடன்களை நன்கு முடித்து விட்டு, அந்த பௌ3த்3த4 தே3வாலயத்திற்குச் சென்றான். பி3லத்துவாரத்திலிருந்து வந்து உள்ளே உள்ள படிகளின்

५. बिलद्वारात्समागत्य सोऽन्तस्सोपानवर्त्मना ।
यत्तच्छिखरमारुह्य तत्कबन्धं ददर्श सः ॥
६. भीतोऽथ विस्मितस्तेन प्रतिमाभावतस्तदा ।
दुःखितोऽखिलबन्धुभ्यः तेभ्यस्तत्सम्यगब्रवीत् ॥
७. प्रतिमाहरणं श्रुत्वा सर्वे विस्मितमानसाः ।
बौद्धालयं प्रविश्याशु तत्कबन्धं विलोक्य च ॥
८. विस्मयं परमं जग्मुः तदभावान्महान्यथाम् ।
तच्चोरहरणार्थाय निर्ययुर्दण्डधारिणः ॥
९. समादिष्टास्ततश्चाराश्चतुराः ककुभो दश ।
प्रतस्थिरे ततः केचित् सौगतेन्द्रेण चोदिताः ॥
१०. तदा पश्चिममार्गेण ज्ञातचोराङ्घ्रयोऽनघ ।
सम्यगन्वेषयन्तोऽत्र सौगतास्तत्र तत्र ते ॥

---

வழியாக அந்த ஆலயத்தின் விமானத்தில் ஏறிய அவன் அங்கிருந்த தலையில்லாத முண்டத்தைப்பார்த்தான். அதனால் பயந்து, பொற்சிலை அப்போது அங்கு இல்லாமையால் வியப்பும் வருத்தமும் அடைந்து, இவ்விஷயத்தைத் தன் உறவினர்களனைவருக்கும் நன்கு தெரிவித்தான். அப்பொற்சிலை அபஹரிக்கப்பட்டதைக் கேட்டு அனைவரும் வியப்புற்ற நெஞ்சுடையவர்களாய், உடனே அந்த பௌ₃த்₃த₄ாலயத்திற்கு வந்து, அந்த முண்டத்தைப் பார்த்து வியப்பும், பொற்சிலை இல்லாததைப் பார்த்துப் பெரு வருத்தமும் அடைந்தார்கள். அந்த பௌ₃த்₃த₄ர்களின் தலைவனாலே நியமிக்கப்பெற்றவர்களாய், வல்லவரான சில சாரர்கள் ஆயுத₄ங்களைக் கையில் கொண்டவர்களாய், பத்துத் திக்குகளிலும் திருடனைப் பிடிப்பதற்காகத் தேடத் தொடங்கினார்கள். குற்றமற்ற வேதாந்தியே! அப்போது மேற்குத் திசையில் திருடனின் காலடிவைப்புக்கள் ஆங்காங்கு இருப்பதைக் கண்டு அந்த பௌ₃த்₃த₄ர்கள் அனைவரும் நன்கு தேடுகின்றவர்களாய், இரவில் திருக்

११. निशीथे ह्यगमन्सर्वे तच्छ्रीकृष्णकुटीपुरम् ।
स कर्षकः समालोक्य प्रमाणं कलिजित्कृतम् ॥

१२. विस्मितो दुःखितोऽत्यन्तं विवेश स्वगृहं तदा ।
क्षेत्रापहरणाज्ञातचिन्ताव्याकुलितेन्द्रियः ॥

१३. कर्षको निशि शेते स ध्यायन् दामोदरं हरिम् ।
स्वप्नं विलोक्य सहसा स्वक्षेत्रप्राप्तिकारणम् ॥

१४. संप्रहृष्टोत्थितः प्रातस्तत्क्षेत्रान्तिकमागमत् ।
तदागत्याञ्जसा तत्र सौगताः कर्षकात्ततः ॥

१५. कलिजित्सर्ववृत्तान्तं यत्तत्सम्यङ्निशम्य च ।
बहुभिः कारणैरेतैर्निश्चित्य कलिवैरिणम् ॥

१६. बौद्धदेवापहर्तारं सुदृढं कृतसत्वराः ।
तत्पन्थानं समाश्रित्य ययुस्तत्पृष्ठतोऽनघ ॥

---

கண்ணங்குடியை அடைந்தார்கள். திருக்கண்ணங்குடியில் கலிகன்றியால் செய்யப்பட்ட சத்தியத்தை நினைத்து, வியப்பும் வருத்தமும் அடைந்த அந்த (வயலுக்குச் சொந்தக்காரனை) உழவன் அப்போதே தன் வீட்டுக்குச் சென்றான். தன் வயல் பரகாலரால் அபஹரிக்கப்பட்டதாலே கவலையினால் பொறிகலங்கிப்போனவனை அந்த உழவன் இரவில் தாமோதரனை பெருமானைத் தியானித்துக்கொண்டு படுத்திருந்தான். தன் வயல் தனக்கே திரும்பக்கிடைப்பதாகக் கனவைக் கண்டு உகந்து விழித்தெழுந்தவனாய், அவன் காலையில் தன் வயலருகில் சென்றான். அப்போது அங்கு வந்தடைந்த பௌத்₃த₄ர்கள் அந்த உழவனிடமிருந்து கலிகன்றியைப்பற்றிய எல்லாச்செய்திகளையும் நன்கு கேள்விப்பட்டு, இவற்றிலுள்ள பல அடையாளங்களாலே கலிகன்றியே பௌத்₃த₄ச் சிலையைத் திருடினார் என்று உறுதியாக நிச்சயித்து வேக₃முடையவர்களாய்ப் பரகாலர் சென்ற வழியைப்பின்தொடர்ந்து, அவருக்குப் பின்னாலேயே சென்றனர்.

१७. ततः श्रीरङ्गनगरे तं नीलं वीक्ष्य विस्मिताः ।
बौद्धाः संजगृहुस्सर्वे कोपसंरक्तलोचनाः ॥

१८. ततोऽभूत्परकालस्य समरः सौगतस्य च ।
श्रीरङ्गपालकस्याग्रे तावुभौ समुपागतौ ॥

१९. चोरतापादिता सम्यक् सौगतैः कलिवैरिणि ।
तयोर्विवादामामूलं सदस्यास्तन्निशम्य ते ॥

२०. बौद्धेभ्यः प्रतिमां दातुं विदधुर्निश्चयं तदा ।
तदङ्गीकृत्य कलिजित् सदस्यानां वचः शुभम् ॥

२१. दास्याम्यङ्गुष्ठमन्यूनं वत्सरान्ते न संशयः ।
लिखित्वा पत्रिकामेवं सौगतेभ्यो ददौ किल ॥

---

சுண்டுவிரல் குறையாமல் தருவதாக வாக்களித்துத்தருதல்.

17-26 அதற்குப்பின் ஸ்ரீரங்க₃நக₃ரத்தில் அந்த நீலனைக்கண்டு வியப்புற்ற பௌ₃ளத்₃த₄ர்கள் கோபத்தால் சிவந்த கண்ணினராய், அவரைப் பிடித்துக்கொண்டார்கள். அதற்குப்பின் பரகாலருக்கும் பௌ₃ளத்₃த₄த் தலைவனுக்கும் பெரிய சண்டை மூண்டது. ஸ்ரீரங்க₃நக₃ரத் தலைவனிடம் அவ்விருவரும் வந்துசேர்ந்தனர். பௌ₃ளத்₃த₄ர்கள் 'இக்கலி கன்றியே எங்கள் சிலையைத் திருடினுர்' என்று குற்றம் சாட்டினர். அவர்களுக்கிடையே நடந்த அந்த விவாதத்தை அந்த நகரச்சபையிலிருந்த அனைவரும் கேட்டு, பரகாலர் பௌ₃ளத்₃த₄ர்களுக்குச்சிலையைத் திருப்பித்தரவேண்டுமென்று அப்போதே தீர்ப்பளித்தனர். ஸபையினரின் அந்த நல்ல வார்த்தைகளை ஏற்றுக்கொண்டு பரகாலர் "ஒரு விரல் குறையாமல் இவ்வருஷக் கடைசியில் திருப்பித்தருகிறேன்

२२. पतिकां तां समादाय ते नागनगरं गताः ।
परकालोऽथ तत्सर्वं च्छेदयित्वाशु विग्रहम् ॥

२३. श्रीरंगेश्वरकैङ्कर्ये भक्त्या निरवशेषयत् ।
अथ संवत्सरे पूर्णे सौगताः पुनरागमन् ॥

२४. श्रीरङ्गनगरं सर्वे प्रतिमाहरणोद्यताः ।
कनिष्ठिकाङ्गुलिं वस्त्रैस्तस्यास्संवेष्टितं ध्रुवम् ॥

२५. स्थापयामास बौद्धाग्रे सहसा स परान्तकः ।
प्रतिमादर्शने प्रेम्णा सहसा सौगतैस्तदा ॥

२६. हृतेषु वस्त्रखण्डेषु तस्याः संवेष्टितेष्वलम् ।
कनिष्ठिकाङ्गुलिस्तस्याः प्रतिमायाः विलोकितः ॥

---

இதில் ஐயமில்லை'' என்று ஒரு பத்திரத்தில் எழுதி பௌத்$_3$த$_4$ர்களிடம் அளித்தார். அந்தப் பத்திரத்தை எடுத்துக்கொண்டு அந்த பௌத்$_3$த$_4$ர்கள் நாகப்பட்டினத்திற்குச் சென்றார்கள். அதற்குப் பிறகு அந்தச்சிலையை (ஒருவிரல் நீங்கலாக) வெட்டி எடுத்து, அது முழுவதையும் ஸ்ரீரங்க$_3$நாத$_2$னின் கைங்கர்யத்தில் ப$_4$க்தியுடன் செலவழித்துவிட்டார். வருஷம் முடிந்ததும் அப்பொற்சிலையைப் பெற்றுக்கொள்ள ஆர்வமுடையவர்களாய், பௌத்$_3$த$_4$ர்கள் அனைவரும் ஸ்ரீரங்க$_3$ நகரத்திற்குத் திரும்ப வந்தார்கள். அந்தப் பரகாலரும்அச்சிலையின் விரல் நுனியை வஸ்த்ரங்களில் உறுதியாகமூடி பௌத்$_3$த$_4$ர்களுக்கு முன்னால் அதைச்சடக்கென வைத்தார்; அப்போது சிலையைக் காண்பதில் ஆர்வத்தாலே, உடனே பௌத்$_3$த$_4$ர்களால் மூடியிருந்த துணிகள் எடுக்கப்பட்டவுடன், அச்சிலையின் சுண்டுவிரல் நுனியே காணப்பட்டது.

२७. कुपितास्सौगतास्तेन परकालमथाऽब्रुवन् ।
एका ह्यवाङ्गुलिस्तस्या भवताद्य प्रदर्शितः ॥
२८. मदीयां प्रतिमां शीघ्रं देहि मेऽपहृतां तदा ।
तद्बौद्धवचनं श्रुत्वा परकालोऽब्रवीत्तदा ॥
२९. कनिष्ठकाङ्गुलेस्तस्य न्यूनता नास्ति वै यथा ।
तथैवाङ्गुलिमात्रं वा दास्यामीति मयोदितम् ॥
३०. पत्रिकार्थक्रमेणैव दत्ता चैवाङ्गुलिर्मया ।
तस्यैव न्यूनता न स्यात्तथाद्याशु विचार्यताम् ॥
३१. पत्रिकार्थं तदा बुद्ध्वा सौगता मूढबुद्धयः ।
वृथा विरोधं विदधुः तत्साधं कलिवैरिणा ॥
३२. रङ्गाधिकारिणः सर्वे तद्विरोधनिवारणे ।
न समार्था भवन्ति स्म कलिजिद्बौद्धयोस्तदा ॥

---

## பௌத்தர்களோடு சண்டை

27 – 32. அதைக்கண்டு கோபங்கொண்ட பௌத்தர்கள் பரகாலரைப் பார்த்து ''அச்சிலையின் ஒரு விரலைத்தானே நீர் காட்டியிருக்கிறீர். முன்பு நீர் அபஹரித்த எங்களுடைய சிலை முழுவதையும் விரைவில் கொடும்'' என்று கூறினார்கள். அப்போது அவர்களுடைய அவ்வார்த்தையைக் கேட்ட பரகாலரும், ''அந்தச் சுண்டுவிரலில் எக்குறையும் இல்லையே. 'சுண்டுவிரல் குறையாமல் தருகிறேன்' என்று நான் பத்திரத்தில் எழுதியபடியே கொடுத்துவிட்டேன். அந்தச் சுண்டுவிரலில் ஏதாவது குறையிருக்கிறதா என்று இப்போதே ஆராய்ந்து பாருங்கள்'' என்று பதிலுரைத்தார். அப்போது அப்பத்திரத்தின் பொருளையறிந்த முட்டாள்களான அந்த பௌத்தர்கள் கலிகன்றியோடு கூட வீண்சண்டையைச் செய்தார்கள். கலிகன்றிக்கும் பௌத்தர்களுக்கும் அப்போது ஏற்பட்ட அந்தச் சண்டையை ஸ்ரீரங்கத்தில் உள்ள அதிகாரிகளால் தடுக்கமுடியவில்லை.

३३. न्यायात्कलिजिनं जेतुमशक्तास्सौगतास्तदा
यत्नेन भूयसाऽदाय चोलराजान्तिकं ययुः ॥
३४. व्यवहारं तयोर्ज्ञात्वा चोलभूपः तदाधिपः ।
पत्रिकार्थं च संप्रेक्ष्य तं नीलं स रहोऽब्रवीत् ॥
३५. कलिजित्सर्वधर्मज्ञ! मा धर्मविमुखो भव ।
बौद्धानां भवता धर्मप्रतिमाऽपहृता किल ॥
३६. न परान्तक तत्रार्थे संशयो विद्यते किल ।
तदा दुर्बुद्धया बौद्धा जगृहुः पत्रिकामिमाम् ॥
३७. भवन्तं व्यवहारेण जेतुं शक्तिर्न विद्यते ।
प्रतिमां दयया देहि सौगतेभ्यो हिरण्मयीम् ॥

---

## சோழராஜாவின் தீர்ப்பு

33 – 44. அப்போது கலிகன்றியை வாதம் செய்து வெல்ல முடியாத பௌத்தர்கள் மிகவும் முயற்சி செய்து அவரை அழைத்துக் கொண்டு சோழராஜாவிடம் சென்றார்கள். அப்போது சோழ தேசத்திற்கு அதிபதியா யிருந்த அரசன் அவர்களுடைய சண்டையை அறிந்து, பத்திரத்தில் எழுதியிருந்ததையும் பார்த்து விட்டு, ரஹஸ்ய மாக நீலனைக்கூப்பிட்டு ''எல்லா த₄ர்மத்தையும் அறிந்த கலிகன்றியே! நீர் தர்மத்திற்குப் புறம்பாகச் செல்லக் கூடாது. பௌ₃த்₃த₄ர்களுடைய தெய்வச்சிலை உம்மால் களவாடப்பட்டது உண்மைதானே; அவ்விஷயத்தில் ஸந் தேகம் இல்லையே; அப்போது முட்டாள்களான இந்த பௌ₃த்₃த₄ர்கள் உம்மிடமிருந்து இந்தப் பத்திரத்தைப் பெற்றார்கள். உம்மை வழக்குரைத்து வெல்லுவதற்கு இவர்களால் முடியாது. ஆகையால் அவர்களுடைய பொற்சிலையைக் கருணையுடன் கொடுத்து விடும்'' என்று கூறினான். அரசனுடைய அந்த வார்த்தையைக் கேட்டு, பரகாலர் அவ்வரசனைப்பார்த்து ''அரசனே! பௌ₃த்₃த₄ர்கள்

३८. भूपस्य तद्वचः श्रुत्वा परकालस्तमब्रवीत् ।
बौद्धविध्वंसनं कार्यं भवता पृथिवीपते ॥

३९. बौद्धा वेदविरुद्धाद्धि धर्मात् त्याज्यास्सुदूरतः ।
अतो हि दण्ड्यास्ते मूढाः राजन्नास्त्यत्र संशयः ॥

४०. श्रीरंगेश्वरकैङ्कर्यसात्कृता प्रतिमैव सा ।
भूयस्त्वापादनीयं मे तदर्थं तन्महद्धनम् ॥

४१. तस्मात्त्वद्विधेहि चोलेन्द्र! कान्दिशीकानिमान् जवात् ।
तदङ्गीकृत्य वचनं परकालस्य संमतम् ॥

४२. सौगतांस्तान्समाहूय भूयस्तत्पत्रिकास्थितम् ।
अर्थं बुद्ध्वाथ चोलेन्द्रः सदस्यैर्वाक्यमब्रवीत् ॥

४३. धर्मं न वच्मि भवतां पत्रिकैव प्रवक्ष्यति ।
सदस्याः पत्रिकाभावे धर्मं वक्ष्यन्ति वै किल ॥

---

வேத₃விருத்₃த₄மான தர்மங்களைக் கைக்கொள்ளுகையாலே வெகுதூரம் விலக்கிவைக்கத்தக்கவர்கள். ஆகையால் நீர் பௌ₃த்₃த₄ர்களை நிரஸிப்பதே தக்கது. அவைதி₃கர்களா கையாலே இந்த மூடர்கள் தண்டிக்கத் தக்கவர்களே; இதில் ஐயமில்லை. அந்தப்பொற்சிலையை நான் ஶ்ரீரங்க₃ நாத₂னுடைய கைங்கர்யத்திற்குப் பயன்படுத்திவிட்டேன். (இவர்களுக்குக் கொடுப்பதாய் இருந்தால்) நான் அந்தப் பெரும்தனத்தை மறுபடியும் ஸம்பாதிக்க வேண்டும். சோழராஜாவே! இக்காரணங்களால் இவர்களைத் திசை தோறும் விரைந்தோடும்படி விரட்டி விடுவீராக'' என்று உரைத்தார். பரகாலருடைய, நல்லோர்கள் இசையத்தக்க அந்த வார்த்தையை ஏற்றுக்கொண்டு சோழராஜா அந்த பௌ₃த்₃த₄ர்களைக் கூப்பிட்டு அங்கிருந்த ஸபையோர் களைக் கொண்டு அந்தப் பத்திரத்திலிருக்கும் வாக்யங் களின் அர்த்தத்தை அறிந்து, ''ஸபையோர்களே!

४४. इत्येवं तद्वचः श्रुत्वा सौगताः क्षीणतेजसः ।
कनिष्ठिकाङ्गुलीमात्रं समादाय ययुस्तदा ॥
४५. सन्तुष्टः परकालोऽथ स तदा जितसौगतः ।
विवेश रङ्गनगरं रङ्गकैङ्कर्यकारणात् ॥
४६. प्राकारं विदधत्यार्ये तुर्यं रंगे परान्तके
मध्ये सद्माभवत्तस्य भक्ताङ्घ्रिरजसोऽनघ ॥
४७. गण्यन्ते पांसवो भूमेर्गण्यन्ते दिवि तारकाः ।
न गण्यते विधात्रापि ब्रह्मसंस्थापने फलम् ॥
४८. अथ हृदि विधायैवं स नीलस्तस्य सद्मनः ।
अविरोधं तदा भक्त्या प्राकारं विदधे तदा ॥

---

தங்கள் முனனிலையில் நான் த₄ர்மத்தைக் கூறவேண்டிய அவசியமில்லை. பத்திரமே உண்மையைச் சொல்லுகிறது. பத்திரம் இல்லாவிட்டாலன்றோ விசாரித்து த₄ர்மத்தைச் சொல்லுவார்கள்'' என்று தீர்ப்பளித்தான். இவ்வண்ணமாக ராஜாவின் வார்த்தையைக் கேட்டு பௌ₃த்₃த₄ர்கள் ஒளிகுன்றியவர்களாய் அந்தச் சுண்டு விரலை மாத்திரம் எடுத்துக்கொண்டு அப்போதே சென்றனர்.

## ஸ்ரீரங்ககைங்கர்யத்தை நிறைவு படுத்தல்

45 — 51. குற்றமற்ற வேதாந்தியே! அப்போது பௌ₃த்₃த₄ர்களை வெற்றி கொண்ட பரகாலர் மிக உகந்தவராய் ஸ்ரீரங்கத்தினுள் நுழைந்தார். ஸ்ரீரங்கத்தில் நல்லவரான பரகாலர் நாலாவது மதிளைக் கட்டும் போது தொண்டரடிப் பொடியாழ்வாரின் குடில் இடைப்பட்டது. ''பூமியிலுள்ள மண் துகள்களை எண்ணிவிடலாம்; ஆகாயத்தில் நக்ஷத்ரங்களையும் எண்ணிவிடலாம்; ஓர் அந்தணனுக்கு வீடுகட்டி அதில் வாழச்செய்யும் பலனைப் பிரமனாலும் எண்ண முடியாது'' என்னும், இந்த ஶாஸ்த்ரார்த்த₂த்தை நெஞ்சில் கொண்டு அந்த நீலன் குடிலுக்கு இடையூறு இல்லாதபடி அப்போது அந்த

४९. परकालाभिधस्तत्र मण्डपोऽद्यापि दृश्यते ।
ईशान्यां चन्द्रसरसः श्रीरंगे सुमहांस्ततः ॥

५०. महाभागवतानां तु विरोधो न भवेद्यथा ।
तथा भगवतस्तस्य कैङ्कर्यं विदधे तदा ॥

५१. एवं श्रीरङ्गराजस्य कैङ्कर्यमखिलं महत् ।
विधाय कृतकृत्योऽथ मुमोद स परान्तकः ॥

५२ शिल्पिनः परकालं ते वेतनार्थमपीडयन् ।
प्रदातुकामः सर्वेभ्यः शिल्पिभ्यः परमं पदम् ॥

५३. ततः सञ्चिन्त्य भगवान् परकालोऽब्रवीत्स तान् ।
श्वेताद्रौ पूर्वमेवात्र निक्षिप्तं सुमहद्धनम् ॥

---

மதிளைக் கட்டினார். பரகாலன் என்னும் பெயருள்ள பெரிய மண்டபம் சந்த்ரபுஷ்கரிணியின் வடகிழக்கு திக்கில் ஸ்ரீரங்கத்தில் இப்போதும் காணப்படுகிறது. மஹாபாகவதர்களுக்கு இடையூறு இல்லாதபடி இந்த பகவத் கைங்கர்யத்தை அவர் அப்போது செய்தார். இவ்வண்ணமாக ஸ்ரீரங்க ராஜனுடைய பெரிய கைங்கர்யம் அனைத்தையும் செய்து பரகாலர் கடமையைச் செய்தவராய் உகந்தார்.

## சிற்பிகளுக்கு மோக்ஷமளித்தல்

52—*68. ஸ்ரீரங்க₃ கைங்கர்யம் செய்த சிற்பிகள் கூலி கொடுக்கும்படி பரகாலரை நிர்ப்பந்தித்தனர். அந்தச் சிற்பிகள் அனைவருக்கும் பரமபதத்தை அளிக்க விரும்பிய பரகாலரான பெரியவர் அப்போது சிறிது ஆலோசித்து அவர்களைப் பார்த்து "திருவெள்ளறையில் முன்பே நான் பெருந்தனத்தைப் புதைத்து வைத்திருக்கிறேன். அங்கு வந்தீர்களானால் உங்களுக்குக் கூலிதருகிறேன்" என்று கூறினார். அந்தச்சிற்பிகள் அனைவரும் பரகாலருடைய

௫௪. तत्रागताश्चेद्दास्यामि भवतां वेतनं हि तत् ।
तदङ्गीकृत्य वचनं परकालस्य शिल्पिनः ॥

௫௫. ययुस्तेनाथ ते सर्वे गन्तुं श्वेताचलं प्रति ।
अथासौ नाविकान्सर्वान् समाहूय परान्तकः ॥

௫௬. जिघांसुः शिल्पकारांस्तान् जगाद वचनं तदा ।
हन्मि कारून् तदर्थं मे सहायं कर्तुमर्हथ ॥

௫௭. यथा मज्जन्ति ते सर्वे कावेर्याः सलिले तथा ।
कार्यं तद्वोऽप्रमादेन दास्यामि बहुलं धनम् ॥

௫௮. एतत्कार्यं महापापहेतुकं नावमन्यथ ।
पुरा भगवतैवोक्तं सूक्ष्मधर्ममनुत्तमम् ॥

௫௯. मन्निमित्तं कृतं पापमपि पुण्याय कल्पते ।
मामनादृत्य पुण्यं वा ह्यपि पापाय कल्पते ॥

---

அவ்வார்த்தைகளை ஏற்றுக்கொண்டு திருவெள்ளறைக்குப் போவதற்காக அவரோடு சென்றனர். அதற்குப்பின் அந்தச்சிற்பிகள் அனைவருக்கும் விரோதியான ஶரீரத்தை நீக்கி மோக்ஷமளிக்க நினைத்தவரான பரகாலர் ஓடக்காரர்கள் அனைவரையும் தனியே அழைத்து, அவர்களைப் பார்த்து, "இந்தச் சிற்பிகளை நான் பரலோகத்திற்கு அனுப்பப் போகிறேன்; நீங்கள் அதற்கு எனக்குத் துணை புரியவேண்டும். இவர்கள் அனைவரும் காவேரியின் நீரில் மூழ்கும்படியான செயலைச் செய்யவேண்டும். உங்களுக்கு அதற்காகப் பெருந்தனத்தைத் தருகிறேன். இச்செயல் பெரிய பாபத்தை விளைக்குமென்று தவறாக நினைக்காதீர்கள். முன்பொரு ஸமயம் எம்பெருமானே 'எனக்காகச் செய்யப் பட்ட பாபமும் புண்யமேயாகும்; என்னை அநாதரித்துச் செய்யப்படும் புண்யமும் பாபமேயாகும்' என்று ஒப்பற்ற ஸூக்ஷ்மதர்மத்தைக் கூறினாரன்றோ" என்று உரைத்தார்.

६०. इत्यूचिवान् स ते सर्वे नाविका धनकाङ्क्षिणः ।
तथा कुर्म इति प्रोचुः नीलस्तुष्टोऽथ तेन च ॥

६१. शिल्पकारांस्तदा सर्वान् समादायाञ्जसा ततः ।
नीलः श्वेताचलं प्राप नावा तीर्त्वा मरुद्वृधाम् ॥

६२. प्रणम्य भक्त्या देवेशं श्वेताद्रौ पद्मलोचनम् ।
तीर्थं प्रसादं स्वीकृत्य दापयित्वार्चकैस्तदा ॥

६३ सर्वेभ्यः शिल्पकारेभ्यः तत्सर्वं कृपया तदा ।
श्रीरंगेश्वरकैङ्कर्यवेतनं यदनुत्तमम् ॥

६४. सम्यक् तेभ्यो धनं दत्वा तदनन्तमनूपमम् ।
भूयः श्रीरङ्गनगरं तानादायाञ्जसा ययौ ॥

६५. शिल्पकारांस्तदा सर्वान् नावमारोप्य यत्नतः ।
पारं मरुद्वृधानद्याः प्राप्तुकामोऽभवन्महान् ॥

---

அந்த ஓடக்காரர்கள் அனைவரும் பணத்தில் விருப்பத்தாலே "அப்படியே செய்கிறோம்" என்றனர். நீலனும் அதனால் உகந்தார். நீலன் அந்தச்சிற்பிகள் அனைவரையும் ஒன்றாக அழைத்துக் கொண்டு படகின் மூலம் காவிரியைத்தாண்டித் திருவெள்ளறையை அடைந்தார். திருவெள்ளறையில் தேவர்தலைவனை புண்டரீகாக்ஷனை பக்தியுடன் வணங்கி எம்பெருமானுடைய தீர்த்தப்ரஸாதங்களைத்தாம் ஏற்றுக்கொண்டு அப்போதே அந்தச் சிற்பிகள் அனைவருக்கும் அர்ச்சகர்களைக் கொண்டு தீர்த்தப்ரஸாதங்களைக் கருணையோடு அளிக்கும்படி செய்து, ஒப்பற்ற பெருந்தனத்தை ஸ்ரீரங்கநாதகைங்கர்யத்திற்குக் கூலியாக அவர்களுக்கு நன்கு அளித்து, மறுபடியும் அவர்களை அழைத்துக் கொண்டு ஸ்ரீரங்கநகரத்திற்குப் புறப்பட்டார். இந்தச்சிற்பிகள் அனைவரையும் அப்போது முயற்சியுடன்

६६. पूर्णां शिल्पिसमूहेन नावं ते नाविकास्तदा ।
मज्जयामासुरुदकप्रवाहे सरितः शुभे ।

६७. अथ केन प्रकारेण परकालश्च नाविकैः ।
तीरं दक्षिणमासाद्य कावेर्या रङ्गधामनि ॥

६८, तद्बन्धुभ्योऽखिलं वृत्तं प्राहिणोत् द्रुतमञ्जसा ।
वागुराभिर्विशोध्याशु कारूनुद्धृत्य तान्मृतान् ॥

६९, स तेषामग्निसंस्कारं कर्तुकामो महायशाः ।
पादप्रमाणां मेदिन्यां क्रीत्वा निष्केण सत्तम ॥

७०. रंगेशात्परकालोऽथ भूमिं जग्राह सत्वरम् ।
तद्वृत्तान्तं समाकर्ण्य कावेर्यां नौनिमज्जनम् ॥

---

படகில் ஏற்றிக் கொண்டு காவேரியின் அக்கரையை அடையவிருப்பினர் அப்பெரியவர். சிற்பிகள் அனைவரையும் கொண்ட அப்படகை மங்களமான நதி வெள்ளத்தின் நடுவில் அந்தப்படகோட்டிகள் கவிழ்த்து மூழ்கச்செய்தனர். மிகமுயன்று நீந்தி, பரகாலர் படகோட்டிகளோடு காவேரியின் தென்கரையை அடைந்து ஸ்ரீரங்கத்திலுள்ள அந்தச்சிற்பிகளின் உறவினருக்கு நடந்தவை அனைத்தையும் விரிவாகத் தெரிவித்தார்.

## சரமக்ரியைக்கு நிலம் வாங்குதல்

68*—*70. நல்லோரான நஞ்சீயரே! காவேரி வெள்ளத்தில் வலை போட்டுத் தேடி, இறந்து போன அந்தச்சிற்பிகளின் சடலங்களை எடுத்து, அவர்களுக்குச் சரமக்கிரியை செய்வதற்காக பெரும் புகழாளரான பரகாலர் பாதப்ரமாணமுள்ள நிலத்தை அரங்கனிடமிருந்து கிரயம் கொடுத்து விரைவில் வாங்கினர்.

७१. दुःखिताः सहसाऽऽगत्य ज्ञातयस्ते तदन्तिकम् ।
परकालकृतं ज्ञात्वा सहसा तमपीडयन् ॥

७२. ततः संपीडितो धीमान् तदा तत्प्रेतबन्धुभिः ।
तानुवाच महाप्राज्ञः नीलो मधुरया गिरा ॥

७३. सर्वं कालकृतं ह्येतत् कालादन्यन्न विद्यते ।
न कालः परिहर्तव्यो ब्रह्माद्यैरपि दैवतैः ॥

७४. येन वा जायते जन्तुस्तस्मिन्नेव प्रलीयते ।
ये चैवमेतज्जानन्ति ते प्राज्ञा भुवि पण्डिताः ॥

७५. नाहं कारणमेतस्य कार्यस्यैतद्विचार्यताम् ।
एवमुक्तास्ततस्तेन सर्वे ते शिल्पिबान्धवाः ॥

---

## சரமக்ரியை நடத்துதல்

70*—81. காவேரியில் ஓடம் கவிழ்த்த இந்தச் செய்தியைக் கேட்டு வருந்திய அந்தச்சிற்பிகளின் உறவினர்கள் உடனே பரகாலரிடம் வந்து அது அவரா லேயே செய்யப்பட்டது என்று அறிந்து அவரைத் துன்புறுத்தினர். அதற்குப்பின் இறந்தவர்களின் உறவி னரால் துன்புறுத்தப்பட்ட அறிவாளியான அந்த நீலன் அவர்களைப்பார்த்து, "இவையெல்லாம் காலத்தால் செய்யப் பட்டது. காலத்தைத் தவிர வேறில்லை. பிரமன் முதலான தேவர்களாலும் காலத்தை மீறமுடியாது. காலம் வரும் போதே மனிதன் பிறக்கிறான். காலம் வரும் போதே மனிதன் இறக்கிறான். இதை இவ்வண்ணம் அறிபவர்களே உலகில் பேரறிவாளர்கள் ஆவார்கள். இச்செயலைச் செய்வதற்கு நான் காரணமல்ல. இதை ஆராய்ந்து பாருங்கள்" என்னும் இனியவார்த்தையைக் கூறினார். இவ்வண்ண மாகக் கூறப்பட்ட அந்தச்சிற்பிகளின் உறவினர்கள்

७६. दातव्यं यद्धनं विद्वन् अस्माकं वेतनोचितम् ।
दीयतां न्यायमार्गेण परकाल महामते ॥
७७. इति तैरुक्तमार्गेण किञ्चित्सञ्जातविस्मयः ।
पूर्वमेव मया दत्तं यद्देयं वेतनं धनम् ॥
७८. श्वेताचल इति क्षेत्रे पद्मलोचनसाक्षिकम् ।
संशयो यदि युष्माकमस्मिन्नर्थे प्रजायते ॥
७९. परासुभिः शिल्पिभिस्तैर्वाचयिष्यामि सांप्रतम् ।
सत्यं लोके यदि भवेत् तेन सर्वं प्रकाश्यते ॥
८०. तस्य तद्वचनं श्रुत्वा सर्वे ते शिल्पिबान्धवाः ।
तथैव क्रियतां शीघ्रमुदर्कफलमुत्तमम् ॥
८१. इत्युक्त्वा शिल्पकारास्ते परासूनां यथाविधि ।
चक्रुर्वै चाग्निसंस्कारं सर्वं तत्र सबान्धवाः ॥

---

அனைவரும் "பேரறிவாளரான பரகாலரே! எங்களுக்கு நியாயமாகத் தரவேண்டிய கூலியான பொருளைக் கொடுப்பீர்" என்று கேட்டவுடன் சிறிது வியப்புற்ற பரகாலர், "கொடுக்கவேண்டிய கூலிப்பணத்தை, செந் தாமரைக்கண்ணனை ஸாக்ஷியாக வைத்துக் கொண்டு திருவெள்ளறையில் முன்னமே கொடுத்து விட்டேன். உங்களுக்கு இதில் ஐயமுண்டாகுமாகில் காலஞ்சென்ற அந்தச் சிற்பிகளைக் கொண்டே இப்போது உங்களுக்கு உறுதிப்படுத்தச் செய்கிறேன். உலகில் உண்மையென்று ஒன்று உண்டாகில் அதனால் எல்லாம் வெளிப்படும்" என்று கூறினார். அவருடைய அவ்வார்த்தைகளைக் கேட்டு அச்சிற்பிகளின் உறவினர்கள், "மறுமையில் சிறந்த பலனையளிக்கவல்ல ஈமக்கடன்கள் செய்யப் படட்டும்" என்று கூறி, தம் உறவினர்களோடு கூடி யிருந்து இறந்த உறவினர்களுக்கு அக்₃னிஸம்ஸ்காரம் செய்தார்கள்.

८२. चतुष्कविस्ततः स्नात्वा ध्यात्वा मनसि रङ्गिणम् ।
ऊर्ध्वबाहुर्विष्णुपदं पश्यन् पञ्चत्वमीयुषः ॥

८३. आजुहाव स तान् शिल्पीन् मुक्तान्संत्यक्तकर्मणः ।
तदा तेन समाहूताः कृताञ्जलिपुटाश्च ते ॥

८४. नभःस्थले विमानस्थाः सर्वेषामेव पश्यताम् ।
ऊचुः कृतार्थाः कलिहन्! भवतः कृपयाऽधुना ॥

८५. अनादिमायासंसारान्मुक्ता मोक्षपदं गताः ।
इति विज्ञाप्य ते सर्वे स्वबन्धूनवलोक्य च ॥

८६. सर्वेषां शृण्वतां वाक्यं जगदुर्मधुराक्षरम् ।
किमेतेन रसज्ञेन कलहः क्रियतेऽधुना ॥

---

## இறந்தவர்கள் உறுதிப்படுத்துதல்

82—89. அதற்குப் பின் நாலுகவிப்பெருமாள் நீராடி ஸ்ரீரங்க₃நாத₂னை மனத்தில் தியானித்து, கை தூக்கி நின்றவராய் விஷ்ணுவின் பரமபதத்தைப் பார்த்துக் கொண்டு, இறந்தபின் கர்மங்கள் நீங்கப்பெற்று முக்தி யடைந்த அந்தச்சிற்பிகளை அழைத்தார். அவரால் அழைக்கப்பட்டுக் கைகூப்பி நின்றவர்களான அவர்கள், அனைவரும் காணும் போதே ஆகாயத்தில் விமானத்தில் தோன்றியவர்களாய், "கலிகன்றியே! உம்முடைய கருணையினால் இப்போது நாங்கள் பேறுபெற்றோம். அநாதி₃மாயையான இந்த ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை பெற்று மோக்ஷலோகத்தை அடைந்து விட்டோம்" என்று விண்ணப்பித்து, அவர்களனைவரும் எல்லோரும் கேட்டுக் கொண்டிருக்கும்போதே தங்கள் உறவினர்களைப் பார்த்து "பரமரஸிகரான இவரோடு இப்போது ஏன் கலஹம் செய்கிறீர்கள்? கலிகன்றியினால் எங்களுக்குக் கூலிக்காகக் கொடுக்க வேண்டிய பொருள் அந்த மஹாத்மாவினால் ஆயிரம் மடங்கு அதிகமாகவே கொடுக்கப்பட்டு விட்டது. பகவத்கைங்கரியம் செய்பவர்

८७. यद्देयं वेतनार्थं नो धनं तत्कलिवैरिणा ।
सहस्राधिकसंख्यातं दत्तं तेन महात्मना ॥
८८. न चैतत्सदृशो लोके हरिकैङ्कर्यकारिणाम् ।
असौ भागवतश्रेष्ठो हरिभक्तिपरायणः ॥
८९. सेव्यतां सम्यगेवायं यदि यूयं सुखेच्छवः ।
इत्युक्त्वा सहसा प्राप्ताः ते सर्वे परमं पदम् ॥
९०. तदद्भुततमं दृष्ट्वा श्रीरङ्गपुरवासिनः ।
संजातविस्मयास्सर्वे मिलितास्तत्र संघशः ॥
९१. पूजयामासुरत्यन्तं परकालं महामुनिम् ।
मेनिरे शुद्धमनसं नीलं भागवतोत्तमम् ॥
९२. यथा हताः शिल्पिनस्ते नावा नीलेन संघशः ।
श्रीरङ्गस्योत्तरे भागे कावेर्यां पुण्यसंकुले ॥

---

இவ்வுலகில் இவருக்கிணையானவர் எவரும் இல்லை. இவர் பாகவதர்களுள் தலைசிறந்தவர். ஹரிபக்தியையே பெரும் பேருகக் கொண்டவர். நீங்கள் ஸுகத்தை விரும்பினால் இவரை நன்கு ஆராதியுங்கள்'' என்று இனியவார்த்தை கூறினார்கள். அப்படிக் கூறிவிட்டு உடனே அவர்கள் அனைவரும் பரமபதம் சென்றுவிட்டனர்.

## மாகஸ்நான விசேஷம்

90—* 93. இந்த ஆச்சரியமான காட்சியை, அங்கு கூட்டம் கூட்டமாகக் கூடியிருந்த ஸ்ரீரங்க நகரவாஸிக ளான அனைவரும் கண்டு வியப்புற்றவர்களாய், பரகாலரான ஆழ்வாரை மிகவும் ஆராதித்தார்கள். நீலனைப் பரிசுத்த மான நெஞ்சையுடையவராகவும் பாகவதோத்தமராகவும் அறுதியிட்டார்கள். நீலனால் ஸ்ரீரங்கத்தின் வடக்குப் பக்கத்திலுள்ள புண்யம் நிறைந்த காவேரியில் சிற்பிகள்

९३. माघस्नानं विदुस्तस्तदाप्रभृति पण्डिताः ।
श्रीरङ्गनगरं प्राप्य पूजितो वैष्णवोत्तमैः ॥

९४. कैङ्कर्यं रङ्गराजाय विदधे विहितं बहु ।
प्राकारद्वितयं चक्रे सर्वालङ्कारशोभितम् ॥

९५. सर्वोपकरणैर्युक्तं समुन्नतकवाटकम् ।
गोपुराणि ततोऽकार्षीत् शृङ्गवन्ति महान्ति च ॥

९६. मण्डपान्सुदृढाकारान् दिव्यस्तंभोपशोभितान् ।
विचित्रान्कल्पनाकल्पैः नानावर्णमनोरमैः ॥

९७. शोभमानैः सदा कान्त्या रङ्गशप्रीतिकारकैः ।
चतुश्शालानि रम्याणि वेदिकालङ्कृतानि च ॥

---

அனைவரும் ஓடத்திலேற்றி ஒன்றாக மோக்ஷமடைவிக்கப் பட்ட காரணத்தாலே அதுமுதல் அறிவாளிகள் (அது நிகழ்ந்த) மாசி மாதத்தில் அங்கு ஸ்நாநம் செய்வதை வழக்கமாகக் கொண்டார்கள்.

## பரகாலர் செய்த திருப்பணிகள்

93*—100. பரகாலர் ஸ்ரீரங்க₃ நகரத்தை அடைந்து அங்குள்ள சிறந்த வைஷ்ணவர்களால் ஆராதிக்கப் பட்டவராய், ரங்கராஜனுக்கு ஆகமமுறைப்படி பல கைங் கர்யங்களைச் செய்தார். எல்லா அலங்காரங்களோடு விளங்குவதும், எல்லா உபகரணங்களோடு கூடியதும், உயர்ந்த கதவுகளை உடையதுமான இரண்டு மதிள்களைக் கட்டினார். சிகரங்களை உடைய பெரிய கோபுரங்களையும் நிர்மாணம் செய்தார். உறுதியானவையும் அழகிய தூண்க ளால் விளங்குகின்றவையும், கற்பனையோ என்று நினைக்கத் தக்கவையாய் பலவர்ணங்களையுடையவையாய் எப்போதும் ஒளிவீசுபவையாய் திருவரங்கனுக்கு இனியவையாய் இருப்ப தால் விசித்ரமானவையுமான மண்டபங்களை அமைத்தார். மேடைகளோடு கூடிய அழகிய கூடங்களையும் கட்டினார்.

९८ परकालाभिधं सम्यक् विदधे मण्डपं महत् ।
चन्द्रपुष्करिणीतीरे सः श्रीमान् भाति मण्डपः ॥
९९. धान्यागारं ततश्चक्रे सर्वलक्षणशोभितम् ।
कुसूलानि विशालानि विदधे पञ्च बुद्धिमान् ॥
१००. घृतकूपद्वयं सम्यक् गंभीरं चैव विस्तृतम् ।
एवमादीनि सर्वाणि कैङ्कर्याण्यकरोत्तदा ॥
१०१. श्रीरङ्गोत्तरभागस्य कावेर्या दक्षिणस्य च ।
मध्यभू रङ्गराजेन विक्रीता कलिवैरिणे ॥
१०२. सा भूमिः परकालेन श्रीरङ्गपुरवासिनाम् ।
आर्यभट्टादृतेऽन्येषां निर्दिष्टा पितृकाननम् ॥

---

'பரகாலன்' என்று பெயரையுடைய பெரிய மண்டபத்தையும் அழகாக அமைத்தார். சந்திரபுஷ்கரிணியின் கரையில் மிகச்சிறந்த அந்த மண்டபம் இப்போதும் விளங்குகிறது. எல்லா லக்ஷணங்களோடும் விளங்கும் (கொட்டாரம் எனப்படும்) தான்யசாலையையும் கட்டினர். அறிவாளியான அவர் ஐந்து பெரிய குதிர்களையும் ஏற்படுத்தினர். ஆழமானதும் அகலமானதுமான இரண்டு நெய்க்கிணறுகளேயும் கட்டினர். இதுபோல் பல கைங்கர்யங்களை அப்போது செய்தார் பரகாலர்.

## பித்ருகானனம் அமைத்தல்

101—103. ஸ்ரீரங்கத்திற்கு வடக்கில் (வடதிருக்) காவேரிக்குத் தெற்கில் உள்ள இடம் ரங்கராஜனல் கலிகன்றிக்கு விலைக்குக் கொடுக்கப்பட்டது. அந்த நிலம் பரகாலரால் ஆர்யபட்டர் தவிர்ந்த மற்ற ஸ்ரீ ரங்க நகரமக்களுக்குப் பித்ருகானனமாக (இறந்தவர்களுக்குச் சரமஸம்ஸ்காரம் செய்யுமிடமாக) அமைக்கப்பட்டது.

१०३. पत्रिकायां तदा तस्यां सर्वै रङ्गाधिकारिभिः ।
हस्ताक्षराणि लिखितानि आर्यभट्टेन वैरिणा ॥
१०४. रङ्गवायव्यदिग्भागे कृत्वा कञ्चन मण्डपम् ।
वासं तस्मिन् समकरोत् परकालो महायशाः ॥
१०५. परकालः ततः कृत्यं यत्कर्तव्यं समाप्य तत् ।
रंगेशसन्निधिं प्राप्य प्रणम्य च पुनः पुनः ॥
१०६. विज्ञापयामास तदा कृताञ्जलिपुटः सुधीः ।
भगवन् रङ्गनिलय! विज्ञापितमभूत्तव ॥
१०७. सन्निधौ तद्धि भगवन् सर्वं निर्यापितं मया ।
शिलारूपं तदेतन्मे न समञ्जसमच्युत! ॥
१०८. पूर्वं मया यदि भवेत् कांक्षितं काञ्चनद्युति ।
तादृक् समाविता श्रीमन् कृपया तव सर्वतः ॥

---

விலேக்கு வாங்கிய அந்தப் பத்திரத்தில் கலிகன்றியோடு விரோதம் கொண்ட ஆர்யபட்டரைத் தவிர்ந்த மற்ற எல்லா ஸ்ரீரங்க அதிகாரிகளும் கையெழுத்திட்டார்கள்.

## எல்லாம் ஸ்வர்ணமயம்

104—115. ஸ்ரீரங்கத்தில் வடமேற்குத் திக்கில் ஓர் மண்டபத்தைக் கட்டி, பெரும் புகழாளரான பரகாலர் அதில் வாழ்ந்து வந்தார். செய்யவேண்டிய திருப்பணி களையெல்லாம் நிறைவுசெய்த அறிவாளியான பரகாலர் ரங்கராஜனின் ஸந்நிதி₄யை அடைந்து பலகால் வணங்கிக் கைகூப்பி நின்றவராய்ப் பின்வருமாறு விண்ணப்பித் தார்— "திருவரங்கத்தம்மானே! தேவரீர் திருமுன்பே அடியேன் விண்ணப்பித்த எல்லாத் திருப்பணிகளையும் நிறைவு செய்து விட்டேன். அச்சுதனே! கல்லாலான இந்த என் திருப்பணிகள் பொருத்தமாக இல்லை. முதலில்

१०९. भाग्धेयविहीनेन मया दुर्मेधसा विभो ।
तथा न चिन्तितमिति क्षुभ्यते तरसा मनः ॥

११०. मादृशानां हि जन्तूनां तादृग्भाग्यं सुदुर्लभम् ।
एवं वदति सान्निध्ये परकाले महात्मनि ॥

१११. कृपयाविष्टहृदयो रंगेशस्तमथाऽब्रवीत् ।
यत्कृतं भवता सम्यक् तत्सुवर्णमयं महत् ॥

११२. माशुचस्त्वं वृथा विद्वन् प्रत्ययो न भवेद्यदि ।
दृश्यतां तच्च सर्वस्वं सादरादिति शार्ङ्गिणि ॥

११३. वदत्येवं तदाऽपश्यत्परकालो महामुनिः ।
सकवाटं ससोपानं सप्राकारं समण्डपम् ॥

---

இவையனைத்தையும் பொன்னால் ஒளிவீசுவதாகச் செய்யப் பாரித்திருந்தேனாகில் உன் கருணையால் அப்படியே ஆகியிருக்கும். ஐயனே! பா₄க்₃யமற்றவனும் புல்லறிவாள னுமான நான் அப்படி நினைக்காமல் போய்விட்டேனே என்று மனம் கலங்குகிறது. என்னைப் போன்ற ஜந்துக் களுக்கு அப்படிப்பட்ட பா₄க்₃யம் கிடைத்தற்கரிது" என்று மஹாத்மாவான பரகாலர் அரங்கன் திருமுன்பே இவ்வண்ணமாக விண்ணப்பித்தபோது கருணைநிறைந்த நெஞ்சுடையவனான அரங்கநகரப்பன் அவரைப்பார்த்து "அறிவாளியே! நீர் அப்படிப் பாரிக்கவில்லையே என்று வீணாக வருந்தாதீர். நீர் செய்த திருப்பணி அனைத்தையும் காண்பீராக" என்று அன்போடு சார்ங்கம் என்னும் வில்லாண்ட எம்பெருமான் அருளியவுடன், ஆழ்வாரான பரகாலர் கதவுகள் படிகள் மதிள்கள் மண்டபங்கள் ஆகியவற்றோடு கூடிய திருவரங்கம் பெரிய கோயில் அனைத்தையும் அப்ராக்ருதமான பொன்மயமாகக் காட்சியளிப்பதாகவே அரங்கனின் கருணையாலே கண்டார்.

११४. सर्वं हिरण्मयं दिव्यं कृपया रङ्गशायिनः ।
ततः स्वस्थमना भूत्वा सन्तोषेण प्रसन्नधीः ॥
उवास सुचिरं कालं श्रीरंगेश्वरसन्निधौ ॥

११५. इति कलिजिदधीशः स्वोचितं नित्यकृत्यं
निरुपममनुकुर्वन् सर्वमत्यादरेण ।
प्रकटितहरिभक्तिर्ज्ञानवैराग्यसिन्धुः
मुदमगमदुदारः स्वामिकैङ्कर्यधीरः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे शिल्पकार-
मोक्षकथनं नाम द्व्युत्तरशततमोऽध्यायः ॥

---

அதனால் கலக்கம் நீங்கப்பெற்றுத் தெளிந்த நெஞ்சுடையவரான பரகாலர் ஸ்ரீரங்க₃நாத₂னுடைய ஸந்நிதி₄யிலே நெடுங்காலம் வாழ்ந்தார். இவ்வண்ணமாக ஸர்வேஶ்வரனுடைய கைங்கர்யம் செய்வதில் உறுதியுள்ளவராய், வண்மை மிக்கவராய், ஹரிப₄க்தியால் பிரகாசிப்பவராய், ஜ்ஞாநவைராக்₃யங்களுக்குக் கடலாயிருப்பவரான கலிகன்றி தமக்கு நித்யகைங்கரியமாய் இருப்பதாய், ஒப்பற்றதான திருப்பணி அனைத்தையும் மிக்க ஆர்வத்துடன் செய்து இன்புற்றார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில்
ப₄ட்டார்ய வேதா₃ந்தி ஸம்வாத₃த்தில்
சிற்பிகளுக்கு மோக்ஷம் அளித்ததைக்
கூறும் நூற்றிரண்டாம்
அத்தியாயம் முற்றிற்று.

त्र्युत्तरशततमोऽध्यायः ॥

१. अस्मद्यतिः स भट्टार्यं भूयः पप्रच्छ तं गुरुम् ।
अष्टोत्तरशतेष्वत्र दिव्यदेशेषु भूतले ॥

२. कासारयोगिप्रमुखगीतेषु च रमापतेः ।
दिव्यदेशाः कलिजिता संस्तुताः कतिसंख्यकाः ॥

३. कियतीभिश्च गाथाभिः को देशः समभिष्टुतः ।
तत्सर्वं विशदं ब्रूहि शिष्याय गुरुपुङ्गव! ॥

४. शमंधरः कदा कुत्र शैवो नीलेन निर्जितः ।
वादः किमर्थो ह्यभवत् तयोर्विबुधसिंहयोः ॥

---

# நூற்றுமூன்றும் அத்தியாயம்

## சமந்தரரை வெற்றிகொள்ளுதல்

### நஞ்சீயரின் கேள்வி

1—*5. நஞ்சீயர் ஆசார்யரான ப₄ட்டரைப் பார்த்து "ஆசார்யஶ்ரேஷ்ட₂ரான ப₄ட்டரே! இவ்வுலகில் பொய்கையார் முதலான ஆழ்வார்களால் பாடப்பெற்ற ஶ்ரிய:-பதியின் நூற்று எட்டு திவ்ய தேசங்களில் கலிகன்றியால் பாடப்பெற்ற திவ்யதேசங்கள் எவ்வளவு? ஒவ்வொரு திவ்ய தேசமும் எவ்வளவு பாடல்களால் துதிக்கப்பெற்றது? இவையனைத்தையும் சிஷ்யனான எனக்குத் தெளிவாக அருளிச்செய்யவேண்டும். சைவரான *சமந்தரர் நீலனான திருமங்கையாழ்வாரால் எப்போது எங்கு வெல்லப்

---

* குறிப்பு:- நாயன்மாரான திருஞானசம்பந்தரே இங்கு சமந்தரர் என்று குறிக்கப்படுகிறார். அது அவருடைய இயற்பெயராய் இருக்கலாம்.

५. तत्सर्वं विशदं ब्रूहि कृपया भट्टदेशिक! ।
तस्य तद्वचनं श्रुत्वा भट्टार्यस्तमथाऽब्रवीत् ॥

६ पुरा कदाचिद्वेदान्तिन् परकालो महायशाः ।
चरित्वा निखिलान् देशान् जितविद्वद्गणो महान् ॥

७. त्रिविक्रमपुरं प्राप स्वेच्छया चोलमण्डले ।
त्रिविक्रमपुरप्राच्यां तत्र ब्रह्मपुरं महत् ॥

८. महद्विराजते तत्र शैवस्थानं तदाऽनघ ।
तस्मिन्काले जितारातिः कश्चिच्छैवः शमन्धरः ॥

९. विद्यया विमतान्सर्वान् निर्जित्यात्र पुरेऽनघ ।
स महानप्रतिद्वन्द्वः जयत्यव्याहतोच्छ्रयः ॥

---

பட்டார்? புலவர் சிங்கங்களான அவ்விருவர்க்கிடையே எதற்காக வாத₃ம் ஏற்பட்டது? இவ்விஷயம் அனைத்தையும் கருணையோடு தெளிவாக எனக்கு அருளவேண்டும்'' என்று மறுபடியும் கேட்டார்.

## கலிகன்றியின் விஜயயாத்திரை

5*—*13. குற்றமற்ற வேதாந்தியே! முன்பொரு சமயம் பெரும்புகழாளரான பரகாலர் எல்லாதேசங்களிலும் ஸஞ்சரித்துப் புறச்சமய வித்வான்களையெல்லாம் ஜயித்து, தம் விருப்பப்படி சோழ மண்டலத்திலுள்ள திரிவிக்ரம புரத்தை (காழிச்சீராம விண்ணகரத்தை) அடைந்தார். அவ்வூருக்குக் கிழக்கில் பிரமாபுரம் என்ற பெருமை பெற்ற சிவக்ஷேத்ரம் ஒன்று சிறப்புடன் விளங்குகிறது. அக்காலத்தில் சமந்தரர் என்னும் சைவர் எதிரிகளை யெல்லாம் வென்றவராய், தன் கல்வியாலே மற்ற மதத்தவர்களையும் வென்றவராய், தனக்கு நிகரில்லாதவராய், தடையற்ற உயர்வு பெற்றவராய் வீறுபெற்று விளங்கினர்.

१०. यदृच्छयागतस्तत्र परकालस्तदाऽनघ ।
गच्छतः परकालस्य महाराजपथे तदा ॥

११. महाकाहलिकोत्पन्नः कलिजित्कीर्तिसूचकः ।
परवादिमनो भिन्दन् अश्रावि सुमहान् रवः ॥

१२. परकालः समायाति वादिमत्तेभकेसरी ।
कविराण्मुकुटन्यस्तवामपादसरोरुहः ॥

१३. चतुष्कवीन्द्रः सकलसमयध्वान्तभास्करः ।
शर्मधरच्छात्रजनास्तं निशम्य तदा रवम् ॥

१४. केचिन्न सेहिरे दुष्टाः यथा सिंहरवं द्विपाः ।
परकालं विलोक्याशु ते तमूचुरशंकिताः ॥

---

அந்த இடத்திற்குப் பரகாலர் தற்செயலாக வந்து சேர்ந்தார். ராஜவீதியில் அப்போது பரகாலர் சென்று கொண்டிருக்கும்போது அவருடைய கீர்த்தியை உணர்த்துவதான பெரிய திருச்சின்ன முழக்கம் (அவரது சீடர்களால் செய்யப்பட்டதாய்.) '' பரகாலர் வந்தார் '', ''வாதிகளாகிற யானைகளின் மத்தகத்தைப் பிளக்கும் சிங்கமானவர் வந்தார்'', ''பெரும்புலவர்களின் தலைகளிலே தன் இடதுபாதத் தாமரையை வைப்பவர் வந்தார்'', 'நாலுகவிப் பெருமாள் வந்தார் '' ''புறச்சமயங்களாகிற இருளுக்குச் சூரியனாய் இருப்பவர் வந்தார்'' என்னும் பெரிய முழக்கமாய்ப் புறச்சமயிகளின் நெஞ்சைப் பிளப்பதாக அப்போது கேட்கப்பட்டது.

## சமந்த₄ர சிஷ்யர்களின் ஆட்சேபம்

13*-16. அந்தப் பெருமுழக்கத்தைக் கேட்டு சமந்தர சிஷ்யர்களில் சில து₃ஷ்டர்கள் சிம்மகர்ஜனையைக் கேட்ட யானைகளைப் போலே பொறுக்க மாட்டாதவர்களாய் ஆயினர். பரகாலரைப்பார்த்து, சிறிதும் கூச்சமில்லாதவர்

१५. परकाल तवेदानीं प्रभावोऽयं कथं घटेत् ।
जितविद्वद्गणे धीरे विद्यमाने शमंधरे ॥

१६. यद्यस्माकं गुरुः शास्त्रवादेन भवता जितः ।
प्रभावोऽयं तदा नील संप्रत्यापद्यते तव ॥

१७. अङ्गीकृत्य वचस्तेषां शैवानां स चतुष्कविः ।
जेतुं शमंधरं शीघ्रं तदन्तिकमुपागमत् ॥

१८. ततस्तयोर्द्वयोश्चैव विवादः कवने ह्यभूत् ।
भगवद्विग्रहाभावात्कवने कलिवैरिणः ॥

१९. वेदान्तिन्नोदभूद्बुद्धिस्तदा सर्वार्थवेदिनः ।
वीरपाषण्डभूयिष्ठः स देशस्तेन कारितः ॥

---

களாய், அப்போதே ''பரகாலரே! உமக்கு முழங்கப்படும் இப்பெருமை எல்லா எதிரிப்புலவர்களையும் ஜெயித்த தீ₄ரரான சமந்தரர் இருக்கும் போது எப்படிப் பொருந்தும்? நீலரே! எங்களுடைய ஆசார்யரான சமந்த₄ரர் ஶாஸ்த்ர வாத₃ங்கொண்டு உம்மால் ஜயிக்கப்பட்டால் அப்போது தான் இந்தப் பெருமைகள் பொருத்தமாகும்'' என்று கூறினார்கள்.

## அம்மையாரிடம் அர்ச்சாமூர்த்தியைப் பெறுதல்

17—*26. குற்றமற்ற வேதாந்தியே! அந்த சைவர்களின் வார்த்தையை ஏற்றுக்கொண்ட பரகாலர் சமந்த₄ரரை ஜயிப்பதற்காக விரைவில் அவருக்கு அருகில் வந்து சேர்ந்தார். அப்போது அவ்விருவருக்கிடையே கவிதை பாடுவதில் விவாதம் உண்டாயிற்று. எல்லா அர்த்த₂ங்களையும் அறிந்தவராயிருந்தபோதிலும் ப₄க₃வத்₃ விக்₃ரஹம் கையில் இல்லாமையால் கலிகன்றிக்குக் கவி பாடுவதற்கு அறிவு செயல்படவில்லை. திருமாலைத் துவேஷிக்கும் சமந்தரராலே அப்போது அந்த தேசம்

२०. यतः शमंधरेणैवं भगवद्द्वेषिणा तदा ।
विष्ण्वर्चाविग्रहस्तत्र न कुत्रापि विलोकितः ॥

२१. परपाषण्डभूयिष्ठे देशे तेन विचिन्वता ।
विष्ण्वर्चाविग्रहं सम्यक् बहुधा कलिवैरिणा ॥

२२. यथार्कतरुमध्यस्थतुलसीवत्तदानघ ।
जरठा वैष्णवी काचित् विद्युल्लेखेव भास्वरा ॥

२३. महागाढान्धतमसि कालमेघे व्यदृश्यत ।
तां प्रणम्य वचः शीघ्रमुवाच स परान्तकः ॥

२४. मातस्तवान्तिके काचित् विष्ण्वर्चा वर्तते यदि ।
क्षणमात्रं प्रदायाशु मह्यमादरतोऽनघे ॥

---

பாஷண்டிகளான வீரசைவர்கள் நிறைந்ததாக ஆக்கப் பட்டுவிட்டபடியாலே, அங்கு எவ்விடத்திலும் எம்பெருமானுடைய அர்ச்சாவிக்ரஹம் காணப்படவில்லை. இப்படிப் பாஷண்டிகளான புறச்சமயிகள் நிறைந்த அந்த தேசத்தில் விஷ்ணுவினுடைய அர்ச்சாவிக்ஞரஹம் கிடைக்குமா என்று பலமுறை கலிகன்றி தேடியபிறகு, எருக்கஞ்செடிகளுக்கு நடுவிலே துளஸியைப் போலேயும், காரிருளிலே கார் மேகத்திலே ஒளிவீசும் மின்னலைப் போலேயும் வயது முதிர்ந்த வைஷ்ணவியான அம்மையார் ஒருத்தி காணப் பட்டாள். அப்பரகாலர் அவளை வணங்கி, "குற்றமற்ற தாயே! உம்மிடம் எம்பெருமானுடைய அர்ச்சாமூர்த்தி ஒன்று இருந்ததாகில் சிறிது நேரம் எனக்கு அதை அன்புடன் அளித்துவிட்டு மறுபடி பெற்றுக்கொள்ளும். [காரியம் ஆனவுடன்] அவ்வெம்பெருமானை உம்மிடம் அளித்துவிடுகிறேன்" என்று சடக்கெனச் சொன்னார்.

२५. भूयो गृहाण मातस्त्वं तव दास्यामि तं हरिम् ।
अङ्गीकृत्य वचस्तस्य परकालस्य वैष्णवी ॥

२६. श्रीकृष्णविग्रहं तस्मै सहसा सादिशत्तदा ।
भगवद्दर्शनात् ज्ञातकवनः स परान्तकः ॥

२७. तदा शमंधराभ्याशं वादार्थमगमज्जवात् ।
शमंधरं कवितया निर्जित्य स परान्तकः ॥

२८. अशोभताप्रतिद्वन्द्वः कलाभिश्चन्द्रमा इव ।
शमंधरोऽपि सन्तुष्टः परकालस्य विद्यया ॥

२९. वेदान्तिन् विस्मितोऽत्यन्तं व्याजहार वचः शुभम् ।
आशु चित्रं च मधुरं विस्तारं च चतुष्टयम् ॥

३०. नीलैतत्कविचातुर्यं तवैव भुवि विद्यते ।
चतुष्कवीन्द्रनामैतत् अपूर्वं सुचिरं तव ॥

---

அந்த வைஷ்ணவியான அம்மையாரும் பரகாலருடைய அந்த வார்த்தையை ஏற்றுக்கொண்டு அப்போதே பரகாலரிடம் தன்னுடைய கிருஷ்ணவிக்ரஹத்தைக் கொடுத்தாள்.

## சமந்தரரை வெற்றி கொள்ளல்

26*—32. குற்றமற்ற வேதாந்தியே! எம்பெருமானை ஸேவித்ததால் கவிபாடவல்லவரான பரகாலர் அப்போதே விரைவில் வாதஂம் செய்வதற்காக சமந்தரர் இருக்குமிடம் வந்தார். அப்பரகாலர் கவிதைபாடி சமந்தஂரரை வென்று கலைகள் நிரம்பிய சந்திரன் போலே ஒப்பற்றவராய் விளங்கினார். பரகாலருடைய புலமையைக்கண்டு உகந்த சமந்தஂரரும் மிகவும் வியப்புற்றவராய் "நீலரே! ஆசுகவி, சித்ரகவி, மதுஂரகவி, விஸ்தாரகவி என்னும் நாலுவகையான கவிதைப்புலமையும் இவ்வுலகில் உம்மிடமே உள்ளது. ஆகையால் வேறு எவரிடமும் இல்லாத நாலுகவிப்பெருமாள் என்னும் நாமம் உலகில்

३१. न दृष्टपूर्वो लोकेऽस्मिन् त्वादृशः कविराण्मया ।
परकाल यथाकामं विचरस्व निरङ्कुशः ॥

३२. संश्लाघ्य बहुशश्चैवं परकालं शमन्धरः
पूजयित्वा यथान्याय मुदा प्रास्थापयत्तदा ॥

३३. तेन संप्रेषितः सम्यक् परकालो महायशाः ।
भूयस्त्रिविक्रमपुरं संप्राप्य सहसा तदा ॥

३४. त्रिविक्रमं प्रतिष्ठाप्य पूर्ववत्कृष्णमव्ययम् ।
त्रिविक्रमपुरे तत्र बहुभिर्वैष्णवोत्तमैः॥

३५. अभङ्गुरविभूतिस्तु यथा तस्य भवेत्तथा ।
मङ्गलाशासनं कृत्वा स तदा श्रीपरान्तकः ॥

३६. कृतकृत्यो महातेजाः परं हर्षमवाप्तवान् ।
विष्णुस्थलानां सर्वेषां स्थिरं कर्तुं निरङ्कुशः ॥

---

நெடுங்காலம் உம்மிடமே நிலைத்துநிற்கும். உம்மைப் போன்ற கவிராஜரை நான் இவ்வுலகில் இதுவரை பார்த்ததே இல்லை; பரகாலரே! தடையற்றவராய் விருப்பப்படி எங்கும் ஸஞ்சரிப்பீராக'' என்னும் மங்கள மான வார்த்தைகளைக் கூறினார். அவரை முறைப்படி உபசரித்து உகப்புடன் விடைகொடுத்தார்.

## சீர்காழியில் த்ரிவிக்ரமனை ஸ்தாபித்தல்

33—*36. அவரால் விடைகொடுக்கப்பெற்ற பெரும் புகழாளரான பரகாலர் அப்போது உடனே மறுபடியும் த்ரிவிக்ரமபுரத்தை (சீராமவிண்ணகரை) அடைந்து [சைவர்களால் அழிக்கப்படுவதற்கு] முன்பிருந்தபடியே அந்தத் திரிவிக்ரமபுரத்தில் பல வைஷ்ண வோத்தமர்களைக் கொண்டு அழிவற்றவனான த்ரிவிக்ரமனை எம்பெருமானை ப்ரதிஷ்டைசெய்வித்து, அவருக்கு அழியாத செல்வம் உண்டாகும்படி அப்போதே மங்களாஶாஸனம் செய்து பரகாலர் என்னும் பெயரை நிலைநாட்டியவராய், செய்யவேண்டிய கடமையைச் செய்தவராய், பெரிய தேஜஸ்ஸைப் பெற்றவராய் மேலான ஆனந்தத்தை அடைந்தார்.

३७. हेमाद्रौ पि(प)रिधिर्नाम विष्णुस्थानं विराजते ।
तत्रस्थो भगवान्विष्णुर्महान् पि(प)रिधिनायकः ॥

३८. नीलेन दशभिः पद्यैः संस्तुतोऽद्यापि दृश्यते ।
वेदान्तिन्परकालोऽथ तस्मान्निर्गत्य बुद्धिमान् ॥

३९. आजगाम महातेजाः पुण्यं बदरिकाश्रमम् ।
नारायणं नमस्कृत्य बदरीकाननस्थितम् ॥

४०. हरिं विंशतिगाथाभिः अस्तोषीत्स परान्तकः ।
सालग्रामं ततो गत्वा सालग्रामपुराधिपम् ॥

---

## திருப்பிரிதி மங்க₃ளாஶாஸநம்

36*—*38. எம்பெருமானுடைய திவ்யதேசங்கள் அனைத்தையும் உறுதிப்படுத்துவதற்காக, தடையற்ற வரான பரகாலர் [அவற்றை மங்க₃ளாஶாஸநம் செய்தார்] [அவற்றில் ப₄ாரத தேஶத்தின் வடஎல்லையில்] இமயத்தின் உட்பிரதேசத்தில் பரிதி₄ (எல்லை) அல்லது திருப்பிரிதி என்னும் திவ்யதேசம் விளங்குகிறது. அங்குள்ள எம்பெருமான் பி(ப)ரிதி₄ நாயகன் என்னும் பெரும் பெயரைப் பெற்றவன். திருமங்கையாழ்வாரால் பத்துப்பாசுரங்களால் துதிக்கப்பெற்ற அப்பெருமான் இன்றும் காணப்படுகிறான்.

## ப₃த₃ரி மங்க₃ளாஶாஸநம்

38*—*40. வேதாந்தியே! அதற்குப்பின் அறிவாளி யாய், மிகுந்த தேஜஸ்ஸை உடைய பரகாலர் பிரிதியி லிருந்து [தெற்கே புறப்பட்டு] புண்யமான ப₃த₃ரி காஶ்ரமத்தை அடைந்தார். அங்கு ப₃த₃ரி (இலந்தை மரக்) காட்டிலேயிருந்த நாராயணனை வணங்கி இருபது பாடல்களால் அப்பெருமானைத் துதித்தார்.

४१. स्तोत्रयामास गाथाभिः दशभिर्हरिमव्ययम् ।
ततोऽथ नैमिशारण्यं संप्राप्य विनयोज्ज्वलः ॥

४२. अस्तौषीद्दशगाथाभिः नैमिशे हरिमव्ययम् ।
अयोध्यामगमद्धीमान् अयोध्यारघुनन्दनम् ॥

४३. यथाशक्ति स्तुतिं कृत्वा मधुरामगमत्तदा ।
मधुरायां बालकृष्णं नत्वा संस्तुत्य भक्तितः ॥

४४. नन्दव्रजमवाप्याथ वेदान्तिन्! स परान्तकः ।
बृन्दावने नन्दसूनुं स्तुतं समकरोद्धरिम् ॥

---

### ஸாலக்₃ராம மங்க₃ளாஶாஸநம்

40*—*41. அதற்குப் பிறகு [தெற்கே] ஸால க்₃ராமத்தை அடைந்து அழிவற்ற ஸாலக்₃ராமத்து எம் பெருமானைப் பத்துப்பாடல்களால் துதித்தார்.

### நைமிஶாரண்யமங்க₃ளாஶாஸநம்

41*—*42. அதற்குப் பின் அடக்கம் உள்ளவரான பரகாலர் (தெற்கே) நைமிஶாரண்யத்தை அடைந்து அங்குள்ள அழிவற்ற எம்பெருமானைப் பத்துப் பாடல்களால் துதித்தார்.

## அயோத்தி முதலான மற்ற வடநாட்டுத் திருப்பதிகள் மங்க₃ளாஶாஸநம்

42*—49. வேதாந்தியே, அதற்குப்பிறகு அறிவாளி யான பரகாலர் அயோத்தியை அடைந்தார். அயோத் தியிலுள்ள ராமனை இயன்றவரையில் துதித்து, அடுத்த படி வடமதுரைக்குச் சென்றார். மதுரையில் பாலகிருஷ் ணனை வணங்கி பக்தியோடு துதித்து, திருவாய்ப்பாடியை அடைந்து அப்பரகாலர் ப்₃ருந்தா₃வனத்தில் நந்த₃ குமாரனை எம்பெருமானைத் துதித்தார். அதற்குப்பின்

४५. अहोबिलमवाप्याथ वेदान्तिन्! स चतुष्कविः ।
अहोबिले गारुडाद्रौ हिरण्यासुरमर्दनम् ॥

४६. संस्तुत्य दशगाथाभिः नृसिंहममितौजसम् ।
तस्मान्निर्गत्य सहसा वेङ्कटाचलमभ्यगात् ॥

४७. श्रीवेङ्कटाचलं मत्वा तं साक्षाच्छेषरूपिणम् ।
पर्वतारोहणं धीमानकृत्वा भगवत्परः ॥

४८. स्नात्वाथ कापिले तीर्थे तत्र स्थित्वा परान्तकः ।
श्रीवेङ्कटेश्वरं नत्वा श्रीनिवासं जगत्पतिम् ॥

४९. संस्तुत्य दिव्यगाथाभिः चत्वारिंशद्भिरादरात् ।
तस्मान्निर्गत्य सहसा वीक्षारण्यमथाविशत् ॥

५०. वीक्षारण्ये किंगृहाख्ये नगरे वीरराघवम् ।
स्तुत्वा तं दशगाथाभिः कञ्चित्कालमुवास सः ॥

---

அந்த நாலுகவிப்பெருமாள் அஹோபி₃லத்தை அடைந்து அஹோபி₃லத்தில் க₃ருட₃ாத்₃ரியில் ஹிரண்யாஸுரனைக் கொன்ற ஒப்பற்ற ப₃லமுடையவனை நரஸிம்ஹனைப் பத்துப்பாட்டுக்களால் துதித்து, அங்கிருந்து புறப்பட்டு விரைவில் திருவேங்கடமலையை அடைந்தார். திருவேங்கட மலையை நேரே ஆதிசேஷரூபியாக நினைத்து அந்த மலையின் படிகளில் ஏறாமல், எம்பெருமானிடம் ஈடுபட்ட அறிவாளியான பரகாலர் காபிலதீர்த்த₂த்திலே நீராடி, அங்கேயே நின்று லோகஸ்வாமியான திருவேங்கட முடையானை ஸ்ரீநிவாஸனை வணங்கி அப்பெருமானை நாற்பது அழகிய பாடல்களாலே அன்புடன் துதித்து, அங்கிருந்து புறப்பட்டு வீக்ஷாரண்யத்தை அடைந்தார்.

## திருவெவ்வுள் மங்க₃ளாஶாஸநம்

50. வீக்ஷாரண்யத்தில் திருவெவ்வுளூர் என்னும் நகரத்தில் வீரராக₄வனை ஒரு பதிகத்தாலே துதித்து அங்கு சிறிதுகாலம் வாழ்ந்தார்.

५१. काञ्चीपुरीमवापाथ सहसा स परान्तकः ।
स तत्राष्टभुजं स्तुत्वा दशगाथाभिरादरात् ॥

५२. परमेशपुरं प्राप्य वैकुण्ठेश्वरमव्ययम् ।
तथैव दशगाथाभिः स्तोत्रयामास केशवम् ॥

५३. पश्चिमे हस्तिशैलस्य मूले तं नृहरिं स्थितम् ।
स्तुत्वा परान्तकः श्रीमान् काञ्च्यां कमललोचनम् ॥

५४. कामासिक्यां नृसिंहं च स्तोत्रयामास भक्तितः ।
यथोक्तकारिणं नत्वा त्रिविक्रममथोन्नतम् ॥

५५. पाण्डवानां तथा दूतं स்तुतं चक्रे परान्तकः ।
एकाम्बरालये ज्योत्स्नाचन्द्रखण्डेश्वरं हरिम् ॥

---

## காஞ்சீ திவ்யதேச மங்க₃ளாசாஸநம்

51—58. பரகாலர் அதற்குப் பின் விரைவில் காஞ்சீ புரத்தை அடைந்தார். அங்கு அஷ்டபு₄ஜப் பெருமாளை ஒரு பதிகத்தாலே அன்புடன் துதித்து, பரமேச்வர விண்ணகரத்திற்குச் சென்று அழிவற்ற வைகுண்டப் பெருமாளாகிற கேசவனை அவ்வண்ணமே ஒருபதிகத்தாலே துதித்தார். அத்திகிரியின் மேல்புரம் அடிவாரத்தில் எழுந்தருளியிருக்கும் நரசிங்கனையும், காஞ்சியில் வேளுக் கையில் நரசிங்கனாய் எழுந்தருளியிருக்கும் தாமரைக் கண்ணனையும் ஸ்ரீ பரகாலர் ப₄க்தியோடு துதித்தார் வெஃகாவில் சொன்னவண்ணம் செய்தபெருமாளையும், மிக உயர்ந்த திரிவிக்ரமனான உலகளந்த பெருமாளையும், பாடகத்தில் பாண்ட₃வதூ₃தனையும் பரகாலர் வணங்கித்துதித்தார். ஏகாம்பரேஶ்வரர் ஆலயத்தின் உள்ளிருக்கும் நிலாத் திங்கள் துண்டத்து எம்பெருமானையும், காமாக்ஷி கோயிலில் உள்ள கள்வன் என்னும் கண்ணனையும்,

५६. कामाक्षीनिलये तत्र कृष्णं चोराभिधं च तम्।
तथोरगगृहे कृष्णमुरगालयनायकम् ॥

५७. मेघालयाभिधं विष्णुं तत्र मेघगृहे हरिम्।
विष्णुं तोयगृहे काञ्च्यां स्तुत्वा तोयगृहाधिपम् ॥

५८. काञ्च्यां ग्रामगृहे विष्णुं तत्र ग्रामगृहाधिपम्।
एवमन्यान् हरीन् स्तुत्वा ययौ गृध्रसरोवरम् ॥

५९. श्रीगृध्रसरसस्तीरे भान्तं विजयराघवम्।
स्तुत्वा परान्तकः श्रीमान् प्रपेदे घटिकाचलम् ॥

६०. घटिकाद्रौ नृसिंहं च स्तुत्वामृतफलाभिधम्।
ततः कैरविणीतीरं ययौ बृन्दावने तदा ॥

---

ஊரகத்திலிருக்கும் உரகாலயநாயகனாகிய கண்ணனையும், கார்வானத்திலிருக்கும் கார்வானத்தெம்பெருமானையும், காஞ்சியில் நீரகத்திலுள்ள நீரகத்தெம்பெருமானையும், காஞ்சீ க்₃ராமக்₃ருஹத்திலிருக்கும் க்₃ராமக்₃ருஹ (பவள வண்ணப்) பெருமானையும் மற்றுமுள்ள எம்பெருமான்களையும் துதித்து (திருப்புட்குழியிலுள்ள) க்₃ருத்₄ர (ஜடாயு) தீர்த்த₂த்தை அடைந்தார்.

## மற்றும் சில தொண்டை நாட்டுத் திருப்பதி மங்களாஶாஸநம

59—65. அந்த ஜடாயுதீர்த்தத்தின் கரையில் (திருப்புட்குழியில்) விளங்கா நிற்கும் விஜயராக₄வனைத் துதித்து, ஸ்ரீ பரகாலர் க₄டிகாசலத்தை அடைந்தார். கடிகைத்தடங்குன்றின் மேல் எழுந்தருளியிருக்கும் அக்காரக்கனி என்னும் நரசிங்கனைத் துதித்து, ப்₃ருந்தா₃ரண்யத்தில் உள்ள திருவல்லிக்கேணிக் கரையை அடைந்தார். அங்கு எழுந்தருளியிருக்கும் பார்த்த₂ஸாரதி₂யையும், தெள்ளிய சிங்கப்பெருமானையும் ரங்க₃நாத₂

६१. तं पार्थसारथिं स्तुत्वा नृसिंहं रङ्गनायकम् ।
गजेन्द्रवरदं चैव राघवं स परान्तकः ॥

६२. पञ्चैतान् दशगाथाभिः तोताचलमथाविशत् ।
तोताद्रौ तुङ्गशयनं रङ्गेशं स चतुष्कविः ॥

६३. अस्तौषीद्दशगाथाभिः कल्याणनगरं ययौ ।
कल्याणसरसि स्नात्वा वीक्ष्य कल्याणनायकम् ॥

६४. दशगाथाभिरस्तौषीत् देवं वाराहरूपिणम् ।
महाबलिपुरं प्राप्य पुण्डरीकसरोवरे ॥

६५. स्नात्वा विंशतिगाथाभिः अस्तौषीत्स परान्तकः ।
महाबलिं बलिपुरे भूमिशायिनमीश्वरम् ॥

---

னையும், க₃ஜேந்த்₃ரவதனையும், ஸ்ரீ ராமனையும் ஆக ஐவரையும் ஸ்ரீபரகாலர் ஒரு பதிகத்தாலே துதித்துத் திருநீர்மலைக்கு வந்து சேர்ந்தார், திருநீர்மலையில் உயர்ந்த சயநத்திலிருக்கும் ரங்க₃நாத₂னை நாலுகவிப்பெருமாள் ஒரு பதிகத்தாலே துதித்தார். அதற்குப்பின் (நித்ய கல்யாணப்பெருமாள் எழுந்தருளியிருக்கும்) கல்யாண நகரமாகிய திருவிடவெந்தையை அடைந்தார். கல்யாண ஸரஸ்ஸில் நீராடி நித்யகல்யாணப் பெருமாளை ஸேவித்து, வராஹரூபியாய் எழுந்தருளியிருக்கும் திருவிடவெந்தை எம்பெருமானை ஒரு பதிகத்தாலே துதித்தார். மஹாப₃லிபுரத்தை அடைந்து புண்ட₃ரீகஸரஸ்ஸில் நீராடி மஹாப₃லிபுரத்திலுள்ள பெரும் ப₃லமுடையவனை ஸ்த₂லஶயனத்துப் பெருமாளை இரண்டு பதிகங்களாலே துதித்தார்.

६६. ततोऽहीन्द्रगिरिं प्राप्य चाहीन्द्रनगरे हरिम् ।
दशगाथाभिरस्तौषीत्स नीलो देवनायकम् ।

६७. ततो गोपपुरं प्राप्य दशगाथाभिरीश्वरम् ।
त्रिविक्रममथास्तौषीत् गोपपुर्यां तु गोपतिम् ॥

६८. चित्रकूटं ततः प्राप्य पद्यैर्विंशतिभिस्तदा ।
स्तुत्वा गोविन्दराजं तं चोलदेशं ततो ययौ ॥

६९. त्रिविक्रमपुरे तत्र त्रिविक्रममथोन्नतम् ।
संस्तुत्य दश गाथाभिः परिरम्भपुरं ययौ ॥

---

### திருவயிந்தை மங்க₃ளாஶாஸநம்

66. அதற்குப் பிறகு அஹீந்த்₃ரமலையை அடைந்து, அந்த நீலன் திருவயிந்தை நகரில் உள்ள தெய்வ நாயகப் பெருமாளை ஒரு பதிகத்தாலே துதித்தார்.

### திருக்கோவலூர் மங்களாஶாஸநம்

67. அதற்குப் பிறகு திருக்கோவலூரை அடைந்து அக்கோவலூரிலிருந்த கோவல்நாயகனாகிய ஆயனாரையும், திரிவிக்ரமனையும் ஒரு பதிகத்தாலே துதித்தார்.

### திருச்சித்ரகூடமங்களாஶாஸநம்

68. அதற்குப்பிறகு திருச்சித்ரகூடத்தை அடைந்து கோ₃விந்த₃ராஜனை இரண்டு பதிகங்களாலே துதித்து, * பிறகு சோழ தேசத்தை அடைந்தார்.

### தாடாளன் கோயில் மங்க₃ளாஶாஸநம்

69. திரிவிக்ரமபுரமாகிய தாடாளன் கோயிலில் (காழிச்சீராம விண்ணகரில்) உயர்ந்து விளங்கும் திரிவிக்ரமனை ஒருபதிகத்தாலே துதித்து திருவாலிநகரை அடைந்தார்.

---

* திருச்சித்ரகூடம் சோழநாட்டுத் திருப்பதியாகவே கருதப்படுகிறது.

७०. परिगम्मपुरे श्रीशं श्रीसुन्दरवराभिधम् ।
त्रिंशत्पद्यैः स्तुतिं कृत्वा ययौ नागपुरम् ततः ॥
एकादशस्थलान्येव तत्र नागपुरीवरे ॥

७१. नन्दादीपघटप्रवर्तकमहाकारुण्यरक्ताम्बक-
श्रीनारायणपूरुषोत्तमपतिश्रीरत्नकूटाधिपाः ।
वैकुण्ठेश्वरमाधवौ च कमलानाथं च गोपीपतिं
नौम्येकादश नागपुर्यधिपतीन् सार्धं कलिध्वंसिना ॥

---

## திருவாலி திருநகரி திருநாங்கூர் மங்களாஶாஸநம்

70—*73 குற்றமற்ற வேதாந்தியே! திருவாலி திருநகரியில் கல்யாணரங்கநாதனுகிற ஸ்ரீயஃபதியை மூன்று பதிகங்களாலே துதித்து, திருநாங்கூரை அடைந்தார். இந்தத் திருநாங்கூரில் பதினொரு திவ்யதேசங்கள் உள்ளன. (1) 'நந்தாவிளக்கே' என்னும் பதிகம் பெற்ற மணிமாடக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் நாராயணப் பெருமாள், (2) அரிமேயவிண்ணகரத்தில் எழுந்தருளியிருக்குங் குடமாடு கூத்தன், (3) செம்பொன்செய் கோயிலில் எழுந்தருளியிருக்கும் பேரருளாளன், (4) திருத்தெற்றியம்பலத்தில் எழுந்தருளியிருக்கும் செங்கண்மால், (5) திருவெள்ளக்குளத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ நாராயணனுகிற அண்ணன் பெருமாள், (6) வண்புருடோத்தமத்தில் எழுந்தருளியிருக்கும் புருஷோத்தமப் பெருமாள், (7) திருமணிக்கூடத்தில் எழுந்தருளியிருக்கும் திருமணிக்கூடத்தான், (8) வைகுந்த விண்ணகரத்தில் எழுந்தருளியிருக்கும் வைகுண்டநாதன், (9) திருத்தேவனார்தொகையில் எழுந்தருளியிருக்கும் மாதவன், (10) திருப்பார்த்தன் பள்ளியில் எழுந்தருளியிருக்கும் தாமரையாள் கேள்வன், (11) திருக்காவளம்பாடியில் எழுந்தருளியிருக்கும் கோபீநாதனுகிற கண்ணன் ஆகிய திருநாங்கூர் திவ்ய தேசத்தெம்பெருமான்களாகிய பதினொருவரையும் (இவர்களை மங்களாஶாஸநம் செய்த) கலிகன்றியோடுகூடத் துதிக்கிறேன்''

७२. एवं श्लोकोक्तमार्गेण तत्र चैकादशानघ ।
प्रत्येकं दशगाथाभिः वेदान्तिन् कलिवैरिणा ॥
७३. संस्तुता हरयस्तत्र सर्वे दिव्यस्थलाधिपाः ।
ततः शुक्रपुरे रामः पद्यैः दशभिरीडितः ॥
७४. भूतस्थानं तदा प्राप परकालो महायशाः ।
संस्तुत्य दशगाथाभिः भूतस्थाने तु शार्ङ्गिणम् ॥
७५ ततो दृढधनुं रामं संगमग्राममभ्यगात् ।
असंगं संगमग्रामे संस्तुत्य हरिमव्ययम् ॥
७६ स सम्यक् दशगाथाभिः श्वेताचलमथाविशत् ।
सम्स्तुत्य दशगाथाभिः श्वेताद्रौ पद्मलोचनम् ॥

---

என்னும் பொருளுள்ள ஶ்லோகத்தில் பாடப்பெற்ற திருநாங்கூர் பதினொரு எம்பெருமான்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பதிகத்தாலே திருக்கலிகன்றியால் துதிக்கப்பட்டனர்.

### திருவெள்ளியங்குடி புள்ளம்பூதங்குடி மங்களாஶாஸநம்

73-*75. அதற்குப்பின் திருவெள்ளியங்குடியில் ராமபிரான் ஒரு பதிகத்தாலே துதிக்கப்பட்டார். அதற்குப்பின் பெரும்புகழாளரான பரகாலர் புள்ளம்பூதங்குடியை அடைந்தார். புள்ளம்பூதங்குடியில் சார்ங்கமெனும் வில்லாண்டவனை வல்விலிராமனை ஒருபதிகத்தாலே துதித்து, கூடலூரை அடைந்தார்.

### கூடலூர் திருவெள்ளறை திருவரங்கம் மங்களாஶாஸநம்

75*—77. கூடலூரிலே பற்றற்றவனாய் அழியாதவனை எம்பெருமானை ஒரு பதிகத்தாலே நன்கு துதித்து, திருவெள்ளறைக்கு எழுந்தருளினார். திருவெள்ளறையில் ஸ்ரீபுண்டரீகாக்ஷனை ஒருபதிகத்தாலே துதித்து அதற்குப்

௭௭. ततः श्रीरङ्गनगरं संप्राप्य स परान्तकः ।
पञ्चाशद्भिश्च गाथाभिः अस्तौषीद्रङ्गनायकम् ॥
௭௮. ततः श्रीध(न)ामनगरं संप्राप्य स चतुष्कविः ।
श्रीमन्तं रङ्गनाथं च गाथाभिर्दशभिस्तथा ॥
௭௯. स्तुत्वा नन्दिपुरं प्राप नन्दिनाथदिदृक्षया ।
नन्दिनाथं जगन्नाथं संस्तुत्य हरिमादरात् ॥
௮௦ स संयक् दशगाथाभिराकाशनगरं ययौ ।
लवणाभाववतातं तमाकाशनगरे हरिम् ॥
௮௧. त्रिंशत्पद्यैः स्तुतिं चक्रे वेदान्तिन् स चतुष्कविः ।
रथपातस्थलं प्राप देवराजादिदृक्षया ॥

---

பின் பரகாலர் திருவரங்கப் பெருநகரை அடைந்து ஐந்து பதிகங்களாலே ஸ்ரீரங்க3நாத2னைத் துதித்தார்.

## திருப்பேர்நகர், நந்திபுரவிண்ணகரம், திருவிண்ணகர் மங்களாசாஸநம்

78 *81. அந்த நாலுகவிப்பெருமாள் திருப்பேர் நகர் எனப்படும் திவ்யதேசத்தை அடைந்து அங்கு பள்ளி கொண்டிருக்கும் (அப்பக்குடத்தான் என்ற) ரங்க3நாத2னை ஒரு பதிகத்தாலே துதித்து. அதற்குப்பின் நந்திபுரவிண்ணகரத்தெம்பெருமானை ஸேவிப்பதற்காக நந்திபுரவிண்ணகரத்தை அடைந்தார். ஜக3ந்நாத2னை அவ்வெம்பெருமானை அன்போடு ஒருபதிகத்தாலே நன்கு துதித்து, திருவிண்ணகரை (ஒப்பிலியப்பன் கோயிலை) அடைந்தார். வேதாந்தியே! அந்தத் திருவிண்ணகரிலே (உப்பில்லாமல் அமுது செய்வதாலே) ‘உப்பிலியப்பன்’ என்று பெயர் பெற்ற அவ்வெம்பெருமானை மூன்று பதிகங்களாலே நாலுகவிப்பெருமாள் துதித்தார். [இவ்விடத்தில் பத்துப்பதிகங்களில் பாடப்பெற்ற திருநறையூர் நாச்சியார் கோயில், ஒரு பதிகம் பெற்ற திருச்சேறை ஆகிய

८२. संस्तुत्य दशगाथाभिः चत्वारिंशद्भिरादरात् ।
देवराजं ततो भेजे नीलो व्याघ्रपुरे तदा ॥

८३. संस्तुत्य दशगाथाभिर्महाबाहुं जगत्पतिम् ।
श्रीकृष्णमङ्गलक्षेत्रं प्रपेदे प्रेमपूर्वकम् ॥

८४. संस्तुत्य दशगाथाभिः तत्र श्रीभक्तवत्सलम् ।
तत्रत्यैः कतिभिः पद्यैः अस्तोषीत् भक्तवत्सलम् ॥

८५. श्रीनिवासपुरेशं च ह्यस्मन्मातृपतं हरिम् ।
तच्छ्रीनिवासनगरं विद्यते तोण्डमण्डले ॥

८६. तत्राधिंगजने विद्वन्महीसारस्य चोत्तरे ।
ततः कृष्णपुरं प्राप शौरिराजदिदृक्षया ॥

---

இரு திவ்யதேசங்களுக்குரிய ஶ்லோகங்கள் விடப்பட்டு விட்டன.]

## தேரழுந்தூர், சிறுபுலியூர், திருக்கண்ணமங்கை, திருநின்றவூர் மங்களாஶாஸநம்

81*—*86. அதற்குப்பின் தேவராஜனை ஸேவிப்பதற்காகத் தேரழுந்தூரை அடைந்தார் பரகாலர். அந்த தேவராஜனைப் (ஆமருவியப்பனைப்) பத்துப்பாட்டுக்கள் கொண்ட நாலு பதிகங்களாலே அன்போடு துதித்து அதற்குப்பின் நீலன் சிறுபுலியூரை அடைந்தார். தடந்தோள்களையுடைய லோகஸ்வாமியான அந்த எம்பெருமானை ஒரு பதிகத்தாலே துதித்து, திருக்கண்ணமங்கையை அன்போடு அடைந்தார். அங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பக்தவத்ஸலப் பெருமானை ஒரு பதிகத்தாலே துதித்து; அவ்வெம்பெருமானுக்குரிய பாடல்களில் சிலவற்றாலே திருநின்றவூரில் என்னைப் பெற்ற தாயாருக்குப் பதியாக இருக்கும் பக்தவத்ஸலப் பெருமானையும் துதித்தார். அறிவாளியே! அந்தத் திருநின்றவூர் தொண்டை மண்ட

८७. संस्तुत्य शतगाथाभिः शौरिराज महौजसम् ।
चतुष्कविरवापाथ ततः कृष्णकुटीपुरम् ॥

८८. संस्तुत्य दशगाथाभिर्दामोदरमरिन्दमम् ।
तन्नागपत्तनं प्राप सुन्दरारण्यकानने ॥

८९. स्तुत्वा सुन्दरराजं तं पद्यैर्दशभिरादरात् ।
ततोऽत्रशिष्टान्निखिलान् दिव्यदेशान्प्रणम्य च ॥

९०. एकया गाथया द्वाभ्यां स्तुत्वा तिसृभिरेव च ।
परकालो महातेजाः कृतार्थोऽभूत्तदाऽनघ ॥

९१. शिरःशङ्खपुरं चैव तथेन्दुनगरं महत् ।
आदित्यनगरं चैव श्रीमत्कृष्णकपिस्थलम् ॥

---

லத்தில் திருமழிசைக்கு வடக்கே அரை யோஜனை தூரத்தில் இருக்கிறது.

## திருக்கண்ணபுரம், திருக்கண்ணங்குடி, திருநாகை முதலான திவ்யதேசங்கள் மங்களாசாஸநம்

86*—92. குற்றமற்ற வேதாந்தியே! அதற்குப்பின் சௌரிராஜனை ஸேவிக்கவேண்டும் என்னும் விருப்பத்துடன் திருக்கண்ணபுரத்தை அடைந்தார். பெருந்திறல் பெற்ற அந்த சௌரிராஜப் பெருமாளைப் பத்துப்பதிகங்களிலே துதித்து, அதற்குப்பின் அந்த நாலுகவிப்பெருமாள் திருக்கண்ணங்குடியை அடைந்தார். அங்கு எழுந்தருளியிருக்கும் எதிரிகளை நிரஸிக்கும் தாமோதரப் பெருமாளை ஒரு பதிகத்தாலே துதித்து, ஸுந்த₃ராரண்ய க்ஷேத்ரத்திலுள்ள நாகப்பட்டிணத்தை அடைந்தார். அங்கு எழுந்தருளியிருக்கும் ஸுந்தரராஜனை ஒரு பதிகத்தாலே அன்புடன் துதித்து, அதற்குப்பின் பெரிய தேஜஸ்வியான பரகாலர் தலைச்சங்க நாண்மதியம், பெரிதான ‡ திருவிந்தளூர், திருஆதனூர், கண்ணன் கவித்தலம் நரசிங்கன் எழுந்தருளி

---

‡ திருவிந்தளூர் ஒரு பதிகம் பெற்றது.

९२. नृसिंहतञ्ज्ञानगरं खण्डनग्राममेव च ।
निचुलानगरं चैव श्रीकरम्बपुरं महत् ॥

९३. अथ प्रतस्थे कलिजित पाण्ड्यमण्डलमञ्जसा ।
अवाप दर्भशयनं पुल्लग्रामे पुरातनम् ॥

९४. शयानं दर्भशय्यायां राघवं चामितौजसम् ।
स्तुत्वा विंशतिभिः पद्यैः जगन्नाथं पुरातनम् ॥

९५ कुरुङ्गनगरं लेभे चतुष्कविशिखामणिः ।
स्तुत्वा विंशतिभिः पद्यैः पूर्णं उत्तुङ्गविग्रहम् ॥

९६. केरले दक्षिणपुरं महसैवाभ्यगात्तदा ।
संस्तुत्य दशगाथाभिस्तिष्ठन्तं हरिमव्ययम् ॥

---

யிருக்கும் தஞ்சைமாமணிக்கோயில், திருக்கண்டியூர், திரு உறையூர், பெரிதான திருக்கரம்பனூர் (உத்தமர் கோயில்) ஆகிய மற்றபல திவ்ய தேசங்களை ஒரு பாடல் அல்லது இரண்டு பாடல் அல்லது மூன்று முதலான பாடல்களாலே துதித்துப் பேறு பெற்றவர் ஆனார்.

## திருப்புல்லாணி, திருக்குறுங்குடி, திருவல்லவாழ், மங்க₃ளாஶாஸநம்

93—*97. அதற்குப்பின் கலிகன்றி பாண்டிய நாட்டுக்குப் புறப்பட்டார். திருப்புல்லாணியிலே மிகவும் தொன்மையான த₃ர்ப்ப₄ஶயனத்தை அடைந்தார். அங்கு த₃ர்ப்ப₄ ஶயனத்தில் ஶயனித்திருக்கும் பெரும் ப₃லமுள்ள ஸ்ரீராமனையும், மிகத் தொன்மையான ஜக₃ந்நாத₂னையும் இரண்டு பதிகங்களாலே துதித்து, நாலுகவிப் பெருமாள் திருக்குறுங்குடியை அடைந்தார். அங்கு உயர்ந்த திருமேனியை உடைய நம்பியை இரண்டு பதிகங்களாலே துதித்து, உடனே கேரளத்திலுள்ள த₃க்ஷிணபுரத்தை

९७. चतुष्कविरवापाथ स भूयः पाण्ड्यमण्डलम् ।
स्तुत्वा सुन्दरबाहुं तं वनाचलपतिं हरिम् ॥

९८. भक्त्या विंशतिगाथाभिः स गोष्ठीनगरं ययौ ।
गोष्ठीपुरे गोष्ठपतिं सौम्यनारायणाभिधम् ॥

९९. अस्तौषीद्दशगाथाभिर्नृसिंहद्वयशोभितम् ।
शीतोद्यानं मोहनं च तथा सत्यमहीधरम् ॥

१००. स्थलानि त्रीणि ह्यस्तौषीत्कलिजित्पाण्ड्यमण्डले ।
गाथाभिःसप्तभिस्सम्यग्यः प्रबन्धो विराजते ॥

---

(திருவல்லவாழை) அடைந்தார். அங்குள்ள நின்றதிருக் கோலத்திலுள்ள அழிவற்ற எம்பெருமானை ஒரு பதிகத்தாலே துதித்து நாலுகவிப் பெருமாள் மீண்டும் பாண்டிய மண்டலத்தை அடைந்தார்.

## திருமாலிருஞ்சோலை, திருக்கோட்டியூர் மங்களாசாஸநம்

97*—*99. வனசைலம் எனப்படும் திருமாலிருஞ் சோலையிலுள்ள எம்பெருமானை சுந்தரத்தோளுடையானை இரண்டு பதிகங்களாலே பக்தியுடன் துதித்து, திருக்கோட்டி யூரை அடைந்தார் அவர்; திருக்கோட்டியூரில் இரண்டு நரசிங்கர்களோடு விளங்காநிற்கும் ஸௌம்ய நாராயணன் எனப்படும் கோஷ்டீநாதனை ஒரு பதிகத்தாலே துதித்தார்.

## திருத்தண்கால், திருமோகூர், திருமெய்யம் மங்களாசாஸநம்

99*—*100. பாண்டிய மண்டலத்திலுள்ள திருத் தண்கால், திருமோகூர், திருமெய்யமலை என்னும் மூன்று திவ்யதேசங்களையும் கலிகன்றி துதித்தார்.

१०१. तं शार्ङ्गपाणिविषयं विदधेऽसौ परान्तकः ।
एवं हि परकालेन संस्तुता दिव्यभूमयः ॥
१०२. विष्णोस्तत्रैव वेदान्तिन् एकपञ्चाशदीरिताः ।
अल्पेन संस्तुता विष्णोर्द्वात्रिंशद्दिव्यभूमयः ॥
१०३. अतश्चाशीतिस्थानानि स्तुतानि कलिवैरिणा ।
विशदं शृणु वक्ष्ये तान् षट् पाण्ड्ये केरले त्रयः ॥
१०४. देशाश्चैकोनचत्वारः श्रीहरेश्चोलमण्डले ।
मध्यदेशे द्वयं चैव त्रयोविंशतिरीरिताः ॥

---

## திருவெழுகூற்றிருக்கை அருளல்

100*—*101. ஏழு பாடல்கள் கொண்ட [ஏழு எண்களைக் கொண்டு அமைந்து சித்ரகவியாக இருக்கும்] திருவெழுகூற்றிருக்கையைப் பரகாலர் திருக்குடந்தை ஆராவமுதமாகிற ஶார்ங்க₃பாணி விஷயமாக அருளிச் செய்தார்.

## கலிகன்றியின் பாடல் பெற்ற திவ்யதேசங்கள்

101*—105. வேதாந்தியே! இவ்வண்ணமாகக் கலிகன்றியால் பாடப்பெற்ற திவ்ய தேசங்களில் பதிகம் பெற்ற திவ்யதேசங்கள் 51. ஒவ்வொரு துணுக்குப் பாடல் மாத்திரம் பெற்ற திவ்யதேசங்கள் 32. [இதில் திருப்புலியூர் மலைநாட்டிலும், திருப்பாற்கடல், பரமபதம் ஆகிய இரண்டு வடநாட்டிலும் ஆக மூன்று துணுக்குப்பாடல் பெற்ற திவ்ய தேசங்கள் விடுபட்டுள்ளன.] ஆக எண்பதுக்கு மேற்பட்ட திவ்ய தேசங்கள் கலிகன்றியாலே பாடப் பெற்றன. அவற்றை மேலும் தெளிவாகச் சொல்லுகிறேன கேட்பீராக. // அவற்றில் ஆறு திவ்யதேசங்கள் பாண்டிய நாட்டிலும், மூன்று திவ்ய தேசங்கள் மலைநாட்டிலும்,

---

// இதில் தவறு உள்ளது. (1) திருப்புல்லாணி (2) திருக் குறுங்குடி (3) திருமாலிருஞ்சோலை (4) திருக்கோட்டியூர்

१०५. तुण्डीरमण्डले विष्णोः दिव्यदेशा दशोत्तरे ।
कलिघ्नेनैव वेदान्तिन् ते सर्वे समभिष्टुताः ॥

39திவ்ய தேசங்கள் சோழ நாட்டிலும், இரண்டு திவ்ய தேசங்கள் நடு நாட்டிலும், 23 திவ்ய தேசங்கள் தொண்டை நாட்டிலும், பத்து திவ்ய தேசங்கள் வட நாட்டிலும் / ஆக இவை அனைத்தும் கலிகன்றியால் பாடப்பெற்றன.

---

(5) கூடல் (6) திருத்தண்கால் (7) திருமெய்யம் (8) திருமோகூர் ஆகிய எட்டு பாண்டிய நாட்டிலும், (1) திருவல்லவாழ் (2) திருநாவாய், (3) திருப்புலியூர் (4) திரு மூழிக்களம் ஆகிய நாலு மலை நாட்டிலும், (1) திருச்சித்திர கூடம் (2) காழிச்சீராமவிண்ணகர் (3) திருவாலி (4) முதல் (14) திருநாங்கூர் திவ்ய தேசங்கள் பதினொன்று (15) திருவிந்தளூர் (16) திருவெள்ளியங்குடி (17) புள்ளம்பூதங்குடி (18) கூடலூர் (19) திருவெள்ளறை (20) திருவரங்கம் (21) திருப்பேர் (22) நந்திபுரவிண்ணகரம் (23) திருவிண்ணகர் (24) திருநறையூர் (25) திருச்சேறை (26) திருவழுந்தூர் (27) சிறுபுலியூர் (28) திருக்கண்ணமங்கை (29) திருக்கண்ணபுரம் (30) திருக்கண்ணங்குடி (31) திருநாகை (32) திருக்குடந்தை (33) கோழி (உறையூர்) (34) தஞ்சை மாமணிக்கோயில் (35) தலைச்சங்கநாண்மதியம் (36) ஆதனூர் (37) கண்டியூர் (38) கரம்பனூர் ஆகிய முப்பத்தெட்டு சோழ நாட்டிலும், [கவித்தலத்தைத் திருமங்கையாழ்வார் பாடியதாகக் கொண்டு முப்பத்தொன்பது எனப்பட்டது.] (1) திருக்கோவலூர் (2) திருவயிந்திரபுரம் ஆகிய இரண்டு நடுநாட்டிலும், (1) திரு எவ்வுளூர் (2) திருவல்லிக்கேணி (3) திருநீர்மலை (4) திருக்கடல் மல்லை (5) திரு இடவெந்தை (6) அட்டபுயகரம் (7) பரமேச்சுர விண்ணகரம் (8) காரகம் (9) கார்வானம் (10) திருத்தண்கா (11) நிலாத்திங்கள் துண்டம் (12) திருநின்றவூர் (13) நீரகம் (14) பவளவண்ணம் (15) பாடகம் (16) திருப்புட்குழி (17) திருவெஃகா (18) வேளுக்கை (19) அத்தியூர் (பெருமாள் கோயில்) (20) ஊரகம் (21) திருக்கடிகை (22) கள்வனூர் ஆகிய இருபத்திரண்டு தொண்டை நாட்டிலும், (1) திருப்பிரிதி (2) வதரி (3) சாளக்கிராமம் (4) நைமிசம் (5) சிங்கவேள்குன்றம் (6) திருவேங்கடம் (7) துவரை (8) வடமதுரை (9) அயோத்தி (10) ஆய்ப்பாடி (11) திருப்பாற்கடல் (12) பரமபதம் ஆகிய பனிரண்டு வடநாட்டிலும் பாடப்பெற்ற திவ்யதேசங்கள்.

१०६. दिव्यप्रबन्धा वेदान्तिन्! षडेव कलिजित्कृताः ।
त्रिशतं चैव साहस्रं चतुष्षष्टिः प्रकीर्तिताः ॥

१०७. तेषु दिव्यप्रबन्धेषु गाथा विबुधसत्तम! ।
तैः प्रबन्धैर्वितत्योर्व्यां तत्त्वार्थं सम्यगेव हि ॥

१०८. सर्वाधिकारं कृपया दिव्यद्राविडभाषया ।
भक्त्या भगवतस्तस्य तथा भागवतस्य च ॥

१०९. कृत्वा कैङ्कर्यमव्यग्रं स सम्यग्विविधं बहु ।
मङ्गलाशासनं कृत्वा सर्वदिव्यस्थलानि च ॥

११०. रूढमूलं प्रतिष्ठाप्य विष्णुधर्ममनुत्तमम् ।
भूम्यामव्याहतं सम्यग्यावदाचन्द्रतारकम् ॥

---

## திருமங்கையாழ்வார் பாடிய திவ்யப்ரபந்தங்கள்

106 — * 107. பேரறிவாளரான வேதா₃ந்தியே! கலி கன்றியால் ஆறே திவ்ய ப்ரபந்தங்கள் அருளிச் செய்யப் பெற்றன. அந்த திவ்யப்ரபந்தங்களில் 1364 பாடல்கள் உள்ளன.

## திருக்குறுங்குடியில் பரமபதப்ராப்தி

107*—112. அந்த திவ்யப்ரபந்தங்களைக் கொண்டு பூமியில் தத்வார்த்த₂ங்களை திவ்யமான திராவிட பாஷை யாலே அனைவர்க்கும் அறியலாம்படி கருணையாலே நன்கு பரவச்செய்து எம்பெருமானிடமும் பாகவதர்களிடமும் பக்தியாலே பலவிதமான கைங்கர்யங்களை நன்கு முனைப் புடன் செய்து, எல்லா திவ்யதேசங்களையும் மங்களாசாஸனம் செய்து, ஒப்பற்ற வைஷ்ணவத₄ர்மத்தைச் சந்திரனும் நக்ஷத்திரங்களும் உள்ளவரையிலும் தடையற பூ₄மியில் நன்கு விளங்கும்படி வேரூன்றச்செய்து, இவ்வண்ண

१११. इत्येवं कृपया नीलो जगत्सर्वमपालयत् ।
भूम्यां पञ्चोत्तरशतं नीत्वाऽब्दानां चतुष्कविः ॥

११२. कुरङ्गनगरं प्राप्य श्रीरंगेश्वरशासनात् ।
तत्रैव विष्णुसालोक्यमगमत्स परान्तकः ॥

११३. अर्चावतारा बहवो नीलस्यैवाभवंस्ततः ।
विष्णुस्थानेषु सर्वेषु वैष्णवानां गृहेषु च ॥

११४. परिरंभपुरे तत्र महता वैभवेन सः ।
जयत्यव्याहतोच्छ्रायो ह्यद्यापि परिदृश्यते ॥

११५. अत्रैव रंगे वेदान्तिन् महद्भिस्सकलोत्सवैः ।
संदृश्यते किलाद्यापि परकालो महायशाः ॥

---

மாகப் பலவழிகளிலே நீலன் கருணையாலே உலகனைத்தையும் ரக்ஷித்தார். இவ்வுலகில் பரகாலரான நாலு கவிப் பெருமாள் 105 திருநக்ஷத்ரங்கள் வாழ்ந்து அரங்க நகரப்பனின் ஆணையாலே திருக்குறுங்குடியை அடைந்து அங்கிருந்தே பரமபதத்தை அடைந்தார்.

## அர்ச்சாவதார வைபவம்

113—*123. அவர்காலத்திற்குப் பின்பு திருமங்கையாழ்வாருக்கு எல்லா வைஷ்ணவாலயங்களிலும், வைஷ்ணவர்களின் வீடுகளிலும் பல அர்ச்சாவதாரங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டன. திருவாலி திருநகரியிலே அவருடைய அர்ச்சாமூர்த்தி தடையற்ற சீர்மையுடையதாய், பெருத்த வைபவத்துடன் இன்றும் காணலாம்படி விளங்குகிறது. வேதாந்தியே! இந்த ஸ்ரீரங்கத்திலும் பெரும் புகழாளரான பரகாலர் பெரிய பலஉத்ஸவங்களோடு இன்றும் காணப்படுகிறாரன்றோ. எந்த வீட்டில் பெரும் புகழாளரான பரகாலர் அர்ச்சாவதாரமாக என்றும்

११६. यद्गृहे वर्तते नित्यं परकालो महायशाः ।
कलिदोषाः पलायन्ते सिंहं दृष्ट्वा यथा मृगाः ॥
११७. चर्मखड्गधरे वीरे ह्यास्थिते कलिवैरिणि ।
नीले यस्य गृहे नित्यं वर्तते तस्य किं भयम् ॥
११८. कलिजित्पूजनं नित्यं ये कुर्वन्ति नरोत्तमाः ।
सर्वे ते पुण्यकर्माणो महाभागवताः स्मृताः ॥
११९. कार्तिके मासि दिवसे कृत्तिकातारकान्विते ।
महाभिषेकं विधिवत् यः कृत्वा कलिवैरिणे ॥
१२०. नैवेद्यं षड्रसोपेतं ततः सम्यङ्निवेद्य च ।
वैष्णवान् ब्राह्मणान् भक्त्या द्राविडाम्नायपारगान् ॥
१२१. भोजयेत्स नरो मुक्तो विष्णुलोके महीयते ।
कार्तिक्यां कृत्तिकर्क्षे च यत्तत्कलिजितः शुभम् ॥

---

எழுந்தருளியிருக்கிருரோ, அந்த வீட்டில் சிங்கத்தைக் கண்ட மான்கள் போலே கலிதோஷங்கள் எல்லாம் ஓடுகின்றன. தோலாலான உறையோடு கூடிய கத்தியை ஏந்திய வீரரான கலிகன்றியான நீலன் எந்த வீட்டில் அர்ச்சாவதாரமாக எழுந்தருளியிருக்கிருரோ, அந்த வீட்டில் பயம் ஏது? எந்த நரச்ரேஷ்டர்கள் கலிகன்றியின் திரு வாராதனத்தைத் தினந்தோறும் செய்கின்ருர்களோ அவர் களனைவரும் புண்ணியம் செய்த மஹாபாகவதர்களாக எண்ணப்படுகிருர்கள். கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நக்ஷத்திரம் கூடிய அவதாரத்திருநாளில் எவனொருவன முறைப்படி திருமஞ்சனம் செய்து அறுசுவையுண்டியை நன்கு பரகாலருக்கு அமுது செய்வித்து, வைஷ்ணவர் களாய், திவ்யப்ரபந்தத்தைக் கரைகண்ட அந்தணர் களை அமுது செய்விக்கிருனே, அந்த மனிதன் மரண மடைந்தபின் விஷ்ணுலோகத்தை அடைகிருன். கலி

१२२. तत् द्राविडप्रबन्धस्य समाप्तिदिवसं विदुः ।
तस्मिन् दिने कृतं भक्त्या तदीयाराधनं महत् ॥

१२३. सम्यक् तत्कोटिगुणितमिति प्राहुर्मनीषिणः ।
कार्तिके कृत्तिकर्क्षे तु समारभ्य समन्ततः ॥

१२४. श्रीवैष्णवः स वेदान्तिन्! प्रबन्धं नोच्चरेत् ध्रुवम् ।
दिव्यदेशेषु सर्वेषु श्रीरङ्गादिस्थलेषु च ॥

१२५. वैष्णवावश्यकतमः श्रीमानध्ययनोत्सवः ।
कश्चिन्महान्महाभाग यो त्रिंशतिदिनावधि ॥

१२६. प्रबन्धाध्ययनस्तत्र कर्तव्य इति निर्णयः ।
कृतो हि पूर्वगुरुभिः श्रीरंगेश्वरशासनात् ॥

---

கன்றியின் அவதாரத்திருநாளான கார்த்திகையில் கார்த்திகை நாள் திவ்யப்ரபந்தங்களை ஓதுவதை நிறுத்தும் தினமாகக் கொள்ளப்படுகிறது. அந்த தினத்தில் பக்தியோடு பெரிய ததீயாராதனம் செய்தால் அது கோடி மடங்கு சிறப்புடையது என்று அறிவாளிகள் கூறுகிறார்கள்.

## அத்யயனோத்ஸவமும் அநத்யயனமும்

123*—127. மஹாபா₄க்₃யவானான வேத₃ாந்தியே! கார்த்திகையில் கார்த்திகை நாளிலிருந்து தொடங்கி ஸ்ரீவைஷ்ணவன் எந்த இடத்திலும் திவ்யப்பிரபந்தத்தை ஓதலாகாது; இது உறுதி. ''ஸ்ரீரங்கம் முதலான எல்லா திவ்யதேசங்களிலும் இருபது நாட்களுக்கு நடக்கும் அத்யயனோத்ஸவம் என்னும் பெரிய சிறப்புற்ற திருநாள் வைஷ்ணவர்களால் அவசியம் நடத்தப்பட வேண்டும்; அதில் திவ்யப்ரபந்தங்கள் ஓதப்பட வேண்டும்'' என்று ஸ்ரீரங்கநாதனின் ஆணையாலே

१२७. न चैवान्यत्र कर्तव्यं प्रबन्धाध्ययनं तथा ।
गृहार्चनहरेस्तेषु सन्निधौ वासरेषु च ॥

१२८. स तद्वचनमाकर्ण्य वेदान्ती तमथाब्रवीत् ।
प्रबन्धाध्ययने तत्र को दोषः समुदाहृतः ॥

१२९. तस्य सर्वाधिकारस्य किमर्थं विधिरीरितः ।
तत्त्वमाख्याहि भगवन् शिष्याय करुणार्णव ॥

१३०. अवधार्याऽथ भट्टार्यस्तद्वाक्यं तमथाऽब्रवीत् ।
उपक्रमोत्सर्जनौ च वेदस्य भवतां यथा ॥

१३१. तथा द्राविडवेदस्य तावुभौ समुदीरितौ ।
श्रावण्यां प्रोष्ठपद्यां वा उपाकृत्य यथाविधि ॥

---

பூர்வாசார்யர்களால் நிர்ணயம் செய்யப்பட்டது. அந்த சமயங்களில் மற்ற இடங்களில் திவ்யப்ரபந்தங்களை வீட்டுப் பெருமாளுக்கு முன்போ, மற்றகோயில்களிலோ, விசேஷ தினங்களிலோ ஓதக்கூடாது.

## நஞ்சீயரின் கேள்வி

128—129. அந்த வார்த்தையைக் கேட்டு வேதாந்தி நஞ்சீயர் பட்டரைப் பார்த்து, "கருணைக்கடலான ஆசார் யரே! அந்த சமயத்தில் திவ்யப்ரபந்தங்களை ஓதினால் என்ன தோஷம் சொல்லப்படுகிறது? ஸர்வாதிகாரமான திவ்யப்ரபந்தங்களை ஓதக்கூடாது என்னும் விதி எதற்காக? இதுபற்றிய உண்மையை சிஷ்யனான அடியேனுக்கு அருள வேண்டும்." என்று கேட்டார்.

## தமிழ் வேதத்திற்கு உபக்ரம உத்ஸர்ஜனங்கள்

130—134. நஞ்சீயரின் அந்த வார்த்தையைக் கேட்ட ஸ்ரீபராசரபட்டர் அதற்குப்பதிலளித்தார்:— வேதத் திற்கு எப்படி 'உபக்ரமம்' (தொடக்கம்) 'உத்ஸர்ஜனம்,

१३२. युक्तश्छन्दांस्यधीयीत मासान्विप्रोऽर्धपञ्चमान् ।
इत्युक्तेन प्रकारेण वेदोपक्रम ईरितः ॥
१३३. तस्यैव पौषपौर्णम्यां उत्सर्जनविधिः स्मृतः ।
मकरे हस्तनक्षत्रे उपक्रमविधिः स्मृतः ॥
१३४. कार्तिक्यां कृत्तिकायां तु तथैवोत्सर्जनं कृतम् ।
चतुष्टयसहस्रस्य प्रबन्धस्य महात्मभिः ॥
१३५. पुरा रंगेश्वरः श्रीमान् दिव्यसूरीन् विलोक्य च ।
शठारिप्रमुखान्सर्वान् व्याजहार वचः शुभम् ॥

---

(அத்யயனமுடிவு) ஆகியவை ஏற்பட்டிருக்கிறதோ, அப்படியே திராவிடவேதத்திற்கும் அவை நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. "ஆவணி மாதத்திலோ புரட்டாசி மாதத்திலோ பௌர்ணமியில் முறைப்படி உபாகர்மம் (வேதத் தொடக்கம்) செய்து அந்தணனாயிருப்பவன் விதிப்படி ஐந்தரை மாதங்கள் வேதத்தை அத்யயனம் செய்ய வேண்டும்" என்று ஸ்ம்ருதிகளில் வேதத்திற்கு உபக்ரமம் சொல்லப்பட்டிருக்கிறது. அதுபோலவே தைமாதப் பௌர்ணமியில் வேதத்திற்கு உத்ஸர்ஜனமும் சொல்லப்படுகிறது. நாலாயிர திவ்யப்ரபந்தங்களுக்கு மஹாத்மாக்களால் தை மாதம் ஹஸ்த நக்ஷத்திரத்தில் உபக்ரமம் (தொடக்கம்) சொல்லப்பட்டிருக்கிறது. கார்த்திகையில் கார்த்திகை நாளில் உத்ஸர்ஜனம் (ஓதுதல் முடிவு) சொல்லப்படுகிறது.

## ஸ்ரீரங்கராஜனின் ஆணை

**135—*141.** முன்பொருசமயம் திருவின் நாயகனாகிற அரங்கநகரப்பன் நம்மாழ்வார் முதலான எல்லா ஆழ்வார்களையும் கடாக்ஷித்துப் பின்வரும் மங்களமான வார்த்தையை அருளினான்; "ஆழ்வார்களே! திருமங்கையாழ்வாரின் அவதார தினமான கார்த்திகையில் கார்த்திகை

१३६. नीलनक्षत्रमारभ्य यावदध्ययनोत्सवः ।
तावत्प्रबन्धपठनं न कुरुध्वं मदाज्ञया ॥
१३७. प्रबन्धाध्ययनेनाद्य युष्मत्कण्ठास्तु सूरिणः ।
क्लिष्टा जातास्ततो धृत्वा तैलं कण्ठेषु सादरम् ॥
१३८. तावत्तूष्णीं हि वर्तध्वं मद्ध्यानैकपरायणाः ।
धनुर्मासे सिते पक्षे प्रथमायामुपक्रमः ॥
१३९. कृष्णपक्षे तु पञ्चम्यामुपसंहार उच्यते ।
तस्यैवाध्ययनाख्यस्य चोत्सवस्य ममानघाः ॥
१४०. एवमाज्ञापितास्तेन हरिणा नित्यसूरयः ।
निवृत्तद्राविडाम्नायपारायणरतास्तथा ॥
१४१. ते सर्वे तैलसंसिक्तकण्ठास्तूष्णीं समास्थिताः ।
श्रीकृष्णो गोपिकास्त्रीभिर्यथा श्रीयमुनातटे ॥
१४२. हेमन्ते प्रथमे मासि सम्यगभ्यर्चितो यथा ।
धनुर्मासे रङ्गराजः गोदयाऽभ्यर्चितस्तथा ॥

---

நாளிலிருந்து தொடங்கி அத்யயனோத்ஸவம் வரையிலும் எனது ஆணையாலே திவ்யப்ரபந்தங்களை நீங்கள் ஓதலாகாது. (பல மாதங்களாக) திவ்யப்ரபந்தங்களை ஓதியதால் உங்களுடைய கண்டமும் சிரமத்தை அடைந்துள்ளது. அதனால் கழுத்திலே எண்ணெய்க்காப்புச் சாத்திக்கொண்டு என்னையே தியானித்துக் கொண்டு இந்தக்காலத்தில் திவ்யப்ரபந்தங்களை ஓதாமல் மௌனமாயிருக்கவேண்டும். குற்றமற்றவர்களே! என்னுடைய அத்யயனோத்ஸவம் மார்கழி மாதம் சுக்லபக்ஷப்ரதமையில் தொடங்குகிறது. கிருஷ்ணபக்ஷ பஞ்சமியில் சாற்றுமுறையாகிறது" (என்று அரங்கன் ஆணையிட்டான்). இவ்வண்ணமாக அரங்கனால் ஆணையிடப்பட்ட ஆழ்வார்கள் அவ்வண்ணமே கழுத்தில் எண்ணெய்க்காப்புச் சாத்திக்கொண்டு திவ்யப்ரபந்தங்களை அந்தக்காலத்தில் ஓதாமல் மௌனமாயிருந்தார்கள்.

१४३ नित्यमेकैकया दिव्यगाथया हरिमव्ययम् ।
स्तुत्वा संपूजयामास गोदा नियतमानसा ॥

१४४. एवं नित्यं धनुर्मासे पद्यैः त्रिंशद्भिरादरात् ।
त्रिंशद्दिनेषु संपूज्य भगवन्तं श्रियःपतिम् ॥

१४५ मनोरथफलं प्राप्य मुमुदे रङ्गिणा सह ।
गोदास्तुतिं पठेत्तस्मात् धनुर्मासि विशेषतः ॥

१४६. अतः प्रबन्धपठनं श्रीमदध्ययनोत्सवे ।
गोदास्तवस्याध्ययनं धनुर्मास्यरुणोदये ॥

१४७. इदं हि पूर्वगुरुभिः निर्णीतं हरिशासनात् ।
मर्यादातिक्रमं कृत्वा यो वाऽनध्ययने दिने ॥

---

## மார்கழியில் திருப்பாவை ஓதுதல்

141*—*147. எம்பெருமானை கண்ணன் யமுனைக் கரையிலே ஹேமந்தருதுவின் முதல் மாதமான மார்கழியில் எப்படி கோ3பிகளாலே நன்கு ஆராதி4க்கப் பட்டானே, அப்படியே ரங்க3ராஜனும் த4நுர்மாதத்தில் (மார்கழியில்) கோதையாகிற ஆண்டாளால் ஆராதி4க்கப் பட்டான். மனத்தை மற்ற விஷயங்களினின்றும் அடக்கி நின்ற கோதை அழிவற்ற எம்பெருமானை இம்மாதத்தில் தினந்தோறும் ஒவ்வொரு பாடலாலே துதித்து ஆரா தி4த்தாள். மார்கழி மாதத்தில் முப்பது பாட்டுக்கள் கொண்ட திருப்பாவையாலே முப்பது தினங்களும் இவ் வண்ணமாகத் திருவின்நாயகனை எம்பெருமானை விருப்புடன் ஆராதித்துத் தன்விருப்பம் நிறைவேறப் பெற்று, திருவரங்கனுடன் கூடி இன்புற்றாள். ஆகையால் கோதை யருளிய திருப்பாவையை, சிறப்பாக மார்கழி மாதத்தில் ஓதவேண்டும். ஆக, இக்காரணங்களால் திவ்யதேசங்களில் அத்யயனேத்ஸவத்தில் திவ்யப்ரபந்தங்களை ஓதவேண்டும்; மார்கழி மாதத்தில் சிற்றஞ்சிறுகாலையில் திருப்பாவையை ஓதவேண்டும். இவ்விஷயம் எம்பெருமானுடைய ஆணை யாலே பூர்வாசார்யர்களால் நிர்ணயிக்கப்பட்டது.

१४८ पठेत्प्रबन्धं मूढात्मा स गच्छेन्नरकं ध्रुवम् ।
पूर्वैराचरितं धर्मं सत्यं मत्वा तु यो नरः ॥

१४९. तन्मार्गवर्ती शुद्धात्मा स गच्छेद्वैष्णवं पदम् ।
एवं ये वैष्णवं धर्मं विदन्ति मनुजा भुवि ॥
ते सर्वपापनिर्मुक्ता विष्णोर्लोके वसन्ति हि ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे शमन्धरजयो नाम
त्र्युत्तरशततमोऽध्यायः ॥

---

## தமிழ்வேதம் ஓதுவதின் ப₂லம்

147*—149. (வடமொழி வேதத்திற்குப் போலே) தமிழ் வேதத்திற்கு நிர்ணயிக்கப்பட்ட அனத்₄யயன விதி₄யின் இந்த வரம்பை மீறி அறிவிலியான எவனொருவன் திவ்யப்ரபந்தத்தை ஓதக்கூடாத அநத்₄யயன தி₃னத்தில், அதைப் படிக்கிறானோ அவன் நிச்சயமாக நரகத்தை அடைவான், இது உறுதி. பூர்வாசார்யர்களால் அநுஷ்டிக்கப்பட்ட இந்த த₄ர்மத்தை உண்மை என்று அறுதியிட்டு எந்தப் பரிசுத்தமான மனிதன் அதன்படி நடக்கிறானோ அவன் விஷ்ணுவின் பரம பதத்தை அடைவான். எவர்கள் இவ்வண்ணமாக இவ்வுலகில் வைஷ்ணவ த₄ர்மத்தை அறிகிறார்களோ, அவர்கள் எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபட்டு விஷ்ணுலோகத்தில் வாழ்வார்கள்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் பட்டார்ய
வேதாந்திஸம்வாதத்தில் சமந்த₄ரஜயம் என்னும்
நூற்றுமூன்றாவது அத்தியாயம் நிறைவுற்றது.

चतुरुत्तरशततमोऽध्यायः ॥

१. नत्वा माधवदासोऽथ भट्टार्यं भक्तिपूर्वकम् ।
शठकोपस्य चरितं पप्रच्छ प्रीतिपूर्वकम् ॥

२. कासारयोगिप्रमुखसूरीणां चरितानि च ।
त्वत्तः श्रुतानि भगवन् ! सम्यग्विस्तरतो मया ॥

३. शठकोपस्य चरितं श्रोतुं कौतूहलं हि मे ।
तद् ब्रूहि विशदं स्वामिन् ! कृपया शिष्यवत्सल ॥

४. तदङ्गीकृत्य वचनं तदा वेदान्तिनो गुरुः ।
शठकोपस्य चरितं प्रवक्तुमुपचक्रमे ॥

५. वकुलाभरणं वन्दे जगदाभरणं मुनिम् ।
यः श्रुतेरुत्तरं भागं चक्रे द्राविडभाषया ॥

---

# 104வது அத்தியாயம்

## சடகோபாவதாரம்

### நஞ்சீயரின் கேள்வி

1—3. மாத₄வதா₃ஸராகிற நஞ்சீயர் ஸ்ரீபராசர ப₄ட்டரை பக்தியோடு வணங்கி சடகோபருடைய சரிதத்தை ஆர்வத்தோடு கேட்டார்:— "ஆசார்யரே! பொய்கையாழ்வார் முதலான ஆழ்வார்களின் சரிதங்கள் உம்மிடமிருந்து என்னால் விரிவாகக் கேட்கப்பட்டன. நம்மாழ்வாரின் சரிதத்தைக் கேட்பதற்கு எனக்கு மிகவும் ஆர்வமுள்ளது. சிஷ்யரிடம் அன்புடைய தேவரீர் கருணையோடு எனக்கு அதைத் தெளிவாகச் சொல்லவேண்டும்.

### சடகோப சரிதத்தின் சிறப்பு

4—9. வேதாந்தி நஞ்சீயரின் அந்த வார்த்தையை ஏற்றுக்கொண்டு ஆசார்யரான ப₄ட்டர் சடகோபருடைய சரித்திரத்தை விரிவாகச் சொல்லத் தொடங்கினர்:-

६. वकुलालङ्कृतं श्रीमच्छठकोपपदद्वयम् ।
अस्मत्कुलधनं भोग्यमस्तु मे मूर्ध्नि भूषणम् ॥
७. इति प्रणम्य भट्टार्यः कथामकथयत्तदा ।
वेदान्तिनेऽखिलां तस्मै शठकोपस्य विस्तृताम् ॥
८. एते चावयवास्सर्वे सरोयोग्यादयोऽनघ ।
शठकोपस्य वेदान्तिन्! तस्यावयविनः किल ॥
९. तच्चरित्रं महत्पुण्यं विचित्रं कल्मषापहम् ।
शृण्वतां वदतां चैव भक्तिज्ञानविवर्धनम् ॥

---

''உலகிற்கு ஆப₄ரணமாய் இருப்பவராய், வகுளமாலையை அணிந்தவராய், வேத₃த்தின் உத்தரபா₄க₃மான உபநிஷத்துக்களைத் தமிழ்மொழியிலே செய்தவரான நம்மாழ்வாரை வணங்குகிறேன். மகிழ்மாலையால் அலங்கரிக்கப் பெற்றதாய், நமக்குக் குலத₄னமாய் இருப்பதாய், போ₄க்₃யமாய் இருப்பதாய், அழகியதான நம்மாழ்வாருடைய திருவடியிணை என் தலைக்கு அலங்காரமாயிடுக'' என்று வணங்கி ஸ்ரீபராசரபட்டர் வேதாந்தி நஞ்சீயருக்கு சடகோபருடைய சரிதம் முழுவதையும் அப்போதே சொல்லத் தொடங்கினர். குற்றமற்ற வேதாந்தியே! பொய்கையாழ்வார் முதலான ஆழ்வார்கள் அனைவரும் அவயவியான நம்மாழ்வாருக்கு அவயவங்களாயிருப்பவரன்றோ; அவருடைய சரித்திரம் பெரிய புண்யமாகவும் ஆச்சரியமானதாகவும், கேட்பவர்களுக்கும் சொல்லுபவர்களுக்கும் பாபங்களைப் போக்குவதாகவும், ப₄க்தியையும் ஜ்ஞானத்தையும் வளர்ப்பதாகவும் உள்ளது.

१०. दक्षिणे चोलदेशस्य पाण्ड्यदेशो महानभूत् ।
विश्रुतः सर्वदेशेषु सर्वसस्यसमृद्धिमान् ॥

११. ताम्रपर्णी नदी पुण्या वर्तते यत्र विश्रुता ।
गङ्गा च यमुना चैव तथा गोदा सरस्वती ॥

१२. कावेरी नर्मदा सिन्धुः ताम्रपर्णी सरिद्वराः ।
तदुत्कृष्टा ताम्रपर्णी सर्वासां सरितां मुने ॥

१३. अष्टादशस्थलैर्दिव्यैः प्रबन्धप्रतिपादितैः ।
अन्यैरनेकैरधिकः पाण्ड्यदेशो विराजते ॥

१४. अस्ति पूर्वपयोराशेः काचित्पश्चिमरोधसि ।
मण्डले पाण्ड्यभूपस्य नगरी कुरुकाह्वया ॥

---

## பாண்டிய தேசத்தின் சிறப்பு

10—13. சோழ தேசத்திற்குத் தெற்கே பாண்டிய தேசம் என்னும் பெரிய நாடு உள்ளது. புகழ் பெற்றதாய், புண்யமானதான தாம்ரபரணி நதியால் அலங்கரிக்கப் பெற்ற அந்த நாடு எல்லா நாடுகளிலும் புகழ் பெற்ற தாய், எல்லாப்பயிர்களும் மிகுந்திருக்கப் பெற்றது. கங்கை, யமுனை, கோ₃தா₃வரி, ஸரஸ்வதி, காவேரி, நர்மதை, ஸிந்து₄, தாம்ரபரணி ஆகியவை (பா₄ரத தே₃ஶத்திலுள்ள) சிறந்த நதிகள். மற்ற எல்லா நதிகளைக் காட்டிலும் தாம்ரபர்ணியானது மிக உயர்ந்ததாகும். திவ்யப்ரபந்தங்களில் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற பதினெட்டு திவ்யதேசங்களோடும் மற்றும் பல கோயில் களோடும் பாண்டிய நாடு சிறப்புற்றதாய் விளங்குகிறது.

## திருக்குருகூரின் பெருமை

14—16. பாண்டிய அரசனுடைய நாட்டில் கீழைக் கடலின் மேலக்கரையில் 'குருகூர்' என்னும் நகரம்

१५. कौरव्येण नरेन्द्रेण द्वापरे परिपालिता।
तदाख्यया या विख्याता ताम्रपर्णीसरित्तटे ॥

१६. आद्यो यत्र प्रपन्नार्तिवैद्यो विष्णुः पुरोद्भूत्।
वेद्यो वेदशिखाविद्भिः श्रीद्योतितभुजान्तरः ॥

१७. तत्रासीत्पादजातेषु कश्चिद्भागवताग्रणीः।
श्रीमद्विभूतिनाथेन्द्रः सीमातीतगुणोज्ज्वलः ॥

१८. तस्य धर्मधनुर्नाम तनयः समजायत।
सार्थं कलिबलोत्सन्नधर्मोद्धरणकर्मणा ॥

१९. चक्रपाणिस्ततो जातः चक्रपाणिपरायणः।
सत्पात्रसात्कृतस्वीयसमस्तधनसंचयः ॥

---

உள்ளது. துவாபரயுகத்தில் குருவம்சத்தில் உதித்த ஓர் அரசனால் தாம்ரபர்ணி நதிக்கரையில் இருந்த அந்த நகரம் ஆளப்பட்டு வந்தபடியால் 'குருகூர்' என்னும் அந்தப்பெயரைப் பெற்றது. ப்ரபந்நர்களின் குறைகளைத் தீர்க்கும் வைத்₃யனாய், மறைமுடிகளை அறிந்தவர்களால் அறியத்தக்கவனாய், திருவாழ் மார்பனான ஆதிப்பிரானாகிற விஷ்ணு அவ்வூரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருந்தார்.

## சடகோபரின் முன்னோர்கள்

17—23. அந்தக்குருகூரில் எல்லையற்ற குணங்களால் விளங்குபவராய், தலைசிறந்த பா₄க₃வதராய், பரமபுருஷனின் பாத₃த்திலிருந்து தோன்றிய நாலாவது வர்ணத்தைச் சேர்ந்தவரான 'ஸ்ரீமத்₃விபூ₄தி நாதே₂ந்த்₃ரர்' என்று ஒருவர் இருந்தார். கலியின் ப₃லத்தாலே வாட்டமடைந்த த₄ர்மத்தைத் தன் செயலாலே தூக்கியெடுக்கையாலே பொருந்திய பெயருடைய "த₄ர்மத₄நு" என்பவர் அவருக்குப் பிள்ளையாகப்

२०. अजायत ततस्तस्माचक्रपाणेस्सुतोऽच्युतः ।
नाम यत्प्राप चोद्दामरत्नधामेति भूतले ॥

२१. सुमतिं सुषुवे सोऽपि सुतं पाण्डुर(पाटल)लोचनम् ।
सुकुमारयशः सम्यक् सुरभीकृतदिङ्मुखम् ॥

२२ पुत्रं प्रासूत फूत्कारिं शुभं पाटललोचनम् ।
फूत्कारेस्तस्य संजज्ञे पुत्रः कारिरितिश्रुतः ॥

२३. भूतिनाथेन्द्रमारभ्य कार्यन्तं ये मयोदिताः ।
सप्तैव ते महाभागाः भगवद्भक्तिपारगाः ॥

---

பிறந்தார். சக்ரபாணியையே மேலான தஞ்சமாகக் கொண்ட சக்ரபாணி என்பவர் அவருக்குப் பிள்ளையாகப் பிறந்தார். அவர் தம்முடைய செல்வம் முழுவதையும் நல்லோர்களுக்கு ஆக்கிவைத்தார். அந்தச் சக்ரபாணிக்குப் பிள்ளையாக அச்யுதர் என்பவர் பிறந்தார். அவர் கணக்கற்ற செல்வங்களுக்குக் கொள்கலமாயிருந்தவர் என்று இவ்வுலகில் புகழ் பெற்றார், அவர் வெளுத்த (சிவந்த) கண்ணையுடைய ஸுமதியைப் பிள்ளையாகப் பெற்றார். அழகிய கீர்த்தியையுடையவரான அவர் எல்லாத்திசைகளிலும் நன்கு மணம் பரப்பின சிவந்த கண்ணையுடைய அழகிய பூ₂த்காரியைப் பிள்ளையாகப் பெற்றார். அந்தப் பூ₂த்காரிக்குப் புகழ் பெற்ற 'காரி' என்பவர் பிள்ளையாகப் பிறந்தார். விபூ₄திநாதே₂ந்த்₃ரரிடமிருந்து தொடங்கி, காரிவரையிலும் இங்கு என்னால் சொல்லப்பட்ட எழுவரும் மஹாப₄ாக்₃யஶாலிகளாகவும், எம்பெருமானிடம் ப₄க்தியைக் கரை கண்டவர்களாகவும் இருந்தனர்.

२४. तन्मध्ये सुमहातेजाः कारिः सर्वगुणोत्तरः ।
अवर्धत महाप्राज्ञो विष्णुभक्तिपरायणः ॥
२५. संजातयौवनः श्रीमान् पित्रोरानन्दवर्धनः ।
यथा दशरथः पूर्वं प्रजारञ्जनतत्परः ॥
२६. तेजस्वी मतिमान् धीरः स्वकुलोचितधर्मवान् ।
सन्तुष्टः स गुणैस्तस्य पिता फूत्कारिनामकः ॥
२७ विवाहार्थं तदा शीघ्रं कारयत्नमथाकरोत् ।
केरले दिव्यदेशा हि चतुर्दश तदाऽनघ ॥
२८. तत्रासीत्परिशाराख्यं दिव्यं विष्णुस्थलं महत् ।
फूत्कारिः कारिमादाय तत्पुरं प्रविवेश सः ॥

---

## காரி உடைய நங்கை விவாஹம்

24—36 அந்த முன்னோர்கள் எழுவரில் காரியானவர் மஹாதேஜஸ்வியாகவும், எல்லா கு₃ணங்களும் நிறையப் பெற்றவராகவும், பேரறிவாளராகவும், விஷ்ணு ப₄க்தி நிறைந்தவராகவும் வளர்ந்து வந்தார். எல்லாச் செல்வங்களோடும் கூடியவராய், தாய் தந்தையருக்கு ஆநந்த₃த்தை அளிப்பவரான அவர் முற்காலத்தில் த₃ஶரத₂ரைப் போலே அனைவரையும் உகப்பிப்பவராய், தேஜஸ்ஸை உடையவராய், அறிவுடையவராய், தைரியமுடையவராய், தம் குலத்துக்குரிய த₄ர்மங்களை நடத்துகிறவராய் விளங்கினார். அவருடைய கு₃ணங்களைக் கண்டு உகந்த பூ₄த்காரி யென்னும் தந்தை காரியான அவருக்கு விரைவில் விவாஹம் செய்வதற்கு அப்போது முயற்சி செய்தார். குற்றமற்ற வேதாந்தியே! அக்காலத்தில் கேரளதேசத்தில் பதினான்கு திவ்யதேசங்கள் இருந்தன.

२९. स्वतुल्यवंशसंपद्भिः विष्णुभक्त्या विराजिते ।
वंशे कश्चिद्बभूवार्यः पादजो वैष्णवोत्तमः ॥

३०. जज्ञे तस्य सुता काचित् वैष्णवी नाथनायिका ।
फूत्कारिर्वरयामास विवाहार्थं सुतस्य ताम् ॥

३१. अङ्गीकृत्याथ वेदान्तिन्! स तस्य भगवत्परः ।
सन्तुष्टो लोकविदितं महता वैभवेन च ॥

३२. कारिनाम्ने ददौ कन्यां वरायोदकपूर्वकम् ।
सर्वालङ्कारसहितामात्मजां नाथनायिकाम् ॥

३३. कृतोद्वाहेन पुत्रेण स्नुषया सहितस्तदा ।
फूत्कारिः प्रययौ श्रीमान् कुरुकानगरं प्रति ॥

---

'வண்பரிசாரம்' என்ற அழகிய விஷ்ணுஸ்த2லம் அவற்றில் ஒன்ருகும். பூ2த்காரியானவர் காரியை அழைத்துக்கொண்டு அந்தநக3ரத்திற்குச் சென்ருர். தன்னையொத்த குடிப் பிறப்புச் செல்வத்தாலும் விஷ்ணுப4க்தியாலும் விளங்கும் வம்சத்தில் பிறந்த நான்காம் வர்ணத்தைச் சேர்ந்த சிறந்த வைஷ்ணவர் ஒருவர் அவ்வூரில் இருந்தார். அவருக்கு விஷ்ணுப4க்தியுடையவளான பெண் ஒருத்தி இருந்தாள். பூ2த்காரியானவர் தம்முடைய பிள்ளைக்கு மணம் செய்து கொள்வதற்காக அவளைப் பெண்கேட்டார். ப4க3வத்3ப4க்தியுடைய அந்த பா4க3வதரும் அவருடைய வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு மிகவுகந்தவராய், காரி என்னும் அந்த மணமகனுக்கு எல்லா ஆப4ரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றவளான உடையநங்கை என்னும் தம பெண்ணைப் பெருத்தவைப4வத்துடன் உலகெல்லாமறிய கன்யகாதா3னம் செய்துகொடுத்தார். அப்போது மணம் புரிந்து கொண்ட பிள்ளையோடும் மணப்பெண்ணேடும் கூடியவரான செல்வம் மிக்க பூ2த்காரி குருகாநகரத்திற்குச் சென்ருர்.

३४. पुराधिपत्वात्फूत्कारैः सहसाऽलङ्कृता पुरी ।
पौरैः प्रत्युद्गतो दूरं महता वैभवेन सः ॥
३५. सपुत्रः सस्नुषः शीघ्रं विवेश कुरुकापुरीम् ।
पताकाध्वजिनीं रम्यां ‡[तुर्यघोषनिनादितां ।
सिक्तराजपथां रम्यां ] प्रकीर्णकुसुमोत्कराम् ॥
३६. पौरैः प्रत्युद्गतो दूरं द्विजैश्च पुरवासिभिः ।
एवमुक्तप्रकारेण श्रीरामः सीतया सह ॥
३७. ततः कतिपयाहस्सु गतेषु तदनन्तरम् ।
भार्यया सहितः श्रीमान् परिशारपुरं ययौ ॥

---

அந்த நக3ரத்திற்குப் பூ2த்காரி தலைவராக இருந்தபடியாலே அந்தநக3ரம் முழுவதும் விரைவில் அலங்கரிக்கப்பட்டிருந்தது அந்தநக3ரத்து ஜனங்களாலே பெருத்தவைப4வத்துடன் வெகுதூரத்திலிருந்து எதிர்கொண்டுஅழைக்கப்பட்டார் அந்தப் பூ2த்காரி. தோரணங்களோடும் கொடிகளோடும் கூடி நின்று அழகியதாய் ‡[வாத்3யங்கள் முழங்கப்பெற்றதாய் சாலைகள் நீர்தெளிக்கப் பெற்றுஅழகியதாய்] எங்கும் மலர் தூவப்பெற்றதான அந்தக் குருகா புரியை,—ஸ்ரீராமபிரான் சீதையை மணந்து வந்தபோது நடந்தது போலே, அந்த நகரத்து ஜனங்களாலும் அந்த நகரிலுள்ள இருபிறப்பாளர்களாலும் வெகுதூரத்திலிருந்து எதிர் கொண்டழைக்கப் பட்டவராய், பிள்ளையோடும் மணப்பெண்ணோடும் கூடியவராய் விரைவில் அடைந்தார் அவர்.

## திருக்குறுங்குடி நம்பியின் அருளால் உடைய நங்கை க3ர்ப்ப4ம் தரித்தல்

37—*50. அதற்குப் பின் சிலகாலம் கடந்த பின்பு மனைவியோடு கூடிய கருணைநெஞ்சும் செல்வமும் நிறைந்த காரியானவர் மாமனரால் அழைக்கப்பட்டு, திருவண்பரி

---

‡ [ ] அதி4கபாட2ம்

३८. कारिः कारुण्यहृदयः प्रार्थितः श्वशुरेण सः ।
परिशारपुरे तत्र श्रीमति श्वशुरालये ॥
३९. कञ्चित्कालं स्थितः श्रीमान् भार्यया सह सादरम् ।
भूयः स्वनगरीं रम्यां श्वशुरप्रेरितो ययौ ॥
४०. कुरङ्गनगरीं तत्र मार्गे पश्यन्महायशाः ।
कारिः कुरङ्गनगरीं संप्राप्य सह भार्यया ॥
४१. भक्त्या कुरङ्गपूर्णस्य श्रीहरेः पादपद्मयोः ।
प्रणम्य प्रार्थयामास पुत्रार्थं पूर्णमुत्तमम् ॥
४२. पूर्णः तत्प्रार्थनां सम्यक् तस्याङ्गीकृत्य संमतम् ।
वरप्रदानं विदधे तदार्चकमुखेन सः ।
४३. पुत्रत्वं तु गमिष्यामि चाहमेव तवाधुना ।
हरेः पूर्णस्य वचनं संप्रहृष्टो निशम्य तत् ॥

---

சாரத்திற்குச் சென்றார். அந்தத் திருவண்பரிசாரத்தில் செல்வம் நிறைந்த அந்த மாமனாருடைய அகத்தில் சில காலம் இருந்த பிறகு எல்லாச் செல்வமுமுடைய காரி மனைவியோடு கூட மாமனாரால் விடைகொடுக்கப் பெற்றவராய், தம்முடையதான திருநகரிக்குச் சென்றார். பெரும்புகழாளரான அவர், செல்லும் வழியில் திருக்குறுங்குடி என்னும் திவ்யதேசத்தைக் கண்டு அந்தத் திருக்குறுங்குடிக்குள் மனைவியோடு நுழைந்து, திருக்குறுங்குடிநம்பியாகிற எம்பெருமானின் திருவடித் தாமரைகளில் வணங்கி, புருஷோத்தமரான அந்த நம்பியிடம் தமக்குப் பிள்ளை வேண்டுமென்று பிரார்த்தித்தார். அந்த நம்பியும் அவருடைய பிரார்த்தனையை நன்கு ஏற்றுக் கொண்டு, ''நானே விரைவில் உமக்குப் பிள்ளையாய் வருகிறேன்'' என்று அர்ச்சகர்கள் மூலமாக அவருக்கு வரத்தை அருளினான். திருக்குறுங்குடி நம்பியின் அவ்வார்த்தையைக் கேட்டு உகந்த காரி பொலிவு பெற்றவராய், பக்தியோடு கூடியவராய், மனைவியோடு

४४. भार्यया सहितः श्रीमान् भक्त्या तस्थौ कृताञ्जलिः।
तीर्थं प्रसादं मालां च तुलस्याः प्रददौ मुदा ॥
४५. सकलत्राय सहसा कारिनाम्ने श्रियःपतिः।
स्वीकृत्य भक्त्या तत्सर्वं सभार्यः कारिरात्मवान् ॥
४६. संप्रहृष्टो ह्यनुज्ञातः पूर्णेन सहसा तदा।
कुरुकानगरं प्राप्य चादिनाथं प्रणम्य च ॥
४७. सर्वधर्मपरस्तत्र न्यवसत्सुखमादरात्।
भर्तुः शुश्रूषणपरा भगवद्भक्तिभासुरा ॥
४८. श्यामा वामालका पुत्रकामा सा समजायत।
सा कदाचित्कुरंगेशं पथि पुत्रमयाचत ॥

---

கூடக் கைகூப்பி நின்றார். அவ்வெம்பெருமானும் மனை வியோடு கூடிய அந்தக் காரிக்குத் தீர்த்த₂ம், ப்ரஸாத₃ம், துளசிமாலை ஆகியவற்றை ஆனந்த₃த்தோடு அளித்தார். நற்குணமுடையவராய் மனைவியோடு கூடிய காரியும் அவ்வனைத்தையும் ப₄க்தியோடு ஏற்றுக்கொண்டு உகந்தவராய் அப்போதே நம்பியால் விடைகொடுக்கப் பெற்றுத் திருக்குருகூரைஅடைந்து ஆதி₃நாத₂ரை வணங்கி, அங்கேயே எல்லா த₄ர்மங்களையும் ஆர்வத்தோடு அநுஷ்டி₂த்துக் கொண்டு வாழ்ந்துவந்தார். கணவனுக்குக் கைங்கர்யம் செய்வதில் ஈடுபட்டவளாய், ப₄க₃வத் ப₄க்தி யாலே விளங்காநிற்பவளாய், அழகியவளாய், அழகிய கூந்தலையுடையவளான அந்த உடையநங்கை தனக்குப் பிள்ளை பிறக்க வேண்டும் என்னும் விருப்பத்தை உடைய வளானாள். பிறந்த வீட்டுக்குப் போகும் வழியில் அவளும் ஒவ்வொரு சமயம் திருக்குறுங்குடி நம்பியிடம் தனக்குப் பிள்ளை பிறக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். திருக்குறுங்குடி நம்பியும், ஸேனை முதலியாரை (விஷ்வக்ஸேநரை) அவளுக்குப் பிள்ளையாகப் பிறக்கும்படி

४९ आदिदेश कुरुङ्गेशः सेनान्यं तत्र जन्मनि ।
गर्भमाधत्त कालेन साचिरेण तलोदरी ॥

५०. पतङ्गमिव दिक् प्राची देवकीव यदूद्वहम् ।
शठकोपावतारस्य शृणु तत्र कालनिर्णयम् ॥

५१. ततो वक्ष्ये प्रमाथ्यब्दे ह्यादौ कलियुगस्य च ।
एकमासे गते तत्र त्रयोदशदिनोत्तरे ॥

५२. वैशाखे शुक्लपक्षे च चतुर्दश्यां भृगोर्दिने ।
विशाखायां च वेदान्तिन्! लग्ने कर्कटके शुभे ॥

५३. कुरुङ्गनगरीपूर्णवरदानेन योगिराट् ।
संजज्ञे नाथनायक्यां कारेः सैन्याधिपांशतः ॥

५४. यथादित्योदभूत्प्राच्यां शठकोपो महामतिः ।
अस्यावतारश्लोकाश्च गीयन्ते बहवो भुवि ॥

---

நியமித்தார். விரைவிலேயே அழகியவளான அந்த உடையநங்கை கிழக்குத்திசை ஸூர்யனை அடைந்தது போலவும், தேவகி கண்ணனையடைந்தது போலவும் கர்ப்பமும் தரிக்கப்பெற்றாள்.

## சடகோபாவதாரம்

50*—60*. குற்றமற்ற வேதாந்தியே! சடகோபர் அவவதரித்த காலத்தின் நிர்ணயத்தைக் கூறுகிறேன், கேளும்: கலியுகத்தின் முதல் வருஷமான ப்ரமாதி வருஷத்தின் ஒருமாதமும் பதின்மூன்று நாட்களும் கழிந்த பிறகு, வைகாசி மாதத்தில் சுக்லபக்ஷசதுர்தசியோடு கூடிய வெள்ளிக்கிழமையில் விசாகநக்ஷத்திரத்தில் மங்களமான கடகலக்நத்தில் காரிக்கும் உடையநங்கைக்கும் குமாரராய், பேரறிவாளரான சடகோபமுனிவர் கிழக்குத்திக்கிலே ஆதித்யன் உதிப்பது போலே திருக்குறுங்குடி நம்பியின் வரத்தாலே ஸேனை முதலியாரின் அம்சமாக அவதரித்தார். இவருடைய அவதார

५५. लाभे कलिदिने राधे वैशाखे काव्यवासरे ।
लग्ने कर्कटकेऽसूत तनयं नाथनायिका ॥
५६ आदौ कलेर्हि कुरुकापुरिपाण्ड्यदेशे
वैशाखमासि मघवानलभेऽग्रजातम् ।
सेनापतेः पदजकारिगृहेऽवतीर्णं
श्रीशास्पदं शठरिपुं शरणं प्रपद्ये ॥
५७. वैशाखे तु विशाखायां कुरुकापुरिकारिजम् ।
पाण्ड्यदेशे कलेरादौ शठारिं सैन्यपं भजे ॥
५८. तस्य वर्षातपादीनां वारणाय महात्मनः ।
पूर्वमेवात्र वेदान्तिन्! कुरुकानगरीवरे ॥

---

ஶ்லோகங்கள் பலவும் இவ்வுலகில் பாடப்படுகின்றன. (அவற்றின் பொருள் பின்வருமாறு):—(1) (கலிபிறந்தபின்) 'லாப₄' என்னும் எழுத்துக்களிலிருந்து கடபயாதி₃ ஸங்க்₂யைப்படி கிடைக்கும் 43 வது நாளில் வைகாசி விசாக நக்ஷத்திரத்தோடு கூடிய வெள்ளிக்கிழமையில், கடகலக்நத்தில் உடையநங்கை சடகோபரைப் பெற்றெடுத்தாள். (2) பாண்டிய தேசத்தில் வேளாள குலத்தில் பிறந்த காரியின் வீட்டில் கலியுக₃த்தின் முதல் வருஷத்தில் வைகாசி மாதத்தில் விசாக நக்ஷத்திரத்தில் ஸேனை முதலியாருடைய அம்சமாய் அவதரித்தவராய், எம்பெருமானுக்கு இருப்பிடமாய் இருந்தவரான சடகோபரை ஶரணமடைகிறேன். (3) கலியுகத்தின் முதல் வருஷத்தில் வைகாசி மாதத்தில் விசாகநக்ஷத்திரத்தில் பாண்டிய தேசத்தில் திருக்குருகூரில் உள்ள காரிக்குப் பிள்ளையாக அவதரித்த சடகோபராகிற ஸேனை முதலியாரை ஆஶ்ரயிக்கிறேன். இந்த மஹாபுருஷரை மழையும் வெயிலும் வருத்தாமலிருப்பதற்காக, அந்தத்திருக்குருகூரிலே பரமபத₃நாத₂னின் நியமநத்தாலே ஆதிசேஷன் புளியமரமாக முன்னமே அவதரித்திருந்தார். "முற்கூறிய முஹூர்த்தத்தில் உடையநங்கை பிள்ளையைப் பெற்றெடுத்தாள்.

५९. चिञ्चारूपेण फणिराट् उदभूदीशशासनात् ।
अस्त तनयं तस्मिन्मुहूर्ते नाथनायिका ॥
६०. निर्निद्रः तिन्त्रिणीरूपशेषस्तन्नगरे ह्यभूत् ।
श्रीदिव्यसूरिचरिते श्लोकोऽयं श्रूयते महान् ।
अवतारं च मधुरकवेर्वक्ष्यामि तं शृणु ॥
६१. हस्तस्थतालद्वितयं प्रपद्ये शठारिशाख्यासमुदारकीर्तिम् ।
माधुर्यसंश्लिष्टकवित्वयुक्तं महत्वसंभावितबुद्धितत्त्वम् ॥
६२. एवं प्रणम्य भट्टार्यः कथामकथयत्तदा ।
कुरुकानगरस्याथ प्राग्भागे क्रोशमात्रतः ॥
६३. श्रीमत्कोलूरिति स्थानं पाण्ड्यमण्डलमण्डनम् ।
श्रीसखः शेषपर्यङ्के शेते यत्र परः पुमान् ॥

---

'அந்தத் திருக்குருகூரில் உறங்காத ஆதிசேஷன் உறங்காப்புளியாக முன்னமேயே அவதரித்திருந்தாரன்றோ'' என்னும் ஶ்லோகம் திவ்யஸூரிசரிதத்தில் காணப்படுகிறது.

## மதுரகவியின் அவதாரமும் ப்ரபாவமும்

60*-75 இனி மதுரகவியின் அவதாரத்தைக் கூறுகிறேன் கேளும். ''திருக்கைகளில் இரண்டுதாளங்களை உடையவரும், (வடமொழிவேதத்திற்கு) வியாஸர் போலே நம்மாழ்வாருடைய தமிழ் வேதத்திற்கு ப்ரவர்த்தகரும், சிறந்த புகழை உடையவரும், இனிமையோடுகூடிய கவிதை இயற்றவல்லவரும், மஹத்தாய் (1. மஹான என்னும் தத்துவமாய்; 2. சிறந்ததாய்) இருக்கும் தன்மையோடு கூடிய புத்தி, (அறிவு) என்னும் தத்துவத்தையுடையவராயிருப்பவருமான ஸ்ரீமதுரகவியாழ்வாரை ஶரணமடைகிறேன்'' என்று வணங்கி, பட்டர் மதுரகவியாழ்வார சரிதத்தைச் சொல்லத்தொடங்கினார். திருக்குருகூருக்குக் கிழக்கே ஒரு க்ரோஶதூரத்தில் பாண்டியநாட்டிற்கு அலங்காரமாயிருக்கும் திருக்கோளூர் என்னும் திவ்யதேசம் உள்ளது. அவ்வூரில் பரமபுருஷனை திருநாரணன் ஆதி

६४. तत्र पुर्यां महान् सामशाखाध्यायी द्विजोत्तमः।
कश्चित्पूर्वशिखो विद्वान् नारायणपरायणः ॥

६५ द्वापरे चाष्टलक्षेषु सहस्रेषु च षष्टिषु।
संवत्सरेष्वतीतेषु विद्वन् कतिपयेषु च ॥

६६. विक्रमाब्दे चैत्रमासे शुक्लपक्षे च चैत्रभे।
नारायणाभिधानस्य पुत्रो जज्ञे गणांशजः ॥

६७. वकुलाभरणोदग्रभास्करोदयकारणः।
अरुणोदयवत्पूर्वं कविर्मधुरसंज्ञकः॥

६८. चैत्रमासे शुभे चित्रातारकायामजायत।
श्रीदिव्यसूरिचरिते श्लोकोऽयं श्रूयते महान् ॥

६९. सामशाखायुते विप्रकुले पूर्वशिखावति।
जातस्य तस्य मधुरकवेस्तच्छास्त्रमार्गतः ॥

---

ஶேஷஶயநத்திலே ஶயனித்திருக்கிருன். அந்தத் திருக்கோளூரிலே அறிவாளியாய், (ஜைமிநி) ஸாமவேதத்தை ஓதுகின்றவராய், நாராயணனேயே தஞ்சமாகக் கொண்டவராய், பூர்வசிகையை உடைய அந்தணர் தலைவரான ஒரு பெரியவர் வாழ்ந்து வந்தார். நாராயணன் என்னும் பெயருடைய அவருக்கு துவாபரயுகத்தில் எட்டுலட்சத்து அறுபதிணுயிரம் வருஷங்கள் கழிந்த பிறகு விக்ரம வருஷத்தில் சித்திரை மாதம் சுக்லபக்ஷத்தில் சித்ரா நக்ஷத்திரத்தில் (குமுதர் என்னும்) கணங்களின் தலைவரின் அம்சமாக ஒரு பிள்ளை பிறந்தார். மகிழ்மாலை மார்பினரான நம்மாழ்வாரான ஸூர்யன் உதிப்பதற்குக் காரணமான அருணேதயம் போலே மதுரகவியாழ்வார் சித்திரை மாதத்தில் சித்திரை நக்ஷத்திரத்தில் அவதரித்தார். ஸ்ரீ திவ்யஸூரிசரிதத்தில் இந்தச்சிறந்த ஶ்லோகம் காணப்படுகிறது. ஜைமிநிஸாம வேதத்தைச் சேர்ந்த பூர்வசிகையை உடைய அந்தணர் குலத்தில் பிறந்த மதுரகவிககு அந்த ஸாமவேத முறைப்படி அந்தந்தக் காலங்

௭௦. जातकर्मादिसंस्कारांस्तत्तत्कालोचितान् शुभान् ।
कारयामास जनको विधिना ब्राह्मणैस्सह ॥

௭௧. कृतोपनयनः पित्रा कविर्मधुरसंज्ञकः ।
जग्राह सकला विद्याः चतुर्दश गुरोर्मुखात् ॥

௭௨. अङ्गानि वेदाश्चत्वारो मीमांसा न्यायविस्तरः ।
पुराणं धर्मशास्त्रं च विद्या ह्येताश्चतुर्दश ॥

௭௩. अधीतवेदवेदाङ्गः महावैराग्यवारिधिः ।
तीर्थयात्रापरो धीमान् दिव्यदेशान् ययौ कविः ॥

௭௪. अयोध्या मधुरा माया काशी काञ्ची ह्यवन्तिका ।
पुरी द्वारवती चैव सप्तैता मोक्षदायिकाः ॥

௭௫. इत्यादिनिखिलान्देशान् चरित्वा भक्तिभावतः ।
अष्टाङ्गयोगनिरतस्तस्थौ बदरिकाश्रमे ॥

---

களில் செய்யவேண்டிய ஜாதகர்மம் முதலான ஸம்ஸ்காரங்களை அவருடைய பிதாவானவர் அந்தணர்களோடு கூடியிருந்து முறைப்படி செய்வித்தார். அந்த மதுரகவி தந்தையால் உபநயநம் செய்விக்கப்பெற்று, பதினான்கு வித்யைகளையும் குருமுகமாகக் கற்றார். "நாலு வேதங்கள், ஆறுஅங்கங்கள், வேதவிசாரமான மீமாம்ஸை, தர்க்க சாஸ்த்ரம், புராணம், த4ர்மசாஸ்த்ரம் ஆகிய இவை பதினான்கு வித்யைகள்" என்பது ப்ரமாணம். வேதவேதாங்கங்களை ஓதியவராய், மஹாவைராக்யத்திற்குக் கடலாயிருப்பவராய், தீர்த்த யாத்திரையில் ஈடுபட்டவராய், அறிவாளியான அந்த மதுரகவி திவ்யதேசங்களுக்கு யாத்திரை சென்றார். "1. அயோத்தி, 2. மதுரை, 3. மாயா எனப்படும் ஹரித்வாரம், 4. காசி, 5 அவந்திகா, 6. புரி ஜகந்நாதம், 7. துவாரகை எனும் இந்த எழும் மோக்ஷத்தைத் தரும் நகரங்கள்" முதலான எல்லாதேசங்களையும் ப4க்தி பா4வத்துடன் ஸஞ்சரித்து ப3த3ரிகாஶ்ரமத்தில் அஷ்டாங்க3யோக3த்தில் ஈடுபட்டவராய் வாழ்ந்துவந்தார்.

७६. गर्भस्थ एव शठजिद्विष्वक्सेनकृपावशात् ।
प्रह्लादवत्स संप्राप्तसर्वार्थः समजायत ॥

७७. संपूर्णज्ञानवान् जज्ञे स सूर्य इव निर्मलः ।
कल्यात्मकं विलोक्येदं जातमात्रेण तज्जगत् ॥

७८ निमील्य नेत्रे निश्चिन्तस्तस्थौ स भगवत्परः ।
मलमूत्रादिरहितं रोदनादिविवर्जितम् ॥

७९. सर्वावयवसंपत्तिं दृढाङ्गं दिव्यतेजसम् ।
भगवत्पादसंन्यस्तसर्वभारं निरन्तरम् ॥

---

## மாறன் என்று நாமகரணம்

76—*88 க3ர்ப்ப4த்திலிருக்கும்போதே 'சடம்' (ஶட2ம்) என்னும் வாயுவைக் கோபித்து அடக்கியவராகையாலே, 'சடகோபர்' என்று பெயர் பெற்ற நம்மாழ்வார் விஷ்வக் ஸேநரின் கருணையாலே பிரஹ்லாதனைப் போலே அறிய வேண்டும் அர்த்த2ங்களையெல்லாம் அறிந்தவராகவே அவ தரித்தார். பரிபூர்ணஜ்ஞாநத்தை உடையவராய், ஸூர்ய னைப்போலே குற்றமற்றவராகவே பிறந்தார். பிறந்த வுடனேயே இவ்வுலகம்கலியினால் ஆக்ரமிக்கப்பட்டிருப்பதைக் கண்டு கண்ணை மூடிக்கொண்டு, கவலையற்றவராய் எம் பெருமானிடம் ஈடுபட்டவராய் இருந்தார். மலம் மூத்ரம் முதலானவைகள் இல்லாதவராய், அழுகை முதலான குழந் தைக்குரிய செயல்களும் அற்றவராய், எல்லா அவயவங் களும் நன்கு வளரப்பெற்றவராய், உறுதியான அவயவங் களை உடையவராய், சிறந்த தேஜஸ்ஸை உடையவராய், எம்பெருமானுடைய திருவடிகளிலே வைக்கப்பட்ட தம் முடைய எல்லாப்பொறுப்புகளையும் உடையவராய், அந்த எம்பெருமானுடைய திருவடிகளை தியானிக்கும் ஆநந்த3த்

८०. तत्पादाम्भोरुहध्यानरसास्वादैकधारकम् ।
पुत्रं विलोक्य जनकः कारिर्विस्मितमानसः ॥

८१. सुतरां विस्मिता चासीज्जननी नाथनायिका ।
जाताशौचे गते तत्र यथाशास्त्रं सुतस्य तौ ॥

८२. तन्मातापितरौ पुत्रमादाय विगतस्पृहौ ।
प्रापतुः कुरुकानाथसन्निधिं भगवत्परौ ॥

८३. शङ्खतीर्थसमीपे तु ताम्राया दक्षिणे तटे ।
स्थितं पुण्डरीकाक्षं शंखचक्रधरं हरिम् ॥

८४. वरदाभयहस्तं च धरया रमया सह ।
नवनीरदनीलाभं पीतवाससमच्युतम् ॥

---

தைப்பருகி அதையே எப்போதும் தனக்கு த₄ாரகமாகக் கொண்டவராயுள்ள தம் பிள்ளையைப் பார்த்துத் தந்தையான காரி வியப்புற்ற மனத்தை உடையவரானார்; தாயான உடையநங்கையும் மிகவும் வியப்புற்றவளானாள். சாஸ்திரவிதி₄ப்படி பிள்ளை பிறந்த தீட்டுக்கழிந்தவுடன் சடகோபருடைய, பகவத்பக்தாகளான தாய்தந்தையர் 'தம் பிள்ளை' என்னும் ஆசையற்றவராய், அப்பிள்ளையை எடுத்துக்கொண்டு குருகைப்பிரானுடைய ஸந்நிதி₄க்குச் சென்றனர். தாமிரபர்ணியின் தென்கரையிலே திருச்சங்கணித்துறைக்கு அருகிலே கோயில்கொண்டு எழுந்தருளியிருப்பவனாய், தாமரைக்கண்ணனாய், சங்க சக்கரங்களைத் தரித்தவனாய், அடியார்களுடைய பாபங்களைப்போக்குபவனாய், வரமளிக்கும வரத₃ஹஸ்தத்தையும் அப₄யமளிக்கும் அபயஹஸ்தத்தையும் உடையவனாய், ஸ்ரீபூ₄மிதே₃விகளோடு கூடியவனாய், புதிய மேக₄ம்போல் நீலநிறமுடையவனாய், பீதாம்ப₃ரத்தைத் தரித்தவனாய், அடியவரை நழுவ

८५. आदिनाथं प्रणम्याथ कुरुकायां रमासखम् ।
सन्निधौ तस्य देवस्य तं बालं भक्तिपूर्वकम् ॥

८६. निक्षिप्य हेमदोलायां चिञ्चामूले महौजसम् ।
चक्रतुर्नामकरणं मार इत्यस्य विश्रुतम् ॥

८७. आत्मजप्रतिपत्तिं तां विहाय पितरौ सुते ।
विधाय तस्मिन् भगवत्प्रतिपत्तिं विशेषतः ॥

८८. प्रणम्य जग्मतुर्वेश्म निराशौ स्वीयमञ्जसा ।
सुज्ञानघनपूर्णोऽसौ तिन्त्रिणीमूलमाश्रितः ॥

८९ आबालषोडशाब्दं च मूकभावं समास्थितः ।
अन्धवन्मूकवच्चायं स्थाणुवद्वर्तते सुतः ॥

---

விடாதவனாய், ஸ்ரிய:பதியான ஆதிப்பிரானை வணங்கி, திருக்குருகூரிலுள்ள அந்த எம்பெருமானுடைய கோயிலிலே, சிறந்த தேஜஸ்ஸை உடைய அந்தக் குழந்தையை ப₄க்தியோடு திருப்புளியாழ்வாரடியிலே பொன்தொட்டிலில் இட்டு லோகப்ரஸித்₃த₄மான "மாறன்" என்னும் திருநாமத்தை அந்தக் குழந்தைக்குச் சாத்தினர். அத்தாய்தந்தையர் இருவரும் அப்பிள்ளையிடம் 'பிள்ளை' என்னும் எண்ணத்தை விட்டவர்களாய், 'எம்பெருமானே இவர்' என்னும் சிறப்பான நினைவைக் கொண்டவர்களாய், அவரை வணங்கி விட்டு, ஆசையற்றவர்களாய்த் தம்முடைய வீட்டிற்கு உடனே திரும்பினர்.

## பதினாறுவயது வரையில் மௌனவிரதம்

88*—92. நல்லறிவு நிறைந்தவராய், திருப்புளியாழ்வாரடியிலே வீற்றிருப்பவராய், குழந்தைப்பருவம் முதல் பதினாறு வயது வரையிலும் வாய்திறவாமலே இருந்தார்

१०. सन्तोषः कोपि संप्राप्तः गताः षोडशवत्सराः ।
पुत्रजन्मोत्सवोऽस्माकं वृथासीत्किल वै बत ॥

११. कुरङ्गनगरीपूर्णो दत्तवानीदृशं फलम् ।
इति व्याकुलचित्तौ तौ तत्प्रभावमजानतः ॥

१२. सम्यक् शठारिर्भगवत्पदाब्ज-
विन्यस्तसर्वात्मभरो महात्मा ।
नित्यं तदग्रे स सुखं तदङ्घ्रि-
ध्यानामृतास्वादपरोऽवतस्थे ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे शठकोपावतारकथनं
नाम चतुरुत्तरशततमोऽध्यायः ॥

---

சடகோபர். அவருடைய பெருமையை அறியாதவர்களாய், தாய் தந்தையர் இருவரும் ''குருடன்போலும் ஊமை போலும் மரம்போலும் இப்பிள்ளை இருக்கிருனே! நமக்கு என்ன ஆனந்தம் இவனுல் உண்டாயிற்று? பதினறு வருடங்கள் கழிந்துவிட்டனவே; நமக்குப் பிள்ளை பிறந்த ஸௌபாக்யம் வீணுகிவிட்டதே! திருக்குறுங்குடி நம்பி இப்படிப்பட்ட பலனைக் கொடுத்துவிட்டாரே!'' என்று கலங்கிய நெஞ்சுடையவர் ஆனார்கள். சடகோபரும் எம் பெருமானுடைய திருவடித்தாமரைகளில் தம்முடைய எல் லாப்பொறுப்புகளையும் வைத்த மஹாத்மாவாய், அப்பெரு மான் திருமுன்பே அவனுடைய திருவடியைத் தியானிப்ப தால் உண்டாகும் அமுதரஸத்தைப் பருகுகிறவராய் இனி தாக வாழ்ந்து வந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் பட்டார்யவேதாந்தி ஸம்வாதத்தில்
நம்மாழ்வாரின் அவதாரத்தைக்கூறும் நூற்றுநாலாம்
அத்தியாயம் நிறைவுற்றது.

पञ्चोत्तरशततमोऽध्यायः ।

१. तस्मिन्कालेऽथ वेदान्तिंस्तस्माद्बदरिकाश्रमात् ।
अयोध्यामगमद्धीमान् कविर्मधुरसंज्ञकः ॥

२. स्नात्वाथ सरयूनद्यां वेदान्तिन्! भगवत्परः ।
संसेव्य सीतासहितमयोध्यारघुनन्दनम् ॥

३. कंचित्कालमुवासात्र नित्यवासरतस्सदा ।
कदाचिद्रात्रिवेलायां जलशंकार्थमुत्थितः ॥

४. मधुरः कविरायातो दक्षिणभिमुखो बहिः ।
दक्षिणस्यां दिशि तदा दिव्यमप्राकृतं महः ॥

५. विलोक्य विस्मितोऽत्यन्तं किमेतदिति मोहितः ।
दह्यते वाग्निना ग्रामो नगरं वाथवा महत् ॥

---

## நூற்றைந்தாம் அத்தியாயம்

### திருவரங்கன் முதலானர் காட்சியளித்தல்

### தெற்குத்திக்கிலே பேரொளி

1—15. வேத₃ாந்திநஞ்சீயரே! அந்தக் காலத்திலே அறிவாளியான மது₄ரகவி, தாம்தங்கியிருந்த ப₃த₃ரிகாஶ்ர மத்திலிருந்து அயோத்திக்கு வந்து சேர்ந்தார். ஸரயூ நதியில் நீராடி எம்பெருமானிடம் ஈடுபட்ட அவர் ஸீதை யுடன் கூடிய அயோத்₄யாராமனைச் சேவித்து அங்கேயே நிரந்தரவாஸம் செய்ய எண்ணிச் சிறிது காலம் வாழ்ந்து வந்தார். ஒருநாள் இரவு வேளையில் அல்பஶங்கா நிவ்ருத் திக்காக எழுந்திருந்து வெளியில் சிறிது தூரம் தெற்கு முகமாகச் சென்ற மது₄ரகவி தெற்குத்திக்கிலே உலகில் காணமுடியாததான ஒரு தி₃வ்யமான பேரொளியை அப் போது பார்த்து மிகவும் வியப்புற்றவராய், 'இது என்ன?' என்று மயங்கினர். "ஒரு கிராமமோ, அல்லது பெரிய

६. दावानलोऽथमथवा तदित्येवं विचिन्तयन् ।
तदा सुष्वाप वेदान्तिन्! कविर्मधुरसंज्ञकः ॥

७. द्वित्रेषु दिवसेष्वेवं विलोक्यात्यन्तविस्मितः ।
अप्राकृतं दिव्यतेजस्तदमन्यत बुद्धिमान् ॥

८. जिज्ञासुरथ तत्तेजः स तस्मान्निर्ययौ जवात् ।
आसायमास्थितः सम्यग्ग्रामे कस्मिंश्च वर्त्मनि ॥

९. प्रतस्थे तत्परीक्षार्थं दक्षिणाभिमुखो निशि ।
अरुणोदयपर्यन्तं गत्वाऽध्वानमकल्मषः ॥

१०. रात्रावेव मुहुः पश्यंस्तत्तेजस्सुमहाद्भुतम् ।
मार्गं यत्स्थानमगमत्तत्राऽऽसायमतिष्ठत ॥

---

நக₃ரமோ நெருப்பில் வேகிறதோ? அல்லது இது ஒரு காட்டுத்தீயோ?'' என்று சிந்தித்துக்கொண்டு அந்த மது₄ர கவி தூங்கிவிட்டார். அடுத்த இரண்டு மூன்று தினங்களிலும் இந்தப் பேரொளியைக் கண்டு மிகவும் வியப்புற்றவராய், அறிவாளியான அவர் ''இது ஒரு அப்ராக்ருதமான தி₃வ்ய தேஜஸ்ஸே'' என்று அறுதியிட்டார். இந்த ஒளியாதென்று அறியவிரும்பிய அவர் அயோத்தியைவிட்டு வேக₃மாக வெளிக்கிளம்பினார். மாலை வரையில் வழியில் ஒரு கிராமத்தில் தங்கிவிட்டு இரவில் அந்த ஒளியைத்தேடித் தெற்குமுகமாகப் பிரயாணம் செய்தார். அருணோதயம் வரை குற்றமற்ற அவர் தெற்குமுகமாக வழிநடப்பவராய், இரவிலேயே அந்த ஒளியை அடிக்கடி காண்பவராய், காலையில் எந்த இடத்திற்குச் செல்கிறாரோ அங்கேயே மாலை வரையில் தங்கினார். அயோத்தியிலிருந்து மதுரகவியானவர் வெளிக்கிளம்பி, தெற்கிலுள்ள எல்லா திவ்யதேசங்களையும் ஸேவித்துக்கொண்டு ஒப்பற்ற ஸ்ரீரங்க₃ க்ஷேத்தி

११. साकेतनगराद्देवं निर्गम्य मधुरः कविः ।
दृष्ट्वाऽखिलान् दिग्देशान् दक्षिणस्यां दिशि स्थितान् ॥

१२. आससादाथ सहसा रङ्गक्षेत्रमनुत्तमम् ।
तस्यापि दक्षिणे भागे तत्तेजः समदृश्यत ॥

१३. स च तस्माद्विनिर्गत्य कुरुकानगरं ययौ ।
कुरुकापुरपर्यन्तं तत्तेजः समदृश्यत ॥

१४. तस्मादन्यत्र कुत्रापि नैवादृश्यत तन्महः ।
दृष्टं तेजस्ततोऽत्रैव वर्तते तत्सुनिश्चयम् ॥

१५. इति निश्चित्य सुदृढं मतिमान् मधुरः कविः ।
तत्तेजस्तत्र सहसा तस्थौ सम्यग्गवेषयन् ॥

१६. एवं विचिन्वतस्तस्य चिञ्चामूले महामुनिः ।
कवेरलक्ष्यतादित्य भानुवच्छठजित्तदा ॥

---

ரத்தை வந்தடைந்தார். அந்த ஸ்ரீரங்க₃த்திற்கும் தெற்குத்திக்கிலேயே அந்த ஒளி காணப்பட்டது. அவர் அங்கிருந்தும் புறப்பட்டுத் திருக்குருகூருக்குச் சென்றார். திருக்குருகூர் வரையிலும் அந்த ஒளியானது இரவில் காணப்பட்டது. அதற்குப்பிறகு அந்த ஒளியை எங்கும் காண முடியவில்லை. 'நாம்கண்ட ஒளி இந்தத் திருக்குருகூரிலேயே நிச்சயமாக உள்ளது' என்று உறுதிப்படுத்திக்கொண்டு அறிவாளியான மது₄ரகவி அந்த ஒளியை அங்கு தேடிக்கொண்டு இருந்தார்.

## சடகோபரை ஸேவித்தல்

16 — *23 இப்படித் தேடிக்கொண்டிருக்கும் அந்த மதுரகவிக்குத் திருப்புளியாழ்வாரடியிலே ஸூர்யன் போல் பிரகாசிக்கும் சடகோபர் அப்போதே காணப்பட்டார்.

१७ पद्मासनोपविष्टं परपदयुगले निविष्टचैतन्यम् ।
परतत्त्वबोधमुद्रं परमाचार्यं पराङ्कुशं वन्दे ॥

१८ इत्येवं तिन्त्रिणीमूलमाश्रितं श्रीपराङ्कुशम् ।
विलोक्य विस्मयाविष्टः स तदा मधुरः कविः ॥

१९. अप्राकृतमिदं तेजो दृष्टं यन्महदद्भुतम् ।
तदेवायमितीवाशु निश्चित्य हृदि तेजसा ॥

२०. दिव्येन तस्य वेदान्तिन्! समीपमगमत्तदा ।
मौनेन महता युक्तं मुकुलीकृतलोचनम् ॥

२१. विलोक्य विस्मयाविष्टः शठारिं मधुरः कविः ।
अन्धो वा यदि वा मूकः इत्येवं शङ्कितस्तदा ॥

---

"பத்மாஸனத்தில் எழுந்தருளியிருப்பவராய், பரமாத்மாவின் திருவடியிணையில் அறிவு செலுத்தியவராய், பரதத்துவத்தைக் காட்டும் சின்முத்திரையைக் கையிலே தரித்தவராய், பரமாசார்யரான பராங்குசரை வணங்குகிறேன்" என்று அநுஸந்திக்கப்பட்ட ரீதியில் திருப்புளியாழ்வாரடியிலே இருக்கும் ஸ்ரீபராங்குசரைக்கண்டு வியப்புற்றவராய் அந்த மதுரகவி "அத்யாச்சரியமாய், அப்ராக்ருதமான யாதொரு ஒளி என்னால் காணப்பட்டதோ அது இவரே" என்று உடனே அவருடைய பேரொளியைக்கொண்டு அறுதியிட்டு, அவருக்கருகில் அப்போதே சென்றார் நீண்ட மௌனத்தோடு கூடியிருப்பவராய், மூடிய கண்களை உடையவரான சடகோபரைக் கண்டு வியப்புற்ற மதுரகவி "இவர் குருடரா அல்லது ஊமையா?" என்று அப்போது ஐயமுற்றார். அதைப் பரீக்ஷிப்பதற்காக ஒரு கல்லை எடுத்து அவருக்கு அருகிலே பலமாக விட்டெறிந்தார்.

२२. पाषाणं तत्परीक्षार्थं तदग्रेऽपातयद्दृढम् ।
उन्मील्य नेत्रे सहसा श्रुत्वा तस्य महारवम् ॥

२३. पुरः स्थितं च पाषाणमद्राक्षीत् शठजित्तदा ।
नैवान्धोऽयमिति ज्ञात्वा सन्तुष्टो मधुरः कविः ॥

२४. द्वितीयशोधनार्थाय महद्वाक्यमुवाच सः ।
प्रकृतेरुदरे जीवः यदि जातस्तदाऽनघ ॥

२५. किं भक्षयन्वा कुत्रार्य! वर्तते स पुमान् गुरो ।
तस्य तद्वचनं श्रुत्वा शठकोपस्तमब्रवीत् ॥

२६. तद्वस्तु भक्षयन् सम्यक् जीवस्तत्रैव वर्तते ।
निशम्य तद्वचः सम्यक् सन्तुष्टो मधुरः कविः ॥

---

அந்தக்கல்லின் பேரொலியைக் கேட்டு உடனே கண் விழித்து, சடகோபர் அப்போதே முன்னுலிருந்த கல்லைப் பார்த்தார்.

## கேள்வியும் பதிலும்

23*—*26. இதன் மூலம் சடகோபர் குருடரல்லர் என்பதை அறிந்து உகந்த மதுரகவியாழ்வார் அவர் ஊமையா என்னும் இரண்டாவது பரீக்ஷையைச் செய்வதற்காக, "குற்றமற்ற ஆசார்யரே! 'செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் அது எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?' [அறிவற்றதான ப்ராக்ருத தேஹத்தினுள் ஜீவன் இணையும்போது அது எதை அனுபவித்துக் கொண்டு எங்கே இருக்கும்?]" என்னும் பொருள் பொதிந்த கேள்வியைக் கேட்டார். அவருடைய அந்த வார்த்தையைக் கேட்டு சடகோபர், "அது அத்தைத் தின்று அங்கே கிடக்கும் [அந்த ஜீவன் அந்த ஶரீரத்தையே நன்கு அனுபவித்துக்கொண்டு அதிலேயே இருப்பான்]" என்று பதிலுரைத்தார்.

२७. वकुलाभरणं ज्ञात्वा तं सर्वज्ञशिखामणिम् ।
साष्टाङ्गवन्दनं सम्यक् विधाय परभक्तितः ॥

२८. अशिश्रयन्महात्मानं शठारिं मधुरः कविः ।
कृतार्थः स तदा तेन वेदान्तिन् वैष्णवोत्तमः ॥

२९. गुरुपादांबुजं ध्यायन् गुरोर्नाम सदा जपन् ।
कुर्वन् भक्त्याऽनिशं सम्यक् शुश्रूषां मधुरः कविः ॥

३०. अतिष्ठतानिशं सम्यक् तत्रैव गुरुसन्निधौ ।
तस्मिन् काले शठारातेः प्रत्यक्षमगमद्धरिः ॥

३१. आदिदेवो जगन्नाथो वासुदेवो जगत्पतिः ।
चतुर्भुजः श्यामलाङ्गः परमव्योम्नि तिष्ठति ॥

---

## மதுரகவிகள் சடகோபரை ஆஶ்ரயித்தல்

26*—*30. வேதாந்தியே! இந்த வார்த்தையைக் கேட்டு நன்கு உகந்த மதுரகவி மகிழ்மாலை மார்பினரான சடகோபர் எல்லாமறிந்தவர்களில் தலைசிறந்தவர் என்று அறிந்து மேலான பக்தியுடன் அவரை ஸாஷ்டாங்கமாக நன்கு ஸேவித்து, மஹாத்மாவான அவரை ஆசார்யராக அடைந்தார். வைஷ்ணவோத்தமரான அவர் அப்போதே பிறவிப்பயன் பெற்றவராய், ஆசார்யருடைய திருவடித் தாமரைகளைத் தியானிப்பவராய், அவருடைய திருநாமத்தை எப்போதும் ஜபிப்பவராய், மேலான பக்தியுடன் அவருக்கு எப்போதும் கைங்கர்யம் செய்பவராய் அவருடைய திருமுன்பே நன்கு வாழ்ந்து வந்தார்.

## வைகுண்டநாத ப்ரத்யக்ஷம்

30*—36. அக்காலத்தில், ஆதிதேவனாய், ஜகந்நாதனாய், வாஸுதேவனாய், லோகஸ்வாமியாய், நாலு

३२. वैकुण्ठनाथो भगवान् स एव जगतां पतिः ।
वैनतेयसमारूढ श्रीभूनीलादिशोभितः ॥

३३. स्वरूपरूपनिखिलगुणैश्वर्यादिशोभितः ।
सम्यग्युगपदेवास्य सर्वं साक्षात्कृतं मुनेः ॥

३४. यन्महद्भगवद्रूपं तत्कल्याणगुणादिकम् ।
अनुभूयासकृत्सम्यक् तत्सर्वं शठजित्तदा ॥

३५. ब्रह्मानन्दार्णवे मग्नः किञ्चिदन्यन्न वेद सः ।
यद्दिव्यात्मस्वरूपं च विष्णोर्भगवतस्तदा ॥

३६. रूपप्रकाशकं तस्य दिव्यमङ्गलविग्रहम् ।
भक्तिध्येयान् दिव्यगुणान् बुभुजे निखिलांश्च तान् ॥

---

திருக்கைகளை உடையவனாய், கருநிற மேனியை உடையவனாய், ஹரி என்னும் திருநாமமுடையவனான ஸ்ரீவைகுண்ட2நாத2ன் பரமபத3த்திலிருக்கும் இருப்பை விட்டு, ஸ்ரீபூ4மிநீளாதே3விகளோடு கூடியவனாய், ஸ்வரூபம் ரூபம் ஸகல கல்யாண கு3ணங்கள், செல்வங்கள் ஆகியவற்றால் விளங்காநிற்பவனாய், கருடன் மேல் ஏறிக்கொண்டு இந்த சடகோபருக்குப் பிரத்யக்ஷமானான். அந்த எம்பெருமானுடைய பெரிதான ஸ்வரூபரூபங்கள், அவனுடைய கல்யாணகு3ணம் முதலானவை ஆகிய அனைத்தையும் அப்போதே பலகால் நன்கு அனுப4வித்து, சடகோபர் பிரம்மானந்தக் கடலில் மூழ்கியவராய் வேறு எதையும் அறியாதவரானார். ஸர்வவ்யாபியான எம்பெருமானுடைய தி3வ்யாத்மஸ்வரூபம், அந்த ஸ்வரூபத்தை வெளிப்படுத்தும் அவனுடைய தி3வ்ய மங்க3ள விக்3ரஹம், ப4க்திசெய்யும் போது தியானிக்க வேண்டிய தி3வ்யகு3ணங்கள் ஆகிய அனைத்தையும் அவர் அனுப4வித்தார்.

३७. ब्रह्मानुभवसंजातप्रमोदा न ममुस्तदा ।
सुमहान्तोऽथ वेदान्तिन्! वकुलाभरणोदरे ॥

३८. निर्ययुः शठजिद्वक्त्रात् त एवार्थास्ततोऽनघ ।
चतुःप्रबन्धरूपेण वेदा इव चतुर्मुखात् ॥

३९. ततश्चतुर्णां वेदानां सारार्थं सम्यगेव हि ।
उद्धृत्य विदधे सम्यक् प्रबन्धांश्चतुरः क्रमात् ॥

४०. ऋग्वेदार्थं समुद्धृत्य प्रबन्धं विदधे तदा ।
श्रीवृत्ताख्यं शठारातिः शतगाथाविराजितम् ॥

४१. यजुर्वेदार्थमादाय चक्रे द्राविडभाषया ।
आशिर्याख्यं प्रबन्धं च सप्तगाथाविराजितम् ॥

---

## நாலு திவ்யப்ரபந்தங்கள் அருளல்

37—*49. குற்றமற்ற வேதாந்தியே! அப்போது ப்₃ரஹ்மத்தை அனுப₄வித்ததாலுண்டான பேரானந்த₃ங்கள் வகுளாப₄ரணரின் வயிற்றில் உள்ளடங்காமல், அவை யெல்லாம் அந்தச்சடகோபரின் திருவாக்கிலிருந்து நாலுதிவ்யப்ரபந்தங்களாக, நான்முகனிடமிருந்து நான்கு வேத₃ங்கள் போலே வெளிப்பட்டன, அந்த நான்கு வேத₃ங்களுடைய ஸாரப்பொருளை எடுத்து, முறையே நான்கு திவ்யப்ரபந்தங்களையும் அவர் (தமிழில்) அருளிச்செய்தார். அப்போது அந்தச் சடகோபர் ரிக்₃வேத₃த்தின் பொருளை எடுத்து நூறுபாட்டுக்கள் கொண்ட திருவிருத்தம் என்னும் திவ்யப்ரபந்தத்தை (உலகை ரக்ஷிப்பதன் பொருட்டு) அருளினார். யஜுர் வேத₃த்தின் பொருளை எடுத்து ஏழுபாட்டுக்கள் கொண்ட திருவாசிரியம் என்னும் திவ்யப்ரபந்தத்தைத் தமிழிலே அருளினார். பெரியோரான அந்தச்சடகோபர் அத₂ர்வண வேத₃த்தின் பொருளைக் கொண்டு பெரிய திருவந்தாதி என்னும் திவ்யப்ரபந்தத்தை உலகை ரக்ஷிப்பதன் பொருட்டு அருளினார். அதில் எண்பத்தேழு

४२. अथर्वणागमार्थेन तं महान्तादिनामकम् ।
प्रबन्धं लोकरक्षार्थं शठारिरकरोन्महान् ॥

४३. तत्र प्रकीर्तिता गाथाः तास्सप्ताशीतिसंख्यकाः ।
सामवेदार्थसारेण प्रबन्धं चरमं महान् ॥

४४. सहस्रगीतिनामानं सर्वलोकहिताय च ।
विधाय कारितनुजः सर्वं जगदपालयत् ॥

४५. गाथाः सहस्रं द्विशततमाश्चात्र प्रकीर्तिताः ।
प्रबन्धे चरमे तत्र सम्यगर्थोयमीरितः ॥

४६. प्राप्यस्य ब्रह्मणो रूपं प्राप्तुश्च प्रत्यगात्मनः ।
प्राप्त्युपायं फलं प्राप्तेस्तथा प्राप्तिविरोधि च ॥

४७. इत्यर्थपञ्चकज्ञानं तत्रैवं समुदाहृतम् ।
निखिलागमवेदान्तशास्त्रसारतमं शुभम् ॥

---

பாட்டுக்கள் உள்ளன. ஸாமவேதத்தின் ஸாரத்தைக் கொண்டு அப்பெரியவரான காரிமாறன் "ஸஹஸ்ரகீ3தி" என்னும் திருநாமமுள்ள திருவாய்மொழியை எல்லா உலகின் நன்மையின் பொருட்டு அருளிச்செய்து உலகனைத்தையும் ரக்ஷித்தார். கடைசி ப்ரப3ந்த4மான இந்தத் திருவாய்மொழியில் 1102 பாட்டுக்கள் உள்ளன. அதில் நன்கு சொல்லப்பட்ட அர்த்தமாவது:—(1) ப்ராப்யமான (அடையப்படும்) ப்3ரஹ்மத்தின் ஸ்வரூபம், (2) ப்ராப்தாவான (அடைபவனை) ஜீவாத்மாவின் ஸ்வரூபம், (3) அடைவதற்கு உபாயம், (4) அடைந்து பெறும் ப2லன், (5) அடைவதற்குத் தடை என்னும் ஐந்து அர்த்த2ங்கள் அத்திருவாய்மொழியில் நன்கு விளக்கப்பட்டன. திருவாய்மொழி எல்லா வேத3வேதா3ந்த ஶாஸ்த்ரங்களின் பரம ஸாரமாய், மங்க3ளகரமாய் உள்ளது. "அந்தணரே!

४८. द्वयात्परतरं नास्ति मन्त्रो वेदेष्वपि द्विज! ।
इत्येतद्द्वयमन्त्रार्थं वेदसारतमांशकम्
४९. विशदं लोकरक्षार्थं तद्द्वयं सम्यगूचिवान् ॥
सहस्रगीतिकरणकालेषु निखिलाः सुराः ॥
५०. शठकोपान्तिकं जग्मुः रंगेशादिस्थलाधिपाः ।
शठारिदिव्यस्तोत्रैकपात्रतां लब्धुमिच्छवः ॥
५१. उत्कृष्टता जगत्यस्मिन् यथैव महती भवेत् ।
चिञ्चामूलनिवासाय शठकोपाय चक्रिणः ॥
५२. मुखप्रदानं विदधुः ते सर्वे विष्णुमूर्तयः ।
महान्तं शठकोपस्य श्रुत्वा वैभवमादरात् ॥

---

த்3வயத்தைக் காட்டிலும் மேலான மந்த்ரம் எல்லா வேத3ங்களிலும் இல்லை" என்று சொல்லப்பட்டதாய், வேதஸாரத்தைத் தனக்குள் அடக்கியதான த்3வயமந்த்ரத்தின் பொருளை உலகங்களை ரக்ஷிப்பதற்காக இத்திருவாய்மொழியில் சடகோபர் நன்கு விளக்கியருளினார்.

### அர்ச்சாமூர்த்திகள், நித்யஸூரிகள் முதலானோர் காட்சியளித்தல்

49*– *56. திருவாய்மொழியை ஆழ்வார் அருளிச் செய்யும்போது ஸ்ரீரங்கநாதன் முதலான திவ்யதேசத்து எம்பெருமான்கள் அவருடைய மங்களாசாஸனத்தை விரும்பி, சடகோபருக்கு அருகில் எழுந்தருளினார்கள். அந்த விஷ்ணுமூர்த்திகளான எம்பெருமான்கள் அனைவரும் தங்களுக்கு இவ்வுலகில் பெரிய சிறப்பு ஏற்படுவதற்காக, திருப்புளியாழ்வார் அடியிலே உள்ள சடகோபருக்கு முகங்காட்டினார்கள். வைகுண்டத்திலிருக்கும் நித்யஸூரிகளும் (திருப்பாற் கடற்கரையிலிருக்கும்) ஶ்வேதத்3வீபத்தில்

५३. द्रष्टुकामास्तदा जग्मुः वैकुण्ठान्नित्यसूरयः ।
अन्ये च निखिला देवाः श्वेतद्वीपनिवासिनः ॥

५४. शठारिर्वर्तते यत्र कुरुकानगरीं तदा ।
दृष्ट्वा समागतान् सर्वान् प्रहृष्टस्तान् दिवौकसः ॥

५५. मङ्गलाशासनं कृत्वा श्रीवैष्णवसमृद्धये ।
शठारिवैभवं दृष्ट्वा सन्तुष्टाः सकलाः सुराः ॥

५६. संप्राप्तमङ्गलास्तस्मात्स्वलोकान् संप्रपेदिरे ।
अष्टोत्तरशतस्थानस्थितानां परमात्मनाम् ॥

५७. श्रीरंगेशादयो देवा द्वात्रिंशत्तत्र चास्थिताः ।
विशेषानुग्रहप्राप्त्यै कारिसूनोर्महात्मनः ।

---

உள்ள எல்லா தே₃வர்களும் சடகோபருடைய பெரிய சிறப்பைக் கேள்வியுற்று அவரைக் காணவேண்டும் என்னும் ஆர்வத்துடன் திருக்குருகூரிலே நம்மாழ்வார் வீற்றிருந்த இடத்திற்கு அப்போதே எழுந்தருளினார்கள்; எழுந்தருளியிருந்த அந்த எம்பெருமான்களையும் தேவர் களையும் கண்டு, ஸ்ரீவைஷ்ணவர்கள் பெருகுவதற்குப் "பொலிக பொலிக" என்று மங்களாசாஸனம் செய்து உகந்தார் சடகோபர். பல திவ்யதேசத்து எம்பெருமான் களும் நித்யஸூரிகள் முதலானோரும் சடகோபருடைய வைப₄வத்தை நேரே கண்டு அவருடைய மங்க₃ளாசா ஸனத்தை ஏற்றுக்கொண்டு தத்தம் இருப்பிடங்களைச் சேர்ந்தனர்.

## திருமலைகள் மங்களாசாஸனம்

56*—*63. குற்றமற்ற வேதாந்தியே! நூற்றெட்டு தி₃வ்யதே₃ஶங்களிலிருக்கும் ஸ்ரீரங்க₃நாத₂ன் முதலான அர்ச்சாமூர்த்திகளில் முப்பத்திரண்டு எம்பெரு மான்கள் மஹாத்மாவான காரிமாறனுடைய

५८. पृथगेकैकशस्सर्वे प्रत्यक्षमगमन्मुनेः ।
दिव्यदेशाधिपतयो द्वात्रिंशद्विष्णुमूर्तयः ॥

५९. वनाद्रिः पाण्ड्यकटके वर्तते पर्वतोत्तमः ।
भगवान् सुन्दरभुजस्तत्रास्ते लोकरक्षकः ॥

६०. प्रसन्नोऽभूच्छठारातेः प्रथमं कृपयाऽनघः ।
त्रिंशद्गाथाभिरस्तौषीच्छठारिर्भगवत्परः ॥

६१. वृषभाद्रौ महापुण्ये परमस्वामिसंज्ञकम् ।
ततो विंशतिगाथाभिः संस्तुतो वेङ्कटेश्वरः ॥

६२. तुण्डीरमण्डले कश्चिद्वर्तते घटिकाचलः ।
नृसिंहो वर्तते तत्र देवोऽमृतफलाभिधः ॥

६३. प्रत्यक्षमगमत्तत्र संस्तुतस्तदनन्तरम् ।
दशगाथाभिरस्तौषीत्कुरुकायां रमासखम् ॥

---

விசேஷ மங்களாசாஸனத்தைப் பெறுவதற்காக அங்குத்தங்கி, ஒவ்வொருவரும் தனித்தனியாக அவருக்கு ஸேவை ஸாதித்தார்கள். பாண்டிய நாட்டில் வனாத்₃ரி என்று பெயர் பெற்ற திருமாலிருஞ்சோலை உள்ளது. அங்கு உலகங்களை ரக்ஷித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கும் சுந்தரத்தோளுடையானான எம்பெருமான் கருணையுடன் சடகோபருக்கு முதலில் ஸேவை ஸாதித்தான் மிகப் பாவனமான அந்த வ்ருஷப₄ாத்₃ரியிலுள்ள பரமஸ்வாமி என்னும் அவ்வெம்பெருமானை அவனிடம் ஈடுபட்ட சடகோபர் முப்பது பாட்டுக்களாலே துதித்தார். அதற்குப் பிறகு திருவேங்கடமலையிலுள்ள எம்பெருமான் இருபது பாடல்களாலே அவரால் துதிக்கப்பட்டார். தொண்டை மண்டலத்திலே க₄டிகாசலம் என்று ஒருமலை உள்ளது. அங்கு 'அம்ருத ப₂லம்' என்றும, 'அக்காரக்கனி' என்றும் அழைக்கப்படும் நரசிங்கன் எழுந்தருளியிருக்கிறான்; அப்பெருமான் ஆழ்வாருக்கு அடுத்தபடி சேவை ஸாதித்தான்; அவரால் துதிக்கப்பட்டான்.

६४. कुरङ्गनगरीपूर्णो गाथाभिः दशभिः स्तुतः ।
वानाचलाधिपो देवो भगवान् देवनायकः ॥

६५. संस्तुतो दशगाथाभिः वेदान्तिन् शठवैरिणा ।
कुम्भकोणाधिपो देवो ह्यपर्याप्तामृताभिधः ॥

६६. अभिष्टुतः शार्ङ्गपाणिर्गाथाभिर्दशभिस्तदा ।
केरले दक्षिणपुरे तिष्ठन्तं हरिमव्ययम् ॥

६७. स्तुतं चकार दशभिः गाथाभिः शठजित्तदा ।
दशगाथाभिरस्तौषीत् चलाढ्यं भ्रमरस्थले ॥

---

## திருக்குருகூர் திருக்குறுங்குடி வானமாமலை மங்களாசாஸனம்

63*—*65. குற்றமற்ற வேதாந்தியே! திருக்குருகூரில் எழுந்தருளியிருக்கும் லக்ஷ்மீநாதனை ஆதிப்பிரானைப் பத்துப்பாட்டுக்களாலே துதித்தார். அடுத்து, திருக்குறுங்குடி நம்பி பத்துப்பாட்டுக்களாலே துதிக்கப் பட்டான். வானமாமலைக்கு அதி₄பதியான தெய்வநாயகன் என்னும் எம்பெருமான் சடகோபரால் பத்துப்பாட்டுக்களால் துதிக்கப்பட்டான்.

## திருக்குடந்தை திருவல்லவாழ் மங்களாசாஸனம்

65*—*67. திருக்குடந்தைக்கு நாத₂னை ஆராவமுதன் என்னும் ஶார்ங்க₃பாணியாகிய எம்பெருமான் பத்துப் பாட்டுக்களாலே துதிக்கப்பட்டான். அதற்குப்பின் மலைநாட்டில் தென்திருவல்லவாழில் எழுந்தருளியிருக்கும் அழிவற்றஎம்பெருமானை, சடகோபர் பத்துப்பாட்டுக்களாலே துதித்தார்.

६८. लवणामात्रताताख्यः आकाशनगरे हरिः ।
संस्तुतो दशगाथाभिर्वेदान्तिन् चोलमण्डले ॥

६९. धन्विक्षेत्राधिपो देवः पद्माक्षो भगवान् हरिः ।
श्रीमङ्गलपुराधीशो भगवान् देवनायकः ॥

७०. तावुभौ दशगाथाभिः संस्तुतौ पाण्ड्यमण्डले ।
कुरुकानगरप्राच्यां वर्तते क्रोशमात्रतः ॥

७१. तेजःपुरं तत्र शेते फणिशायी महानिधिः ।
स हरिर्दशगाथाभिः वेदान्तिन् समभिष्टुतः ॥

---

## திருவண்வண்டூர் திருவிண்ணகர் திருத்தொலைவில்லிமங்கலம் மங்களாசாஸனம்.

67*—*70. வேதாந்தியே! அடுத்து, திருவண்வண்டூரிலே ப₃லதே₃வனை எம்பெருமானைப் பத்துப்பாட்டுக்களாலே துதித்தார். சோழதேசத்தில் திருவிண்ணகரிலே உ(ஒ)ப்பிலியப்பன் ஆகிய எம்பெருமான் பத்துப்பாட்டுக்களாலே துதிக்கப்பட்டான். பாண்டிய நாட்டில் திருத்துலைவில்லிமங்கலம் என்னும் திவ்யதேசத்திலே வில்லி க்ஷேத்ரத்திற்கு அதிபதியான 'அரவிந்தலோசனன்' என்னும் எம்பெருமானும், ஸ்ரீமங்க₃ளபுரத்திற்கு அதி₄பதியான தேவர் பிரானாகிற எம்பெருமானும் ஆகிய இருவரும் பத்துப்பாடல்களாலே பாடப்பெற்றனர்.

## திருக்கோளூர் திருவரங்கம் திருப்பேர் மங்களாசாஸனம்

70*—*73. வேதா₃ந்தியே! திருக்குருகூருக்குக் கிழக்கே ஒரு குரோச தூரத்தில் திருக்கோளூர் என்னும் திவ்ய தேசம் உள்ளது. அங்கே வைத்தமாநிதிப் பெருமான்

७२. अस्तौषीद्दशगाथाभिः शठजिद्रङ्गनायकम् ।
श्रीरङ्गनगरप्राच्यां श्रीरामनगरे हरिः ॥

७३. अपूपरङ्गनाथस्तु गाथाभिर्दशभिः स्तुतः ।
केरले दिव्यदेशस्तु तिरुवारन्विलाभिधः ॥

७४. तत्रस्थो भगवान्विष्णुः दशगाथाभिरीडितः ।
पाण्ड्ये बृहत्तटाके तु चोरनाट्याभिधा हरिः ॥

७५. गाथाभिर्दशभिः कृष्णो वेदान्तिन् समभिष्टुतः ।
वेदान्तिन् केरले देशे परिशारपुराधिपः ॥

---

திருவனந்தாழ்வான் மேலே சயனித்திருக்கிறுன். அந்த எம்பெருமான் பத்துப்பாட்டுக்களாலே துதிக்கப்பட்டான். அடுத்து, ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீரங்கநாதனைப் பத்துப்பாட்டுக் களாலே சடகோபர் துதித்தார். ஸ்ரீரங்கத்திற்குக் கிழக்கே ஸ்ரீராமநகரமாகிற (அப்பக்குடத்தான்) திவ்ய தேசத்தில் எழுந்தருளியிருக்கும் அப்பக்குடரங்கநாதன் * பத்துப்பாட்டுக்களாலே துதிக்கப்பட்டான்.

## திருவாறன்விளை, பெருங்குளம், திருவண்பரிசாரம் மங்களாசாஸனம்.

73*—*76. வேதாந்தியே! மலைநாட்டில் 'திருவாறன் விளை' என்னும் திவ்யதேசம் உள்ளது. அங்குள்ள எம்பெருமான் பத்துப்பாட்டுக்களாலே துதிக்கப்பட்டான். பாண்டியநாட்டில் 'பெருங்குளம்' என்னும் திவ்யதேசத்தில் உள்ள மாயக்கூத்தனாகிய கண்ணன் எம்பெருமான்

---

* ஸ்ரீரங்கநாதனுக்கு அடுத்துப்பதிகம் பெற்றவர் தென்திருப்பேரெயில் (தென்திருப்பேரை) மகரநெடுங்குழைக்காதனே. 'தென் திருப்பேர்' அப்பக்குடத்தான் என மயங்கி எழுதப்பட்டுள்ளது.

७६. मायाविनामकः कृष्णो दशगाथाभिरीडितः ।
अच्युतः क्षुद्रनद्यां तु दशगाथाभिरीडितः ॥

७७. भगवान् राजगोपालः श्रीसौरभपुराधिपः ।
वेदान्तिन् दशभिस्तत्र गाथाभिस्समभिष्टुतः ॥

७८. तत्रादिनाथो भगवान् विष्णुर्व्याघ्रपुराधिपः ।
संस्तुतो दशगाथाभिर्वेदान्तिन् शठवैरिणा ॥

७९. पाण्ड्ये चिञ्चाकुटिर्नाम विष्णुस्थानं विराजते ।
तत्रस्थो भगवान् विष्णुः शेषशायी जगत्पतिः ॥

---

பத்துப்பாட்டுக்களாலே துதிக்கப்பட்டான். மலைநாட்டில் 'திருவண்பரிசாரம்' என்னும் திவ்யதேசத்திற்குத் தலைவனை மாயாவியான கண்ணன் பத்துப் பாட்டுக்களாலே துதிக்கப்பட்டான்.

## திருச்சிற்ருறு திருக்கடித்தானம் திருப்புலியூர் மங்களாசாஸனம்

76*-78. வேதாந்தியே! திருச்சிற்ருறு என்னும் திவ்யதேசத்திலே அச்சுதனுகிற எம்பெருமான் பத்துப்பாட்டுக்களாலே துதிக்கப்பட்டான். திருக்கடித்தானத்தில் எழுந்தருளியிருக்கும் ராஜகோபாலனுகிற எம்பெருமான் அடுத்தபடி பத்துப் பாட்டுக்களாலே துதிக்கப்பட்டான். பிறகு, (குட்டநாட்டுத்) திருப்புலியூரில் எழுந்தருளியிருக்கும் ஆதிநாத₂னுகிய எம்பெருமான் சடகோபராலே பத்துப்பாட்டுக்களாலே துதிக்கப்பட்டான்.

## திருப்புளிங்குடி ஸ்ரீவைகுண்டம் வரகுணமங்கை மங்களாசாஸனம்

79—82 வேதாந்தியே! பாண்டியநாட்டில் 'திருப்புளிங்குடி' என்னும் திவ்யதேசம் விளங்காநிற்கிறது.

८०. संस्तुतो दशगाथाभिर्वेदान्तिन् शठवैरिणा।
श्रीवैकुण्ठमितिख्यातं तत्र विष्णुस्थलं महत् ॥

८१. तत्रैवान्यत्स्थलं चापि श्रीमद्वरगुणाभिधम्।
वैकुण्ठनाथो भगवान् तिष्ठन् विष्णुः श्रियः पतिः ॥

८२. श्रीमद्वरगुणानाथो भगवान्विजयासनः।
एकया गाथया तत्र तावुभौ समभिष्टुतौ ॥

८३. केरले काट्करं नाम स्थलं मूलिकलाभिधम्।
तिरुनावायिनामैकं त्रीण्येतानि स्थलानि च ॥

८४. प्रत्येकं दशगाथाभिः स्तुतानि शठवैरिणा।
शौरिराजस्तु भगवान् श्रीमत्कृष्णपुरे हरिः ॥

---

அங்குள்ள லோகநாதனை எம்பெருமான் ஆதிசேஷன் மேல் சயனித்திருக்கிருன். அவ்வெம்பெருமான் சடகோபரால பத்துப்பாட்டுக்களால் பாடப்பெற்ருன். அந்த திவ்யதேசத்திற்கு அருகில் 'ஸ்ரீவைகுண்டம்' என்று பெயர் பெற்ற பெரிய திவ்யதேசம் உள்ளது. அதற்கு அருகிலேயே 'ஸ்ரீவரகுணமங்கை' என்னும் மற்றெரு திவ்யதேசமும் உள்ளது. ஸ்ரீவைகுண்டத்தில் லக்ஷ்மீநாதனை எம்பெருமான் நின்ற திருக்கோலத்தில் இருக்கிருன். வரகுணமங்கையில் விஜயாஸனனுகிய எம்பெருமான் வீற்றிருந்த திருக்கோலத்தில் எழுந்தருளியிருக்கிருன். திருப்புளிங்குடிப்பதிகத்தில் ஒருபாட்டிலே இந்த இரு எம்பெருமான்களும் பாடப்பெற்றுள்ளனர்,

## திருக்காட்கரை திருமூழிக்களம் திருநாவாய் மங்களாசாஸனம்

83—*84. மலைநாட்டில் 'திருக்காட்கரை' என்றும், 'திருமூழிக்களம்' என்றும், 'திருநாவாய்' என்றும் மூன்று திவ்யதேசங்கள் உள்ளன இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பதிகத்தாலே சடகோபராலே துதிக்கப்பெற்றன.

௮௫. गाथाभिर्दशभिश्चोलकटके समभिष्टुतः ।
मोहूरे कालमेघाख्यः भगवान् विष्णुरव्ययः ॥

௮௬. गाथाभिर्दशभिश्चैव संस्तुतः पाण्ड्यमण्डले ।
अनन्तशयने विष्णुः पद्मनाभो जगत्पतिः ॥

௮௭. केरले दशगाथाभिः भगवान्समभिष्टुतः ।
आद्यनन्तपुरे श्रीमान् शयानः केशवाभिधः ॥

௮௮. पुराणो दशगाथाभिः संस्तुतः केरलेऽनघ ।
तत्रत्यो भगवान् विष्णुः दशगाथाभिरीडितः ॥

௮௯. एवं हि संस्तुतास्तत्र द्वात्रिंशत्स्थलनायकाः ।
कृष्णस्य गद्यचौर्योक्तेः रागाद्रामावतारतः ॥

---

## திருக்கண்ணபுரம் திருமோகூர் திருவனந்தபுரம் திருவாட்டாறு மங்களாசாஸனம்

84*—*89. குற்றமற்றவரே! சோழநாட்டில் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கும் சௌரிராஜனாகிற எம்பெருமான், பத்துப்பாட்டுக்களாலே துதிக்கப்பெற்றான். பாண்டியநாட்டில் 'திருமோகூர்' என்னும் திவ்யதேசத்தில் அழிவற்ற காளமேகப்பெருமாளாகிற எம்பெருமான் பத்துப் பாட்டுக்களாலே துதிக்கப்பெற்றான். மலைநாட்டில் திருவனந்தபுரத்தில் லோகநாதனான பத்மநாபன் என்னும் எம்பெருமான் பத்துப்பாட்டுக்களாலே துதிக்கப்பெற்றான். மலைநாட்டிலேயே ஆதி அனந்தபுரமாகிய திருவாட்டாற்றில் சயனத்திருக்கோலத்தில் உள்ள கேசவனாகிற தொன்மை மிக்க எம்பெருமான் பத்துப்பாட்டுக்களால் துதிக்கப் பட்டான். இவ்வண்ணமாக முப்பத்திரண்டு திவ்யதேசத்து எம்பெருமான்கள் சடகோபராலே மங்களாசாஸனம் செய்யப்பெற்றனர்.

९०. सौन्दर्येणास्य सोऽमुह्यन्मासानष्टादश त्रिधा ।
वेदान्तिन्! संस्तुताश्चैव हरयः शठवैरिणा ॥

९१. सन्तुष्टास्तेन ते सर्वे स्वस्थलानि प्रपेदिरे ।
अस्मिन्नर्थे हि विख्याताः श्लोकाश्च बहवो भुवि ॥

९२. पाण्ड्ये द्वादश केरले भगवतः षट् सप्त चैवादरात्
चोले पञ्च च तोण्डमण्डलवरे चैकं तथैवोत्तरे ।
एकं कारिसुनेन तेन महता चिञ्चानिवासेन वै
द्वात्रिंशत्समभिष्टुताः शठजिता श्रीदिव्यदेशा हरेः ॥

## மூவாறுமாதம் மோஹித்தல்

89*—*90. "பதத்துடை அடியவர்க்கு" [திருவாய் 1—3—1] என்னும் பாட்டில் கண்ணன் வெண்ணெய் திருடிக்கட்டுண்டதைச் சொன்னவுடன் ஒருமுறையும், * "கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ" [திருவாய் 7-5-1] என்னும் பாட்டில் இராமாவதாரத்தில் பெரும் காதலால் ஒருமுறையும், "பிறந்தவாறும்" [திருவாய் 5-10-1] என்னும் பாட்டில் விப₄வாவதார ஸௌந்த₃ர்யத்தை அநுப₄வித்தவுடன் ஒருமுறையும் ஆக மூவாறு மாதம் சடகோபர் மோஹித்துக்கிடந்தார்

## சடகோபர மங்களாசாஸனம் செய்த திவ்யதேசங்கள்.

90*—*95. குற்றமற்ற வேதாந்தியே! இவ்வண்ணமாக, சடகோபரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திவ்ய தேசத்து எம்பெருமான்கள் மிகவும் உகந்தவர்களாய், தத்தம் இடங்களுக்குத் திரும்பினர். சடகோபர் மங்களாசாஸனம் செய்த திவ்யதேசங்களைப் பற்றிப் பின்வரும் (பொருளுள்ள) ஶ்லோகங்கள் உலகில் புகழ்பெற்று விளங்குகின்றன. பாண்டியதேசத்தில் பன்னிரண்டும், கேரளத்தில் பதின்மூன்றும், சோழநாட்டில் ஐந்தும், தொண்டைமண்டலத்தில் ஒன்றும், வடநாட்டில் ஒன்றும் ஆக முப்பத்திரண்டு திவ்யதேசங்கள்

* "கண்கள் சிவந்து" [8-8-1] என்னும பாட்டில் மயங்கியதாக ஆசார்யஹ்ருத₃ய (58) வ்யாக்யானத்தில் மாமுனிகள்.

९३. तुण्डीरे घटिकाचलो भगवतः शेषाचलश्चोत्तरे
चोले कृष्णपुरं च रङ्गनगरं श्रीकुम्भकोणस्थलम् ।
श्रीमद्व्योमपुरं महेन्द्रनगरं श्रीकारिपुत्रस्तुतान्
तानेव प्रतिवासरं स्मरति यः श्रीमान् स भूयान्नरः ॥

९४. तोताद्रिर्वनशैलमोहरपुरे वैकुण्ठतेजःपुरे
श्रीनामाख्यपुरं च धन्विनगरं श्रीमङ्गलाख्यं पुरम् ।
श्रीमद्भूरिसरोवरं वरगुणं चिञ्चाकुटीरं महत्
विष्णोः श्रीकुरुकापुरी शठजिता पाण्ड्ये स्तुता द्वादश ॥

९५ तेनस्तुतानि स्थानानि केरले तु त्रयोदश ।
भगवद्विषयान् ग्रन्थान् विधाय चतुरः क्रमात् ॥

---

திருப்புளியாழ்வாரடியில் வீற்றிருந்த, 'காரிமாறன்' என்றும், 'சடகோபர்' என்றும் அழைக்கப்படும் நம்மாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்றன. தொண்டைமண்டலத்தில் கடிகாசலம், வடநாட்டில் திருமலை, சோழநாட்டில் திருக்கண்ணபுரம், ஸ்ரீரங்கம், திருக்குடந்தை, திருவிண்ணகர், திருப்பேர்நகர் ஆகிய, காரிமாறனால் துதிக்கப்பெற்ற இந்த (ஏழு) திவ்யதேசங்களையும் தினந்தோறும் நினைப்பவன் பெருஞ்செல்வமுடையவனாவான். பாண்டியநாட்டில் (1) வானமாமலை (2) திருமாலிருஞ்சோலை (3) திருமோகூர் (4) ஸ்ரீவைகுண்டம் (5) திருக்கோளூர் (6) தென்திருப்பேரை (7), (8) வில்லிநகரமும் ஸ்ரீமங்களபுரமும் ஆகிற தொலைவில்லி மங்கலம் என்னும் இரட்டைத்திருப்பதி, (9) பெருங்குளம், (10) வர் குணமங்கை (11) திருப்புளிங்குடி (12) பெரிய நகரமான திருக்குருகூர் ஆகியபன்னிரண்டு திவ்யதேசங்கள் சடகோபரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்றன. கேரளத்தில் (மலைநாட்டில்) அவரால் மங்களாசாஸனம் செய்யப்பட்டவை பதின்மூன்று திவ்யதேசங்கள்.

९६. सम्यक् मधुरकव्यादिसज्जनायोपदिश्य तान् ।
लोकसंरक्षणार्थाय कृतकृत्यो महायशाः ॥
९७. पञ्चत्रिंशदवन्यां तु सुखेनाब्दान् व्यवस्थितः ।
दर्शनं परभक्तिः स्यात् परज्ञानं च संगमः ॥
९८ पुनर्विश्लेषभीरुत्वं परमा भक्तिरुच्यते ।
एतादृशाभिः परमभक्तिभिश्च परादिभिः ॥
९९. अतिष्ठदेवमनिशं शठारातिर्महायशाः ।
पद्मासनस्थो भगवान् चिश्चामूर दिवानिशम् ॥
१००. मलमूत्रादिरहितः क्षुत्पिपासाविवर्जितः ।
हरिपादाम्बुजध्यानरसास्वादैकधारकः ॥

---

## சடகோபரின் பரமபதப்ராப்தி

95*—*103. பகவத்விஷயமான (முற்கூறிய) ஐந்து திவ்யப்ரபந்தங்களை முறையே அருளிச்செய்து, மதுரகவி முதலான நல்லோர்களுக்கு அவற்றை உலகத்தை ரக்ஷிப்பதற்காக நன்கு உபதேசித்து, செய்யவேண்டிய கடமையைச் செய்தவராய், பெரும் புகழாளராய், முப்பத்தைந்து திருநக்ஷத்திரங்கள் இந்த பூமியில் வாழ்ந்தார் சடகோபர் எம்பெருமானைக் காண்பது 'பரப₄க்தி' என்றும், அவனோடு கூடுவது 'பரஜ்ஞாநம்' என்றும், அவனைக் கணநேரம் பிரிவதையும் பொறுக்கவொண்ணு திருக்கை 'பரமப₄க்தி' என்றும் சொல்லப்படுகிறது. இத்தகைய பரப₄க்தி பரஜ்ஞாந பரமப₄க்திகளோடு எப்போதும் கூடியவராய், பத்₃மாஸனத்தில் வீற்றிருப்பவராய், மலம் மூத்திரம் முதலானவை அற்றவராய், பசி, தாகம் இல்லாதவராய், எம்பெருமானுடைய திருவடித் தாமரை

१०१. आपञ्चत्रिंशदब्दं च सुखेनैकेन वर्त्मना ।
संपूज्यमानो विबुधैः कारिसूनुर्महायशाः ॥

१०२. पित्रोरानन्दमतुलं विधायानेककर्मणा ।
आचन्द्रार्कं प्रतिष्ठाप्य स्ववंशं जगतीतले ॥

१०३. वैकुण्ठनगरं प्राप सहसा नित्यसूरिभिः ।
तत्रैव तिन्त्रिणीमूले पूर्ववत्कुरुकापुरे ॥

१०४. पद्मासनस्थो भगवानद्यापि परिदृश्यते ।
प्रपन्नजनकूटस्थः कारिसूनुर्महायशाः ॥

१०५. वेदान्तिन्! शठकोपस्य प्रभावमतिमानुषम् ।
शृण्वतां पठतां वापि स्मरतां नमतामपि ॥

---

யைத் தியானித்து அதனுல் வரும் இன்பத்தையே த₄ாரகமாகக்கொண்டவராய், முப்பத்தைந்து வயது வரையில் இவ்வண்ணமே இனிது வாழ்ந்தவராய், அறிவாளிகள் அனைவராலும் கொண்டாடப்பட்டவராய், தம்முடைய இத்தகைய பல செயல்களாலே தாய்தந்தையருக்கு ஒப்பற்ற ஆனந்த₃த்தை அளித்து, இவ்வுலகில் சந்திரஸூர்யர்கள் உள்ள வரையில் தம்முடைய வம்சத்தை நிலைநிறுத்திப் பெரும் புகழாளரான சடகோபர் வைகுண்ட₂நக₃ரத்தில் நித்யஸூரிகளோடு சேர்ந்தார்.

## நம்மாழ்வாரின் பெருமை

103*—111. வேதாந்தியே! அந்தத் திருக்குருகூரிலேயே திருப்புளியாழ்வாரடியிலே ப்ரபந்ந ஜனங்களுக்குத் தலைவராய், காரிபுத்ரராய், பெருப்புகழாளரான நம்மாழ்வார் பத்₃மாஸநத்திலே வீற்றிருப்பவராய், (அர்ச்சாரூபியாக) இன்றும் காணப்படுகிருர். சடகோபருடைய அதிமாநுஷமான பெருமையைக் கேட்பவர்களுக்கும், படிப்பவர்

१०६ सर्वाभीष्टानि शठजित् कृपयैव ददाति हि ।
श्रीवैष्णवमतं सम्यक् अनेनैव प्रकाशितम् ॥

१०७ श्रीवैष्णवमतस्यास्य मुख्योऽयं शठजित्ततः ।
श्रीमच्छठारिकैङ्कर्यं दृष्टादृष्टफलप्रदम् ॥

१०८. अतः शठारिभक्तानां किं न साध्यं जगत्त्रये ।
वेदान्तिन्! शठजिद्भक्तः स एव मधुरः कविः ॥
को वा जगति योगीन्द्रं तं विना गुरुभक्तिमान् ॥

१०९ भूत्वा कारिगृहेऽथ षोडशसमान् मौनेन चिञ्चान्तिके
स्थित्वा वेदचतुष्टयार्थमखिलं सारं समुद्धृत्य च ।
कृत्वा लोकहिताय तेन चतुरो दिव्यप्रबन्धान् परान्
भक्त्या श्रीहरिभूमयः शठजिता द्वात्रिंशदेव स्तुताः ॥

---

களுக்கும் நினைப்பவர்களுக்கும் அவரை வணங்குபவர்களுக்கும் இந்த நம்மாழ்வார் பரமகருணையாலே எல்லா விருப்பங்களையும் அளிக்கிறாரன்றோ! ஸ்ரீவைஷ்ணவமதம் இவராலேயே நன்கு வெளிப்படுத்தப்பட்டது. ஆகையால் ஸ்ரீவைஷ்ணவ மதத்திற்கு சடகோபர் முதல் ஆசார்யராக விளங்குகிறார். அந்த நம்மாழ்வாருக்குக் கைங்கர்யம் செய்வது இம்மைமறுமைகளில் எல்லாப்பயன்களையும் அளிக்கும். ஆகையால், நம்மாழ்வாரின் பக்தர்களுக்கு மூவுலகிலும் பெறமுடியாதது எது? வேதாந்தியே! அந்த மதுரகவியாழ்வாரே நம்மாழ்வாரின் (தலைசிறந்த) பக்தர். இவ்வுலகில அந்த ஆழ்வாரைத்தவிர ஆசார்யபக்தியுடையவர் வேறு எவர் உண்டு? காரியின் வீட்டில் அவதரித்து, திருப்புளியாழ்வாரடியிலே பதினாறு வருடங்களை மௌனமாகக்கழித்து, நாலு வேதங்களின் ஸாரார்த்தத்தையும் தமது மேலான நாலு திவ்யப்ரபந்தங்களாலே லோகஹிதத்தின் பொருட்டு

११०. शिष्यायाथ तथोपदिश्य कवये लोकावनार्थं भरं
तस्मै तान्मधुराय वेदसदृशान् मोक्षैकहेतून् परान् ।
पञ्चत्रिंशदुदारकीर्तिरवनौ स्थित्वा च वै वत्सरान्
भेजे विष्णुपदं निरन्तरसुखं श्रीकारिसूनुर्महान् ॥
१११. एतत्कारिसुतस्य दिव्यचरितं ज्ञानैकसंवर्धकम्
श्रोतॄणामघनाशनं भवहरं संपत्करं सर्वदा ।
ये शृण्वन्ति पठन्ति सौम्यहृदयाः धीराः परं मानवाः ॥
तेषां श्रीशठकोप एव सततं श्रेयः परं यच्छति ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे श्रीशठकोपस्य श्रीरंगेशादिप्रत्यक्षो नाम पञ्चोत्तरशततमोऽध्यायः ॥

---

வெளிப்படுத்தி, ப₄க்தியுடன் நம்மாழ்வாரால் 32 திவ்ய தேசங்கள் துதிக்கப்பட்டன. ஸ்ரீகாரிபுத்ரராய், பெரியவரான அந்த நம்மாழ்வார் தம்சிஷ்யரான அந்த மதுரகவியாழ்வாருக்கு வேதத்திற்கு ஸமமானவையாய், மோக்ஷத்தையே அளிப்பவையான மேலான அந்த திவ்யப்ரபந்தங்களை லோகரக்ஷணத்தின் பொருட்டு உபதேசித்து, முப்பத்தைந்து திருநக்ஷத்திரங்கள் இவ்வுலகில் வாழ்ந்து, அழியாத பிரம்மானந்தத்தை அளிக்கும் விஷ்ணுவின் பரமபதத்தை அடைந்தார். ஜ்ஞானத்தையே விளைப்பதாய், கேட்பவர்களின் பாபத்தைப் போக்குவதாய், ஸம்ஸாரத்தை நீக்குவதாய், எப்போதும் கைங்கர்யச் செல்வத்தை அளிப்பதான இந்தக் காரிபுத்திரருடைய திவ்யசரிதத்தை நன்னெஞ்சுடன் அறிவாளிகளான எவர்கள் கேட்கிறார்களோ, அல்லது படிக்கிறார்களோ, அவர்களுக்கு ஸ்ரீ சடகோபரே மேலான நன்மைகளை அருள்கின்றார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் பட்டார்ய வேதாந்திஸம்வாதத்தில் நம்மாழ்வாருக்கு ஸ்ரீரங்கநாதன் முதலான எம்பெருமான்கள் ப்ரத்யக்ஷமானதைக்கூறும் நூற்று ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

षडुत्तरशततमोऽध्यायः ॥

१. ततो माधवदासाख्यः भट्टार्यमिदमब्रवीत् ।
किं कैङ्कर्यं शठारातेश्चकार मधुरः कविः ॥

२. श्रोतुमिच्छामि भट्टार्य! यत्तन्मे ब्रूहि विस्तरात् ।
तदङ्गीकृत्य भट्टार्यो वेदान्तिनमथाऽब्रवीत् ॥

३. ततः प्राथमिकः शिष्यः शठारेर्मधुरः कविः ।
प्रपन्नजनकूटस्थः स्वाचार्यस्य महात्मनः ॥

४. प्रबन्धमखिलं दिव्यं प्रभावमकरोत्तदा ।
पञ्चमोपायनिष्ठानां मुमुक्षूणां महात्मनाम् ॥

---

## நூற்றாறும் அத்தியாயம்
## திருவாய்மொழி சங்கப்பலகையேறுதல்
### நஞ்சீயரின் கேள்வி

1—*2 அதற்குப்பின் மாத₄வதா₃ஸர் என்னும் நஞ்சீயர் ஸ்ரீப₄ட்டரைப் பார்த்து "ஆசார்யரே! சடகோபருக்கு மதுரகவியாழ்வார் என்ன கைங்கர்யம் செய்தார் என்பதை அடியேன் கேட்கவிரும்புகிறேன். அதை எனக்கு விரிவாகக் கூறுவீராக" என்று கேட்டார்.

### கண்ணிநுண் சிறுத்தாம்பு அருளல்

2*—*5. நஞ்சீயரின் அந்த வேண்டுகோளை ஏற்று ஸ்ரீபட்டர் அவரைப் பார்த்துக் கூறத்தொடங்கினார்:— நம்மாழ்வார் பரமபதமடைந்தபின் அவருடைய முதல் சிஷ்யரான மதுரகவியாழ்வார் ப்ரபந்நகுலத்திற்குத் தலைவராய் மஹாபுருஷரான தமது ஆசாரியரின் பெருமையனைத்தையும் அடக்கிய (கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும்)

५ उपकारी महानासीत् प्रबन्धश्चरमो हि सः ।
ततोऽर्चाविग्रहं सम्यक् कारयित्वा गुरोस्तदा ॥
६ यथाशास्त्रं प्रतिष्ठाप्य कुरुकानगरे गुरुम् ।
तत्रैव तिन्त्रिणीमूले विस्तृते दिव्यमण्डपे ॥
७. महोत्सवांश्च सकलानुत्सवान् कारयंस्तदा ।
गुरुं प्रकाशयन् धीमान् अतिष्ठत्स यथासुखम् ॥
८. कुरुकानगरे सम्यगश्रावि सुमहान् रवः ।
महाकाहलिकोत्पन्नः शठजित्कीर्तिसूचकः ॥
९. कारिमारस्समायाति कुरुकानगरीश्वर. ।
सहस्रगीतिदेवश्च समायाति पराङ्कुशः ॥

---

திவ்யப்ரபந்தத்தை அருளிச்செய்தார். கர்ம ஜ்ஞாந பக்தி ப்ரபத்திகளுக்கு மேற்பட்ட ஆசார்யாபிமானமாகிற ஐந்தாவது உபாயத்தில் ஊன்றிநிற்கும் மஹாத்மாக்களான முமுக்ஷுக்களுக்கு இந்த ப்ரப₃ந்த₄த்தால் பெரிய உபகாரம் விளைந்தது. சரமோபாயத்தை வெளியிடும் ப்ரப₃ந்த₄மன்றோ அது.

## அர்ச்சாப்ரதிஷ்டை

5*-*11. அதற்குப்பின் தமது ஆசார்யருக்கு அர்ச்சா விக்₃ரஹத்தை நன்கு எழுந்தருளப் பண்ணி, திருக்குருகூரில் அந்தத் திருப்புளியாழ்வாரடியிலே விசாலமான திருமண்டபத்தில் அத்திருமேனியை ப்ரதிஷ்டை செய்து, அறிவாளியான மதுரகவியாழ்வார் நம்மாழ்வாருக்கு உத்ஸவங்களையும் மஹோத்ஸவங்களையும் நடத்துவதன்மூலம் தமது ஆசார்யனை உலகுக்கு வெளிப்படுத்திக்கொண்டு இனிது வாழ்ந்தார். அக்காலத்திலே அந்தத் திருக்குருகூரிலே அந்த நம்மாழ்வாரின் புகழைப்பரப்பும்

१०. द्राविडाम्नायकृत्स्वामी कविकण्ठीरवस्त्विति ।
एवं बहुविधं तत्र देशे शठजितो यशः ॥

११. सर्वत्र तेन मधुरकविना संप्रकाशितम् ।
तस्मिन् काले कविः कश्चित् कम्बनामा महायशाः ॥

१२. बभूव द्राविडश्रेष्ठः कविकण्ठीरवो महान् ।
मधुरायां पाण्ड्यदेशे कवीनां त्रिशतेन च ॥

१३. अवर्तत जितारातिः स कम्बाख्यः प्रकीर्तितः ।
तस्य शिष्याः समाकर्ण्य तं शठारातिवैभवम् ॥

१४. काहलिं रुरुधुः शीघ्रं तां गर्वादसहिष्णवः ।
तद्वृत्तान्तं समाकर्ण्य विस्मितो मधुरः कविः ॥

---

பின்வரும் பெரிய திருச்சின்ன முழக்கம் ஒலித்தது:—''காரி மாறன் வந்தார், குருகை நகர்த்தலைவர் வந்தார், திரு வாய்மொழித் தேவர் வந்தார், பராங்குசர் வந்தார், வேதம் தமிழ் செய்த மாறன் வந்தார், கவிசிங்கம் வந்தார்'' என்பது முதலான சடகோபரின் புகழ் அந்த நாட்டில் மதுர கவியாழ்வாராலே எங்கும் பரவும்படி செய்யப்பட்டது.

## மதுரகவிகளும் கம்பசிஷ்யர்களும்

11*—*24. அக்காலத்தில் பெரும்புகழாளராய், தமி ழர்க்குத் தலைவராய், கவிகள் சிங்கமாய், கம்பர் என்று பெயர் பெற்றவரான ஓர் மஹாகவி வாழ்ந்தார். பாண்டிய தேசத்திலுள்ள மதுரையில் புகழ்பெற்ற அந்தக் கம்பர் எதிரிகளை வென்றவராய் (சீடரான) முந்நூறு கவிஞர் களோடு புகழுடன் வாழ்ந்து வந்தார். அவருடைய சிஷ்யர் கள் நம்மாழ்வாருடைய அந்தப் பெருமையைக் கேள்விப் பட்டு, கர்வத்தாலே பொறுமை கொண்டவர்களாய், நம்

१५ कम्बशिष्यान् समाहूय वाक्यमेतदुवाच ह ।
किमर्थमागता यूयं तस्माद्देशादिहानघाः ॥

१६. केन संप्रेषिता यत्तत्कारणं वदताशु मे ।
युष्माभिर्लोकनाथस्य शठारातेर्महात्मनः ॥

१७. अपराधोऽधुना वत्साः किमर्थं कारितो महान् ।
तस्य तद्वचनं श्रुत्वा कम्बशिष्यास्तमब्रुवन् ॥

१८. कम्बो नाम महातेजाः कविराट् वर्ततेऽनघ ।
तस्यासंस्त्रिशतं शिष्याः महात्मनः कवीश्वराः ॥

१९. किरीटधारिणस्सर्वे विद्वत्सिंहासनाधिपाः ।
विद्वन्मकुटरत्ननीराजितपदाम्बुजाः ॥

---

மாழ்வாருடைய திருச்சின்ன முழக்கத்தைச் சடக்கெனத் தடை செய்தனர். அந்தச் செய்தியைக் கேட்டு வியப்புற்ற மதுரகவியாழ்வார் கம்பரின் சிஷ்யர்களை அழைத்து "குற்ற மற்றநீங்கள் மதுரையிலிருந்து எதற்காக இங்கு வந்திருக்கி றீர்கள்? எவரால் அனுப்பப்பட்டு வந்திருக்கிறீர்கள்? பிள்ளை களே! லோகநாதரும், மஹாத்மாவான சடகோபர் விஷ யத்தில் இப்போது உங்களால் எக்காரணத்தினால் இந்தப் பெரிய அபசாரம் இழைக்கப்பட்டது? நீங்கள் திருச்சின்ன முழக்கத்தைத் தடைசெய்ததற்குக் காரணத்தை உடனே எனக்குச் சொல்லுங்கள்" என்று உரைத்தார். மதுரகவியாழ் வாருடைய அவ்வார்த்தையைக் கேட்டு, கம்பரின் சிஷ்யர் கள் "குற்றமற்ற அந்தணர் தலைவரே! பெரும் புகழாளரான கம்பர் என்னும் கவிராஜர் இப்போது வாழ்கிறார். அவருக்கு மஹாத்மாக்களான முந்நூறு சிஷ்யர்கள் உள்ளனர். அவர்கள் அனைவருமே கவிஞர் தலைவர்கள்; (அதற்கு அடையாளமாக) கிரீடம் தரிப்பவர்கள். புலவர் சிங்காஸனத்தில் ஏறியிருப் பவர்கள். மற்ற புலவர்களின் கிரீடரத்னங்களாலே ஆரத்தி யெடுக்கப்பட்ட திருவடித் தாமரைகளை உடையவர்கள்;

२०. सर्वद्राविडशास्त्राब्धिपारगो यो महीतले ।
तस्य प्रेष्या वयं देशांश्चरन्तो निखिलान् सदा ॥

२१. शासनादधुना देशमिमं प्राप्ता द्विजर्षभ ।
द्राविडाम्नायदेवोऽयं पराङ्कुश इतीव च ॥

२२. अश्रावि काहलीनादो ह्यद्यास्माभिः पुरेऽत्र हि ।
विद्यमाने कविश्रेष्ठे कम्बेऽस्माकं गुरूत्तमे ॥

२३. द्राविडाम्नायदेवत्वमन्येषां कथमर्हति ।
निर्जित्य कवनेनैव कम्बं कविमहीपतिम् ॥

२४. य आरोहेच्छङ्खपीठं तस्यैवार्हति तद्यशः ।
तदङ्गीकृत्य वचनं तेषां स मधुरः कविः ॥

---

இவ்வுலகில் தமிழ் நூற்கடலில் கரைகண்டவரான அக்கம்பருடைய தாஸர்களான நாங்கள் அவருடைய ஆணையாலே எப்போதும் பல நாடுகளில் ஸஞ்சரிப்பவர்களாய், இப்போது இந்த நாட்டிற்கு வந்திருக்கிறோம். 'தமிழ் வேதம் கண்ட பெருமாள் பராங்குசர்' என்னும் இந்தத் திருச்சின்னமுழக்கம் இன்று இவ்வூரில் இவ்விடத்தில் எங்களால் கேட்கப்பட்டது. எங்களுடைய தலைசிறந்த குருவாய், கவிஞர் தலைவரான கம்பர் இருக்கும்போது 'தமிழ் வேதம் கண்ட பெருமாள்' என்னும் பெருமை வேறு எவருக்குப் பொருந்தும்? கவிச்சக்கரவர்த்தியான கம்பரைக் கவிபாடுவதில் வென்று சங்கப்பலகையில் ஏறுபவர்க்கே அப்புகழ் பொருந்தும்'' என்று கூறினார்கள்.

## மதுரகவிகளின் பதில்

24*—29. மதுரகவியாழ்வார் அந்தப் புலவர்களின் அவ்வார்த்தையை ஏற்றுக்கொண்டு, அக்கம்பசிஷ்யர்களை

२५. कम्बप्रेष्यान् समालोक्य व्याजहार वचः शुभम् ।
युष्माभिर्यद्वचः प्रोक्तं तत्सत्यं साधुसंमतम् ॥

२६. शठारिरस्मदाचार्यो न च कुत्रापि गच्छति ।
दिव्यसूक्तिं शठारातेः पत्रिकायां विलिख्य च ॥

२७. प्रदास्याम्यद्य युष्माकं तामादाय तदन्तिकम् ।
गत्वा कम्बाय वृत्तान्तं सम्यक् ब्रूतेदमद्य नः ॥

२८. शङ्खपीठं यदि वहेत् शठजित्पत्रिकां तदा ।
विद्यते किल तत्कीर्तिः शठारेर्लोकविश्रुता ॥

२९. द्राविडाम्नायदेवत्वसूचकी नान्यथा भवेत् ।
इत्येवं निर्णयं कृत्वा प्रददौ पत्रिकां तदा ॥

---

பார்த்து ''நீங்கள் சொன்ன வார்த்தை உண்மையானதும் நல்லோர்கள் இசையக்கூடியதும் ஆகும். எங்களுடைய ஆசார்யரான சடகோபர் வெளியில் எங்கும் எழுந்தருள மாட்டார். அந்த நம்மாழ்வாருடைய ஒரு ஸ்ரீஸூக்தியை ஓர் ஓலையில் எழுதி உங்களிடம் கொடுக்கிறேன். அதை எடுத்துக்கொண்டு கம்பரிடம் சென்று அவரிடம் இங்கு நடந்த செய்தி அனைத்தையும் நன்கு கூறுங்கள். இந்த சடகோபருடைய ஸூக்தியைக் கொண்ட ஓலையைச் சங்கப் பலகை தாங்கியதாகில், அப்போது நம்மாழ்வாரின் கீர்த்தி யானது அவர் தமிழ் வேதம் கண்ட பெருமாள் என்பதையும் காட்டுவதாய் உலகெங்கும் பரவும். அவ்வோலையை அப் பலகை தாங்கவில்லை என்றால் இக்கீர்த்தி அவருக்கு ஸித்₃தி₄க்காது என்னும் மங்க₃ளமான வார்த்தையைக் கூறினர். இப்படி நம்மாழ்வாரின் பெருமையை உறுதிப்படுத்தும் நிர்ணயத்தைச் செய்து அந்த ஓலையை அவர்களிடம் கொடுத்தார் மது₄ரகவிகள்.

३०. तामादायाञ्जसा सर्वे शिष्याः कम्बान्तिकं ययुः ।
तद्वृत्तान्तं निवेद्याथ ददुः कम्बाय पत्रिकाम् ॥

३१. वेदान्तिन्! पाण्ड्यदेशे तु मधुरानगरीवरे ।
शङ्खपीठमिति ख्यातं विद्वत्पीठं महद्वरम् ॥

३२. यदस्ति तत्समाक्रान्तं कवीनां त्रिशतेन च ।
जितविद्वद्गण धीरं तं पीठं वहति ध्रुवम् ॥

३३. अन्यं प्रपातयेच्छीघ्रं विद्यापीठं न संशयः ।
पीठे तस्मिंस्तदा कम्बः शठजित्सूक्तिपत्रिकाम् ॥

३४. वेदान्तिन्! द्राविडकविः त्रिशतेन विराजिते ।
मध्ये संस्थापयामास कविराजो महायशाः ॥

३५. तत्पीठं पातयित्वाशु कवीनां त्रिशतं तदा ।
शिरसा धारयामास सहसा पत्रिकां कवेः ॥

---

## திருவாய்மொழி சங்கப் பலகையேறுதல்

30 – 35. அந்த் ஓலையை எடுத்துக்கொண்டு கம்பருடைய சிஷ்யர்கள் விரைவிலேயே அவரிடம் வந்தார்கள். நடந்த செய்தியனைத்தையும் விரிவாக விண்ணப்பித்து ஓலையை அவரிடம் கொடுத்தார்கள். வேத₃ாந்தியே! பாண்டிய தேசத்தில் தலைசிறந்த நகரமான மதுரையில் சங்கப் பலகை என்று புகழ்பெற்ற மிகச்சிறந்த வித்₃வத்பீட₂ம் ஒன்று உள்ளது. அதில் முந்நூறு கவிகள் வீற்றிருந்தனர். புலவர்களையெல்லாம் ஜயித்த பேரறிவாளனையே அந்தப் பலகை உறுதியாகத் தாங்கும். மற்ற எவரையும் அந்த வித்₃யாபீட₂ம் விரைவில் கீழே தள்ளிவிடும். நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்தி எழுதப்பெற்ற ஓலையை, தமிழ்க்கவியும், கவிஞர் தலைவரும், பெரும்புகழாளருமான கம்பர் முந்நூறுகவிகள் ஏறியிருக்கும் அந்தச் சங்கப்பலகையின் நடுவில் வைத்தார். அந்தப் பலகையானது அப்போதே அந்த முந்நூறுகவிகளையும் கீழே தள்ளிவிட்டு மதுரகவியின் அந்த ஓலை ஒன்றையே தாங்கிநின்றது.

३६. कुरुकानगरं प्राप्य कम्बः शठजितं कविः ।
भक्त्या प्रणम्य तं चिञ्चातरोर्मूले समास्थितम् ॥

३७. कारिसूनुं महात्मानं द्राविडाम्नायदैवतम् ।
शठारिविषया गाथाः काश्चित्कृत्वा तदादरात् ॥

३८. विदधे सहसा धीमानपराधक्षमापणम् ।
कवीनां त्रिशतं सम्यक् तत्तथैव तदादरात् ॥

३९ शठारिविषया गाथा बह्वीः सम्यक् पृथक् पृथक् ॥
चकार सहसा भक्त्या ह्यपराधक्षमापणम् ॥

४०. गुरुं प्रकाशयेद्धीमानिति शास्त्रोक्तमार्गतः ।
शठजिद्वैभवं लोके महान्तं लोकविश्रुतम् ॥

---

## கம்பரும் நம்மாழ்வாரும்

36—39. அறிவாளியாய், கவியாகிற கம்பர் திருக்குருகூரை அடைந்து திருப்புளியாழ்வாரின் அடியில் எழுந்தருளியிருப்பவராய், காரிகுமாரராய், மஹாத்மாவாய், தமிழ் வேதம்கண்டபெருமாளான நம்மாழ்வாரை ப₄க்தியுடன் வணங்கி, அன்புடன் நம்மாழ்வாரைப்பற்றிய கவிதைகள் சிலவற்றையும் தன் குற்றத்திற்கு மன்னிப்பு வேண்டி உடனே இயற்றினர். அவ்வண்ணமே அந்த முந்நூறு கவிகளும் நம்மாழ்வார்விஷயமான பலகவிதைகளை உடனே தனித்தனியாக அன்புடன் நன்கு இயற்றினர்கள். இதன் மூலம் நம்மாழ்வாரிடம் ப₄க்தியுடன் தம்முடைய அபராத₄த்திற்கு மன்னிப்பு வேண்டினர்கள்.

## திவ்யப்ரபந்த வைபவம்

40— 55.—"அறிவாளியாய் இருப்பவன் ஆசாரியனை உலகறியச் செய்யவேண்டும்" என்று ஶாஸ்த்ரத்தில்

४१. सम्यक् प्रकाशयन् भक्तया सर्वत्र मधुरः कविः ।
लोकसंरक्षण कुर्वन् कञ्चित्कालं महायशाः ॥

४२. कुरुकायामुवासार्यो वर्धयन् विष्णुदर्शनम् ।
शठारिप्रमुखैर्दिव्यैर्योगिभिस्तत्त्वदर्शिभिः ॥

४३. कृतं मुख्यतमं दिव्यं प्रबन्धं मोक्षकारणम् ।
नारायणपरं सर्वमाद्यं सारतमं विदुः ॥

४४. शुद्धसत्त्वमयं भक्तया शुद्धसत्त्ववतो गुरोः ।
एवं प्रबन्धमभ्यस्य वेदान्तिन्निखिला जनाः ॥

४५. सम्यग्विज्ञाततत्त्वार्थाः नारायणपरायणाः ।
निर्मुक्तमायासंसारा ययुर्विष्णोः परं पदम् ॥

---

சொல்லியபடி நம்மாழ்வாருடைய உலகெங்கும் பரவி நிற்கும் பெரிய வைப₄வத்தை ப₄க்தியுடன் நாடெங்கும் நன்கு பிரசாரம் செய்து கொண்டு பெரும் புகழாளரான மதுர கவியாழ்வார் உலகத்தை ரக்ஷிப்பவராய், ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்தை வளர்ப்பவராய், திருக்குருகூரில் சில காலம் வாழ்ந்து வந்தார். நம்மாழ்வார் முதலான உண்மையைக் கரைகண்ட ஆழ்வார்களாலே அருளிச்செய்யப்பட்ட தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்கள் ப்ரமாணங்களில் முக்கியமானவையாய், மோக்ஷத்திற்குக் காரணமாய், நாராயணன் பெருமையைக் கூறுபவையாய், மிகவும் ஸாரமானவற்றில் தலைசிறந்தவை யாய் உள்ளவை என்று அறிவாளிகள் அறிகின்றனர். வேதாந்தியே! சுத்தஸத்வமயமான இந்த திவ்யப்ரபந்தங் களை சுத்தஸாத்விகரான ஓர் ஆசார்யரிடமிருந்து கற்று, எல்லா ஜனங்களும் உண்மைப்பொருளை அறிந்தவர்களாய், நாராயணனையே மேலான ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும்

४६. महोपकारो लोकानां कृतोऽयं दिव्यसूरिभिः ।
मुमुक्षवोऽभवन् सर्वे स्त्रियः शूद्रास्तथेतरे ॥
४७. सर्ववेदान्तसारार्थान् समुद्धृत्याखिलान् परान् ।
अगस्त्यभाषारूपेण द्राविडेन कृताः पराः ॥
४८. सर्वलोकोपकाराय प्रबन्धा दिव्यसूरिभिः ।
तस्मात् प्रबन्धात् सञ्जातसम्यग्ज्ञानास्तदाऽभवन् ॥
४९. मुमुक्षवोऽखिलाः शीघ्रं मनुजा वीतकल्मषाः ।
अतो द्राविडवेदान्तं सम्यग्ज्ञानैकसाधनम् ॥
५०. ज्ञानं विना न कस्यापि मोक्षो भवति वै किल ।
तस्मात् द्राविडवेदान्तपठनं मोक्षहेतवे ॥
विद्वन्नवश्यं कर्तव्यं मुमुक्षोर्वैष्णवस्य हि ॥

---

கொண்டவர்களாய், மாயையாகிற ப்ரக்ருதியின் ஸம்ப₃ந்த₄த்தால் ஏற்படும் ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டவர்களாய் விஷ்ணுவின் பரமபதத்தை அடைந்தனர். ஆழ்வார்களாலே உலகங்களுக்குச் செய்யப்பட்ட பெரிய உபகாரமாகும் இது. ஸ்திரீகளும் ஶூத்₃ரர்களும் மற்றவர்களுமாகிய அனைவரும் இந்த திவ்யப்ரபந்தங்களால் மோக்ஷத்தில் விருப்பமுடையவர்களாக ஆனார்கள். எல்லா வேதாந்தங்களிலுமுள்ள எல்லா ஸாரார்த்தங்களையும் திரட்டி எடுத்து, அகஸ்தியரால் தோற்றுவிக்கப்பெற்ற தமிழ் பாஷையாலே அனைத்துலகங்களின் உபகாரத்திற்காக மேலான திவ்ய ப்ரபந்தங்கள் அருளிச்செய்யப்பட்டன. அதனால் எல்லா மனிதர்களும் அந்த திவ்யப்ரபந்தங்களிலிருந்து உண்மை அறிவுபெற்றவர்களாய் விரைவிலேயே மோக்ஷத்தில் விருப்பமுடையவர்களாக ஆனார்கள். அறிவாளியான நஞ்சீயரே! இக்காரணத்தால் தமிழ் வேதம் நல்ல அறிவு உண்டாவதற்குச் சிறந்த ஸாதனமாய் இருக்கிறது. எவனுக்கும் ஞானமில்லாமல் மோக்ஷம் கிடைக்காதன்றோ.

५१. न शब्दशास्त्राभिरतस्य मोक्षो न चैव रम्यावसथप्रियस्य ।
न भोजनाच्छादनतत्परस्य न लोकचित्तग्रहणे रतस्य ॥

५२. एकान्तशीलस्य दृढव्रतस्य पञ्चेन्द्रियप्रीतिनिवर्तकस्य ।
अध्यात्मविद्यारतमानसस्य मोक्षो ध्रुवो नित्यमहिंसकस्य ॥

५३. शमदमनियतात्मा सर्वभूतानुकम्पी
विषयसुखविरक्तो ज्ञानतृप्तः प्रशान्तः ।
अनियतनियतात्मा नैव हृष्टो न रुष्टः
प्रवसित इव गेहे वर्तते यः स मुक्तः ॥

---

ஆகையால், மோக்ஷத்தின் பொருட்டு முமுக்ஷுவான வைஷ்ணவன் திராவிட வேதாந்தத்தை அவசியம் கற்க வேண்டும். "வ்யாகரண ஶாஸ்த்ரத்தில் மிகவும் ஈடுபட்டவனுக்கோ, அழகிய வீட்டில் மிகுந்த பற்றுக்கொண்டவனுக்கோ, நல்ல போ₄ஜநம் வஸ்த்ரம், முதலானவற்றை மிகவும் விரும்புகிறவனுக்கோ, உலகினரின் நெஞ்சை ஈர்க்க வேண்டும் என்று நினைப்பவனுக்கோ மோக்ஷம் கிட்டாது. தனிமையை விரும்புகின்றவனாய், நல்லொழுக்கத்தில் உறுதியாயிருப்பவனாய், புலனின்பங்களிலிருந்து நீங்கியவனாய், ஆத்மபரமாத்ம வித்₃யைகளில் ஈடுபடுபவனாய், எவ்வுயிரையும் துன்புறுத்தாமலிருப்பவனுக்கே உறுதியாய் மோக்ஷம் கிட்டும். உள் இந்திரியங்களையும் வெளி இந்திரியங்களையும் அடக்கியவனாய், அனைத்துயிர்க்கும் இரக்கமுள்ளவனாய், ஶப்₃த₃ாதி₃விஷய இன்பங்களில் பற்றில்லாதவனாய், ஞானத்தைக் கொண்டே திருப்தியடைபவனாய், மிகவும் சாந்தியுடையவனாய், அநித்யமான பொருள்களிலிருந்து நெஞ்சைத்திருப்பியவனாய், மிகுதியான இன்பமோ கோபமோ அடையாதவனாய், வீட்டில் வாழ்ந்த போதிலும் காட்டிலிருப்பவனைப் போலே பற்றற்றவனாக எவன் வாழ்கிறானோ அவனே முக்தியடைவான்" என்று சொல்லப்பட்டரீதியில் இவ்வுலகில் எல்லா ஜனங்களையும்

५४. वेदान्तिन्! दशभिर्दिव्यैः सूरिभिर्लोकरक्षणम् ।
एवं कृतं बहुविधं शठकोपादिभिर्भुवि ॥

५५. अनादिसिद्धं बहुभिः एतद्वैष्णवदर्शनम् ।
ततो जगत्यां मधुरकविना वर्धितं मुने ॥

५६. केनचित्कारणेनाथ चैतद्वैष्णवदर्शनम् ।
कञ्चित्कालं तु वेदान्तिन् न प्रकाशमिव स्थितम् ॥

५७. ततः श्रीनाथमुनिना सम्यगेव प्रकाशितम् ।
शठकोपस्य शिष्येन तदिदं विष्णुदर्शनम् ॥

५८. श्रीनाथमुनिशिष्येण तत् पद्माक्षेण रक्षितम् ।
ततः पद्माक्षशिष्येण राममिश्रेण रक्षितम् ॥

५९. एतद्वैष्णवसिद्धान्तं वेदान्तिन् देशिकाज्ञया ।
यामुनार्थं ततः सम्यक् षण्मासाननुसृत्य च ॥

---

ஆக்கி, நம்மாழ்வார் முதலான பத்து ஆழ்வார்களும் அநாதியாய் இருக்கும் இந்த வைஷ்ணவ தரிசனத்தின் மூலம் இந்த உலகைப் பலவிதமாக ரக்ஷித்தார்கள்.

## ஆசார்ய பரம்பரை

55*—66.— நஞ்சீயரே! மதுரகவியாழ்வாரால் இவ்வுலகில் வளர்க்கப்பட்ட இந்த வைஷ்ணவதரிசனம் அவருக்குபின் சில காரணங்களால், மிகுந்த பிரசாரமில்லாமல் ஆகிவிட்டது. அதற்குப்பின் நம்மாழ்வாருடைய சீடரான ஸ்ரீ நாதமுனிகளாலே இந்த வைஷ்ணவ தரிசனம் நன்கு பிரசாரம் செய்யப்பெற்றது. அவருக்குப்பின் ஸ்ரீ நாதமுனிகளின் சிஷ்யரான புண்டரீகாக்ஷர் என்னும் திருநாமமுடைய உய்யக்கொண்டாரால் இது ரக்ஷிக்கப்பட்டது. அவருக்குப்பின் உய்யக்கொண்டாருடைய சீடரான ராமமிச்ரரான மணக்கால் நம்பியாலே தம் ஆசார்யருடைய நியமனத்தாலே இந்த வைஷ்ணவஸித்₃த₄ாந்தம் ரக்ஷிக்கப்பட்டது.

६०. राममिश्रो यामुनाय मतमेतत् ददौ किल ।
तेनैव यामुनार्येण तदेतद्विस्तृतं क्वचित् ॥

६१. यामुनाचार्यशिष्यैश्च महापूर्णादिभिर्महान् ।
अयं वैष्णवसिद्धान्तो यतीन्द्राय समर्पितः ॥

६२. ततः शेषावतारेण यतीन्द्रेण महात्मनः ।
चतुस्समुद्रपर्यन्तं भूम्यां सर्वत्र चानघ ॥

६३. अयं वैष्णवसिद्धान्तो रूढमूलः प्रकाशितः ।
यतीन्द्रानुग्रहादेव गोविन्दार्यात्समागतम् ॥

६४. रामानुजार्यसिद्धान्तं मत्तस्त्वं प्राप्तवान् किल ।
त्वया चैव भविष्यद्भिर्गुरुभिः प्रचरिष्यति ॥

---

நாதமுனிகளின் பேரரான] யாமுநாசார்யரை ஆறு மாதங்கள் நன்கு அநுஸரித்திருந்து மணக்கால் நம்பி அந்த யாமுநாசார்யருக்கு இந்த மதத்தை அளித்தாரன்றோ. அந்த யாமுநாசார்யராலே இந்த மதம் சிற்சிலவிடங்களில் பரப்பப்பட்டது. யாமுநாசார்யருடைய சிஷ்யர்களான பெரியநம்பி முதலானவர்களாலே பெரிதான இந்த வைஷ்ணவஸித்₃த₄ாந்தம் யதிராஜரிடம் சேர்க்கப்பட்டது. குற்றமற்ற வேதாந்தியே! ஆதிசேஷனின் அவதாரமாய், மிகப்பெரியவரான யதிராஜராலே இந்த உலகில் நாலு புறமும் உள்ள கடலளவும் அமைந்த எல்லா இடங்களிலும் இந்தத்தரிசனம் பரப்பப்பட்டது. இந்த வைஷ்ணவஸித்₃த₄ாந்தம் அவராலேயே வேரூன்றும்படி வெளிப்படுத்தப் பட்டது. அந்த யதிராஜருடைய அருளாலே அவருடைய சிஷ்யரான கோவிந்தர் என்னும் எம்பாரிடமிருந்து என்னிடம் வந்த ஸ்ரீ ராமாநுஜஸித்₃த₄ாந்தத்தை என்னிடமிருந்து நீர் அடைந்தீரன்றோ. உம்மாலும் உமக்குப்பின்

६५. अयं रामानुजाचार्यसिद्धान्तः सकलावनौ ।
दृढमव्याहतः सम्यगाकल्पं च न संशयः ॥

६६. श्रीदिव्यसूरिचरितं यत्पृष्टं भवताऽनघ ।
तत्सर्वं सम्यगेवोक्तं मया गुरुकटाक्षतः ॥
किमन्यच्छ्रोतुकामोऽसि तद्ब्रवीमि महामते ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे शठजिद्दिव्यसूक्तिपत्रिका-
कम्बशंखपीठाधिरोहणं नाम षडुत्तरशततमोऽध्यायः ॥

सप्तोत्तरशततमोऽध्यायः ॥

१. असद्यतिः प्रणम्याथ भट्टार्यं भक्तिपूर्वकम् ।
पूर्वाचार्यकथां पुण्यां परिपप्रच्छ देशिकम् ॥

---

தோன்றப்போகின்ற ஆசாரியர்களாலும் இந்த ராமாநுஜ ஸித்₃த₄ாந்தம் கல்பத்தின் இறுதிவரையில் உலகனைத்திலும் உறுதியாகவும் தடையற்றதாகவும் விளங்கப் போகிறது என்பதில் ஐயமில்லை. நீர் கேட்க விரும்பிய ஆழ்வார்களுடைய சரித்திரம் முழுவதும் ஆசார்யகடாக்ஷத்தாலே என்னாலே நன்கு சொல்லப்பட்டது. பேரறிவாளரே! நீர் இன்னும் கேட்க விருப்புகின்றவற்றையும் கூறுகின்றேன் கேளும்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் பட்டார்யவேதாந்தி ஸம்வாதத்தில் நம்மாழ்வாருடைய ஸ்ரீ ஸூக்தி சங்கப்பலகை ஏறியதைக் கூறும் நூற்றாறாவது அத்தியாயம் நிறைவுற்றது.

## நூற்றேழாவது அத்தியாயம்

### நாதமுனி தீர்த்தயாத்திரை

### நஞ்ஜீயரின் கேள்வி

1-5. வேத₃ாந்தி நஞ்ஜீயர் ஆசார்யரான ஸ்ரீபராசர பட்டரை பக்தியுடன் வணங்கி, புண்யமான பூர்வாசார்

२. को वा नाथमुनिः स्वामिन्! कुत्रत्यः कस्य चात्मजः ।
दिव्यप्रबन्धा लोकेऽस्मिन् अप्रकाशा यतोऽभवन् ॥

३. कथं प्रकाशिता नाथमुनिना तेऽखिलाः पुनः ।
अवतारं शठारातिः कल्यादौ कृतवान् किल ॥

४. त्रिसहस्रे गतेऽब्दानां तत्र नाथमुनिः स्मृतः ।
अवतारं हि मेदिन्यां कृतवानिति मे श्रुतम् ॥

५. तयोर्बभूव भट्टार्य गुरुशिष्यक्रमः कथम् ।
विशदं ब्रूहि मे विद्वन् सर्वज्ञ निखिलं हि तत् ॥

६. श्रुत्वा माधवदासस्य वचः परमसंमतम् ।
तस्मै हृष्टः तदाख्यानं भट्टार्यः सम्यगब्रवीत् ॥

---

யர்களைப் பற்றிய வரலாற்றைப் பின்வருமாறு கேட்கலுற்றார். ''ஆசார்யரே! நாதமுனி என்பவர் யார்? எந்த ஊரைச்சேர்ந்தவர்? யாருடைய பிள்ளை? இவ்வுலகில் மறைந்து போன திவ்யப்ரபந்தங்கள் அனைத்தும் நாதமுனியால் எப்படி வெளிப்படுத்தப்பட்டன? கலியுகத்தின் ஆதியிலேயே நம்மாழ்வார் அவதரித்தாரன்றோ; கலியுகம் பிறந்து மூவாயிரம் வருடங்களுக்குப் பிறகு நாதமுனி இவ்வுலகில் அவதரித்தாரென்று பெரியோர்களிடமிருந்து நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இவ்விருவருக்கிடையே ஆசார்யன் சிஷ்யன் என்னும் தொடர்பு எவ்வாறு ஏற்பட்டது? எல்லாம் அறிந்த பேரறிவாளரான தேவரீர் இவ்வனைத்தையும் அடியேனுக்குத் தெளிவாகக் கூறவேண்டும்.

## நாதமுனிகளின் அவதாரம்

6-10. மாதவர் எனப்படும் நஞ்ஜீயரின் அந்த மிகப் பொருந்திய கேள்வியைக் கேட்டு மிக உகந்தவரான பட்டர் அவருக்கு நாதமுனி சரித்திரம் பற்றி நன்கு விடைசொல்லலானார். தொண்டை மண்டலத்திற்கும், சோழ மண்டலத்

७. तुण्डीरचोलयोर्मध्ये मध्यदेश इति स्मृतः ।
वीरनारायणं नाम तत्रासीन्नगरं महत् ॥
८. कश्चिदीश्वरभट्टाख्यः तत्रासीत् ब्राह्मणोत्तमः ।
द्विशते च त्रिसाहस्रे चतुर्विंश्शतिन(क)ायुते ॥
९. कलौ युगे गतेऽब्दानां शोभकृन्नामके ततः ।
संवत्सरे ज्येष्ठमासे राकायां मित्रभे बुधे ॥
१०. अंशेन गजवक्त्रस्य विष्वक्सेनस्य मन्त्रिणः ।
जातो नाथमुनिस्तस्य विप्रस्य सुमहायशाः ॥
११. स तु नाथमुनिः श्रीमान् सर्वशास्त्रविशारदः ।
तेजस्वी ज्ञानसंपन्नो विष्णुभक्तिपरायणः ॥
१२. दिगन्तकीर्तिर्वेदान्तिन्! बभूव ब्राह्मणोत्तमः ।
तस्येश्वरमुनिर्नाम पुत्रोऽभूल्लोकविश्रुतः ॥

---

திற்கும் நடுவில் நடுநாடு என்று ஒருநாடு உள்ளது. அதில் வீரநாராயணபுரம் என்னும் பெரிய நகரம் உள்ளது. அந்த நகரத்தில் ஈச்வரபட்டர் என்னும் அந்தணர் தலைவர் வாழ்ந்து வந்தார். கலியுகத்தில் மூவாயிரத்து இரு நூற்று இருபத்துநாலு வருடங்கள் கழிந்த பின்பு 'சோப கிருத' என்னும் வருடத்தில் ஆனி மாதத்தில் பௌர் ணமி அன்று அனுஷநக்ஷத்திரத்தில் புதன் கிழமையில் சேனைமுதலியாரின் மந்திரியான கஜானனரின் அம்சமாக அந்த ஈச்வரபட்டர் என்னும் அந்தணருக்கு, பெரும் புகழாளரான நாத₂முனி பிள்ளையாகப் பிறந்தார்.

## மன்னனூர் கைங்கர்யம்

11-14. குற்றமற்ற வேதாந்தியே! ஜ்ஞான ப₄க்தி வைராக்யச் செல்வம் நிறைந்தவரும், எல்லா ஶாஸ்த் ரங்களையும் கரை கண்டவரும், மிகுந்த தேஜஸ் உடைய வரும், தலைசிறந்த ஜ்ஞானமுடையவரும், விஷ்ணுபக்தி யில் மிக்கவரும், உலகெங்கும் பரவிய புகழுடையவருமாக அந்தணர் தலைவரான அந்த நாத₂முனி விளங்கினார்.

१३. स च नाथमुनिः श्रीमान् वेदान्तिन्! भगवत्परः।
राजगोपालदेवस्य वीरनारायणे पुरे ॥

१४. कैङ्कर्याण्यनिशं कुर्वन् भक्त्या सर्वाणि चानघ ।
पितृपुत्रादिसहितो बहुकालमतिष्ठत ॥

१५. तस्य नाथमुनेस्सम्यक्कुटुम्बेन सहादगत् ।
संद्रष्टुं दिव्यदेशान् हि मतिरासीन्महामतेः ॥

१६. ततः कदाचिद्देवस्य सन्निधिं समुपेत्य सः ।
नत्वा श्रीराजगोपालं कृताञ्जलिरभाषत ॥

१७. परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥

---

அவருக்கு உலகெங்கும் புகழ்பெற்ற ஈச்வரமுனி என்பவர் பிள்ளையாய் இருந்தார். எம்பெருமானிடம் மிகவும் ஈடுபட்டவரான அந்த ஸ்ரீமந்நாதமுனி இந்த வீரநாராயணபுரத்தில் எழுந்தருளியிருக்கும் மன்னனாரான ராஜகோபாலப் பெருமாளுக்கு பக்தியுடன் எல்லாக் கைங்கர்களையும் செய்து கொண்டு தந்தை பிள்ளை முதலானவர்களோடு கூடியவராய், பல வருடங்கள் வாழ்ந்து வந்தார்.

## திவ்யதேசயாத்திரைக்கு விடைகொள்ளல்

15 - *20. பேரறிவாளரான அந்த நாதமுனிக்கு, குடும்பத்தோடு கூட திவ்ய தேசங்களை ஆர்வத்துடன் ஸேவிக்க வேண்டும் என்னும் எண்ணம் உண்டாயிற்று. அப்போது ஒருநாள் பெருமாள் கோயிலுக்குச் சென்று ராஜகோபாலனை வணங்கிக் கைகூப்பியவராய் "'நல்லவர்களைக்காப்பதற்காகவும், தீயவர்களை அழிப்பதற்காகவும், தர்மத்தை நிலைநிறுத்துவதன் பொருட்டும் ஒவ்வொரு யுகத்திலும் அவதரிக்கிறேன்' என்று தேவரீர் கீதையிலே

१८. इत्युक्तरीत्या भवता ह्यवतारा: पुरा कृता: ।
उत्तरे दिव्यदेशेषु येषु श्रीमधुरादिषु ॥

१९. इच्छामि सेवितुं सर्वान् मह्यमाज्ञा प्रदीयताम् ।
भगवान् राजगोपाल: तस्याङ्गीकृत्य तद्वच: ॥

२०. अनुज्ञां प्रददौ तद्वत्स तदा नाथयोगिने ।
अनुज्ञातस्ततस्तेन सकुटुम्बो महायशा: ॥

२१. प्रतस्थे नाथयोगीन्द्र: तदोदीचीं दिशं प्रति ।
महावराहं श्रीमुष्णे नित्यपुष्करिणीतटे ॥

२२. वसन्तं संप्रणम्याशु ततो गोपपुरं ययौ ।
स्नात्वाथ वामने तीर्थे नत्वा तत्र त्रिविक्रमम् ॥

---

அருளிச்செய்தபடி ஸ்ரீ மதுரை முதலான பலவடநாட்டுத் திவ்யதேசங்களிலே தேவரீரால் பல அவதாரங்கள் எடுக்கப் பட்டன. அவையனைத்தையும் ஸேவிக்க விரும்புகிறேன். அடியேனுக்கு விடைகொடுத்தருளவேண்டும்" என்று வேண்டினார். மன்னனாராகிற அவ்வெம்பெருமானும் அந்த நாதமுனியுடைய அவ்வார்த்தையை ஏற்றுக்கொண்டு அவர் விரும்பியது போலவே அப்போதே அவருக்கு விடைகொடுத்தருளினான்.

## நடுநாடு தொண்டைநாடு திருப்பதிகள் மங்களாசாஸனம்

20*—24. அப்பெருமானால் விடைகொடுக்கப் பெற்று, பெரும் புகழாளரான நாதமுனிகள் குடும்பத்துடன் கூடியவராய் வடக்குத் திசையை நோக்கிப் புறப் பட்டார். முதலில் ஸ்ரீமுஷ்ணத்தில் நித்ய புஷ்கரிணிக் கரையில் எழுந்தருளியிருக்கும் மஹாவராஹப் பெருமானை ஸேவித்து விட்டு, உடனே திருக்கோவலூருக்கு எழுந்தருளினார். அங்குள்ள வாமன தீர்த்தத்தில் நீராடி அங்கு எழுந்தருளியிருக்கும் திரிவிக்கிரமப்

२३. सकुटुम्बो महातेजाः प्रतस्थे घटिकाचलम् ।
नत्वाऽमृतफलं तत्र नृसिंहं घटिकाचले ॥

२४. तुण्डीरमण्डले तत्र दिव्यदेशान् प्रणम्य तान् ।
सर्वान्क्रमेण सद्भक्त्या तथोदीचीं दिशं ययौ ॥

२५. उत्तरे प्रथमं नत्वा वेङ्कटाद्रौ रमासखम् ।
अहोबिले गरुडाद्रौ हिरण्यासुरमर्दनम् ॥

२६. विठ्ठलं पाण्डुरंगे तु श्रीकूर्मे कूर्मनायकम् ।
मधुरायां बालकृष्णं मायायां मधुसूदनम् ॥

२७. गोवर्धने गोपवेषं भवघ्नं पद्मलोचनम् ।
गोमन्तपर्वते शौरिं हरिद्वारे जगत्पतिम् ॥

---

பெருமானை ஸேவித்துவிட்டு மஹாதேஜஸ்வியான நாதமுனி குடும்பத்துடன் க₄டிகாசலத்திற்குப் புறப்பட்டார். கடிகைத் தடங்குன்றின் மேலிருக்கும் அக்காரக்கனியான நரசிங்கப்பெருமானை வணங்கி, தொண்டைமண்டலத்தி லுள்ள திருவெஃகா முதலான எல்லாத்திவ்யதேசங்களையும் முறைப்படி பக்தியுடன் ஸேவித்து அதற்குப்பின் வடக்குத்திசை நோக்கிப்புறப்பட்டார்.

## வடநாட்டு யாத்திரை

25-32. வடநாட்டு யாத்திரையில் முதலில் அலர் மேல்மங்கை உறைமார்பனைத் திருவேங்கட மலையிலும், க₃ாருட₃ாத்₃ரியான அஹோபி₃லத்தில் ஹிரண்யனை அழித்த நரசிங்கனையும், பண்டரிபுரத்தில் பாண்டுரங்க விட்டலனையும், ஸ்ரீ கூர்மத்தில் கூர்மநாயகனையும், வட மதுரையில் பாலகிருஷ்ணனையும், மாயாபுரியில் மது₄ஸூத₃னனையும் கோவர்த்தனத்தில் ஸம்ஸாரத்தை அழிக்கும் தாமரைக் கண்ணனை ஆயனையும், கோமந்த பர்வ

२८ गङ्गासागरके विष्णुं चित्रकूटे तु राघवम् ।
वृन्दावने नन्दसूनुं गोविन्दं कालियह्रदे ॥

२९. नारायणं बदर्याख्ये नैमिशे हरिमव्ययम् ।
सालग्रामं हरिक्षेत्रे ह्ययोध्यायां रघूद्वहम् ॥

३०. एवमादिस्थलान्यत्र चोत्तरे विश्रुतानि च ।
सर्वाणि संप्रणम्याशु यमुनातीरमभ्यगात् ॥

३१. यमुनां चातिगंभीरां नानावर्तसमाकुलाम् ।
दृष्ट्वा प्रहृष्टस्तत्तीरे ग्रामं गोवर्धनाभिधम् ॥

३२. संप्राप्य तत्र देवेशं वसन्तं कृष्णमद्भुतम् ।
प्रणम्य सुतरां हृष्टः स बभूव महायशाः ॥

---

தத்தில் ஶௌரியையும், ஹரித்₃வாரத்தில் ஜக₃த்பதியையும், கங்காஸாகரத்தில் விஷ்ணுவையும், சித்ரகூடத்தில் ராகவனையும், ப்₃ருந்தாவனத்தில் நந்தகுமாரனையும், காளியன் மடுவில் கோவிந்தனையும், பதரிகாஶ்ரமத்தில் நாராயணனையும், நைமிசாரண்யத்தில் அழிவற்ற ஹரியையும், ஹரிக்ஷேத்ரமான ஸாளக்ராமத்தில் ஸாளக்ராமப்பெருமானையும் அயோத்தியில் ரகுநந்தனனையும், இதுபோலவே வடநாட்டில் புகழ்பெற்ற மற்ற விஷ்ணு ஸ்தலங்கள் அனைத்தையும் விரைந்து ஸேவித்துவிட்டு யமுனைக்கரைக்கு வந்து சேர்ந்தார். மிகவும் ஆழமுள்ளதும் பல சுழிகள் நிறைந்ததுமான யமுனையைக் கண்டு உகந்து பெரும்புகழாளரான நாத₂முனி அந்த யமுனைக் கரையில் 'கோவர்த்தனம்' என்னும் கிராமத்தை அடைந்து அங்குள்ள ஆச்சரியமான வசந்த கிருஷ்ணன் என்னும் பெருமானை வணங்கி மிகவும் உகப்படைந்தார்.

३३. हृद्यत्वात्तस्य देशस्य सौन्दर्यातिशयाद्धरेः ।
तत्र गोवर्धनग्रामे नित्यवासमथाकरोत् ॥
३४. गोवर्धनग्रामपतेः विष्णोः कैङ्कर्यमन्वहम् ।
कुर्वन्नाथमुनिस्तत्र कञ्चित्कालमुवास सः ॥
३५ ततः श्रीराजगोपालो वीरनारायणाधिपः ।
तस्य नाथमुनेः स्वप्ने प्रसन्नः कृपया तदा ॥
३६. वीरनारायणपुरमायाहीत्यभ्यभाषत ।
ततः स्वप्नात्समुत्थाय विस्मितो नाथयोगिराट् ॥
३७. पित्रा पुत्रेण चालोच्य गत्वा श्रीकृष्णसन्निधिम् ।
प्रणम्य स्वप्नवृत्तान्तं निवेद्य हर्ये तदा ॥

---

## கோவர்த்தனவாஸம்

33—34 அந்த கோவர்த்தனமென்னும் திவ்யதேசம் நெஞ்சை ஈர்ப்பதாக இருந்தபடியாலும், அங்கு எழுந்தருளி யிருந்த எம்பெருமான் அழகுமிக்கவராயிருந்தபடியாலும் அந்த கோவர்த்தன கிராமத்திலேயே நாதமுனிகள் சில காலம் வாழ்ந்தார். அந்த கோவர்த்தன கிராமத்தில் எழுந் தருளியிருந்த எம்பெருமானுக்கு தினந்தோறும் கைங்கர்யம் செய்து கொண்டு நாதமுனி சில்காலம் எழுந்தருளி யிருந்தார்.

## மன்னனுரின் நியமனம்

35-*38. அதற்குப்பின் வீரநாராயணபுரத்தின் ஸ்வாமி யான ஸ்ரீராஜகோபாலன் அந்த நாதமுனியின் ஸ்வப்னத்தில் அருளாலே தோன்றி ' வீரநாராயணபுரத்திற்கு வருவாயாக'' என்று நியமித்தார். அந்தக் கனவிலிருந்து விழித் தெழுந்து வியப்புற்ற அறிவாளியான நாதமுனிகள் தந்தை யோடும் தனயனோடும் ஆலோசித்து, கோவர்த்தன கிருஷ்ணனின் ஸந்நிதிக்குச் சென்று வணங்கி, அப்பெருமானிடம்

३८. तेनानुज्ञापितो धीमान् वीरनारायणं ययौ ।
कृष्णप्रसादपाथेयः सकुटुम्बो महायशाः ॥

३९. काशीमार्गेण वेदान्तिन्! जगन्नाथमवाप सः ।
सप्तसप्तसु लोकेषु लोकालोके चराचरे ॥

४०. नास्ति नास्ति समं क्षेत्रमुत्तमं पुरुषोत्तमात् ।
एतादृशप्रभावं तं संप्राप्य पुरुषोत्तमम् ॥

४१. जगन्नाथं तत्र नत्वा ययौ सिंहाचलं ततः ।
अहो वीर्यमहो शौर्यमहो बाहुपराक्रमः ॥

४२. नारसिंहं अहं वन्दे ह्यहोबिलमहोबलम् ।
इत्येवं संप्रणम्यार्यो नारसिंहं महायशाः ॥

---

கனவில் கண்டதை விண்ணப்பித்து, அப்போதே அவனல் விடைகொடுக்கப் பெற்றவராய் வீரநாராயணபுரத்துக்குப் புறப்பட்டார்

### புருஷோத்தம ஸிம்ஹாசல மங்களாசாஸனம்

38*-*41. வேதாந்தியே! கண்ணனுடைய அருளையே கட்டுச் சோருகக்கொண்டவராய், குடும்பத்தோடு கூடிய வராய், பெரும்புகழாளரான நாதமுனிகள் காசிவழியாகப் புரீ ஜகந்நாத க்ஷேத்ரத்தை அடைந்தார். "ஈரேழு பதிஞலு லோகங்களிலும், பிரகாசிக்கும் ஸ்தானங்களிலும், அசைவனவும் அசையாதனவுமான இடங்களிலும் புருஷோத்தமக்ஷேத்ரத்தைக் காட்டிலும் மேலான க்ஷேத்ரம் இல்லவே இல்லை" என்று புராணங்களில் வர்ணிக்கப்படுகிற பெருமையையுடைய அந்தப் புருஷோத்தம க்ஷேத்ரத்தையடைந்து அங்கு எழுந்தருளியிருக்கும் ஜகந்நாதப் பெருமாளை வணங்கி ஸிம்ஹாசலம் சென்று சேர்ந்தார்.

### மற்ற பல திவ்யதேசமங்களாசாஸநம்

41*-*70. வேதாந்தியே! "ஆச்சர்யமான வீர்யமும் ஆச்சரியமான ஶௌர்யமும், ஆச்சர்யமான தோள்வலியும்

४३. आससादाथ सहसा श्रीवेङ्कटगिरिं ततः।
मायावी परमानन्दः त्यक्त्वा वैकुण्ठमुत्तमम्॥
४४. स्वामिपुष्करिणीतीरे रमया सह मोदते।
इत्येवं वेङ्कटगिरौ वसन्तं तं रमासखम्॥
४५. प्रणम्य नाथयोगीन्द्रो घटिकाचलमभ्यगात्।
तत्रामृतफलं नत्वा नृसिंहं घटिकाचले॥
४६. ततो निर्गत्य स श्रीमान् अगात् गृध्रसरोवरम्।
तत्राभिवाद्य वेदान्तिन्! भक्त्या श्रीयोगिराडयम्॥
४७ श्रीगृध्रसरसस्तीरे भान्तं विजयराघवम्।
ततः काञ्चीमवापाथ सेवार्थं वरदस्य च॥

---

உடைய நரசிங்கப் பெருமானை வணங்குகிறேன். அஹோ பிலக்ஷேத்ரம் ஆச்சர்யமான ப₃லமுடையதனன்றோ'' என்று பெரும் புகழாளரான நாத₂முனி அஹோபி₃ல நரசிங்கனை வணங்கி உடனே திருவேங்கடமலைக்கு எழுந்தருளினார். ''ஆச்சர்யமான ஶக்தியையுடையவனாய், பரமானந்த₃த்தை உடையவனான எம்பெருமான் மேலான ஸ்த₂ானமான வைகுண்ட₂த்தை விட்டு ஸ்வாமி புஷ்கரிணிக்கரையிலே பிராட்டியோடு இன்புற்று வாழ்கிறான்'' என்று புராணங்களில் சொல்லப்பட்டபடி திருவேங்கடமலையில் வாழும் அலர்மேல்மங்கை உறைமார்பனை ஸ்ரீநிவாஸனை வணங்கி, ஸ்ரீமந்நாத₂முனிகள் க₄டிகாசலத்தை அடைந்தார். அந்தக் கடிகைத்தடங்குன்றிலே அக்காரக்கனியான நரசிங்கனை வணங்கி அங்கு நின்றும் புறப்பட்டுத் திருப்புட்குழியை அடைந்தார். அங்கு இந்த முனிவர்தலைவர் க்₃ருத்₄ர ஸரஸ்ஸின் கரையிலே எழுந்தருளியிருக்கும் விஜயராக₄வனை ப₄க்தியுடன் வணங்கி, வரத₃னை ஸேவிப்பதற்காகக் காஞ்சீபுரம் அடைந்தார். ''எல்லா நகரங்களைக்

४८. नगरीणां च सर्वासां पुरी काञ्ची गरीयसी ।
गिरीणां चैव सर्वेषां श्रेष्ठो हस्तिगिरिः स्मृतः ॥

४९. वेगवत्युत्तरे तीरे पुण्यकोट्यां हरिः स्वयम् ।
वरदः सर्वभूतानामद्यापि परिदृश्यते ॥

५०. एवं प्रणम्य वरदं हस्त्यद्रौ नाथयोगिराट् ।
तत्र स्थितान् दिव्यदेशान् वीक्षारण्यमथाविशत् ॥

५१. वीक्षारण्ये ततो नत्वा शयानं वीरराघवम् ।
श्रीनिवासपुरं प्राप वर्णपुष्करिणीतटे ॥

५२. तामस्मन्मातरं लक्ष्मीं नत्वा श्रीभक्तवत्सलम् ।
महीसारपुरं प्राप भक्तिसारदिदृक्षया ॥

---

காட்டிலும் காஞ்சீபுரம் மிகச்சிறந்தது. எல்லா மலைகளைக் காட்டிலும் ஹஸ்திகி₃ரி மிகச்சிறந்தது. 'வேகவதியின் வடகரையில் புண்யகோடி விமானத்தில் ஸாக்ஷாத் வரத₃ராஜனை எம்பெருமான் இன்றும் எல்லா ஜீவர்களும் காணும்படி எழுந்தருளி நிற்கிறான்' என்னும் (பொருளுள்ள) ஶ்லோகத்தைச் சொல்லி, அத்திகிரியிலே வரதனை வணங்கி, அங்குள்ளமற்ற திவ்யதேசங்களையும் மங்களாசாஸனம செய்து, வீக்ஷாரண்யத்தில் சயனித்திருக்கும் வீரராகவப்பெருமாளை வணங்கி, வர்ண புஷ்கரிணியின் கரையிலிருக்கும் திருநின்றவூரை அடைந்தார். அங்கு எழுந்தருளியிருக்கும் என்னைப்பெற்ற தாயாரையும் பத்தராவிப்பெருமாளையும் வணங்கி, ப₄க்தி ஸாரராகிற திருமழிசையாழ்வாரைக் காண்பதற்காகத் திருமழிசையை அடைந்தார். அங்கு எழுந்தருளியிருக்கும் திருமங்கைவல்லித்தாயாரோடு கூடிய ஜகந்நாதப்பெருமாளையும் திருமழிசையாழ்வாரையும் ப₄க்தியுடன் வணங்கி ஆனையின் துயரம் தீரப்புள்ளூர்ந்தவன் எழுந்தருளியிருக்கும்

५३. जगन्नाथं तत्र नत्वा मङ्गवल्लीमनोहरम् ।
भक्तिसारं च सद्भक्तया गजस्थलमवाप सः ॥
५४. तत्र कैरविणीतीरे वसन्तं पार्थसारथिम् ।
रंगेशं राघवं चैव गजार्तिघ्नं हरिं तदा ॥
५५. लक्ष्मीनृसिंहं संसेव्य महदाख्यमनुत्तमम् ।
मयूरनगरं प्राप तस्मात्कैरविणीतटात् ॥
५६. यत्रावतारं विदधे महदाख्यो महायशाः ।
विलोक्य विस्मितोऽत्यन्तं महान्तं लतिकाहृदम् ॥
५७ तं कूपं नाथयोगीन्द्रः तत्तोयमपिबत्तदा ।
मङ्गलाशासनं कृत्वा मयूरपुरकेशवम् ॥
५८. तोयाद्रिमगमच्छ्रीमान् वेदान्तिन्नाथयोगिराट् ।
तोयाद्रौ तुङ्गशयनं रंगेशं संप्रणम्य च ॥

---

திருவல்லிக்கேணியை அடைந்தார் அங்கு கைரவிணிக் கரையிலே எழுந்தருளியிருக்கும் ஸ்ரீபார்த்தஸாரதியையும், ஸ்ரீரங்க₃நாத₂னையும், ஸ்ரீராமனையும், ஸ்ரீகஜேந்த்ரவரதனை யும், ஸ்ரீலக்ஷ்மீநரஸிம்ஹனையும், ஒப்பற்ற பேயாழ்வாரை யும் ஸேவித்து, அந்தத் திருவல்லிக்கேணியிலிருந்து மயிலை நகரத்தை அடைந்தார். அந்த நகரத்திலே பெரும்புகழாள ரான பேயாழ்வார் அவதரித்தாரன்றோ. மிகவும் வியப் புற்றவராய் அங்குள்ள அல்லிக்குளமாகிற பெரிய கிணற்றை ஸேவித்து, நாத₂முனிகள் அதன் தீர்த்த₂த்தை அப்போதே பருகினர். அந்த மயிலையில் உள்ள கேசவப் பெருமாளை மங்க₃ளாசாஸநம் செய்து, ஸ்ரீமந்நாத₂முனிகள் திருநீர்மலைக்குச் சென்றார். திருநீர்மலையிலே உயர்ந்த சயனத்திருக்கோலத்திலே இருக்கும் ரங்க₃நாத₂னை வணங்கி, பெரியதான கல்யாணநகரமென்னும் திருவிட

५९. आससादाथ सहसा कल्याणनगरं महत् ।
कल्याणपुष्करिणीं स्नात्वा नित्यकल्याणनायकम् ॥

६०. देवीं कोमलवल्लीं च वराहस्वामिनं हरिम् ।
नत्वा जगाम सहसा महाबलिपुरं प्रति ॥

६१. तत्र स्नात्वा महापुण्ये पुण्डरीकसरोवरे ।
महाबलिं बलिपुरे विष्णुं भूतलशायिनम् ॥

६२. भूदेवीं संप्रणम्याशु चाहीन्द्रपुरमाविशत् ।
अहीन्द्रे देवदेवेशं नत्वा तार्क्ष्यनदीतटे ॥

६३. चित्रकूटमवापाथ शुक्लनद्यास्तु दक्षिणे ।
कृत्वावगाहनं तत्र पुण्डरीकसरोवरे

६४. गोविन्दराजं संसेव्य सोऽगमत्परमां मुदम् ।
चोलदेशमवापाथ सहसा नाथयोगिराट् ॥

வெந்தைக்கு உடனே எழுந்தருளினார் நாதமுனிகள். கல்யாணபுஷ்கரிணிக் கரையில் இருக்கும் நித்யகல்யாணப் பெருமாளையும் கோமளவல்லித் தாயாரையும் வராஹப் பெருமாளையும் வணங்கி, உடனே மஹாபலிபுரம் எனப் படும் திருக்கடல் மல்லைக்குச் சென்றார். அங்கு பெரும புண்யத்தைத்தரும் புண்டரீகஸரஸ்ஸில் நீராடி மஹாபலி புரத்தில் மஹாபலமுடையவனாய் ஸ்தலஶயனத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமாளையும் பூதேவி நாச்சியா ரையும் வணங்கி, உடனே திருவயிந்திரபுரத்துக்குச் சென்றார். திருவயிந்திரபுரத்தில் கருடநதிக் கரையிலே தேவநாதப்பெருமாளை வணங்கி, ஶுக்லநதியின் தெற்கே உள்ள திருச்சித்ரகூடத்தை அடைந்தார். அங்கு புண்டரீக புஷ்கரிணியில் நீராடி கோவிந்தராஜனை ஸேவித்துப் பேரானந்தமடைந்தார். அதற்குப்பின் நாதமுனிகள் சோழ

६५. चोलदेशस्थितान् सर्वान् दिव्यदेशान् प्रणम्य च ।
प्रहर्षमतुलं लेभे वेदान्तिन्नाथयोगिराट् ॥

६६. रङ्ग रङ्गमिति ब्रूयात् क्षुतप्रस्खलनादिषु ।
ब्रह्मलोकमवाप्नोति सद्यः पापक्षयान्नरः ॥

६७. एतादृशप्रभावं तं रङ्गेशं संप्रणम्य च ।
कुम्भकोणमवापाथ सकुटुम्बो महायशाः ॥

६८. यो नरः कुम्भकोणेऽस्मिन् क्षणार्धमपि तिष्ठति ।
करस्थं तस्य कैवल्यं किमुतान्या विभूतयः ॥

६९. एवंप्रभावसहिते कुम्भकोणे दिनत्रयम् ।
स्थित्वा प्रणम्य देवेशं शार्ङ्गपाणिं जगत्पतिम् ॥

७०. वीरनारायणपुरं सहसैवागमत्तदा ।
प्रणम्य राजगोपालं अनुभूयास्य विग्रहम् ॥

---

தேசத்தை அடைந்தார். அந்த நாத₂முனிகள் சோழதேசத்தில் உள்ள எல்லா திவ்யதேசங்களையும் வணங்கி ஒப்பற்ற ஆனந்தத்தை யடைந்தார். ''இருமினாலும் இடறினாலும் 'ரங்கம் ரங்கம்' என்றே சொல்லவேண்டும். அப்படி ஒரு மனிதன் சொன்னாகில் அவன் பாபங்களெல்லாம் நீங்கப் பெற்று ப்₃ரஹ்மலோகத்தை அடைவான்'' என்னும் இப்படிப் பட்ட வைபவமுடைய அந்தத் திருவரங்கநாத₂னை நன்கு ஸேவித்து, குடும்பத்தோடு கூடிய பெரும்புகழாளரான நாத₂ முனிகள் கும்ப₄கோணத்தை வந்தடைந்தார். ''எந்த மனிதன் இந்தக்கும்ப₄கோணத்தில் அரைக்கணம் தங்கினாலும், அவனுடையகையில் மோக்ஷமே இருக்கிறது. மற்றசெல்வங்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?'' என்னும் பெருமையை உடைய கும்ப₄கோணத்தில் மூன்று நாட்கள் தங்கி, தேவபிரானைய் லோகநாத₂னை சார்ங்கபாணியை வணங்கி, வீரநாராயணபுரத்தை விரைவிலேயே அடைந்தார் நாத₂முனிகள்.

७१. कृताञ्जलिपुटस्तस्थौ वेदान्तिन्नाथयोगिराट् ।
प्रसन्नो राजगोपालो भगवान् नाथयोगिने ॥

७२. तीर्थं प्रसादं मालां च दापयित्वार्चकैस्तदा ।
आनयित्वाऽखिलान् शीघ्रं तत्रत्यान् वैष्णवान् हरिः ॥

७३. व्याजहार शुभं वाक्यं कृपया भक्तवत्सलः ।
स नाथमुनये सम्यक् धनधान्यादिकान् बहून् ॥

७४. दत्त्वाशु तमिम नाथ पूजयध्वं ममाज्ञया ।
इत्यादिष्टा जनास्सर्वे हरिणा पुरवासिनः ॥

७५. तत्रैव नित्यवासाय यथापूर्वमकल्पयन् ।
वीरनारायणपुरे वेदान्तिन्नाथयोगिनः ॥

---

## வீரநாராயணபுர வாஸம்

70*-77. வேதாந்தியே! அந்தக் காட்டுமன்னார்கோயி லில் ராஜகோபாலனாகிற மன்னனை வணங்கி அவ ருடைய திருமேனியை அநுபவித்து, நாதமுனிகள் கை கூப்பிநின்றார். அந்த நாதமுனிகளிடம் உகந்த பக்தவத்ஸ லனான ராஜகோபாலனாகிற அந்த எம்பெருமான் அர்ச்ச கர்களைக்கொண்டு அவருக்குத் தீர்த்தம், பிரஸாதம், மாலை ஆகியவற்றை அளிக்கச்செய்து அவ்வூரிலிருக்கும் எல்லா வைஷ்ணவர்களையும் விரைவில் அழைத்து, கருணையோடு பின்வரும் மங்களமான வாக்யத்தை அருளிச்செய்தான்— "எனது ஆணையாலே தனம் தான்யம் முதலான பல செல்வங்களையும் இந்த நாதமுனிகளுக்கு நன்கு உடனே ஸமர்ப்பித்து இவரை நீங்கள் ஆராதிப்பீர்களாக" என்று. வேதாந்தியே! இவ்வண்ணமாக எம்பெருமானால் ஆஜ்ஞை யிடப்பெற்ற அவ்வூரிலுள்ள அனைவரும் நாதமுனி கள் முன்போலவே வீரநாராயணபுரத்தில் நித்ய வாஸம் செய்வதற்கு வேண்டியன செய்தார்கள்.

७६. कैङ्कर्यं पूर्ववत्कुर्वन् गोपालस्य श्रियः पतेः ।
तत्रैव नाथयोगीन्द्रः स श्रीमानध्यतिष्ठत ॥

७७. वेदशास्त्राणि शिष्येभ्यः सम्यक् चोपदिशन्मुहुः ।
विद्यागोष्ठ्या युतः श्रीमान् कञ्चित्कालमुवास सः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे नाथमुनितीर्थयात्रा
नाम सप्तोत्तरशततमोऽध्यायः ॥

अष्टोत्तरशततमोऽध्यायः ॥

१. ततः श्रीवैष्णवास्तत्र प्रतीच्याः केचिदागताः ।
प्रणम्य राजगोपालं सन्निधौ भक्तिसंयुताः ॥

२. श्रीशार्ङ्गपाणिविषया दश गाथा महत्तराः ।
सम्यग्विज्ञापनं चक्रुः कारिमारकृतास्तदा ॥

---

ராஜகோபாலனாகிற திருமகள் கேள்வனுக்கு முன்போலவே அவ்வூரிலிருந்து கைங்கர்யம் செய்து கொண்டு ஸ்ரீமந் நாத₂முனிகள் வேத₃ஶாஸ்த்ரங்களை சிஷ்யர்களுக்கு நன்கு உபதேசித்துக்கொண்டு கற்றோர்களின் கோ₃ஷ்டி₂யோடு கூடியவராய் சிலகாலம் வாழ்ந்து வந்தார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில் ப₄ட்டார்ய வேதா₃ந்தி ஸம்வாதத்தில் நாதமுனியின் தீர்த்தயாத்திரையை விளக்கும் நூற்று ஏழாவது அத்தியாயம் நிறைவுற்றது.

## நூற்றெட்டாம் அத்தியாயம்

### ப₄விஷ்யதா₃சார்ய விக்₃ரஹம்

### 'ஆராவமுதே' என்னும் பதிகம் செவிப்படுதல்

1—*8. வேதா₃ந்தியே! அதற்குப் பின் மேல்நாட்டி லிருந்து எழுந்தருளியிருந்த சில ஸ்ரீவைஷ்ணவர்கள் ராஜகோபாலன் திருமுன்பே பக்தியோடு வணங்கி, காரிமாறனால் அருளிச்செய்யப்பெற்றவையாய், ஸ்ரீசார்ங்க₂

३. सम्यङ्नाथमुनिः श्रुत्वा तदा हृद्यममुं स्तवम् ।
प्रहृष्टो वैष्णवान् शीघ्रमिदं वचनमब्रवीत् ॥
४. एष प्रबन्धो विबुधाः भाति हृद्यतमो महान् ।
सम्यक् पारायणं सर्वप्रबन्धस्य विधीयताम् ॥
५. ते नाथयोगिवचनं श्रुत्वेदं वैष्णवास्तदा ।
वेदान्तिन्! देशिकश्रेष्ठमिदं वचनमब्रुवन् ॥
६. एतावन्मात्रमस्माभिर्गृहीतं स्तोत्रमेव हि ।
सान्तप्रबन्धवान् लोके न कश्चिदिह विद्यते ॥
७. तत्पुस्तकं वा कुत्रापि न चास्माभिर्विलोकितम् ।
स तेषां तद्वच श्रुत्वा नाथयोगी महायशाः ॥
८. सम्यक् तीर्थप्रसादादि वैष्णवेभ्यो ददौ मुदा ।
ततस्संचिन्तयामास स मुनिर्नाथपूर्वकः ॥

---

பாணியைப்பற்றியவையான மிகச்சிறந்தபத்துப்பாட்டுக்களை அழகாக விண்ணப்பித்தார்கள். மனத்துக்கினிய அந்தத் துதிப்பாடலைக் கேட்டு நாத₂முனிகள் மிகவுகந்து உடனே அந்த ஸ்ரீவைஷ்ணவர்களைப் பார்த்து "அறிவாளிகளே! இந்த ப்ரப₃ந்த₄ம் மிகப்பெரியதாய், மிகவும் நெஞ்சை ஈர்ப்பதாய் விளங்குகிறது. இந்த ப்ரபந்தம் முழுவதையும் பாராயணம் செய்வீர்களாக" என்று வார்த்தைசொன்னார். அப்போது அந்த நாத₂முனிகளால் சொல்லப்பட்ட இந்த வார்த்தையைக் கேட்டு அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்த மஹாசார்யரைப் பார்த்து "எங்களுக்கு இந்தப்ரப₃ந்த₄த்தில் இவ்வளவே தெரியும். ப்ரப₃ந்த₄ம் முழுவதையும் கற்றவர் இவ்வுலகிலில்லை; முழுவதையும் கொண்டபுஸ்தகமும் எங்களால் பார்க்கப்படவில்லை" என்று கூறினார்கள் அவர்களுடைய அந்தவார்த்தையைக் கேட்ட பெரும்புகழாளரான அந்த நாத₂முனிகள் அந்த வைஷ்ணவர்களுக்குத் தீர்த்தமும் பிரசாதம் முதலியவற்றை உகப்புடன் அளித்தார்.

९. सहस्रे तु दशेत्यत्र तदिदं समुदीरितम्।
किं वा दशकमेतद्धि शतके समुदीरितम् ॥

१०. तस्माद्विशोध्य ताः सर्वाः गृहीतव्याः प्रयत्नतः ।
श्रीशार्ङ्गपाणिविषयः प्रबन्धोऽयं महांस्ततः ॥

११. तस्मात्तमद्य सहसा संग्रहीष्ये द्विजोत्तमात् ।
इति संचिन्त्य वेदान्तिन्! मतिमान्नाथयोगिराट् ॥

१२. तं प्रबन्धं महाभक्त्या तस्मात्संगृह्य योगिराट् ।
कुम्भकोणं ततो गत्वा तस्मादष्टाङ्गयोगतः ॥

१३. प्रत्यक्षविषयं सम्यग्विदधे शार्ङ्गिणं हरिम् ।
योगेनाराधितः सम्यगपर्याप्तामृताभिधः ॥

---

## ஆராவமுதனின் ஆணை

8*—*16. குற்றமற்ற வேதாந்தியே! அதற்குப்பின் அந்த நாத$_2$முனிகள் ''ஓராயிரத்துள் இப்பத்து' என்று இத்துதிப்பாடலில் காணப்படுகிறது. இது ஆயிரத்தில் எந்த ஶதகத்தில் ( நூறுபாட்டுக்களில்) காணப்படுகிறதோ தெரியவில்லை. ஆராய்ந்து இந்த ஆயிரம் பாட்டுக்களையும் மிக முயற்சி செய்து கண்டு பிடித்துக் கற்கவேண்டும். முதலில் இந்த அந்தணர்தலைவரிடமிருந்து சார்ங்கபாணியைப் பற்றியதான இந்தப் பெரிய பதிகத்தை உடனே கற்கிறேன்'' என்று நினைக்கலுற்றார். அறிவாளியான நாத$_2$முனிகள் இவ்வண்ணமாகச் சிந்தித்து மிகுந்த ப$_4$க்தியுடன் அந்தப் பதிகத்தை அந்த ஸ்ரீவைஷ்ணவரிடமிருந்து கற்று அதற்குப்பின் அங்கிருந்து கும்ப$_4$கோணத்திற்குச் சென்று அஷ்டாங்க$_3$யோக$_3$த்தாலே சார்ங்கபாணியான எம்பெருமானை நெஞ்சிலே கண்டார். யோக$_3$த்தினாலே அவரால் நன்கு ஆராதி$_4$க்கப் பெற்ற ஆராவமுதனாகிற அப்பெருமான் யோகியர் தலைவரான

१४. प्रसन्नः प्राह वेदान्तिन्! नाथार्यं योगिपुङ्गवम् ।
तात्रपर्णीसरित्तीरे कुरुकानगरीवरे ॥

१५. मद्भक्तः शठकोपाख्यः वर्तते दिव्ययोगिराट् ।
सहस्रगीतिस्तेनैषा कृता शठजिताऽनघ ॥

१६. तत्र गत्वा गृहाणेमां तस्माच्छठजितोऽनघ ।
निशम्य भगवद्वाक्यं नाथयोगी प्रणम्य तम् ॥

१७. तेन संप्रेषितः शीघ्रं कुरुकानगरं ययौ ।
आदिनाथं प्रणम्याथ कुरुकायां रमासखम् ॥

१८. चिञ्चामूले शठारातिं तं च तत्र ददर्श सः ।
शिष्यं महान्तं मधुरकवेः तत्र तदाऽनघ ॥

---

நாத₂முனிகளுக்குக் காட்சியளித்தவனாய் அவரைப் பார்த்து "தாமிரபர்ணி நதிக்கரையில் உள்ள திருக்குருகூர் என்னும் நகரிலே சடகோபர் என்னும் மஹாயோகீஶ்வரரான எனது ப₄க்தர் உள்ளார். அந்த ஶட₂கோபராலே இந்த ஆயிரம் பாட்டுக்களும் இயற்றப்பெற்றன. அங்கு சென்று அந்த ஶட₂கோபரிடமிருந்து இந்த தி₃வ்யப்ரப₃ந்த₄த்தைப் பெறுவீராக" என்று அருளிச் செய்தான்.

## ஆதிநாதர் ஆழ்வாரை ஸேவித்தல்

16*—*18. எம்பெருமானுடைய அந்த வாக்கியத்தைக் கேட்டு நாத₂முனிகள் அவனை வணங்கி அவனால் விடைகொடுக்கப்பெற்று விரைவில் திருக்குருகூரை அடைந்தார். திருக்குருகூரிலே எழுந்தருளியிருக்கும் லக்ஷ்மீநாத₂னை ஆதி₃நாத₂ப்பெருமாளை வணங்கி, திருப்(புளியாழ்வாரடியிலே)அர்ச்சாரூபமாய் எழுந்தருளியிருக்கும் அந்த நம்மாழ்வாரையும் ஸேவித்தார்.

१९. श्रीपराङ्कुशदासाख्यं गुरुभक्तिपरायणम् ।
स तं प्रणम्य वेदान्तिन्! व्याजहार वचः शुभम् ॥
२०. को वास्ति किं पुरे चात्र शठजित्सूक्तिपाठकः ।
तत्सूक्तिपुस्तकं चापि विद्यते चेद्वदाधुना ॥
२१. श्रीपराङ्कुशदासोऽथ तद्वचः प्रतिगृह्य सः ।
तं नाथमुनिमुद्दिश्य स जगाद वचः शुभम् ॥
२२. कारिमारकृता दिव्यप्रबन्धाः पूर्वमेव हि ।
तत्पुस्तकं तत्पाठकः कोपि नास्त्यधुना महान् ।
२३. तत्कारणं प्रवक्ष्यामि श्रूयतामवधानतः ।
पुरा शठारिर्भगवान् लोकसंरक्षणाय च ॥
२४. वेदसारतमानर्थान् समुद्धृत्य प्रयत्नतः ।
दिव्यप्रबन्धांश्चतुरः चक्रे द्राविडभाषया ॥

---

## திருவாய்மொழி பற்றிய செய்தி

18*—*37. குற்றமற்ற வேதாந்தியே! அப்போது அங்கு மதுரகவியாழ்வாரின் சிஷ்யராய், கு3ருப4க்தியே வடிவெடுத்தவராய், 'ஸ்ரீபராங்குஶதாஸர்' என்னும் திருநாமமுடைய பெரியவரை வணங்கி, நாத2முனிகள் "இவ்வூரில் இந்தஶட2கோபரின் தி3வ்யப்ரப3ந்த4த்தைக் கற்றவர் யாரேனும் உளரா? அவருடைய தி3வ்யப்ரப3ந்த4ப் புஸ்தகம் இங்கு உள்ளதா? இதை இப்போது கூறுவீர்?" என்னும் மங்களமான வார்த்தையைச் சொன்னார். ஸ்ரீ பராங்குசதாஸரும் அந்த வார்த்தையை ஏற்றுக்கொண்டு அந்த நாத2முனிகளைப்பார்த்து "காரிமாறனால் நெடுங்காலத்துக்கு முன்னமேதிவ்யப்ரபந்தங்கள் அருளிச்செய்யப்பட்டன. அந்தப்புஸ்தகமோ, அதைக்கற்ற பெரியவரோ இப்போது இங்குஇல்லை. அதற்குக்காரணத்தைக் கூறுகிறேன்;கவனமாகக்கேட்பீராக. ஶட2கோபராகிற

२५. सारांशभूतस्तत्रापि प्रबन्धश्चरमो महान् ।
सद्यो मोक्षप्रदः सर्वशास्त्रसारतमोऽनघ ॥

२६. दिव्यः सहस्रगीत्याख्यः पापिनामपि मुक्तिदः ।
तं प्रबन्धं शठारातिः कृत्वा मोक्षैककारणम् ॥

२७. मधुरायोपदिश्याशु कवये कृपया तदा ।
जगाम योगिराट् नाथ तद्विष्णोः परमं पदम् ॥

२८. सहस्रगीत्यध्ययनात् सर्वे निर्धूतकल्मषाः ।
मुक्तिं गतास्ततःसमाप्तिदशायामेव सत्वरम् ॥

२९. नैतदध्ययनं तेन जनेनाकारि केनचित् ।
अतोपि द्राविडाम्नायपठनं भुवि दुर्लभम् ॥

---

பெரியவர் உலகத்தை ரக்ஷிப்பதற்காக முற்காலத்தில் வேதத்தில் மிகஸாரமான அர்த்தங்களை முயன்று எடுத்து தமிழ் மொழியாலே நாலு திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்தார். அந்த நாலிலும் கடைசியான ஆயிரம் பாட்டுக்கள் அடங்கிய பிரபந்தம் மிக ஸாரமானது. கற்றவருக்கு உடனே மோக்ஷமளிக்கவல்லது. எல்லா ஶாஸ்த்ரங்களுக்கும் பரமஸாரமாயுள்ளது. ஆயிரம் பாடல் கொண்ட அது மிகவும் இனியதாகவும், பாபிகளுக்கும் மோக்ஷமளிப்பதாகவும் உள்ளது. நாதமுனிவரே! அந்த ஶடகோபமுனிவர் மோக்ஷமளிக்கவல்லதான அந்த திவ்ய ப்ரபந்தத்தை அப்போது மதுரகவிகளுக்குக் கருணையாலே உபதேசித்து விஷ்ணுவின் பரமபதத்தை அடைந்தார். இந்த ஆயிரம் பாட்டுக்களையும் கற்றவர்கள் அனைவரும் அதை அத்யயனம் செய்து சாற்றுமுறை ஆனவுடன் பாபம் நீங்கப் பெற்று மோக்ஷம் அடைந்தனர். அதனால் அதைப் படிப்பதற்கு எவரும் முன்வரவில்லை, அதனாலேயே இந்தத் தமிழ் வேதத்தைப் படிப்பது

३०. तस्य द्राविडवेदस्य संप्राप्तं दुर्यशस्ततः ।
प्रबन्धो मारकं इति केचित्प्राहुर्जना यतः ॥
३१. केचिन्मूढतमास्तत्र दुर्मन्त्रं विदधुस्ततः ।
यदि तत्पुस्तकं लोके वर्तते निखिला जनाः ॥
३२. अज्ञानेन पठित्वाशु मरणं यान्ति निश्चयम् ।
तत्पुस्तकं नदीपूरे निक्षेप्तव्यं ततो ध्रुवम् ॥
३३. एवं विधाय दुर्मन्त्रं केचिन्मूढतमा जनाः ।
तत्सूक्तिमात्र संगृह्य पत्राणि निखिलानि वै ॥
३४. ताम्रपर्णीनदीपूरे पातयामासुरग्रतः ।
तत्रैकपत्र सहसा प्रवाहाभिमुखं ययौ ॥
३५. श्रीशार्ङ्गपाणिविषयं दशपद्यैकशोभितम् ।
प्रत्युद्गत प्रवाहस्य पत्रं दृष्ट्वातिविस्मिताः ॥

---

உலகில் இல்லாமல் போயிற்று. இது மரணமளிக்கும் பிரபந்தம் என்று சிலர் கூறியதால் இந்தத் தமிழ் வேதத்திற்கு ஓர் அபகீர்த்தி உண்டாயிற்று. அப்போது சில அறிவிலிகள் சேர்ந்து "இந்தப்புஸ்தகம் இருந்தால் எல்லா மனிதர்களும் அறியாமல் படித்து மரணமடைந்து விடுவார்கள் என்பது உறுதி. ஆகையால், இந்தப்புஸ்தகத்தை நதி வெள்ளத்தில் நிச்சயமாக எறிந்துவிடவேண்டும்" என்று மந்திராலோசனை செய்தார்கள். இப்படித் தீய ஆலோசனையைச் செய்து சில அறிவிலிகளான ஜனங்கள் அந்த திவ்யப்ரபந்தத்தை எழுதியிருந்த ஏடுகள் அனைத்தையும் தாமிரபரணி நதி வெள்ளத்திலே எறிந்து விட்டார்கள். அதில் ஒரு ஏடு மட்டும் அந்த வெள்ளத்தை எதிர்த்து வந்தது; சார்ங்கபாணியைப் பற்றிய "ஆராவமுதே" என்னும் பத்துபாட்டுகள் கொண்ட அந்த ஏடு வெள்ளத்தை எதிர்த்து வந்ததைக்கண்டு மிகவும் வியப்புற்றவர்களாய், 'இதில் ஒருசிறந்த அர்த்த2ம் உள்ளது' என்று அதில்

३६. कश्चिदर्थो महानस्तीत्येवमित्यादृता जनाः ।
तामेव जगृहुस्सर्वे पत्रिकां विबुधर्षभाः ॥

३७. अतः सहस्रगीत्यां हि दश गाथा हिता भुवि ।
शठारिकृपयैवाथ गुरुर्मे मधुरः कविः ॥

३८. शठकोपस्य कैङ्कर्यं विधायानुत्तमं महत् ।
प्रकाशयित्वा स्वगुरुं भूम्यां सर्वत्र विश्रुतम् ॥

३९. बहुकालेन स प्राप तद्विष्णोः परमं पदम् ।
शठारिविषयः कश्चित् पद्यैकादशसंभितः ॥

४०. प्रबन्धोऽयं हि मधुरकविनाऽकारि विश्रुतः ।
तस्मात्कवेर्मम प्राप्तः स प्रबन्धो गुरोर्महान् ॥

---

ஆதரவு கொண்டவர்களாய், அறிவாளிகளாய் உள்ள அனைவரும் அந்த ஏட்டை ஏற்றுக்கொண்டனர். ஆகையால் அந்த ஆயிரம் பாடல்களிலே இந்தப் பத்துப் பாடல்கள் இப்போதும் நன்மையளிப்பவையாய் உள்ளன.

## கண்ணிநுண் சிறுத்தாம்பு

37* — 40. என்னுடைய ஆசார்யரான மது₄ரகவியாழ்வார் ஶட₂கோபருடைய கருணையாலே ஶட₂கோபருக்குத் தலைசிறந்த கைங்கர்யத்தைச் செய்து விட்டு, தமது ஆசார்யரான அவருடைய புகழை இவ்வுலகில் சிறப்பாகப் பரவச்செய்து விட்டு, முதிர்ந்த பிராயத்தில் விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைந்தார். பதினொரு பாடல்கள் கொண்டதாய் ஶட₂கோபரான நம்மாழ்வாரைப் பற்றியதான 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்னும் திவ்யப்ரபந்தம் மது₄ரகவியாழ்வாராலே அருளிச் செய்யப் பட்டது என்பது அனைவரும் அறிந்தது. அந்தச் சிறந்த பிரபந்தம் அந்த மது₄ரகவியாழ்வாரிடமிருந்து எனக்குக் கிடைத்தது.

४१. मत्तो गृहीत्वा नाथार्य तं प्रबन्ध महत्तरम् ।
भक्त्या द्वादशसाहस्रसंख्यया पठनस्तव ॥
४२. शठारातिर्ध्रुवं शीघ्रं सुप्रसन्नो भविष्यति ।
यदि प्रसन्नः शठजित् प्रबन्धास्सकलास्तव ॥
४३. संप्राप्ता एव नाथार्य संशयोऽत्र न विद्यते ।
तदङ्गीकृत्य वचनं प्रबन्धं प्रतिगृह्य तम् ॥
४४. दीर्घप्रणामैर्बहुभिः शठारातिं प्रणम्य च ।
तस्याभिमुखमासीनो वेदान्तिन्नाथयोगिराट् ॥
४५. भक्त्या द्वादशसाहस्रवारं तच्च जजाप सः ।
लक्ष्मीपुरुषकारेण प्रसन्नो नाथयोगिराट् ।

---

## திவ்யப்ரபந்தப்ராப்த்யுபாயம்

41—*43. நாதமுனிவரே! ஆசார்யநிஷ்டையைக் கூறு கையாலே மிகச்சிறந்ததான கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் அந்த ப்ரபந்தத்தை பக்தியுடன் நீர் பன்னீராயிரம் உரு அநுஸந்தித்தீரானால் சடகோபர் உமக்கு விரைவிலேயே காட்சியளிப்பார் என்பது உறுதி. சடகோபர் காட்சியளித்தாரானால் அந்த ப்ரபந்தங்கள் அனைத்தும் உமக்குக் கிடைத்தவையேயாகும். இதில் ஐயமில்லை'' என்னும் மங்களமான வார்த்தையைச் சொன்னார்.

## நாதமுனிகள் திவ்யப்ரபந்தங்களை அடைதல்

43*—54. வேதாந்தியே! பராங்குசதாஸரின் அந்த வார்த்தையை ஏற்றுக் கொண்டு நாதமுனிகள் அந்தக் கண்ணிநுண்சிறுத்தாம்பு என்னும் திவ்யப்ரபந்தத்தைப் பெற்றுக் கொண்டு, சடகோபரைப் பல தீர்க்க ப்ரணாமங்களாலே வணங்கி, சடகோபருக்கு முன்னாலே வீற்றிருப்

४६. कारिसूनुः कृपासिन्धुः बभूव शठजिन्महान् ।
आस्तिको धर्मशीलश्च शीलवान् वैष्णवः शुचिः ॥
४७. गम्भीरश्चतुरो धीरः शिष्य इत्यभिधीयते ।
इत्यादिगुणयुक्ताय धीमते नाथयोगिने ॥
४८. जगाद निखिलानर्थान् यथा वागशरीरिणी ।
सहस्रगीतिप्रमुखान् प्रबन्धान् शठजित्तदा ॥
४९. दिव्यं चक्षुर्यथा कृष्णः पार्थाय कृपया ददौ ।
तथैव नाथमुनये दिव्यनेत्रं प्रदाय च ॥
५०. तत्त्वत्रयं तथा सम्यक् रहस्यत्रितयं तथा ।
इति श्रीविष्णुसिद्धान्तं योगमष्टाङ्गमादरात् ॥

---

பவராய் அந்தப் பிரபந்தத்தை பக்தியுடன் பன்னீரா யிரம் உரு ஜபித்தார். லக்ஷ்மீ தேவியின் புருஷகாரத்தாலே காரிகுமாரராய், கருணைக்கடலான சடகோபராகிற பெரியவர் நாதமுனிவருக்குக் காட்சியளித்தார் "ஆஸ்திகனாய், அறநெறிநடப்பவனாய், நற்குணம் நிறைந்தவனாய், விஷ்ணுபக்தனாய், பரிசுத்தனாய், ஆழ்ந்த திருவுள்ளம் உடையவனாய், மங்களாசாஸனத்தில் வல்லவனாய், பேரறிவாளனாய் இருப்பவனே சிஷ்யன் என்று சொல்லப்படுகிறான்" என்று சாஸ்திரங்களில் சொல்லப்படும் சிஷ்யலக்ஷணங்கள் நிறைந்தவராய், பேரறிவாளரான நாதயோகிக்கு சடகோபர் அசரீரிவாக்குப் போலே எல்லா அர்த்தங்களையும் உபதேசித்தார். விஶ்வரூப தரிசனத்தின் போது கண்ணன் கருணையாலே அர்ஜுனனுக்கு தெய்விகமான கண்ணை அளித்தது போலே அப்போது சடகோபரும் நாதமுனிக்குத் தெய்விகமான கண்ணை அளித்துத் திருவாய்மொழி முதலான எல்லாத் திவ்விய ப்ரபந்தங்களையும், தத்வத்ரயங்களைப் பற்றிய

५१. सम्यग्भविष्यदाचार्यविग्रहं निखिलं च तत् ।
सहस्रगीतिपठनं ये कुर्वन्ति महात्मकाः ॥

५२. देहावसाने मोक्षो हि तेषामिति विनिर्णयम् ।
विधाय सर्वमेवाशु स तस्मै प्रददौ मुदा ॥

५३. एवं नाथमुनिः शीघ्रं शठारेर्दिव्ययोगिनः ।
तदा संप्राप्तसर्वार्थः कृतार्थः संप्रहर्षितः ॥

५४. संसेव्ययन्नादिनाथं वकुलाभरणं च तम् ।
कुरुकायां महाभक्त्या कञ्चित्कालमतिष्ठत ॥

५५. माधवः संप्रहृष्टोऽथ मद्वार्यमिदमब्रवीत् ।
अशरीरगिरा प्राह शठारिर्निखिलं किल ॥

---

உண்மையையும், மூன்று ரஹஸ்யங்களின் பொருளையும், ஸ்ரீவைஷ்ணவ ஸித்₃த₄ாந்தத்தையும், அஷ்டாங்க₃யோக₃த்தையும் அன்புடன் அளித்து, பிற்காலத்தில் அவதரிக்கப் போகிற ஸ்ரீராமானுஜரின் (பவிஷ்யதாசார்ய) விக்₃ரஹத்தையும் அருளினார். எந்த மஹாபுருஷர்கள் திருவாய் மொழியை ஸேவிக்கின்றார்களோ, அவர்களுக்கு இந்த ஜன்மத்தின் முடிவிலேயே மோக்ஷம் என்பது உறுதி. சடகோபர் இவையனைத்தையும் விரைவிலேயே நாத முனிகளுக்கு உகப்புடன் உபதேசித்து அளித்தார். இவ் வண்ணமாக தெய்விகயோகியான சடகோபரிடமிருந்து அப்போது எல்லா அர்த்த₂ங்களையும் கற்றவராய், பேறு பெற்றவராய், மிக உகந்தவரான நாதமுனி ஆதிநாத ருக்கும் வகுளமாலை தரித்த சடகோபருக்கும் கைங்கர்யம் செய்து கொண்டு மிகுந்த பக்தியுடன் திருக்குருகூரிலேயே சிலகாலம் வாழ்ந்தார்.

५६. तमर्चाविग्रहं तस्मै परोक्षं दत्तवान् कथम्।
को वा भविष्यदाचार्यविग्रहः कीदृशः स्मृतः ॥

५७. विशदं ब्रूहि मे विद्वन् तत्सर्वं कृपया गुरो।
तदङ्गीकृत्य वचनं भट्टार्यस्तमथाब्रवीत् ॥

५८. वेदान्तिन्! शृणु वक्ष्यामि निगृह्येन्द्रियवाजिनः।
अतिगोप्यमिमं विद्वन् मन्नाथाख्यमनुत्तमम् ॥

५९. ततः संप्राप्तसर्वार्थः कृतार्थः प्रणिपत्य तम्।
एवं विज्ञापनं चक्रे शठारिं नाथयोगिराट् ॥

---

## நஞ்சீயரின் கேள்வி

55—*57. இதைக்கேட்டு மிக உகந்த மனத்தவராகி நஞ்சீயர் ஸ்ரீ பராசரபட்டரைப் பார்த்து ''அறிவாளியான ஆசார்யரே! சடகோபர் அனைத்தையும் அசரீரிவாக்காலேயன்றோ நாதமுனிகளுக்கு உபதேசித்தார். அந்த பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தை நேரே கொடுத்தார் என்பது எப்படிப் பொருந்தும்? ப₄விஷ்யத₃ாசார்யவிக்₃ரஹம் என்பது யாது? அது எத்தகையது? இது அனைத்தையும் எனக்குத் தெளிவாகக் கருணையுடன் உரைப்பீராக'' என்று கேட்டார்.

## பவிஷ்யதாசார்ய வைபவம்

57*--73. நஞ்சீயருடைய அக்கேள்விக்கு இசைந்து பட்டர் அவருக்கு பதில் உரைத்தார்:- அறிவாளியான வேதாந்தியே! 'எம்பெருமானார்' என்னும் திருநாமம் கொண்ட பரம ரஹஸ்யமான இந்த பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தைப் பற்றி நான் கூறுகிறேன். புலன்களாகிய குதிரைகளை அடக்கியவராய் நீர் அதைக்கேட்பீராக. சடகோபரிடமிருந்து எல்லா அர்த்த₂ங்களையும் பெற்றுப் பேறுபெற்று மிக உகந்த நாதமுனிகள் அவரை வணங்கி ''கருணைக்கடலான ஆசார்யரே! உம்முடைய திருவாய்

६०. स्वामिन्! सहस्रगीत्यां तु ह्यवतारादिसूचकः ।
महतः कस्यचिच्चात्र पद्यं किञ्चित्समीरितम् ॥

६१. तस्यार्थं कृपया ब्रूहि करुणाकर मेऽधुना ।
तदङ्गीकृत्य वचनं शठजिन्नाथयोगिनः ॥

६२. स्वयं भविष्यदाचार्यविग्रहाकारवांस्तदा ।
कस्यचिच्छिल्पिनः स्वप्ने प्रसन्नः प्राह तं गुरुः ॥

६३. शिल्पिन्ननेन रूपेण कृत्वार्चाविग्रहं परम् ।
मत्सन्निधौ मामकाय देहि श्रीनाथयोगिने ॥

६४. ततः स्वप्नात्समुत्थाय शिल्पी विस्मितमानसः ।
तथैव विग्रहं कृत्वा प्रददौ नाथयोगिने ॥

---

மொழியில் ஒரு பெரியவர் பிற்காலத்தில் அவதரிக்கப் போகிறார் என்பதை உணர்த்தும் 'பொலிக பொலிக' என்று தொடங்கும் பாடல் ஒன்று காணப்படுகிறது. அதனுடைய பொருளை எனக்கு இப்போது கூற வேண்டும்'' என்று விண்ணப்பித்தார். நாதமுனியுடைய அந்த விண்ணப்பத்தை ஏற்றுக்கொண்டு அந்த சடகோபர் தாமே பவிஷ்யதாசார்யரின் திருமேனியைப் போன்ற உருவை உடையவராய், ஒரு சில்பிககுக் கனவில் காட்சி தந்து அவனைப்பார்த்து ''சில்பியே! இந்த உருவத்தை ஓர் அர்ச்சாவிக்₃ரஹமாக வடித்து என் ஸந்நிதியில் என் சிஷ்யராயிருக்கும் நாதமுனிகளிடம் கொடுப்பாயாக'' என்று நியமித்தார். அதற்குப்பின் இந்தக் கனவிலிருந்து விழித்தெழுந்து வியப்புற்ற சில்பி அந்தத் திருமேனியைப் போலவே செய்து நாதமுனிகளிடம் கொடுத்தார். அந்தத் திருமேனியை நாதமுனிகள் தம் சிஷ்யரான புண்டரீகா

६५ ततः स नाथयोगीन्द्रः पद्माक्षाय ददौ तदा ।
पद्माक्षो राममिश्राय तमर्चाविग्रहं ददौ ॥

६६. राममिश्रो यामुनाय श्रीरंगे त्वदिशत्स तम् ।
अदिशत्सोपि तं देवं गोष्ठीपूर्णाय यामुनः ॥

६७. गोष्ठीपूर्णस्य दुहिता काचिदासीन्महामतिः ।
देवकीश्रीरिति ख्याता भक्तिज्ञानस्वरूपिणी ॥

६८. तं देवमदिशत्तस्मै पिता दुहितृवत्सलः ।
मन्त्रं गृह्णति योगीन्द्रे गोष्ठीपूर्णात् गुरोस्तदा ॥

६९. रामानुजार्ये सहसा नादृश्यत स विग्रहः ।
एवं गुह्यतमो ह्यर्थो मयैव रहसि श्रुतः ॥

७०. अतोऽयं लक्ष्मणाचार्यः साक्षाद्विष्णुर्न संशयः ।
तत्सम्बन्धबलेनैव सर्वेषां परमं पदम् ॥

---

க்ஷருக்குக் கொடுத்தார். (உய்யக்கொண்டார் என்னும்) அந்தப் புண்டரீகாக்ஷர் அதைத் தம் சிஷ்யரான ராமமிச்ரருக்கு (மணக்கால் நம்பிக்கு)க் கொடுத்தார். ராமமிச்ரர் ஸ்ரீரங்கத்தில் யாமுநாசார்யருக்கு அதைக் கொடுத்தார். அந்த யாமுநாசாரியரும் அந்த விக்ரஹத்தைத் திருக்கோட்டியூர் நம்பிக்குக் கொடுத்தார். திருக்கோட்டியூர் நம்பிக்குப் பேரறிவுடையவளாய் பக்தியும் ஜ்ஞானமுமே வடிவெடுத்தவளான தேவகிப்பிராட்டி என்னும் பெண் பிள்ளையொருத்தி இருந்தாள். அப்பெண்ணிடம் அன்புடைய தந்தையான திருக்கோட்டியூர் நம்பி அவ்விக்ரஹத்தைக் கொடுத்தார். யதிராஜரான ராமாநுஜாசார்யர் திருக்கோட்டியூர் நம்பியிடம் மந்த்ரோபதேசம் பெறும் போது அந்த விக்ரஹம் மறைந்தது. இந்தப் பரமரஹஸ்யமான விஷயம் எனக்கு ரஹஸ்யமாக உபதேசிக்கப்பட்டது. ஆகையால், இந்த இளையாழ்வாரான ராமா

७१. पोलिहेत्यस्य पद्यस्य स्पष्टार्थो यतिपुङ्गवः ।
उदभूत्तेन सर्वेषां मुक्तिदाता स एव हि ॥
७२. यतो भविष्यदाचार्यविग्रहो यतिपुङ्गवे ।
लीन आसीत्ततस्तस्मात् गुरोः कोन्योऽधिको भुवि ॥
७३. नाथार्यादिगुरूणां च श्रीशठार्यादियोगिनाम् ।
तत्संबन्धबलेनैव मोक्षोऽन्येषां च निश्चयम् ॥
७४. पुरा भगवता प्रोक्तं हारीतं प्रति चानघ ।
ब्रह्मन् कलियुगे प्राप्ते धर्मे नष्टे श्रुतेरिति ॥
७५. मद्भक्तः सर्वधर्मज्ञस्तव गोत्रसमुद्भवः ।
शारीरकमहाभाष்யग्रन्थकर्ता जितेन्द्रियः ॥

---

நுஜர் நேரே விஷ்ணுவாகவே ஆகிறார் என்பதில் ஐயமில்லை. அவருடைய ஸம்ப₃ந்த₄ப₃லத்தினாலேயே அனைவருக்கும் பரமபதம் கிடைக்கிறது. "பொலிக பொலிக" என்று தொடங்கும் பாடலுக்கு அந்த யதிராஜரே நேரான அர்த்தமானார். அதனாலேயே அவர் அனைவருக்கும் மோக்ஷமளிப்பவராக ஆனார். பவிஷ்யதாசார்ய விக்ரஹம் யதிராஜரிடம் லயமடைந்ததாலே அந்த ஆசார்யரைவிடச் சிறந்தவர் இவ்வுலகில் யார் இருக்கிறார்? நாதமுனிகள் முதலான ஆசார்யர்களுக்கும், சடகோபர் முதலான ஆழ்வார்களுக்கும் மற்றவர்களுக்கும் அந்தயதிராஜருடைய ஸம்ப₃ந்த₄ப₃லத்தாலேயே மோக்ஷம் என்பது உறுதி.

## ஹாரீத பகவத் ஸம்வாதம்

74 – 76. முன்னொரு காலத்தில் ஹாரீதமஹரிஷியைப் பார்த்து "குற்றமற்ற மஹரிஷியே! கலியுகத்தில் வேத தர்மங்கள் அழிந்திருக்கும்போது என்னுடைய பக்தராய், எல்லா த₄ர்மங்களையும் அறிந்தவராய், புலனடக்கம் உள்ளவராய், உம்முடைய கோத்ரத்தில் உதித்தவரான ஒருவர் சாரீரகஸூத்ரமாகிய ப்₃ரஹ்ம ஸூத்ரத்திற்குப் பெரிய பாஷ்யம் எழுதப் போகிறார். அவருடைய ஸம்ப₃ந்த₄ம் பெற்ற சிஷ்யபரம்பரையில் உள்ள அனைவரும்

७६. तस्य सम्बन्धिनः शिष्याः सुराणामपि दुर्गमम् ।
मामवाप्यैव ते सर्वे गमिष्यन्ति परां गतिम् ॥
७७. पुराऽन्तेवासिनः केचित् यतीन्द्रस्यान्तरङ्गिणः ।
निपीड्य चरणौ गाढं इदं वचनमब्रुवन् ॥
७८. यतिराज दयासिन्धो शृणु विज्ञापनं गुरो ।
यादवाचलमाहात्म्ये श्लोकोऽयं विद्यते किल ॥
७९. अनन्तः प्रथमं रूपं द्वितीयं लक्ष्मणस्तथा ।
तृतीयं बलरामश्च कलौ कश्चिद्भविष्यति ॥
८०. कश्चिच्छब्दस्य भगवन् नैजमर्थं वदाशु नः ।
बहुभिः प्रार्थितः शिष्यैः यतीन्द्रः स रहोऽब्रवीत् ॥

---

தேவர்களாலும் அடைய அரியவனை என்னை அடைந்து பரமபதத்திற்குச் செல்வார்கள்'' என்று எம்பெருமானால் சொல்லப்பட்டது.

## யாதவாசல மாஹாத்ம்யப் பொருள்

77—*82. முன்பொரு சமயம் யதிராஜருடைய அந்தரங்க₃ சிஷ்யர்களான சிலர் அவருடைய திருவடிகளைப் பிடித்துக்கொண்டு "கருணைக்கடலாம் யதிராஜரான ஆசார்யரே! எங்களுடைய விண்ணப்பத்தைக் கேட்பீராக. யாதவாசல மாஹாத்ம்யத்தில் 'அனந்தனாகிய ஆதிசேஷன் முதல் உருவம். இரண்டாவது உருவம் [திரேதாயுகத்தில்] இளையபெருமாளாகிற லக்ஷ்மணன். மூன்றாவது உருவம் [துவாபரயுகத்தில்] பலராமன், கலியுகத்தில் இவ்வாதிசேஷன் மற்றொரு அவதாரம் எடுக்கப் போகிறார்' என்னும் ஶ்லோகம் உள்ளது. 'கலியுகத்தில் ஒருவர்'' என்று சொல்லப்பட்டதின் உண்மைப்பொருளை தேவரீரே எங்களுக்குத் தெரிவிக்க வேண்டும்'' என்று விண்ணப்பித்தனர். இவ்வண்ணமாகப் பல சிஷ்யர்களால் பிரார்த் க்கப்பெற்ற யதிராஜர் ரஹஸ்யமாக அவர்களைப் பார்த்து ''அந்த ஶ்லோகத்தின் பொருள் நானே'' என்று அருளிச்செய்தார். ஆகையால் கலியுகத்தில் ஆதிசேஷனின் நேர் அவதாரமாயிருப்பவர் ராமாநுஜரே.

८१. अहमेवेति तस्यार्थः कलौ रामानुजः स्मृतः ।
अतो रामानुजं भूम्यां लोकरक्षणहेतवे ।

८२. अवतीर्णं विजानीहि चानन्तं सर्वमुक्तिदम् ।
भट्टार्यवचसा तेन सन्तुष्टः च्छिन्नसंशयः ॥

८३. असद्यतिः पुनः प्राह वचनं गुरुपुङ्गवम् ।
ततः संप्राप्तसर्वार्थो नाथयोगी महायशाः ॥

८४. किं चकार गुरुश्रेष्ठ! तद्वृत्तान्तं वदाशु मे ।
तस्य तद्वचनं श्रुत्वा भट्टार्यस्तमथाऽब्रवीत् ॥

८५. वेदान्तिन्नाथयोगीन्द्रः प्राप्तसर्वार्थसञ्चयः ।
शठारिसेवैकरतः तत्प्रबन्धमनुत्तमम् ॥

---

ஆகையால் இவ்வுலகங்களை ரக்ஷிப்பதற்காகத் திருவநந்தாழ்வானே அனைவருக்கும் முக்தியளிக்கும் ராமாநுஜராக அவதரித்திருக்கிறார் என்று அறிவீராக. [என்று பட்டர் அருளிச்செய்தார்]

## நஞ்சீயரின் கேள்வி

82*—*84. ஸ்ரீபராசரபட்டருடைய இந்த வார்த்தையாலே உகந்து ஐயம் நீங்கப்பெற்ற நஞ்சீயர் ஆசார்யஶ்ரேஷ்டரைப் பார்த்து, "ஆசார்யஶ்ரேஷ்டரே! சடகோபரிடமிருந்து எல்லா அர்த்தங்களையும் பெற்ற பெரும் புகழாளரான நாதமுனிகள் என்ன செய்தார் என்னும் செய்தியை எனக்கு விரைவில் கூறுவீராக" என்று மறுபடியும் வார்த்தை சொன்னார்.

## ராஜகோபாலனின் நிர்மாணம்

84*—*89. நஞ்சீயரின் அந்த வார்த்தையைக் கேட்டு, பட்டர் பின்வருமாறு கூறலுற்றார்:— வேதாந்தியே!

८६. पठंस्तत्सन्निधौ भक्त्या तत्कैङ्कर्यपरोऽनिशम् ।
तत्र विस्मृतगोपालः कञ्चित्कालमुवास सः ॥

८७. स तदा राजगोपालः स्वप्ने नाथस्य योगिनः ।
प्रसन्नः प्राह वेदान्तिन् सर्वलोकहितं वचः ॥

८८. शीघ्रं मत्पुरमायाहि गुरुणाज्ञापितोऽधुना ।
शमादिगुणयुक्तेभ्यश्च वैष्णवेभ्यः प्रदाय तान् ॥

८९. दिव्यप्रबन्धान् सकलान् लोकसंरक्षणं कुरु ।
ततस्तत्सर्ववृत्तान्तं सन्निधौ गुरुदेवयोः ॥

---

நாதமுனிகள் எல்லா அர்த்தங்களையும் சடகோபரிடமிருந்து பெற்று அவருக்குக் கைங்கர்யம் செய்வதிலேயே ஈடுபட்டவராய், அவருடைய ஒப்பற்ற திவ்யப்ரபந்தங்களை அவருடைய ஸந்நிதியில் பக்தியுடன் பாராயணம் செய்துகொண்டு தினந்தோறும் அவருக்குப் பணிசெய்பவராய், ராஜகோபாலனையும் மறந்து திருக்குருகூரிலேயே சிலகாலம் வாழ்ந்து வந்தார். வேதாந்தியே! அப்போது நாதமுனிகளின் கனவில் ராஜகோபாலன் காட்சியளித்தவனாய், "உமது ஆசாரியரான சடகோபரால் நியமிக்கப் பெற்றவராய் இப்போதே விரைவில் என் ஊரான காட்டுமன்னார் கோயிலுக்கு வந்து சேருவீர். புலனடக்கம் முதலான குணங்களையுடைய ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அந்தத் திவ்யப்ரபந்தங்கள் அனைத்தையும் உபதேசித்து உலகைக் காப்பீராக" என்னும் அனைத்துலகுக்கும் நன்மைதரும் வார்த்தையை அருளினான்.

९०. विज्ञाप्य ताभ्यां नाथार्यः स तदाज्ञापितो महान् ।
श्रीकुम्भकोणनगरमवाप सुमहायशाः ॥

९१. अपर्याप्तामृतं तत्र शार्ङ्गपाणिं ननाम सः ।
लीनाः प्रबन्धा येनाद्यं सर्वे ते पुनरुद्धृताः ॥

९२. संप्रहृष्टोऽथ नाथार्यः श्रीहरेश्शार्ङ्गिणोऽनघ ।
दिव्यसूर्यभिधां तस्य सन्तुष्टः प्रददौ ततः ॥

९३. अपर्याप्तामृतार्याख्यं तं वदन्ति बुधास्ततः ।
ततोऽगमत्पुरं शीघ्रं वीरनारायणाभिधम् ॥

९४. प्रणम्य राजगोपालं भक्त्या तत्सन्निधौ तदा ।
विज्ञाप्य तच्च सकलं तेनानुज्ञापितो गुरुः ॥

---

## ஆராவமுதாழ்வார்

89*—*93. அதற்குப்பின அச்செய்தி முழுவதையும் ஆசார்யரான சடகோபரிடமும் ஆதிப்பிரானிடமும் விண்ணப்பித்து விட்டு, பெரும்புகழாளரான நாதமுனிகள் திருக்குடந்தை நகருக்கு வந்து சேர்ந்தார். அங்கு ஆராவமுதனுகிற சார்ங்கபாணியை அவர் வணங்கினர். மறைந்திருந்த திவ்யப்ரபந்தங்களெல்லாம் உலகில் அவராலேயே மீண்டும் வெளிப்பட்டனவன்றே. குற்றமற்ற வேதாந்தியே! அக்காரணத்தினுல் மிக உகந்த நாதமுனிகள் சார்ங்கபாணியாகிற எம்பெருமானுக்கு 'ஆழ்வார்' என்னும் திருநாமத்தை உகப்புடன் அளித்தார். அதிலிருந்து அறிவாளிகள் அவரை 'ஆராவமுதாழ்வார்' என்றே வழங்குகின்றனர்.

## திவ்யப்ரபந்தங்களை தேவகானத்தில் அமைத்துப் பரப்புதல்

93*—106. குற்றமற்ற வேதாந்தியே! அதற்குப் பின் நாதமுனிகள் விரைவில் வீரநாராயணபுரத்திற்கு

९५. श्रीवैष्णवेभ्यस्सर्वेभ्यस्तान् सर्वान् द्राविडागमान् ।
कृपयैवोपदिश्याशु जगत्सर्वमपालयत्

९६. अचिन्तयत्ततो धीमान् वेदान्तिन्नाथयोगिराट् ।
शठकोपोऽज्ञमा मह्यं प्रबन्धान् प्रददौ किल ॥

९७. तन्निष्क्रियार्थं लोकेऽस्मिन् मया शिष्येण विस्तृतम् ।
तत्प्रबन्धप्रवचनं कर्तव्यं सम्यगेव हि ।

९८. इति सञ्चिन्त्य वेदान्तिन् मतिमान् नाथयोगिराट् ।
भागिनेयद्वयेनाथ प्राक्पश्चात्पुरवासिना

९९. देवगानयुतं सम्यक् तं प्रबन्धमकारयत् ।
यथोदात्तानुदात्तादि सर्वाणि विविधानि च ॥

१००. वेदव्यासस्तु भगवान् सम्यग्वेदेष्वकल्पयत् ।
तथा द्राविडवेदेऽपि कल्पयित्वा स्वरांश्च सः ॥

---

வந்து சேர்ந்தார் ராஜகோபாலனை பக்தியுடன் வணங்கி அப்போதே அந்த திவ்யப்ரபந்தங்களனைத்தையும் அவர் திருமுன்பே விண்ணப்பித்து அவர் அனுமதியைப்பெற்று, ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவருக்கும் கருணையாலே உபதேசித்து விரைவிலேயே உலகனைத்தையும் ரக்ஷித்தார். அதற்குப்பின் அறிவாளியான நாதமுனிவர் "சடகோபர் எனக்குத் திவ்யப்ரபந்தங்களை நன்கு உபதேசித்தாரன்றோ! அதற்குக் கைம்மாறு செய்வதற்காக சிஷ்யனான நான் அவற்றை உலகெங்கும் நன்கு பரவும்படி செய்ய வேண்டும்" என்று சிந்தித்தார். இவ்வண்ணமாகச் சிந்தித்தபின் அறிவாளியான நாதமுனிகள் மேலையகத்தாழ்வான், கீழையகத்தாழ்வான் என்னும் தம்முடைய இரண்டு மருமக்களைக் கொண்டு திவ்யப்ரபந்தத்தை தேவகானத்தோடு சேர்த்து நன்கு இசைக்கும்படி செய்

१०१. प्रबन्धं देवगानेन जगावग्रे श्रियः पतेः ।
ततः संशिक्षितौ तेन मातुलेन महात्मना ॥

१०२. तौ भागिनेयौ मधुरस्वरौ श्रीवैष्णवोत्तमौ ।
प्रबन्धं देवगानेन राजगोपालसन्निधौ ॥

१०३. अगायेतामहोरात्रमुत्सवादिषु चादरात् ।
यथा रामायणं सम्यक् पुरा कुशलवाविव ॥

१०४. ततः प्रभृति वेदान्तिन्! श्रीरंगेश्वरसन्निधौ ।
नित्यमव्याहतं सम्यक् श्रीनाथमुनिशासनात् ॥

१०५ तद्देवगानमद्यापि श्रूयते ह्युत्तमं महत् ।
एवं स नाथयोगीन्द्रो वेदान्तिन् रङ्गिशासनात् ॥

---

வித்தார். பகவான் வேதவ்யாஸர் எவ்வண்ணம் வேதங்களுக்கு உதா3த்தம் அநுதா3த்தம் முதலான பலவகைப்பட்ட ஸ்வரங்களை ஏற்படுத்தினரோ, அவ்வண்ணமே நாதமுனிகளும திராவிடவேதத்திற்கு ஸ்வரங்களை ஏற்படுத்திஸ்ரீமந்நாராயணன் திருமுன்பே திவ்யப்பிரபந்தங்களைத் தேவகானத்தில் பாடினர். அதற்குப்பின் மாதுலர் (மாமா) ஆன அந்தநாதமுனிகளாகிற மஹாத்மாவாலே கற்பிக்கப்பட்ட மருமக்களாகிற சிறந்தஸ்ரீவைஷ்ணவர்கள்இருவரும் இனிய குரலையுடையவர்களாய், முற்காலத்திலே குசலவர்கள் ராமனுக்கு முன்னல் ஸ்ரீராமாயணத்தைப் பாடியது போலே ராஜகோபாலன ஸந்நிதியில் தினந்தோறும் உத்ஸவம் முதலான சமயங்களில் திவ்யப்ரபந்தங்களை ஆர்வத்துடன் பாடினர்கள். வேதாந்தியே! அதற்குப்பின் ஸ்ரீநாதமுனிகளின் நியமனத்தாலே ஸ்ரீரங்கநாதனுடைய ஸந்நிதியில் மிகச் சிறந்ததான அந்த தேவகானம் தினந்தோறும் தடை

१०६. संलीनं सम्यगुद्धृत्य तं प्रबन्धं महत्तरम् ।
शिष्येभ्यो बोधयन्सम्यक् सर्वेभ्यस्सकलावनौ ॥
गुरुं प्रकाशयन् सम्यक् उवास स महायशाः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे नाथमुनेर्भविष्यदाचार्य-
विग्रहप्राप्तिर्नामाष्टोत्तरशततमोऽध्यायः ॥

नवोत्तरशततमोऽध्यायः ॥

१. अथ वाराङ्गना काचित् देवगानविशारदा ।
मर्त्यगानैकनिपुणा काचिदन्या बभूव ह ॥

२. विद्यावैदग्ध्यहेतोस्ते स्पर्धमाने स्त्रियौ तदा ।
जग्मतुश्चोलभूपालसन्निधिं जयकाङ्क्षया ॥

---

யற்றதாய் இன்றளவும பாடப்படுகிறது. இவ்வண்ண மாகப் பெரும்புகழாளரான நாதமுனிகள் ஸ்ரீரங்கநாதனின் நியமனத்தாலே, மறைந்திருந்த மிகச்சிறந்த திவ்யப்ர பந்தங்களை நன்கு வெளிப்படுத்தி, உலகம் முழுவதிலும் எல்லா சிஷ்யர்களுக்கும் நன்கு உபதேசிப்பவராய், அதன் மூலம் ஆசார்யரான சடகோபரை உலகறியச் செய்து கொண்டு வாழ்ந்து வந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் பட்டார்ய வேதாந்தி ஸம்வாதத்தில் நாதமுனிகள் பவிஷ்யதாசார்யவிக்ரஹத்தைப் பெற்றதைக் கூறும் நூற்றெட்டாம் அத்தியாயம் நிறைவுற்றது.

## நூற்றொன்பதாம் அத்தியாயம்

### நாதமுனிகளின் சாமதசை

### தேவகானமும் மனுஷ்ய கானமும்

1—*14. அக்காலத்தில் தாஸிகுலத்தில் உதித்த இரு பெண்பிள்ளைகள் இருந்தார்கள். ஒருத்தி தேவகானத்தில் வல்லவள். மற்றொருத்தி மனுஷ்ய கானத்தில் மாத்திரம் வல்லவள். கானவித்யையில் போட்டி ஏற்பட்டதாலே, அவ்விருவரும் வெற்றியை நிர்ணயிப்பதற்காகச் சோழ

३. तयोर्वृत्तान्तमाकर्ण्य चोलराजो महीपतिः ।
आनयामास विबुधांस्तत्परीक्षैकहेतुना ॥

४. राजाज्ञया बुधास्सर्वे नानादेशनिवासिनः ।
क्रिमिकण्ठस्य चोलस्य नगरं जग्मुरञ्जसा ॥

५ तदा राजसमास्थाने विद्वत्सङ्घविराजिते ।
अगायेतां क्षितीशस्य शासनाद्वारयोषितौ ॥

६ देवगानवती सम्यग्देवगानमगायत ।
मर्त्यगानवती सम्यक् मर्त्यगानमगायत ॥

७. मर्त्यगानेन मनुजाः सन्तुष्टाश्च तथा नृपाः ।
सन्मानं बहुशश्चक्रे तस्यै वारस्त्रियै तदा ॥

८. ते तदज्ञानदोषेण देवगानस्य मानवाः ।
तस्यामनादरं चक्रुः अङ्गनायां नृपादयः ॥

---

ராஜாவிடம் சென்றனர். அவர்களுடைய அந்த வரலாற்றைக் கேள்வியுற்ற சக்ரவர்த்தியான சோழராஜா அவர்களைப் பரீக்ஷிப்பதற்காக சங்கீத சாஸ்திரத்தில் வல்ல அறிவாளிகளை ஸபைக்கு அழைத்துவரச்செய்தான். அரசனின் ஆணையாலே பல தேசங்களில் வாழும் சங்கீத வித்வான்கள் அனைவரும் [பிற்காலத்தில் கிருமிகண்டனின் தலைநகரமாயிருந்த] கங்கைகொண்ட சோழபுரத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அப்போது சங்கீத வித்வான்கள் நிறைந்த அந்த ராஜசபையில் அரசனின் ஆணையாலே அவ்விரு தாஸிகளும் பாடினார்கள். தேவகானமறிந்தவள் தேவகானத்தை அழகாகப் பாடினாள். மனுஷ்யகானமறிந்தவள் மனுஷ்யகானத்தை நன்றாகப் பாடினாள். மனுஷ்ய கானத்தினாலே அரசர் முதலான மனிதர்கள் அனைவரும் உகந்தார்கள். அரசனும் அப்போது அந்த மனுஷ்ய கானம் அறிந்தவளுக்குப் பலவிதமான பரிசுகளை அளித்

९. ततोऽवमानिता तेन भूपेन निखिलैर्जनैः ।
प्रज्ञावती तदा चैवं वारस्त्री समचिन्तयत् ॥
१०. देवगानमिदं देवा जानन्त्येव न मानवाः ।
गानं तदेतत्कर्तव्यं देवतासन्निधौ किल ॥
११. इत्येवं सम्यगालोच्य सा वारवनिता तदा ।
चचार निखिलान् दिव्यदेशान् भक्त्या श्रियः पतेः ॥
१२. वीरनारायणपुरं ततो गत्वाऽङ्गना तदा ।
जगौ सम्यग्देवगानं राजगोपालसन्निधौ ॥
१३. तदेतत्सम्यगाकर्ण्य देवगानविशारदः ।
श्रीनाथयोगी सन्तुष्टः स तस्यै वारयोषिते ॥
१४. तीर्थं प्रसादं मालां च परिवट्टं ददौ तदा ।
प्रणम्य नाथयोगीन्द्रं सा वारवनिता तदा ॥

---

தான். அரசன் முதலான மனிதர்கள் தேவகானத்தை அறியாமையாலே தேவகானமறிந்த ஸ்திரீயை அலட்சியப் படுத்தினார்கள். அரசனாலும் மற்ற ஜனங்களாலும் அவ மதிக்கப்பட்ட அறிவாளியான அந்த ஸ்திரீ "இந்த தேவ கானத்தை தேவர்கள் அறிவார்களேயொழிய மனிதர்கள் அறியமாட்டார்கள். ஆகையால் இந்த தேவகானத்தை நாம் தெய்வ ஸந்நிதியிலேயே பாடவேண்டும் என்று நினைத்தாள் இப்படி நன்கு நினைத்து. அந்ததாஸி அது முதல் ஸ்ரீமந்நாராயணனுடைய எல்லா திவ்யதேசங்க ளுக்கும் பக்தியுடன் செல்லத் தொடங்கினாள். அப்போது வீரநாராயணபுரத்தை அடைந்து அவள் ராஜகோபாலன் திருமுன்பே தேவகானத்தை நன்கு பாடினாள். தேவ கானத்தில் வல்லவரான நாதமுனிகள் அதை நன்கு செவியுற்று உகந்தவராய், அந்தப் பெண்பிள்ளைக்குப் பெரு மாளுடைய தீர்த்தத்தையும் பிரசாதத்தையும் பரிவட்டத் தையும் அளித்தார்.

१५. चोलराजान्तिकं गत्वा वचनं चेदमब्रवीत् ।
वीरनारायणपुरे देवगानविशारदः ॥
१६. धीमान्नाथमुनिर्नाम वर्तते वैष्णवोत्तमः ।
स एव वेत्ति चोलेन्द्र देवगानं ममाऽधुना ॥
१७. तदङ्गीकृत्य वचनं चोलेन्द्रो वारयोषितः ।
आनयामास चोलेन्द्रः सन्मानेन महौजसम् ॥
१८. तेन राज्ञा समाहूतो राजान्तिकमुपागतः ।
राज्ञा प्रत्युद्गतो दूरं भक्त्या संपूजितस्तथा ॥
१९. वेदान्तिन्नथ योगीन्द्रः राजगोष्ठीं विवेश सः ।
तदा राजा समाहूय ते चोभे वारयोषितौ ॥

---

## நாதமுனிகளும் தேவகானமும்

14* —*35. அந்த தேவதாஸி நாதமுனிகளை வணங்கி, சோழராஜாவிடம் சென்று ''சோழராஜவே! வீரநாராயண புரத்தில் தே₃வகா₃னத்தில் வல்லவரும், அறிவாளியும், சிறந்த வைஷ்ணவருமான நாத₂முனிகள் இருக்கிறார். அவரே என்னுடைய தே₃வகா₃னத்தை இப்போது அறிய வல்லவர்'' என்னும் வார்த்தையைக் கூறினாள். சோழ ராஜாவும் தே₃வத₃ாஸியின் அந்த வார்த்தையை ஏற்றுக் கொண்டு பெரிய தேஜஸ்வியான நாத₂முனிகளை, சிறந்த உபசாரங்களுடன் தன் ஸபை₄க்கு வரவழைத்தான். வேத₃ாந் தியே! அந்த அரசனால் அழைக்கப்பட்ட நாத₂முனிகள் அரசனால் வெகுதூரத்தில் எதிர்கொண்டழைக்கப் பெற்று பக்தியுடன் ஆராதி₄க்கப்பெற்றவராய், அரசனுக்கு அருகில் வந்து ராஜஸபை₄யில் நுழைந்தார். அப்போது அரசன் அந்த இரண்டு த₃ாஸிகளையும் அழைத்து, நாத₂முனியின்

२०. नाथार्यसन्निधावाज्ञामदिशत् गीतकर्मणि ।
मर्त्यगानं देवगानं तद्द्वयं समवर्तत ॥

२१. मर्त्यगानेन मनुजाः पूर्ववत्संजहर्षिरे ।
एक एव स नाथार्यो देवगानान्मुदं ययौ ॥

२२. चोलेन्द्रो मतिमान्नाथमुनिमेयं वचोऽब्रवीत् ।
ज्ञातुं महद्देवगीतेरुपायं ब्रूहि नः स्फुटम् ॥

२३. तदङ्गीकृत्य वचनं नाथार्यो भूपमब्रवीत् ।
शृणु राजन् प्रवक्ष्यामि देवगानस्य लक्षणम् ॥

२४. सलक्षण देवगान यो वा वेत्ति महीतले ।
स तालनादश्रवनात् वेत्ति तालप्रमाणताम् ॥

---

திருமுன்பே அவ்விருவரையும் பாட நியமித்தான். அவ்விருவரும் முறையே மனுஷ்ய கூ₃ானத்தையும் தே₃வகூ₃ானத்தையும் பாடினார்கள். மனுஷ்ய கூ₃ானத்தாலே முன்போலவே அங்கிருந்த மனிதர்கள் அனைவரும் ஆனந்த₃மடைந்தார்கள். தே₃வகூ₃ானம் பாடப்பட்டபோது அதனால் நாத₂முனிகள் ஒருவரே ஆனந்த₃மடைந்தார். அறிவாளியான சோழராஜா நாத₂முனிகளைப் பார்த்து "தே₃வகூ₃ானத்தின் பெருமையை நாங்களும் அறிவதற்குரிய உபாயத்தைத் தெளிவாகக் கூறுவீர்" என்று உரைத்தான். அவ்வார்த்தையை ஏற்றுக்கொண்டு நாத₂முனிகள் அரசனைப் பார்த்து, "அரசனே! தே₃வகூ₃ானத்தின் லக்ஷணத்தைக் கூறுகிறேன். கேட்பாயாக, லக்ஷணத்தோடு கூடிய தேவகானத்தை இவ்வுலகில் எவன் அறிகிறானோ, அவன் தாளத்தின் ஒலியைக் கேட்டவுடன் அந்தத் தாளத்தின் எடையை அறிகிறவனாயிருப்பான்" என்று உரைத்தார். அவருடைய இந்த வார்த்தையைக் கேட்ட அரசன் நாற்பத்துமூன்று தாளங்களை அப்பொழுதே அந்த ஸபை₄க்கு எடுத்துவரச் செய்தான்.

२५. इत्युक्तं तद्वचः श्रुत्वा तदानीमेव भूपतिः ।
चत्वारिंशोत्तरं तालत्रितयं चानयत्ततः ॥
२६. आनीयाथ स नाथार्यसन्निधौ विस्मयान्वितः ।
शृण्वतां चैव सर्वेषां प्रत्येकं चोलभूपतिः ॥
२७. वादयित्वाऽथ तत्तालप्रमाणं तत्सभान्तरे ।
जिज्ञासुस्तत्र नाथार्यं भूमिपालस्तमब्रवीत् ॥
२८. निनदः कांस्यतालानां श्रुतः खलु मुने त्वया ।
प्रमाणमुच्यतां नाथमुने सम्यगितीरितम् ॥
२९. राजवाक्यं ततः श्रुत्वा यत् ज्ञातं तेन भूभृता ।
तावदेव मुनिः प्राह राजा तुष्टोऽभवत्तदा ॥
३०. यत्तालनादश्रवणात् यदुक्तं यत्प्रमाणतः ।
तत्प्रमाणेन तुलया तद्विशोध्य स भूमिपः ॥

வியப்புற்ற அந்தச் சோழராஜா அத்தாளங்கள் வந்தவுடன் நாத₂முனிகளின் திருமுன்பே அனைவரும்கேட்டுக் கொண்டிருக்கும்போது ஒவ்வொரு தாளத்தையும் ஒலிக்கச் செய்து அந்தத் தாளங்களின் எடையை அந்தச் சபையிலேயே அறியவிரும்பியவனாய், நாத₂முனிகளைப் பார்த்து ''நாத₂முனிவரே! இந்த வெண்கலத் தாளங்களின் ஒலியை நீர் கேட்டீரல்லவா? அவற்றின் எடைகளைக் கூறுவீராக,'' என்று கேட்டான். நன்கு அரசனால் சொல்லப்பட்ட அந்த ராஜவாக்கியத்தைக் கேட்டு நாத₂முனி ஒவ்வொரு தாளத்தின் எடையையும் அப்போதே கூறினார் அரசனும் அப்போது மிகவும் உகந்தான். தாளத்தின் ஒலியைக் கேட்ட நாத₂முனிகள் கூறிய அந்தந்தத் தாளத்தின் எடையைத் தராசுகொண்டு நிறுத்து, சரியென்று அறிந்து, ஒரு சிறிதும் கூடுதலோ குறைவோ இன்றியிருப்பதைப் பார்த்து மிகவுகந்து வியப்புற்றவனான அவ்வரசன் நாத₂முனிகளின் திருவடித்தாமரையை வணங்கி,

३१. तस्य न्यूनाधिकाभावात् संप्रहृष्टः स तं तदा ।
महाश्चर्ययुतो नथापादकञ्ज प्रणम्य च ॥

३२. धनं बहुविधं सम्यगर्पयामास भक्तितः ।
निराकृतशिवब्रह्मवैभवो नाथयोगिराट् ॥

३३. निःस्पृहस्तद्धनं सर्वं निराकृत्य महायशाः ।
मास्तु राजधनं मेऽद्य चेति सम्यगुवाच ह ॥

३४. कृत्वाशिषं नृपे प्रीत्या वीरनारायणं ययौ ।
नाथयोगिप्रसादेन देवगानविशारदा ॥

३५. राजप्रसादसंपन्ना सा सन्तुष्टाऽभवत्तदा ।
पूर्ववत् राजगोपालदेवस्यानिशमादरात् ॥

३६. कैङ्कर्यं विदधत्सम्यगतिष्ठत स योगिराट् ।
महान्तमधिकं वीक्ष्यप्रभावं नाथयोगिनः ॥

---

ப₄க்தியுடன் அவருக்குப் பலவகைப்பட்ட செல்வங்களை ஸமர்ப்பித்தான். பிரமன் சிவன் முதலானோருடைய செல்வங்களையும் ஒரு பொருளாக மதிக்காதவராய், ஆசையற்றவராய், பெரும் புகழாளரான நாத₂முனிகள் அந்தச் செல்வம் முழுவதையும் ஏற்கமறுத்து, ''எனக்கு அரசனின் செல்வம் தேவையில்லை'' என்று கூறினார். அரசனுக்கு அன்புடன் ஆசீர்வாதம் செய்து வீரநாராயண புரத்திற்குத் திரும்பிச் சென்றார். தே₃வகா₃னத்தை அறிந்த தே₃வதா₃ஸி நாத₂முனிகளின் அருளாலே ராஜாவின் அநுக்₃ரஹத்தைப் பெற்று அப்போதே மிக உகந்தாள்.

## நாத₂முனிகளின் சிஷ்யர்கள்

35*—43 :—அதற்குப்பின் ராஜகோபாலப்பெருமானுடைய கைங்கரியத்தை அன்புடன் தினந்தோறும் முன்போலே செய்து கொண்டு நாத₂முனிகள் வாழ்ந்து வரலானார்.

३७. सञ्जातभक्तिमात्रास्ते जनाः सम्यक् समाहिताः ।
तस्यान्तेवासिनो धीरास्तत्रैकादश विश्रुताः ॥

३८. पद्माक्षः कुरुकानाथः प्राक्पश्चात्पुरवासिनौ ।
भागिनेयौ महाभागौ देवगानविशारदौ ॥

३९. श्रीकृष्णलक्ष्मीनाथार्यप्रमुखा ये महौजसः ।
पद्माक्षप्रमुखेभ्योऽथ शिष्येभ्यो निखिलांस्तदा ॥

४०. दर्शनार्थांस्तदा सम्यक् प्रददौ नाथयोगिराट् ।
अहो द्वयस्य माहात्म्यं अहो वीर्यमहो बलम् ॥

४१. मन्त्ररत्नं शुभकरं वेदसारं सनातनम् ।
एवं सुश्लाघितं सम्यक् द्वयार्थं मोक्षहेतुकम् ॥

---

நாத₂முனிகளுடைய மிகச்சிறந்த பெருமையைக் கண்டு அவரிடம் ப₄க்தியுண்டாகப் பெற்ற பலர் அவரை நன்கு ஆஶ்ரயித்தனர். அவர்களில் அறிவாளிகளான பதினொருவர் அவருடைய சீடர்கள் என்று பிரஸித்திபெற்றவர்கள். (1) உய்யக்கொண்டார் எனப் புகழ் பெற்ற புண்ட₃ரீகாக்ஷர் (2) திருக்குருகைக்காவலப்பன் (3) (4) தே₃வகா₃னத்தில் வல்ல மேலையகத்தாழ்வான் கீழையகத்தாழ்வான் எனும் இரு மருமக்கள் (5) திருக்கண்ணமங்கை ஆண்டான் முதலானவர்களே அப்பெரும் புகழாளர்கள். புண்ட₃ரீகாக்ஷர் முதலான அந்த சிஷ்யர்களுக்கு நாத₂முனிகள் தரிசனார்த்தங்கள் அனைத்தையும் நன்கு உபதேசித்தார். "த்₃வயத்தின் பெருமையை என்னென்று சொல்லுவது? அதன் வீரியத்தையும் வலிமையையும் என்னென்று சொல்லுவது? அதுவே மந்த்ரங்களில் ரத்னம் போன்றது; மங்க₃ளத்தைச் செய்வது; வேத₃ங்களின் ஸாரமானது. மிகப்பழமையானது." என்று ஶாஸ்த்ரங்களில் மிகப்புகழ்பெற்றதாய், மோக்ஷத்தை விளைப்பதான

४२. सहस्रगीतिप्रमुखान् सकलद्राविडागमान् ।
सर्वाणि वेदशास्त्राणि वेदाङ्गानि च सादरम् ॥
४३. उपदिश्याशु शिष्येभ्यः श्रीनाथमुनिपुङ्गवः ।
तस्थावष्टाङ्गयोगेन कञ्चित्कालं दृढव्रतः ॥
४४. निवृत्तयोगो वेदान्तिन्! ततः श्रीनाथयोगिराट् ।
शास्त्रं तन्न्यायतत्त्वाख्यं तथा पुरुषनिर्णयम् ॥
४५. धीमान् योगरहस्यं च त्रीण्येतान्यकरोत्तदा ।
उपदिश्याशु शिष्येभ्यः तानि शास्त्राणि देशिकः ॥
४६. स भूयोऽष्टाङ्गयोगेन कञ्चित्कालमतिष्ठत ।
योगास्थितस्य नाथस्य श्रुत्वा वैभवमद्भुतम् ॥

---

த்₃வயத்தின் பொருளையும் திருவாய்மொழி முதலான தமிழ் வேத₃ங்களான தி₃வ்யப்ரப₃ந்த₄ங்கள் அனைத்தையும் எல்லா வேத₃ஶாஸ்த்ரங்களையும் வேதா₃ங்க₃ங்களையும் விரைவில் அன்போடு சிஷ்யர்களுக்கு நன்கு உபதேசித்து, ஸ்ரீ நாத₂ முனிகள் உறுதியான விரதம் உடையவராய்ச் சிறிதுகாலம் அஷ்டாங்க₃யோகாப்பியாசத்தில் இருந்தார்.

## நாதமுனியின் கிரந்தங்கள்

44 - *46. வேதா₃ந்தியே! யோக₃நிலையிலிருந்து எழுந்தவுடன் அறிவாளியான ஸ்ரீ நாதமுனிகள் நியாய தத்வம், புருஷநிர்ணயம், யோக₃ரஹஸ்யம் என்னும் மூன்று ஶாஸ்த்ர க்₃ரந்த₂ங்களை இயற்றினர். அந்த க்₃ரந்த₂ங்களை சிஷ்யர்களுக்கு உபதேசித்து விட்டு, அவ்வாசார்யர் மறுபடியும் அஷ்டாங்க₃யோகா₃ப்₄யாஸத்தில் சிலகாலம் வாழ்ந்தார்.

४७. द्रष्टुकामश्चोलभूपो वीरनारायणं ययौ ।
प्रणम्य राजगोपालं योगारूढं च तं मुनिम् ॥

४८. राजा श्रीनाथमालोक्य जाताश्चर्यो बभूव ह ।
भक्त्या संसेव्य तं राजा प्रतस्थे नगरं तदा ॥

४९. श्रीकृष्णं तं नृपं मत्वा गोपस्त्रीभिर्विराजितम् ।
आगङ्गानगरं योगी भक्तिभावात्प्रदुद्रुवे ॥

५०. निवृत्तयोगं नृपतेः पश्चाद्धावन्तमञ्जसा ।
श्रीनाथयोगिनं शिष्या वीक्ष्य विस्मितचेतसः ॥

---

## நாத₂முனிகளும் அரசனும்

46*—55. யோக₃நிலையிலிருக்கும் நாத₂முனிகளுடைய ஆச்சர்யமான வைப₄வத்தைக் கேள்விப்பட்டு அவரைக் காண விரும்பியவனாய், சோழராஜா வீரநாராயண புரத்திற்கு வந்தான். ராஜகே₃ாபாலப் பெருமாளையும் யோக₃ நிலையிலிருக்கும் அந்த நாத₂முனிகளையும் வணங்கி, அவ்வரசன் ஸ்ரீநாத₂முனிகளைக் கண்டு மிகவும் வியப்புற்றான். அவரை ப₄க்தியுடன் ஸேவித்துவிட்டு அவ்வரசன் தன் தலை நகருக்கு அப்போதே சென்றான். (புறப்படும்போது அவனைப் பார்த்த நாத₂முனிகள்) கோ₃பஸ்த்ரீகளோடு சூழப்பெற்ற கண்ணனாகவே அவனை நினைத்து, நாத₂முனிகள் ப₄க்தி பா₄வத்தினால் கங்கைகொண்ட சோழபுரம் வரையில் அவனைப் பின் தொடர்ந்தார். யோக₃நிலையிலிருந்து விழித்தவராய், அரசனின் பின்னால் அன்புடன் செல்கின்றவரான ஸ்ரீநாத₂முனிகளைக் கண்டு வியப்புற்ற புண்ட₃ரீகாக்ஷர் முத

५१: पङ्कजाक्षदयो वेगात्तं संप्राप्य तदन्तिकम् ।
बाहुभिः परिरभ्याशु वचनं चेदमब्रुवन् ॥

५१. किन्निमित्तं भवान् स्वामिन्! नाथार्य परिधावसि ।
ब्रूहि तत्कारणं शीघ्रं अस्माकं गुरुपुङ्गव ॥

३५. स तद्वचनमाकर्ण्य जातस्मृतिरभाषत ।
श्रीकृष्णो गोपिकास्त्रीभिः तदा स्थित्वा मदन्तिके ॥

५४. किमप्युक्त्वा महद्वाक्यं वर्त्मनैवामुनाऽधुना ।
प्रयात इव मे भाति तस्मात् तं द्रष्टुमागतः ॥

५५. पद्मनेत्रप्रभृतयस्तच्छ्रुत्वा निखिला जनाः ।
तद्भक्तिपारवश्येन विस्मयं परमं ययुः ॥

---

லான சிஷ்யர்கள், விரைவில் அவருடைய அருகில்சென்று அவரைக் கைகளால் அணைத்துக்கொண்டு ''ஆசார்யரான நாத₂முனிகளே! எதற்காக நீர் வேகமாகச் செல்கின்றீர்? அதற்குரிய காரணத்தை விரைவில்எங்களுக்குக்கூறுவீராக'' என்று கேட்டார்கள். அந்த நாத₂முனிகள் அவர்களுடைய வார்த்தையைக் கேட்டு நினைவுகூர்ந்தவராய், ''ஆய்ச்சிகளோடு கூடிய கண்ணன் என் முன்னால் சிறிது நேரம் நின்றுவிட்டு, ஏதோ பெரிய வாக்யத்தையும் சொல்லிவிட்டு, இப்போதே இந்த வழியில் செல்லுவதாக எனக்குத் தோன்றுகிறது ஆகையால் அவனைக் காணவே வந்திருக்கிறேன்'' என்று கூறினார். அவ்வார்த்தையைக் கேட்டு, புண்ட₃ரீகாக்ஷர் முதலான அனைவரும், அவர் ப₄க்தி பரவசப்பட்டிருப்பதைக் கண்டு மிகவும் ஆச்சர்யத்தை அடைந்தனர்.

५६. भूयस्ततो नाथयोगी कञ्चित्कालं महामनाः ।
नीत्वा चाष्टाङ्गयोगेन पद्माक्षमवलोक्य तम् ॥

५७. कुरुकानाथनामानं शिष्यं वाचमथाब्रवीत् ।
अष्टाङ्गयोगं दास्यामि गृहाणाशु महामते ॥

५८ स तु तस्मै ददौ शीघ्रं योगमष्टाङ्गमुत्तमम् ।
शीघ्रं पद्माक्षमाहूय तमेवं वाक्यमब्रवीत् ॥

५९. त्वमप्येवमिमं योगं गृहाणाद्यमनुत्तमम् ।
स गुरोर्वाक्यमाकर्ण्य पद्माक्षस्तमभाषत ॥

६०. विद्यमाने शवे गेहे कल्याणं मे कथं भवेत् ।
स्वामिन् देहावसाने तु ग्रहीष्ये योगमुत्तमम् ॥

---

## சீடர்களுக்கு நியமனம்

56—*69. விசாலமான திருவுள்ளமுடைய நாத₂முனிகள் மறுபடியும் அஷ்டாங்க₃ யோக₃த்திலே சில காலத்தைக் கழித்துவிட்டு, புண்ட₃ரீகாக்ஷரைக் கடாக்ஷித்து விட்டு, குருகைக் காவலப்பன் என்னும் தம் சீடரைப் பார்த்து, ''பேரறிவாளரே! அஷ்டாங்க₃ யோக₃த்தை உமக்கு உபதேசிக்கிறேன்; விரைவில் பெற்றுக் கொள்வீராக'' என்று கூறினர். அவ்வண்ணமே அவருக்கு ஒப்பற்ற அஷ்டாங்க₃ யோக₃த்தை விரைவிலேயே உபதேசித்தார். உடனே புண்ட₃ரீகாக்ஷரை அழைத்து அவரைப் பார்த்து ''நீரும் இவரைப் போலவே பழையதும் ஒப்பற்றதுமான இந்த அஷ்டாங்க₃ யோக₃ரஹஸ்யத்தை உபதேசம் பெறுவீராக'' என்று உரைத்தார். ஆசார்யருடைய அந்த வாக்கியத்தைக் கேட்டு, புண்ட₃ரீகாக்ஷர் ''ஐயா! வீட்டிலே பிணம் கிடக்கும்போது அடியேன் மணம்

६१. तदङ्गीकृत्य वचनं पुनराह तमादरात् ।
तथाऽप्यद्य गृहाणेमां महतीं शठजित्कृतिम् ॥

६२. इत्युक्त्वा पद्मनेत्राय नाथार्यः कृपया तदा ।
सहस्रगीतिप्रमुखप्रबन्धार्थान् विशेषतः ॥

६३. दर्शनार्थांस्ततस्सर्वानुपदिश्य यथाविधि ।
दृष्ट्वेश्वरमुनिं पुत्रं इदं वचनमब्रवीत् ॥

६४. तेजस्वी ज्ञानसंपन्नः महान्कश्चिन्महायशाः ।
तव पुत्रो महातेजाः संभविष्यति पुत्रक ॥

---

புரிய முடியுமோ? இந்த ஶரீரத்தின் முடிவில் ஒப்பற்ற அந்த யோக₃த்தைப் பெறுகிறேன்'' என்று உரைத்தார். *(ப₄ாவக₃ர்ப்ப₄மான) அவருடைய அந்த வார்த்தையை ஏற்றுக்கொண்டு, நாத₂முனிகள் மறுபடியும் அன்புடன் அவரைப்பார்த்து, ''ஆயினும் நம்மாழ்வாருடைய பெரிய தி₃வ்யப்ரப₃ந்த₄த்தை இன்றே உபதேசம் பெறுவீராக'' என்று கூறி, புண்ட₃ரீகாக்ஷருக்கு அப்போதே திருவாய்மொழி முதலான திவ்யப்பிரபந்தங்களின் அர்த்தங்களையும், சிறப்பாக நம் தரிசனத்தின் அர்த்தங்களையும், மற்றும் ரஹஸ்யார்த்த₂ங்கள் முதலான அனைத்தையும் அருளாலே முறைப்படி அவருக்கு உபதேசித்து, தம் பிள்ளையான ஈஶ்வர முனியைப் பார்த்துப் பின்வருமாறு கூறினார்— ''பிள்ளாய்! பேரொளி பொருந்தியவனும், பேரறிவுடையவனும், பெரும் புகழாளனும், பெரும் குணவானுமான மஹாபுருஷன் ஒருவன் உனக்குப் பிள்ளையாகப் பிறப்பான்.

---

* உலகிலுள்ள ஜீவர்கள் அனைவரும் ஸ்வரூபஜ்ஞான மில்லாமல் ஆத்மநாசமடைந்தபிணம்போலிருக்க, நான் யோக₃த்தாலே மோக்ஷமடைந்து எப்பெருமானோடு மணம புரியமுடியுமோ என்று கருத்து.

६५. यामुनाचार्यनामाथ तस्य त्वं कुरु विश्रुतम् ।
शिष्यद्वयं समालोक्य भूयो वचनमब्रवीत् ॥

६६. मया भवद्भ्यामधुना दर्शनार्थाः प्रदर्शिताः ।
ये ये योगरहस्यार्थाः विशेषार्था महत्तराः ॥

६७ सर्वार्थास्तांस्तदा तस्मै मम पौत्राय सादरम् ।
यामुनायोपदिश्याशु ह्याज्ञया मे च तं शिशुम् ॥

६८. दर्शनस्थापकं धीरं कुरु तं भगवत्परम् ।
इत्यादिश्याथ वेदान्तिन् कृतकृत्यः स योगिराट् ॥

६९. योगारूढमतिर्भूयः कञ्चित्कालमतिष्ठत ।
अथ चोलनृपो भूयस्तं देशमगमत्तदा ॥

---

'யமுனைத்துறைவன்' என்னும் கண்ணனுடைய புகழ்பெற்ற பெயரை அவனுக்கு நீ இடுவாயாக,'' என்று. வேத₃ாந்தியே! அந்த நாத₂முனிகள் தம்முடைய முற்கூறிய இரண்டு சீடர்களையும் பார்த்து, மறுபடியும் பின்வருமாறு கூறினார்— ''என்னாலே உங்கள் இருவருக்கும் இப்போது என்னிடமுள்ள தரிசனார்த்தங்கள் அனைத்தும் உபதேசிக்கப் பெற்றன. நான் உங்களுக்கு உபதேசித்த யோக₃ரஹஸ்யார்த்த₂ங்களும் அவற்றிலும் சிறந்த தரிசனார்த்தங்களுமாகிய அனைத்தையும் என்னுடைய பேரனை அந்த யமுனைத்துறைவனுக்கு விரைவிலேயே அன்புடன் உபதேசித்து எனது ஆஜ்ஞையாலே அந்தக் குழந்தையையும, எம்பெருமானிடம ஈடுபட்டவனாகவும், பேரறிவாளனாகவும், இந்தத் தரிசனத்தை நிலைநிறுத்துபவனாகவும் செய்வீர்களாக'' என்று நியமித்துவிட்டு, தம் கடமையை நிறைவேற்றியவரான அந்த நாத₂முனிகள் மறுபடியும் யோக₃ாப்₄யாஸம் செய்யத் திருவுள்ளங் கொண்டவராய், சிலகாலம் யோகதசையிலே வாழ்ந்தார்.

७०. मृगयारसिको भूत्वा सबलः शबराकृतिः ।
चरित्वाथ मृगान् हत्वा कानने तत्र तत्र च ॥

७१. प्रत्याहृत्य स भूपालः स्वां पुरीमभ्यगात्तदा ।
ततो नाथार्यदुहिता पितरं गृहमागतम् ॥

७२. निवृत्तयोगं संवीक्ष्य वचनं चेदमब्रवीत् ।
ताताधुना राजपुत्रौ महाभागौ महौजसौ ॥

७३. चन्द्रवर्णाम्बरलसत्कमनीयशिखण्डकौ ।
धनुर्बाणधरौ कट्यां बद्धखड्गौ महाबलौ ॥

७४. पुण्डरीकविशालाक्षौ पूर्णचन्द्रनिभाननौ ।
सुकुमारतनू हृद्यौ दृष्टूगां नयनोत्सवौ ॥

---

## அரசனின் வருகையைப் பெண் அறிவித்தல்

69*—77. அதற்குப் பின் ஒரு சமயத்தில் சோழராஜா வேட்டையாட விரும்பி, தன்னுடைய ஸேனையோடு கூடியவனாய் வேட்டையாடும் வில்லிவேடம் பூண்டு, நாதமுனிகளின் திருமாளிகைக்கு வந்தான். அவரைப்பற்றி விசாரித்த பின், காட்டில் ஆங்காங்கு ஸஞ்சரித்து மிருகங்களை வேட்டையாடி அவ்வரசன் மீண்டும் தன் தலைநகருக்குத் திரும்பினான். யோகாப்பியாசம் முடிந்தபின் வீட்டிற்கு வந்த நாதமுனிகளைப் பார்த்து, "ஐயா, இப்போது தான் மிகச்சிறந்த பாக்யசாலிகளும், மிகச்சிறந்த ஒளியுடையவர்களும், சந்திரன் போல் வெளுத்த ஆடையைத் தலையில் அழகாகச் சுற்றிக்கொண்டிருப்பவர்களும், வில்லையும் அம்பையும் ஏந்தியவர்களும், இடுப்பில் கத்தியை ஏந்தியவர்களும், பெரும் பலமுள்ளவர்களும், தாமரை போன்ற விசாலமான கண்களையுடையவர்களும், பூர்ண சந்திரன் போன்ற முகமுடையவர்களும், அழகிய மேனியுடையவர்

௭௫. लावण्यसीम्ना भूपालसुतया दिव्यकान्तया ।
शाखामृगेण महता सहितौ सादरौ च तौ ॥
௭௬. प्रविश्यास्मद्गृहं शीघ्रं मामेवं वाक्यमूचतुः ।
बालेऽत्र जनकः कुत्र तव श्रीनाथयोगिराट् ॥
௭௭ इत्येवं त्वां समन्वेष्य प्रेम्णा सुमहता तदा ।
अमुनैव पथाद्यैव ययतुस्तावुभौ नृपौ ॥
௭௮. तच्छ्रुत्वा दुहितुर्वाक्यं प्रहृष्टोऽभूत्तदा मुनिः ।
अग्रतः प्रययौ रामः मध्ये सीता सुमध्यमा ॥
௭௯. पृष्ठतस्तु धनुष्पाणिः लक्ष्मणोऽनुजगाम ह ।
श्लोकार्थं हृदि निक्षिप्य मत्वैवं चतुरः स तान् ॥

---

களும், காண்பவர்களின் நெஞ்சை ஈர்ப்பவர்களும், கண்களுக்கு விருந்தாயிருப்பவர்களும், அழகின் எல்லையாயிருப்பவளாய் தே₃வஸ்திரீ போன்றவளான ராஜகுமாரியோடும் ஒரு பெரிய குரங்கோடும் கூடியவர்களும், ஆர்வம் மிக்கவர்களுமான இரண்டு ராஜகுமாரர்கள் நம் வீட்டில் நுழைந்து விரைவிலேயே என்னைப்பார்த்து, ‘பெண்ணே! உன்னுடைய தந்தையான நாத₂முனிகள் எங்கே இருக்கிறார்?’ என்னும் வார்த்தையைக் கூறினார்கள். இப்படி உம்மைப் பேரன்போடு தேடிவிட்டு அப்போதே இந்த வழியாகவே அவ்விரு ராஜகுமாரர்களும் சற்றுமுன்தான் சென்றுவிட்டார்கள்’’ என்று அவருடைய பெண் கூறினாள்.

## நாத₂முனிகளின் மஹாப்ரஸ்தா₂நம்.

78—86. தனது பெண்ணின் அந்த வாக்கியத்தைக் கேட்டு நாதமுனிகள் அப்போது ஆனந்த₃மடைந்தார். ‘‘ஸ்ரீராமபிரான் முதலில் சென்றான்; மெல்லிடையாளான ஸீதை நடுவில் சென்றாள்; வில்லேந்திய லக்ஷ்மணன் அவர்களுக்குப் பின்னே தொடர்ந்து சென்றான்’’ என்னும்

८० सन्तुष्टो द्रष्टुकामोऽथ तं मार्गमनुसृत्य च ।
मार्गागतजनान्सर्वान् पर्यपृच्छत्समन्ततः ॥

८१. युष्माभिः किं न दृष्टौ वा सुकुमारौ नृपात्मजौ ।
सुकुमारी राजपुत्री मार्गे चात्र बृहत्कपिः ॥

८२. न दृष्टौ राजपुत्रौ च राजपुत्री च वानरः ।
इति यत्पथिकैरुक्तं तन्निशम्य सुदुःखितः ॥

८३. तेषां सन्दर्शनेऽत्यन्तप्रेम्णा परवशस्तदा ।
सम्यगन्वेषयंस्तत्र ग्रामेषु नगरेषु च ॥

८४ तौ राजपुत्रौ नार्यार्यैः काननेषु च सादरम् ।
चचार लग्नहृदयः तेषां सन्दर्शने तदा ॥

---

வால்மீகி ராமாயண ஶ்லோகத்தை நெஞ்சிற்கொண்டு, இரண்டு ராஜகுமாரர்களையும், ராஜகுமாரியையும், குரங்கையும் ராமலக்ஷ்மணர்களாகவும், ஸீதையாகவும், அனுமனாகவும் எண்ணி மிகவுகந்தவராய் அவர்களைக் காண விரும்பி அந்த வழியிலேயே சென்று, வழியில்வந்த ஜனங்கள் அனைவரையும் நாலு திசைகளிலும் கண்டு, "அழகிய அரசகுமாரர்கள் இருவரையும், அழகிய அரசகுமாரியையும், பெரிய குரங்கையும் நீங்கள் இந்த வழியில் கண்டீர்களா?" என்று கேட்டார். 'அந்த ராஜகுமாரர்களையும் ராஜகுமாரியையும் குரங்கையும் நாங்கள் காணவில்லையே" என்று வழியில் செல்லுகிறவர்கள் அனைவரும் கூறுவதைக் கேட்டு மிக வருந்தியவராய், அவர்களைக் காணவேண்டும் என்னும் பெருங்காதலுக்கு வசப்பட்டவராய், அப்போது கிராமங்களிலும் நகரங்களிலும் காடுகளிலும் ஆர்வத்தோடு நன்கு தேடிக்கொண்டு அவர்களைக் காணவேண்டும் என்னும் ஒரே விருப்பத்தையுடையவராய் அலைந்தார்.

௮௫. तेषामलभमानोऽथ दर्शनं सुमहात्मनाम् ।
कुत्रापि भूतले योगी कथञ्चिदपि यत्नतः ॥

௮௬. वैकुण्ठेपि च तान् द्रष्टुं यतेयमिति वाञ्छया ।
तेनैव हेतुना योगी महाप्रस्थानमभ्यगात् ॥

௮௭. परमं वैष्णवं लोकं नित्यानन्दसुखाह्वयम् ।
तत्र संवाहिनीं दिव्यां विरजां देवसंभवाम् ॥

௮௮. सर्वे हिरण्मयास्तत्र सर्वे वेदमयाः शुभाः ।
अप्राकृतमया नित्याः पुनरावृत्तिवर्जिताः ॥

௮௯. एकान्तिनो सदा ब्रह्मध्यायिनो योगिनश्च ये ।
तेषां तत्परमं स्थानं यद्वै पश्यन्ति सूरयः ॥

---

உலகில் எங்குமே எவ்வளவு முயன்றும் அந்த மஹாபுருஷர்களின் காட்சி கிடைக்கப் பெருதவராய், 'வைகுண்டத்திற்குச் சென்ருவது அவர்களைக் காண முயல்வேன்' என்னும் விருப்பத்துடன் நாத₂முனிகள் அது காரணமாகவே மஹாப்ரஸ்தா₂நத்தை (வடக்குநோக்கிச் செல்லுவதை)த் தொடங்கினர்.

## நாதமுனிகளின் பரமபதப்ராப்தி

87—* 90:—"எப்போதும் ஆனந்தமாகவும் ஸுக₂மாகவும் இருப்பது மேலான விஷ்ணுவின் லோகம்; அங்கு நாராயணனிடமிருந்து தோன்றிய விரஜை என்னும் நதி ஓடுகிறது. அங்குள்ள எல்லாப்பொருள்களும் பொன்மயமாகவும், வேத₃மயமாகவும், மங்க₃ளமாகவும் உள்ளன. ப்ரக்ருதி ஸம்₃பந்த₄மற்றவர்களாய் என்றுமிருப்பவர்களாய், ப்ராக்ருத லோகத்திற்குத் திரும்பிவராதவர்களாய், எம்பெருமானையே எல்லாமாகக் கொண்டவர்களாய், எப்போதும்

९०. तत्पदं प्राप सहसा वैष्णवं नाथयोगिराट् ।
पद्माक्षप्रमुखास्सर्वे श्रुत्वा नाथार्यवर्त्मना ॥
९१. विचिन्वन्तो गता दूरं अपश्यन्नाथविग्रहम् ।
चरमं विग्रहं दृष्ट्वा स्वगुरोर्नाथयोगिनः ॥
९२. पद्मनेत्रादयस्सर्वे बभूवुर्भृशदुःखिताः ।
तस्येश्वरमुनिः पुत्रो वियोगेऽत्यन्तदुःखितः ॥
९३. पद्मनेत्रादिसहितः पितुः श्रीनाथयोगिनः ।
ब्रह्ममेधेन विधिना संस्कारमकरोत्तदा ॥

---

பரம்பொருளைத் தியானிக்கும் யோகி₃களாய் இருக்கும் முக்தர்களுக்கு நித்யஸூரிகளால் காணப்படும் அந்தப் பரமபத₃மே இருப்பிடமாகிறது." என்று ப்ரமாணங்களில் சொல்லப்படும் விஷ்ணுவின் பரமபத₃த்தை நாத₂முனிகள் விரைவிலேயே அடைந்தார்.

## ப்₃ரஹ்ம மேத₄ ஸம்ஸ்காரம்.

90*—97. நாத₂முனிகள் புறப்பட்டுச் சென்றதைக் கேட்டு அவர் சென்றவழியிலேயே புண்ட₃ரீகாக்ஷர் முதலான சிஷ்யர்களனைவரும் அவரைத் தேடிக்கொண்டு நெடுந்தூரம் சென்று அவருடைய திருமேனியையே கண்டனர். தம் ஆசார்யரான நாத₂முனிகளின் சரமத்திருமேனியைக் கண்டு * புண்ட₃ரீகாக்ஷர் (உய்யக்கொண்டார்) முதலான எல்லாச் சீடர்களும் மிகவும் வருந்தினார்கள். நாத₂முனிகளின் பிள்ளையான ஈஶ்வரமுனிகளும் அவரைப்பிரிந்ததனால் மிக வருந்தினார். *உய்யக்கொண்டார் முதலானவர்களோடு கூடிய ஈஶ்வரமுனிகள் தந்தையான நாத₂முனிகளுக்கு ப்₃ரஹ்மமேத₄விதி₄யாலே சரமஸம்ஸ்காரத்தைச் செய்தார்.

---

* யோக₃ரஹஸ்யத்தைப் பெற்றுத் தாம் மோக்ஷமடைய மறுத்து. உலகம் உய்யத் திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களை உபதேசம் பெற்றதால், "உய்யக்கொண்டார்" என்று நாத₂முனிகளால் அழைக்கப்பெற்று, அப்பெயராலேயே பிரசித்திபெற்றார் புண்டரீகாக்ஷர்.

१४. पुण्डरीकाक्षसहितो नाथसूनुस्तदाऽनघ ।
वीरनारायणपुरं संप्राप्य सहसा पितुः ॥

१५. कर्माण्यध्ययनान्तानि सर्वाणि विविधानि च ।
विदधे वैष्णवैस्साधं पद्मनेत्रादिभिर्महान् ॥

१६. अथेश्वरमुनिं धीरा गुरुपुत्रमतोषयन् ।
पद्मनेत्रादयस्सर्वे बान्धवा वस्त्रभूषणैः ॥

१७. स तैस्संपूजितस्सम्यग्वीरनारायणे पुरे ।
तथेश्वरमुनिः श्रीमानुवास स महायशाः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे नाथमुनिचरमदशावर्णनं नाम नवोत्तरशततमोऽध्यायः ॥

---

குற்றமற்ற வேத₃ாந்தியே! புண்ட₃ரீகாக்ஷர் முதலானவர்களோடு கூடிய பெரியவரான நாத₂முனிகளின் குமாரர் உடனே வீரநாராயணபுரத்திற்கு வந்து, திருவத்₄யயநம் ஈருன எல்லாக் கர்மங்களையும் புண்ட₃ரீகாக்ஷர் முதலான வைஷ்ணவர்களோடு கூடியிருந்து நிறைவேற்றினுர். அதற்குப்பின் பேரறிவாளர்களான புண்ட₃ரீகாக்ஷர் முதலான சீடர்களும், மற்றுமுள்ள உறவினர்கள் அனைவரும் வஸ்திரம் ஆப₄ரணம் முதலானவற்றை அளித்து ஆசார்யபுத்திரரான ஈஶ்வரமுனிகளை உகப்பித்தனர். அந்த ஈஶ்வரமுனியும் அவர்களாலே கொண்டாடப் பெற்றவராய், வீரநாராயணபுரத்தில் பெரும் புகழாளராய் வாழ்ந்து வந்தார்.

ஶ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில்
ஶ்ரீ பராசரபட்டருக்கும் வேதாந்திக்கும்
நடந்த ஸம்வாத₃த்தில் நாத₂முனிகளின் சரமதசையை
வர்ணிக்கும் நூற்றென்பதாவது அத்தியாயம் நிறைவுற்றது.

दशोत्तरशततमोऽध्यायः ॥

१. श्रीनाथयोगिनः शिष्याः तस्यैकादश विश्रुताः ।
तत्रापि भुवि विख्याताः पञ्चैव विबुधर्षभाः ॥

२. पद्माक्षः तत्र मतिमान् वर्धयन्विष्णुदर्शनम् ।
उवास तत्र वेदान्तिन् सम्यक् सब्रह्मचारिभिः ॥

३. अष्टाङ्गयोगनिरतः कुरुकानाथयोगिराट् ।
वीरनारायणपुरे तत्र तस्थौ महायशाः ॥

४. तौ भागिनेयौ नाथस्य प्राक्पश्चात्पुरवासिनौ ।
देवगानेन रंगेशं श्रीरंगे शेषशायिनम् ॥

---

## நூற்றுப்பத்தாம் அத்தியாயம்

## திருக்கண்ணமங்கையாண்டான் வைபவம்

### ஸ்ரீ நாத₂முனி சிஷ்யர்கள்

1—6. வேதா₃ந்தியே! ஸ்ரீ நாத₂முனிகளுக்குப் புகழ் பெற்ற பதினொரு சீடர்கள் உண்டு. அவர்களிலும் பேரறிவாளர்களான ஐவரே உலகில் மிகவும் புகழ்பெற்றவர்கள். அறிவாளியான புண்டரீகாக்ஷர் மற்ற நாத₂முனி சிஷ்யர்களோடு கூடியவராய் வைஷ்ணவதரிசனத்தை வளர்த்துக்கொண்டு வாழ்ந்துவந்தார். அஷ்டாங்க₃யோக₃த்தில் ஈடுபட்டவரான குருகைக்காவலப்பன் என்னும் யோகி₃ஶ்ரேஷ்ட₂ர் பெரும்புகழாளராய் அந்த வீரநாராயணபுரத்திலேயே வாழ்ந்து வந்தார். நாத₂முனிகளின் மருமக்களான மேலையகத்தாழ்வான் கீழையகத்தாழ்வான் என்னும் இருவரும் தம் ஆசாரியருடைய ஆணையாலே பெரும் ப₄க்தியுடன் ஸ்ரீரங்க₃த்தில் அரவணைமேல் பள்ளிகொள்ளும் அரங்கத்தம்மானை தே₃வகா₃னத்தாலே உகப்

५. तोषयन्तौ महाभक्त्या तथतुर्देशिकाज्ञया ।
श्रीकृष्णलक्ष्मीनाथार्यो महात्मा दृढभक्तिमान् ॥
६. स्वव्यापारं विसृज्याशु श्ववृत्तिमुपलक्ष्य च ।
पश्यतां सर्वभूतानां सशरीरोऽभ्यगाद्दिवम् ॥
७. एवमुक्ते तु भट्टार्ये वेदान्ती विस्मयान्वितः ।
भूम्यां प्रणम्य भट्टार्यं कृताञ्जलिरभाषत ॥
८. श्रीकृष्णलक्ष्मीनाथार्यः कुत्रत्यः स कथं गुरो ।
स्वव्यापारं परित्यज्य श्ववृत्तिमुपलभ्य च ॥
९. केन मार्गेण वैकुण्ठं सशरीरोऽगमत्कथम् ।
विशदं ब्रूहि सर्वज्ञ श्रोतुं कौतूहलं हि मे ॥

---

பித்துக்கொண்டு வாழ்ந்தார்கள். மஹாபுருஷரும் உறுதியான பக்தியுடையவருமான திருக்கண்ணமங்கையாண்டான் என்னும் நாதமுனி சிஷ்யர் நாய்களின் செயலைக் கண்டதின் பயனாக, தம் நன்மைக்காகத் தாம் பாடுபடுவதைச் சடக்கெனவிட்டு அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே சரீரத்தோடு பரமபதம் அடைந்தார்.

## நஞ்சீயரின் கேள்வி

7—9. பராசர பட்டர் இவ்வண்ணமாகக் கூறியவளவில், வேதாந்திநஞ்சீயர் வியப்புற்றவராய் அவரைத் தரையில் விழுந்து வணங்கிக் கைகூப்பியவராய், "எல்லாம் அறிந்த ஆசார்யரே! திருக்கண்ண மங்கையாண்டான் எந்த ஊரைச் சேர்ந்தவர்? அவர் எப்படி நாயின் செயலைப்பார்த்துத் தம் நன்மைக்குத் தாம் பாடுபடுவதை விட்டு, எந்த வழியாலே சரீரத்துடன் எவ்வண்ணமாக வைகுந்தத்திற்குச் சென்றார்? இதைத் தெளிவாகக் கூறுவீர். இதைக் கேட்பதில் எனக்கு மிகவும் ஆவல் உள்ளது" என்று கூறினார்.

१०. तदङ्गीकृत्य वचनं भट्टार्यस्तमथाब्रवीत् ।
श्रीकृष्णलक्ष्मीनाथार्यमाहात्म्यं शृणु वक्ष्यते ॥

११. शृण्वतां सर्वपापघ्नं भक्तिज्ञानविवर्धनम् ।
अत्यद्भुततमं ह्येतदद्वितीयं च भूतले ॥

१२. तद्दिव्यसूरिचरितादधिकं दृढभक्तिदम् ।
श्रीहरेराज्ञया भूम्यां वैकुण्ठान्नित्यसूरयः ॥

१३. शठकोपादिरूपेण ह्यवतीर्णा यथा दश ।
तथैवायं महातेजाः कृष्णलक्ष्मीशनामकः ॥

१४. समस्तलोकरक्षार्थं दशभिर्दिव्यसूरिभिः ।
प्रपत्तिधर्म एवात्र प्रबन्धेषु प्रकाशितः ॥

---

## திருக்கண்ணமங்கையாண்டான் பெருமை

10—*16 நஞ்சீயரின் அவ்வார்த்தையை ஏற்றுக் கொண்டு ஸ்ரீ பராசரபட்டர் பின்வருமாறு கூறினர்:- திருக்கண்ணமங்கையாண்டானின் பெருமையைச் சொல்லுகிறேன்; கேட்பீராக. அது கேட்பவர்களுக்கு எல்லாப் பாபங்களையும் போக்கவல்லது; பக்தியையும் ஜ்ஞாநத்தையும் வளர்க்கவல்லது. மிகவும் அற்புதமாயிருப்பது. இவ்வுலகிலேயே ஒப்பற்றது. ஆழ்வார்களுடைய சரித்திரத்தைக் காட்டிலும் இவருடைய சரித்திரம் சிறந்ததாகவும் உறுதியான பக்தியை அளிப்பதாகவும் உள்ளது. எம்பெருமானுடைய ஆணையாலே வைகுண்டத்திலிருந்து நித்யஸூரிகள் நம்மாழ்வார் முதலான பத்து ஆழ்வார்களாக எப்படி அவதரித்தனரோ, அப்படியே மஹா தேஜஸ்வியான இந்தத் திருக்கண்ணமங்கையாண்டானும் அவதரித்தார். இவ்வுலகை ரக்ஷிப்பதற்காக ஆழ்வார்களால் தம் திவ்யப்ரபந்தங்களில் ப்ரபத்திதர்மம் நன்ருக வெளியிடப்பட்டது. அந்த தர்மமானது இவ்வுலகில்

१५. श्रीकृष्णलक्ष्मीनाथेन स एवार्थो भुवः स्थले ।
तदनुष्ठानपर्यन्तमनेनैव प्रकाशितः ॥

१६. तदेव संप्रवक्ष्यामि समाहितमनाः शृणु ।
हरिणाज्ञापितः सम्यक् नित्यसूरिः परात्परः ॥

१७. श्रीकृष्णमङ्गलक्षेत्रे कस्मिंश्चिद्दिव्यवेश्मनि ।
ज्येष्ठमासे कृष्णपक्षे श्रवणर्क्षे महायशाः ॥

१८. श्रीकृष्णलक्ष्मीनाथार्यः संजज्ञे ब्राह्मणोत्तमः ।
कृतोपनयनः पित्रा ब्रह्मचर्यपरायणः ॥

१९. जग्राह निखिलान् वेदान् साक्षिमात्रात् गुरोर्मुखात् ।
प्रातः स्नातः ततः सम्यक् शास्त्रदृष्टेन कर्मणा ॥

---

அநுஷ்டா₂னபர்யந்தமாக இந்தத் திருக்கண்ணமங்கை யாண்டானாலேயே நன்கு விளங்கச்செய்யப்பட்டது. அவருடைய பெருமையைக் கூறுகிறேன் கவனமாகக் கேட்பீராக.

## திருக்கண்ணமங்கையில் ஆண்டான் வாழ்ந்த பெருமை

16*—33. ஸ்ரீவைகுண்ட₂த்தில் பரமபத நாதனாலே நன்கு நியமிக்கப்பட்ட 'பராத்பரர்' என்னும் நித்யஸூரி திருக்கண்ணமங்கையாகிற திவ்யதேசத்திலே ஒரு ஸ்ரீவைஷ்ணவத் திருமாளிகையிலே ஆனி மாஸம் கிருஷ்ண பக்ஷத்தில் திருவோண நக்ஷத்திரத்தில் பெரும்புகழாளரான திருக்கண்ணமங்கையாண்டான் என்னும் அந்தணர் தலைவராக அவதரித்தார். தந்தையால் உபநயனம் செய்விக்கப்பெற்றவராய், ப்₃ரஹ்மசர்ய விரதத்தில் ஊன்றியவராய், ஒரு வியாஜமாத்திரமான ஆசார்யனுடைய திருமுகத்திலிருந்து எல்லா வேதங்களையும் அத்₄யயனம் செய்தார். தினந்தோறும் விடியற்காலையில் நீராடுபவராய், ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை நன்கு

२०. विवाहं विधिवच्चक्रे स्वतुल्यद्विजवेश्मनि ।
भार्यया सहितः श्रीमान् वैदिकाचारतत्परः ॥

२१. बभूव ब्राह्मणश्रेष्ठः पञ्चयज्ञपरायणः ।
वेदवेदाङ्गसंपन्नः सर्वशास्त्रविशारदः ॥

२२. सदाचारसमायुक्तः सर्वसज्जनपूजकः ।
श्रीनाथमुनिना तेन कृतसंस्कारपञ्चकः ॥

२३. श्रीवैष्णववरो धीमानशोभत महायशाः ।
श्रीनाथमुनिशिष्याणां सुप्रसिद्धोऽभवत्तदा ॥

२४. अधीताखिलवेदान्तो भक्तिसार इवानघः ।
वेदार्थनिर्णये जातो वक्ता वाचस्पतिर्यथा ॥

२५. प्रह्लाद इव चात्यन्तं भक्तिमान् जन्मवैष्णवः ।
नामसङ्कीर्तनरतो भगवान्नारदो यथा ॥

---

செய்தவராய் வாழ்ந்த அவர் அந்தணர்குடியில் தமக்கு ஈடான ஒரு பெண்ணை விதிப்படி மணந்தார். அந்தணர் தலைவரான அவர் மனைவியோடு கூடியவராய், வைதிகாசாரங்களோடு கூடியவராய், பஞ்சமஹாயஜ்ஞங்களைச் செய்பவராய், வேதவேதாந்தங்களைப் பொருளுடன் கற்றவராய், எல்லா சாஸ்திரங்களிலும் வல்லவராய், நல்லோர்களின் ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பவராய், நல்லோர்கள் அனைவரையும் ஆராதிப்பவராய், ஸ்ரீமந் நாதமுனிகளாலே பஞ்சஸம்ஸ்காரம் செய்யப் பெற்றவராய், ஸ்ரீவைஷ்ணவர்களில் சிறந்தவராய், அறிவாளியாய், பெரும் புகழாளராய் விளங்கினார். அப்போது இருந்த நாதமுனிகளின் சிஷ்யர்களில் மிகப் புகழ்பெற்றவராகவும் விளங்கினார். வேதாந்தங்கள் அனைத்தையும் கற்றுத் திருமழிசையாழ்வாரைப் போலே குற்றமற்றவராகவும், வேதார்த்தங்களை நிர்ணயிப்பதிலும்

२६. वैराग्यज्ञानभक्त्यादिसद्गुणैकमहार्णवः ।
द्राविडाम्नायनिरतो यथा नाथमुनिर्महान् ॥
२७ पञ्चमोपायनिष्ठायां स यथा मधुरः कविः ।
वेदान्तद्वयसारज्ञो महाभागवतोत्तमः ॥
२८. निर्ममो निरहङ्कारो भगवद्ध्यानतत्परः ।
श्रीनाथमुनिना तेन गुरुणाज्ञापितस्तदा ॥
२९. श्रीकृष्णमङ्गलक्षेत्रं सम्यगभ्येत्य सादरम् ।
श्रीकृष्णतुलसीदामकैङ्कर्यनिरतस्सदा ॥
३०. भक्तांघ्रिरेणुवद्भट्टनाथवत्परकालवत् ।
सततं भगवद्दास्यरसपानरतोऽभवत् ॥

---

பேச்சுவன்மையிலும் பிருஹஸ்பதியைப் போன்றவராகவும் இருந்தார். ப்ரஹ்லாத₃னைப் போலே மிகுந்த பக்தியுடைய பிறவிவைணவராகவும் இருந்தார். நாரத₃மஹர்ஷியைப் போலே எம்பெருமானுடைய திருநாமங்களை ஸங்கீர்த்தனம் செய்பவராகவும் இருந்தார். ஆசார்யரான நாத₂முனிகளைப் போலே ஜ்ஞாநம் ப₄க்தி வைராக்₃யம் முதலான நற்குணங்களுக்கு ஓர் கடலாகவும், தமிழ் வேத₃த்தில் ஈடுபட்டவராகவும் இருந்தார். ஆசார்யனே உபாயம் என்று கொள்ளும் பஞ்சமோபாய நிஷ்டை₂யில் மது₄ரகவியாழ்வாரைப் போல் இருந்தார். உப₄யவேத₃ாந்தங்களின் ஸாரத்தை அறிந்தவராய், மஹா ப₄ாக₃வதர்களில் தலைசிறந்தவராய், அஹங்கார மமகாரங்கள் அற்றவராய், எம்பெருமானைத் தியானிப்பதில் ஈடுபட்டவராய் இருந்தார். அப்போது ஆசார்யரான நாத₂முனிகளால் நியமிக்கப் பெற்றவராய், திருக்கண்ணமங்கையாகிற திவ்யதேசத்தை அடைந்து ஆர்வத்தோடு ஸ்ரீ கிருஷ்ணதுளஸீமாலைகள் ஸமர்ப்பிக்கும் கைங்கரியத்தில் எப்போதும் மிகவும் ஈடுபட்டவராய், தொண்டரடிப்பொடியாழ்வாரைப் போலவும், பெரியாழ்வாரைப்

३१. श्रीकृष्णमङ्गलक्षेत्रे सुगन्धतुलसीवनम् ।
विधाय नित्यं तुलसीपुष्पमालाश्च भक्तितः ॥
३२. भक्तवत्सलदेवाय कृष्णमङ्गलवासिने ।
समर्पयंस्तदा तस्थौ कृष्णलक्ष्मीशनायकः ॥
३३. सन्तोषमगमत्तेन भगवान् भक्तवत्सलः ।
निर्व्याजेनैव तस्याशु कैङ्कर्येण महात्मनः ॥
३४. ततः कदाचिद्देवेशो भगवान् भक्तवत्सलः ।
कल्यात्मकं जगद्वीक्ष्य कृपयैवमचिन्तयत् ॥
३५. भक्तवत्सलनामेदं नाममात्रेण विश्रुतम् ।
नैवार्थतो हरेरस्य मामित्यज्ञा वदन्त्यलम् ॥

---

போலவும் திருமங்கையாழ்வாரைப் போலவும் எப்போதும் பகவத்கைங்கர்யமாகிற ரஸத்தைப் பருகுகிறவராயும் இருந்தார். திருக்கண்ணமங்கையாண்டான் திருக்கண்ண மங்கையாகிற திவ்யதேசத்தில் நறுமணமிக்க துளஸித் தோட்டத்தை உண்டாக்கி, தினந்தோறும் துளஸீமாலைகளை ப₄க்தியுடன் அந்தத் திருக்கண்ணமங் கையில் வாழும் ப₄க்தவத்ஸலப் பெருமாளுக்கு ஸமர்ப் பித்துக் கொண்டிருந்தார். அந்த ப₄க்தவத்ஸலப்பெரு மாள் அந்த மஹாபுருஷரின் கைம்மாறு கருதாத கைங்கர்யத்தினால் மிகவும் உகப்படைந்தார்.

## பத்தராவிப் பெருமாளின் சிந்தனை

34–41. அப்போது ஒரு நாள் தேவபிரானை பத்தராவிப்பெருமாள் இவ்வுலகம் கலியினால் ஆக்ரமிக்கப் பட்டிருப்பதைக் கண்டு கருணையினாலே பின்வருமாறு சிந்திக்கலுற்றார்:—"'ப₄க்தவத்ஸலன் என்னும் இந்தத் திருநாமம் இந்தப்பெருமாளுக்குப் பெயரளவில் உள்ளதே யொழியப் பொருளளவில் விளங்கவில்லை' என்று அறிவிலிகள் என்னைப்பற்றி ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

३६. लोकसंरक्षणं कार्यमतोऽद्यैव ध्रुवं मया ।
हेतुमात्रं विधायाऽहमर्जुनं कृष्णजन्मनि ॥

३७. गीतायां चरमश्लोको जनेभ्यः संप्रकाशितः ।
नैवानुष्ठानपर्यन्तं स त्वर्थः संप्रकाशितः ॥

३८. तैरेव लोकरक्षार्थं शठकोपादिसूरिभिः ।
चरमश्लोकतत्त्वार्थस्तावन्मात्रं प्रकाशितः ॥

३९. अद्यानुष्ठानपर्यन्तमनेनैव महात्मना ।
कारितव्यं प्रयत्नेन सम्यक् लोकहिताय वै ॥

४०. एतेनैवाखिला लोकाः सुदृढप्रत्यया मयि ।
निर्मुक्तमाया संसाराः मामुपैष्यन्ति निश्चयम् ॥

---

ஆகையால், நான் இப்போதே இவ்வுலகை உறுதியாக ரக்ஷிக்க வேண்டும். கிருஷ்ணாவதாரத்தின்போது அர்ஜுனனை ஒரு வியாஜமாகக் கொண்டு கீதையிலே இவ்வுலக மக்களின் பொருட்டுச் சரமஶ்லோகத்தை வெளியிட்டேன். அதன் பொருள் அனுஷ்டாநன பர்யந்தமாக வெளியிடப்படவில்லை. நம்மாழ்வார் முதலான அந்த ஆழ்வார்களாலும் சரம ஶ்லோகத்தின் உண்மைப் பொருள் வெளியிடப்பட்டதே யொழிய அனுஷ்டாநன பர்யந்தமாகக் காட்டப்படவில்லை. இப்போது இந்த மஹாபுருஷரைக் கொண்டு உலகத்தின் நன்மையின் பொருட்டு அந்தச் சரமஶ்லோகப் பொருள் அநுஷ்டாநன பர்யந்தமாக வெளிவர முயல வேண்டும். இப்படிச் செய்தால்தான் எல்லாவுலகங்களும் என்னிடம் உறுதியான நம்பிக்கை கொண்டவர்களாய், ஆச்சரியமான ஸம்ஸார ஸம்பந்தம் நீங்கப்பெற்று என்னை உறுதியாக அடைவார்கள்.'' என்று இவ்வண்ணமாக உறுதியான

४१. एवं निश्चितसङ्कल्पो भगवान् भक्तवत्सलः ।
श्रीकृष्णलक्ष्मीनाथार्यदयावान् समतिष्ठत ॥
४२. ततः कदाचिद्वृषलौ सश्वानौ खड्गधारिणौ ।
उपानद्गूढपादौ च तत्र कौचित्समागतौ ॥
४३. भक्तवत्सलदेवस्य श्रुत्वा माहात्म्यमद्भुतम् ।
संजातभक्तिभावौ तौ संसेवितुमपीयतुः ॥
४४. पादरक्षे विमुच्याशु तद्बहिः सत्वरं तयोः ।
श्वानद्वयं विनिक्षिप्य रक्षार्थं निश्चलौ तदा ॥
४५. तौ स्नातौ संप्रविश्याशु भक्तवत्सलसन्निधिम् ।
संसेव्याञ्जलिहस्तौ तौ भक्त्या श्रीभक्तवत्सलम् ॥

---

ஸங்கல்பம் உடையவராய், பத்தராவிப் பெருமாள் திருக் கண்ண மங்கையாண்டானிடம் பெரும் கருணை கொண்ட வராய் இருந்தார்.

## நாய்ச் சண்டையின் விளைவு

42—*56:— அப்பொழுது ஒருநாள் இரண்டு ஶூத்₃ரர் கள் கத்தியை ஏந்தியவர்களாய், தலைக்கு ஒரு நாயை அழைத்துக்கொண்டு, செருப்பணிந்தவர்களாய், திருக்கண்ண மங்கைக்கு வந்தார்கள். ப₄க்தவத்ஸலப்பெருமாளுடைய ஆச்சரியமான பெருமையைக் கேள்விப்பட்டு ப₄க்தி உண்டாகப் பெற்ற அந்த இருவரும் பெருமாளை ஸேவிக்கவும் கோயிலுக்குவந்தார்கள். தங்களுடைய இரண்டு செருப்புக்களையும் கோயிலுக்கு வெளியில்விட்டு, அவற்றை ரக்ஷிப்பதற்காக அவரவர்களுடைய நாயையும் காவலாக வைத்து, சஞ்சலமற்றவர்களாய் அவ்விருவரும் நீராடி, சடக்கென ப₄க்தவத்ஸலப்பெருமாளின் திருமுன்பே சென்று அவரைக் கைகூப்பி ப₄க்தியுடன் வணங்கி ஸந்நிதி₄யை

४६. प्रदक्षिणक्रमेणैव गत्वा श्रीसन्निधिं ततः ।
नत्वाभिषेकवल्लीं च तत्रत्यानखिलान्सुरान् ॥

४७ प्रदक्षिणक्रमेणैव तावुभौ बहिरागतौ ।
तत्रान्तरे तयोरासीत् कलहः सारमेययोः ॥

४८. अन्योपानद्ग्रहेणैव तयोरन्योन्यमद्भुतम् ।
स्वभाववैरिणोस्तत्र स्वामिकार्यैकवर्तिनोः ॥

४९. तद्युद्धदर्शनोत्सिक्यात् जनसंघो महानभूत् ।
तौ तदा तत्र चागत्य रवं तत्स्वामिनौ महत् ॥

५०. दृष्ट्वा शुनोस्तदा तस्मिन् क्षणमात्रं व्यवस्थितौ ।
श्वानौ तुल्यबलौ तत्र द्रष्टृविस्मयकारिणौ ॥

---

வலம் வந்து அக்கோயிலில் உள்ள அபிஷேகவல்லித் தாயாரையும் மற்ற எம்பெருமான்களையும் வணங்கி ப்ரதக்ஷிணத்தை முடித்துக்கொண்டு அவ்விருவரும் கோயிலுக்கு வெளியே வந்தனர். இதற்கிடையில் அந்த நாய்களுக்கிடையே தத்தம் யஜமானரின் செருப்பை மற்ற நாய் கவ்வியது காரணமாக ஆச்சரியமான சண்டை உண்டாகிவிட்டது. யஜமானனின் காரியத்தில் உறுதி யாயிருப்பவையும், இயற்கையில் ஒன்றுக்கொன்று விரோதி களுமான அந்த நாய்களின் சண்டையைக் காணவேண்டு மென்று அங்கு பெரும் மக்கள் கூட்டம் கூடிவிட்டது. அந்த இரு யஜமானர்களும் நாய்கள் குரைப்பதைக் கேட்டு வெளியில் வந்து நாய்களின் சண்டையைப் பார்த்து, சிறிது நேரம் திகைத்து நின்றார்கள். சமமான வலிமையுடையவை களாய், வீரம் மிக்கவைகளாய், பெரிதாகக் குரைக்கும் அவ்விரு நாய்களும் காண்போர்களுக்கு வியப்பை உண்டாக்குபவையாய், அங்கு ஒன்றோடொன்று

५१. अयुद्धयेतां तदा वीरौ महारवसमन्वितौ ।
एकेन ताडितः संख्ये तत्रान्यः सारमेयकः ॥

५२. सुतरामुद्वमन् रक्तं क्षीणप्राणोऽभवत्तदा ।
क्षीणप्राणं विलोक्याशु तत्स्वामी श्वानमातुरम् ॥

५३. ततः स्वभक्तवात्सल्यात् हठात् खड्गं प्रगृह्य च ।
शिरः चिच्छेद तस्याग्रवर्तिनस्तत् शुनो रुषा ॥

५४. तत्स्वामी पतितं दृष्ट्वा श्वानं खड्गहतं भुवि ।
रुषा खड्गं प्रगृह्याशु प्रलयाग्निरिव ज्वलन् ॥

५५. तं सारमेयहन्तारं संग्रामायाभिदुद्रुवे ।
अभूत् तयोश्च संग्रामः अत्यन्तं रोमहर्षणः ॥

---

போர்புரிந்தன. அந்தச் சமயத்தில் சண்டையிலே ஒரு நாயாலே மற்ற நாய் வீழ்த்தப்பட்டதாய், மிகவும்ரத்தத்தைக் கக்கிக் கொண்டு உயிர்விட்டது. அந்த நாயின் யஜமானன் தன்னுடைய நாய் மிகவும் துன்பமுற்று உயிர் நீங்கி விழுந்ததைக் கண்டு, தனக்காக உயிர்விட்ட நாயிடம் வாத்ஸல்யத்தாலே சடக்கெனத் தன் கத்தியை உருவி அதைக்கொன்ற எதிரிலிருந்த மற்றொரு நாயின் தலையைக் கோபத்தாலே வெட்டிவீழ்த்தினன். அந்த நாயின் யஜமானன் தன்னுடைய நாய் கத்தியால் வெட்டப்பட்டு பூமியில் விழுந்ததைக் கண்டு, உடனே கத்தியை உருவிக் கொண்டு பிரளயகாலத்து நெருப்புப்போலேவிளங்கியவனாய், தன்னுடைய நாயைக் கொன்றவனோடு சண்டை செய்ய ஓடினன். அவ்விருவருக்கிடையே மிகவும் மயிர்க்கூச்செறிய வைக்கும் சண்டையானது உண்டாயிற்று. அச்சண்டையில், ஸுந்தனுக்கும் உபஸுந்தனுக்கும் நடந்த சண்டையிற் போலவே அவ்விருவருமே ஒருவரையொருவர் வெட்டிக் கொண்டு மாண்டார்கள்.

५६ सुन्दोपसुन्दन्यायेन तावुभौ निहतौ रणे ।
तत्रान्तरे समादाय संपूर्णां पुष्पदामभिः ॥

५७. श्रीकृष्णलक्ष्मीनाथार्यः स भक्त्या पुष्पपेटिकाम् ।
भक्तवत्सलदेवाय विष्णवे सम्यगर्पितुम् ॥

५८. कृतत्वरः समागच्छत् भक्तवत्सलसन्निधिम् ।
तत्र कोलाहलरवं शुश्राव स तमद्भुतम् ॥

५९. सम्यगेव स तद्वृत्तं ज्ञात्वा सर्वं सहेतुकम् ।
विस्मितश्चिन्तयामास तयोर्वात्सल्यमद्भुतम् ॥

६०. एतौ क्षुद्रसमाचारौ सेवावृत्त्युपजीविनौ ।
स्वभक्तश्वानवात्सल्यात् क्षणेन निहतौ रणे ॥

---

## திருக்கண்ண மங்கையாண்டானின் சிந்தனை

56*—65:— இதற்கிடையில் பூமாலைகள் நிறைந்த பூக்கூடையை ப₄க்தியுடன் ப₄க்தவத்ஸலப்பெருமாளுக்கு ஸமர்ப்பிப்பதற்காக எடுத்துக்கொண்டு, திருக்கண்ணமங்கை யாண்டான் பத்தராவிப் பெருமாள் கோயிலுக்கு விரைவாக வந்தார். அங்கு ஆச்சரியமான அந்தச் சண்டை இரைச்சலைக் கேட்டார். அங்கு நடந்தது அனைத்தையும் காரணத்தோடு நன்கு அறிந்த அவர் அந்த யஜமானர்களுக்கு அவர்களுடைய நாய்களின் மீதிருந்த ஆச்சர்யமான வாத்ஸல்யத்தைப்பற்றி வியப்புற்று, பின்வருமாறு சிந்திக்கலுற்றார்— ''பிறர்க்கு வேலைசெய்து பிழைப்பவர்களும், தாழ்ந்த ஒழுக்கமுள்ளவர்களுமான இவ்விருவரும் தங்களிடம் அன்புள்ள நாய்களிடம் வாத்ஸல்யத்தாலே சண்டையில் சடக்கென உயிரிழந்தார்கள். தாழ்ந்தவர்களான இவர்களுடைய ப₄க்தவாத்ஸல்யமே பேராச்சரியமாக உள்ளது.

६१. क्षुद्रयोरेतयोर्भक्तवात्सल्यं महदद्भुतम् ।
तत्कथं वर्णितुं केन शक्यते ह्यतिमानुषम् ॥

६२. प्रत्यक्षेण मयादृष्टस्तयोरेतादृशो गुणः ।
धर्माधर्मविचारादिशून्ययोः क्षुद्रकर्मणोः ॥

६३. निर्व्याजबन्धोः सर्वज्ञमूर्तेः सर्वजगत्पतेः ।
अपारकरुणासिन्धोः धर्माधर्मविचारिणः ॥

६४. विष्णोर्भगवतस्तस्य जगन्मातुर्जगत्पितुः ।
लक्ष्मीभर्तुर्हि वात्सल्ये किं वक्तव्यं मयाऽधुना ॥

६५. रक्षिष्यति न वा भक्तमिति यन्मे विचारणा ।
किमर्थं भगवान् शीघ्रं रक्षिष्यति न संशयः ॥

---

தர்மாதர்மங்களைப்பற்றி ஆராய்ச்சியில்லாதவர்களும், இழி தொழில் செய்பவர்களுமான இவர்களுடைய மனித இயற்கையை மீறிய இந்த வாத்ஸல்யத்தை யாரால் வர்ணிக்க முடியும்? இவர்களுடைய இந்த குணம் என்றால் நேரே காணப்பட்டதன்றோ. இப்படியிருக்கையில், இயற்கை உறவினனாய், எல்லாம் அறிந்தவனாய், உலகனைத்துக்கும் நாயகனாய், எல்லையற்ற கருணைக்கடலாய் இருப்பவனாய், தர்மாதர்மங்களை ஆராய்ந்து அறிபவனாய், உலகிற்குத் தாயாகவும் தந்தையாகவும் இருப்பவனாய், லக்ஷ்மீ நாயகனாய் இருக்கும் இந்த பக்தவத்ஸலப் பெருமானுக்கு பக்தர்களிடம் இருக்கும் வாத்ஸல்யத்தைப்பற்றி நான் இப்போது சொல்லவும் வேண்டுமோ? 'இப்பெருமான் தன் பக்தர்களை ரக்ஷிப்பானா மாட்டானா?' என்று நான் ஆராய்வதே தேவையற்றது. பகவான் தன் அடியார்களை விரைவிலேயே ரக்ஷிப்பான் என்பதில் ஐயமில்லை''—என்று.

६६. इत्येवं मनसा सम्यक् निश्चित्य भगवत्परः ।
श्रीकृष्णलक्ष्मीनाथार्यः श्रीपतौ भक्तवत्सले ॥

६७. श्रीमान् न्यस्तभरः शीघ्रं स्वव्यापारं विसृज्य तम् ।
अनुष्ठानक्रियाः सर्वाः दूरतः परिहृत्य च ॥

६८. ततः श्ववृत्तिमास्थाय चतुष्पाद्चरोऽभवत् ।
प्रातर्ग्रामात् बहिर्गत्वा कृतदेहविशोधनः ॥

६९. स्नातस्तटाके कस्मिंश्चित् पशुवच्च दिगम्बरः ।
जानुपाणिचरो वेगात् भक्तवत्सलसन्निधौ ॥

७०. मूले वकुलवृक्षस्य धृतमौनः समास्थितः ।
भक्तवत्सलदेवस्य कृपया यत्समागतम् ॥

---

## திருக்கண்ணமங்கையாண்டான் ஸ்வவ்யாபாரத்தை விடுதல்

66—*71:— இவ்வண்ணமாக மனத்தில் நன்கு உறுதி பூண்டு, ப₄க₃வத் ப₄க்தராய், [தன் முயற்சியைவிட்டு எம்பெருமானைப் பற்றுகையாலே] ஸ்ரீமானான திருக்கண்ண மங்கையாண்டான் ஸ்ரிய:பதியான ப₄க்தவத்ஸலப்பெருமாளி டம் தனது பொறுப்பு முழுவதையும் ஒப்படைத்தவராய், தனக்காகத் தான் முயல்வதை விட்டு, எல்லா நித்ய நைமித்திக கர்மாநுஷ்டானங்களையும் அடியோடு விலக்கி, நாயைப்போலே இரண்டு கைகளையும் கால்களாக்கிக் கொண்டு நாலுகால்களாலே ஸஞ்சரிப்பவரானார். காலையில் அவ்வூருக்கு வெளியே சென்று காலைக்கடன்களைக் கழித்து விட்டு ஒருகுளத்தில் நீராடி விட்டு நாலுகால் பிராணியைப் போலே வஸ்திரமில்லாதவராய், கால்களாலும் கைகளாலும் நடப்பவராய், வேகமாக பக்தவத்ஸலப்பெருமாள் கோயி லுக்கு வந்து ஓர்மகிழ மரத்தினடியில் மௌனமாக

७१. भुक्त्वाऽन्नं निश्चलः सम्यक् दृढमौनो व्यतिष्ठत ।
वेदान्तिन्नथ तत्रत्या जनाः केचिद्विलोक्य तम् ॥
७२ श्रीकृष्णलक्ष्मीनाथार्यमवोचन्निभृतं वचः ।
अयं श्रीवैष्णवो धीमान् वैदिकाचारतत्परः ॥
७३. केनचित्कर्मशेषेण भ्रान्तोऽभूत्किल वै बत ।
इत्यज्ञास्तदभिप्रायमजानन्तो महाद्भुतम् ॥
७४. ऊचुः परस्परं केचित्प्रारब्धं तन्महत्किल ।
असाध्यमीश्वरेणापि दुर्जयं तद्विनाशितुम् ॥
७५. कर्मैव बलवल्लोके चेश्वरः किं करिष्यति ।
एतादृशस्य महतः संप्राप्तं वीतरागिणः ॥

---

இருப்பவராய், ப₄க்தவத்ஸலப் பெருமாளுடைய கருணை யாலே கிடைக்கும் அன்னத்தைப் புசித்து அசையாத வராய் உறுதியான மௌனத்தையுடையவராய் வாழத் தொடங்கினார்.

## மக்களின் கருத்துக்கள்

71*—*87:—வேத₃ாந்தியே! அவ்வூரிலுள்ள மக்கள் சிலர் அந்தத் திருக்கண்ணமங்கையாண்டானைப் பார்த்து ரகசியமாகப் பின்வருமாறு பேசிக்கொண்டார்கள்; ''அறிவாளியும் வைதி₃கமான ஆசாரததில் மிகவும் ஈடுபட்ட வருமான இந்த ஸ்ரீவைஷ்ணவர் ஏதோ ஒரு பாபகர்மத் தாலே மயங்கி விட்டார் போலும்;'' என்று சில அறிவிலி கள் அவருடைய பேராச்சரியமான கருத்தை உணராதவர் களாய், ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டார்கள். மற்றும் சிலர் ''ப்ராரப்₃த₄கர்மம் மிகப் பெரிதன்றோ; எவராலும் அதைக் கடக்கவும் முடியாது; வெல்லவும் முடியாது; ஈஶ்வரனாலும் அதை அழிக்கமுடியாது; இவ்வுல கில் கர்மம் தான் வலிமையுள்ளது, ஈஶ்வரனும் அதைமீறி என்ன செய்து விட முடியும்? மிகுந்த வைராக்₃யமுடைய இந்தப் பெரியவருக்கல்லவோ இப்படி விளைந்து விட்டது;

௭௬. प्रारब्धकर्मणैवेद भ्रान्तिकार्यमभूत्किल ।
तस्मात्कर्मैव बलवदीश्वरादपि निश्चयम् ॥

௭௭ कर्मणा जायते जन्तुः कर्मणैव विवर्धते ।
सुखं दुःखं च मरण जन्तोः कर्मैव दास्यति ॥

௭௮. तस्मात्कर्मैव बलवत् कर्मणा निबिडं जगत् ।
दैवं कुलालवल्लोके वर्तते हेतुमात्रतः ॥

௭௯. ईश्वरः साक्षिमात्र तु जन्तोर्द्युमणिदीपवत् ।
केचिदूचुस्तदात्वैव श्ववृत्ति तस्य वीक्ष्य च ॥

௮௦. ज्ञानेनैवायमधुना महात्मा भगवत्परः ।
निर्भयो निर्भरस्तस्थौ सम्यङ्न्यस्तभरो हरौ ॥

---

ப்ராரப்₃த₄கர்மத்தால் தான் இந்த மனக்கோளாறு இவருக்கு ஏற்பட்டு விட்டது. ஆகையால், ஈஶ்வரனைக் காட்டிலும் கர்மமே வலிமைமிக்கது என்பது உறுதி. தான் செய்த முன் வினையாலேயே ஜீவன் இங்குப் பிறக்கிறான். அந்தக் கர்மத்தினாலேயே வளருகிறான். இன்பம் துன்பம் மரணம் அனைத்தையும் ஜீவனுக்குக் கர்மமே தருகிறது. ஆகையால் கர்மமே வலிமை மிக்கது.இவ்வுலகம் கர்மத்தால் நிறைந்துள்ளது. ஈஶ்வரன் குயவனைப்போலே இவ்வுலகில் நிமித்தமாத்திரமாகவே உள்ளான். உலகில் ஜீவன் செய்யும் கர்மங்களுக்குப் பகலில் ஸூர்யனும் இரவில்தீபமும் போலே ஈஶ்வரன் ஸாக்ஷிமாத்திரமாகவே இருக்கிறான்'' என்று கூறினர். அவர் நாய் போல் நடந்து கொள்வதைக் கண்டுஅங்குள்ள மற்றும் சிலர் பின்வருமாறு கூறினர்;—
''மஹாபுருஷராய், ப₄க₃வத்₃ப₄க்தரான இவர் இப்பொழுது

८१. न काचिन्न्यूनता तस्य कदाचिदपि विद्यते ।
भक्तवत्सल एवैतं रक्षिष्यति न संशयः ॥

८२. इत्यूचुर्विबुधाः केचित्तं विलोक्य तथाविधम् ।
तस्यैवान्तिकमागत्य तदा केचिज्जना मुने ॥

८३. तेन संभाषणार्थाय ददृशुस्तं दृढव्रतम् ।
मौनेन महता युक्तं अकम्पं गिरिसन्निभम् ॥

८४. भक्तवत्सलपादाब्जन्यस्तभारं सुनिर्भरम् ।
निर्व्यापारं महोत्साहं निरस्ताखिलकल्मषम् ॥

८५. श्रीकृष्णलक्ष्मीनाथार्यं वीक्ष्य विस्मितचेतसः ।
भीत्या पलायिताः केचित् केचिन्नत्वाथ भक्तितः ॥

---

அறிவு நிரம்பியதாலேயே ப₄யமற்றவராயும், தம்மிடம் எந்தப் பொறுப்பையும் கொள்ளாதவராயும் எம்பெருமானிடம் எல்லாப் பொறுப்பையும் ஸமர்ப்பித்தவராயும் வாழ்கிறார். இவருக்கு எந்தக் காலத்திலும் எந்தவிதமான தாழ்வும் இல்லை ப₄க்தவத்ஸலப்பெருமாளே இவரை ரக்ஷிப்பார் என்பதில் ஐயமில்லை'' என்று அவர் வாழும் விதத்தைக் கண்டு சில அறிவாளிகள் கூறினார்கள். மௌனத்துடன் வாழும் அவர் அருகில் அவரோடு பேசுவதற்காக வந்து, சில ஜனங்கள் பெரிய மௌனத்தில் உறுதியோடு வாழ்பவராய், மலைபோல் அசையாதிருப்பவராய், ப₄க்தவத்ஸலப்பெருமாளின் திருவடித்தாமரைகளில் பொறுப்புகளனைத்தையும் விட்டவராய், தன்னிடத்தில் எதையும் கொள்ளாதவராய், தனக்காகத் தான் எதையும் முயலாதவராய், எம்பெருமானை நினைப்பதில் மிகவும் ஊக்கமுடையவராய் எல்லாப் பாபங்களும் நீங்கப்பெற்றவரான அவரைக் கண்டனர். அந்தத்

८६. एतद्वृत्तान्तमाकर्ण्य नानादेशनिवासिनः ।
श्रीकृष्णमङ्गलक्षेत्रं गत्वा दृष्ट्वाऽथ तादृशम् ॥

८७ श्रीकृष्णलक्ष्मीनाथार्यं विस्मयं परमं ययुः ।
एवं दिनेषु कतिषु गतेष्वत्र महात्मनः ॥

८८. मोक्षदाने मतिं चक्रे भगवान् भक्तवत्सलः ।
मोक्षप्रदानदिवसपूर्वस्मिन्वासरे निशि ॥

८९. आबालवृद्धप्रभृति जनानां भक्तवत्सलः ।
तत्रत्यानां हि सर्वेषां स्वप्ने सम्यङ्न्यवेदयत् ॥

९०. श्रीकृष्णलक्ष्मीनाथाय मद्भक्ताय महात्मने ।
दास्यामि श्वदिने मोक्षं सर्वेषां पश्यतां ध्रुवम् ॥

---

திருக்கண்ணமங்கையாண்டானைக் கண்டு வியப்புற்ற நெஞ்சினராய், அவரைப் பக்தியுடன் வணங்கிச் சிலரும், அவரிடம் பயந்து சிலரும் ஓடினார்கள். இவரைப் பற்றிய செய்தியைக் கேள்விப்பட்டுப் பலதேசங்களிலிருக்கும் ஜனங்களும் திருக்கண்ணமங்கைக்குச் சென்று ஸ்வவ்யாபாரத்தைவிட்டுவாழும் திருக்கண்ணமங்கையாண்டானைக் கண்டு மிகவும் வியப்புற்றார்கள்.

## ஆண்டானுக்கு மோக்ஷமளித்தல்

87*—99:— இப்படிச் சிலநாட்கள் கழிந்த பிறகு இந்த மஹாபுருஷருக்கு, ப₄க்தவத்ஸலப்பெருமாள் மோக்ஷமளிக்கத் திருவுள்ளம் கொண்டார். மோக்ஷமளிப்பதற்கு முந்திய தினம் இரவு சிறுவர் முதல்முதியவர்வரை அங்குள்ள எல்லா ஜனங்களுடைய கனவிலும் ப₄க்தவத்ஸலப்பெருமாள் ''என்னுடைய ப₄க்தனாய் மஹாத்மாவான திருக்கண்ணமங்கையாண்டானுக்கு நீங்கள் எல்லோரும் காணும்போதே மோக்ஷமளிக்கப் போகிறேன் என்பது உறுதி'' என்று

९१. संतुष्टाः सर्वं एवैते तेन वाक्येन विस्मिताः ।
आबालवृद्धवनिता भक्तवत्सलसन्निधिम् ॥

९२. तत्कालं वीक्षमाणास्ते तस्थुस्तत्रैकमानसाः ।
श्रीकृष्णलक्ष्मीनाथार्यस्वप्ने श्रीभक्तवत्सलः ॥

९३. तत्तथैवाब्रवीत्तस्य वेदान्तिन् कृपया तदा ।
तस्यां रात्र्यां व्यतीतायां कृष्णलक्ष्मीशनायकः ॥

९४. प्रातर्ग्रामात् बहिर्गत्वा कृतदेहविशोधनः ।
कृतावगाहनस्तत्र पूर्ववत्स जलाशये ॥

९५. जानुपाणिचरः शीघ्रं आययौ हरिसन्निधिम् ।
प्रदक्षिणक्रमेणैव गत्वा देवस्य सन्निधिम् ॥

९६. बलिपीठान्तिकं प्राप्य प्रथमावरणं ययौ ।
प्रथमावरणं प्राप्य कृत्वा तत्र प्रदक्षिणम् ॥

---

தெளிவாகக் கூறினர். இந்த வாக்கியத்தாலே வியப்புற்று உகந்த சிறுவர், முதியவர், பெண்கள் ஆகிய அனைவரும் பக்தவத்ஸலப்பெருமாள் கோயிலில் ஆண்டான் மோக்ஷமடைவதைக் காண்பதையே நெஞ்சில் கொண்டவர்களாய், அந்தக் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு நின்றனர். வேதாந்தியே! திருக்கண்ணமங்கையாண்டானின் கனவிலும் பக்தவத்ஸலப்பெருமாள் அவ்வண்ணமே கருணையோடு அப்போது வார்த்தை சொன்னர். அன்று இரவு கழிந்த பிறகு திருக்கண்ணமங்கையாண்டான் காலையில் ஊருக்கு வெளியில் சென்று காலைக்கடன்களை முடித்துக் கொண்டு முன்போலவே குளத்தில் நீராடி, கால்களாலும் கைகளாலும் நடப்பவராய் விரைவிலேயே பெருமாள் கோயிலுக்கு வந்தார். பெருமாள் கோயிலை வலம்வந்த பின்பு, பலிபீடத்தின் அருகில் சென்று முதல் பிரகாரத்தை அடைந்தார். முதல் பிராகாரத்தை அடைந்தபின் அங்கும்

९७. श्रीमण्डपं प्रविश्याशु प्रणम्य द्वारपालकौ ।
भक्तवत्सलपादाब्जसमीपमगमत्तदा ॥

९८. तदद्भुतं द्रष्टुकामाः सर्वे तत्पृष्ठतो ययुः ।
सर्वेषां पश्यतां तत्र विस्मितं विपुलेक्षणैः ॥

९९. यदनिर्वचनीयं तत्तेजो विद्युद्गणोपमम् ।
अलक्ष्यत तदा तत्र नालक्ष्यत स वैष्णवः ॥

१०० तदद्भुततमं दृष्ट्वा सर्वे विस्मितमानसाः ।
भक्तवत्सलदेवेऽथ दृढभक्तिसमन्विताः ॥

१०१. विमुक्तमायासंसारा बभूवुर्वैष्णवोत्तमाः ।
मोक्षं प्रत्यक्षतो दत्वा तस्मै भक्ताय सत्वरम् ॥

---

வலம் வந்து முன் மண்டபத்தில் விரைவில் நுழைந்து துவாரபாலகர்களை வணங்கி, அப்போதே ப₄க்தவத்ஸலப் பெருமாளின் திருவடித்தாமரைகளின் அருகில் சென்றார். அவர் மோக்ஷமடையும் ஆச்சரியத்தைக் காண விரும்பி எல்லா ஜனங்களும் அவர் பின்னாலேயே சென்றனர். எல்லோரும் வியப்புற்றுத் திறந்த கண்களுடன் பார்த்துக் கொண்டிருக்கையில் அங்கு மின்னல் கூட்டம் போன்ற ஒரு பெரிய ஒளி காணப்பெற்றது. அடுத்தகணம் அந்த வைஷ்ணவர் அங்கு காணப்படவில்லை.

## முடிவுரை

100—105:— மிகவும் ஆச்சரியமான அதைக்கண்டு அனைவரும் வியப்புற்ற நெஞ்சினராய், ப₄க்தவத்ஸலப் பெருமாளிடம் உறுதியான ப₄க்தியோடு கூடியவர்களாய், ஆச்சரியமான ஸம்ஸாரப₃ந்த₄த்திலிருந்து விடுபட்டவர்களாய், 'சிறந்த வைஷ்ணவர்கள் ஆனார்கள். திருக்கண்ணமங்கையாண்டானுகிற அந்த ப₄க்தனுக்கு இவ்வண்ணமாக

१०२. श्रीकृष्णलक्ष्मीनाथाय भगवान् भक्तवत्सलः ।
कलिदोषसमाक्रान्तं सर्वं जगदपालयत् ॥

१०३. भक्तवत्सलवात्सल्यं लोकेभ्यः सूचयन्निव ।
श्रीमान् वकुलवृक्षस्य च्छायायां दिव्यमण्डपे ॥

१०४. श्रीकृष्णलक्ष्मीनाथार्यो नित्योत्सवमहोत्सवैः ।
सहितः सर्वभूतानामद्यापि परिदृश्यते ॥

१०५. श्रीकृष्णलक्ष्मीनाथार्यचरितं यदनुत्तमम् ।
यः श्रृणोति नरो भक्त्या सर्वपापैः प्रमुच्यते ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्ति संवादे श्रीकृष्णलक्ष्मीनाथार्य-
मोक्षप्रदानं नाम दशोत्तरशततमोऽध्यायः ॥

---

அனைவரும் காணும்படியாக விரைவில் மோக்ஷத்தையளித்து ப₄க்தவத்ஸலப்பெருமாள் கலிதோ₃ஷத்தால் மூடப்பட்டிருந்த உலகனைத்தையும் ரக்ஷித்தார். ப₄க்தவத்ஸலனின் வாதஸல்யத்தை உலகுக்கு உணர்த்துவார்போலே மகிழமரத்தினடியில் மண்டபத்தில் ஸ்ரீமானான திருக்கண்ணமங்கையாண்டான் [அர்ச்சா ரூபியாய்] நித்யோத்ஸவம், மஹோத்ஸவம் முதலானவைகளையுடையவராய், எல்லா ஜனங்களுக்கும் இன்றும் காணப்படுகிறார். திருக்கண்ணமங்கையாண்டானின் ஒப்பற்ற சரிதத்தை ப₄க்தியுடன் கேட்கும் மனிதன் எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில்
ப₄ட்டார்யவேதா₃ந்தி ஸம்வாதத்தில்
திருக்கண்ணமங்கையாண்டானுக்கு மோக்ஷமளித்
ததைக் கூறும் நூற்றுப்பத்தாவது அத்தியாயம் நிறைவுற்றது.

एकादशोत्तरशततमोऽध्यायः ॥

१. ततो माधवदासाख्यो भट्टार्यमिदमब्रवीत् ।
कियत्कालं नाथयोगी पृथिव्यामवसद्गुरो ॥

२. अथ श्रीपुण्डरीकाक्षो वर्धयन्विष्णुदर्शनम् ।
उवास कुत्र नगरे कियत्कालं स देशिकः ॥

३. तत्सर्वं ब्रूहि तत्त्वेन मह्यं शिष्याय देशिक ।
स तद्वचनमाकर्ण्य भट्टार्यस्तमथाऽब्रवीत् ॥

४. त्रिशतं त्रिंशदधिकं वत्सराणां च भूतले ।
उवास नाथयोगीन्द्रो वर्धयन् विष्णुदर्शनम् ॥

## நூற்றுப்பதினோராம் அத்தியாயம்

### உய்யக்கொண்டார் வைபவம்

### நஞ்சீயரின் கேள்வி

1—*3 :— அதற்குப் பின் மாத₄வதா₃ஸர் என்னும் திரு நாமமுடைய நஞ்சீயர் ஸ்ரீபராசர ப₄ட்டரைப் பார்த்து "ஆசார்யரே! நாத₂முனிகள் இவ்வுலகில் எவ்வளவு காலம் வாழ்ந்தார்?. ஆசார்யரான புண்ட₃ரீகாக்ஷரும் வைஷ்ணவ தரிசனத்தை நிர்வஹித்துக் கொண்டு எந்த இடத்தில் எவ்வளவு காலம் வாழ்ந்தார்? இவையனைத்தையும் சீடனை எனக்கு உள்ளபடி அருளிச்செய்யவேண்டும்" என்று வேண்டினர்.

### உய்யக்கொண்டார் அவதாரம்

3*—*10 :— நஞ்சீயருடைய அவ்வார்த்தையைக் கேட்டு பட்டர் பின் வருமாறு கூறலானார்:— நாத₂முனிகள் இவ்வுலகில் வைஷ்ணவ தரிசனத்தை வளர்த்துக் கொண்டு முந்நூற்றுமுப்பது வருடங்கள் வாழ்ந்தார். த₄ாது வருடத்தில் மாசி மாதம் சுக்லபக்ஷ ஏகாதசியில் அந்த நாத₂முனிகள் விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைந்தார். அவருக்குப் பின்

५. धात्वब्दे माघमासे तु शुक्लपक्षे तु योगिराट् ।
एकादश्यामवापार्यो तद्विष्णोः परमं पदम् ॥
६. अथ श्रीपुण्डरीकाक्षः श्रीरंगे गुरुशासनात् ।
नित्यवासपरस्तस्थौ वर्धयन् विष्णुदर्शनम् ॥
७. अवतारस्थलं तस्य श्रूयतां तन्मयोच्यते ।
रङ्गवायव्यादिग्भागे क्रोशत्रयविदूरतः ॥
८. वर्तते महितक्षेत्रे तत्र श्वेतगिरिर्महान् ।
पद्माक्षो भगवांस्तत्र वर्तते दिव्यसुन्दरः ॥
९. भट्टेशपरकालाभ्यां संस्तुतः स हरिस्तदा ।
तत्रावतारं विदधे विष्वक्सेनांशतो महान् ॥

---

ஸ்ரீபுண்டரீகாக்ஷராகிற உய்யக்கொண்டார் ஆசார்யநியமனத்தாலே வைஷ்ணவ தரிசனத்தை வளர்த்துக் கொண்டு ஸ்ரீரங்கத்திலே நிரந்தர வாஸம் செய்தார். அவருடைய அவதாரஸ்தலத்தைச் சொல்லுகிறேன். கேட்பீராக! ஸ்ரீரங்கத்திற்கு வடமேற்குத் திக்கில் மூன்று க்ரோச தூரத்தில் புராணங்களால் சொண்டாடப்பட்ட புண்ய பூமியில் ஶ்வேதகிரி (திருவெள்ளறை) என்னும் சிறந்த மலை உள்ளது. அதிலே அப்ராக்ருதமான அழகுடைய புண்டரீ காக்ஷனுகிய எம்பெருமான் எழுந்தருளியிருக்கிருன். அப்பெருமான் பட்டர்பிரானுலும் திருமங்கை மன்னனுலும் மங்களாசாஸநம் செய்யப் பெற்றவன். அக்காலத்தில் * ஒரு சித்திரைமாஸம் பௌர்ணமியில் சித்திரா நக்ஷத்திரத்தில் விஷ்வக்ஸேநருடைய அம்சமாக உய்யக்கொண்டார் அவதரித்தார்.

---

* திருவெள்ளறையில் சித்திரையில் கார்த்திகையே உய்யக்கொண்டார் திருநக்ஷத்திரமாகக் கொண்டாடப்படுகிறது. திருநக்ஷத்ரத் தலியனும் அப்படியே உள்ளது.

१०. चैत्रमासे तु पौर्णम्यां पद्माक्षश्चाथ चित्रभे ।
स नाथमुनिमाश्रित्य वीरनारायणे पुरे ॥

११. तत्सन्निधौ स्थितो धीमान् कञ्चित्कालं गुरुप्रियः ।
अथ नाथार्यवाक्येन श्रीरंगं प्राप्य सत्वरम् ॥

१२. कञ्चित्कालमुवासार्यो वर्धयन् विष्णुदर्शनम् ।
कुरुकानाथयोगीन्द्रः पाण्ड्यदेशे महायशाः ॥

१३. कुरुकायां पौषमासे विशाखायां तदाऽजनि ।
वीरनारायणं प्राप्य स द्विजोऽथ महायशाः ॥

१४. पुण्डरीकाक्षकृपया नाथं संश्रित्य योगिनम् ।
श्रीवैष्णवोऽभवत्तेन कृतसंस्कारपञ्चकः ॥

---

## உய்யக்கொண்டாரின் த₃ரிசநநிர்வாஹம்.

10*—*12:— அறிவாளியும் ஆசார்ய நிஷ்டருமான அந்த உய்யக்கொண்டார் நாதமுனிகளின் சீடராகி, வீர நாராயணபுரத்தில் நாத₂முனிகளுடனே சிலகாலம் வாழ்ந்தார். அதற்குப்பின் நாத₂முனிகளின் நியமனத்தாலே விரைவில் ஸ்ரீரங்க₃த்தை அடைந்து, அங்கு ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்தை வளர்த்துக்கொண்டு சிலகாலம் வாழ்ந்தார்.

## குருகைக்காவலப்பன் வைப₄வம்

12*—*18:— பாண்டிய தேசத்தில் திருக்குருகூரிலே பெரும்புகழாளரான குருகைக் காவலப்பன் தை மாதம் விசாக நக்ஷத்திரத்தில் அவதரித்தார். பெரும்புகழ் கொண்ட அவ்வந்தணர் வீரநாராயணபுரத்தை அடைந்து உய்யக்கொண்டாரின் புருஷகாரத்தாலே நாத₂முனிகளை ஆஶ்ர யித்து, அவராலே பஞ்சஸம்ஸ்காரம் செய்யப்பெற்று ஸ்ரீவைஷ்ணவரானார். ஆசார்யரான நாத₂முனிகளிடமிருந்து

१५. संप्राप्ताष्टाङ्गयोगोऽथ गुरोः श्रीनाथयोगिनः ।
गुरुशुश्रूषणरतः कुरुकानाथयोगिराट् ॥

१६. वीरनारायणपुरे कञ्चित्कालमतिष्ठत ।
यत्र स्थानेऽथ योगीन्द्रो नाथार्यो संजहौ तनुम् ॥

१७. तत्रैवाष्टाङ्गयोगेन कुरुकानाथयोगिराट् ।
आदेहपतनं भक्त्या ध्यायन् गुरुपदाम्बुजम् ॥

१८. स सप्तत्यधिकं वत्सराणां शतमिह स्थितः ।
चोलदेशेऽथ कावेरी तीरे पुण्यतमे शुभे ॥

१९. श्रीरङ्गनगराभ्याशे मणक्काल् नाम विश्रुतम् ।
बभूव नगरं पुण्यं विद्वज्जन विभूषितम् ॥

---

அஷ்டாங்க₃யோகத்தைப்பெற்ற அந்தக் குருகைக் காவலப்பன் ஆசார்யகைங்கர்யம் செய்து கொண்டு வீரநாராயண புரத்திலே சிலகாலம் வாழ்ந்தார். நாத₂முனிகளின் காலத்திற்குப்பின் அந்த நாத₂முனிகள் தம்முடைய சரமத்திருமேனியை நீத்த இடத்திலேயே குருகைக் காவலப்பன் ஆயுள் உள்ளவரையில் தன்னுடைய ஆசார்யனின் திருவடித் தாமரையைத்தியானித்துக் கொண்டு ப₄க்தியுடன் எழுபது திருநக்ஷத்ரங்கள் வரையில் இவ்வுலகில் வாழ்ந்தார்.

## மணக்கால் நம்பியின் அவதாரம்

18*—21:— சோழ தேசத்தில் மிகப்பாவனமும் மங்களமுமான திருவரங்கப் பெருநகருக்கு அருகிலே காவேரிக் கரையிலே மிகப்பாவனமாய், கற்றவர்கள் நிறைந்ததான மணக்கால் நகரம் உள்ளது. மணம்மிக்க கால்வாயுடையதாகையாலே 'மணக்கால்' என்று பெயர் பெற்ற அவ்வூரில் ஓர்

२०. सौगन्धकुल्यानगरे कस्मिश्चित् द्विजवेश्मनि ।
विरोधिवत्सरे माघे मासे वै शुक्लपक्षके ॥

२१. चतुर्दश्यां मघायां च संजज्ञे सौम्यवासरे ।
अंशेन कुमुदाक्षस्य राममिश्रो महायशाः ॥

२२. स राममिश्रो वेदान्तिन्! महात्मा भगवत्परः ।
अशिश्रयन्महाभक्त्या पुण्डरीकाक्षमुत्तमम् ॥

२३. लवणाभावताताख्यो गोमठान्वयभूषणः ।
अशिश्रयन्महाभक्त्या पद्माक्षं ब्राह्मणोत्तमः ॥

२४. पञ्च प्राप्ताः ततः शिष्याः पद्माक्षस्याभवन् गुरोः ।
तन्मध्ये सुमहातेजाः गुरुभक्तिपरायणः ॥

---

அந்தணர்குடியில் விரோதி₄ வருடம் மாசி மாதம் சுக்லபக்ஷ சதுர்தசியோடு கூடிய மகநக்ஷத்திரத்தில் புதன்கிழமையன்று பெரும் புகழாளரான 'ராமன்' என்னும் பெயருடைய மணக்கால் நம்பி குமுதாக்ஷர் என்னும் நித்ய ஸூரியின் அம்சமாக அவதரித்தார்.

## உய்யக்கொண்டாரின் சிஷ்யர்கள்

22—25:— வேதா₃ந்தியே! மஹாபுருஷராய் ப₄க₃வத்₃ ப₄க்தரான அந்த மணக்கால் நம்பி மிகச்சிறந்தவரான புண்ட₃ரீகாக்ஷர் என்னும் உய்யக்கொண்டாரை மிகுந்த ப₄க்தியுடன் ஆச்ரயித்தார். கோமடவம்சத்திற்குஅலங்காரமாயிருப்பவரான'உ(ஒ)ப்பிலியப்பன்' * என்னும் அந்தணர் தலைவரும் உய்யக்கொண்டாரை மிகுந்த ப₄க்தியுடன் ஆச்ரயித்தார். ஆசார்யரான உய்யக்கொண்டாருக்கு ஐந்து சீடர்கள் இருந்தனர். அவர்களில் மிகுந்த தேஜஸ்வியும் கு₃ரு ப₄க்தி நிறைந்தவருமான மணக்கால் நம்பி ஆசார்யரான உய்யக்

---

* 'கோமடம் திருவிண்ணகரப்பன்' என்று பெரிய திருமுடியடைவு.

२५. श्रीराममिश्रो वेदान्तिन् कैङ्कर्याण्यनिशं गुरोः ।
सर्वाणि कुर्वन् संभक्त्या द्वादशाब्दान् व्यतिष्ठत ॥

२६. आण्डालाख्याऽथ पद्माक्षभार्या गुरुपरायणा ।
जगाम वैष्णवं लोकं महता पुण्यकर्मणा ॥

२७. गुरुगेहे ततो धीमान् कैङ्कर्याण्यखिलानि च ।
कुर्वन् सर्वधुरं सम्यक् उवास गुरुभक्तिमान् ॥

२८. पद्माक्षस्याभवत्तत्र वेदान्तिन् पुत्रिकाद्वयम् ।
सहोदरीमिव प्रेम्णा पुपोष महतैव तत् ॥

२९. ततः कदाचिदाचार्यपुत्रिकाद्वयमादरात् ।
तटाकतीरमनयत् स्नानार्थं गुरुभक्तिमान् ॥

---

கொண்டாருக்கு தினந்தோறும் ப₄க்தியுடன் எல்லாக் கைங்கரியங்களையும் செய்து கொண்டு பன்னிரண்டு வருடங்கள் வாழ்ந்தார்.

## மணக்கால் நம்பியின் ஆசார்ய நிஷ்டை

**26—32:—** ஆசார்யரையே பரம ப்ராப்யமாகக் கொண்டவளான உய்யக்கொண்டாரின் மனைவியான ஆண்டாள் என்னும் அம்மையார் தம்முடைய பா₄க்₃ய விசேஷத்தாலே விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைந்து விட்டாள். அறிவாளியாய் ஆசார்ய ப₄க்தியுடைய அந்த மணக்கால் நம்பி ஆசார்யன் திருமாளிகையின் பொறுப்பனைத்தையும் ஏற்றுக் கொண்டு எல்லாக் கைங்கரியங்களையும் நன்கு செய்து கொண்டு வாழ்ந்தார். வேதா₃ந்தியே! உய்யக்கொண்டாருக்கு இரண்டு பெண் பிள்ளைகள் இருந்தார்கள். சிறுமிகளான அவ்விருவரையும் தம் தங்கைகளைப் போலே பேரன்புடன் வளர்த்து வந்தார் மணக்கால் நம்பி ஒருநாள்

३०. कृतस्नानं समादाय गुरुगेहमथाऽऽययौ ।
तत्र पङ्काकुला काचित् कुल्या मार्गे बभूव ह ॥

३१. अतो न चैच्छत्तद्गन्तुं तन्मार्गे पुत्रिकाद्वयम् ।
तूष्णीं स्थितमगत्वाऽथ तद्विलोक्य गुरुप्रियः ॥

३२. गुरुपुत्रीद्वयं सम्यक् निक्षिप्य स्वभुजद्वये ।
तीर्त्वा पङ्काकुलां कुल्यां प्रेम्णा गुरुगृहं ययौ ॥

३३. तद्विलोक्य स पद्माक्षः ययौ तद्विस्मितं महत् ।
संतुष्टः स तदा धीमान् कृपया विबुधर्षभः ॥

३४. सम्यक् स्वपादपद्माभ्यामलङ्कृत्य स तच्छिरः ।
राममिश्राय शिष्याय सर्वार्थान्प्रददौ मुदा ॥

---

குருபக்தியுடைய அவர் அச்சிறுமிகள் இருவரையும் நீராட்டுவதற்காகக் குளக்கரைக்கு அழைத்துச் சென்றார். நீராடியபின்பு அவர்களை அழைத்துக்கொண்டு ஆசார்யன் திருமாளிகைக்குத் திரும்பி வந்தார். வரும் வழியில் சேறு நிறைந்த ஒரு கால்வாய் குறுக்கிட்டது. சிறுமிகள் இருவரும் சேறு நிறைந்திருந்தமையாலே அக்கால்வாயில் கால் வைக்க இசையவில்லை. நடக்காமல் மௌனமாயிருந்த அவ்விருவரைப் பார்த்து ஆசார்ய பக்தியுடைய மணக்கால் நம்பி அவ்விருவரையும் தம் இரு தோள்களில் வைத்துக் கொண்டு கால்வாயைக் கடந்து அன்புடன் ஆசார்யன் திரு மாளிகைக்கு அழைத்துச்சென்றார்.

## உய்யக்கொண்டாரின் அருள்

33 – *37:— அவர் தம் பெண்களைத் தோளில் வைத்து வருவதைக் கண்டு உய்யக்கொண்டார் மிகவும் வியப் படைந்தார். அறிவாளியாய், நல்லோர்களுக்குத் தலைவரான அந்த உய்யக்கொண்டார் அப்போது மிகவும் உகந்தவராய்த் தம்முடைய திருவடித்தாமரைகளாலே மணக்கால் நம்பியின்

३५. अतीतानागतं ज्ञानमात्मतत्त्वप्रकाशनम् ।
सर्ववेदार्थविज्ञानं सर्वशास्त्रार्थदर्शनम् ॥

३६. मानसं वाचिकं पापं कायिकं च त्रयीकृतम् ।
द्वयस्मरणमात्रेण नश्यन्ति हि सुनिश्चयम् ॥

३७. तत्प्रभावं प्रशस्याथ द्वयं च प्रददौ तदा ।
पञ्चोत्तरशतं नीत्वा वत्सराणां ततो भुवि ॥

३८. गुरुर्वैकुण्ठगमने चकार मतिमान्मतिम् ।
ततः स्वचरमे काले पद्माक्षो रामनामकम् ॥

३९. शिष्यं विलोक्य सन्तुष्टः व्याजहार वचः शुभम् ।
त्वमेव वर्धयन् लोके सम्यग्वैष्णवदर्शनम् ॥

---

தலையை நன்கு அலங்கரிக்கச் செய்து சீடரான அவருக்கு உகப்புடன் எல்லா அர்த்தஙகளையும் உபதேசித்தார். கடந்த காலத்திலும் வருங்காலத்திலுமுள்ள எல்லா அறிவையும் தன்னுள் அடக்கியதாய், ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை வெளிப்படுத்துவதாய், எல்லா வேதஙகளின் பொருளை அறிவிப்பதாய், எல்லா சாஸ்திரங்களின் பொருளையும் காட்டுவதாய், மனம், மொழி, மெய் என்னும் முக்கரணங்களினாலும் செய்யப்படும் பாபங்களை முற்றிலும் அழிப்பதான த்வயத்தின் பெருமையைப் புகழ்ந்து அந்த த்வய மந்திரத்தை அவருக்கு அப்போது உபதேசித்தார்.

## சரம காலத்தில் நியமனம்

37*—48:— இவ்வுலகில் நூற்றைந்து வருடங்கள் வாழ்ந்தபின்பு ஆசார்யராய், பேரறிவாளரான உய்யக் கொண்டார் வைகுண்டம் செல்லத் திருவுள்ளம் கொண்டார் அந்த உய்யக்கொண்டார் தம்முடைய இறுதிக்காலத்தில்

४०. सब्रह्मचारिभिस्सर्वैः वैष्णवैश्च वसिष्यसि ।
यामुनार्याभिधः कश्चित् भविष्यत्यात्मजो महान् ॥

४१. तस्येश्वरमुनेरेवं गुरुणा प्रेमभाषितम् ।
तस्मै पौत्राय मे देहि दर्शनार्थान्मयोदितम् ॥

४२. तस्मादवश्यं कर्तव्यं मयैतद्गुरुशासनम् ।
मत्कालेऽस्मद्गुरोः पौत्रो न जज्ञे किल सांप्रतम् ॥

४३. तस्मादितः परमपि महान्कश्चित भविष्यति ।
न वृथा जायते वाणी कदाचिदपि मे गुरोः ॥

---

ராமன் என்னும் திருநாமமுடைய சீடரான மணக்கால் நம்பியைப் பார்த்து உகப்புடன் பின்வருமாறு கூறினார்:— ''இந்த வைஷ்ணவ தரிசனத்தை இவ்வுலகில் நன்கு வளர்த்துக் கொண்டு உமது சகமாணுக்கர்களுடன் [ஸ்ரீரங்கத்திலேயே] வாழ்வீர். நாத₂முனிகளின் பிள்ளை ஈஶ்வர முனிகளுக்கு யாமுநாசார்யர் என்னும் புகழ்பெற்ற குமாரர் உண்டாகப் போகிறார். அவர் விஷயமாக எமது ஆசார்யரான நாத₂முனிகள் 'என்னுடைய பேரனுக்கு நான் உபதேசித்த த₃ர்சனார்த்த₂ங்கள் அனைத்தையும் உபதேசிக்கவேண்டும்' என்று எனக்கு அன்புடன் கட்டளை இட்டுள்ளார்; இந்த ஆசார்ய நியமனத்தை நான் அவசியம் நிறைவேற்றி வைக்க வேண்டும். என் காலத்தில் என்னுடைய ஆசார்யருக்குப் பேரன் இது வரையில் பிறக்கவில்லை ஆகையால் இனிமேல் தான் பெருத்த பெருமையுடைய அந்தப்பிள்ளை பிறக்கப் போகிறான். என் ஆசார்யருடைய வாக்கு ஒருநாளும் பொய்யாகாது. ஸ்ரீ நாத₂முனிகளுடைய பேரனுக்கு 'யாமுனன்' என்னும் திருநாமத்தையிட்டு, அவரை மிகவும் அநுவர்த்தித்தாவது எல்லா த₃ர்சனார்த்த₂ங்களையும் அவருக்கு

४४. श्रीनाथयोगिपौत्राय कृत्वा यामुननाम च ।
दर्शनार्थांस्ततस्सर्वान् दत्वा तमनुसृत्य च ॥

४५. दर्शनस्थापकं धीरं विधेहि गुरुशासनात् ।
कैङ्कर्यमेतच्चरमकालेऽस्मद्गुरुभाषितम् ॥

४६. मया तथैव चरमकाले सम्यगुदीरितम् ।
आचार्यपरमाचार्यकैङ्कर्यं यदनुत्तमम् ॥

४७. तस्मादवश्यं कर्तव्यं भवतः साधुसम्मतम् ।
इति निर्दिश्य पद्माक्षो राममिश्राय वै दृढम् ॥

४८. निश्चलं कृतकृत्योऽथ नाथपादाम्बुजद्वयम् ।
ध्यायन् कृतार्थो वैकुण्ठं जगाम सहसा तदा ॥

---

உபதேசித்து, ஆசார்ய நியமனத்தின்படி அவரைப் பேரறி வாளராகவும் தர்சனஸ்தாபகராகவும் நீர் ஆக்க வேண்டும். இந்தக்கைங்கர்யம் என்னுடைய ஆசார்யருடைய கடைசிக் காலத்தில் அவர் எனக்கு இட்ட கட்டளை. அவ்வண்ணமே என்னுடைய கடைசிக்காலத்தில் இந்தக் கட்டளையை உமக்கு நான் இடுகிறேன். ஆகையால் மிகச்சிறந்ததாய், ஆசார்ய பரமாசார்ய கைங்கரியமாய், நல்லோர்களால் கொண்டாடத் தக்கதான அதை நீர் அவசியம் செய்ய வேண்டும்'' என்று இவ்வண்ணமாக உய்யக்கொண்டார் மணக்கால் நம்பிக்கு உறுதியாகக் கட்டளையிட்டு, தாம் செய்ய வேண்டிய கடமை யைச் செய்து முடித்தவராய், நாதமுனிகளின் திருவடித் தாமரைகளை இடைவிடாமல் தியானித்துக்கொண்டு, விருப் பம் நிறைவேறியவராக அப்போதே சடக்கெனப் பரமபதம் அடைந்தார்.

४९. गुरोः संतापमगमन् वियोगमसहिष्णवः ।
रामामिश्रादयस्सर्वे पद्माक्षस्य महात्मनः ॥

५०. ब्रह्ममेधेन विधिना राममिश्रो गुरोस्तदा ।
कर्तव्यानि च कर्माणि चकार विधिना तदा ॥

५१. ततः श्रीवैष्णवैः सर्वैर्वैदिकाचारतत्परैः ।
सब्रह्मचारिभिस्सार्धं वर्धयन् विष्णुदर्शनम् ॥
उवास तत्र वेदान्तिन् राममिश्रो महायशाः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे पुण्डरीकाक्षावतारकथनं नाम एकादशोत्तरशततमोऽध्यायः ॥

---

## உய்யக்கொண்டாரின் சரமகைங்கர்யம்

49—51:— மணக்கால் நம்பி முதலான எல்லாச்சீடர்களும் மஹாத்மாவாய் ஆசார்யரான உய்யக்கொண்டாருடைய பிரிவைப் பொறுக்கமாட்டாதவர்களாய் மிகவும் துயருற்றனர். மணக்கால் நம்பி அப்போது தம்முடைய ஆசார்யருக்கு பிரம்மமேத விதிப்படி சரமகைங்கரியங்கள் அனைத்தையும் முறையாக நடத்தினர். வேதாந்தியே! அதற்குப்பின் வைதிகாசாரத்தில் ஈடுபட்டவர்களாய், ஸ்ரீவைஷ்ணவர்களான மாணுக்கர்களோடு பெரும் புகழாளரான மணக்கால் நம்பி வைஷ்ணவ தரிசனத்தை வளர்த்துக் கொண்டு ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்து வந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீ பராசரபட்டவேதாந்தி ஸம்வாதத்தில் புண்டரிகாக்ஷரின் அவதாரத்தையும் பெருமையையும் கூறும் நூற்றுப்பதினேராம் அத்தியாயம் நிறைவுற்றது.

द्वादशोत्तरशततमोऽध्यायः ॥

१. लक्ष्म्याख्यो वैष्णवः कश्चिच्छ्रीमान् वङ्गिपुराधिपः ।
अशिश्रयद्राममिश्रं प्रथमं भक्तिपूर्वकम् ॥

२. ततः श्रीवैष्णवाः पञ्च राममिश्रमशिश्रयन् ।
वेदान्तिन्! राममिश्रोऽथ दर्शनार्थान् निरन्तरम् ॥

३. सम्यक् चोपदिशंस्तस्थौ शिष्येभ्यः कृपया तदा ।
एवं स सर्वशास्त्रज्ञो महात्मा भगवत्परः ॥

४. नित्यमव्याहतं सम्यक् वर्धयन् विष्णुदर्शनम् ।
चिन्तयन्नीश्वरमुनेः पुत्रोत्पत्तिं कृतादरः ॥

---

# நூற்றுப்பன்னிரண்டாம் அத்தியாயம்

## யாமுநாசார்ய விஜயம்

## மணக்கால் நம்பி சிஷ்யர்கள்

1—*5:— வேதாந்தியே! சிஷ்ய லக்ஷணம் நிறைந்தவரான வங்கிபுரத்து ஆச்சி என்னும் வைஷ்ணவர் ப₄க்தியுடன் முதலில் மணக்கால் நம்பியை ஆஶ்ரயித்தார். அதற்குப் பின் ஐந்து சிஷ்யர்கள் மணக்கால் நம்பியை ஆஶ்ரயித்தார்கள். மணக்கால் நம்பியும் அந்த சிஷ்யர்களுக்கு அக்காலத்தில் தரிசனார்த்தங்களைக்கருணையோடு இடைவிடாமல் நன்கு உபதேசித்துக் கொண்டிருந்தார். மஹாபுருஷராய், ப₄க₃வத்₃ப₄க்தராய், எல்லா ஶாஸ்த்ரங்களையும் அறிந்தவரானஅவர் இவ்வண்ணமாக ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்தைத் தடையற தினந்தோறும் நன்கு வளர்த்துக் கொண்டு, தம்முடைய ஆசார்யரான உய்யக்கொண்டாரின்

५. आस्तेऽथ रंगे स्वगुरोराज्ञया कतिचित्समाः ।
तदा नाथात्मजः श्रीमान् ईश्वराख्यो मुनिर्महान् ॥
६. वीरनारायणपुरे स तस्मिन् पितृवेश्मनि ।
समतीतेऽथ कस्मिंश्चित्काले पुण्यतमे शुभे ॥
७. धात्वब्दे कर्कटे मासि पौर्णमास्यां भृगोर्दिने ।
मित्रभे रङ्गनायक्यां श्रीसिंहाननमागतः ॥
८. मतिमानीश्वरमुनेर्जज्ञे कश्चित्सुतो महान् ।
तत्पुत्रजननं श्रुत्वा राममिश्रः प्रहर्षितः ॥
९. वीरनारायणपुरं प्राप्य पुण्यं विलोक्य तम् ।
प्रहर्षमतुलं लेभे दिव्यलक्षणलक्षितम् ॥

---

நியமனத்தால் ஆர்வத்துடன் ஈச்வரமுனிக்குப் பிள்ளை பிறப்பதை எதிர்பார்த்துக்கொண்டு ஸ்ரீரங்கத்திலேயே சிலகாலம் வாழ்ந்தார்.

## யாமுநாசார்யர் அவதாரம்

5*—9:—அப்போது நாத₂முனிகளின் பிள்ளையாய் ஜ்ஞாநம் முதலான செல்வம் மிக்க பெரியவரான ஈச்வரமுனி வீரநாராயண புரத்தில் தம் தந்தையின் திருமாளிகையி லேயே வாழ்ந்துவந்தார். சிறிது காலம் கழிந்தபின் மிகப் புண்ணியமாய் மங்களமான த₄ாது வருடம் ஆடி மாதம் பௌர்ணமி வெள்ளிக்கிழமை கூடிய உத்திராட நக்ஷத் திரத்தில் அந்த ஈச்வரமுனிக்கு ரங்கநாயகி என்னும் பத்னியிடம் பேரறிவாளராய், கு₃ணங்களில் பெரியவராய், ஸிம்ஹமுக₂ர் என்னும் நித்யஸூரியின் அம்சமான பிள்ளை பிறந்தார். அவருக்குப் பிள்ளை பிறந்ததைக் கேள்விப்பட்டு உகந்த மணக்கால் நம்பி திவ்யதேசமான வீரநாராயண புரத்தை அடைந்து திவ்யலக்ஷணங்களோடு கூடிய அக் குழந்தையைப் பார்த்து ஒப்பற்ற ஆனந்தத்தை அடைந்தார்.

१०. जातकर्मण्यलाभे तु विष्णोश्चक्रस्य धारणम् ।
चौलोपनयने चापि तन्मन्त्राध्यापनेऽपि वा ॥

११. विधिना वैष्णवं चक्रं धारयेद्द्विजसत्तमः ।
इत्युक्तेन प्रकारेण राममिश्रो महामतिः ॥

१२. ईश्वराख्येन मुनिना वेदान्तिन्! दिव्यतेजसः ।
कारयित्वा जातकर्म शिशोस्तस्य यथाविधि ॥

१३. द्वादशेऽहनि पुत्रस्य नामकर्माऽकरोत्तदा ।
वैष्णवैश्चैव सूक्तैश्च कुर्यात्संमार्जनं शिशोः ॥

१४. तस्य दक्षिणकर्णे तु जपेदष्टाक्षरं द्वयम् ।
मूर्ध्नि हस्तं विनिक्षिप्य जपेच्च द्वादशाक्षरम् ॥

---

## யாமுனருக்கு ஸம்ஸ்காரங்கள் செய்தல்

10—17:- வேதாந்தியே! "ஜாதகர்மம் செய்யாதிருக்கையிலேயே, (குழந்தைக்கு) விஷ்ணுவினுடைய சக்ரத்தைத் தரிக்கச் செய்யவேண்டும். சௌளமாயினும், உபநயமாயினும், வேதமந்திரத்தை ஓதுவிக்கும்போதும், ப்ராஹ்மணஶ்ரேஷ்டன் (ஸுதர்சனஹோம) விதியின்படி விஷ்ணுவின் ஸுதர்சனத்தைத் தரிப்பிக்க வேண்டும்" என்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட ரீதியில் பேரறிவாளரான மணக்கால்நம்பி ஈஶ்வரமுனியைக்கொண்டு சிறந்த ஒளியையுடைய குழந்தைக்கு ஶாஸ்த்ர விதிப்படி ஜாதகர்மத்தைச் செய்வித்து, பன்னிரண்டாம் நாளில் அப்பிள்ளைக்கு நாமகரணத்தையும் செய்வித்தார். "(குழந்தை பிறந்தவுடன்) விஷ்ணு ஸம்பந்தியான ஸூக்தங்களாலே குழந்தையைத் துடைக்க வேண்டும். அக்குழந்தையின் வலது காதில் அஷ்டாக்ஷர த்வய மந்திரங்களை ஜபிக்கக் கடவன்; தலையில் கைவைத்து திருத்வாதஶாக்ஷரியையும் ஜபிக்கக் கடவன். அதற்குப்பின பாபத்தைப்போக்கும்

१५. नाम कुर्यात्ततः पश्चात् वैष्णवं पापनाशनम् ।
एवं शास्त्रोक्तमार्गेण श्रीनाथमुनिशासनात् ॥
१६. स पित्रा कारयामास राममिश्रः शिशोस्तदा ।
यामुनार्याभिधां तस्य नाथपौत्रस्य विश्रुताम् ॥
१७ ततोऽन्नप्राशनादीनि कर्माणि विविधानि च ।
तत्तत्काले यथाशास्त्रं यामुनस्याकरोत्तदा ॥
१८. कृतोपनयनः पित्रा यामुनार्यः कुशाग्रधीः ।
जग्राह निखिलान्वेदान् साक्षिमात्राद्गुरोर्मुखात् ॥
१९. तच्चित्रं यामुनार्यस्य यद्वेदाध्ययनं महत् ।
सकृच्छ्रवणमात्रेण जग्राह निखिलं हि तत् ॥

---

விஷ்ணு ஸம்பந்தமுடைய பெயரைக் குழந்தைக்கு இடக் கடவன்.'' என்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட ரீதியில் ஸ்ரீநாதமுனிகளுடைய நியமனத்தின்படி மணக்கால்நம்பி அப்போது நாதமுனிகளின் பேரனை அக்குழந்தைக்கு, புகழ்பெற்ற 'யாமுநாசார்யன்' என்னும் திருநாமத்தைத் தந்தையைக்கொண்டு இடுவித்தார். அதற்குப்பின் அன்னப் பிராசனம் முதலான பலவகைப்பட்ட ஸம்ஸ்காரங்களையும் யாமுநாசார்யருக்கு ஶாஸ்த்ரமுறைப்படி அவ்வக்காலங் களில் (ஈஶ்வரமுனி) செய்தார்.

## யாமுனர் வேதாப்யாஸம் செய்தல்

18—25:—வேதாந்தியே! தந்தையால் உபநயனம் செய்விக்கப்பெற்றவராய், மிகநுண்ணிய அறிவுடையவரான யாமுநாசார்யர் குருவை முன்நிற்குர் வியாஜமாத்திரமாகக் கொண்டு எல்லா வேதங்களையும் ஓதினார். யாமுநாசார்யர் செய்த வேதாத்யயனம் மிகவும் வியப்பை விளைப்பதாய்

२०. यामुनार्यमुपाध्यायः समाहूयेदमब्रवीत् ।
आगमाध्ययनार्थाय किमर्थं नागतो भवान् ॥

२१. उपाध्यायवचः श्रुत्वा यामुनो वाक्यमब्रवीत् ।
पूर्वेद्यु र्भवता स्वामिन्! यो वेद. समुदीरितः ॥

२२. स एवास्मिन् दिनेऽप्यार्य! प्रोच्यते किल पूर्ववत् ।
नागतोऽमवमेतेन किमर्थं पिष्टपेषणम् ॥

२३. तत्तस्य वचनं श्रुत्वा गुरुः परमविस्मितः ।
तत्सर्वं संप्रवीक्ष्याशु स बालं परिषस्वजे ॥

२४. वेदान्तिन्! यामुनाचार्यः स एवं गुरुसन्निधौ ।
पदक्रमजटावर्णक्रमादिसहितान् महान् ॥

---

இருந்தது. ஓதியது அனைத்தையும் ஒருமுறை கேட்டதனு லேயே கற்றுக்கொண்டு விட்டார். வேதமோதும் ஆசார்யர், யாமுநாசார்யரை அழைத்து "நீர் இன்று வேத₃ாத்₄யயனத் திற்கு ஏன் வரவில்லை?" என்று கேட்டார். ஆசார்யரின் அந்த வார்த்தையைக்கேட்டு "ஐயா! தேவரீர் நேற்று வேத₃த்தின் எந்த வாக்கியங்களை ஓதச் சொன்னீரோ அந்த வாக்கியங்களையே முன்போலவேஇன்றும்ஓதச்சொல்லுகிறீர். அரைத்தமாவையே அரைப்பது போல ஓதியதையே ஓதும் இதனல் பயனில்லையாகையால் நான் வரவில்லை." என்று பதிலுரைத்தார். அவருடைய இந்த வார்த்தையைக் கேட்டு ஆசார்யன் மிகவும் வியப்புற்றவராய், அவர் ஒரு முறை ஓதியதிலேயே அனைத்தையும் வசப்படுத்தியிருப் பதைக்கண்டு, சடக்கெனச் சிறுவரான அவரை அணைத்துக் கொண்டார். 'ஸிம்ஹாநனர்' (சிங்கமுகமுடையவர்) என்னும் நித்யஸூரியின் அம்சமான அந்த யாமுநாசார்யர்

२५. जग्राह निखिलान् वेदान् बालः सिंहाननांशजः।
यामुनार्योऽथ वेदान्तिन्! वेदाङ्गानि षडादरात् ॥

२६. अधीतवेदवेदाङ्गं पुत्रमालोक्य संमतम् ।
संप्रहृष्टोऽथ जनकः शास्त्रज्ञं कर्तुमुद्यतः ॥

२७. अथाञ्जसा महाभाष्यभट्टस्याग्रे विपश्चितः ।
पठन् सर्वाणि शास्त्राणि तस्थौ यामुनदेशिकः ॥

२८. ततश्चोलमहीपालपुरोधा विबुधर्षभः ।
आक्कियाळ्वानिति ख्यातः कश्चिदासीत्तदा महान् ॥

२९. निर्जित्य शास्त्रवादेन सर्वानेव विपश्चितः ।
स पुरोधा महाविद्वान् अद्वितीयो व्यरोचत ॥

३०. ततः पराजितास्सर्वे बुधा राजपुरोधसे ।
प्रत्यब्दं दशबन्धं च ह्यर्पयन्तः समास्थिताः ॥

---

என்னும் சிறுமாமனிசர் பத₃ம், க்ரமம், ஜடை, வர்ணக்ரமம், க₄னம் ஆகியவற்றோடு கூடிய எல்லா வேத₃ங்களையும் ஆறு வேதா₃ங்க₃ங்களையும் ஆர்வத்தோடு கற்றுக்கொண்டார்.

## யாமுநாசார்யரும் ஆக்கியாழ்வானும்

26—35:—வேதாந்தியே! வேதவேதாங்கங்களைக் கசடறக்கற்று அனைவராலும்கொண்டாடப்படும் பிள்ளையைக் கண்டு உகந்து தந்தையான ஈஶ்வரமுனி அவரை ஶாஸ்த்ரம் வல்லவராக ஆக்கவேண்டும் என்று முயற்சி கொண்டார். அதன்படி அறிவாளியான மஹாபா₄ஷ்யப₄ட்டர் என்னும் கு₃ருவினிடம் யாமுநாசார்யர் எல்லா ஶாஸ்த்ரங்களையும் படித்துக் கொண்டிருந்தார். அக்காலத்தில் சோழராஜாவின் புரோஹிதராய் மஹாபண்டி₃தராய் ஆக்கியாழ்வான் என்று புகழ்பெற்றவரான ஒரு பெரியவர் இருந்தார். அந்தப் புரோஹிதர் ஶாஸ்த்ரங்களில் வாத₃ம் புரிந்து எல்லாப்

३१. ततस्तद्ग्रन्थार्थं भटा राजपुरोधसः ।
अपीडयन्महाभाष्यभट्टं तस्याप्रदानतः ॥

३२. प्रव्याकुलान्तःकरणो द्रव्याभावात् प्रपीडितः ।
इत्येव यामुनार्येण स पृष्टः सादरं तदा ॥

३३. यन्महाभाष्यभट्टाख्यत्कृत्यं राजपुरोधसः ।
तत्सर्वं यामुनार्याय प्रोवाच विशदं तदा ॥

३४. तत्तदाकर्ण्य कुपितो यामुनार्यो निरङ्कुशः ।
तान् राजदूतान् निर्भर्त्स्य श्लोकमेकं लिलेख सः ॥

३५. न वयं कवयस्तु केवलं न वयं केवलतन्त्रपारगाः ।
अपि तु प्रतिवादिभीकर (वारण) प्रकटाटोपविपाटनक्षमाः ॥

---

பண்டிதர்களையும் வென்று ஒப்பற்ற மஹாவித்₃வானுக விளங்கினர். அவரால் வெல்லப்பட்ட எல்லாப் பண்டி₃தர்களும் அந்த ராஜபுரோஹிதருக்கு வருடந்தோறும் காணிக்கை செலுத்திக்கொண்டிருந்தனர். அப்போது அந்தக் காணிக்கை செலுத்த இயலாததால், ராஜபுரோஹிதரின் வேலைக்காரர்கள் மஹாப₄ாஷ்யப₄ட்டரைத் துன்புறுத்தினர். பணமில்லாமையால் மனம் கலங்கியவராய், துன்புறுத்தப் பட்டவரான மஹாப₄ாஷ்யப₄ட்டர் அன்போடு யாமுநாசார்யரால் அப்போது 'ராஜபுரோஹிதருக்கு என்ன செய்ய வேண்டும்?' என்று வினவப்பெற்றவராய், மஹாப₄ாஷ்ய ப₄ட்டர் அது அனைத்தையும் யாமுநாசார்யருக்குத் தெளிவாக உரைத்தார். அதைக்கேட்டுக் கோபங்கொண்ட யாமுநாசார்யர் சிறிதும் தயங்காமல் அந்த ராஜதூ₃தர்களைப்பய முறுத்தி பின்வரும் (பொருளுள்ள) ஶ்லோகத்தை எழுதினர்:- "யாம் கவிகள் மாத்திரமேயல்லோம்; யாம் மீமாம்ஸா சாஸ்திரக்கடலை மாத்திரம் கரைகண்டவர் களல்லோம். ஆனல் எதிர்வாதம் புரியுமவர்களாகிற யானை களின் மிக்க ஆடம்பரமாகிற மத்தகத்தைப் பிளக்க வல்லமையுடையோம்."

३६. श्लोकमेवं लिखित्वाशु पत्रिकायां सुनिश्चलः ।
भटैस्तैरेव तां धीमान् पत्रिकां श्लोकसंयुताम् ॥

३७. समीपं प्रेषयामास तस्य राजपुरोधसः ।
बालेन प्रेषितां तेन पत्रिकां वीक्ष्य विस्मितः ॥

३८ श्लोकं पठित्वा तं शीघ्रं समुद्विग्नमनास्तदा ।
स पुरोधा नृपायाथ तद्वृत्तान्तं न्यवेदयत् ॥

३९. चोलराज! महाभाष्यभट्टशिष्योऽर्भकोऽधुना ।
त्वच्छासनं विनिर्भर्त्स्य कश्चित् द्वादशवार्षिकः ॥

४०. उद्दामवृत्तिर्गर्वेण वर्तते गणयन्न माम् ।
तमानीयाञ्जसाद्यैव युक्तदण्डं विधेह्यलम् ॥

---

## யாமுநாசார்யரும் சோழராஜாவும்

36—*46:— அறிவாளியும் மிகுந்த உறுதியுடைய வருமான யாமுனர் சடக்கென இப்படி ஓலையெழுதி ஶ்லோகத்தோடு கூடிய அந்த ஓலையை அந்த வேலைக்காரர்களிடமே கொடுத்து ராஜபுரோகிதரிடம் அனுப்பினார். சிறுவரால் அனுப்பப்பட்ட அந்த ஓலையைக்கண்டு வியப்புற்று அந்த ஶ்லோகத்தையும் விரைவில் படித்து மனங்கலங்கியவராய், ராஜபுரோஹிதர் அப்போதே அச்செய்தியை அரசருக்குப் பின்வருமாறு தெரிவித்தார்:—"சோழ ராஜாவே! மஹா பா₄ஷ்ய பட்டருடைய சிஷ்யனான பன்னிரண்டு வயதுடைய சிறுவன்ஒருவன் கர்வத்தினாலே வரம்பு மீறிய செயலையுடையவனாய், என்னையும் மதிக்காமல் உம்முடைய ஆணையையும் மறுத்து நடக்கிறான். அவனை இப்பொழுதே விரைவில் வரவழைத்துத் தகுந்த தண்டனையை அளிக்க வேண்டும்" என்னும் புரோகிதருடைய வார்த்தையைக்

४१. पुरोहितवचः श्रुत्वा तद्वृत्तान्तं विचार्य च ।
स तं ज्ञात्वाऽथ विबुधं यामुनानयने तदा ॥

४२. आदिदेश तदाऽमात्यांश्चोलेन्द्रो विबुधप्रियः ।
धीमाननादराह्वानं यन्महीशकृतं हि तत् ॥

४३. अनादृत्य नृपाभ्याशं नागमद्यामुनस्तदा ।
तमनादरवृत्तान्त स निशम्य महीपतिः ॥

४४. यामुनस्य महाप्राज्ञो मनस्येवमचिन्तयत् ।
न सामान्यजनस्त्वेषो महाविबुधसत्तमः ॥

४५. महता वैभवेनैव ह्वानेऽयो मयाऽधुना ।
इति संचिन्त्य मतिमान् भूपतिः विबुधप्रियः ॥

४६. शिबिकां प्रेषयामास यामुनाचार्यसन्निधिम् ।
ततः स शिबिकारूढो यामुनार्यो महायशाः ॥

---

கேட்டு, அச்செய்தியையும் ஆராய்ந்து, பண்டிதர்களை மதிக்கும் சோழராஜா, யாமுனரைப் பண்டிதர் என்று அறிந்து அவரை அழைத்துவர அமைச்சர்களுக்குக் கட்டளையிட்டான். அறிவாளியான யாமுனர் அரசன் தம்மை மதிக்காமல் அனுப்பிய அவ்வழைப்பை அநாதரித்து அப்போது அரசனிடம் செல்லாமல் இருந்தார். யாமுனர் தம் கட்டளையை மதிக்கவில்லை என்பதைக் கேட்டு, சிறந்த அறிவாளியான அரசன், ''இச்சிறுவன் ஸாமாந்யமானவனல்லன். மஹாபண்டிர்தலைவனுகவே இருக்கவேண்டும். ஆகையால், இவனை இப்போது இங்கு மிகுந்த சிறப்போடு அழைத்து வரவேண்டும்'' என்று மனத்தில் நினைத்தான். இப்படி நினைத்து அறிவாளியும், பண்டிதர்களை மதிப்பவனுமான அரசன் யாமுனுசார்யர் இருக்குமிடத்திற்கு அவரை அழைத்துவரப் பல்லக்கை அனுப்பினுன்.

४७. राजद्वारं समासाद्य राज्ञा संपूजितस्तदा ।
तदा राजसभास्थाने विद्वद्गोष्ठीं विवेश सः ॥

४८. यामुनार्यागमं श्रुत्वा तदा राजपुरोहितः ।
राजस्थान विवेशाशु महाविबुधभूषणैः ॥

४९. तमागतं विलोक्याशु यामुनो निपुणस्तदा ।
तं जेतुकामं विबुधं श्लोकमेकमकल्पयत् ॥

५०. आशैलादद्रिकन्याचरणकिसलयन्यासधन्योपकण्ठात्
आरक्षोनीतसीतामुखकमलसमुल्लासहेतोश्च सेतोः ।
आ च प्राच्यप्रतीच्यक्षितिधरयुगलादर्कचन्द्रावतम्सात्
मीमांसाशास्त्रयुग्मश्रमविमलमना मृग्यतां मादृशोऽन्यः ॥

---

## ராஜஸபையில் யாமுநாசார்யர்

46*—58—அதற்குப்பின் பெரும் புகழாளரான யாமுநாசார்யர் பல்லக்கில் ஏறி அரண்மனையை அடைந்து அரசனால் உபசரிக்கப் பெற்றவராய், அப்போதே ராஜஸபையில் உள்ள வித்வத் கோஷ்டியை அடைந்தார். யாமுநாசார்யர் வந்திருப்பதைக் கேட்டு ராஜபுரோகிதர் மஹாவித்வான்களோடு கூடியவராய் ராஜஸபையை அடைந்தார். தன்னை ஜயிக்க விரும்பி, பண்டிதரான அந்த ஆக்கியாழ்வான் வந்திருப்பதைக் கண்டு வல்லவரான யாமுநாசார்யர் பின்வரும் (பொருளுள்ள) ஶ்லோகத்தை உடனே இயற்றினார்:— “மலையரசன் மகளான பார்வதியின் தளிரடிவைப்பினாலே சிறந்து விளங்கும் தாழ்வரைகளையுடைய இமயமலை முதல், அரக்கனால் அபஹரிக்கப்பட்ட சீதாப்பிராட்டியின் திருமுகத் தாமரை மலர்வதற்குக் காரணமான ஸேது வரையிலும், சந்திர ஸூர்யர்களிருவரையும் தலையலங்காரமாகவுடைய உதயகிரிக்கும் அஸ்தமநகிரிக்கும் நடுவிலும், பூர்வமீமாம்ஸை, உத்தரமீமாம்ஸை என்னும் இரண்டு சாஸ்திரத்திலும்

५१. श्लोकमेवं लिखित्वाशु पत्रिकायां विचक्षणः ।
विद्वद्राजसभास्थाने पत्रिकां तां बबन्ध सः ॥

५२. पत्रावलम्बनं दृष्ट्वा हृष्टो राजपुरोहितः ।
तत्प्रभावमजानस्तं जेतुं विबुधसत्तमम् ॥

५३. इयेष शास्त्रवादेन दुष्टबुद्धिप्रचोदितः ।
आक्कियार्योऽथ गर्वेण तदा राजपुरोहितः ॥

५४. वादार्थमागतस्तत्र महाविद्वद्विभूषणैः ।
तमागतं विलोक्याशु यामुनो निपुणस्तदा ॥

५५. दृष्ट्वा च राजवदनं व्याजहार वचः शुभम् ।
जयापजयवक्तॄणां मध्यस्थानां महात्मनाम् ॥

---

விசேஷமான பயிற்சியினுலே மயர்வற்ற நெஞ்சை யுடைய என்னைப் போன்ற மற்றொருவன் தேடப்படட்டும; (தேடினுலும் கிடைக்கமாட்டான் என்றபடி)'' வல்லவரான யாமுநாசார்யர் இந்த ஶ்லோகத்தை ஓலையில் உடனே எழுதி வித்வான்கள் நிறைந்த ராஜஸபையிலே அதை (அனைவரும் காணும்படி) தொங்கவிட்டார். தொங்கும் ஓலையைக்கண்டு உகந்த ராஜபுரோகிதர் யாமுநருடைய பெருமையை அறியா மல் தீய அறிவினுல் தூண்டப்பட்டவராய், பண்டிதோத்த மரான யாமுநரை சாஸ்திரவாதத்தாலே வெல்லவிரும்பினுர். ராஜபுரோகிதரான அந்த ஆக்கியாழ்வான் மஹாவித்வான் களோடு கூடியவராய், மிகுந்த கர்வத்துடன் வாதத்திற்காக யாமுநருக்கு முன்னே வந்து சேர்ந்தார். ஸமர்த்தரான யாமுநர் இப்படி வந்தடைந்த ஆக்கியாழ்வானைப் பார்த்து ராஜாவின் முகத்தையும் கண்டு "அரசனே! எங்களுக்கிடையே வெற்றி தோல்வியை அறிவிக்கக் கூடியவர்களாய், நடுநிலை நிற்கக் கூடியவர்களாய், மஹாத்மாக்களான பண்டிதர்களை நீ இங்கே அழைக்க வேண்டும்.'' என்னும் மங்களமான

५६. विपश्चितां त्वया शीघ्रमाह्वानं क्रियतां नृप ।
अङ्गीकृत्य वचस्तस्य स तथैवाकरोन्नृपः ॥

५७. राजाज्ञयाऽऽजग्मुस्तत्र बुधास्सर्वे समागताः ।
ये ये पराजिताः पूर्वं तेन राजपुरोधसा ॥

५८. यामुनाचार्यवृत्तान्तं श्रुत्वा तत्सर्वमञ्जसा ।
प्रहृष्टचेतसस्सर्वे ते ते तत्र समागताः ॥

५९. राज्ञो राजमहिष्याश्च वादस्तत्राभवत्तदा ।
को जेष्यत्येतयोः को वा पराजयमवाप्स्यति ॥

६०. राजाऽब्रवीत्तदैवं हि पुरोधास्तु विजेष्यते ।
राजपत्न्यब्रवीदेवं बाल एव विजेष्यते ॥

६१. तन्निशम्याथ चोलेन्द्रो महिषीं वाक्यमब्रवीत् ।
मत्पुरोहित एवैषो निश्चयं जयमाप्स्यति ॥

---

வார்த்தையைக் கூறினர். அவருடைய வார்த்தையை ஏற்றுக் கொண்டு அரசனும் அப்படியேசெய்தான். அரசனின் ஆணையால் அந்த ஸபைக்கு எல்லா வித்வான்களும் வந்து சேர்ந்தார்கள். இதற்கு முன் ராஜபுரோகிதராலே தோல்வியடைவிக்கப்பெற்ற எல்லா வித்வான்களும் யாமுநாசார்யரைப் பற்றிய செய்தியை நன்கு கேள்விப்பட்டு உகந்த நெஞ்சினராய் அங்கே வந்து கூடினர்கள்.

## ராஜா—ராணி விவாதம்

59—*66:- வேதாந்தியே! இவ்விருவரில் யார் ஜயிப்பார்? யார் தோல்வியடைவார்? என்பது பற்றி ராஜாவுக்கும் அவனுடைய பட்டமஹிஷிக்கும் அப்போது அங்கு விவாதம் ஏற்பட்டது. 'ராஜபுரோகிதரே ஜயிப்பார்' என்று அரசன் கூறினன். 'இச்சிறுவரே ஜயிப்பார்' என்று ராஜபத்தினி

६२. वेदान्तिन् चोलभूपाले वदत्येवं कृतादरे ।
प्रतिज्ञामकरोत्तीव्रां चोलपत्नी दृढव्रता ॥

६३. बालोऽयं यामुनाचार्यो यदि वादे पराजितः ।
आषण्मासं भविष्यामि तव दासी न संशयः ॥

६४. वेदान्तिन्! चोलराजेन प्रतिज्ञातमिदं तदा ।
पुरोहितो यदि जितो बालकेनाधुनाऽबले ॥

६५. अर्धराज्यं मया तुभ्यं दीयते नात्र संशयः ।
कृतप्रतिज्ञावन्योन्यमित्येतौ राजदम्पती ॥

६६. विद्वत्सदो ह्यविशतां सर्वविद्वज्जनावृतम् ।
ज्ञातुं तयोर्विबुधयोस्तौ जयापजयौ तदा ॥

---

கூறினாள். அதைக் கேட்டு சோழராஜா தன்பட்ட மஹிஷியைப் பார்த்து "என்னுடைய இந்தப் புரோகிதரே நிச்சயமாக வெற்றி அடைவார்" என்று கூறினான் சோழராஜா இப்படி அபிமானத்துடன் கூறியதைக்கண்டு உறுதியான கொள்கை யுடைய ராஜ பத்தினி, "சிறுவரான இந்த யாமுநாசார்யர் வாதத்தில் தோல்வியுற்றால் ஆறுமாதத்திற்கு நான் உமக்கு வேலைக்காரியாவேன். இதில் ஐயமில்லை." என்னும் கடுமை யான பிரதிஜ்ஞையைச் செய்தாள். வேதாந்தியே! இதைக் கேட்ட சோழ ராஜாவும் அப்போதே "பெண்பிள்ளையே! இச்சிறுவரால் இப்போது என் புரோகிதர் வெல்லப்பட்டா ரானால் என்பாதி ராஜ்யத்தை உனக்குத் தந்து விடுகிறேன்; இதில் ஐயமில்லை" என்று அப்போதே பிரதிஜ்ஞை செய்தான். இப்படி ஒருவருக்கொருவர் பிரதிஜ்ஞை செய்து கொண்டவர் களாய், அந்த ராஜ தம்பதியினர் எல்லா வித்வான்களும் கூடியிருந்த ஸபையில் நுழைந்தார்கள்.

६७ राज्ञो निषेदुः सदसि बुधास्सर्वे यथोचितम् ।
महता वैभवेनैव तदा चोलपुरोहितः ॥

६८. विपश्चिद्गणसंयुक्तो विद्वद्गोष्ठीं विवेश सः ।
अथ राज्ञा समाहूतो यामुनार्योऽर्भको महान् ॥

६९. समासदत्सभां शीघ्रमेक एवानघात्मवान् ।
नृपः समागतान् सर्वान् यथोचितमपूजयत् ॥

७०. राज्ञा संपूजितास्सर्वे विबुधा विबुधर्षभः ।
राज्ञस्सभायामुचितेष्वासनेषु समास्थिताः ॥

७१. तदा राजाज्ञया विद्वान् चोलराजपुरोहितः ।
यामुनार्यं महात्मानमिदं वचनमब्रवीत् ॥

७२. विद्वानपि भवान् बालः शास्त्रवादः क्षमो न ते ।
यदि त्रीण्येव वा कथानि ह्युच्यन्ते लोकवेदयोः ॥

---

## வாதப் போர் தொடக்கம்

66*—78:—அவ்விரு வித்வான்களிடையே வெற்றி தோல்விகளை அறிவதற்காக அந்த ராஜஸபையில் எல்லாப் பண்டிதர்களும் அவரவர்களுக்குரிய இடத்தில் அமர்ந்தனர். அப்போது சோழராஜ புரோகிதரான ஆக்கியாழ்வான் பல வித்வான்களோடு கூடியவராய் மிகுந்த ஆரவாரத்துடன் அந்த வித்வத் கோஷ்டிக்கு வந்து சேர்ந்தார். அதற்குப்பின் குற்றமற்றவராய், சிறுமாமனிசரான யாமுநாசார்யர் அரசனால் அழைக்கப்பட்டவராய், தாம் ஒருவராகவே அந்த ராஜஸபைக்கு விரைவில் வந்து சேர்ந்தார். வந்து சேர்ந்த அனைவரையும் அரசன் தக்கவாறு உபசரித்தான். அரசனால் உபசரிக்கப்பட்ட பண்டிதர்களும் மஹா வித்வான்களும் அந்த ராஜஸபையில் அவரவருக்குத் தக்க ஆஸனங்களில் அமர்ந்தனர் அதற்குப் பின் அரசனின் ஆணையால் சோழ ராஜ புரோகிதரான ஆக்கியாழ்வான் மஹாத்மாவான யாமுநாசார்யரைப் பார்த்து "நீர் வித்வானாயிருந்தாலும் சிறுவராய் இருக்கிறீர். ஆகையால் உம்மால் சாஸ்திரவாதம்

७३. निषिध्यन्ते मया तानि त्वदुक्तवचनान्यलम् ।
अथवा त्रीणि वाक्यानि ह्युच्यन्ते यानि वै मया ॥

७४. संदूष्यतां त्वया तानि मतिस्ते विद्यते यदि ।
पराजितस्य शिरसि ताडनं क्रियते ततः ॥

७५. निर्णीतमेव वेदान्तिन्! तेन राजपुरोधसा ।
सर्वेषां राजसदसि शृण्वतां च विपश्चिताम् ॥

७६. तस्य तद्वचनं श्रुत्वा नीतिज्ञः शमवारिधिः ।
संप्रहृष्टो यामुनार्यः पुरोहितमथाऽब्रवीत् ॥

७७. त्रीणि लौकिकवाक्यानि वक्ष्यन्तेऽद्य मया बुध! ।
तानि राजसभास्थाने खण्डितानि यदि त्वया ॥

७८. भवतो मम चात्राथ शास्त्रवादो भविष्यति ।
संतुष्टास्सर्व एवैते तद्वाक्येन सभासदः ॥

---

செய்ய முடியாது. (ஆகையால் பின்வருமாறு நியமம் வைத்துக் கொள்வோம்) லோக வேதங்களை அனுஸரித்து நீர் மூன்று வாக்கியங்களைக் கூறினால் அவற்றை நான மறுத்து விடுகிறேன்; அல்லது அப்படி மூன்று வாக்கியங் களை நான் கூறும்போது அறிவுக் கூர்மையிருந்தால் நீர் அதை மறுக்க வேண்டும்; தோல்வியுற்றவனுடைய தலையில் வெற்றி பெற்றவன் அடிக்க வேண்டும்" என்னும் வார்த் தையைக் கூறினர். வேதாந்தியே! அந்த ராஜஸபையில் எல்லா வித்வான்களும் கேட்டுக் கொண்டிருக்கும்போது ராஜ புரோகிதரால் இப்படி நிர்ணயம் செய்யப்பட்டது. அவருடைய இந்த வார்த்தையைக் கேட்டு நீதியறிந்த வராய், அமைதிக்கடலான யாமுநாசார்யர் உகந்து புரோ கிதரைப் பார்த்து, "அறிவாளியே! மூன்று லௌகிக வாக்கியங்களை நான் இப்போது கூறுகிறேன், இந்த ராஜஸபையில் நீர் அவற்றைக் கண்டித்து விட்டீரானல் உமக்கும் எனக்கும் அதற்குப்பின் சாஸ்திரவாதம் நடக்கும்" என்று உரைத்தார் யாமுநாசார்யரின் இவ்வாக்கியத்தைக் கேட்டு ஸபையிலிருந்த அனைவரும் உகந்தார்கள்.

७९. अनुज्ञातो नृपेनाथ सभासद्भिश्च सादरम् ।
पुरोहितं समुद्वीक्ष्य बालो द्वादशवार्षिकः ॥

८०. त्रीणि लौकिकवाक्यानि व्याजहार स्फुटं तदा ।
अवन्ध्या किल ते माता विद्वन् राजपुरोहित! ॥

८१. एष राजा सार्वभौमो राजपत्नी पतिव्रता ।
वाक्यत्रयं निशम्याथ लज्जितोऽभून्निरुत्तरः ॥

८२. सर्वे राजसभास्थाने तूष्णीं भूता नताननाः ।
अथाब्रवीद्वचो भूयो यामुनस्तं पुरोहितम् ॥

## யாமுநாசார்யரின் வெற்றியும், பெருந்தன்மையும்

79—91:— அரசனாலும் ஸபையிலுள்ளவர்களாலும் ஆர்வத்துடன் அனுமதிக்கப் பெற்று, பன்னிரண்டு வயதேயான சிறுவரான யாமுநாசார்யர், ராஜபுரோகிதரைப் பார்த்து, ''பண்டிதரான ராஜபுரோகிதரே! 1. உம்முடைய தாய் மலடியல்ல. 2. இந்த அரசன் உலகனைத்தையும் ஆள்பவன். 3. இந்த ராஜபத்தினி பதிவ்ரதை.'' என்னும் மூன்று லௌகிக வாக்கியங்களைத் தெளிவாக அப்போதே கூறினார். *இந்த மூன்று வாக்கியங்களையும் கேட்டு ஆக்கியாழ்வான் அவற்றை மறுக்க இயலாதவராய் வெட்கமடைந்தார். அந்த ராஜஸபையிலிருந்த அனைவரும் பேச இயலாதவர்களாய், தலைகவிழ்ந்து நின்றார்கள். அதற்குப் பின் மறுபடியும் யாமுநாசார்யர் ராஜபுரோகிதரைப்பார்த்து,

*'' (1) உம்முடைய தாய் மலடியல்ல; (2) ராஜா த₄ர்மிகன்; (3) ராஜபத்தினி பதிவிரதை '' என்று யாமுனர் மறுக்கவேண்டிய மூன்று வாக்கியங்களைக் கூறியதாகவும், ஆக்கியாழ்வான் இம் மூன்று வாக்கியங்களை மறுக்க முடியாமற்போன பிறகு '' (1) உம் தாய்க்கு நீர் ஒரே குமாரனாகையாலே, 'ஒரு மரமும் தோப்பல்ல, ஒரு பிள்ளையும் பிள்ளையல்ல' என்னும் உலகவழக்கின்படி உம்

८३. वक्ष्यामि वैदिकगिरश्चोत्तमाधममध्यमाः ।
सर्वशास्त्रस्थितास्सर्वा विबुधेन्द्रादिसंमताः ॥

८४. त्रिभिर्वा पञ्चभिर्वापि सप्तभिर्वाथ मद्गिराम् ।
दत्वा सदुत्तरं विद्वन् अत्रत्यबुधसंमतम् ॥

८५. मामर्भकं त्विह भवान् जित्वा यदि विजेष्यते ।
यथोचितमिदं चिह्नं भवतो विजयो ध्रुवः ॥

---

''எல்லா சாஸ்திரங்களிலும் இருப்பவையும் எல்லா மஹா வித்வான்களாலும் இசையப்பெற்றவையுமான உத்தமம், மத்திமம், அத₄மம் என்னும் மூன்று வகுப்பைச் சேரும் வைதி₃க வாக்கியங்களைக் கூறுகிறேன். அந்த என்னுடைய வாக்கியங்களுக்கு மூன்று வாக்கியங்களிலேயோ, ஐந்து வாக்கியங்களிலேயோ, ஏழு வாக்கியங்களிலேயோ இங்குள்ள வித்வான்கள் இசையக்கூடிய நல்ல பதிலை அளித்து சிறுவனான என்னை வென்று நீர் வெற்றி பெறுவீரானால் உமக்குள்ள இந்தச் சின்னங்களெல்லாம் தகுந்தவையேயாகும். நீரும் உறுதியாக வெற்றி பெற்றவராவீர்.'' என்னும் வார்த்தையைக்கூறினார். இவ்வண்ணமாகக் கூறி, பிரதிஜ்ஞை செய்தபடியே வைதிகவாக்கியங்களை அப்போதே

---

தாய்மலடியே; (2) 'ராஜ்ஞோ ராஷ்ட்ரக்ருதம் பாபம்' என்னும் வசனத்தின்படி குடிமக்கள் செய்யும் பாபம் அரசனைச் சேருமாகையால் ராஜா த₄ார்மிகன் என்ன முடியாது; (3) 'ஸோமः ப்ரத₂மோ விவிதே₃ க₃ந்த₄ர்வோ விவித₃ உத்தரः த்ருதீயோ அக்₃நிஷ்டேபதிः துரீயாஸ்தே மநுஷ்யஜாः' [(திருமணத்தில்), முதல்நாள் ஸோமனும், இரண்டாம் நாள் கந்தர்வனும், மூன்றும் நாள் அக்னியும், நாலாம் நாள் முதலே மணமகனும் மணமகளுக்குக் கணவன்மாராகின்றனர்.] என்னும் வேதவாக்யத்தைக் கொண்டு 'ராஜபத்தினி பதிவ்ரதை' என்பதை மறுக்கலாம்'' என்று யாமுனர் அம்மூன்று வாக்கியங்களையும் மறுத்துக்காட்டினார் என்றும் கூறுவதுண்டு.

८६. इत्युक्त्वा वैदिकगिरः प्रोवाच विशदं तदा ।
अशक्तश्चोत्तरं दातुं तेषां तद्वचसां तदा ॥

८७. ह्रिया नताननः सम्यक् तदा तूष्णीं समास्थितः ।
यामुनार्यो विलोक्याशु तदा राजपुरोधसम् ॥

८८. विषण्णवदनं दीनमिदं वचनमब्रवीत् ।
निर्णीतं पूर्वमेवात्र भवतैव सभास्थले ॥

८९. पराजितस्य शिरसि कर्तव्यमिति ताडनम् ।
पुरोहितत्वान्नृपतेर्वृद्धत्वात्त् भवतो द्विज! ॥

९०. महाराजाश्रितत्वाच्च ताडनं तव मस्तके ।
यच्चावमानजनकं न मया क्रियते ध्रुवम् ॥

९१. इतः परं हि भवतो विद्वच्चिह्नानि भूसुर ।
पराजितस्योचितानि न चैतानि महान्ति ते ॥

---

தெளிவாகக் கூறினர். அந்த வாக்கியங்களுக்கும் அப்போது பதில் சொல்ல வல்லமையற்றவராய் வெட்கத்தால் தலை கவிழ்ந்தவராய் ஆக்கியாழ்வான் மௌனமாயிருந்தார். வருந்திய முகமுடையவராய், பரிதபிக்கத்தக்க நிலையை அடைந்த அந்த ராஜபுரோகிதரைப்பார்த்து யாமுநாசார்யர், "இந்த ஸபையிலேயே நீர் முன்பே தோற்றவனுடைய தலையில் வென்றவன் அடிக்க வேண்டுமென்று நிர்ணயத்திருக்கிறீர். அந்தணரே! நீர் வயது முதிர்ந்தவராகையாலும், அரசரை அண்டியிருக்கையாலும், அரசருக்குப் புரோகிதராயிருக்கையாலும் உம்மை அவமானப் படுத்தும்படியாக உம்முடைய தலையில் நான் அடிக்கப் போவதில்லை. அந்தணரே! இனி, தோல்வியடைந்த உமக்கு இந்த வித்வான்களுக்குரிய பெரிய சின்னங்கள் தகுந்தவையல்ல." என்று உடனே கூறினர்.

९२. इति तद्वचनं श्रुत्वा यामुनार्यस्य पण्डिताः ।
अवतारं तदा मत्वा विष्णोर्लोकैकमङ्गलम् ॥

९३. पूजार्हं पूजयामासुः यामुनार्यं विपश्चितम् ।
तत्रत्या विबुधास्सर्वे ब्राह्मणा राजशासनात् ॥

९४. प्रतिष्ठाप्य महाभक्त्या बालं ब्रह्मरथे तदा ।
यामुनार्यं महात्मानं जितराजपुरोधसम् ॥

९५. पूजार्हं पूजयामासुर्ब्रह्माणमृषयो यथा ।
संप्रहृष्टाऽथ सहसा राजपत्नी मनस्विनी ॥

९६. यामुनार्यं महात्मानं बालकं भगवत्परम् ।
सर्वशास्त्रार्थनिपुणं सर्वविद्वच्छिरोमणिम् ॥

---

## யாமுனருக்கு ப்₃ரஹ்மரத₂ம

92—*95:—யாமுநாசார்யருடைய இவ்வார்த்தையைக் கேட்டு அப்போது அங்கிருந்த பண்டிதர்கள் உலகத்தைப் புனிதப்படுத்துவதற்காக எம்பெருமான் எடுத்த அவதாரமாக அவரை நினைத்து, பூஜிக்கத்தகுந்த வித்வானை அவரைப் பூஜித்தனர். அங்கிருந்த அந்தணர்களான வித்வான்கள் அனைவரும் சிறுவராயிருந்தபோதிலும் மஹாபுருஷராய், ராஜபுரோகிதரையே வென்றவராய், பூஜிக்கத்தகுந்தவரான யாமுநாசார்யரை, அரசனின் ஆணையாலே ப்₃ரஹ்ம ரத₂த்தில் சிறந்த ப₄க்தியுடன் எழுந்தருளப்பண்ணி, பிரமனை ரிஷிகள் ஆராதி₄ப்பதுபோலே ஆராதி₄த்தார்கள்.

## ராணி 'ஆளவந்தாரே' என்று அணைத்தல்

95*—98:—நன்னெஞ்சுடைய ராஜ பத்தினி இதைக் கண்டு மிகவும் உகந்து சிறுவராயிருந்த போதிலும் மஹா புருஷராய், ப₄க₃வத்₃ப₄க்தராய், எல்லா ஶாஸ்த்ரங்களிலும்

९७. अस्मद्रक्षागत! स्वामिन्! इति प्रेम्णा वचश्शुभम् ।
वदन्ती सम्यगुद्धृत्य बाहुभ्यां परिषस्वजे ॥

९८. रक्षागतगुरुर्नाम तेनाभूत्प्रथितं भुवि ।
वेदान्तिन्! यामुनार्यस्य सर्वलोकैकमङ्गलम् ॥

९९. अर्धराज्यं ददौ राजा यामुनाय विपश्चिते ।
विवादसमये दत्तं भार्यया चोदितस्तदा ॥

१००. यामुनार्योऽथ वेदान्तिन्! तद्राज्यं प्राप्य पुष्कलम् ।
पितृभ्यां संप्रहृष्टाभ्यां सहितः स्वपुरे तदा ॥

१०१. उवास पूजितस्सर्वैर्विबुधैर्वृत्रहा यथा ।
अधीतवेदवेदाङ्गं सर्वशास्त्रविशारदम् ॥

---

வல்லவராய், எல்லா வித்வான்களுக்கும் தலைக்கு அலங்காரமாயிருப்பவரான யாமுநாசார்யரை "ஐயா! என்னை ஆளவந்தீரோ" என்னும் மங்களமான வார்த்தையை அன்போடு கூறி, அவரைக் கைகளால் வாரி எடுத்துச் சடக்கென அணைத்துக் கொண்டாள். வேதாந்தியே! இக்காரணத்தால் உலகனைத்துக்கும் மங்களமான 'ஆளவந்தார்' என்னும் திருநாமம் யாமுநாசார்யருக்கு உலகில் பிரசித்தியடைந்தது.

## பாதி ராஜ்யம் அடைதல்

99—*101:— வேதாந்தியே! அரசன் ராணியோடு ஏற்பட்ட விவாதத்தின்போது அவளுக்கு அளிப்பதாக ஒப்புக்கொண்ட பாதி ராஜ்யத்தை அவளால் நியமிக்கப்பட்டு அறிவாளியான யாமுநாசார்யருக்குஅப்போதே அளித்தான். நிறைந்த செல்வமுள்ள அந்த ராஜ்யத்தைப் பெற்று யாமுநாசார்யரும் மிகவுகந்த தாய்தந்தையரோடு கூடியவராய், அறிவாளிகள் அனைவராலும் பூஜிக்கப்பட்டவராய், தனது ஊரில் இந்திரன் போலே வாழ்ந்து வந்தார்.

१०२. संप्राप्तराज्यं सर्वज्ञं जितराजपुरोहितम् ।
पुत्रमालोक्य संतुष्टः पिता यामुनदेशिकम् ॥

१०३. तदेश्वरमुनिः श्रीमान् महता वैभवेन च ।
विवाहं विधिना सम्यक् सर्वलोकैकविश्रुतम् ॥

१०४. कारयामास पुत्रस्य यामुनस्य महोजसः ।
द्वितीयाश्रममाश्रित्य यामुनः सर्वधर्मवित् ॥

१०५. पितृशुश्रूषणं कुर्वन् कश्चित्कालमतिष्ठत ।
स जगामेश्वरमुनिः ततो वैकुण्ठमुत्तमम् ॥

१०६. वेदान्तिन्! भगवद्भक्तः स्वार्जितेनैव कर्मणा ।
यामुनार्यः पितुस्तस्य ब्रह्ममेधविधानतः ॥

---

## யாமுநர் விவாஹம்

101*—*105:— வேத₃வேதா₃ங்க₃ங்களை ஓதியவராய், எல்லா ஶாஸ்த்ரங்களிலும் வல்லவராய், எல்லாம் அறிந்தவராய், ராஜபுரோகிதரையே வென்றவராய், ராஜ்யத்தையும் அடைந்தவரான யாமுநாசார்யரான பிள்ளையைப் பார்த்து உகந்து, செல்வம் மிக்க அவருடைய தந்தையான ஈஶ்வரமுனி பேராற்றல் பெற்ற அந்த யாமுநாசார்யராகிற தம் குமாரருக்கு உலகமெல்லாம் கொண்டாடும்படி பெரிய வைப₄வத்துடன் ஶாஸ்த்ரவிதி₄ப்படி விவாஹத்தை நடத்தி வைத்தார்; இரண்டாவது ஆஶ்ரமமான க்₃ருஹஸ்த₂ாஶ்ரமத்தை அடைந்தவராய், எல்லா த₄ர்மங்களையும் அறிந்தவரான யாமுநாசார்யர் தாய்தந்தையருக்குக் கைங்கர்யம் செய்து கொண்டு சிலகாலம் வாழ்ந்து வந்தார்.

## ஈஶ்வரமுனியின் பரமபத₃ ப்ராப்தி

105*—108:—வேதாந்தியே! ப₄க₃வத்₃ ப₄க்தரான ஈஶ்வரமுனி தாம் (மன்னனுக்கு) நெடுங்காலம் செய்த

१०७. कृत्वा संस्कारमव्यग्रः विधिना शास्त्रवित्तमः ।
कर्माण्यध्ययनान्तानि चक्रे श्रीवैष्णवैस्सह ॥

१०८. वेदान्तिन्! यामुनार्योऽथ बन्धुभिः कृतमङ्गलः ।
कञ्चित्कालं महातेजाः सुखेनैवाप्रतिष्ठत ॥

१०९. पुत्रद्वयं तदा जज्ञे यामुनार्यस्य विश्रुतम् ।
वररङ्गाभिधो ज्येष्ठः शोट्टपूर्णोऽपरस्तयोः ॥

११०. चकार सर्वसंस्कारान् महता वैभवेन सः ।
सर्वसम्पत्समायुक्तः सर्वबन्धुसमन्वितः ।

१११. कलत्रापत्यसहितः सर्वभोगसमन्वितः ।
भुञ्जानो राजभोगांश्च धर्मतः पालयन्प्रजाः ॥

---

கைங்கர்யத்தின் ப₂லனாக மேலான உலகமான வைகுண்ட₂த்தை அடைந்தார். ஶாஸ்த்ரங்களை அறிந்தவர்களில் சிறந்தவரான யாமுநாசார்யரும் தம் தந்தைக்கு ப்₃ரஹ்ம மேத₄விதி₄ப்படி அத்₄யயநம் வரையிலுள்ள எல்லாச் சரம கைங்கரியங்களையும் ஸ்ரீவைஷ்ணவர்களோடு கூடி நின்று நடத்தி உறவினர்களோடு கூடி சுப₄ஸ்வீகாரம் செய்து கொண்டவராய், பேரொளி பெற்றவராகச் சில காலம் இனிது வாழ்ந்தார்.

## மக்கட் பேறு

109—112:—வேதாந்தியே! யாமுநாசார்யருக்குப் புகழ் பெற்ற இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். திருவரங்கப் பெருமாள் அரையர் அவர்களில் மூத்தவர். சொட்டை நம்பி இரண்டாமவர். அவ்விருகுமாரர்களுக்கும் மஹா வைப₄வத்துடன் எல்லா ஸம்ஸ்காரங்களையும் யாமுநாசார்யர் செய்தார். எல்லாச் செல்வங்களோடும் கூடியவராய், எல்லா உறவினர்களோடும் சேர்ந்தவராய், மனைவியோடும் மக்களோடும் கூடி எல்லா போ₄க₃ங்களையும் அனுப₄விப்பவராய்

११२. राजभोगैकनिरतः सुखं तस्थौ महायशाः ।
वेदान्तिन्! यामुनाचार्यो महेन्द्र इव संततम् ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे यामुनाचार्यविजयो नाम
द्वादशोत्तरशततमोऽध्यायः ॥

त्रयोदशोत्तरशततमोऽध्यायः ॥

१. तच्छ्रुत्वा राममिश्रोऽथ संप्रहृष्टो महायशाः ।
द्रष्टुकामो यामुनार्यं तदन्तिकमुपागतः ॥
२. सप्तकक्षासमाकीर्णं तद्राजभवनं महत् ।
गजवाजिरथैः सम्यक् शूरैश्च परिरक्षितम् ॥

---

ராஜ்யத்திலுள்ள குடிமக்களையும் அறவழிப்படி ரக்ஷித்துக் கொண்டு, ராஜபோ₄கங்₃களையும் அநுப₄வித்துக் கொண்டு, அந்த ராஜபோ₄கங்₃களிலேயே எப்போதும் ஈடுபட்டவராய், பெரும்புகழ்பெற்றவராய், மஹேந்திரனைப் போல அந்த யாமுநாசார்யர் இனிது வாழ்ந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில்
ப₄ட்டார்யவேதா₃ந்தி ஸம்வாத₃த்தில்
யாமுநாசார்யர் விஜயத்தைக் கூறும் நூற்றுப்
பன்னிரண்டாம் அத்தியாயம் நிறைவுற்றது.

# நூற்றுப் பதின்மூன்றாம் அத்தியாயம்

## யாமுனர்க்கு கீ₃தோபதே₃சம்

## யாமுனரைக் காண உபாயம்

1—*15 வேதாந்தியே! யாமுநசார்யருடைய பெரும் புகழைக் கேள்விப்பட்டு உகந்த மணக்கால்நம்பி அவரைக் காண்பதற்காக அவர் இருக்குமிடம் வந்து சேர்ந்தார். ஏழு அங்கணங்கள் கொண்டதான அவருடைய அரண்மனை யானை, குதிரை, தேர், படைவீரர்கள் ஆகியவர்களாலே நன்கு ரக்ஷிக்கப்பட்டதாயிருந்தது. யாமுனரைக் காண்பதற்காகப் பத்துத் திக்குகளிலிருந்தும் வந்திருந்த பல பேரரசர்களால் சூழப்பட்டதாயும் இருந்தது.

३. दर्शनार्थं यामुनस्य दशदिग्भ्यः समागतैः ।
राजाधिराजैर्बहुभिः तैश्च सर्वैर्निषेवितम् ॥

४. महेन्द्रभवनप्रख्यं यामुनस्योत्तमं गृहम् ।
विलोक्य विस्मितोऽत्यन्तं प्रहृष्टः सुमहामतिः ॥

५. ममाऽद्य दुर्घटमिदं यामुनार्यस्य दर्शनम् ।
इति मत्वाऽथ वेदान्तिन् तस्य पाकगृहं ययौ ॥

६. पाचकं शनकैः सम्यक् स्ववशीकृत्य तं द्विजम् ।
तस्येष्टशाकं पप्रच्छ यामुनस्य किमित्यलम् ॥

७. अलर्कशाकं ज्ञात्वाऽथ स तस्येष्टतमं ततः ।
संतुष्टोऽनुदिनं तस्मै स दिशन् सुखमास्थितः ॥

८. एष षण्मासपर्यन्तं यामुनस्यादिशत्तदा ।
अलर्कशाकं वेदान्तिन् तद्वशीकरणेच्छया ॥

---

மஹேந்திரனுடைய மாளிகை போன்ற அந்த யாமுனருடைய அரண்மனையைக்கண்டு வியப்புற்று மிக உகந்தவரான பேரறிவாளரான மணக்கால் நம்பி "இந்த யாமுனாசார்யரை இப்போது நம்மால் பார்க்க இயலாது" என்று எண்ணி அவருடைய திருமடைப்பள்ளிக்குச் சென்றார். அங்கு சமையல் பணி புரிகின்ற அந்தணரைத் தமக்கு நன்கு வசப்படுத்திக்கொண்டு 'யாமுனருக்குப் பிரியமான காய்கறி வகை எது?' என்று கேட்டார். அவரிடமிருந்து யாமுனருக்குத் தூதுளைக்கீரையே மிகப் பிரியமானது என்று அறிந்து மிக உகந்தவராய், தினந்தோறும் அதை அவருக்குக் கொடுத்துக்கொண்டு இனிது இருந்தார். அப்படி ஆறுமாதகாலம் அவரை வசப்படுத்துவதற்காக யாமுனருக்குத் தூதுளைக்கீரையைக் கொடுத்துக் கொண்டிருந்தார். (அதனால் ஒன்றும் பயனில்லாமல் இருக்கையால்)

९. प्रव्याकुलान्तःकरणः तदा किञ्चिदचिन्तयत् ।
विष्णुदर्शननिर्वाहकं कुरुष्वेति यामुनम् ॥

१०. गुरुप्रोक्तमलंघ्यं मे तन्मह्य गुरुशासनम् ।
अधुना यामुनस्त्वेषः राजभोगसमन्वितः ॥

११. तिरस्कृतेन्द्रविभवः राजराज इवास्त्ययम् ।
तस्य संदर्शनं मेऽद्य यन्महत्व घटते कथम् ॥

१२. अलर्कं यन्मया दत्तमाषण्मासं निरन्तरम् ।
किमर्थं नीयतेऽनेन कोऽयं कस्मादिहागतः ॥

१३. इत्येवं यामुनार्येण न कदाचिद्विचारितम् ।
चतुष्टयदिनं तूष्णीं स्थितश्चेत्तदनन्तरम् ॥

---

கலங்கிய நெஞ்சுடையவராய் அப்போது ''என்னுடைய ஆசார்யர் இவரை வைஷ்ணவ தர்சன நிர்வாஹகராக ஆக்க வேண்டுமென்று எனக்கு இட்ட கட்டளை மீற வொண்ணாதது இவரோ இப்போது ராஜபோ₄க₃த்திலிருப் பவராய், இந்திரனைக் காட்டிலும் மிகவும் செல்வம் மிகுந்த வராய், அரசர்க்கெல்லாம் அரசராய் விளங்குகிறார். அவரைக் காணப்பெறும் அருங்காரியம் எப்படிக்கைகூடும்? ஆறுமாதத் திற்கு இடைவிடாமல் தூதுவளைக் கீரையைக் கொடுத்தேன். அப்படியிருந்தும் யார் எங்கிருந்து வந்து எதற்காக இதைக் கொடுக்கிறார் என்று யாமுனர் ஒருபோதும் விசாரித்த தில்லை. நான்கு தினங்களுக்குக் கீரை கொடுக்காமல் பேசா மல் இருந்து விட்டால் அதற்குப்பிறகு சந்தர்ப்பத்திற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளலாம்'' என்று எண்ணினார். இப்படி எண்ணி நல்லோர்களில் சிறந்தவரான மணக்கால்

१४. कालोचितं करिष्यामीत्येवमालोच्य सत्तमः ।
रंगेशं शरणं प्राप्य तस्य विज्ञानसिद्धये ॥

१५. गुरुपादाम्बुजे ध्यायन् राममिश्रोऽवसत्तदा ।
चतुष्टयदिनं तूष्णीं स्थितः पञ्चमवासरे ॥

१६. अलर्कशाकमादाय राममिश्रः स पूर्ववत् ।
वेदान्तिन् यामुनाचार्यपाकशालां समाविशत् ॥

१७. राममिश्रं तदा दृष्ट्वा वाचको वाक्यमब्रवीत् ।
आचतुर्दिवसेभ्यः प्राक् यामुनार्यप्रियं महत् ॥

१८. किमर्थं न त्वयाऽऽनीतं शाकमालर्कमुत्तमम् ।
कोपं नित्यं करोत्येषः यामुनार्यस्तु मां प्रति ॥

१९. स पाचकवचः श्रुत्वा राममिश्रोऽब्रवीत्तदा ।
राजाज्ञा किं तवैतन्मे दत्तं स्वच्छन्दतो मया ॥

---

நம்பி யாமுனருக்கு அறிவு உண்டாவதற்காக ஆசார்யருடைய திருவடித் தாமரைகளைத் தியானித்துக்கொண்டு ஸ்ரீரங்கநாதனைச் சரணமடைந்து பொறுத்திருக்கலானார்.

## உபாயம் பயனளித்தல்

15*—*34—வேதாந்தியே! நாலு தினங்களுக்குப் பேசாமலிருந்த பின், ஐந்தாவது தினத்தில் தூதுளைக் கீரையை எடுத்துக்கொண்டு மணக்கால் நம்பி யாமுனாசார்யருடைய திருமடைப்பள்ளிக்குச் சென்றார். அப்போது மணக்கால் நம்பியைப் பார்த்து சமையல் பணி புரிபவர் "நான்கு நாட்களுக்கு முன்புவரை யாமுனாசார்யருக்கு மிக இனிதான சிறந்த தூதுளைக் கீரையைக் கொண்டு வந்தவர் இந்த நான்கு நாட்களாக ஏன் கொண்டு வரவில்லை? யாமுனாசார்யர் தினந்தோறும் என்னிடம் கோபப்படுகிறார்"

२०. राजप्रेष्यो न चैवाऽहं देशिकाज्ञापरायणः ।
इत्युक्त्वा पाचकायाऽथ तच्छाकमदिशत्तदा ॥

२१. वेदान्तिन् यामुनाचार्यो भोजनावसरे तदा ।
अलर्कशाकमालोक्य तं पाचकमथाऽब्रवीत् ॥

२२. केनाऽऽनीतमिदं शाकं पाचकाऽस्मिन् दिने प्रियम् ।
तदङ्गीकृत्य वचनं यामुनं पाचकोऽब्रवीत् ॥

२३. मासषट्कं समारभ्य वृद्धः कश्चित् द्विजोत्तमः ।
अलर्कशाकमादाय नित्यं भक्त्या प्रयच्छति ॥

२४. युष्मत्प्रियतमं ज्ञात्वा निरपेक्षः कृतादरः ।
न दत्तं तेन तन्मध्ये एतद्दिनचतुष्टयम् ॥

२५. अस्मिन् दिने पुनस्तेन समानीतमिदं तव ।
राहित्यादस्य शाकस्य शिक्षितो भवताऽधुना ॥

---

என்று கூறினர். அவருடைய வார்த்தையைக் கேட்ட மணக்கால் நம்பி அப்போது "இது என்ன ராஜாஜ்ஞையா? என் விருப்பப்படி நான் உம்மிடம் கீரையைக் கொடுத்தேன்; நான் ராஜாவினுடைய வேலைக்காரனல்லன். என் ஆசார்யருடைய கட்டளையை நிறைவேற்றுகிறவனே நான்" என்று பதிலுரைத்தார். இவ்வண்ணம் கூறி அவரிடம் தூதுளைக் கீரையைக் கொடுத்தார். யாமுனசார்யர் அன்று உணவு உண்ணும்போது தூதுளைக் கீரையைப் பார்த்து "இந்த இனிதான தூதுளைக் கீரையை இன்று கொண்டு வந்தது யார்?" என்று கேட்டார். அதைக் கேட்ட சமையல் பணி புரிபவர் யாமுனசார்யரைப் பார்த்து "கடந்த ஆறுமாத காலமாக வயது முதிர்ந்த ஒரு அந்தணர்தலைவர் தூதுளைக் கீரையை உமக்கு மிகவும் விருப்பமானது என்று அறிந்து கைம்மாறு எதிர்பாராமல் ஆர்வத்தோடும் அன்போடும்

२६. अत्राऽऽगतं विलोक्याहं वैष्णवं वाक्यमब्रवम् ।
आचतुर्दिवसं वृद्ध अस्मत्स्वाप्रियं शुभम् ॥

२७. किमर्थं न त्वयाऽऽनीतं शाकमालर्कमुत्तमम् ।
अस्मत्प्रभुर्हि मय्येवं महत्कोपं करोत्यलम् ॥

२८. इत्येवमुक्तो मामाह वृद्धः श्रीवैष्णवोऽनघः ।
राजप्रेष्यो न चैवाहं देशिकाज्ञापरायणः ॥

२९. धीरराजाज्ञया शाकं दास्यामीति न चिन्तय ।
स्वच्छन्दतः प्रदास्यामि मनसे रोचते यदि ॥

३०. इत्युक्त्वा वैष्णवोऽलर्कमदिशन्मह्यमादरात् ।
वृद्धः स वैष्णवः स्वामिन्! निरपेक्षो महामतिः ॥

---

தினந்தோறும் கொடுத்து வருகிருர். நடுவில் இந்த நாலு நாட்கள் அவர் அதைக் கொடுக்கவில்லே. இன்று மறுபடியும் அவர் உமக்கு அதைக் கொண்டு வந்தார். நாலு நாட்கள் அது இல்லாமலிருந்ததால் உம்மால் கோபித்துக் கொள்ளப்பட்ட நான் இன்றுவந்த அந்த வைஷ்ணவரைப் பார்த்து 'பெரியவரே! நாலுநாள் முன்புவரையில் என் ஸ்வாமிக்கு இனியதான மங்களமான சிறந்த தூதுளேக் கீரையைக் கொண்டு வந்த உம்மால் இந்த நாலு நாளாக அது ஏன் கொண்டுவரப்படவில்லே? என் ஸ்வாமி என்னிடம் மிகவும் கோபப்படுகிருர்' என்று கூறினேன். இப்படி என்ஞல்சொல்லப்பட்டவராய், குற்றமற்றவராய், வயது முதிர்ந்தவரான அந்த ஸ்ரீவைஷ்ணவர் 'நான் ராஜாவின் வேலேக்காரன் அல்லன்; என் ஆசார்யருடைய கட்டளேயை நிறைவேற்றுகிறவன். அரசரின் ஆணேயாலே நான் கொடுத்து வருகிறேன் என்று நினேத்துவிடாதீர்; என் விருப்பத்தாலே எனக்கு விருப்பமுள்ளபோது கொடுக்கிறேன்' என்று கூறிஞர். இப்படிக் கூறி அந்த வைஷ்ணவர் என்னிடம் அன்

३१. आदावाकांक्षते प्रेम्णा दुर्लभं तव दर्शनम् ।
तच्छ्रुत्वा वचनं तस्य यामुनोऽत्यन्तविस्मितः ॥

३२. वृद्धं समानय क्षिप्रमिति पाचकमब्रवीत् ।
तस्यां रात्र्यां व्यतीतायां कृतनित्यक्रियो महान् ॥

३३. अलर्कशाकमादाय पूर्ववत्तत्र चागतः ।
तमागतं समालोक्य राममिश्रं स पाचकः ॥

३४. स वृद्धस्त्वागत इति यामुनाय न्यवेदयत् ।
सन्तुष्टस्तद्वचः श्रुत्वा चानीयान्तःपुरं तदा ॥

३५. राममिश्रं महात्मानं कुमुदाक्षांशसंभवम् ।
प्रत्युद्गम्य प्रहृष्टात्मा नत्वा तत्पादपद्मयोः ॥

३६. अर्घ्यपाद्यादिभिः सम्यक् राममिश्रं यथोचितम् ।
पूजार्हं पूजयित्वाऽऽर्यं प्राञ्जलिर्वाक्यमब्रवीत् ॥

---

புடன் தூதுளைக் கீரையைக் கொடுத்தார். ஐயா! அந்தப் பெரியவரான வைஷ்ணவர் எதையும் எதிர்பாராத பேரறிவாளராய் இருக்கிறார். கிடைத்தற்கரிய உமது காட்சியை அவர் அன்போடு பெறவிரும்புகிறார்'' என்று கூறினார். அவருடைய அவ்வார்த்தையைக் கேட்டு யாமுனர் மிகவும் வியப்புற்றவராய், "அந்த வயது முதிர்ந்தவரை விரைவில் இங்கு அழைத்து வருவீராக'' என்று சமையல் பணி புரிபவரிடம் கூறினார்.

## யாமுனரின் பிரார்த்தனை

34*—*38:—அந்த வார்த்தையைக் கேட்டு உகந்த யாமுனாசார்யர் குமுதாக்ஷர் என்னும் நித்யஸூரியின் அம்சமாக அவதரித்த மஹாபுருஷரான மணக்கால் நம்பியை அந்தப்புரத்துக்கு வருமாறு எதிர்கொண்டழைத்து உகந்தவராய், அவருடைய திருவடித் தாமரைகளை வணங்கியவராய்,

௩௭. अपेक्षितं हि भवतो धनं वा क्षेत्रमेव वा ।
यद्यदिच्छसि विप्रेन्द्र ग्रामं वा तद्ददामि ते ॥

௩௮. वरं वरय तत्सर्वं नात्र कार्या विचारणा ।
राममिश्रो यामुनस्य वचः श्रुत्वा मुदान्वितः ॥

௩௯. मन्दस्मितमुखः श्रीमानिदं वचनमब्रवीत् ।
मास्तु युष्मद्धनं वत्स युष्मत्क्षेत्रं च मेऽनघ ॥

௪௦. युष्मत्पूर्वैर्यामुनार्य यद्यत्संपादितं धनम् ।
त्वदर्थं सांप्रतं सम्यक् मद्वशे स्थापितं महत् ॥

௪௧. प्रदर्शयितुकामोऽहं तवान्तिकमुपागतः ।
यात्रेत्त तद्धनप्राप्तिस्तावद्युष्मद्गृहं प्रति ॥

---

அர்க்கியம் பாத்₃யம் முதலானவற்றை முறைப்படி அளித்து, பூஜிக்கத் தக்கவரான மணக்கால் நம்பியை நன்கு பூஜிதது‌க் கைகூப்பியவராய், அவரைப் பார்த்து, "அந்தணர் தலைவரே! தேவரீருக்கு விருப்பமானது பணமோ, நிலமோ, கிராமமோ எதுவாயிருந்தாலும் அதை அளிககிறேன. அது அனைத்தையும் என்னிடமிருந்து வரமாகப் பெற்றுக் கொள்வீராக; இது பற்றி ஐயமுறறு ஆராய வேண்டியதில்லை" என்று கூறினார்.

## மணக்கால் நம்பியின் விருப்பம்

38*—*44:—யாமுனாசார்யருடைய வார்த்தையைக் கேட்டு ஜ்ஞானபக்திவைராக்யச் செல்வங்களுடைய மணக்கால் நம்பி மிகவுகந்தவராய், புன்சிரிப்புடன் கூடியவராய், யாமுனரைப் பார்த்து, "குற்றமற்ற குழந்தையான யாமுனரே! உம்முடைய பணமோ, வயலோ எனக்குத் தேவையில்லை; உம்மிடம் அளிப்பதற்காக உம்முடைய முன்னோர்களால் தேடப்பட்ட பெரும் செல்வங்கள் என்னிடம் கொடுத்து வைக்கப்பட்டுள்ளன; அச்செல்வங்களைக் காட்டுவதற்காகவே

४२. गमनागमने मेऽथ निःशङ्कं शासनं कुरु ।
प्रतिगृह्य स तद्वाक्यं यामुनो वैष्णवप्रियः ॥

४३. द्वारपालान् समाहूय तत्तथैवाकरोत्तदा ।
राममिश्रोऽथ सन्तुष्टो यामुनार्येण पूजितः ॥

४४. निर्गत्य राजभवनात् अभ्यगात्स्वनिकेतनम् ।
ततः कृताह्निकः कल्ये राममिश्रो महामतिः ॥

४५. आदाय भगवद्गीतां यामुनार्यान्तिकं ययौ ।
तं दृष्ट्वा सहसोत्थाय यामुनार्यः प्रणम्य च ॥

४६. रत्नसिंहासनारूढं कृत्वा सम्यगपूजयत् ।
वेदान्तिन्! यामुनार्योऽथ राममिश्रं महौजसम् ॥

---

நான் உம்மிடம் வந்தேன். அச்செல்வங்களை நீர் அடையும் வரை நான் உம்முடைய வீட்டிற்குத் தடையில்லாமல் வந்து போகும்படியாக உம்முடைய வேலைக்காரர்களுக்கு நீர் ஆணையிடவேண்டும்.'' என்று வார்த்தை சொன்னார். வைஷ்ணவர்களிடம் அன்புடைய யாமுனரும் அந்த வாக்கியத்தை ஏற்றுக்கொண்டு தன்னுடைய வாயில்காப்பாளர்களை அழைத்து அப்படியே அப்போதே ஆணையிட்டார். மணக்கால் நம்பியும் மிகவுகந்தவராய், யாமுனாசாரியரால் பூஜிக்கப்பட்டவராய், அரண்மனையிலிருந்து வெளிவந்து தம் இருப்பிடம் சேர்ந்தார்.

## கீதோபதேசம்

44* —*55. வேதாந்தியே! அதற்குப்பின்பு பேரறிவாளரான மணக்கால்நம்பி மறுநாள் காலையில் அனுஷ்டானங்களைச் செய்துவிட்டு பகவத்கீதையை எடுத்துக்கொண்டு யாமுனாசார்யரிடம் சென்றார். அவரைக்கண்டு யாமுனர், உடனே வணங்கி எழுந்து, ரத்ன ஸிம்ஹாஸனத்தில் எழுந்தருளும்படி செய்து நன்கு ஆராதித்தார்.

४७. विलोक्य प्राञ्जलिर्भूत्वा पप्रच्छेदमनुत्तमम् ।
किमिदं पुस्तकवरं युष्मत्पाणौ प्रकाशते ॥

४८. ब्रूहि मे विशदं विद्वन्! वृत्तान्तं तस्य सादरम् ।
तस्य तद्वचनं श्रुत्वा स सन्तुष्टोऽब्रवीत्तदा ॥

४९. एषा श्रीभगवद्गीता सर्वतत्त्वार्थमञ्जरी ।
अर्जुनाय पुरा विद्वन् साक्षात्कृष्णेन भाषिता ॥

५०. वेदेषु पौरुषं सूक्तं पुराणेषु च वैष्णवम् ।
भारते भगवद्गीता धर्मशास्त्रेषु मानवम् ॥

५१. अतो हि भगवद्गीता मुख्यत्वात्समुदाहृता ।
निशम्य यामुनार्योऽथ भक्तिमान् तद्वचः शुभम् ॥

---

வேதாந்தியே! அதற்குப்பின் ஆளவந்தார் பெரிய தேஜஸ்வியான மணக்கால் நம்பியைப் பார்த்துக் கைகூப்பியவராய் ''உங்கள் கையில் விளங்கும் இந்தச் சிறந்த புத்தகம் யாது? அறிவாளியே! இதனுடைய வரலாற்றை எனக்கு அன்புடன் கூறுவீராக'' என்னும் சிறந்த கேள்வியைக் கேட்டார். அப்போது அவருடைய அந்த வார்த்தையைக் கேட்டு உகந்து மணக்கால் நம்பி ''அறிவாளியே! எல்லாத் தத்துவார்த்தங்களையும் தன்னுள்கொண்டிருக்கும் இப்புத்தகமே ஸ்ரீபகவத்கீதை எனப்படுவது. முற்காலத்தில் அர்ஜுனனுக்கு, ஸாக்ஷாத் கிருஷ்ணன்தன்னாலேயே உபதேசிக்கப் பெற்றது. 'வேதங்களில் புருஷஸூக்தமும், புராணங்களில் விஷ்ணுபுராணமும், பாரதத்தில் பகவத்கீதையும், தர்ம சாஸ்திரங்களில் மனுதர்மசாஸ்திரமும் தலைசிறந்தவையாகச் சொல்லப்படுகின்றன'. ஆகையால் பகவத்கீதை எல்லா ப்ரமாணங்களிலும் முக்கியமானதாகக் கூறப்படுகிறது.'' என்று பதிலுரைத்தார். மணக்கால் நம்பி

५२. तद्गीताश्रवणेऽत्यन्तं स सञ्जातरुचिर्महान् ।
बहुशः प्रार्थयामास राममिश्रं महामतिः ॥

५३. तेन संप्रार्थितो धीमान् राममिश्रो रहोऽब्रवीत् ।
तां गीतां संप्रवक्ष्यामि शृणुष्वादरतोऽनघ ॥

५४. वेदान्तिन्! राममिश्रोऽथ स्ववशीकृत्य यामुनम् ।
सम्यगष्टादशाध्यायीं अष्टादशदिनैस्तदा ॥

५५. स तस्मै यामुनार्याय रहस्येवमबोधयत् ।
ज्ञानं भक्तिश्च वैराग्यं तस्य संवव्रृधे ततः ॥

५६. शुक्लपक्षे चन्द्रमसः कला इव दिने दिने ।
राममिश्रं प्रणम्योऽर्थं यामुनो वाक्यमब्रवीत् ॥

---

யுடைய இந்த மங்களமான வார்த்தையைக் கேட்டுப் பேரறிவும் பக்தியுமுடைய பெரியவரான யாமுநாசார்யர் அந்த கீ₃தையின் பொருளைக் கேட்பதில் மிகவும் விருப்பமுடையவராய் மணக்கால் நம்பியைப் பலமுறை பிரார்த்தித்தார். அவரால் மிகவும் பிரார்த்திக்கப்பட்ட அறிவாளியான மணக்கால் நம்பி, ''குற்றமற்றவரே! நான் அந்த கீதையை உமக்குச் சொல்லுகிறேன். ஆர்வத்துடன் கேட்பீராக'' என்று கீதையை ரஹஸ்யமாகக் கூறினர். வேதாந்தியே! மணக்கால் நம்பி யாமுநாசார்யரைத் தாம் வசப்படுத்திக்கொண்டு பதினெட்டு அத்தியாயம் கொண்ட இந்த கீ₃தையைப் பதினெட்டு தினங்களிலே அந்த யாமுநாசார்யருக்கு ரஹஸ்யமாக அப்போது உபதேசித்தார்.

## சரமச்லோகார்த்தத்தின் உபதேசம்

55*- *61. இப்படி கீ₃தையைக் கேட்டதினால் யாமுநாசார்யருக்கு சுக்லபக்ஷத்துச் சந்திரனின் கலைகள் படிப்படியாக) வளர்வதுபோல் ஜ்ஞாநப₄க்திவைராக்₃யங்கள்

५७. राममिश्र! महाविद्वन्! गीतार्थः सम्यगीरितः ।
निर्हेतुककृपावेशात् मह्यमज्ञानिने त्वया ॥

५८. तेन संजातवैराग्यः कृतार्थोऽहं न संशयः ।
केनोपायेन भगवान् मम साक्षात्करिष्यति ॥

५९. तमुपायं हि सर्वज्ञ ब्रूहि शिष्याय मे गुरो ।
तदङ्गीकृत्य वचनं यामुनस्य गुरूत्तमः ॥

६०. आचार्यपरमाचार्यशासनान्निश्चलस्तदा ।
शिष्याय यामुनार्याय देशिकाधीनवृत्तये ॥

६१. राममिश्रोऽथ चरमश्लोकार्थं प्रददौ रहः ।
चरमश्लोकतत्त्वार्थज्ञानेनैवोदभूत्तदा ॥

---

தினந்தோறும் வளர்ந்தன. மணக்கால் நம்பியைத் தரையில் விழுந்து வணங்கி யாமுனாசார்யர் "மஹாவித்₃வானான ராமமிஶ்ரரே! உம்மால் அறிவற்ற எனக்கு கீ₃தையின் பொருள் நிர்ஹேதுககிருபையினாலே நன்கு உபதேசிக்கப் பட்டது. அதனால் வைராக்₃யமுண்டாகப் பெற்றவனாய் நான்பேறுபெற்றேன் என்பதில் ஐயமில்லை. எல்லாமறிந்த ஆசார்யரே! எந்த வழியாலே எம்பெருமான் எனக்குக் காட்சியளிப்பானோ அந்த வழியை சிஷ்யனான எனக்கு உரைத்தருளவேண்டும்" என்று உரைத்தார். யாமுனருடைய இந்த வார்த்தையை ஏற்றுக்கொண்ட ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரான மணக்கால் நம்பி தம்முடைய ஆசார்யரான உய்யக்கொண்டாருடையவும், பரமாசார்யரான நாதமுனிகளுடையவும் கட்டளையின்படி யாமுனரை தரிசனநிர்வாஹகராக்கவேணும் என்று உறுதிபூண்டவராய், ஆசார்யரான தமக்கு வசப்பட்டிருக்கும் சிஷ்யரான யாமுனருக்கு அப்போதே கீதாசரமஶ்லோகத்தின் பொருளை ரஹஸ்யமாக உபதேசித்தார்.

६२. यामुनस्यारुचिस्तस्य संसारे महती मुनेः ।
स तं निवृत्तसंसाररुचिं संवीक्ष्य यामुनम् ॥

६३. पैतामहं निधिं तेऽद्य दर्शयामीति सादरम् ।
तमादायाञ्जसा विद्वान् महात्मा रङ्गमभ्यगात् ॥

६४. न च ज्ञानस्य सङ्कोचं न चैव यमगोचरम् ।
तस्माद्रङ्गं महापुण्यं को न सेवेत बुद्धिमान् ॥

६५. रङ्गक्षेत्रं समासाद्य महदीदृशवैभवम् ।
विगाह्य तत्र कावेर्यां राममिश्रः सयामुनः ॥

६६. रंगेशं संप्रणम्याशु यामुनं वाक्यमब्रवीत् ।
अयमेव हि रंगेशो भगवान्निधिरव्ययः ॥

---

## ஸ்ரீரங்கநாதனை ஸேவிக்கச்செய்தல்

61*—68 :—சரமச்லோகத்தின் உண்மைப் பொருளைக் கேட்டவுடன் பகவத்பக்தரான யாமுனாசார்யருக்கு இவ்வுலக வாழ்க்கையில் பெருத்த வைராக்யம் உண்டாயிற்று. ஸம்ஸாரத்தில் விரக்தியடைந்த அந்த யாமுனாசார்யரைப் பார்த்து, பேரறிவாளராய் மஹாபுருஷரான அந்த மணக்கால் நம்பி "உம்முடைய பாட்டனார் உமக்குச் சேமித்து வைத்திருக்கும் நிதியை இப்போது காட்டுகிறேன்" என்று அன்புடன் கூறி அவரை அழைத்துக்கொண்டு ஸ்ரீரங்கத்திற்கு வந்தார். "ஸ்ரீரங்கத்தை அடைந்தவர்களுக்கு அறிவில் சுருக்கம் கிடையாது. யமலோகம் செல்லும் தீங்கும் இல்லை. ஆகையால் அறிவாளியாய் இருக்கும் எவன்தான் மஹாபுண்யமான ஸ்ரீரங்கத்தைஅடையாதிருப்பான்?" என்று சொல்லப்படும் பெரிய பெருமையை உடைய ஸ்ரீரங்கக்ஷேத்ரத்தை அடைந்த யாமுனாசார்யரோடு கூடிய மணக்கால் நம்பி அங்கு காவேரியில் நீராடி

६७. पुरानुभूतो भवतः पूर्वैर्यामुनदेशिक! ।
तेन प्रदर्शितं रङ्गनायकं जगतीपतिम् ॥
६८. विलोक्य महता प्रेम्णा यामुनार्यः प्रहर्षितः ।
आपादमस्तकं सम्यक् रंगेशं सोऽनुभूय च ॥
तत्प्रेमपारवश्येन वासं तत्राऽकरोत्तदा ॥
६९. क्षेत्राणि मित्राणि धनानि नाथ पुत्राश्च दाराः पशवो गृहाणि ।
त्वत्पादपद्मप्रवणानुवृत्तेः भवन्ति सर्वे प्रतिकूलरूपाः ॥
७०. स चैवमात्मनो रीत्या सर्वं संत्यज्य दूरतः ।
संन्यासं विदधे सम्यक् यामुनार्यो महायशाः ॥

---

ஸ்ரீரங்கநாதனை உடனே வணங்கி, யாமுனாசார்யரைப் பார்த்து "யாமுனாசார்யரே! உம்முடைய முன்னோர்களால் அநுபவிக்கப்பெற்ற அழிவற்ற நிதியாகிற ஸ்ரீரங்கநாதனாகிய பெருமான் இவரே ஆவர்" என்று கூறினார். அவரால் காட்டப்பட்ட லோகநாதனை ஸ்ரீரங்கநாதனைப் பெருங்காதலுடன் ஸேவித்து உகந்த யாமுனாசார்யர் திருவடி முதல் திருமுடிவரை ஸ்ரீரங்கநாதனை அநுபவித்து, அப்பெருமானிடம் காதல்வயப்பட்டவராய், ஸ்ரீரங்கத்திலேயே அது முதல் வாழத்தொடங்கினார்.

## துறவறம் ஏற்றல்

69—74 :—"எம்பெருமானே! உன்னுடைய திருவடித் தாமரையில் ஈடுபட்டவனுக்கு நிலங்கள், நண்பர்கள், செல்வங்கள், மக்கள், மனைவி, கால்நடைகள், வீடுகள் ஆகிய அனைத்தும் விரோதி₄களாகவே தோற்றும்" என்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டபடி பெரும்புகழாளரான யாமுனாசார்யர் எல்லாப் பற்றுக்களையும் அடியோடுவிட்டு ஸந்யாஸாஶ்ரமத்தை நன்கு ஏற்றுக்கொண்டார். ஜ்ஞாநம்

७१. वैराग्यज्ञानभक्त्यादिसद्गुणैकमहार्णवम् ।
श्रीरंगेश्वरकैङ्कर्यं कुर्वन्त भक्तितोऽनिशम् ॥
७२. रक्षागताभिधं धीरं यामुनार्यं महौजनम् ।
सिंहाननांशसंभूतं नारायणमुनिं यथा ॥
७३. अशिश्रयन् महाभक्त्या जनाः सर्वे द्विजर्षभाः ।
महापूर्णादयो धीराः देशिका विबुधर्षभाः ॥
७४. स तैस्समेतो भगवत्परार्थ्यैः श्रीवैष्णवैः यामुनदेशिकेन्द्रः ।
श्रीराममिश्रानुमतैकचित्तः श्रीरङ्ग आस्तेऽखिलोकरक्षः ॥
इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे यामुनार्याय
गीतोपदेशो नाम त्रयोदशोत्तरशततमोऽध्यायः ॥

---

ப₄க்தி வைராக்₃யம் முதலான நற்குணங்களுக்கு ஒர் கடலாயிருப்பவராய், தினந்தோறும் ஸ்ரீரங்கநாதனுக்கு அன்புடன் கைங்கர்யம் செய்பவராய், ஆளவந்தார் என்னும் திருநாமத்தை உடையவராய், பெரிய தேஜஸ்ஸை உடையவராய், சிங்கமுகரான நித்யஸூரியின் அம்சத்தைக் கொண்டு பிறந்தவரான யாமுநாசார்யரை நாராயணனென்கிற முனியை நரன் ஆச்ரயித்ததுபோலே, அந்தணர் தலைவர்களாய், பேரறிவாளர்களான பெரியநம்பி முதலான பல மஹாசார்யர்கள் சிறந்த பக்தியுடன் ஆச்ரயித்தார்கள். தலைசிறந்த பகவத் பக்தர்களாய், ஸ்ரீவைஷ்ணவர்களான அந்த சிஷ்யர்களோடு கூடிய யாமுநாசார்யர் மணக்கால் நம்பியைப் பின்பற்றுவதிலேயே ஊன்றியவராய், உலகனைத்தையும் ரக்ஷித்துக்கொண்டு ஸ்ரீரங்கத்திலேயே வாழ்ந்து வந்தார்.

ஸ்ரீ ப்ரபந்நாம்ருதத்தில்
ப₄ட்டார்யவேதா₃ந்தி ஸம்வாத₃த்தில்
யாமுநாசார்யருக்கு (மணக்கால் நம்பி) கீதோபதேசம்
செய்ததைக்கூறும் நூற்றுப்பதின்மூன்றும்
அத்தியாயம் நிறைவுற்றது.

चतुर्दशोत्तरशततमोऽध्यायः ॥

१. धीमान् माधवदासोऽथ भट्टार्यं भगवत्परम् ।
पप्रच्छ भक्तिसंयुक्तो महापूर्णादिवैभवम् ॥

२. कुत्रत्याः कीदृशाः स्वामिन् महापूर्णादयोऽनघ ।
अंशेन केषां गुरवो ह्यवतीर्णाः भुवः स्थले ॥

३. मह्यमाख्याहि तत्त्वेन तेषां तद्वैभवं महत् ।
कस्याधीनं ततो राज्यं तदभूत्तन्महत् गुरो ॥

४. राजपत्नी किमकरोत् तद्वृत्तान्तं निशम्य सा ।
एतत्सर्वं च मे ब्रूहि शिष्याय कृपयाऽनघ ॥

५ असद्यतेर्वचः सम्यगङ्गीकृत्य कृतादरः ।
तत्सर्वं विशदं सम्यग्व्याख्यातुमुपचक्रमे ॥

---

## நூற்றுப்பதினாலாம் அத்தியாயம்
## பெரியநம்பி முதலானோர் வைபவம்
### நஞ்சீயரின் கேள்வி

1—4:—அறிவாளியான மாதவதாஸரென்னும் நஞ்சீயர் பகவத்பக்தரான பட்டரிடம் பக்தியுடன் பெரியநம்பி முதலானவர்களுடைய வைபவத்தைக் கேட்கலுற்றார்:- "குற்றமற்ற ஆசார்யரே! பெரியநம்பி முதலானவர்கள் எங்கிருந்தவர்கள் ? எப்படிப்பட்டவர்கள்? யாருடைய அம்சத்தைக்கொண்டு இவ்வுலகில் அவதரித்தவர்கள்? அவர்களுடைய மிகச்சிறந்த வைபவத்தை எனக்கு உள்ளபடி கூறுவீராக; ஆளவந்தார் அரசைத் துறந்தபின் அந்த ராஜ்யம் யாருக்கு வசப்பட்டதாயிற்று? ஆளவந்தார் துறவு மேற்கொண்ட செய்தியைக்கேட்டு ராஜபத்னி என்ன செய்தாள்? இவையனைத்தையும் கருணையோடு சிஷ்யனை எனக்குக் கூறவேண்டும்."

६. कासारादिसमस्तयोगिनिकरैः श्रीगोदया संस्तुतो
रंगे श्रीमति भोगिराजशयने स्वर्णापगामध्यगे ।
यः शेते निखिलस्थलाधिवसतामाद्यो हरीणां प्रभुः ।।
स श्रेयः परमं ददातु जगतां श्रीरङ्गराजस्सदा ।।

७. अत्र श्रीरङ्गनगरे श्रीबृहच्चरणान्वये ।
भारद्वाजाख्यसद्गोत्रे यजुःशाखासमुज्ज्वले ।।

८. कुमुदांशेन संजज्ञे महापूर्णो महायशाः ।
वेदवेदाङ्गसंपन्नः सर्वशास्त्रविशारदः ।।

९. पुत्रो बभूव पूर्णस्य पुण्डरीकाक्षनामवान् ।
अतुलायीतिविख्याता दुहिता तस्य चानघ ।।

---

## பெரியநம்பியின் அவதாரம்

5—8. நஞ்சீயருடைய அந்த வார்த்தையை ஏற்றுக்கொண்டு அவருடைய கேள்விக்கு பதிலை அன்புடன் தெளிவாகப் (பின்வருமாறு) சொல்லத்தொடங்கினர் பட்டர்:- பொய்கையார் முதலான ஆழ்வார்கள் பதின்மராலும், ஆண்டாளாலும் மங்களாசாஸநம் செய்யப்பெற்றவராய், ஸ்ரீரங்கத்தில் இரு காவேரிகளுக்கு நடுவில் திருவநந்தாழ்வானுகிற படுக்கையில் எல்லாத்திவ்யதேசங்களிலுமுள்ள எம்பெருமான்களுக்கும் மூலகாரணமாய் இருக்குமவ யாதொரு பெருமான் சயனித்திருக்கிருனே அந்த ஸ்ரீரங்கநாதன் இவ்வுலகனைத்துக்கும் மேலான மங்களத்தை எப்போதும் அளிப்பானுக. இந்தத் திருவரங்கப்பெருநகரில், ப்₃ருஹச் சரணம் என்னும் வகுப்பில், ப₄ாரத்₃வாஜமாகிற நல்ல கோத்ரத்தில், யஜுர் வேதத்தை அத்யயநம் செய்பவர்களின் குலத்தில் 'குமுதர்' என்னும் நித்யஸூரியின் அம்சமானவராய், பெரும்புகழாளராய், வேதவேதாங்கங்களை நன்கு கற்றவராய் எல்லா ஶாஸ்த்ரங்களிலும் வல்லவரான பெரிய நம்பி அவதரித்தார்.

१०. स तत् दृष्ट्वा यामुनार्यवैभवं लोकविश्रुतम् ।
अशिश्रयन्महापूर्णो यामुनार्यं गुरूत्तमम् ॥
११. गुरुः स तत्र कृपया महापूर्णस्य यामुनः ।
श्रीपराङ्कुशदासाख्यं दास्यनामादिशत्तदा ॥
१२. श्रीभक्तांघ्रिरजोतिरिक्तमुनिभिः कासारयोग्यादिभिः
योगीन्द्रैर्नवभिश्च साधु भगवान् यः सन्नुतो गोदया ।
श्रीमद्वेङ्कटभूधरोत्तमशिरःस्थाने जगद्विश्रुतः
तिष्ठन्नाश्रितवत्सलो दिशतु नः श्रीवेङ्कटेशः श्रियम् ॥
१३. मायावी परमानन्दः त्यक्त्वा वैकुण्ठमुत्तमम् ।
स्वामिपुष्करिणीतीरे रमया सह मोदते ॥

---

### பெரியநம்பி யாமுனரை ஆச்ரயித்தல்

9—11 அந்தப் பெரியநம்பிக்குப் 'புண்ட₃ரீகாக்ஷர்' என்னும் திருநாமமுடைய ஒரு குமாரரும், 'அத்துழாய்' என்னும் பெயரையுடைய ஒரு பெண்ணும் உண்டானார்கள். அந்தப் பெரியநம்பி உலகனைத்திலும் புகழப்படும் யாமுனாசார்யருடைய பெருமையைக் கண்டு அந்த ஆசார்யச்ரேஷ்ட₂ரை ஆச்ரயித்தார். யாமுனாசார்யரும் அந்தப் பெரியநம்பிக்கு அப்போது 'ஶ்ரீபராங்குசதாஸர்' என்னும் தா₃ஸ்ய நாமத்தை அருளினார்.

### பெரிய திருமலைநம்பி ஆஶ்ரயித்தல்

12—18 : தொண்டரடிப்பொடியாழ்வார் தவிர, பொய்கையார் முதலான மற்ற ஒன்பது ஆழ்வார்களாலும் ஆண்டாளாலும் பாடப்பெற்றவனாய், திருவேங்கடமலையாகிற தலைசிறந்த ஸ்தானத்தில் உலகம் புகழநிற்பவனாய். அடியார்களிடம் அன்புடையவனான திருவேங்கடமுடையான் நமக்கு எல்லாச் செல்வங்களையும் அளிப்பானாக. ''ஆச்சர்யமான மாயைகளை உடையவனாய், பரமானந்த ஸ்வரூபனாய் உள்ள பரமபதநாதன் தலைசிறந்த வைகுண்டமாகிற

१४. वेङ्कटाद्रिसमं स्थानं ब्रह्माण्डे नास्ति किञ्चन ।
वेङ्कटेशसमो देवो न भूतो न भविष्यति ॥

१५. एतादृशप्रभावाख्ये सुवर्णमुखरीतटे ।
उदीच्यां वेङ्कटगिरौ संजज्ञे सुमुखांशतः ॥

१६. चैत्रस्वात्यां वेङ्कटेशवरदानेन वैष्णवः ।
भूरिश्रीशैलपूर्णाख्यो महात्मा भगवत्परः ॥

१७ श्रीवेङ्कटेशकैङ्कर्यनिरतोऽभूत्सदा गुरुः ।
देहि मे तात पानीयमिति प्राह यमीश्वरः ॥

१८. वेङ्कटेशस्ततस्तस्य तातचार्याभिधाऽभवत् ।
ततो महान् यामुनार्यं सोऽप्येवं तमशिश्रयत् ॥

---

இருப்பிடத்தை விட்டு ஸ்வாமிபுஷ்கரிணிக்கரையில் பெரிய பிராட்டியாரோடு இன்புற்றிருக்கிறான். திருவேங்கடமலைக்கு ஒப்பான இடம் இந்த ப்₃ரஹ்மாண்டத்தில் வேறொன்றும் இல்லை. திருவேங்கடமுடையானை ஒத்த தே₃வன் இதுவரை இருந்ததுமில்லை. இனிவரப்போவதுமில்லை.'' என்று ப்ரமாணங்களில் பேசப்படும் பெருமையை உடையதாய், பொன்முகலியாற்றின் வடகரையில் உள்ளதான திருவேங்கடமலையில் 'ஸுமுக₂ன்' என்னும் நித்யஸூரியின் அம்சமாக, திருவேங்கடமுடையானின் வரப்ரதா₃னத்தாலே சித்திரை மாதம் ஸ்வாதியில் மஹாத்மாவாய், பகவத் பக்தியுள்ளவரான பெரிய திருமலைநம்பி என்னும் ஸ்ரீவைஷ்ணவர் அவதரித்தார். அவர் எப்போதும் திருவேங்கடமுடையானுடைய கைங்கர்யத்திலேயே ஈடுபட்டவராய் இருந்தார். "தாத! (தந்தையே!) எனக்குத் தண்ணீர் கொடுப்பீராக'' என்று திருவேங்கடமுடையானால் கேட்டுக்கொள்ளப்பட்டமையால் அவருக்குத் தாதாசாரியர் என்னும் பெயர் ஏற்பட்டது. அந்தப் பெரியவரும் ஆளவந்தாரை இவ்வண்ணமே ஆஶ்ரயித்தார்.

१९. ततो गोष्ठीपुरं नाम विश्रुतं पाण्ड्यमण्डले ।
भगवान् राजते तत्र सौम्यनारायणाभिधः ।
भट्टेशपरकालाभ्यां संस्तुतो जगदीश्वरः ॥

२०. श्रीमद्भट्टेशचतुष्कवीन्द्रकृतिभिर्यः संस्तुतो भासते
तीरे शुद्धसरोवरस्य स हरिः पुण्ये विमानेऽद्भुते ।
अष्टाङ्गे च महासुताख्यरमया यः संस्तुतो भासते
श्रीगोष्ठीपुरनायको दिशतु नः श्रेयः परं सन्ततम् ॥

२१. तत्र वैशाखरोहिण्यां पुण्डरीकांशतोऽजनि ।
गोष्ठीपूर्णो महातेजाः विद्वद्गोष्ठीविशारदः ॥

२२. स च तं यामुनाचार्यमशिश्रयदरिन्दमः ।
तत्रैव पाण्ड्यदेशेऽस्ति काचिच्छ्रीमधुरापुरी ॥

---

## திருக்கோட்டியூர்நம்பி ஆஶ்ரயித்தல்

19—*22 :—பாண்டிய நாட்டில் திருக்கோட்டியூர் என்று புகழ்பெற்ற திவ்யதேசம் ஒன்று உண்டு. அங்கு பெரியாழ்வாராலும், திருமங்கையாழ்வாராலும் பாடப் பெற்ற லோகநாயகனான ஸௌம்யநாராயணன் என்னும் எம்பெருமான் எழுந்தருளியிருக்கிறான். பட்டர்பிரானாலும், நாலுகவிப் பெருமாளாலும் மங்களாசாஸநம் செய்யப் பெற்று, திருப்பாற்கடல் என்னும் குளக்கரையில் ஆச்சரிய மாய், பரமபாவனமான அஷ்டாங்க₃ விமானத்தில் ‘திரு மாமகள்’ என்னும் ஸ்ரீதேவியோடு கூடியவனாய் எழுந்தருளியிருக்கும் திருக்கோட்டியூர் எம்பெருமான் நமக்கு எப்போதும் மேலான நன்மைகளை அளிப்பானாக. அந்தத் திருக்கோட்டியூரில் வைகாசி மாதம் ரோஹிணி நக்ஷத்திரத்தில் ‘புண்ட₃ரீகர்’ என்னும் நித்யஸூரியின் அம்சமாகப் பெரும் தேஜஸ்ஸை உடையவரும், அறிஞர்கள் கோஷ்டியிலே மதிக்கப்படுபவருமான திருக்கோட்டியூர் நம்பி அவதரித்தார். புறமதத்தவர்களை வென்றவரான அவரும் யாமுனாசார்யரை ஆஶ்ரயித்தார்.

२३. तस्याः समीपे विख्यातो वृषभाद्रिर्विराजते ।
भगवान्सुन्दरभुजः पञ्चभिर्दिव्यसूरिभिः ।
संस्तुतोऽव्याहतैश्वर्यो ह्यद्यापि परिदृश्यते ।
२४. श्रीमच्छठारिकुलशेखरभट्टनाथैः
श्रीगोदया च भगवान् कलिवैरिणा च ।
यः संस्तुतो वनगिरौ कृतनित्यवासः
श्रीशः स मामवतु सुन्दरबाहुरेषः ॥
२५. श्रीसुन्दराचले चात्र श्रीमान् श्रीवामनांशतः ।
कुम्भमासे मघायां तु जज्ञे मालाधरो महान् ॥
२६. वेदवेदाङ्गसंपन्नो महात्मा भगवत्परः ।
नित्यकैङ्कर्यनिरतस्तस्थौ सुन्दरबाहवे ॥

---

## திருமாலையாண்டான் ஆஶ்ரயித்தல்

22*—*28 :—அந்தப் பாண்டிய நாட்டிலேயே மதுரை என்னும் நகரம் உள்ளது. அதற்கு அருகில் 'வ்ருஷப₄ாத்₃ரி' என்று புகழ்பெற்ற, திருமாலிருஞ்சோலைமலை விளங்குகிறது. ஐந்து ஆழ்வார்களால் பாடப்பெற்றவனாய், தடையற்ற செல்வம் உடையவனான சுந்தரத்தோளுடையானான எம்பெருமான் அங்கு இன்றளவும் காணப்படுகிறான். நம்மாழ்வாராலும், குலசேகராழ்வாராலும், பெரியாழ்வாராலும், ஆண்டாளாலும், திருமங்கையாழ்வாராலும் பாடப்பெற்றவனாய், திருமாலிருஞ்சோலையிலே நித்யவாஸம் செய்பவனான இந்த சுந்தரத்தோளுடையானாகிற ஶ்ரிய:பதி என்னை ரக்ஷிப்பானாக. அந்தத் திருமாலிருஞ்சோலைமலையில் 'ஸ்ரீவாமனர்' என்னும் நித்யஸூரியின் அம்சமாக மாசி மாதத்தில் மகநக்ஷத்திரத்தில் ஜ்ஞாநப₄க்தி வைராக்₃யச் செல்வம் மிக்கவரான திருமாலையாண்டான்

२७. सोऽपि तद्यामुनाचार्यमाहात्म्यं तन्निशम्य च ।
वृषभाद्रिं विहायाशु श्रीरङ्गं प्राप्य बुद्धिमान् ॥

२८. यामुनार्यं तमाश्रित्य तत्रैव न्यवसत्सुखम् ।
बभूव मारणेराख्यं नगरं पाण्ड्यमण्डले ॥

२९ तत्र श्रीमारणेर्नम्बिनामाऽभूद्वैष्णवोत्तमः ।
चतुर्थवर्णो ह्याश्लेषानक्षत्रे मासि कर्कटे ॥

३०. ज्ञानभक्त्यादिजलधिः महात्मा देशिकप्रियः ।
स तु श्रीरङ्गमासाद्य श्रुत्वा यामुनवैभवम् ॥

३१. शिष्यत्वमगमत्तस्य यामुनस्य महामतिः ।
नित्यकैङ्कर्यनिरतो गुरोर्नित्यमतन्द्रितः ॥

---

என்னும் பெரியவர் அவதரித்தார். வேதவேதாந்தங்களில வல்லவராய் மஹாபுருஷராய் பகவத்பக்தரான அவர் சுந்தரத்தோளுடையானுக்கு எப்போதும் கைங்கரியம் செய்வதில் ஈடுபட்டிருந்தார். அறிவாளியான அவரும் யாமுனாசாரியருடைய பெருமையைக் கேள்விபட்டு, திருமாலிருஞ்சோலையை விட்டு விரைவில் ஸ்ரீரங்கத்தை அடைந்து யாமுனாசாரியரை ஆஶ்ரயித்து ஸ்ரீரங்கத்திலேயே இனிது வாழ்ந்தார்.

## மாறனேர்நம்பி ஆஶ்ரயித்தல்

28*—*33 :—பாண்டிய நாட்டில் மாறனேரி என்னும் ஒரு நகரம் இருந்தது. அங்கு மாறனேர்நம்பி என்னும் ஸ்ரீவைஷ்ணவத் தலைவர் நான்காவது வருணத்தில் ஆடி மாதம் ஆயில்ய நக்ஷத்திரத்தில் அவதரித்திருந்தார். ஜ்ஞாநம் பக்தி முதலானவற்றுக்கு ஒரு கடலாயிருப்பவராய், ஆசார்யர்களுக்கு இனியவராய், மஹாபுருஷரான அவர் யாமுனாசாரியரின் பெருமையைக் கேள்விப்பட்டு ஸ்ரீரங்கத்தை அடைந்து யாமுனருடைய சிஷ்யராக ஆனார்.

३२. अथाकरोन्नित्यवासं तत्रैव गुरुसन्निधौ ।
वेदान्तिन्! मारणेनेत्यनाम्नि शिष्ये महात्मनि ॥

३३. सुतरां यामुनाचार्यः कृपावान्समतिष्ठत ।
तुण्डीरमण्डले पूर्वसिन्धोः पश्चिमरोधसि ॥

३४. मात्येकयोजने काचित् महीसारपुरी श्रुता ।
अत्रावतारं विदधे भक्तिसारो महायशाः ॥

३५. तस्याः पुरः महाभाग पश्चिमे क्रोशमात्रतः ।
बभूव नगरी काचित् नाम्ना श्रीपुष्पमल्लिका ॥

३६. नित्यपुष्पवती यत्र राजते मल्लिका यतः ।
पूनमल्लीति यामेव वदन्त्याधुनिका जनाः ॥

---

பேரறிவாளராய், ஆசார்யருக்குச் சோம்பலின்றி நித்ய கைங்கரியம் செய்பவராய், ஆசார்யன் திருமுன்பே நித்ய வாஸம் செய்து வந்தார் அவர். வேதாந்தியே! மஹாத்மாவான மாறனேர்நம்பி என்னும் அந்தச் சிஷ்யரிடம் யாமுநாசாரியர் மிகுந்த கருணையுடையவராய் இருந்து வந்தார்.

## திருக்கச்சி நம்பியின் வைபவம்

33*—*50 :— மஹாபாக்யசாலியான நஞ்ஜீயரே! தொண்டை மண்டலத்தில் கிழக்குக் கடலின் மேற்குக் கரையில் ஒரு யோஜனை தூரத்தில் திருமழிசை என்னும் நகரம் புகழ்பெற்று விளங்குகிறது. அங்குப் பெரும்புகழாளரான பக்திஸாரரெனும் திருமழிசையாழ்வார் அவதரித்தார். அதற்கு மேற்கே ஒரு க்ரோச தூரத்தில் பூவிருந்தவல்லி என்னும் பெயருடைய நகரம் உள்ளது. எப்போதும் பூத்த மல்லிகைக்கொடிகள நிறைந்து விளங்கியதாலே அதற்குஅப்பெயர் ஏற்பட்டது. இக்காலத்து ஜனங்கள் அதையே ‘பூனமல்லி’ என்று கூறுகிறார்கள். அந்தப் பூவிருந்தவல்லி என்னும்

३७. सा पुष्पमल्लिका नाम नगरी विश्रुता भुवि ।
सर्वसस्यसमायुक्ता पुष्पारामातिशोभिता ॥

३८. माघमासे तत्र पुर्यां नक्षत्रे मृगशीर्षके ।
चतुर्थवर्णे संजज्ञे शबर्यंशेन वैष्णवः ॥

३९. काञ्चीपूर्ण इतिख्यातः कमलापतिनन्दनः ।
कश्चिन्महान् महाभाग महाभागवतोत्तमः ॥

४०. कृताधिवासस्तत्रैव पूनमल्लीपुरे महान् ।
नित्यं वरदराजाय कैङ्कर्यं कर्तुमुद्यतः ॥

४१. पुष्पारामं विधायाशु सुमहानन्दनोपमम् ।
भक्त्या मनोहराः कृत्वा महतीः पुष्पमालिकाः ॥

४२. नित्य हस्तिगिरिं गत्वा वरदायार्पयन् स्थितः ।
आसूरिकेशवार्येण तस्य मैत्रं तदाऽभवत् ॥

---

நகரம் உலகில் புகழ்பெற்றதாய், எல்லாப் பயிர்களோடும் கூடியதாய், பூந்தோட்டங்களால் மிகவும் அழகு பெற்றதாய் விளங்குகிறது. அந்த நகரில் மாசி மாதம் மிருகசீரஷ நக்ஷத்திரத்தில் சபரியின் அம்சமாக நாலாவது வருணத்தில் ஓர் வைஷ்ணவர் அவதரித்தார் கமலாபதி என்பவரின் பிள்ளையாய், திருக்கச்சிநம்பி என்று பெயர் பெற்றிருந்த அப்பெரியவர் தலைசிறந்த பாகவதோத்தமராய், அந்தப் பூந்தமல்லியில் வாழ்ந்து வந்தார். தினந்தோறும் காஞ்சிவரதராஜப் பெருமாளுக்குக் கைங்கரியம் செய்ய முற்பட்டவராய், தேவேந்திரனுடைய நந்தனவனத்தைப்போன்ற பூந்தோட்டத்தை அமைத்து பக்தியுடன் மிக அழகிய பூமாலைகளைத் தொடுத்து, தினந்தோறும் அத்திகிரிக்குச் சென்று வரதனுக்கு ஸமர்ப்பித்து வந்தார். ஆஸூரி கேசவப்பெருமாள் என்னும் ஸ்ரீவைஷ்ணவரோடு இவருக்குச் சிறந்த நட்பு அப்போது ஏற்பட்டது. தம்

४३. निर्गत्य स्वपुरात्प्रातः मध्याह्ने वारणाचलम् ।
संप्राप्य वरदायाथ मालिकास्तास्समर्प्य च ॥

४४. रात्रौ श्रीभूतनगरे ततः केशवसद्मनि ।
उषित्वा सहसोत्थाय काले हरिपरायणः ॥

४५. भूयः संप्राप्य वेदान्तिन् पूनमल्लीपुरं तदा ।
श्रमेण महता चापि काञ्चीपूर्णो निरन्तरम् ॥

४६. देवराजाय कैङ्कर्यमकरोत् बहुवत्सरान् ।
ततः कदाचिद्वरदः काञ्चीपूर्णं विलोक्य तम् ॥

४७. मन्दस्मितमुखः प्राह कृपया भक्तवत्सलः ।
परितुष्टोऽस्मि तेनैव कैङ्कर्येण तवाधुना ॥

४८. कुरु मत्सन्निधावेव कैङ्कर्यं हि निरन्तरम् ।
उशीर्णनिर्मितेनैव प्रकीर्णेन महानघ ॥

---

ஊரிலிருந்து காலையில் புறப்பட்டு நண்பகலில் ஹஸ்திகிரியை அடைந்து வரதராஜனுக்கு மாலைகளை ஸமர்ப்பித்துவிட்டு இரவு ஸ்ரீபெரும்பூதூரில் அந்தக் கேசவப்பெருமாளுடைய வீட்டில் தங்கிவிட்டு விடியற்காலையில் எழுந்திருந்து ஹரி பக்தரான அந்தத் திருக்கச்சிநம்பி மறுபடியும் பூவிருந் தவல்லியை அடைந்து மிகுந்த முயற்சியுடன் இடை விடாமல் வரதராஜப் பெருமாளுக்கு இப்படிக் கைங்கரி யங்கள் செய்துவந்தார். அப்போதுஒருநாள் பக்தவத்ஸல ரான வரதராஜப்பெருமாள் புன்சிரிப்புத்தவழும் திருமுகத் தோடு கூடியவராய், திருக்கச்சிநம்பியைப் பார்த்து "குற்ற மற்ற பெரியவரே! நீர் இப்போதுசெய்யும் இக்கைங்கரியத் தினால், நான் மிகவுகந்தேன்; பிரமனின் உத்தரவேதியிலே யாகாக்னியிலிருந்து தோன்றிய சோதிமயமான எனக்கு விளாமிச்சைவேரினாலானவிசிறியைக்கொண்டு என் ஸந்நிதி யிலேயே இடைவிடாமல் நீர் திருவாலவட்ட கைங்கரியம் செய்யவேண்டும்' என்று கருணையோடு நியமித்தார்.

४९. धातुरुत्तरवेद्यां तु सञ्जातस्यानलात्मनः ।
तदङ्गीकृत्य वचनं काञ्चीपूर्णो जगत्पतेः ॥

५०. तथैव कुर्वन्कैङ्कर्यं तत्रैव सुखमास्थितः ।
माहात्म्यं यामुनार्यस्य काञ्चीपूर्णो निशम्य तत् ॥

५१. सन्तुष्टो देवराजेन ह्यनुज्ञातः सुसत्वरम् ।
श्रीरङ्गनगरं प्राप्य यामुनार्यमशिश्रयत् ॥

५२. स लब्धमन्त्रमन्त्रार्थो यामुनार्याद्विचक्षणः ।
श्रीरङ्गनगरात्काञ्चीं संप्राप्य गुरुशासनात् ॥

५३. कैङ्कर्यं पूर्ववत्कुर्वन् वरदाय समास्थितः ।
एवं श्रीयामुनाचार्यः शिष्याणां प्रेमपूर्वकम् ॥

---

லோகநாதனுடைய அந்த நியமனத்தை ஏற்றுக்கொண்டு, அந்தத் திருக்கச்சிநம்பி அப்படியே அந்தக் கைங்கரியத்தைச் செய்துகொண்டு காஞ்சியிலேயே இனிது வாழ்ந்தார்.

## திருக்கச்சி நம்பி யாமுனரை ஆச்ரயித்தல்

50*—*53 யாமுனாசாரியருடைய பெருமையைக் கேள்விப்பட்டு, திருக்கச்சி நம்பியும் மிக உகந்தவராய், வரதராஜப்பெருமாளின் அனுமதியைப்பெற்று விரைவில் ஸ்ரீரங்கத்திற்கு வந்து யாமுனாசாரியரை ஆச்ரயித்தார். யாமுனாசாரியரிடமிருந்து ரஹஸ்யத்ரய மந்திரங்களையும் அவற்றின் பொருளையும் உணரப்பெற்று, ஜ்ஞாநியான அத்திருக்கச்சி நம்பி ஆசார்யருடைய நியமனத்தாலே ஸ்ரீரங்கத்திலிருந்து காஞ்சியை அடைந்து வரதராஜப்பெருமாளுக்கு முன் போலவே கைங்கரியம் செய்து வந்தார்.

५४. विधाय पञ्चसंस्कारान् यथाशास्त्रं यतीश्वरः ।
श्रीराममिश्रकृपया वर्धयन् विष्णुदर्शनम् ॥

५५. कश्चित्कालमुवासात्र श्रीरंगे लोकरक्षकः ।
श्रीराममिश्रागमनं यामुनार्यगृहं प्रति ॥

५६. अलर्कशाकदानं चाप्याषण्मासं निरन्तरम् ।
यामुनार्यस्य रहसि श्रीगीतार्थप्रबोधनम् ॥

५७ संत्यागः सर्वराज्यस्य महानिशि विनिर्गमः ।
श्रीरङ्गनगरप्राप्तिः संन्यासो यामुनस्य च ॥

५८. इत्येवं सकलं सम्यक् चारेभ्यः चोलभूपतिः ।
निशम्य सत्वरं भक्त्या सदारः सपुरोहितः ॥

५९. विद्वत्प्रियः स वेदान्तिन्नत्याश्चर्यमवाप ह ।
ततः श्रीरंगनगरं संप्राप्य स महीपतिः ॥

---

### யாமுனாசாரியரும் சோழராஜாவும்

53* - 66.—குற்றமற்ற வேதாந்தியே! இவ்வண்ணமாக யதிகட்கிறைவரான யமுனைத்துறைவர் தம் சிஷ்யர்களுக்கு அன்புடன் பஞ்சஸம்ஸ்காரங்களை சாஸ்த்ரவிதிப்படி செய்து. மணக்கால்நம்பியின் கருணையாலே வைஷ்ணவ தரிசனத்தை வளர்த்துக்கொண்டு சிலகாலம் உலகத்தை உய்வித்து ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்துவந்தார். (யாமுனாசார்யருக்குப் பாதி ராஜ்யமளித்தவராய்.) வித்வான்களை உகப்பவராய். மனைவியோடும், புரோஹிதரோடும் கூடியவரான சோழராஜா மணக்கால் நம்பி யாமுனாசாரியர் வீட்டிற்கு வந்ததையும், ஆறுமாதம் தூதுளைக்கீரையை இடைவிடாமல் அளித்ததையும், யாமுனாசாரியருக்கு ஏகாந்தமாக கீதை யின் பொருளை உபதேசித்ததையும், அவர் ஒரு நாள் நள்ளிரவில் அரசனைத்தையும் விட்டுப் புறப்பட்டு ஸ்ரீரங்கநகரத்தை அடைந்ததையும், ஸந்யாஸாஶ்ரமத்தை ஏற்றுக்கொண்டதையும், மற்றும் எல்லாச் செய்திகளையும் ஒற்றர்கள்மூலமாக நன்கு அறிந்து பக்தியோடு மிகுந்த வியப்பை அடைந்தார். தன் மனைவியையும்

६०. सकलत्रो महाभक्त्या यामुनार्यपदाब्जयोः ।
प्रणम्य प्रार्थयामास पञ्चसंस्कारकर्मणि ॥

६१. राज्ञा च राजपत्न्या च तेन राजपुरोधसा ।
संप्रार्थितो यामुनार्यो वेदान्तिन् बहुशस्तदा ॥

६२. स तेषां पञ्चसंस्कारान् चकार विधिना गुरुः ।
तस्य नाम ददौ श्रीमान् तदा राजपुरोधसः ॥

६३. श्रीनाथमुनिदासाख्यं मङ्गलं लोकविश्रुतम् ।
राज्ञः श्रीरङ्गचोलेन्द्र इति नाम ददौ महत् ॥

६४. श्रीरङ्गनायकीनाम राजपत्न्याः शुभान्वितम् ।
संप्रार्थितः सदारेण राज्ञा यामुनदेशिकः ॥

६५. तदर्धराज्य वेदान्तिन्! अनुभूतं पुरा महत् ।
श्रीरंगेश्वरकैङ्कर्यसात्कृतं विदधे तदा ॥

---

(புரோஹிதரையும்) அழைத்துக்கொண்டு பெரும் ப₄க்தியுடன்விரைவில் ஸ்ரீரங்க₃நகரத்தைஅடைந்து, யாமுனாசாரியரின் திருவடித்தாமரைகளில் வணங்கித் தங்களுக்குப் பஞ்சஸம்ஸ்காரங்கள் செய்யும்படி பிரார்த்தித்தார். அரசனாலும் ராணியாலும் ராஜபுரோஹிதராலும் அப்போது பலமுறை பிரார்த்திக்கப்பட்ட யாமுனாசாரியரும் அவர்களுக்கு முறைப்படி பஞ்சஸம்ஸ்காரத்தைச் செய்தார். அப்போது ராஜபுரோஹிதருக்கு ஸ்ரீநாத₂முனித₃ாஸர் என்னும் உலகறிந்த மங்க₃ளமான த₃ாஸ்யநாமத்தை அளித்தார். அரசனுக்கு ஸ்ரீரங்க₃சோளேந்திரன் என்னும் பெரிய நாமத்தையும், ராஜபத்னிக்கு ஸ்ரீரங்க₃நாயகிஎன்னும் மங்க₃ளமான நாமத்தையும் அளித்தார். மனைவியோடுகூடிய அரசரால் பிரார்த்திக்கப்பட் யாமுனாசாரியர், அவருக்கு அரசன் அளித்திருந்து அவரால் அனுபவிக்கப்பட்ட பாதி ராஜ்யச் செல்வத்தை அப்போதே ஸ்ரீரங்க₃நாத₂னுடைய

६६. तदर्धराज्यं वेदान्तिन् क्रिमिकण्ठान्तमेव हि ।
श्रीरङ्गेश्वरकैङ्कर्यं तत्सर्वं समपद्यत ॥

६७. तद्वृत्तान्तं निशम्याशु यामुनार्यसुतद्वयम् ।
यामुनार्यं समाश्रित्य श्रीरङ्गे ऽन्यवसत्सुखम् ॥

६८. वेदान्तिन् यामुनाचार्यः श्रीरङ्गे शिष्यसंवृतः ।
कैङ्कर्यं रङ्गिणः कुर्वन् अव्याहतमतन्द्रितः ॥

६९. श्रीराममिश्रकृपया वर्धयन् विष्णुदर्शनम् ।
अवर्तत जितारातिः श्रीरङ्गे सुमहायशाः ॥

७०. अशिश्रयन् जनास्सर्वे यामुनार्यं यतीश्वरम् ।
तच्छ्रुत्वा वैभवं तस्य सुमहत् लोकविश्रुतम् ॥

---

கைங்கரியத்திற்கு அளித்துவிட்டார். வேதா₃ந்தியே! கிருமி கண்டன் காலம் வரையிலேயே அந்தப் பாதி ராஜ்யம் முழுவதும் ஸ்ரீரங்க₃நாத₂னுடைய கைங்கரியத்துககுப் பயன் பட்டது.

## யாமுனரைப் பலர் ஆச்ரயித்தல்

67—71.—யாமுனரைப் பற்றிய இச்செய்தி முழுவதையும் கேள்விப்பட்டு அவருடைய இரு குமாரர்களும் ஸ்ரீரங்கம் வந்து அவரை ஆச்ரயித்து அங்கேயே இருந்து வாழ்ந்தனர். வேதா₃ந்தியே! யாமுனாசாரியரும் சிஷ்யர்களோடு கூடியவராய், ஸ்ரீரங்கத்தில் இடைவிடாமல் தடையற்ற கைங்கரியங்களை ஸ்ரீரங்கநாதனுக்குச் செய்துகொண்டு மணக்கால் நம்பியின் கருணையாலே வைஷ்ணவ தரிசனத்தை வளர்த்துக்கொண்டு தரிசன விரோதிகளை வெற்றி கொண்டவராய், பெரும்புகழுடன் ஸ்ரீரங்க₃த்தில் வாழ்ந்துவந்தார். யதிகட்கிறைவரான அந்த யமுனைத் துறைவரின் உலகம் புகழ நிற்கும் பெரிய வைப₄வத்தைக் கேள்விப்பட்டு, எல்லா

௭௧. एकविंशतिशिष्यास्तु प्रधानास्तस्य विश्रुताः।
अन्ये च बहवः सन्ति तस्यान्तेवासिनो भुवि ॥

௭௨. तं दृष्ट्वा यामुनाचार्यं राममिश्रो महौजसम्।
संप्रहृष्टो रहस्तस्मै सर्वार्थानुपदिश्य च ॥

௭௩. देशिकानुज्ञया सम्यक् व्याजहार वचोऽर्थदम्।
कुरुकानाथनामास्ति कश्चित् देशिकपुङ्गवः ॥

௭௪. अष्टाङ्गयोगनिरतः शिष्यः श्रीनाथयोगिनः।
तत्रैवाष्टाङ्गयोगस्तु निक्षिप्तो नाथयोगिना ॥

௭௫. युष्मदर्थं करुणया कुरुकानाथनामनि।
तस्य योगरहस्य तु तद्गृह्णीष्वाञ्जसाऽनघ! ॥

---

ஜனங்களும் அவரை ஆச்ரயித்தார்கள். அவருடைய சிஷ்யர்களில் இருபத்தொருவர் முக்கியமானவர்களாகப் புகழ் பெற்றவர்கள். இவ்வுலகில் மற்றும் பலரும் அவருக்குச் சீடர்களாயினர்.

## குருகைக் காவலப்பனும் யோக3ரஹஸ்யமும்

72—*87:—இத்தகைய பெருமை பெற்ற யாமுனாசாரியரைக்கண்டு மணக்கால் நம்பி மிகவுகந்தவராய், எல்லா அர்த்த2ங்களையும் அவருக்கு ஏகாந்தமாக உபதேசித்து, தம் ஆசார்யரான உய்யக்கொண்டாரின் ஆணையைப் பின்பற்றி, ''குற்றமற்றவரே! குருகைக்காவலப்பன் என்னும் ஒரு ஆசார்யஶ்ரேஷ்ட2ர் இருக்கிறார். ஸ்ரீ நாத2முனிகளின் சிஷ்யரான அவர் அஷ்டாங்க3யோக3த்தில் ஈடுபட்டிருப்பவர். குருகைக்காவலப்பன என்னும் திருநாமமுடைய அவரிடமே நாத2முனிகள் உம்மிடம் வந்து சேர்வதற்காக அஷ்டாங்க3 யோக3த்தைக் கருணையோடு கொடுத்து வைத்திருக்கிறார். அவரிடமிருக்கும் அந்த யோக3ரஹஸ்யத்தை நீர் பெறுவீராக'' என்னும் பொருள் பொதிந்த வார்த்தையை நன்கு

௭௬. राममिश्रस्य वचनं स निशम्याथ योगिनः ।
एवं विज्ञापनं चक्रे कृताञ्जलिपुटस्तदा ॥
௭௭. सर्वार्थवेदिनस्तस्य भवतो देशिकप्रिय ।
अष्टाङ्गयोगं योगार्ह न सम्प्राप्तमिदं कुतः ॥
௭௮. स तद्वचनमाकर्ण्य गुरुः शिष्यमथाऽब्रवीत् ।
युष्मत्पितामहो नाथयोगीन्द्रो मद्गुरुं तदा ॥
௭௯. पुण्डरीकाक्षमाहूय वाक्यमेतदुवाच ह ।
अष्टाङ्गयोगं दास्यामि पश्चाच्छ्राद्य गृहाण भोः ॥
௮௦. तन्निशम्य वचस्तस्य तदाऽस्मद्गुरुरब्रवीत् ।
विद्यमाने शवे स्वामिन् कल्याणं मे कथं भवेत् ॥
௮௧. देहि देहावसाने मे तदा तद्योगमुत्तमम् ।
तदङ्गीकृत्य वचनं तदा युष्मत्पितामहः ॥

---

உரைத்தார். அப்போது ப4க3வத்3ப4க்தரான மணக்கால் நம்பியின் இவ்வார்த்தையைக்கேட்டு, யாமுனாசாரியர் கைகூப்பியவராய், "ஆசார்யருக்கினியவரே! அஷ்டாங்க3 யோக3த்தைப் பெறுவதற்கும் தகுதியுள்ளவரே! எல்லா அர்த்த2ங்களையும் அறிந்தவரான தேவரீருக்கு இந்த அஷ்டாங்க3யோக3ம் என்ன காரணத்தினால் கிடைக்க வில்லை?" என்று கேட்டார். இந்த வார்த்தையைக்கேட்ட ஆசார்யரான மணக்கால் நம்பி சிஷ்யரான ஆளவந்தாரைப் பார்த்து "உம்முடைய பிதாமஹரான நாத2முனிகள் என் ஆசார்யரான புண்ட3ரீகாக்ஷரை அழைத்து, 'புண்ட3ரீகாக்ஷரே! உமக்கு அஷ்டாங்க3யோக3த்தை உபதேசிக்கிறேன்; அதைக்கேட்டுக் கொள்ளும்' என்று கூறினார். அவருடைய அந்த வார்த்தையைக்கேட்டு எனது ஆசார்யரான உய்யக்கொண்டார் 'ஐயா! வீட்டில் பிணம் கிடக்கும் போது நான் எப்படி மணம் புரிய முடியும்?' என்று அப்போதே

௮௨. त्वदर्थं दर्शनार्थांश्च सर्वान्निक्षिप्य मद्गुरौ ।
कुरुकानाथयोगीन्द्रे योगं निक्षिप्तवान् हि तम् ॥

௮௩. केनचित्कारणेनाथ मृगयन् रामलक्ष्मणौ ।
वैदेहीं हनुमन्तं च नगरेषु वनेषु च ॥

௮௪. कुत्राप्यलभ्यमानोऽथ तेषां सन्दर्शनं भुवि ।
महाप्रस्थानमास्थाय स तत्रैवागमत्पदम् ॥

௮௫. तद्विष्णोःपरमं पदं सदा पश्यन्ति सूरयः ।
अतो ह्यस्मद्गुरोर्योगप्राप्तिर्नाभून्महामते! ॥

௮௬. अष्टाङ्गयोगसंप्राप्तिर्नैवाभून्ममाप्यतः ।
त्वमप्यद्यान्तिकं गत्वा कुरुकानाथयोगिनः ॥

௮௭ सम्यक् गृहाण सहसा योगमष्टाङ्गमुत्तमम् ।
राममिश्रः स वेदान्तिन् श्रीरंगे देशिकाज्ञया ॥

---

பதில் கூறினார். 'தேவரீருடைய இறுதிக் காலத்தில் சிறந்த தான இந்த அஷ்டாங்க₃ யோக₃த்தை உபதேசிப்பீராக' என்றும் கூறினார். இந்த வார்த்தையை ஏற்றுக்கொண்டு உம்முடைய பாட்டனார் உம்மிடம் வந்து சேருவதற்காக த₃ர்ஶநார்த்த₂ங்கள் அனைத்தையும் என்னுடைய ஆசார்யரிடம் உபதேசித்துச் சேமித்து வைத்து, அஷ்டாங்க₃ யோக₃த்தைக் குருகைக்காவலப்பனிடம் சேமித்து வைத்தார். ஒரு காரணவிசேஷத்தாலே ராமலக்ஷ்மணர்களையும் வைதேகியையும் அனுமனையும் நகரங்களிலும் காடுகளிலும் தேடிச் சென்ற அவர், உலகில் எங்குமே அவர்களைக் காணமல், வடக்கு நோக்கி மஹாப்ரஸ்தா₂நம் (பெரியயாத்திரை) மேற்கொண்டு வழியிலேயே நித்யஸூரிகள் எப்போதும் காணும் விஷ்ணுவின் அந்தப் பரமபதத்தை அடைந்தார். நீர் இப்போதே குருகைக்காவலப்பனிடம் சென்று, தலைசிறந்த அஷ்டாங்க₃ யோக₃த்தை விரைவில் நன்கு உபதேசம் பெறுவீராக." என்று கூறினார்.

८८. श्रीमहाविष्णुसिद्धान्तनिर्वोढारं विधाय तम् ।
तेनैवाऽव्याहतं सर्वं सम्यक स जगतीतले ॥
८९. कारयन् यामुनार्येण तत्सिद्धान्तप्रवर्धनम् ।
कञ्चित्कालमुवासाग्र्यः कृतकृत्यो महायशाः ॥
९०. पञ्चोत्तरशतं नीत्वा वत्सराणां भुवः स्थले ।
विष्णुदर्शननिर्वाह यामुनार्यं विधाय च ॥
९१. कृतदेशिककैङ्कर्यः कृतार्थो जरठो महान् ।
राममिश्रोऽथ वैकुण्ठगमने विदधे मतिम् ॥
९२. ततः स्वचरमे काले राममिश्रः कृतादरः ।
यामुनार्यं समाहूय वचनं चेदमब्रवीत् ॥

---

### மணக்கால் நம்பியின் சரமதசை

87*—91:—வேதாந்தியே! தம் ஆசார்யருடைய ஆணையாலே ஆளவந்தாரை ஸ்ரீவைஷ்ணவ ஸித்₃த₄ாந்தத்தை ஸ்ரீரங்க₃த்தில் நிர்வகிப்பவராக நியமித்து விட்டு, பெரும் புகழாளரான மணக்கால் நம்பி அச்செயலாலேயே இவ்வுலகில் வைஷ்ணவ ஸித்₃த₄ாந்தம் யாமுனரின் மூலம் வளருவதற்குரிய காரியங்களை நன்கு செய்துவிட்டு, செய்ய வேண்டியதைச் செய்த திருப்தியுடையவராய், சிலகாலம் ஸ்ரீரங்க₃த்திலேயே வாழ்ந்தார். பெரியவரான அந்த மணக்கால் நம்பி இவ்வுலகில் நூற்றைந்து வருடங்கள் வாழ்ந்து யாமுனரை வைஷ்ணவ தரிசனத்தை நிர்வகிப்பவராக நியமித்து விட்டு, ஆசார்யகைங்கர்யத்தைச் செய்து முடித்துப் பேறு பெற்றவராய் மிகமுதிர்ந்த வயதில் ஸ்ரீவைகுண்ட₂ம் செல்லத் திருவுள்ளம் பற்றினர்.

### மணக்கால் நம்பியின் நியமனமும் பரமபதப்ராப்தியும்

92—102:— குற்றமற்ற வேதாந்தியே! அதற்குப்பின் தம்முடைய கடைசிக் காலத்தில் சீடரிடம் பேரன்புடைய மணக்கால்நம்பி யாமுனாசார்யரை அழைத்து, பின்வரும் வார்த்தையைக் கூறினர்:—

९३. भवतो नाथमुनिना सम्बन्धद्वयमस्ति हि ।
अस्माकं प्रापकप्राप्ये नाथयोगिपदाम्बुजे ॥

९४. इति ध्रुवं विनिश्चित्य स तत्र त्वं कृतादरः ।
स निर्भरो वसात्रैव वर्धयन् विष्णुदर्शनम् ॥

९५. भवादृशं महात्मानं विष्णुदर्शनवर्धकम् ।
संपाद्य पुरुषं कञ्चित् स्थापय त्व मते ध्रुवम् ॥

९६. वर्धयन् दर्शनं लोके सर्वत्रैतदनुत्तमम् ।
प्रख्यातवैभवः श्रीमान् जितारातिर्महायशाः ॥

९७. बहुकालं सुखेनात्र वस यामुनदेशिक ।
इत्येवमाशिषः कृत्वा यामुनार्याय सादरम् ॥

---

"யமுனைத்துறைவரே! உமக்கு நாதமுனிகளோடு பேரனா யிருக்கும் தே3ஹஸம்ப3ந்த4மும், ப்ரசிஷ்யனாயிருக்கும் ஆத்ம ஸம்ப3ந்த4மும் ஆகிய இரண்டும் உண்டு,' நமக்கு நாத2முனி களின் திருவடித் தாமரைகளே ப்ராப்யமாகவும் ப்ராபகமாக வும் இருப்பவை' என்று உறுதி பூண்டு அவற்றில் ஈடுபட்ட வராய், இந்த ஸ்ரீரங்கத்திலேயே கவலையற்று வாழ்பவராய், வைஷ்ணவதரிசனத்தை வளர்த்துக்கொண்டு இந்தத் தரி சனத்தை வளர்க்கக் கூடியவரான உம்மைப்போன்ற மஹா புருஷரைத் தேடிக் கண்டுபிடித்து இந்த மதத்தலைவராக அவரை உறுதியாக நிலைநிறுத்துவீராக. இவ்வுலகெங்கிலும் ஒப்பற்ற இந்தத் தரிசனத்தை வளர்த்துக்கொண்டு, உலகம் புகழும் பெருமையுடையவராய், ஜ்ஞானப4க்தி வைராக்3யச் செல்வங்களையுடையவராய், புறமதத்தவர்களை வெல்கின்ற வராய், பெரும்புகழாளராய், நெடுங்காலம் இந்த ஸ்ரீரங்க3த் திலேயே இனிது வாழ்வீராக'' என்னும் வார்த்தையைக் கூறி யாமுனாசாரியருக்கு அன்போடு ஆசீர்வாதம் செய்து ஆசார்ய ஶ்ரேஷ்ட2ரான மணக்கால்நம்பி உய்யக்கொண்டாருடைய

५. विलोक्य विस्मितोऽत्यन्तं संतुष्टो यामुनस्तदा ।
कुड्यान्तरस्थो निश्चेष्टः पश्यन् तूष्णीं समास्थितः ॥

६ पश्चाद्भागं विलोक्याशु योगारूढोऽब्रवीत्तदा ।
श्रीनाथवंश्यः कोऽत्राऽत्र किंवाद्य सुसमागतः ॥

७ यामुनस्तद्वचः श्रुत्वा समभ्येत्य तदन्तिकम् ।
स्वामिन् त्वद्दासभूतोऽहं यामुनो ह्यागतोऽभवम् ॥

८. इत्युक्त्वा संप्रणम्याशु भक्त्या तत्पादपद्मयोः ।
कृताञ्जलिपुटः सम्यगिदं वचनमब्रवीत् ॥

९. कुड्यान्तरस्थितं मां त्वं कथं वै ज्ञातवानसि ।
कुरुकानाथ मे ब्रूहि कृपया कारणं महत् ॥

१०. तदङ्गीकृत्य वचनं योगीन्द्रस्तमभाषत ।
संक्रीडमाणो भगवान् अनिशं रमया सह ॥

---

பின்னுல் இருந்துகொண்டு, அசையாதவராய் அவரைப் பார்த்துக் கொண்டு மௌனமாய் இருந்தார். அப்போது யோகத்திலிருந்த குருகைக்காவலப்பன் சடக்கெனப் பின் புறம் திரும்பிப்பார்த்து ''நாதமுனி வம்சத்தைச் சேர்ந்தவர் எவராவது இங்கு வந்திருக்கிருரோ?'' என்று வினவினுர். அந்த வார்த்தையைக் கேட்டு யாமுனுசாரியர் அவருக்கு அருகில் வந்து ''ஸ்வாமிந்! அடியேன் யாமுனன் இங்கு வந்திருக்கிறேன்'' என்று கூறி பக்தியுடன் அவருடைய திருவடித் தாமரைகளில் வணங்கிக் கைகூப்பியவராய், ''குருகாநாதரே! சுவருக்குப் பின்னுல் இருந்த அடியேனை தேவரீர் எப்படி அறிந்தீர்? பெருவியப்புக்குரிய இவ்விஷயத்தை, கருணையோடு அடியேனுக்கு அருளிச் செய்ய வேண்டும்'' என்னும் வார்த்தையை நன்கு கூறினுர்.

११. संत्यज्यानुत्तमं शीघ्रं तत्पयोधरपीडनम् ।
अदत्वा मुखदानं च लक्ष्म्याः सर्वेश्वरोऽधुना ॥

१२ आलम्ब्य मद्भुजं सम्यक् द्वित्रिवारं स उन्मुखः ।
एतत्कुड्यबहिर्भागमपश्यत्सादरं मुहुः ॥

१३. अतोऽहमब्रुवं कोद्य कुलजोस्ति समागतः ।
तन्निशम्याथ वेदान्तिन् विस्मयं परमं गतः ॥

१४. कुरुकानाथपादाब्जे संप्रणम्याब्रवीत्तदा ।
बहुशः प्रार्थयामास तं योगं देहि मेऽधुना ॥

१५. तेन संप्रार्थितो योगी यामुनेन महात्मना ।
अस्मद्देहावसानेऽहं योगं दास्यामि ते ध्रुवम् ॥

---

குருகைக்காவலப்பனும் அவருடைய வார்த்தையை ஏற்றுக் கொண்டு, "பிராட்டியோடு கூடி எப்போதும் இன்புற்றுக் கொண்டிருக்கும் எம்பெருமான் அவளுடைய திருமுலைத் தடங்களின் அணைப்பையும் சடக்கென விட்டு அவளுக்கும் முகங் கொடுக்காமல் இப்போது என் கைகளைப் பற்றிக் கொண்டு இந்தச் சுவருக்குப் பின்புறத்தை இரண்டு மூன்று தடவை அடிக்கடி அன்போடு எட்டிப் பார்த்தான். அதனால் தான் நான் 'நாதமுனி குலத்தவர் எவரேனும் வந்திருக்கிறாரா?' என்று கூறினேன்." என்று பதிலுரைத்தார். இவ்வார்த்தையைக் கேட்டு ஆளவந்தார் மிகவும் வியப்புற்றவராய், குருகைக்காவலப்பனின் திருவடித் தாமரைகளில் வணங்கி "அந்த யோகத்தை எனக்கு இப்போது உபதேசிக்க வேண்டும்" என்று பலமுறை பிரார்த்தித்தார். மஹாபுருஷரான அந்தயாமுனாசாரியரால் பிரார்த்திக்கப்பட்ட குருகைக் காவலப்பன் "என்னுடைய சரீரத்தின் இறுதிக்காலத்தில் நான் உமக்கு உறுதியாக யோகத்தை உபதேசிப்பேன்"

२६. शिष्यो बभूव वेदान्तिन् यामुनार्यस्य विश्रुतः ।
मुखपादे तु वैवर्ण्यं शिष्यस्य समजायत ॥

२७ गुरुभक्तस्य तस्याथ गुरुविश्लेषतस्तदा ।
तद्विलोक्याथ पप्रच्छुः वैष्णवं केचिदागताः ॥

२८. कयाभिलाषया देहविकारोऽयं तवागतः ।
देवारिनाथस्तच्छ्रुत्वा तेभ्यः प्रोवाच तत्त्वतः ॥

२९. गुरोर्विश्लेषतस्तस्य ममायमधुनाऽऽगतः ।
तच्छ्रुत्वा विस्मितास्सर्वे शीघ्रं यामुनसन्निधिम् ॥

३०. तदा प्रास्थापयामासुस्तं शिष्यं देशिकप्रियम् ।
देवारिनाथः श्रीरङ्गान्निर्गत्याप्तजनैस्सह ॥

---

பக்தியுடைய அவ்வாண்டானுக்கு ஆசார்யரின் பிரிவாலே தலைமுதல் கால்வரையில் உடல் வெளுத்துவிட்டது. அதைக் கண்டு அவரிடம் வந்த சிலர் விஷ்ணு பக்தரான அவரைப்பார்த்து "எந்தவிருப்பம் நிறைவேருமையாலே தேவரீருக்கு இப்படிப் பட்ட உடல் வெளுப்பு ஏற்பட்டது?" என்று கேட்டனர். அதைககேட்டுத் தெய்வவாரியாண்டான் அவர்களைப்பார்த்து "என்னுடைய ஆசார்யனைப் பிரிந்ததாலே எனக்கு இப்போது இந்நிலை ஏற்பட்டது" என்று உண்மையைக் கூறினார். அதைக்கேட்டு வியப்புற்றவர்களான அவர்களும் ஆசார்ய பக்தியுடைய அந்தச் சிஷ்யரை அப்போதே திருவனந்தபுரத்துக்கு அனுப்பினார்கள். தெய்வவாரியாண்டானும் தமக்கு வேண்டியவர்கள் சிலரோடு கூட அப்போது ஸ்ரீரங்கத்திலிருந்து புறப்பட்டுத் திருவனந்தபுரத்தருகில் வந்து சேர்ந்தார்.

३१. झटित्यनन्तशयनसमीपमगमत्तदा ।
निर्गत्यानन्तनगरात् श्रीरङ्गनगरं प्रति ॥

३२. स क्रोशत्रयमध्वानं तस्याभिमुखमाययौ ।
देवारिनाथः सहसा दृष्ट्वा यामुनदेशिकम् ॥

३३. साष्टाङ्गवन्दनं चक्रे भक्त्या तत्पादपद्मयोः ।
स दृष्ट्वा कुपितः प्राह तमुल्लंघितशासनम् ॥

३४. श्रीरामस्य स्वतन्त्रत्वात् शूरत्वाच्च विशेषतः ।
तस्य प्रशासने तस्थौ भरतो भ्रातृवत्सलः ॥

३५. अहं त्वशूरः सुतरामस्वतन्त्रो यतोऽभवम् ।
तस्मान्मच्छासनमयमुल्लंघ्यात्र समागतः ॥

---

## ஆளவந்தாரும் தெய்வவாரியாண்டானும்

31*—45 :— திருவனந்தபுரத்திலிருந்து புறப்பட்டு ஸ்ரீரங்கத்தைக் குறித்து ஒரு மூன்று குரோசதூரம் வழி நடந்த ஆளவந்தார் அந்த தெய்வவாரியாண்டானுக்கு முன் வந்து சேர்ந்தார். ஆண்டானும் ஆளவந்தாரைப் பார்த்து ப₄க்தியுடன் அவருடைய திருவடித்தாமரைகளில் ஸாஷ்டாங்க₃ நமஸ்காரம் செய்தார். தன் ஆணையை மீறி ஸ்ரீரங்கத்திலிருந்து வந்திருந்த அவரைக்கண்டு கோபங் கொண்ட யாமுனாசாரியர் ‘‘ஸ்ரீராமபிரான் ஸ்வதந்திரனு கையாலும், சிறந்த சூரனுகையாலும், தமையனிடம் அன்பு கொண்ட ப₄ரதன் அவன் நியமித்தபடி அயோத்தி யிலேயே இருந்தான். நானோ அடியோடு சூரனுமல்லன், ஸ்வதந்திரனுமல்லன்; அதனுல்தான் என் ஆணையைமீறி இவர் இங்குவந்தார்போலும்’’ என்றுவார்த்தை சொன்னுர். ஆண்டான் ஆசார்யனுடைய இந்த வார்த்தையைக்

३६. स गुरोर्वचनं श्रुत्वा सहसा साध्वसं ययौ ।
स्वरूपहानिः संजाता महतीति ममाधुना ॥

३७. तदा तस्यानुगास्सर्वे सम्यक् यामुनयोगिने ।
तस्मै विज्ञापयामासुस्तद्वृत्तं गुरवेऽखिलम् ॥

३८. तद्वाक्यश्रवणेनैव हृष्टो यामुनदेशिकः ।
स्वपादपद्मयोः शिष्यं सम्यगत्यन्तसुस्थितम् ॥

३९. स तमुद्धृत्य बाहुभ्यां सादरं परिरभ्य च ।
कृपया लालयन्प्राह गिरा मधुरया तदा ॥

४०. अस्याविदूरे सुमहद्भात्यनन्तपुरं हरेः ।
तत्र गत्वा पद्मनाभं नत्वाऽऽगच्छात्र सांप्रतम् ॥

---

கேட்டவுடன் "எனக்கு இப்போது பெரிய ஸ்வரூபஹானி யானது ஏற்பட்டுவிட்டதே" என்று பெரிதும் கலங்கினர். அப்போது அவருடன் கூடவந்திருந்த அனைவரும் அந்தச் சிஷ்யருக்கு ஆசார்யன் பிரிவினுல் உடல் வெளுத்தது முதலான எல்லாச் செய்திகளையும் யாமுனசாரியருக்கு விண்ணப்பித்தனர். அந்த வார்த்தையைக் கேட்டவுடனே மிகவுகந்த யாமுனசாரியர் தம் திருவடித்தாமரைகளிலேயே உறுதியாக விழுந்துகிடக்கும் சிஷ்யரை, கைகளாலே தூக்கி எடுத்து, அன்புடன் அணைத்து, கருணையோடு கூடியவராய் "இவ்விடத்திற்குச் சிறிது தூரத்திலேயே திருவனந்தபுரமாகிற எம்பெருமானுடைய திவ்யதேசம் விளங்காநிற்கிறது. அங்கு சென்று பத்₃மநாப₄னைச் சேவித்துவிட்டு இங்கு வருவீராக" என்னும் இனிமையான வார்த்தையை அப்போது கூறினர். ஆசார்யனுடைய அந்த வார்த்தையைக் கேட்டு அந்தச் சீடர் "ஆசார்யரே! என்னுடைய திருவனந்தபுரம் இப்போது என் எதிரில் தானே

४१. तच्छ्रुत्वा वचनं तस्य स शिष्यः प्राह तं गुरुम् ।
अनन्तशयनं मेद्य स्वतः प्रत्युद्गतं गुरो ॥

४२. अस्य देशस्य गमने किमर्थं हि वृथाश्रमः ।
तच्छ्रुत्वा संप्रहृष्टोऽथ महान् यामुनदेशिकः ॥

४३. अधिकारिविशेषोऽयं सुमहानित्यमन्यत ।
गुणेन तेन महता तस्यान्तेवासिनस्तदा ॥

४४. अवाप परमानन्दं महात्मा शिष्यवत्सलः ।
तदेव परमं स्थानं इति शिष्यस्य निश्चयः ॥

४५. देशिको वर्तते यत्र महात्मा शिष्यवत्सलः ।
येनैव गुरुणा यस्य न्यासविद्या प्रदीयते ॥
तस्य वैकुण्ठदुग्धाब्धिद्वारकाः सर्व एव सः ॥

---

வந்துநிற்கிறதே. அந்தத் திருவனந்தபுரம் செல்வதற்கு எதற்காக நான் வீணாக சிரமப்படவேண்டும்?'' என்று ஆசாரியரைப் பார்த்துப் பதில் கூறினார். அதைக் கேட்டு உகந்த யாமுனாசாரியரான பெரியவர் "இது ஒரு மிகப்பெரிய அதி₄காரி விசேஷம் இருந்தபடியே!'' என்று எண்ணினார். அப்போது அந்த சிஷ்யருடைய அந்தப் பெருங்குணத்தைக் கண்டு மஹாபுருஷரும், சிஷ்யரிடம் அன்புடையவருமான ஆளவந்தார் பேரானந்த₃மடைந்தார். "மஹாத்மாவாய், சிஷ்யரிடம் அன்புள்ளவரான ஆசார்யன் எங்கிருக்கிறாரோ அதுவே சிஷ்யனுக்கு மேலான ப்ராப்யஸ்த₂ானம் என்பது உறுதி. எந்த ஆசாரியனால் எந்த சிஷ்யனுக்கு நியாஸவித்யையானது உபதேசிக்கப்படுகிறதோ அந்த ஆசாரியனே அந்த சிஷ்யனுக்கு ஸ்ரீவைகுண்ட₂மும், திருப்பாற்கடலும், துவாரகையுமாகிற அனைத்தும் ஆகும்.''

४६. तत्रत्यान्निखिलशुभान् हि दिव्यदेशान्
नत्वा श्रीशुभमधुरामवाप धीरः ।
वैखायामथ कृतमज्जनो महात्मा
तस्यास्ततत्परमतटे जजाप मन्त्रम् ॥

४७. हृद्यं हि तीरे तदवेक्ष्य तस्य चैकान्तयोगस्य निकुञ्जवृन्दम् ।
योगीश्वराणां निजवासभूमिं अवाप चार्यः स च यामुनार्यः ॥

४८. संपश्यतस्तस्य रहःप्रदेशं वैखापगायाः तटभूम्नि हृद्यम् ।
वैराग्यसिन्धोरपि यामुनस्य योगाभिलाषः सुमहान् बभूव ॥

४९. स पत्रिकां पुरा दत्तां कुरुकानाथयोगिना ।
अष्टाङ्गयोगमाकांक्षन् तामपश्यत्कृतादरः ॥

---

## யோகா3ப்4யாஸம் விடுபட்டது

46—56:—திருவனந்தபுரத்திலிருந்து வரும் வழியிலுள்ள எல்லா திவ்யதேசங்களையும் வணங்கிவிட்டு, பேரறிவாளரும் பெரியவருமான யாமுனாசாரியர் 'கூடல்' எனப்படும் மங்களமான மதுரையை வந்தடைந்தார். வைகை நதியில் நீராடி அதன் சிறந்த கரையில் மந்த்ரஜபம் செய்தார். அந்தக் கரையில் மிக அழகியதாய் யோகீச்வரர்களுக்கு வாஸஸ்த2ானமாய் இருப்பதாய், தனிமையில் யோகம் செய்வதற்குத் தகுந்ததான சோலைகளின் ஸமூஹத்தைக்கண்டு, அதில் தங்கினார். வைகை நதியின் கரையோரத்தில் தனிமையான அந்த இடத்தைக் காணும் அந்த யாமுனாசாரியருக்கு வைராக்3யக் கடலாயிருந்த போதிலும், அங்கு தங்கி யோகம் செய்யவேண்டும் என்னும் பெரிய விருப்பம் ஏற்பட்டது. அஷ்டாங்க3யோக3த்தைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று விரும்பியவராய், குருகைக்காவலப்பனால் முன்பு கொடுக்கப்பட்ட ஓலையை யாமுனாசாரியர் அப்போது ஆர்வத்துடன் பார்த்தார். பார்த்தவுடன் அப்பன் நிர்ணா

௫०. तदायं वासरस्तेन निर्णीतः स च वासरः ।
तत्र तत्क्षेत्रयोगेन ह्येकत्वं तावुभौ गतौ ॥

௫१. ततः संतापमगमत् यामुनार्यस्तदा भृशम् ।
शिष्यान्विलोक्य सहसा व्याजहार वचः शुभम् ॥

௫२. निर्णीतो दिवसः पूर्वं कुरुकानाथयोगिना ।
अस्मिन् दिने समायातः किं करिष्यामि वैष्णवाः ॥

௫३. वीरनारायणपुरं बहुयोजनदूरतः ।
वर्तते नगरस्यास्य चाद्यैवासीत्स वासरः ॥

௫४. कथं हि शक्यते गन्तु तत्र तद्वाञ्छया मया ।
यद्यस्ति सांप्रतं मेऽद्य श्रीरामस्येव पुष्पकम् ॥

௫௫. अधुनैव मया सम्यक् तत्र गन्तुं हि शक्यते ।
महाविद्वानपीत्येवं विचिन्त्य बहुशस्तदा ॥

---

யித்துக் கொடுத்த நாளும் அங்கு அவர் தங்கியிருந்த நாளும் ஒன்ருயிருந்தன. அதைக்கண்டு யாமுனுசாரியர் மிகவும் வருத்தமுற்ருர். உடனே சிஷ்யர்களைப்பார்த்து "வைஷ்ணவர்களே! குருகைக்காவலப்பனுல் நிர்ணயிக்கப்பட்ட அந்த நாள் இன்று வந்துவிட்டதே! என் செய்வேன்? வீரநாராயணபுரம் இந்த நகரத்திலிருந்து பலயோஜனை தூரம் இருக்கிறதே! இந்த நாளோ இன்றே வந்து விட்டதே! யோகம் கற்க விரும்பி நான் எப்படி அங்கு செல்ல முடியும்? ஸ்ரீராமனுக்குக் கிடைத்தது போல் புஷ்பக விமானம் கிடைத்தாலன்ருே இன்றே நான் அங்கு சென்று அடையமுடியும்" என்னும் மங்க₃ளமான வார்த்தையைக் கூறினுர். பேரறிவாளராயிருந்தபோதிலும் அப்போது இவ்வண்ணமாகப் பலவிதமாகவும் கவலைகொண்டு அஷ்டாங்க₃யோக₃ம்

५६. अष्टाङ्गयोगराहित्यात् विषादमगमद्बहु ।
समाश्वस्तोऽथ बहुशः शिष्यैर्वेदान्तवेदिभिः ॥

५७. ततः श्रीयामुनाचार्यः श्रीरङ्गनगरं तदा ।
संप्राप्य शिष्यसङ्घेन रङ्गेशं संप्रणम्य च ॥

५८. मठं प्रविश्य तत्रैव सुखं तस्थौ महायशाः ।
वेदान्तिन् यामुनाचार्यः सर्वत्र जगतीतले ॥

५९. महापूर्णादिभिः शिष्यैर्वर्द्धयन्विष्णुदर्शनम् ।
कुत्राप्यव्याहतमिदं जगदेकबुधाग्रणीः ॥
बहुकालं सुखेनैव तस्थौ रंगे महायशाः ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे यामुनाचार्यस्यानन्तशयनादि-
दिव्यदेशसंचारकथनं नाम पञ्चदशोत्तरशततमोऽध्यायः ॥

---

விட்டுப்போனதால் மிகவும் வருத்தமுற்றூர் ஆளவந்தார்; பிறகு வேதாந்தஜ்ஞாநமுடைய சிஷ்யர்களால் பலவாறு ஆறுதல் சொல்லப் பெற்றுத் தேறினூர்.

## ஸ்ரீரங்கத்தில் வாழ்ச்சி

57–59:—அதற்குப்பின் யாமுனாசாரியர் அப்போதே புறப்பட்டு, திருவரங்கப் பெருநகரை அடைந்து சிஷ்யஸமூஹத்துடன் ஸ்ரீரங்கநாதனை வணங்கி மடத்தை அடைந்து, பெரும புகழாளராய் அங்கு இனிது வாழ்ந்தார். வேதாந்தியே! பெரியநம்பி முதலான சிஷ்யர்களோடு கூடிய யாமுனாசாரியர் இந்த வைஷ்ணவ தரிசனத்தை எங்கும் தடையற்றதாம்படி உலகெங்கும் பரப்பிக்கொண்டு உலகிலேயே ஒப்பற்ற பேரறிவாளராய், பெரும் புகழ் படைத்தவராய் நெடுங்காலம் ஸ்ரீரங்கத்திலேயே இனிதுவாழ்ந்தார்.

ப்ரபந்நாம்ருதத்தில் பட்டார்ய வேதாந்தி ஸம்வாதத்தில்
யாமுனாசாரியரின் திருவனந்த புர யாத்திரையைக்
கூறும் நூற்றுப்பதினைந்தாவது அத்தியாயம்
முடிவுற்றது.

षोडशोत्तरशततमोऽध्यायः ॥

१. श्रीरङ्गपुर्यां श्रितशिष्यसङ्घः श्रीयामुनार्यः प्रथितप्रभावः ।
अव्याहतं विष्णुमतं जगत्यां प्रवर्तयामास जितारिवर्गः ॥

२. शिष्या महान्तो विबुधाग्रगण्याः श्रीभूरिपूर्णप्रमुखा द्विजेन्द्राः ।
सर्वे स्थिता यामुनदेशिकस्य प्रशासने तस्य बभूवुरार्याः ॥

३. सहस्रगीतिं शिष्येभ्यो यामुनार्यः प्रबोधयन् ।
सर्वदा मानयंस्तस्थौ शठारेर्दिव्यवैभवम् ॥

४. सहस्रगीत्यां वेदान्तिन् कदाचित् बुधसत्तमः ।
पोलिहेत्यस्य पद्यस्य व्याख्यानसमये तदा ॥

---

## நூற்றுப்பதினாறும் அத்தியாயம்

### ஸ்ரீராமாநுஜரின் அவதாரம்

### "பொலிக பொலிக" பாசுரத்தின் அர்த்த விசாரம்

1–6:—சிஷ்ய ஸமூஹத்தால் ஸேவிக்கப்பெற்றவராய், புகழ்பெற்ற பெருமையுடையவராய், தர்ஶன விரோதிகளை வென்றவரான யாமுநாசாரியர் வைஷ்ணவ மதத்தை இவ்வுலகில் தடையறப் பரப்பி வந்தார். அந்தணர் தலைவர்களான பெரிய நம்பி முதலான பேரறிவாளர்களான மஹாசாரியர்கள் அவருக்கு சிஷ்யர்களாகி அவருடைய நியமனப்படி நடந்து வந்தார்கள். யாமுநாசார்யரும் திருவாய்மொழியின் அர்த்தத்தை சிஷ்யர்களுக்கு உபதேசிப்பவராய் எல்லாக் காலத்திலும் நம்மாழ்வாருடைய பெருமையை அவர்களுக்கு அறிவித்துக் கொண்டிருந்தார். அப்போது ஒருநாள் "பொலிக பொலிக" என்னும் பாட்டுக்கு உரை கூறும் போது மஹாத்மாவான ஆளவந்தார் சிறிது நேரம்

५. ध्यात्वा मुहूर्तं निश्चेष्टः स महात्मा व्यचिन्तयत् ।
प्रतिपाद्योऽयमत्रार्थः को वा भवितुमर्हति ॥

६. गतो वा वर्तते सोऽयं संभविष्यति वा महान् ।
मृषा न जायते वाणी कदाचिच्छठवैरिणः ॥

७. एवं चिन्तयतस्तस्य ज्ञात्वाभिप्रायमुत्तमम् ।
ऊचुर्विचक्षणाः शिष्या यामुनं दीर्घदर्शिनम् ॥

८. भगवन् यामुनाचार्य किमर्थं चिन्त्यते त्वया ।
तत्पद्यार्थो महान् युष्मदवतारस्य सूचकः ॥

९. निश्चयं स भवान्साक्षात् विष्णुर्लोकगुरुर्यतः ।
तैरेवमुक्तस्तान्प्राह शिष्यान् यामुनदेशिकः ॥

---

தியானித்தவராய், அசையாமல் இருந்து, பின்வருமாறு சிந்திக்கலுற்றார்:— "இந்தப் பாட்டில் சொல்லப்படும் மஹா புருஷர் யாராயிருக்க முடியும்? ஏற்கனவே அவதரித்து விட்டாரா? அல்லது இப்போது இருக்கிறாரா? அல்லது இனி மேல் தான் அவதரிக்கப் போகிறாரா? நம்மாழ்வாருடைய வாக்கு ஒரு நாளும் பொய்க்காதே" என்று.

### பவிஷ்யதாசார்யர்

7—*17;—இவ்வண்ணமாகச் சிந்தித்துக் கொண்டிருந்த அவருடைய சிறந்த கருத்தை அறிந்து தீர்க்கதரிசியான யாமுனாசார்யரைப் பார்த்து வல்லவரான அவருடைய சிஷ்யர்கள் "யாமுனாசார்யரே! எதற்காகச் சிந்திக்கின்றீர்? 'பொலிக பொலிக' என்னும் சிறந்த பாடலின் பொருள் தேவரீருடைய அவதாரத்தையே உணர்த்துகிறது. லோகாசார்யராய் ஸாக்ஷாத் விஷ்ணுவின் அவதாரமாய் இருப்பவர் உறுதியாக தேவரீரேயன்றோ." என்று கூறினார்கள்.

१०. अयमर्थो महान् दिव्यमहापुरुषसूचकः ।
अर्थो महानहं क्षुद्रो न भविष्यामि तादृशः ॥

११. न पूर्वदेशिकपरः ह्यर्थोऽयं न च मत्परः ।
भविष्यति महान्कश्चित् सर्वलोकैकदेशिकः ॥

१२. तेनेदं वैष्णवमतं भविष्यत्यतिविस्तृतम् ।
सत्यं वच्मि बुधश्रेष्ठाः संशयोऽत्र न विद्यते ॥

१३. इत्युक्त्वा सोऽनिशं तस्य जन्माकांक्षन् कृतादरः ।
अस्मद्दर्शननिर्वोढा को वा लोके भविष्यति ॥

१४. लोकैकदेशिकः श्रीमान् मम कालादनन्तरम् ।
इति सञ्चिन्तयन्नित्यं पोलिहार्थं च सादरम् ॥

---

இவ்வண்ணமாக அவர்களால் சொல்லப்பட்டவுடன்சிஷ்யர்களைப்பார்த்து யாமுனாசாரியர் ''இந்தப் பாட்டின்பொருள்ஒரு தி₃வ்ய மஹாபுருஷர் அவதரிப்பதையே குறிக்கிறது. இதன் பொருளாயிருக்கக் கூடியவர் மிகப்பெரியவர். மிகச் சிறியவனாயிருப்பவனான நான் இதன் பொருளாய் இருக்க முடியாது. எனக்கு முன் தோன்றிய ஆசார்யர்களைப்பற்றியோ என்னைப்பற்றியோ இந்தப் பாடல் குறிப்பிடவில்லை. உலகுக்கெல்லாம் ஒரே ஆசார்யரான ஒரு பெரியவர் அவதரிக்கப் போகிறார். அவராலே இந்த வைஷ்ணவ மதம் மிகவும் பரவப் போகிறது. அறிவாளிகளே! உண்மையாகக் கூறுகிறேன். இவ்விஷயத்தில் சிறிதும் ஐயமில்லை'' என்று உரைத்தார். இப்படிக் கூறியபின் அவர் எப்போதும் அந்த ப₄விஷ்யதா₃சார்யரின் அவதாரத்தை ஆர்வத்தோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். உலகுக்கெல்லாம் ஒரே ஆசார்யராய் நற்குணச்செல்வம் மிக்கவரான எவர் நம்முடைய வைதி₃க தரிசனத்தை என் காலத்திற்குப்பிறகு இவ்வுலகில் நிர்வஹிக்கப்

१५. तं हारीतस्मृतावर्थं स्मृत्वा भूयो महत्तरम् ।
याद्वाचलमाहात्म्ये श्लोकार्थं चाखिलं च तम् ॥

१६. ध्रुवं कश्चिन्महान् शीघ्रं भूम्यामवतरिष्यति ।
स महान् मम काले वा भविता मदनन्तरम् ॥

१७ इति सञ्चिन्तयन्नास्ते रंगे यामुनदेशिकः ।
यामुनार्यकृपालब्धवेदान्तद्वयपारगः ॥

१८. भूरिश्रीशैलपूर्णार्यः स महान् वेङ्कटाचले ।
वेङ्कटेशस्य कैङ्कर्यं कुर्वन्ननुदिनं स्थितः ॥

---

போகிறார்?'' என்று என்றும் சிந்திப்பவராய், ''பொலிக'' பாசுரத்தின் அர்த்த₂த்தையும் ஆர்வத்தோடு அநுஸந்தி₄ப்பவராய், ஹாரீத ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டசிறந்த அர்த்த₂த்தையும்மறுபடியும நினைப்பவராய், யாத₃வாசல மாஹாத்மியத்திலுள்ள ஶ்லோகத்தையும் நினைப்பவராய், ''இவை அனைத்திலிருந்தும் ஒரு மஹாபுருஷர் விரைவில் பூ₄மியில் அவதரிக்கப் போகிறார் என்பது உறுதி. அந்தப் பெரியவர் என் காலத்தில் அவதரிப்பாரா, எனக்குப்பிறகு அவதரிப்பாரா?'' என்று இடைவிடாமல் சிந்திப்பவராய் ஸ்ரீரங்க₃த்தில் வாழ்ந்தார் யாமுனாசார்யர்.

## பெரியதிருமலை நம்பியின் குடும்பம்

17*—*23:—குற்றமற்ற வேதாந்தியே! யாமுனாசார்யரின் கருணையாலே உப₄யவேத₃ாந்தத்தையும் கரைகண்டவரான பெரியதிருமலை நம்பி என்னும் பெரியவர் திருவேங்கட மலையிலே திருவேங்கடமுடையானுக்கு தினந்தோறும் கைங்கர்யம் செய்து கொண்டு வாழ்ந்தார். அவருக்கு இவ்வுலகில் புகழ்பெற்ற இரண்டு குமாரர்களும், இரண்டு ஸஹோதரிகளும், இரண்டு பெண் பிள்ளைகளும் இருந்தனர்.

१९. पुत्रद्वय हि भगिनीद्वयं च दुहितृद्वयम् ।
तस्य श्रीशैलपूर्णस्य बभूव भुवि विश्रुतम् ॥

२०. लक्ष्मीभूम्यंशजं तत्र बभूव भगिनीद्वयम् ।
ज्येष्ठा कान्तिमती तत्र विश्रुता सा रमांशजा ॥

२१. हारीतस्याभवद्भार्या तस्य केशवयज्वनः ।
नारायणांशजातस्य श्रीभूतपुरवासिनः ॥

२२. भूम्यंशजा द्युतिमती द्वितीया तस्य सुन्दरी ।
पद्मलोचनभट्टस्य भार्यासीन्महतस्तदा ॥

२३. नारायणांशजातस्य भारद्वाजस्य सत्तम ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥

---

அவருடைய இரண்டு ஸஹோதரிகளும் ஸ்ரீபூமி தே₃விகளின் அம்சமாகப் பிறந்தவர்கள். அவர்களில் மூத்தவளாய் ஸ்ரீதே₃வியின் அம்சமாகப் பிறந்தவளென்று புகழ் பெற்றவளான காந்திமதி, நாராயணனின் அம்சமாகப் பிறந்தவராய், ஹாரீத கோத்திரத்தைச் சேர்ந்தவராய், ஸ்ரீபெரும்பூதூரில் வாழ்பவரான கேசவஸோமயாஜிக்கு மனைவியாய் இருந்தாள். இரண்டாமவளாய், அழகியவளான த்₃யுதிமதி பூ₄மியின் அம்சமாகப் பிறந்தவளென்று புகழ் பெற்றவளாய், நாராயணனின் அம்சமாகப் பிறந்தவராய் பா₄ரத்₃வாஜ கோத்திரத்தைச் சேர்ந்தவராய் மஹானான பத்₃மலோசன பட்டரின் மனைவியாய் இருந்தாள்.

## ராமலக்ஷ்மணாதிகளின் புநராவதாரம்

23*—50 :—வேதா₃ந்தியே! "அர்ஜுனா! ஒவ்வொரு யுக₃த்திலும் நான் த₄ர்மத்தை நிலைநிறுத்துவதற்காக அவதரிக்கிறேன். எப்பொழுதெல்லாம் த₄ர்மத்திற்கு வாட்டம்

२४. यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥

२५. इत्युक्तरीत्या वेदानि न भूयो रामादयस्तथा ।
चत्वारो लोकरक्षार्थं भूम्यां संजज्ञिरे तदा ॥

२६. श्रीरामो भगवान्पूर्वं तत्र ज्येष्ठोऽभवत्तदा ।
तथैवाभूत्कलियुगे श्रीमल्लक्ष्मणदेशिकः ॥

२७ शालीवाहशकाब्दानां तत्राष्टत्रिंशदुत्तरे ।
गते नवशते श्रीमान् यतिराजोऽजनि क्षितौ ॥

२८. अनन्तः प्रथमं रूपं द्वितीयं लक्ष्मणस्तथा ।
तृतीयो बलरामश्च कलौ कश्चिद्भविष्यति ॥

---

வருகிறதோ, அதர்மத்திற்கு எழுச்சி வருகிறதோ, அப்பொழுதெல்லாம் நான் என்னை அவதரிக்கும்படி செய்கிறேன்" என்று கீதையில் கண்ணன் அருளிச்செய்த படியே, ராமன் முதலான நால்வரும் அக்காலத்திலே உலகை ரக்ஷிப்பதற்காக இந்த பூமியில் மறுபடியும் அவதரித்தார்கள். திரேதாயுகத்தில் ராமன் நால்வரில் மூத்தவனாக அவதரித்தான். அதுபோலவே கலியுகத்தில் (லக்ஷ்மணனின் அவதாரமான) ஸ்ரீராமாநுஜர் (தலைவராக) அவதரித்தார். சாலிவாஹந சகாப்தம் 938 வருடங்கள் கழிந்தபின்பு ஸ்ரீமத் ராமாநுஜர் இவ்வுலகில் அவதரித்தார். யாதவாசல மாஹாத்ம்யத்தில் "அனந்தன் முதலாவது உருவம்; அந்தத் திருவனந்தாழ்வானுடைய இரண்டாவது உருவம் லக்ஷ்மணன் ஆவான். அவனது மூன்றாவது உருவம் பலராமன் ஆவான். கலியுகத்தில் (அவனது நான்காவது உருவமாக) ஒரு மஹாபுருஷர் அவதரிக்கப் போகிறார்." என்னும் ஶ்லோகம் காணப்படுகிறதன்றோ!

२९. यादवाचलमाहात्म्ये श्लोकोऽयं विद्यते किल ।
ब्रह्मन् कलियुगे प्राप्ते धर्मे नष्टे श्रुतीरिते ॥

३०. मद्भक्तस्सर्वधर्मज्ञस्तव गोत्रसमुद्भवः ।
शारीरकमहाभाष्यग्रन्थकर्ता जितेन्द्रियः ॥

३१. तस्य संबन्धिनः शिष्याः सुराणामपि दुर्गमम् ।
मामप्राप्यैव ते सर्वे गमिष्यन्ति परां गतिम् ॥

३२ एवं भगवतैवोक्तं तं हारीतस्मृतावपि ।
अविरोधेन वेदान्तिन् एतयोरुभयोस्तदा ॥

३३. हारीतगोत्र एवात्र तादृशः समजायत ।
शेषो रामानुजो भूत्वा जगत्संरक्षणाय च ॥

३४. अयोध्यावासिनामेषां लोकं सान्तानिकं पुरा ।
प्रददौ कृपया रामः तेषामपि परं पदम् ॥

---

ஹாரீதஸ்ம்ருதியிலும் "அந்தணரான ஹாரீதரே! கலியுக₃ம் பிறந்து வேத₃த₄ர்மமும் அழிந்தவளவில், எல்லா த₄ர்மங்களையும் அறிந்த எனனுடைய ப₄க்தர் ஒருவர் உம்முடைய கோத்திரத்தில் அவதரித்து, புலன்களைவென்ற ஸந்யாஸியாகி சாரீரக மஹாபா₄ஷ்ய க்₃ரந்த₂த்தை இயற்று வார். அவரோடு ஸம்பந்தம் பெற்ற சீடர்கள் அனைவரும் தேவர்களாலும் அடைதற்கரிய என்னை நேரில் பற்றுமலே அவருடைய ஸம்ப₃ந்த₄த்தாலேயே மோக்ஷம் அடைவார்கள்" என்று எம்பெருமானே அருளிச்செய்தான். இந்த இரண்டு பிரமாணங்களோடு முரண்படாமல் இருக்கும்படியாக ஹாரீத கோத்திரத்திலேயே அத்தகைய பெருமையுடையவராய், திருவனந்தாழ்வான் உலகை ரக்ஷிப்பதற்காக ராமாநுஜராக அவதரித்தார். ராமாவதாரத்தின்போது பெருமாள் அயோத்தியிலிருக்கும் எல்லா ஜனங்களுக்கும் கருணையோடு ஸாந்தாநிகலோகத்தை அளித்தார். அவ

३५. प्रदातुकामः स तदा वेदान्तिन कूरराडभूत् ।
भक्त्या भरतशत्रुघ्नौ तत्कैङ्कर्यपरायणौ ॥

३६. वाधूलवंशतिलकौ तावभूतां ततस्तदा ।
चैत्रमासे शुक्लपक्षे पञ्चम्यामथ कर्कटे ॥

३७. लग्ने श्रीलक्ष्मणांशेन ह्यार्द्रायां गुरुवासरे ।
आसुरिकेशवाचार्यात्कान्तिमत्यामजायत ॥

३८. रामानुजो महातेजाः भगवान् देशिकोत्तमः ।
वैशाखे तु विशाखायां वैनतेयांशतो महान् ॥

३९. गोविन्दः पद्मनेत्रार्यात् द्युतिमत्यामजायत ।
मकरे हस्तनक्षत्रे ततो रामांशतोऽजनि ॥

களுக்கும் பரமபதத்தை அளிப்பதற்காக அந்த ராமனே கூரத்தாழ்வானாக அவதரித்தார். பரதனும் சத்ருக்னனும் அந்த ராமனுக்குக் கைங்கரியம் செய்பவர்களாகையாலே, வாதூல வம்சத்தின் தலைவர்களாய் அப்போது அவதரித்தார்கள். சித்திரைமாதம் சுக்லபக்ஷ பஞ்சமியில் திருவாதிரை நக்ஷத்திரத்தோடு கூடிய வியாழக்கிழமையில் கடகலக்னத்தில் ஆஸுரி கேசவ ஸோமயாஜிக்கும் காந்திமதிக்கும் பிள்ளையாக, மஹா தேஜஸ்வியும் ஆசார்ய ச்ரேஷ்டருமான பகவத் ராமாநுஜர் லக்ஷ்மணனின் அம்சமாக அவதரித்தார் *வைகாசி விசாகத்தில் கமல நயன பட்டருக்கும் த்யுதிமதிக்கும் பிள்ளையாக கோவிந்தராகிற எம்பார் கருடனின் அம்சமாக அவதரித்தார். தை ஹஸ்தத்தில் பெரும் புகழாளராய், (பராசரபட்டராகிய) எனக்குத் தந்தையாய், பேரறிவாளர்களுக்குள் முன்னணியில் நிற்பவரான கூரத்தாழ்வான் அனந்த பட்டருக்கும் மஹாதேவிக்கும் பிள்ளையாக ராமனின் அம்சமாக அவதரித்தார். * மாசிப் புனர்வஸுவில் தசமிதிதி

* இப்போது தைப்புனர்வஸுவே எம்பார் திருநக்ஷத்திரமாகவும், சித்திரையில் புனர்வஸுவே முதலியாண்டான் திருநக்ஷத்திரமாகவும் எங்கும் கொண்டாடப்படுகிறது.

४०. श्रीमाननन्तभट्टार्यान्महादेव्यां महायशाः ।
कूरेशोऽस्मत्पिता सर्वविबुधाग्रसरोऽनघ ॥

४१ माघमासे पुनर्वस्वां दशम्यां भरतांशतः ।
लक्ष्मीजनन्यां संजज्ञे वाधूलानन्तदीक्षितात् ॥

४२. धीमान् दाशरथिर्नाम श्रीवाधूलकुलाग्रणीः ।
कन्दाडनाथनामाथ तस्य दाशरथेरभूत् ॥

४३. शत्रुघ्नांशेन सुमहान् पुत्रो लोकविलक्षणः ।
श्रीरामानुजदासाख्य इति नामास्य चाभवत् ॥

४४. तदेव जन्मनक्षत्रं तस्य माघपुनर्वसुः ।
एवं संजज्ञिरे केचिन्महान्तो नित्यसूरयः ॥

४५. रामानुजसहायार्थं नानादेशेषु देशिकाः ।
यथा रामसहायार्थं देवगन्धर्वकिन्नराः ॥

---

யில் வாதூல கோத்திரத்தைச் சேர்ந்த அனந்த தீக்ஷிதருக்கும் லக்ஷ்மீதேவிக்கும் பிள்ளையாக தாசரதி என்னும் பெயருடன் வாதூல குலத்தலைவராக முதலியாண்டான் பரதனின் அம்சமாக அவதரித்தார். அந்த முதலியாண்டானுக்கு பிள்ளையாக லோகவிலக்ஷணரான கந்தாடையாண்டான் என்னும் பெரியவர் சத்ருக்னனின் அம்சமாக அவதரித்தார். ஸ்ரீராமானுஜதாஸர் என்னும்பெயர் அவருக்குஏற்பட்டது. அவருக்கும் மாசிப்புனர்வஸுவே ஜன்ம நக்ஷத்ரமாகும். முறகாலத்தில் ராவணவத₄ முயற்சிக்கு ராமனுக்குத் துணையாயிருப்பதற்காக தே₃வக₃ந்த₄ர்வ கின்னரர்களெல்லாம்இஷ்டப்படி உருவெடுக்கக்கூடிய வானரர்களாக பூமியில் அவதரித்தது போலே, இக்காலத்தில் ராமானுஜருக்குத்துணையாயிருப்பதற்காகப்பெரியவர்களான நித்யஸூரிகள்சிலர்பலதேசங்களிலே ஆசார்யர்களாக அவதரித்தார்கள். ஸ்ரீராமனுக்குத்துணையாக

४६. अवतीर्णाः पुरा भूम्यां हरयः कामरूपिणः।
श्रीरामस्य सहायार्थं दशग्रीववधोद्यमे ॥

४७. द्विसप्ततिः प्रवाहाश्च हरीणामभवन् यथा ।
रामानुजसहायार्थं कलिसंहरणोद्यमे ॥

४८. तदन्तेवासिनश्चासन् चतुस्सप्ततिदेशिकाः ।
कूरेश्वरादयस्सर्वे महान्तो भगवत्पराः ॥

४९. सम्यक् ववृधिरे भूम्यां उद्यद्भास्करसन्निभाः ।
ततो रामानुजः श्रीमान् लीलामानुषविग्रहः ॥

५०. वेदान् सलक्षणान्सर्वानधीत्य पितृसन्निधौ ।
स शास्त्राणि पठंस्तस्थौ काञ्च्यां यादवसन्निधौ ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसम्वादे यामुनाचार्यविभवे रामानुजार्यादि-
सर्वावतारकथनं नाम षोडशोत्तरशततमोऽध्यायः ॥

---

ராவணனை வதம் செய்யும் முயற்சியில் உதவுவதற்காக எழுபத்திரண்டு வெள்ளம் வானரர்கள் தோன்றியது போலே கலியை அழிக்கும் முயற்சியில் ராமாநுஜருக்குத் துணையான சீடர்களான எழுபத்துநாலு சிம்மாசனாதிபதிகளாக நித்ய ஸூரிகள் அவதரித்தார்கள். கூரத்தாழ்வான்முதலான பகவத் பக்தர்களான பெரியவர்கள் அனைவரும் இவ்வுலகில் உதிக்கும் சூரியனைப்போல் சிறப்பாக வளர்ச்சி பெற்றனர். லீலா மாநுஷ ரூபத்தை எடுத்துக்கொண்ட ராமாநுஜரும் எல்லா வேதங்களையும் லக்ஷணங்களோடு கூடத் தம் தந்தையாரிடம் ஓதிவிட்டு, காஞ்சீபுரத்தில் யாதவப்ரகாசரிடம் சாஸ்த்ரங்களைப் படித்துக்கொண்டிருந்தார்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் பட்டார்ய வேதாந்தி ஸம்வாதத்தில்
யாமுனாசாரியர் காலத்தில் ராமாநுஜர் முதலானோர்
அனைவருடைய அவதாரத்தையும் கூறும் நூற்றுப்
பதினாறாவது அத்தியாயம் நிறைவுற்றது.

सप्तदशोत्तरशततमोऽध्यायः ॥

१. श्रीरङ्गे यामुनाचार्यः स तदा देशिकोत्तमः ।
शठकोपकृतेरर्थं सर्वदानुभवन् स्थितः ॥

२. राजव्रणं महत् तस्य यामुनस्याभवत्तदा ।
तेन संपीडितो धीमान् समाः काश्चित्समास्थितः ॥

३. ततः कदाचिद्वेदान्तिन्! यामुनो दीर्घदर्शनः ।
लोकं वितिमिरं दृष्ट्वा जातधर्मरतिं कलौ ॥

४. सन्तुष्टस्तेन तज्जन्म ज्ञात्वैवानुत्तमं महत् ।
स तस्यान्वेषणार्थाय दूतान् संप्राहिणोत्तदा ॥

---

## நூற்றுப் பதினேழாம் அத்தியாயம்

### ஸ்ரீராமாநுஜ திவ்ய சரிதம்

### ஆளவந்தாருக்கு ராஜபிளவை

1—2:—ஆசார்ய ச்ரேஷ்டரான ஆளவந்தார் அப்போது நம்மாழ்வாருடைய திருவாய்மொழியின் பொருளை எப்போதும் அநுபவித்துக்கொண்டு ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்து வந்தார். யாமுனாசாரியருக்கு அப்போது ஒரு பெரிய ராஜபிளவை நோய் ஏற்பட்டது. அறிவாளியான அவர் அதனால் மிகவும் துன்புறுத்தப்பட்டபோதிலும் நெஞ்சம் கலங்காமல் சில வருஷங்கள் வாழ்ந்து வந்தார்.

### ஸ்ரீராமாநுஜரைக் காணப்புறப்படுதல்

3-8:— வேதாந்தியே! அப்போது ஒரு சமயம் தீர்க்கதரிசியான யாமுனாசாரியர் கலிகாலத்திலும் உலகம் ஒளி பெற்று விளங்குவதையும், தர்மத்தில் ஈடுபாடு உண்டாகியிருப்பதையும் கண்டு 'ப₄விஷ்யதா₃சாரியருடைய மிகப்பெரிய அவதாரம் உண்டாகியிருக்கிறது' என்று ஊகித்து உகந்தவராய்,

५. हारीतगोत्रजननं ब्रह्मराक्षसमोचनम् ।
गङ्गास्नानच्छलेनैव विन्ध्याटव्यां विसर्जनम् ॥

६. यद्देवराजप्रत्यक्षं बहुदूरागमं क्षणात् ।
याचित्वा तद्दत्ततोयपानं श्रीभगवत्कृतम् ॥

७. काञ्चीपूर्णेन सख्यं च यत्तत्सर्वममानुषम् ।
माहात्म्यं लक्ष्मणार्यस्य चारैः श्रुत्वा प्रहर्षितः ॥

८. वेदान्तिनं यामुनाचार्यो द्रष्टुकामस्तदाऽऽञ्जसा ।
संप्रतस्थे महात्मानं रङ्गात्काञ्चीपुरं प्रति ॥

९. काञ्चीं संप्राप्य वरदं यामुनार्यः प्रणम्य च ।
काञ्चीपूर्णात्ततो ज्ञात्वा लक्ष्मणार्यं महौजसम् ॥

---

அவர்யாரென்று தேடுவதற்காகப் பல தூதர்களை ஆங்காங்கு அனுப்பினார். அப்போது ஸ்ரீராமாநுஜர் ஹாரீத கோத்ரத்தில் பிறந்திருப்பதையும், பிரம்மராக்ஷஸனை விடுவித்தது, கங்கை யாத்திரை என்னும் வியாஜத்தாலே சென்ற அவர் விந்திய மலைக் காட்டில் விடப்பட்டது, தேவராஜப்பெருமாளை நேரில் கண்டு நெடுந்தூரத்தைச் சிறிது நேரத்தில் கடந்தது, எம்பெருமான் அவரிடம் நீரை வேண்டிப் பருகியது, திருக்கச்சி நம்பியோடு ராமாநுஜர் தோழமைகொண்டது இவை முதலான அதிமாநுஷமான ஸ்ரீராமாநுஜார்யவைபவங்களையும் தூதர்கள் மூலம்கேட்டு உகந்தவராய், மஹாத்மாவான அவரை நேரில் காண விரும்பிய ஆளவந்தார் ஸ்ரீரங்கத்திலிருந்து காஞ்சீபுரத்துக்குப் புறப்பட்டார்.

## வரதனை வேண்டுதல்

9—15:—காஞ்சியை அடைந்து, பேரறிவாளராய், பெரியவரான ஆளவந்தார் வரதராஜனை வணங்கி, திருக்கச்சி நம்பியிடமிருந்து பேரொளியுடைய ஸ்ரீராமாநுஜரை

१०. सम्यक् विलोक्य सन्तुष्टः तेन संभाषणे महान् ।
साधु रामानुजार्येण चकार मतिमान्मतिम् ॥

११. सर्वान्तरात्मा वरदस्तयोस्संभाषणं तदा ।
भूम्यां यथैव न भवेत् स तथैवाकरोज्जवात् ॥

१२. यस्य प्रसादकलया बधिरः शृणोति
पङ्गुः प्रधावति जवेन च वक्ति मूकः ।
अन्धः प्रपश्यति सुतं लभते च वन्ध्या
तं देवमेव वरदं शरणं गतोऽस्मि ॥

१३. श्लोकमेवं च विज्ञाप्य तस्य विज्ञानसिद्धये ।
संप्रार्थ्य वरदं शीघ्रं निर्गत्य करुणाकरः ॥

१४. काञ्चीपुरादवापाथ रङ्गं यामुनदेशिकः ।
रामानुजं विधेहीति शीघ्रं विष्णुमताधिपम् ॥

---

அறிந்து நன்கு கடாக்ஷித்து உகந்தவராய், அவரோடு வார்த்தை சொல்லத் திருவுள்ளம் கொண்டார். ஆனால் ஸர்வாந்தர்யாமியான வரதன் அப்போது அவர்களுக் கிடையே இவ்வுலகில் வார்த்தைப் பரிமாற்றம் நடைபெறாத படி காரியங்களை விரைந்து செய்து விட்டான் "எவனுடைய அருளின் ஒரு திவலையினாலேயே செவிடனுக்குக் காது கேட்குமோ, நொண்டி வேகமாக ஓடுவானோ, ஊமை பேசு வானோ, குருடன் காண்பானோ, மலடி பிள்ளையைப் பெறு வாளோ அந்த வரதராஜப்பெருமானைச் சரணமடைகிறேன்" என்னும் ஶ்லோகத்தை அப்பெருமாளிடம் விண்ணப்பித்துக் கருணைக்கடலான யாமுனாசாரியர் ஸ்ரீராமாநுஜர் விரைவி லேயே பேரறிவு பெறவேண்டுமென்று வரதனைப் பிரார்த் தித்துக் காஞ்சீபுரத்திலிருந்து புறப்பட்டு ஸ்ரீரங்கத்தை அடைந்தார். ஸ்ரீராமாநுஜரை வைஷ்ணவமத நிர்வாஹகராக

१५. स्तोत्ररत्न विधायाशु वरदं प्रति सादरम् ।
रामानुजार्यवृत्तान्तं शृण्वन् रंगे समास्थितः ॥

१६, स्तोत्ररत्न चतुःश्लोकीं वेदप्रामाण्यमेव च ।
सिद्धित्रयं च वेदान्तिन् श्रीगीतासंग्रहं महत् ॥

१७. यामुनो लोकरक्षार्थमकरोत् ग्रन्थपञ्चकम् ।
एवं निवसतस्तस्य यामुनस्य महात्मनः ॥

१८. पञ्चविंशतिसंयुक्तं वत्सराणां शतं गतम् ।
त्यक्ताभिलाषो मेदिन्यां यातुकामः परं पदम् ॥

---

ஆக்கவேண்டும் என்பதற்காக வரதராஜனைக் குறித்து ஸ்தோத்ரரத்னம் என்னும் துதிநூலை விரைவில் விண்ணப்பித்து, ஸ்ரீ ராமாநுஜரைப் பற்றிய செய்திகளை அவ்வப்போது கேட்டு அறிந்துகொண்டு ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருந்தார்.

## ஆளவந்தார் அருளிய கிரந்தங்கள்

**16—*17:**—வேதாந்தியே!(1) ஸ்தோத்ரரத்னம்(2) சதுஃஶ்லோகீ(3) ஆகமப்ராமாண்யம்(4) ஸித்₃தி₄த்ரயம்(5) ஆழ்ந்த பொருளை உடைய ஸ்ரீகீதார்த்தஸங்க்ரஹம் என்னும் ஐந்து கிரந்தங்களை யாமுநாசாரியர் உலகத்தை ரக்ஷிப்பதற்காக அருளிச்செய்தார். (ஸித்₃தி₄த்ரயத்தை மூன்று கிரந்தங்களாகக் கணக்கிட்டு இப்போது லுப்தமாகிவிட்ட மஹாபுருஷ நிர்ணயத்தையும் சேர்த்து எட்டு கிரந்தங்களை அருளியதாகவும் கூறுவர்.)

## சிஷ்யர்களுக்கு நியமனம்

**17*—20:**—மஹாத்மாவான யாமுனர் இப்படி வாழ்ந்து வருகையில் அவருக்கு நூற்று இருபத்தைந்து வருடங்கள் கடந்து விட்டன. இவ்வுலகில் வாழ விருப்ப மற்றவராய்,

१९. शिष्यान्विलोक्य तान्सर्वान् व्याजहार वचः शुभम् ।
रामानुजो मतस्यास्य निर्वोढा नात्र संशयः ॥

२०. उपदिश्याशु सर्वार्थान् यूयं तस्मै महात्मने ।
मतप्रवर्तकं धीरं महान्तं कुरुतादरात् ॥

२१. इत्युक्त्वा निखिलानर्थान् स तेभ्यश्चोपदिश्य तान् ।
धीमन्तं मारणेर्नम्बि विलोक्येदं वचोऽब्रवीत् ॥

२२. राजव्रणं गृहाणेदं बहुशः प्रार्थितस्त्वया ।
भोगैकनाश्यं प्रारब्धं महतामपि दुर्जयम् ॥

---

பரமபதத்துக்குச் செல்ல விரும்பியவரான அவர் தமது எல்லா சிஷ்யர்களையும் பார்த்து, "ராமாநுஜரே இந்த மதத்தை நிர்வஹிப்பவர் என்பதில் ஐயமில்லை. நீங்கள் அனைவரும் மஹாபுருஷரான அவருக்கு என்னிடமிருந்து பெற்ற எல்லா அர்த்த2ங்களையும் விரைவில் அன்புடன் உபதேசித்து மஹாத்மாவான அவரை அறிவாளியாகவும் மதத்தலைவராகவும் செய்வீர்களாக" என்னும் மங்க3ளமான வார்த்தையைச் சொன்னார்.

## மாறனேர் நம்பிக்கு ராஜபிளவையை அளித்தல்

21—25:—சிஷ்யர்களிடம் இவ்வண்ணம் சொல்லி எல்லா அர்த்த2ங்களையும் அவர்களுக்கு உபதேசித்து விட்டு, அறிவாளியான மாறனேர் நம்பியைப் பார்த்து, "இந்த நோயை உனக்குத் தந்தருளும்படி பலகால் உன்னால் பிரார்த்திக்கப்பட்டேன். இந்த ராஜபிளவையை இப்போது என்னிடமிருந்து ஏற்றுக்கொள்வாயாக. பலன் கொடுக்கத் தொடங்கிய ப்ராரப்3த4கர்மம் பெரியவர்களுக்கும் தவிர்க்க வொண்ணாதது; அநுப4வித்தே தீர வேண்டியது இந்தப் பெரிய நோய் என்னால் நீண்டகாலம் அநுப4விக்கப்பட்டது.

२३. मयानुभूतं यच्चैतत् बहुकाल महत् व्रणम् ।
अल्पकालमिद रोगं भुङ्क्ष्व त्वमपि सादरम् ॥

२४. इत्युक्त्वा तद्व्रणं तस्मै दत्वा भक्ताय सादरम् ।
तस्य संरक्षणे सम्यक् महापूर्णं निधाय तम् ॥

२५. कृतकृत्यो लक्ष्मणार्यसंभाषणरतस्तदा ।
शृण्वन् स तस्य वृत्तान्तं श्रीरङ्गे सुखमास्थितः ॥

२६. काञ्चीपुरे यादवं तं कान्तिमत्यात्मसम्भवः ।
विसृज्याथ महाप्राज्ञः काञ्चीपूर्णेन सङ्गतः ॥

२७. तन्नियोगेन हरये वारणाचलवासिने ।
घटेनाम्बु समादाय शालकूपात्स भक्तितः ॥

---

நீ விரும்பியபடி இந்த நோயைச் சிறிது காலம் அநுபவிப்பாயாக'' என்று கூறினார். இவ்வண்ணம் சொல்லி பக்தரான அவருக்கு அந்த நோயை அளித்து, அவரைப்பாதுகாப்பதற்காகப் பெரிய நம்பியை நியமித்துச் செய்ய வேண்டியதையெல்லாம் செய்து முடித்தவராய், ஸ்ரீராமாநுஜரோடு வார்த்தை சொல்லுவதிலேயே ஆசை கொண்டவராய், அவரைப்பற்றிய செய்திகளை அவ்வப்போது கேட்டறிந்து கொண்டு ஸ்ரீரங்கத்தில் இனிது வாழ்ந்தார் ஆளவந்தார்.

## பெரிய நம்பியைக் காஞ்சிக்கு அனுப்புதல்

26—32:—காஞ்சீபுரத்தில் காந்திமதியின் பிள்ளையாய் பேரறிவாளரான ஸ்ரீராமாநுஜர் யாதவரைவிட்டுத் திருக்கச்சிநம்பியோடு சேர்ந்தவராய், நம்பியுடைய நியமனத்தால்

२८. नित्यं समर्पयन्नास्ते धीमान् रामानुजोऽधुना ।
चारैः कदाचिदित्येवं तद्वृत्तान्तं निशम्य सः ॥

२९. महापूर्णं समाहूय यामुनो वाक्यमब्रवीत् ।
पूर्णाचार्य महाप्राज्ञ शृणु त्वं वचनम् मम ॥

३०. काञ्चीं पुरीं समासाद्य लक्ष्मणार्यस्य सन्निधौ ।
मया कृतमिदं स्तोत्रं त्वं वाचय मदाज्ञया ॥

३१. स तत्राभिमुखः शीघ्रं भविष्यति न संशयः ।
येनकेनाप्युपायेन तमिहानय शीघ्रतः ॥

३२. गुरोर्वाक्य ततः श्रुत्वा तेनानुज्ञापितस्तदा ।
पूर्णाचार्यो महाप्राज्ञः पुरीं काञ्चीं ययौ जवात् ॥

---

அத்திகிரியப்பனுக்குச் சாலைக்கிணற்றிலிருந்து பக்தியோடு குடத்தில் நீரெடுத்து வந்து அதை வரதனுக்குத் தினந்தோறும் ஸமர்ப்பித்து வந்தார் ராமாநுஜர். தூதர்கள் மூலம் இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டு அந்த யாமுனாசாரியர் பெரிய நம்பியை அழைத்து, "பேரறிவாளரான பெரிய நம்பியே! என் வார்த்தையைக் கேளும். காஞ்சீபுரத்தை அடைந்து ஸ்ரீராமாநுஜருக்கு முன்னால், என்னால் இயற்றப்பட்ட இந்த ஸ்தோத்ரரத்னத்தை என் நியமனத்தின்படி அநுஸந்திப்பீராக. அப்போது அவர் அதில் மிக விரைவிலேயே ஈடுபடுவார் என்பதில் ஐயமில்லை. ஏதாவது உபாயம் செய்து ஸ்ரீராமாநுஜரை இங்கு அழைத்து வாரும்'' என்று வார்த்தை சொன்னார். ஆசாரியரின் வார்த்தையைக்கேட்டு அப்போதே அவருடைய அநுமதியைப் பெற்று, பேரறிவாளரான பெரியநம்பி காஞ்சீபுரத்துக்கு வேகமாகச் சென்றார்.

३३. श्रीहस्तिशैलमारुह्य नत्वा श्रीवरदं हरिम् ।
तत्सन्निधौ यामुनेन कृतं स्तोत्रमणिं परम् ॥

३४. विज्ञाप्य भक्तितो विद्वन् वरदस्य जगत्पतेः ।
तत्तीर्थं शठकोपं च गृहीत्वा भक्तिसंयुतः ॥

३५. रामानुजस्य वृत्तान्तं जनात् ज्ञात्वा मुदान्वितः ।
तत्पन्थानं समाश्रित्य तस्थौ स्तोत्रमणिं पठन् ॥

३६. तदा रामानुजो धीमान् स्वर्णकुम्भेन तज्जलम् ।
आदाय गच्छंस्तन्मार्गे पूर्णार्यपठितं परम् ॥
स्तोत्ररत्ने श्लोकमेकं अशृणोत्सादरं तदा ॥

३७ स्वाभाविकानवधिकातिशयेशितृत्वं
नारायण त्वयि न मृष्यति वैदिकः कः ।
ब्रह्मा शिवः शतमखः परमस्वराडि-
त्येतेऽपि यस्य महिमार्णवविप्रुषस्ते ॥

---

## ராமாநுஜர் ஸ்ரீரங்கத்திற்குப் புறப்படுதல்

33—*41:– அறிவாளியே! பெரியநம்பி ஹஸ்திகிரியின் மேல் ஏறி வரதராஜப்பெருமானை வணங்கி யாமுனாசாரியரால் அருளிச் செய்யப்பெற்ற சிறந்த ஸ்தோத்ரரத்னத்தை லோகநாதனான வரதனிடம் பக்தியுடன் விண்ணப்பித்து, அப்பெருமானுடைய தீர்த்தத்தையும் சடகோபத்தையும் பக்தியுடன் பெற்றுக் கொண்டு, ராமாநுஜரைப்பற்றிய செய்திகளை ஜனங்களிடமிருந்து அறிந்து உகந்தவராய் அவர் வரும் வழியில் ஸ்தோத்ரரத்னத்தைப் பாராயணம்செய்துகொண்டிருந்தார். அப்போது அறிவாளியான ஸ்ரீராமாநுஜர் பொற்குடத்திலே சாலைக் கிணற்றுத் தீர்த்தத்தை எடுத்து வரும்போது வழியில் பெரிய நம்பியால் படிக்கப் பெற்ற ஸ்தோத்ரரத்ன ஶ்லோகம்ஒன்றைச் செவியுற்றார்.

३८. तच्छ्लोकश्रवणेनैव मतिमान् संप्रहर्षितः ।
पूर्णार्यं संप्रणम्याशु तं पप्रच्छ कृतीश्वरम् ॥
३९ तेन पृष्टः स पूर्णार्यः सम्यग्लक्ष्मणयोगिने ।
यामुनाचार्यवृत्तान्तं सर्वं तस्मै न्यवेदयत् ॥
४०. अतिप्रेम्णा निशम्याशु तद्वृत्तान्तं प्रहर्षितः ।
द्रष्टुकामो यामुनार्यं प्रतस्थे तत्क्षणाज्जवात् ।
४१. पूर्णार्यसहितः श्रीमान् श்रीरङ्गं प्रति सादरम् ।
तदा रङ्गेश्वरो धीरो मनस्येवमचिन्तयत् ॥

---

''நாராயணா! இயல்வானதாய் எல்லையற்றதான ஈஶ்வரத் தன்மை உன் ஒருவனிடமே உள்ளதென்பதை எந்த வைதிகன் பொறுக்காமலிருப்பான்? பிரமன் சிவன் இந்திரன் கர்மத்திலிருந்து விடுதலை பெற்ற முக்தாத்மா ஆகியவர் களும் உன் பெருமைக்கடலில் சில திவலைகளேயன்றோ'' என்னும் (பொருளுள்ள) இந்த ஶ்லோகத்தைக் கேட்டவுடன் அறிவாளியான ஸ்ரீராமாநுஜர் உகந்து பெரியநம்பியை வணங்கி 'இத்துதியை இயற்றியவர் யார்?' என்று கேட் டார். இப்படிக்கேட்கப்பட்ட பெரியநம்பி ஸ்ரீராமாநுஜருக்கு ஆளவந்தாரைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் தெரிவித் தார். மிகவும் ஆர்வதுடன் ஆளவந்தாரைப்பற்றிய எல்லாச் செய்திகளையும் கேட்டு உகந்தவராய், ஸ்ரீராமாநுஜர் யாமுனாசாரியரைக் காணவிரும்பியவராய், பெரியநம்பி யோடுகூட அக்கணத்திலேயே ஸ்ரீரங்கத்திற்குஆர்வத்துடன் புறப்பட்டார்.

## ஆளவந்தாரின் பரமபதப்ராப்தி

41*—*46:—ஸர்வஜ்ஞனான ஸ்ரீரங்க₃நாத₂ன் ''ராமாநுஜர் யாமுனர் இருவரும் சேர்ந்துவிட்டால் நம் முடைய லீலாவிபூ₄தி அழிந்து விடும்.'' என்று அப்போது

४२. रामानुजो यामुनश्च मिलितौ यद्युभावपि ।
लीलाविभूतिरस्माकं तदा नष्टा भविष्यति ॥

४३. तदार्चकमुखेनाह रङ्गेशो यामुनं प्रति ।
गच्छाद्यैव यतिश्रेष्ठ दत्तं ते परमं पदम् ॥

४४. तेनैवमुक्तो हरिणा रामानुजदिदृक्षया ।
रङ्गेश्वरं प्रणम्याह यामुनः सहसा हरिम् ॥

४५. रंगेशानन्तरं मुक्तिं गच्छामि दिवसाष्टकात् ।
इति विज्ञाप्य योगीन्द्रः तदा तद्दर्शनोत्सुकः ॥

४६ अनवाप्य मनोभीष्टं स्वाचार्याङ्घ्रिमुपेयिवान् ।
ततो रामानुजः श्रीमान् पूर्णार्येण सहान्वितः ॥

---

மனத்தில் நினைக்கலுற்ருன். அதனல் அப்போதே ஸ்ரீரங்கநாதன் அர்ச்சகர் மூலமாக ஸ்ரீயாமுனாசாரியரைக் குறித்து "யதிகட்கிறைவரே! உமக்குப் பரமபதம் அளித்தோம். இன்றே புறப்படுவீராக" என்று நியமித்தான். எம்பெருமானல் இவ்வண்ணமாக நியமிக்கப்பெற்ற ஆளவந்தார் ராமாநுஜரைக் காணவிரும்பி, ஸ்ரீரங்கநாதனைச் சடக்கென வணங்கி "அரங்கநகரப்பனே! எட்டுதினங்கள் கழிந்த பின்பு மோக்ஷத்திற்குச் செல்கிறேன்" என்று விண்ணப்பித்து, ஸ்ரீராமாநுஜரைக் காண ஆசைகொண்டவராய் இருந்தார். ஆனல் (எட்டுதினங்கள் கழிந்த பின்பும்) தம் மன விருப்பம் நிறைவேருமலே ஆசாரியன் திருவடியை அடைந்துவிட்டார்.

## ஸ்ரீராமாநுஜரின் ப்ரதிஜ்ஞை

46 —59:—அப்போது ஸ்ரீமத்ராமாநுஜர் பெரியநம்பியோடு கூடியவராய் ஸ்ரீரங்கத்திற்கு (வடதிருக்காவேரிக் கரைக்கு) வந்து நெஞ்சு குலைந்தவராய், திருநாடடைந்த யாமுனாசாரியரை ஸேவித்தார். அவருடைய திருமேனியை

४७. तत्र गत्वा तथाभूतमपश्यद्दीनचेतनः ।
तस्य रूप लक्षणानि दृष्ट्वा वाक्यमभाषत ।

४८. संभाषणे यामुनेन नास्ति प्राप्तिर्ममाधुना ।
क्षुद्रस्य महतां सङ्ग यथा प्राप्तिर्न विद्यते ॥

४९. एतेन मम साङ्गत्यं लभ्यते चेन्मयाधुना ।
अस्मिन् लोके निवसतां जनानां वैष्णवोत्तमाः ॥

५०. गन्तुं हरेः पदं तत्र सेवितु हरिमव्ययम् ।
तत्सौधानामह कृत्वा सोपानानि निरन्तरम् ॥
५१. तन्मार्गेण जनान् सर्वान् प्रापयिष्यामि तत्पदम् ।
तस्मिन्नर्थे न संदेहः सत्यं वच्मि द्विजोत्तमाः ॥

५२. एवं वदति वेदान्तिन् लक्ष्मणार्ये महात्मनि ।
आकुञ्चितमभूत्तस्य सहसा चाङगुलित्रयम् ॥

---

யும் லக்ஷணங்களையும்கண்டு ''யாமுனாசாரியருடன் வார்த்தை சொல்ல எனக்கு இப்போது கொடுத்துவைக்கவில்லையே! தாழ்ந்தவனுக்குப் பெரியவரோடு சேர்த்தி வாய்க்காதன்றோ. வைஷ்ணவ ஶ்ரேஷ்டர்களே! இவரோடு எனக்குச் சேர்த்தி இப்போது ஏற்பட்டிருந்தால் இவ்வுலகிலிருக்கும் ஜனங்கள் அனைவரும் விஷ்ணுவின் பரமபதத்திற்குச் சென்று அழிவற்ற அப்பெருமானைச் சேவிக்கலாம்படி பரமபதத்திற்கு நிரந்தரமான படியைக்கட்டி, அதன் வழியாக எல்லா ஜனங்களையும் பரமபதம் செல்ல வைத்திருப்பேனே. அந்தணர் தலைவர்களே! இதில் ஐயமில்லை. சத்தியமாகக் கூறுகிறேன்'' என்று கூறினார். வேதாந்தியே! மஹாத்மாவான ஸ்ரீராமாநுஜர் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கையில் யாமுனருடைய மூன்று விரல்கள் மடங்கின. ''என்னுடைய மூன்று மனோரதங்கள் இதுவரையில் நிறைவேறாமலிருக்கையாலே அம்மூன்றை

५३. मनोरथत्रयावाप्तिर्यन्नः नैव ह्यभूत् पुरा ।
मनोरथत्रयं मेऽद्य पूरयिष्यत्ययं ध्रुवम् ॥

५४. इत्येव निश्चितहृदा यामुनेन महात्मना ।
आकुञ्चित ततस्तेन सहसैवाङ्गुलित्रयम् ॥

५५. तिस्राङ्गुलीः समालोक्य ताः समाकुञ्चितास्तदा ।
सम्यक् ज्ञात्वा ततस्तस्य तदभिप्रायमुत्तमम् ॥

५६ शारीरकमहाभाष्यग्रन्थनिर्माणमेव च ।
पराशरस्य व्यासस्य ऋणनिर्मोचनं तथा ॥

५७. दिव्यद्राविडवेदस्य सम्यक् प्रवचनं भुवि ।
एतत् त्रयं करिष्यामीत्येव वैष्णवसन्निधौ ॥

५८. दृढप्रतिज्ञां सहसा कृत्वा लक्ष्मणदेशिकः ।
आकुञ्चितं यामुनस्य मोचयित्वाङ्गुलित्रयम् ॥

---

யும் இவர் நிறைவேற்றுவார் என்பது உறுதி.'' என்று உறுதிகொண்ட மஹாத்மாவான யாமுனாசாரியரால் தமது மூன்று விரல்களும் அப்போது மடக்கப்பட்டன. அந்த மூன்று விரல்கள் மடங்கியிருப்பதைக் கண்டு அவருடைய மூன்று குறைகளைப்பற்றிய கருத்தை நன்கு விசாரித்து அறிந்து ''(1) சாரீரகசாஸ்திரமாகிற ப்₃ரஹ்ம ஸூத்ரத்திற்குப் பெரியதோர் ப₄ாஷ்யத்தை இயற்றுகிறேன். (2) ஸ்ரீபராசர மஹரிஷிக்கும் வேத வியாச மஹரிஷிக்கும் நன்றிக் கடனைத் தீர்ப்பேன். (3) திராவிடவேதமாகிய திவ்யப்ரபந்தங்களை இவ்வுலகில் நன்கு பரப்புவேன்.'' என்று இந்த மூன்று குறைகளையும் தீர்ப்பதாக வைஷ்ணவர்கள் ஸந்நிதியிலே உறுதியான பிரதிஜ்ஞையை உடனே செய்து மடங்கியிருந்த யாமுனாசாரியரின் மூன்று விரல்களையும் உடனே நிமிரும்படி செய்து ஆளவந்தாரோடு வார்த்தை சொல்ல இயலாமற்

५९. रंगेश्वरमदृष्ट्वैव वेदान्तितन् तेन हेतुना ।
तस्मात्कवेरजातीरात् तदा काञ्चीं विवेश सः ॥

६०. ज्ञात्वा षडर्थान्वरदात् काञ्चीपूर्णमुखात्तदा ।
अशिश्रियन्महापूर्णं प्रथम प्रेमपूर्वकम् ॥

६१. स गुरुभ्योऽथ पञ्चभ्यः सर्वार्थान्प्राप्य सादरम् ।
विरेजे लक्ष्मणाचार्यः कलाभिरिव चन्द्रमाः ॥

६२. श्रीभाष्यं कर्तुकामोऽथ कूरेशेन समन्वितः ।
गत्वाशु शारदापीठं वृत्तिं बोधायनस्य च ॥

---

போன காரணத்தாலேயே அந்தக்காவேரிக்கரையிலிருந்தே (ஸ்ரீரஙகத்தில் நுழையாமல்) புறப்பட்டுக்காஞ்சீபுரததிற்குச் சென்று விட்டார் ஸ்ரீராமாநுஜர்.

## ஐந்து ஆசார்யர்களை ஆச்ரயித்தல்

60—61:—தரிசனத்தில் தாம் நிர்ணயம் பெறவிரும்பிய ஆறு வியஷயங்களைப் பற்றிய ஆறு வார்த்தைகளைத் திருக்கச்சிநம்பியின் மூலமாக வரதராஜப்பெருமாளிடமிருந்து அறிந்து. (அதில் கடைசி வார்த்தையின்படி) மஹாத்மாவான பெரிய நம்பியை அன்புடன் ஆச்ரயித்தார் ராமாநுஜர். இளையாழ்வாராகிற அவர் (1) பெரிய நம்பி, (2) திருக்கோட்டியூர் நம்பி, (3) திருமாலையாண்டான், (4) பெரிய திருமலை நம்பி, (5) திருவரங்கப்பெருமாள் அரையர் ஆகிய ஐந்து ஆசார்யர்களிடமிருந்தும் எல்லா தரிசனார்த்தங்களையும அன்புடன் கேட்டறிந்து பதினாறு கலைகளும் நிரம்பிய பூர்ணசந்திரன போலே விளங்கினார்.

## தரிசன ஸ்தாபநமும் பரமபதப்ராப்தியும

62 73. ஸ்ரீபாஷ்யத்தை இயற்ற விரும்பியவராய், கூரத்தாழ்வானோடு கூடியவராய், (ஸ்ரீராமாநுஜர்) விரைவில்

६३. अवलोक्याशु तेनैव श्रीरङ्गं प्राप्य हर्षितः ।
समस्तेतरसिद्धान्तनिराकरणपूर्वकम् ॥

६४. वेदान्तदीपं वेदान्तसारं वेदार्थसङ्ग्रहम् ।
श्रीभाष्यं लोकविदितं विधाय बुधसंमतम् ॥

६५. गीताभाष्यं च सुमहत् कृत्वा गद्यत्रयं महत् ।
गत्वा दश दिशः सम्यक् कृत्वा दिग्विजयं परम् ।

६६. स्वनाम्ना संप्रतिष्ठाप्य चैतद्वैष्णवदर्शनम् ।
रामानुजार्यसिद्धान्तमित्येवं सकलावनौ ॥

६७. तस्य संरक्षणे सम्यक् प्रतिष्ठाप्य बुधर्षभान् ।
वेदान्तद्वयसंपन्नान् चतुस्सप्ततिदेशिकान् ॥

---

காஷ்மீரத்திலுள்ள ஸ்ரீசாரதாபீடத்தை அடைந்து போதாயனருடைய வ்ருத்திக்கிரந்தத்தை ஸேவித்து அதனால் உகந்தவராய், ஸ்ரீரங்கத்தை அடைந்து, மற்ற எல்லா ஸித்தாந்தங்களையும் நிரஸித்து, வேதாந்ததீபம், வேதாந்தஸாரம், வேதார்த்தஸங்க்ரஹம், அறிவாளிகளால் பாராட்டப்படுவதாய் உலகெங்கும் பரவியதான ஸ்ரீபாஷ்யம், மிகப்பெரிதான கீதாபாஷ்யம், மிகச்சிறந்ததான கத்யத்ரயம் ஆகிய கிரந்தங்களை இயற்றி, பத்து திக்குகளிலும் சென்று மேலான திக்விஜயம் செய்து ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தம் என்றே உலகெங்கும் தம் திருநாமத்தாலே பெயர் பெறும்படி இந்த வைஷ்ணவ தரிசனத்தை நிலைநாட்டி, அதை ரக்ஷிப்பதற்காகப் பேரறிவாளர்களும் உபயவேதாந்தங்களையும் அறிந்தவர்களுமான எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதிபதிகளை நன்கு நிலைநிறுத்தி, இந்நிலவுலகில் நூற்றிருபது வருடங்கள் தடையற்று விருப்பப்படி நன்கு ஸஞ்சரித்து, ஸ்ரீபெரும்பூதூர், ஸ்ரீரங்கம், திருநாராயணபுரம் என்னும் மூன்று

६८. स विंशत्युत्तरशतं वत्सराणां भुवःस्थले ।
अव्याहतगतिः सम्यक् यथाकाम विहृत्य च ॥

६९. स्थानत्रये प्रतिष्ठाप्य वत्स्वार्चाविग्रहत्रयम् ।
भूतपुर्यां विशेषेण यत्तेजोऽनुत्तमं महत् ॥

७०. स्वयं विधाय तत्सर्वं तत्रार्चाविग्रहे परे ।
आचन्द्रार्कमयं श्रीमान् मदर्चाविग्रहो भुवि ॥

७१. लोकसंरक्षणं सम्यक् करिष्यति न संशयः ।
इति निश्चित्य योगीन्द्रः कृतकृत्यो महायशाः ॥

७२. अत्रैव रङ्गनगरे वैकुण्ठेशदिदृक्षया ।
वैकुण्ठमगमच्छेषो लीलामानुषविग्रहः ॥

७३. माघशुद्धदशम्यांतु मध्याह्ने मन्दवासरे ।
भोगिराजः स्वभागीशभावं संप्राप्य सादरम् ॥

---

இடங்களிலும் தம் அர்ச்சாவிக்₃ரஹங்களைப் பிரதிஷ்டை செய்வித்து, ஸ்ரீபெரும்பூதூரில் சிறப்பாக அந்த அர்ச்சா விக்₃ரஹத்தில் தலைசிறந்த தம் தேஜஸ்ஸைத் தாமே நிலைநிறுத்தி, ''சிறப்பு நிறைந்த இந்த என்னுடைய அர்ச்சாவிக்ரஹம் இவ்வுலகில் சந்திரனும் சூரியனும் இருக்கும்வரை சேதநரக்ஷணத்தை நன்கு செய்யும்; இதில் ஐயமில்லை'' என்று உறுதிகொண்டு, செய்யவேண்டியதைச் செய்து முடித்தவராய், பெரும்புகழாளரான யதிகட்கிறைவர் மாசிமாதம் சுக்லபக்ஷ தசமியில் சனிக்கிழமையன்று நடுப்பகலில் ஸ்ரீவைகுண்ட₂நாத₂னை ஸேவிக்க விரும்பி: ஆதிசேஷனுடைய லீலாமாநுஷ அவதாரமான ஸ்ரீராமாநுஜர் தம்முடையதான திருவனந்தாழ்வானாகிற நிலையை அன்புடன் அடைந்து ஸ்ரீரங்க₃த்திலிருந்தே ஸ்ரீவைகுண்ட₂த்திற்குச் சென்றார்.

७४. यतीन्द्रसूनुः कुरुकेशनामा कर्माखिलं तस्य यदेव युक्तम् ।
चकार लोकोत्तरमार्यजुष्टो जगद्गुरोर्लक्ष्मणदेशिकस्य ॥

७५. कूरेशपुत्र मामेव रङ्गनाथो जगत्पतिः ।
पुत्रस्वीकारमकरोत् पीतहारिद्रशेखरः ॥

७६ भूरिश्रीशैलपूर्णार्यतनयं कुरुकेश्वरम् ।
पुत्रस्वीकारमकरोत् लक्ष्मणार्यो जगद्गुरुः ॥

७७. यतीशः पुत्रवात्सल्यात् व्यादिदेश महामतिम् ।
सहस्रगीतिव्याख्यानकारणे कुरुकेश्वरम् ॥

७८. विष्णुचित्ताय वेदान्तद्वयं हि कुरुकेश्वरः ।
प्रददौ कृपया तस्मै श्रीशैलकुलभूषणः ॥

---

### சரமகைங்கர்யம்

74. யதிராஜருடைய அபிமானபுத்திரரான திருக்குருகைப்பிரான் பிள்ளான் லோகாசார்யரான ஸ்ரீராமாநுஜாசாரியருக்கு லோகவிலக்ஷணமான சரமகைங்கர்யங்கள் அனைத்தையும் மற்ற ஆசாரியர்களோடு கூடியவராய், சிறப்பாக முறைப்படி நடத்தினார்.

### பிள்ளானும் பட்டரும் எங்களாழ்வானும்

75—78. கூரத்தாழ்வானுடைய குமாரனை அடியேனை லோகநாதனான ஸ்ரீரங்கநாதன் மஞ்சள் நீர்குடிப்பித்துப் புத்திரனாக ஸ்வீகாரம் செய்து கொண்டார். பெரிய திருமலைநம்பியின் குமாரரான திருக்குருகைப்பிரான் பிள்ளானை லோகாசாரியரான ஸ்ரீராமாநுஜர் தம் புத்திரராக அபிமானித்தார். யதிராஜர் அந்தப் புத்திரரிடம் உள்ள அன்பினாலே பேரறிவாளரான அந்தத் திருக்குருகைப்பிரான் பிள்ளானைத் திருவாய்மொழிக்கு வியாக்கியானம் செய்யும்படி நியமித்தார். பெரிய திருமலை நம்பியின் குலவிளக்காகத் தோன்றிய அந்தப் பிள்ளான், ஸ்ரீவிஷ்ணுசித்தரான எங்களாழ்வானுக்கு உபயவேதாந்தங்களையும் கருணையோடு உபதேசித்தார்.

७९. यतीन्द्रशासनाद्धीमान् गोविन्दार्यो महायशाः ।
दर्शनार्थान् ततः सर्वान् प्रददौ मह्यमादरात् ॥
८०. यतीन्द्रशासनात्सर्वे दर्शनार्था मया त्वयि ।
निक्षिप्ताः किल चैवैते सांप्रतं बुधसत्तमे ॥
८१. कुर्वन् दर्शननिर्वाहं श्रीरङ्गेऽत्र सुखं वस ।
यतीन्द्रशासनात्पूर्वं कुरुकेशेन धीमता ॥
८२. षड्भिः सहस्रैर्वेदान्तिन् ग्रन्थैर्लोकहितैषिणा ।
सहस्रगीतेर्व्याख्यानमकार्येतदनुत्तमम् ॥

---

## பட்டரும் நஞ்சீயரும்

78—*81. பெரும்புகழாளராய், பேரறிவாளரான 'கோவிந்தர்' என்னும் எம்பார் யதிராஜருடைய நியமனத்தாலே தர்சனார்த்தங்கள் அனைத்தையும் எனக்கு அன்போடு உபதேசித்தார். யதிராஜருடைய நியமனத்தாலேயே இந்த எல்லா தரிசனார்த்தங்களும் சிறந்த அறிவாளியான உமக்கு என்னால் உபதேசிக்கப்பட்டு உம்மிடம் சேமித்து வைக்கப்பட்டிருக்கின்றனவன்றே; இந்த தர்ஶனத்தை நிர்வஹித்துக்கொண்டு இந்த ஶ்ரீரங்கத்திலேயே இனிது வாழ்வீராக.

## நஞ்சீயருக்கு பட்டரின் நியமனம்

81*—84. வேதாந்தியே! முன்னம் யதிராஜருடைய நியமனத்தாலே பேரறிவாளரான திருக்குருகைப்பிரான் பிள்ளானாலே உலகத்தின் நன்மையின் பொருட்டுத் திருவாய்மொழிக்கு ஆறாயிரப்படியாகிய சிறந்த இந்த வியாக்கியானம் அருளிச்செய்யப்பட்டது. நீர் இப்போது எல்லா

८३. त्वमद्य नवसाहस्रग्रन्थसंख्यायुतं कुरु ।
सहस्रगीतेर्व्याख्यानं सर्वलोकोपकारकम् ॥

८४. एतेन परमो मोदः शठजिद्यतिराजयोः ।
भविष्यति ततोऽस्माकं पुरुषार्थः परमो हितः ॥

८५. मन्नाथात्कुरुकानाथात् गोविन्दार्यान्महात्मनः ।
यद्दिव्यसूरिचरितं पूर्वार्यचरितं च तत् ॥

८६. सम्यक् श्रुतं मया प्रोक्तं तत्सर्वं भवतेऽधुना ।
एतत्पुण्यतमं हृद्यं चरित्रं पापनाशनम् ॥

८७. शृण्वतां पठतां चैव भक्तिज्ञानविवर्धनम् ।
आयुरारोग्यदं नित्यमरिषड्वर्गनाशनम् ॥

---

உலகுக்கும் உபகாரம் விளையும்படி ஒன்பதினாயிரம் கிரந்தக் கணக்கில் திருவாய்மொழிக்கு வியாக்கியானத்தைச் செய்வீராக. இதனால் நம்மாழ்வாருக்கும் யதிராஜருக்கும் மிகுந்த உகப்பு உண்டாகும். அதனால் நமக்கும் தலைசிறந்த ஹிதமும் புருஷார்த்தமும் விளையும்.

### பலச்ருதி

85—*95. திருக்குருகைப்பிரான் பிள்ளானிடமிருந்தும் எனது ஆசார்யராய், மஹாத்மாவான கோவிந்தர் என்னும் எம்பாரிடமிருந்தும் என்னால் நன்கு கேட்கப்பட்ட ஆழ்வார்களுடைய சரித்திரமும், பூர்வாசார்யர்களுடைய சரித்திரமும் அனைத்தும் உமக்குப் பரிபூர்ணமாகச் சொல்லப் பட்டது. இந்தச் சரித்திரம் மிகப்புண்ணியமானது. நெஞ்சையீர்ப்பது. பாபத்தைப் போக்குவது. கேட்பவர்கள் படிப்பவர்களுடைய பக்தியையும் ஜ்ஞானத்தையும் வளர்ப்பது. ஆயுளையும், ஆரோக்யத்தையும் அளிப்பது. நம்மிடம்

८८. वैराग्यहेतुभूतं च प्रपन्नामृतमुत्तमम् ।
ये पठन्ति सदा भक्त्या तेषां मुक्तिः करे स्थिता ॥

८९. अमृतं यत्प्रपन्नानां तत्प्रपन्नामृतं विदुः ।
एतत्पुरातनं पुण्य यः प्रपन्नामृतं पठेत् ॥

९०. सर्वपापविनिर्मुक्तो ब्रह्मलोके महीयते ।
लक्ष्मीनाथसमारंभां नाथयामुनमध्यमाम् ॥

९१. अस्मदाचार्यपर्यन्तां एतां(वन्दे) गुरुपरम्पराम् ।
योऽभिजानाति वेदान्तिन् स एव भुवि वैष्णवः ॥

---

இருக்கும் ஆறு உட்பகைகளான காமம், கோபம், லோப₄ம் (பேராசை), மோஹம் (மயக்கம்), மத₃ம் (க₃ர்வம்), மாத்ஸர்யம் (வெறுப்புணர்ச்சி) ஆகியவற்றை எப்போதும் அழிப்பது. ப்ரபந்நர்களுக்கு அமுதப்போல் சிறந்ததான இதை எப்போதும் ப₄க்தியுடன் படிப்பவர்களுக்கு வைராக்யத்தை அளிப்பது. அவர்களுக்கு மோக்ஷம் கையிலேயே உள்ளது. இந்தச் சரித்திரம் ப்ரபந்நர்களுக்கு அமுதம் போன்றதாகையாலே இதை ப்ரபந்நாம்ருதம் என்று அறிவாளிகள் அறிகிறார்கள். பழையதாய் மனிதர்களை உயர்த்தக்கூடியதான இந்த ப்ரபந்நாம்ருதத்தை எவனொருவன் படிக்கிறானோ அவன் எல்லாப் பாபங்களினின்றும் நீங்கப் பெற்று, பிரம்மத்தின் உலகில் கொண்டாடப்படுகிறான். வேதாந்தியே! லக்ஷ்மீநாதனிடமிருந்து தொடங்கியதாய், நாதமுனிகளையும் யாமுனமுனிகளையும் இடையிற் கொண்டதாய், நமது ஆசார்யர்கள் ஈறாக உள்ளதான இந்தக் குருபரபரையை உலகில் எவன் அறிகிறானோ அவனே வைஷ்ணவனாவான். ஆசார்ய ஸம்ப₃ந்த₄த்தை அறியாத

९२. सम्बन्धज्ञानहीनस्य वैष्णवत्वं कथ भवेत ।
अतो ह्येतन्महाभक्त्या तत्प्रपन्नामृतं पठेत् ॥

९३. प्रपन्नामृतविज्ञानात् संबन्धज्ञानवान् भवेत् ।
संबन्धज्ञानवान् लोके वैष्णवः स भविष्यति ॥

९४. अतो हि वैष्णवो धीमान् विष्णुलोकं स विन्दति ।
पूर्वार्यचरितं पुण्यं भक्तिज्ञानविवर्धनम् ॥

९५. ये शृण्वन्ति सदा भक्त्या तेषां वासः परे पदे ।
अस्मद्यतिस्स भट्टार्यात् श्रुत्वाख्यानमनुत्तमम् ॥

---

வனுக்கு எப்படி உலகில் வைஷ்ணவத்வம் ஏற்படும்? ஆகையால், இந்த ப்ரபந்நாம்ருதத்தைப் பெரும் ப₄க்தி யுடன் படிக்கவேண்டும். ப்ரபந்நாம்ருதத்தை அறிவதால் ஆசார்ய ஸம்ப₃ந்த₄த்தை அறிந்தவனுகிறுன். இந்த ஸம்பந்தத்தை அறிந்தவனே உலகில் வைஷ்ணவனுகி றுன். அது காரணமாகவே அந்த வைஷ்ணவன் அறி வாளியாகி விஷ்ணுலோகத்தை அடைகிறுன். ப₄க்தியையும் ஜ்ஞானத்தையும் வளர்ப்பதாய், புண்ணியமானதான இந்தப் பூர்வாசார்யர்களுடைய சரித்திரத்தை எவர்கள் எப்போதும் ப₄க்தியுடன் கேட்கிறுர்களோ அவர்கள் பரமபத₃த்தை அடைவார்கள்

## முடிவுரை

95*—103. ஸ்ரீபராசரபட்டரிடமிருந்து ஒப்பற்றதாய். எல்லா அர்த்த₂ங்களையும் அளிக்கக்கூடியதான இந்தப் பெரிய ப்ரபந்நாம்ருதத்தைக் கேட்டு நஞ்சீயர் உகந்தவ ராய் அவரை வலம் வந்து அன்புடன் வணங்கி ஆசார்ய ச்ரேஷ்ட₂ரான அவரை முறைப்படி ஆராதித்தார்.

९६. सर्वार्थसिद्धिदं नित्यं यत्प्रपन्नामृतं महत् ।
सन्तुष्टस्स परिक्रम्य प्रणम्य प्रेमपूर्वकम् ॥

९७. विधिवत्पूजयामास भट्टार्यं गुरुपुङ्गवम् ।
कथान्ते षड्रसोपेतैरन्नैर्बहुविधैस्तदा ॥

९८. ब्राह्मणान् भोजयामास वैष्णवान् वेदपारगान् ।
श्रीपादतीर्थं स्वीकृत्य वैष्णवानां महात्मनाम् ॥
गुरोश्चास्मद्यतिः सम्यक् पूतात्मा प्रत्यनन्दत ॥

९९. प्रपन्नरत्ने प्रथितप्रभावे भट्टारकोऽस्मद्यतिनामधेये ।
हृद्यं प्रपन्नामृतमेतदाद्यं दत्वा परं हर्षमवाप धीरः ॥

१००. संवादभूतं सकलार्थसारं भट्टार्यवेदान्तिविपश्चितोर्यं ।
यत्तत्प्रपन्नामृतमादरेण पठन्ति ते भागवता भवेयुः ॥

---

இந்தச் சரித்திரத்தைக் கேட்டபின்பு வேத₃ங்களைக் கரை கண்ட பிராம்மணர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பல விதமான அறுசுவை உண்டியை அளித்தார், மஹாத்மாக்களான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தை ஏற்றுக்கொண்டு ஆசார்யருடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தையும் பெற்றுக்கொண்டு நஞ்சீயர் மிகவும் பரிசுத்தி பெற்றவராய் ஆனந்தம் அடைந்தார். பேரறிவாளரான பட்டரும், ப்ரபந்நர்களில் ரத்நம் போன்றவரும், புகழ்பெற்றவருமான நஞ்சீயருக்கு நெஞ்சை ஈர்ப்பதாய் ஸம்ப்ரத₃ாய ப்ராப்தமான இநத ப்ரபந்நாம்ருதத்தை உபதேசித்து மிகவும் உகப்படைந்தார். பேரறிவாளர்களான ஸ்ரீபராசரபட்டருக்கும் வேதாந்திக்கும் ஸம்வாதமாய் இருப்பதாய், எல்லா அர்த்த₂ங்களின் ஸாரமாய் இருப்பதான இந்த

१०१. दिव्यप्रबन्धपठनात् सकला जनौघाः
संत्यक्तपापनिवहाः परिशुद्धचित्ताः ।
उत्तीर्णघोरभववारिधयो महान्तः
वैकुण्ठलोकनिरता इव ते भवेयुः ।।

१०२. चित्रं चरित्रं जगतः पवित्रं
श्रीमद्गुरूणां सकलार्थसारम् ।
पठन्ति शृण्वन्त्यपि ये च भक्त्या
ते विष्णुलोके निवसन्ति सत्यम् ।।

---

ப்ரபந்நாம்ருதத்தை ஆர்வத்துடன் எவர்கள் படிக்கிறார்களோ அவர்கள் பரமபாகவதர்கள் ஆவார்கள். தி₃வ்ய ப்ரப₃ந்த₄த்தைப் படிப்பதாலே எல்லா ஜனங்களும் பாபங்கள் அனைத்தும் கழியப்பெற்றவர்களாய், பரிசுத்தமான நெஞ்சையுடையவர்களாய் கொடுமையானதான ஸம்ஸாரக் கடலைக் கடந்த பெரியவர்களாய் வைகுண்ட₂லோகத்தில் ஈடுபட்டவர்களான நித்ய முக்தர்கள் போலே ஆவார்கள். ஆச்சர்யமானதாய், உலகைப் பரிசுத்தப்படுத்துவதாய், எல்லா அர்த்த₂ங்களுக்கும் ஸாரமாய் இருப்பதாய், சிறப்புற்ற ஆசார்யர்களின் சரித்திரமான இதைப்படிப்பவர்களும், அன்புடன் கேட்பவர்களும் விஷ்ணு லோகத்தில் வாழ்வார்கள் என்பது உண்மை. கோவிந்தர் என்னும் எம்பாருடைய திருவடித்தாமரையில் வண்டு போன்றவராய், ஸ்ரீராமானுஜருடைய கருணையாகிற அமுதத்தால்

१०३. गोविन्दपादसरसीरुहषट्पदाय रामानुजार्यकरुणामृतवर्धिताय ।
कूरेशवंशतिलकाय महात्मकाय श्रीमद्भट्टदेशिकवराय नमो नमस्ते ॥

इति श्रीप्रपन्नामृते भट्टार्यवेदान्तिसंवादे श्रीरामानुजार्यदिव्यचरितादि-
कथनं नाम सप्तदशोत्तरशततमोऽध्यायः ॥

॥ श्रीप्रपन्नामृतं संपूर्णम् ॥

---

வளர்க்கப்பெற்றவராய், கூரத்தாழ்வான் வம்சத்திற்குத் திலகம் போன்றவராய், மஹாபுருஷராய், ஸ்ரீபராசர பட்டரான உமக்குப் பலகால் வணக்கம்.

ஸ்ரீப்ரபந்நாம்ருதத்தில் ஸ்ரீபராசரபட்டருக்கும்
வேதாந்திக்கும் நடந்த ஸம்வாத3த்தில்
ஸ்ரீராமாநுஜாசார்யருடைய திவ்ய சரிதத்தைக்கூறும்
நூற்றுப்பதினேழாவது அத்தியாயம் நிறைவுற்றது.

**ஸ்ரீப்ரபந்நாம்ருதம் நிறைவுற்றது.**



ஸ்ரீ:



ஆழ்வாராசார்யர்களின் அருளிச்செயல்களுக்கு
எளிய தமிழ் விரிவுரைகளுடன் வெளிவரும்
சிறந்த மாதப்பத்திரிகை

# "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்"

ஆழ்வார்களுடைய திவ்யப் பிரபந்தங்களுக்குப் பெரியவாச்சான் பிள்ளை முதலான ஆசார்யர்கள் அருளிச்செய்த மணிப்ரவாள நடை வியாக்கியானங்களை எளிய தமிழ் நடை விவரணங்களோடு வெளியிடுவதையே முக்கிய நோக்கமாகக்கொண்டு இப்பத்திரிகை கடந்த நாற்பத்தேழு வருடங்களாக நடைபெற்று வருகின்றது. விரிவான கீதா வ்யாக்யானமும், ஆசார்யர்களின் சரித்திரத்தை விரிவாக விளக்கும் ஆசார்ய வைபவ மஞ்ஜரியும், திருச்சந்தவிருத்தம் முதலான திவ்யப்ரபந்தங்களுக்கு வியாக்கியானமும், உபநிஷத்வ்யாக்யானமும், அன்பர்களின் கேள்விகளுக்கு பதிலளிக்கும் ஸுதர்சனர் பதிலும், மற்றும் பல கட்டுரைகளும், கிரந்தங்களும் புத்தகமாக்கிக் கொள்ளலாம்படி தனித்தனி பாரங்களாகத் தொடர்ந்து வருகின்றன. விவரணத்தோடு கூடிய வார்த்தாமாலை, தனிஶ்லோகம் முதலான பல நூல்கள் ஸுதர்சனத்தில் வெளிவந்தவையேயாகும். விளம்பரமேயில்லாமல் நல்ல காகிதத்தில் ஒவ்வொரு மாதமும் சுமார் அறுபது பக்கங்கள் தரமான விஷயங்களைக் கொண்டு வெளிவருவது இப்பத்திரிகையின் தனிச் சிறப்பாகும்.

**ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ஸுதர்சனர்),**

அட்வகேட்,

3. B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017.

**வருடச் சந்தா ரூ. 30 ※ ஆயுள் சந்தா ரூ. 250.**

**தனிப்பிரதி தபால் செலவுடன் ரூ. 3-00.**

**ஸர்வஜித் மார்கழி 28-உ (12—1—1948) முதல்**

**தொடர்ந்து வெளிவருகிறது.**

# அநுபந்தம்

## [பிற்பட்ட பதிப்புகளில் பிற்காலத்தில் சேர்க்கப்பட்ட பத்து அத்தியாயங்களின் சுருக்கம்.]

## பிற்சேர்க்கை அத்தியாயம்—1

ஸ்ரீபராசரபட்டருக்குப் பிறகு நஞ்சீயர் தர்சனம் நிர்வஹித்தார். உறையூரைச் சேர்ந்த நம்பூர் வரதரைத் தமது சிஷ்யராகத் திருத்தி அவரைக்கொண்டு ஒன்பதினாயிரப் படியை ஓலைச் சுவடியில் எழுதிவர நியமித்தார். நம்பூர் வரதர் காவேரி வெள்ளத்தைக் கடந்து வரும்போது ஓலைச் சுவடி நழுவிவிட்டது. இருந்த போதிலும் நினைவிலிருந்து அதை எழுதி நஞ்சீயரிடம் ஸமர்பபித்தார் தாம் எழுதாத சில அர்த்தங்கள் சிறப்பாக அதில் இருப்பதைப் பார்த்து நஞ்சீயர் காரணத்தை அறிந்து நம்பூர் வரதரை 'நம்பிள்ளை' என்று அபிமானித்தார். வடக்குத்திருவீதிப்பிள்ளை பெரியவாச்சான் பிள்ளை ஆகிய இருவரும் நம்பிள்ளையின் சிஷ்யர்களில் முக்கியமானவர்கள். ''நம்பிள்ளை கோஷ்டியோ நம்பெருமாள் கோஷ்டியோ'' என்று வியப்புறும்படி அவருடைய காலக்ஷேப கோஷ்டி அமைந்திருந்தது. கூரத்தாழ்வான் வம்சத்தில் உதித்த நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர் நம்பிள்ளையிடம் பொருமை கொண்டிருந்து, ராஜஸபையில் ராமபிரான் ஜடாயுக்கு மோக்ஷம் அளித்தது ''ஸத்யேந லோகாந் ஜயதி'' [ஸ்ரீராமபிரான் உண்மையுரைத்தலாலே உலகங்களை வென்றுள்ளார்] என்கிற ச்லோகத்தின்படி மநுஷ்ய நிலைக்குச் சேர்ந்ததே என்ற நம்பிள்ளை நிர்வாஹத்தை அவருடைய சிஷ்யரான ஜீயரிடமிருந்து உணரப்பெற்று, ராஜாவிடம் விண்ணப்பித்து அரசனால் பொன்னும் பொருளும் பரிசளிக்கப்பெற்று நம்பிள்ளையிடம் பொருமை நீங்கி அப்பொன்னையும் பொருளையும் நம்பிள்ளை திருவடிகளில் ஸமர்ப்பித்து அவருக்குச் சிஷ்யரானார். நம்பிள்ளை திருவாய்மொழிக்குச் சாதித்த அர்த்தங்களை பாரதக்கணக்கில் லக்ஷம் கிரந்தங்களுக்கு மேல் மிக விரிவான வியாக்கியானமாக எழுதி நம்பிள்ளை திருவடிகளில் ஸமர்ப்பித்தார்

பட்டர். தமது நியமனம் இல்லாமல் மிக விரிவாக எழுதப் பெற்ற அந்த வியாக்கியானத்தை நம்பிள்ளை கரையானுக்கு இரையாக்கி விட்டார். அதற்குப் பின் ஆசாரியரின் அனுமதி யுடன் பட்டர் அஷ்டாக்ஷர தீபிகையையும் தத்வ விவரணமான கிரந்தத்தையும் அருளிச்செய்ய, அவ்விரு கிரந்தங் களும் உலகில் பரவின.

## பிற்சேர்க்கை அத்தியாயம்—2

முதலியாண்டானின் குமாரரான ராமாநுஜர் (கந்தாடையாண்டான்) ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்ரீபாஷ்யகாரருடைய அர்ச்சா விக்ரஹத்தைப் பிரதிஷ்டிப்பித்தார். அவருடைய பிள்ளை வாரணத்ரீசர் என்றும் கந்தாடை தோழப்பர். அவரும் நம்பிள்ளையின் பெருமையில் பொறாமை கொண்டிருந்தார். ஒரு நாள் கந்தாடை தோழப்பரால் நம்பிள்ளை கடுமையாக அவமதிக்கப்பட்டார். நம்பிள்ளை அதற்குப் பதிலாக ஏதும் செய்யவில்லை. நம்பிள்ளையிடம் அர்த்தம் கேட்டு வந்த தோழப்பரின் மனைவி அதைக் கேள்விப்பட்டு 'இதன் பலன் நரகமன்றோ' என்று நடுநடுங்கித் தோழப் பரைக் காணவும் மறுத்து விட்டாள். காரணத்தைக்கேட்ட தோழப்பரிடம் அவர் செய்த அபசாரத்தைச் சுட்டிக்காட்டி அவரைத் திருத்தி நம்பிள்ளையிடம் அபராதக்ஷாமணம் வேண்டுவதே இதற்குப் பரிகாரம் என்று உணரச் செய்தாள் அம்மாதரசி. அவரிடம் அபராதக்ஷாமணம் வேண்டுவதற் காக வீட்டிலிருந்து பத்தினியுடன் புறப்பட்ட தோழப்பர் தம் மிடம் அபராதக்ஷாமணம் வேண்டுவதற்காக, தம் வீட்டுத் திண்ணையில் காத்திருக்கும் நம்பிள்ளையைக் கண்டு 'நீரே லோகாசார்யர்' என அவரைப் புகழ்ந்து அவருக்குச் சீடரானார்.

## பிற்சேர்க்கை அத்தியாயம்—3

நம்பிள்ளைக்கு ஆண்டாள் என்றும், ஸ்ரீரங்கநாயகியார் என்றும் இருதேவியர் உண்டு. அவருடைய குமாரரான

ராமாநுஜர் எல்லாச் சாத்திரங்களையும் அறிந்தவராய் ஸார ஸங்க்ரஹம், ரஹஸ்யத்ரயம்என்னும இருகிரந்தங்களை அருளினார். நம்பிள்ளைக்கு1) கந்தாடைதோழப்பர் 2) நடுவில்திருவீதி பட்டர்3) வடக்குத்திருவீதிப்பிள்ளை 4) பெரியவாச்சான்பிள்ளை 5) ஈயுண்ணிமாதவர் 6) பின்பழகிய பெருமாள் ஜீயர் முதலான பதினைந்து முக்கிய சிஷ்யர்களும் மற்றும் கணக்கற்ற பல சிஷ்யர்களும் இருந்தனர் நம்பிள்ளை திருவாய் மொழிக்கு இருபத்து நாலாயிரப்படி வியாக்கியானம் அருளினார். (இது உபதேசரத்தினமாலை 43-வது பாட்டோடு முரண்படும்) ஆசார்ய நியமனத்தாலே பின்பழகிய பெருமாள் ஜீயர் திருவாய்மொழிக்குப்பன்னீராயிரப்படி வியாக்கியானம் அருளினார். (இது உபதேசரத்தினமாலை 45ம் பாட்டோடு முரண்படும்) வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவாய்மொழிக்கு வியாக்கியானமாக முப்பத்தாறாயிரப்படியை ஆசார்ய நியமனம் பெற்று எழுதினார். (நியமனமில்லாமலே எழுதினார் என்னும் ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தோடு இது முரண்படுகிறது. உபதேசரத்தினமாலையிலும் இது உணர்த்தப்பட்டது.) ஈடு வியாக்கியானத்தைப் பிரசாரம் செய்வதற்காக நம்பிள்ளை மாதவரிடம் கொடுத்தார். மாதவர் தம் பிள்ளையான பத்மநாபருக்குக் கொடுத்தார். பத்மநாபர் தம் சிஷ்யரான ஸ்ரீராமாநுஜதாஸரென்னும் நாலூர்ப் பிள்ளைக்குக் கொடுத்தார். அவர் தம் பிள்ளையான தேவராஜர் என்னும் நாலூராச்சான்பிள்ளைக்குக் கொடுத்தார். அவர் ஸ்ரீசைலநாதர் என்னும் திருவாய் மொழிப்பிள்ளைக்கு அதை அளித்தார். திருவாய்மொழிப்பிள்ளை மணவாளமாமுனிகளுக்கு அதை உபதேசித்தார். திருவநந்தாழ்வானின் அம்சமாக அவதரித்தவராய், பேரறிவாளராய், மஹா தேஜஸ்வியாய், உலகம் நிறைந்த புகழாளரான மணவாள மாமுனிகள் வானமாமலை ஜீயர் தொடக்கமான அஷ்டதிக் கஜங்களுக்கு அதைக் கருணையுடன் உபதேசித்து உலகனைத்தையும் ரக்ஷித்தார். வானமாமலை ஜீயர் முதலான இந்த அஷ்டதிக்கஜங்களாலே இந்த ராமாநுஜ தரிசனம் உலகெங்கும் பரவிற்று.

# பிற்சேர்க்கை அத்தியாயம்—4

வடக்குத்திருவீதிப்பிள்ளைக்கு இருகுமாரர்கள் அவதரித்தனர். அவர்களில் மூததவர் ஐப்பசியில் திருவோணத்தில் அவதரித்தார். அவருக்கு நம்பிள்ளை பஞ்சஸம்ஸ்காரம்செய்து லோகாசார்யர் எனனும் (தம) திருநாமத்தை இட்டார். வடக்குத்திருவீதிப்பிள்ளை நம்பிள்ளையினுடைய ஆணையினல் உபய வேதாந்தங்களையும் தம் குமாரருக்கு உபதேசித்தார். இரண்டாவது குமாரரான அழகியமணவாளப்பெருமாள் நாயனர் மார்கழியில் அவிட்டத்தில் அவதரித்தார். அவருக்கும் நமபிள்ளை பஞ்சஸம்ஸ்காரம் செய்தார். வடக்குததிருவீதிப்பிள்ளையும் தமையனரான பிள்ளை லோகாசார்யரும் அவருக்குக் கிரந்த காலக்ஷேபம் செய்தார்கள். அவர் "ஆசார்ய ஹ்ருதயம்" என்னும் கிரந்தத்தை அருளிச் செய்தார் பிள்ளை லோகாசார்யரும் ஸர்வவேதாந்த ஸாரமான பல ரஹஸ்யங்களை அருளிச்செய்தார். வேதாந்தி நஞ்சீயர் தொண்ணூற்றைந்து திருநக்ஷத்திரங்கள் கடந்தபின பரமபதம் அடைந்தார். நம்பிள்ளை தொண்ணூற்றுநாலு திருநக்ஷத்திரங்கள் கடந்தபின் பரமபதம் அடைந்தார். வடக்குத்திருவீதிப்பிள்ளைதொண்ணூற்றேழுதிருநக்ஷத்திரங்கள்கடந்தபின் தரிசன நிர்வாகத்தைத் தம் பிள்ளையான பிள்ளை உலகாசிரியரிடம் ஒப்படைத்து விட்டுப் பரமபதம் அடைந்தார். பிள்ளை லோகாசார்யர் ஸ்ரீரங்கத்தில் தர்சனத்தை நிர்வஹித்துக் கொண்டு புகழ்பெற்று விளங்கினர். எம்பெருமானருடைய சிஷ்யராய், அவரது மடைப்பள்ளியை நிர்வஹித்தவராய், ஆத்ரேய குலத்தில் உதித்த ப்ரணதார்த்திஹரர் என்னும் கிடாம்பியார்சானுக்கு 'ராமானுஜர்' என்னும் குமாரர் இருந்தார். அவருக்கு 'பத்மநாபர்' என்னும் குமாரர் பிறந்தார். அவருக்கு 'ராமானுஜர்' என்னும் குமாரர் உண்டானர். பூாஷ்யகாரர் பெரியதிருமலை நம்பியின் குமாரரான திருக்குருகைப்பிரான்பிள்ளானைத் தம்புத்திரராக

அபிமானித்தார். அந்தப் பிள்ளான் விஷ்ணுசித்தர் என்னும் எங்களாழ்வானுக்கு ஸ்ரீபாஷ்யத்தை உபதேசித்தார். அந்த எங்களாழ்வான் வரதவிஷ்ணு ஆசாரியருக்கு ஸ்ரீபாஷ்யத்தை அன்புடன் உபதேசித்தார். (எங்களாழ்வானுடைய சிஷ்யரான நடாதூர் அம்மாளுக்கு வரதாசாரியர் என்றே திருநாமம். அவருடைய பாட்டனாரும் எம்பெருமானாருடைய திருமருமகனுமான நடாதூராழ்வானுக்கே வரதவிஷ்ணு என்று திருநாமம்) அந்த வரதவிஷ்ணு ஆசார்யரிடமிருந்து கிடாம்பியாச்சானின் பேரனை ராமானுஜர் என்னும் கிடாம்பி அப்புள்ளார் ஸ்ரீபாஷ்யத்தைக் கற்றார். மஹா தேஜஸ்வியான வேதாந்த தேசிகர் அந்தக் கிடாம்பி அப்புள்ளாரிடமிருந்து ஸ்ரீபாஷ்யம் உள்ளிட்ட எல்லா சாஸ்திரங்களையும் கற்றார். ஸ்ரீபராசரபட்டரின் தம்பியான வேதவியாசபட்டரின் குமாரரான வாக்விஜயபட்டர் க்ஷமாஷோடசி என்னும் ஸ்தோத்ரத்தை அருளினார். அவருடைய குமாரரான ஸுதர்சனபட்டர் வரதவிஷ்ணுவிடமிருந்து ஸ்ரீபாஷ்யத்தைக் கற்றார். அப்படி ஆசார்யரிடமிருந்து கேட்ட அர்த்தத்தை வெளிப்படுத்தி முப்பத்தாறுயிரம் கிரந்தங்களாக அவர் இயற்றிய வியாக்கியானத்திற்கு ச்ருதப்ரகாசிகை என்ற திருநாமம் ஏற்பட்டது. ஸுதர்சன பட்டர் அந்த ச்ருதப்ரகாசிகையைப் பிரசாரம் செய்வதற்காக வேதாந்த தேசிகரிடம் கொடுத்தார். வேதாந்த தேசிகரும் அதை அவ்வாறே பிரசாரம் செய்தார். ச்ருதப்ரகாசிகையை இயற்றியபடியால் ஸுதர்சன பட்டருக்கு ச்ருதப்ரகாசிகாபட்டர் என்றே பெயர் ஏற்பட்டது. ச்ருதப்ரகாசிகா பட்டர், வேதாந்த தேசிகர், பிள்ளைலோகாசாரியர், மணவாள மாமுனிகள் ஆகிய நான்கு ஆசார்யர்களின் சிஷ்யர்களும் ப்ரசிஷ்யர்களும் உபய வேதாந்தங்களையும் கரை கண்டவர்களாய், ஸ்ரீரங்கநாதனுக்குக் கைங்கரியம் செய்பவர்களாய், ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தத்தை வளர்த்துக் கொண்டு ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்து வந்தார்கள்.

ஒருநாள் ஸ்ரீரங்கநாதனுடைய உத்ஸவத்தில் ஸ்ரீரங்கத்தில் எண்ணற்ற வைஷ்ணவர்கள் எம்பெருமானை வணங்கிக் கொண்டிருந்தார்கள். அப்போது அங்கிருந்த வைஷ்ணவர் ஒருவர் "இத்தனை ஸ்ரீவைஷ்ணவர்களும் ரங்கநாதனை இப்படி வணங்குவது போல் பரமபதநாதனை எப்போது ஒரே சமயத்தில் வணங்குவார்களோ?" என்று பரவசமாய்க் கூறினார். ரங்கநாதன் அர்ச்சகர் மூலமாக 'அப்படியே ஆகட்டும்' என்று நியமித்தார். அதற்குப் பின் மற்றொரு உத்ஸவம் ஸ்ரீரங்கத்தில் நடைபெற்றது. திருக்காவேரியில் எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களும் உபய நாச்சிமாரோடு கூடிய நம்பெருமாளுக்குத் திருமஞ்சனம் நடத்தினார்கள். அப்பொழுது ஒரு ஒற்றன் வந்து "பெரிய ஸேனையோடு துருஷ்கன் (யவனன்) ஒருவன் தேவப்ராஹ்மணர்களைக் கொள்ளையடித்துக் கொலை செய்து கொண்டு ஸ்ரீரங்கத்தை நோக்கி வருகிறான்" என்றான். இதைக் கேள்வியுற்ற பிள்ளை லோகாசாரியர் முதலான பெரியவர்கள் துணுக்குற்று அனைவரும் கூடி ஆலோசித்து ரங்கநாதனையே செய்ய வேண்டியதைப்பற்றிக் கேட்டு விடுவோம் என்று தீர்மானித்து, 'இங்கேயே இருக்கவேண்டும்" அல்லது "சென்று விடவேண்டும்" என்று இரு ஓலைகளில் எழுதி, திருவுள்ளச் சீட்டாகப் போட்டனர். அப்போது பெருமாள் "இருக்கவேண்டும்" என்னும் சீட்டையே அவர்களுக்கு அளித்தார். அவர்களும் பெருமாளுக்குச் செய்ய வேண்டிய கைங்கர்யங்களைச் செய்துகொண்டு அங்கேயே இருந்தார்கள். சில நாட்கள் கழித்து ஒரு ஒற்றன் "அந்தத் துருஷ்கன் திருக்கண்டியூர் வரை வந்து விட்டான்" என்றும், "விரைவிலேயே ஸ்ரீரங்கம் வந்து விடுவான்" என்றும் பிள்ளை லோகாசாரியரிடம் கூறினான். அதைக் கேட்டு அவர் ஸ்ரீரங்கத்தை ரக்ஷிக்கும் பொறுப்பை வேதாந்த தேசிகரிடம் வைத்து, நாச்சிமார்களுடன் நம்பெருமாளைத் திருக்கோட்டியூர் செல்லும் மார்க்கத்தில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு சென்றார். வேதாந்தாசாரியர் முதலானவர்கள் ஸ்ரீரங்கத்தில்

கோட்டைவாசலை அடைத்துவிட்டுக் கோயிலை ரக்ஷித்துக் கொண்டு இருந்தார்கள் கர்ப்பக்ருஹத்தில் அகண்ட தீபத்தை ஏற்றி அதன் வாயில்களை கல்சுவர் திரையிட்டு மறைத்தனர். வேதாந்த தேசிகரும் ஸ்ரீரங்கத்தை விட்டு ஸ்ரீவைஷ்ணவர்களோடு வெளியேறுவத ற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்.

## பிற்சேர்க்கை அத்தியாயம்—5

அந்தத் துருஷ்கன் திருக்கண்டியூரிலிருந்து தெய்வ விக்கிரஹங்களைக் கொள்ளையடித்துக் கொண்டு ஸ்ரீரங்கத்தை நோக்கி விரைவில் வந்தான். அப்பொழுது முதியவரான ஸுதர்சன பட்டர் வேதாந்தாசாரியரிடம் வந்து தம்முடைய இரு பிள்ளைகளையும் ச்ருதப்ரகாசிகை ஸ்ரீகோசத்தையும் ரக்ஷிக்கும்படி சொல்லி அளித்தார். வேதாந்த தேசிகரும் அவ்வண்ணமே செய்தார் துலுக்கப்படை ஸ்ரீரங்கம் கோபுரவாயில் கதவுகளையெல்லாம் தகர்த்துக்கொண்டு உள்ளே நுழைந்தது. அங்கிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் கொல்லப்பட்டு ஒரே சமயத்தில் பரம பதம் அடைந்து பரமபதநாதனை வணங்கினர். வேதாந்த தேசிகர் ச்ருதப்ரகாசிகையோடு கூடிய ஸ்ரீபாஷ்ய ஸ்ரீகோசத்தையும் ஸுதர்சன பட்டருடைய இருபிள்ளைகளையும் அழைத்துக் கொண்டு, மேல் கோட்டைத் திருநாராயண புரத்துக்குச் சென்றார். லோகாசாரியரால் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போகப்பட்ட பிராட்டிமாரோடு கூடிய நம் பெருமாள் காட்டுவழியிலே பாண்டிய தேசத்திற்குச் சென்றார். ரங்கநாதனுடைய தனம் அனைத்தும் கள்ளர்களால் அபகரிக்கப்பட்டது. கூடச் சென்ற லோகாசாரியர் கலங்காமல் தம்மிடமிருந்த தனத்தையும் அவர்களிடம் கொடுத்தார். ஜ்யோதிஷ்மதீ புரத்தை அடைந்தவுடன் ஸ்ரீரங்கத்தில் நடந்த விருத்தாந்தத்தைக் கேள்விப்பட்டுப் பொறுக்க மாட்டாதவராய், பிள்ளை லோகாசாரியர் பரமபதத்தை

அடைந்தார். பிள்ளை லோகாசாரியரின் பிரிவினால் மிக வருந்திய நம்பெருமாள் அங்கிருந்து அழகர் மலைக்குச் சென்றார். அங்கே தம் பெயரில் ஒரு கிணற்றை ஏற்படுத்தி விட்டு அரங்கன் பாண்டியமண்டலத்திலிருந்து சேர மண்டலத்திற்குச் சென்றார். அந்த மலை நாட்டிலுள்ள பதின்மூன்று திவ்யதேசங்களையும் கடாக்ஷித்துவிட்டு, நாச்சிமாருடன் கூடிய நம்பெருமாள் மேலக்கோட்டை திருநாராயணபுரம் சென்றார். மேலக்கோட்டையில் செல்வப் பிள்ளையோடு கூடச் சில நாட்கள் இருந்துவிட்டு நாச்சிமாரோடு கூடிய ரங்கநாதன் திருமலைக்கு வந்தார். திருவேங்கடமலையில் ஸ்ரீநிவாஸனாலே ஆராதிக்கப்பட்ட ரங்கநாதன் வழிநடந்த களைப்புத்தீர அங்கு சில காலம் இருந்தார். அப்பொழுது கம்ஸனுக்கு அக்ரூரன் அமைந்தது போலே ந்ருஸிம்ஹதேவன் என்னும் அந்தணர் அந்தத் துலுக்கனுக்கு வேண்டியவராக அமைந்தார். அவர் அவனைச் சமயபுரத்திற்கு அழைத்துச்சென்று, ஸ்ரீரங்கத்தை ஆளும் அதிகாரத்தைத் தமக்கு அவனிடமிருந்து பெற்றுக் கொண்டார். கொல்லப்பட்டவர்கள் போக எஞ்சியிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீரங்கத்திற்கு வந்துவாழத் தொடங்கினார்கள். அவர்களையும் ஸ்ரீரங்கத்தையும் ந்ருஸிம்ஹ தேவர் ரக்ஷித்து வந்தார்.

பிள்ளைலோகாசாரியரின் சிஷ்யையான அந்தண குலத்தைச் சேர்ந்த ஒரு மூதாட்டி பரம ஸாத்விகையாகையாலே அவருடைய பிரிவைத் தாங்காமல் உயிரை விட்டாள். அவளுக்குத் திருமலையாழ்வார் (ஸ்ரீசைலநாதர்) என்னும் பிள்ளை ஒருவர் இருந்தார். சிறுவரான அவர் சிற்றன்னை வீட்டில் வளர்க்கப்பட்டு யௌவன வயதை அடைந்த பிறகு விஷய ப்ரவணராக வாழ்ந்தார். அப்போது பிள்ளைலோகாசாரியரின் சிஷ்யரான கூரகுலோத்தமர் என்னும் பெரியவர் திருமலையாழ்வாரைத் திருத்தி அவருக்குத் திவ்யப்ரபந்தங்கள் அனைத்தையும் உபதேசித்தார். அவர் தமது கடைசிக்

காலத்தில் திருமலையாழ்வாரை அழைத்து "திருக்கண்ணங்குடியில் கிருஷ்ணயோகீந்த்ரர் என்று ஒருவர் இருக்கிறார். அவரிடமிருந்து நீர்திருவாய்மொழிக்கு அர்த்தம் கேளும்" என்று நியமித்தார். அவ்வண்ணமே திருமலையாழ்வாரும் அவரை அடைந்து பிரார்த்தித்தார். அந்தக் கிருஷ்ண யோகீந்திரர் திருவாய்மொழிவ்யாக்யானத்தின்தாத்பர்யார்த்தத்தை அவருக்கு உபதேசித்துவிட்டு "திருப்புட்குழியில் உள்ள குளக்கரையில் இதன் சப்தார்த்தத்தை அறிந்த ஒரு ஜீயர் இருக்கிறார். அவரிடம் சென்று கேட்டுக் கொள்ளும்" என்று நியமித்தார். அவ்வண்ணமே திருமலை யாழ்வாரும் திருப்புட்குழியில் உள்ள குளத்திற்குச் சென்ற போது அந்த ஜீயர் பரமபதமடைந்து விட்டார். அதனால் வருந்தி அழததொடங்கிய திருமலையாழ்வாரை நாலூராச் சான் பிள்ளையாகிற தேவராஜர் மேலக்கோட்டைத் திரு நாராயணபுரத்துக்கு அழைத்துச் சென்று, அவருக்கு யதி ராஜருடைய ஸந்நிதியில் வடக்குத்திருவீதிப்பிள்ளையின் திருவாய்மொழிவியாக்கியானத்தை அன்புடன் உபதேசித் தார். அதற்குப் பின் திருமலையாழ்வார் நம்மாழ்வாரை ஸேவிக்க விரும்பி ஆழ்வார் திருநகரிக்கு எழுந்தருளினார். அங்கு ஒரு பெரிய குளத்திலே மூழ்கியிருந்த நம்மாழ்வாருடைய விக்கிரஹத்தை மீண்டும் திருக்குருகூர் ஸந்நிதியில் பிரதிஷ்டை செய்வித்து அவருக்கு முன் போலவே மஹோத்ஸவங்களையும் ஏற்படுத்தினார். அதற்குப்பின் திருமலை யாழ்வார் திருவனந்தபுரம் சென்று அங்கு எழுந்தருளி யிருந்த விளாஞ்சோலைப்பிள்ளையிடமிருந்து பெரிய ரஹஸ்யங்களை உபதேசம் பெற்றார். அவருடைய ஸம்பந்தத்தாலே முக்குறும்பும் நீங்கப்பெற்று மஹாதேஜஸ்வியான திருமலை யாழ்வார் சாணைதீட்டப்பெற்றரத்னம்போலே பிரகாசித்தார். விளாஞ்சோலைப்பிள்ளையும் (சப்தகாதை முதலான) பாடல் ரூபமாயிருந்த ரஹஸ்யங்களை அருளிச் செய்து விட்டு வைகுண்ட மடைந்தார். முற்காலத்தில் மாறனேர்நம்பிக்குப் பெரிய நம்பி செய்தது போலே திருமலையாழ்வாரும் அந்த விளாஞ்சோலைப் பிள்ளைக்கு சிஷ்யக்ருத்யம், புத்ரக்ருத்யம் ஆகிய இரண்டையும் முறைப்படி நடத்தினார். அதற்குப் பின்

திருமலையாழ்வார் ஆழ்வார்திருநகரியில் வைஷ்ணவ தரிசனத்தை வளர்த்துக்கொண்டு சிலகாலம் வாழ்ந்தார். அப்போது இவ்வுலகம் கலியினால் பீடிக்கப்பட்டிருந்ததைக் கண்டு ஸ்ரீரங்கநாதன் திருவரங்கத்திற்குச் செல்லத் திருவுள்ளம் கொண்டார்.

## பிற்சேர்க்கை அத்தியாயம் — 6

அக்காலத்தில் திருநாராயணபுரத்தில் கோபணன் எனனும் அறவழி நடக்கும் பாகவதன் அரசோச்சி வந்தான். அப்போது திருவரங்கன் அவனது கனவில் ''உன்னுடைய ஸேனையைக் கொண்டு மிலேச்சர்களின் ஸேனையை வென்று என்னைத் திருவரங்கத்திற்கு அழைத்துச் செல்வாய்'' என்று அருளினான். அந்தக் கனவிலிருந்து விழித்தெழுந்த கோபணன் வியப்புற்றுத் திருவேங்கடமலைக்குச் சென்று, திருவரங்கனை ஸேவித்து அர்ச்சகர்களிடமிருந்து திருவரங்கன் அங்கு வந்த வரலாறு முழுவதையும் அறிந்து நாச்சிமாருடன் கூடிய நம்பெருமாளை முன்னிட்டுக் கொண்டுத் தன் ஸேனையுடன் திருவரங்கத்தை நோக்கிச் சென்றான். அவன் செஞ்சி நகரத்தை அடைந்து துலுக்கர்களுடைய ஸேனைபலத்தை ஒற்றர்களிடமிருந்து அறிந்து திருவரங்கனோடு கூட அங்கிருந்து புறப்பட்டு, இரவு நேரத்தில் சமயபுரத்திலிருந்த துலுக்கச்சேனை அனைத்தையும் அழித்தான். திருவரங்கனையும் ஸ்ரீரங்கத்தில் முன்போல் பிரதிஷ்டை செய்து மஹா தேஜஸ்வியாய், பெரும்பலமுள்ள கோபணன் மிகவும் உகந்தான். ஸ்ரீவேதாந்த தேசிகரும் ஸ்ரீரங்கத்தை அடைந்து திருவரங்கனுக்கு மங்களாசாஸனம் செய்து கோபணன் விஷயமாக ஒரு ஶ்லோகத்தை இயற்றினார். இப்போதும் ஸ்ரீரங்கம் கோயில் சுவரிலே இந்த ஶ்லோகம் காணப்படுகிறது:—

''ஆநீயாநீலஶ்ருங்கத்₃யுதிரசிதஜக₃த்₃ரஞ்ஜநாத₃ஞ்ஜநாத்₃ரே:
சஞ்ஜாமாராத்₄ய கஞ்சித் ஸமயமத₂ நிஹத்யோத்₃த₄நுஷ்காம்ஸ்துருஷ்காந் !

லக்ஷ்மீக்ஷ்மாப்₄யாமுப₄ாப்₄யாம் ஸஹ நிஜஸலிலே ஸ்த₂ாபயந் ரங்க₃நாத₂ம்
ஸம்யக் சர்யாம் ஸபர்யாம் புநரக்ருத யஶ:ப்ராபணோ கே₃ாபணார்ய: ||"

இதன்பொருள்;—"கறுத்த சிகரங்களையுடைய ஒளிமிக்க அழகிய திருவேங்கடமலையிலிருந்து ஸ்ரீ, பூ₄மி தேவிகளோடு கூடிய ஸ்ரீரங்கநாதனை அழைத்து வந்து செஞ்சியில் வைத்துச் சில நாள் ஆராதித்து, சமயம் பார்த்து ஆயுதத்துடன் கூடிய துருஷ்கர்களைக் கொன்று நாச்சிமாருடன் கூடிய பெருமாளை உபய காவேரி நடுவில் மறுபடியும் பிரதிஷ்டை செய்து உத்ஸவங்களை நன்கு நடத்தியதன் மூலம் பெரும்புகழடைந்தான் கோபணார்யன்" என்பது.

ச்ருதப்ரகாசிகா வ்யாக்யானத்தையும், திருக்குருகைப் பிரான் பிள்ளான் அருளிய திருவாய்மொழியின் ஆறாயிரப் படிவியாக்கியானத்தையும் வேதாந்த தேசிகர் இவ்வுலகில் பரப்பினார். அவர் தம்முடைய குமாரரான வரதாசாரியருக்கு உபய வேதாந்தங்களையும் உபதேசித்து, தொண்ணூற்றெட்டு திருநக்ஷத்திரங்கள் கடந்த பிறகு பரமபதமடைந்தார். வேதாந்ததேசிகரின் குமாரரான வரதாசாரியரும் பிரதிவாதி பயங்கரம் அண்ணன் முதலான சிஷ்யர்களுக்கு அவற்றை உபதேசித்தார். அவரும் நூற்றைந்து திருநக்ஷத்திரங்கள் வாழ்ந்து பரமபதமடைந்தார். பிரதிவாதி பயங்கரரும் உப₄ய வேத₃ாந்தங்களையும் உலகில் பிரசாரம் செய்துகொண்டிருந்தார்.

பாண்டிய தேசத்தில் மதுரைக் கருகில் குந்தீ நகரத்தில் கோமடவம்சத்தில் திகழ்க்கிடந்தான் தாசரண்ணர் என்னும் லோகாசார்ய சிஷ்யர் வாழ்ந்து வந்தார். அவருக்கு ஆதிசேஷன் அம்சமாய் ஐப்பசித் திருமூலத்தில் யதீந்த்ரப்ரவணர் அவதரித்தார். வேதவேதாந்தங்களை அத்யயனம் செய்த அந்த அழகியமணவாளர் சில காலம் கிருஹஸ்தாச்ரமத்தில் வாழ்ந்தார். அதற்குப்பின்

அந்த யதீந்த்ரப்ரவணர் திருக்குருகூர் நகரை அடைந்து லோகாசாரிய சிஷ்யரான திருமலையாழ்வாரிடம் திருவாய் மொழி ஈட்டையும் ரஹஸ்யங்களையும் கற்றுத் தேர்ந்தார். (திருமலையாழ்வாரின் அவதார ஸ்தலமே குந்தீநகரம், மணவாள மாமுனிகளின் அவதார ஸ்தலம் திருக்குருகூர் என்னும் வரலாற்று உண்மையோடு இது முரண்படுகிறது) யதீந்த்ரப்ரவணரின குமாரர் ராமாநுஜர்; அவருடைய குமாரர் விஷ்ணுசித்தர் என்று பெயர் பெற்றவர். திருமலை யாழ்வார் யதீந்தரப்ரவணரை தர்சன ப்ரவர்த்தகராக்கி விட்டுப் பரமபதமடைந்தார். அதற்குப்பின் அந்த அழகிய மணவாளர் ஸ்ரீரங்கம் சென்று ரங்கநாதனை வணங்கி சில காலம் வாழ்ந்தார். அதற்குப்பின் ஸ்ரீபெரும்பூதூர் சென்று யதிராஜரை வணங்கி அவரது அனுமதி பெற்று வரதராஜப் பெருமாள் எழுந்தருளியிருக்கும் காஞ்சீபுரம் சென்றார். அங்கு கிடாம்பியாச்சானின் குலத்தில் வந்தவரான கிருஷ்ண தேசிகரிடம் ஸ்ரீபாஷ்யத்தைக் கற்றார். மேலக் கோட்டைத் திருநாராயணபுரத்திலுள்ள தேவராஜ குருவிட மிருந்து ஆசார்ய ஹ்ருதயத்தைக்கற்று யதீந்த்ரப்ரவணர் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளி ஸ்ரீராமாநுஜரைப் போலவே நாலாவது ஆசிரமத்தை ஏற்று தர்சனப்ரவர்த்தகராய் வாழ்ந்து வந்தார். அப்போது முக்குறும்பற்ற வைஷ்ணவர் கள் அனைவரும் அந்த மணவாளமாமுனிகளை ஆச்ரயித்தனர். அவர்களில் எண்மர் அஷ்டதிக்கஜங்கள் என்று புகழ் பெற்ற னர். அவர்களாவார்—1. ஸ்ரீவானமாமலை ஜீயர், 2. பட்டர் பிரான் ஜீயர் 3. திருவேங்கட ஜீயர் 4. தேவராஜர் என்னும் எறும்பியப்பா 5. வாதூல கோத்ரத்தில் உதித்த வரதநாரா யணரென்கிற கோயிலண்ணன், 6. வரதாசாரியருடைய சிஷ்ய ரான பிரதிவாதி பயங்கரம் அண்ணன் 7 கிடாம்பி குலத் திலுதித்த அப்புள்ளார் என்னும் ராமாநுஜர் 8. கிடாம்பி குலத்திலுதித்த அப்பிள்ளை. வடக்குத்திருவீதிப்பிள்ளையின் முப்பத்தாறுயிரப்படியை சிஷ்யர்களுக்கு உபதேசித்துயதீந்த்ர ப்ரவணர் இவ்வுலகை ரக்ஷித்தார். அந்த வியாக்கி யானத்தை ஸ்ரீரங்கராஜனுக் கும்விண்ணப்பித்து, 'பெரிய ஜீயர்' என்னும் பட்டம் பெற்றார். மணவாளமாமுனிகள்

பல கிரந்தங்களை அருளிச் செய்து ஸ்ரீவைஷ்ணவ ஸித்₃த₄ாந்தத்தை என்றும் தடையற்றதாம்படி ரக்ஷித்து ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்தார். அவருடைய ஆணையால் ஸ்ரீவானமாமலை ஜீயர் முதலான ஆசாரியர்கள் உபய வேதாந்தங்களாலும் உலகனைத்தையும் ரக்ஷித்தனர். அஷ்டதிக்கஜங்களாலும் ரக்ஷிக்கப்பட்ட மக்களனைவரும் சுத்தஸத்வகுணத்தை உடையவராய் இனிது வாழ்ந்தனர்.

## பிற்சேர்க்கை அத்தியாயம்–7

எம்பெருமானுருடைய ஜ்ஞானபுத்திரரான திருக்குருகைப் பிரான் பிள்ளான் வம்சம் பின்வருமாறு:— 1. பிள்ளானுடைய பிள்ளை புண்டரீகாக்ஷர். 2. அவருடைப் பிள்ளை குருகேஶ்வரர். 3. அவருடைய பிள்ளை புண்டரீகாக்ஷர். 4. அவருடைய பிள்ளை ஸ்ரீநிவாஸர். 5. அவருடையபிள்ளை ந்ருஸிம்ஹார்யர். 6. அவருடைய பிள்ளை ராமானுஜர் 7. அவருடைய பிள்ளை ந்ருஸிம்ஹார்யர். இந்த ந்ருஸிம்ஹார்யர் எல்லாசாஸ்திரங்களையும் கற்று ஏட்டூர் என்னும் நகரத்தை அடைந்துசிலகாலம் வாழ்ந்து வந்தார். (பெரியதிருமுடியடைவில் மணவாள மாமுனிகளின் சிஷ்யர்களான நவரத்தினங்களில் ஒருவராக ஏட்டூர் சிங்கராசார்யரான இவரும் குறிப்பிடப்பட்டுள்ளார்.) அக்காலத்தில் விஜயநகரத்தில் விரூபாக்ஷன் என்னும் அரசன் ஆண்டுவந்தான். அவன் உறவினரான எதிரிகளால் விரட்டியடிக்கப்படடு, சிலகாலம் மறைந்து வாழ்ந்து ஸேனைகளை ஸம்பாதித்துக கொண்டு உறவினரான எதிரிகளைக் கொன்று விஜயநகர அரசைக் கைப்பற்றினான். அவனால் கொல்லப்பட்ட அந்த உறவினர்கள் பிசாசுகளாகி அவனை அடிக்கடி துன்புறுத்தி வந்தனர். பல வகையான தானங்களைச் செயதும், விரதங்களை அநுஷ்டித்தும் அவன் பிசாசுகளின் தொல்லையிலிருந்து விடுபட முடியவில்லை. பிசாசுகளின் தொல்லை நிறைந்த அரண்மனையிலிருந்து புறப்பட்டு வேறு அரண்மனைக்குச்சென்று விட்டான்.

அக்காலத்தில் ஸ்ரீராமாயண ஸ்ரீகோசத்தை எடுத்துக் கொண்டு ஏட்டூர் சிங்கராசார்யர் பிசாசுகளால் ஆக்ரமிக்கப் பட்ட விரூபாக்ஷன் இல்லாத அந்த அரண்மனைக்கு வந்தார்.

பிசாசுகள் தங்களுடைய அரசனோடு கூட நல்ல உருவத்தை எடுத்துக்கொண்டு எட்டூர் சிங்கராசார்யரையும் அவருடைய தம்பியையும் வரவேற்று, தங்களுக்கு ராமாயணம் சொல்லும்படியும் அதற்காக ஏராளமான தனம் கொடுப்பதாகவும் கூறி தினந்தோறும் இரவில் அவரிடம ரஹஸ்யமாக ராமாயணம கேட்டன.

## பிற்சேர்க்கை அத்தியாயம் - 8

இந்த ஸ்ரீராமாயணம் கேட்டதன் பயனாக பிசாசுகளாயிருந்த விருபாக்ஷனுடைய ஜ்ஞாதிகள் பிசாசு நிலை நீங்கப் பெற்று ஸாந்தானிக லோகத்தை அடைந்தனர். வாக்களித்தபடி பிசாசுகளின் அரசன் அவர்களுக்கு ஏராளமான தனத்தைக் கொடுத்தான்.

## பிற்சேர்க்கை அத்தியாயம் - 9

பிசாசுகளின் தொல்லையிருந்த அரண்மனையில் தற்போது அவற்றின் தொல்லையில்லை என்பதை குடிமக்கள் அரசனான விருபாக்ஷனிடம் கூறினார்கள். அரசனும் சென்று அதை உறுதிப்படுத்திக்கொண்டு இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்களின் திருவடி அடையாளங்களை அந்த அரண்மனையில் கண்டான் அந்த அடிகளின் அளவையும் கயிற்றினால் அளந்து அதற்குரிய மனிதர்களைக்கண்டுபிடிக்குமாறுசேனைத் தலைவனுக்கு உத்தரவிட்டான இதைக்கேள்விப்பட்ட எட்டூர் சிங்கராசாரியரும் அவருடைய தம்பியும் அரசன தங்களைத் தண்டித்துவிடுவானோ' என்று பயந்து ராமனைச் சரணடைந்து இரவில் அந்த நகரத்தைவிட்டு வெளிவந்தனர், அவர்களைப்பார்த்து ராஜசேவகர்கள் அவர்களுடைய அடியைவப்பு ஒத்திருப்பதைக் கண்டு அவர்களை அரசனிடம் அழைத்துச்சென்றனர். அரசனும் அவர்கள் காலில்விழுந்து அரண்மனையில் பிசாசுத்தொல்லை எப்படி நீங்கியது என வினவினான். சிங்கராசார்யரும் பயம் நீங்கி நடந்த வரலாறு முழுவதையும் அரசனுக்குச் சொன்னார். பிசாசுகள் கொடுத்த தனத்தையும் காட்டினார். அரசன் மிகவும் வியப்புற்று, ராமாயணத்திடமும், ராமசந்திரனிடமும் சிங்கராசாரியரிடமும் மிகுந்த மதிப்பு வைத்தான். விருபாக்ஷன் வீரசைவமதத்தைச் சேர்ந்தவனாயிருந்தபோதிலும், சிங்கராசாரியரிடம் பஞ்சஸம்ஸ்காரம்பெற்று! ராமாயணம்கேட்டு,பட்டா

பிஷேக சமயத்தில் அவருக்குக் கனகாபிஷேகம் செய்தான். விருபாக்ஷன் எனும் பெயர்பொதிந்த தன்னுடைய முத்திரையையும் ஸ்ரீராமமுத்திரையாக மாற்றினன. சிங்கராசார்யரும விஜயநகரத்திலேயே இனிது வாழ்ந்துவந்தார்.

## பிற்சேர்க்கை அத்தியாயம்—10

சிங்கராசாரியரின் பிள்ளை தாதாசார்யர். தாதாசார்யரின் பிள்ளை ஸ்ரீசைலபூர்ணர். அவருடைய பிள்ளை ஸ்ரீநிவாஸாசார்யர் அவருடைய பிள்ளை தாததேசிகர். அவர்பிள்ளை வேங்கடாசாரியர் அவர் பிள்ளை சுந்தரதேசிகர். அவருடைய பிள்ளை ஸ்ரீநிவாஸாசாரியர். அவருடைய பிள்ளை உலகப்புகழ்பெற்ற தாதாசாரியர். அவர் சாஸ்திரம் வல்லவர்களில் சிறந்தவராய், 'பஞ்சமதப₄ஞ்ஜநம்' என்னும் புகழ்பெற்ற கிரந்தத்தை இயற்றியவர். அவரைப் பற்றிப் பின்வரும் ஶ்லோகம் உலகில் வழங்கப்படுகிறது.

"ஶுகதாதம த்ரயீமார்க்கே₃ தத்தாதம தத்வ நிர்ணயே |
தத்தாததாதமாசாரே தாதாசார்யம் அஹம் ப₄ஜே ||"

[வேதமார்க்கத்தில் சுகரின் தகப்பனரான வியாஸரை ஒத்தவராய். அவருடைய தந்தையான பராசரரை பரதததுவ நிர்ணயததில் ஒத்தவராய, அவருடைய தந்தைக்குப தநதையான வசிஷ்டரை ஆசாரத்தில் ஒத்தவரான தாதாசாரியரிடம் நான் பக்தி செய்கிறேன்]

அவர் காலத்தில் கிருஷ்ணதேவராயருக்குப்பிறகு ராமதேவராயர் விஜயநகரததில் ஆட்சி புரிந்து வந்தார். அவர் தாதாசாரியரைத் தம் ஆசாரியராககொண்டு சந்திரகிரியை ஆண்டார். அக்காலத்தில் வாதூல வம்சத்தைச் சேர்ந்த மஹாசாரியர் என்பவர் எல்லா சாஸ்திரங்களையும் அறிந்தவராய், ஒப்பற்றவராய் க₄டிகாசலம் என்னும் சோளஸிம்ஹபுரத்தில் வாழ்ந்து வந்தார். அவரே சைவர்களை வாதத்தில் வென்று, எம்பெருமானர் காலத்தில் கிருமிகண்டனல் சித்திரகூடத்திலிருந்து அப்புறப்படுத்தப்பட்ட கோவிந்தராஜனை ராமராயர் துணைகொண்டு மீண்டும் பிரதிஷ்டை செய்வித்தார். அக்காலத்தில் சைவசாஸ்திரங்களை அறிந்தவரான அப்பய்ய தீக்ஷிதர் "அத்வைத தீபிகா" என்னும் நூலை இயற்றினர். தீபத்தை அணைக்கும் புயல்

காற்றுப்போலே இந்த அத்வைத தீபிகையை நிரஸிக்கும் ''சண்ட மாருதம்' என்னும் நூலை மஹாசார்யர் இயற்றினார். இவ்வண்ணமாக மஹாசார்யரின் சண்டமாருதத்தாலும் தாதாசாரியரின் பஞ்சமதபஞ்ஜனத்தாலும் ஸ்ரீவைஷ்ணவ தரிசனம் ரக்ஷிக்கப்பட்டது தாதாசார்யர் திருமலையில் திருவேங்கடமுடையானுக்குக் கைங்கர்யம் செய்துகொண்டு சிலகாலம் வாழ்ந்தார். தாதாசாரியரின் பிள்ளை குமாரதாதாசாரியர். அவருக்கு மூன்று வயதிலேயே மாந்த்ய ரோகமும் உண்டாகி 'உயிருக்கு ஆபத்து விளையுமோ' என்னும் ஐயம் ஏற்பட்டது அப்போது ஒருநாள் முழுவதும் தாதாசாரியர் உறவினர்களோடு உபவாஸம் இருந்தார். அப்பொழுது மஹாலக்ஷ்மி அனைவரும் காணும்படியாக வந்து அந்தக் குழந்தையை மடியில் வைத்துக்கொண்டு முலைப்பால் கொடுத்து உடல் முழுவதும் தடவிக்கொடுத்து ரக்ஷித்து மறைந்தாள். அதிலிருந்து வியாதி நீங்கப்பெற்ற அவருக்கு லக்ஷ்மீகுமார தாதாசாரியர் என்னும் பெயர் ஏற்பட்டது. அவர் வரதராஜனுக்குக் கைங்கரியம் செய்யக் காஞ்சீபுரம் வந்தார். அங்கு பெருந்தேவித்தாயார் தன்னுடைய திருவாபரணங்களில் ஒன்றான ச்யமந்தக மணி போன்றதான 'ஸ்ரீராமரத்னம்' என்னும் ரத்தினத்தை அவருக்குக் கொடுத்தார். ராமராயருக்குப் பிறகு வேங்கடபதி என்பவர் அரசரானார், அவர் இந்த லக்ஷ்மீகுமார தாதாசாரியரை ஆச்ரயித்தார். அந்த அரசருடைய செல்வாக்கினால் இந்தத் தாதாசாரியர் வைஷ்ணவர்களுக்கு கோடி கந்யாதானம் செய்வித்தார் அதனால் உலகனைத்தையும் வைஷ்ணவமயமாகச் செய்தார். இந்த லக்ஷ்மீ குமார தாதாசாரியருடைய குமாரர் வேங்கடவரதாசாரியர் என்பவர். அவருக்கு ஸ்ரீ பூமி நீளைகளைப் போலே மூன்று மனைவியர், அந்த மூன்று மனைவிகளிடமும் அவருக்குப் பல பிள்ளைகள் பிறந்தனர். அவர்களில் ஒருவரான ரங்கநாதாசாரியர் உபய வேதாந்தங்களையும் நன்கு அறிந்தவராயிருந்தார். அவருக்குப் பல சீடர்கள் இருந்தனர். அவர்களில் வடுக நம்பியின் வம்சத்தைச் சேர்ந்த அனந்தாசாரியர் என்பவரும் ஒருவர். அந்த ரங்கநாதாசாரியருடைய ஆணையாலே அனந்தாசாரியரால் இந்த ப்ரபந்நாம்ருதம் செய்யப்பட்டது. (இதற்கு மேல் ப்ரபந்நாம்ருதத்தைப் படிப்பவர்களுக்குரிய பலன் சொல்லப்படுகிறது.)

**அநுபந்தம் முற்றிற்று**